கணியன் பூங்குன்றன் காலம் முதல்
கவிஞர் கண்ணதாசன் காலம் வரை

# செட்டிநாடும் செந்தமிழும்

## சோமலெ








வானதி
பதிப்பகம்

கணியன் பூங்குன்றன் காலம் முதல்

கவிஞர் கண்ணதாசன் காலம் வரை

# செட்டி நாடும் செந்தமிழும்

## சோமலெ



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

முதற் பதிப்பு : டிசம்பர் 1984
இரண்டாம் பதிப்பு : டிசம்பர் 1999



திருநாவுக்கரசு தயாரிப்பு

விலை : ரூ.180.00

# Chettinadum Chentamilum

An Authoritative History of Tamil Literature from Sangam Age to the Twentieth Century - an Appraisal of the Contribution of the Chettinad Region consisting of Five Taluks in Pudukkottai and Sivagangai Districts of Tamil Nadu.


| | | | |
|---|---|---|---|
| ☐ | TITLE | : | CHETTINADUM CHENTAMILUM |
| ☐ | AUTHOR | : | SOMALAY |
| ☐ | LANGUAGE | : | TAMIL |
| ☐ | EDITION | : | SECOND EDITION, DECEMBER, 1999 |
| ☐ | No. OF PAGES | : | xii + 716 |
| ☐ | PUBLISHED BY | : | VANATHI PATHIPPAKAM, 13, DEENADAYALU STREET, THYAGARAYA NAGAR, CHENNAI – 17. |
| ☐ | PRICE | : | Rs.180.00 |

Printed at : Nathan & Company, Chennai - 42.

ஆங்கிலம் முதல் சீனம் ஈறாகவுள்ள எத்துணையோ மொழிகள் எங்கள் காதில் விழலாம். விழுந்தாலும் தாய் மொழியாகிய தமிழ் ஒன்றே எங்கள் செவிக்கு இனிமை பயப்பது.

# அணிந்துரை

## டாக்டர் ஔவை நடராசன்

அறிஞர் 'சோமலெ' அவர்கள் தமிழுலகு நன்கறிந்த சான்றோரர். தமிழுலகு அவர்களை நன்கறியும் என்பது போலவே தமிழுலகு முழுவதும் சோமலெ நன்கறிந்தவர்கள். சென்றறிந்தவர்கள், கண்டறிந்தவர்கள். நூலறிவுமட்டுமே முழுப்பயனுடையதாகாது. நுண்ணறிவும் வேண்டும். இந்த இரண்டறிவுமே பட்டறிவோடு கலந்தால் பெரும்பயன் நல்கும். எனவே தான் அறிவினை நூலறிவு, நுண்ணறிவு, பட்டறிவு என்று முத்திறமாக மொழிந்தனர். அளவை நூலார் இவற்றை காணல், கருதல், உரை என்று கூறுவர். திரு சோமலெ அவர்கள் இம்மூவகையாலும் வளம்பெற்ற புலமையாளர்.

கருத்துக்களைத் தொகுப்பதில் - செய்திகளைச் சேர்ப்பதில் செந்தமிழ்த் தும்பியாகத் திரு சோமலெ திகழ்கின்றார்கள். பேசிக் கொண்டிருக்கும்பொழுது சிறு குறிப்புக் கிடைத்தாலும் தவறாது குறித்துக் கொள்வார்கள். புதிய நண்பர்களைக் கண்டால் அவர்களது ஊர்ப்புறத்துச் செய்திகளையெல்லாம் கேட்டறிந்து கொள்வார்கள். செல்வம் சேர்ப்பது போல செய்திகளைச் சேர்ப்பார்கள் என்பதுகூடப் பொருந்தும். இத்தகைய அயராத உழைப்பின் பயனாக மலர்ந்த பயனுள்ள பல கட்டுரைகளால் அவர்கள் ஆற்றும் தமிழ்ப்பணி அரியது - அரியது - போற்றுதலுக்குரியது.

இலக்கியப் பணிக்கெல்லாம் முடிமணியாக "செட்டி நாடும் செந்தமிழும்" என்னும் இச்செந்தமிழ் நூல் திகழ்கிறது என்றால் மிகையாகாது. செட்டிநாடு என்று இன்று சிறப்புடன் விளங்கும் பகுதி சங்ககாலம் தொடங்கியே செந்தமிழ் வளர்ச்சியில் சிறப்பிடம் பெற்றதாகும். கணியனின் பூங்குன்றமும் பாரியின் பறம்பும் உள்ளடங்கியது செட்டிநாடு. எனவே இயல்பாகவே செந்தமிழின் ஊற்றுக்கண்ணாக இப்பகுதி விளங்குவதாகும்.

இரண்டாம் பூங்குன்றனாராகப் பண்டிதமணியார் விளங்கினார். தேவார, திருமுறைகள் சிதம்பரத்திலிருந்து கிடைத்தது போல, சங்க இலக்கியச் சுவடிகளும் மிதிலைப் பட்டியிலிருந்து கிடைத்திருக்கின்றன. கணியன் பூங்குன்றனாரின் காலம் முதல் கண்ணதாசன் காலம்வரை என்று

காலத்தைக் கணக்கிடும் வண்ணம் அன்று தொடங்கிய செந்தமிழ்த் தொண்டு ·வாழையடி வாழையாக இன்றும் வளர்ந்து வருகின்றது. மூவேந்தர்களுக்கும் முச்சங்கங்களுக்கும் பிறகு தமிழ்வளர்த்த பெருமையும் உரிமையும் செட்டி நாட்டன்பர்களுக்குரியது.

சங்கநாளில் வாழ்வியல் நெறியாக விளங்கிய சிவநெறி தனியொரு சமயமாகத் தழைத்த பின்னர் சோழ மன்னர்களைப் போல திருக்கோயில்களையும் திருமுறைத் தமிழையும் பேணிக் காத்த பெருமையாளர் நகரத்தார்களே! செட்டியார்கள் சிவநெறியாளர்களாகவே அமையவேண்டும் என்று விதிமுறை கூட வகுக்கப்பட்டிருந்த குறிப்பு இந்நூலில் காட்டப்பெறுகிறது.

தமிழறிந்த நெஞ்சங்களில் செட்டிநாட்டரசர், அழகப்பர், கருமுத்து தியாகராசர் செட்டியார் போன்றவர்கள் இமயமென விளங்குகின்றனர். செந்தமிழ் மொழியும் சிவநெறியும் சிறந்து விளங்கச் செய்த வண்ணமே, இசை முதலிய கலைத் துறையிலும் வளம் பெருக்கினர். தமிழிசை தழைத்ததும் செட்டிநாட்டரசர் பணியாலன்றோ!

நூல் வெளியீட்டிலும் இதழ்வெளியீட்டிலும் வளங் கூட்டினர். நாளிதழ் உலகில் 'தமிழ் நாடு' ஒரு விழிப்புணர்ச்சிக் குக் காரணமாயிற்று.

கற்றோர்க்குச் சென்றவிடம் எல்லாம் சிறப்புக் கிடைக்கும் என்பார்கள். செட்டிநாட்டன்பர்கள் சென்றவிடம் எல்லாம் சிறப்புச் செய்தனர். வணிகத் தொடர்பால் வெளிநாடு சென்றபோது அங்கெல்லாம் தமிழ் வளம் தழைக்கச் செய்தார்கள்.

இங்ஙனம் செட்டிநாடு செந்தமிழ் வளர்ச்சிக்குச் செய்துள்ள பணிகள் பலவும் நிரல்பட வழங்கும். இப்பெரு நூலில் செட்டிநாட்டு அமைப்பு, செட்டியார் பெயர் விளக்கம், நகரத்தாரிடையே காணப்படும் சங்ககாலத்துத் தமிழ் மரபுகள், வணிக வரலாறு என்ற பல்வேறு செய்திகளும் இயைபுற எடுத்துக்காட்டப் பெறுகின்றன.

செட்டிநாடும் வரலாறும் என்பது செட்டிநாட்டுக்கும் செந்தமிழுக்கும் உள்ள தொடர்பினைக் கூறுவது என்ற அளவில் அமையாது செட்டிநாட்டு வரலாறும் செந்தமிழ் வளர்ச்சியின் வரலாறும் என்று சொல்லும்படியாகப் பரந்து விளங்குகிறது.

திரு சோமலெ அவர்களுடைய அயர்விலா உழைப்பு பல நாள் முயன்று பலரையும் தேடித் தொகுத்த குறிப்பு அனைத்தும் கூடி அழகுத் தமிழுக்கு அணி செய்யும் பெரு நூலாய் இந்நன்னூல் திகழ்கின்றது.

சோமலெயின் எழுத்தாற்றல் கற்பார் கருத்தினை ஈர்த்து ஆர்வத்தினைத் தூண்டி அறிவினை வளர்க்கும் திறம் படைத்தது. இவ்வகையில் இந்நூல் கருத்துக் கருவூலமாகத் திகழ்கிறது. இலக்கியங்களைச் சுவை இலக்கியம், பயன் இலக்கியம் என்று பாகுபாடு செய்யும் மரபுண்டு. சோமலெயின் நூல்கள் சுவையும் பயனும் ஒருங்கே கொண்டவை.

எனவே இப் பயனுள்ள பணியினைச் செய்திருக்கும் பேருழைப்பினை மதித்துப் போற்றும் கடப்பாடு தமிழறிந்தார் அனைவர்க்கும் உரியதாகும்.

நாவுக்கு அரசாக மட்டுமின்றி பதிப்புத்துறைக்கு வேந்தராகவும் திகழும் பெருமை நண்பர் திருநாவுக்கரசைச் சாரும். சிறந்த நூல்களை வெளியிடுகின்ற சீரிய பண்பு வாய்ந்த வானதி பதிப்பகத்தார் ஆற்றி வருகின்ற பணிகள் எல்லோரும் போற்றுதற்குரியன. திரு சோமலெ அவர்களுடைய நூல்கள் அனைத்தையும் பெற்று வானதி வெளியிடுமானால் நான் பெரிதும் மகிழ்வேன்.

வானதி பதிப்பகம் நூல்களை வனப்புற வெளியிடுவதோடன்றி காலத்திற்கு ஏற்ப, சிறந்த கருத்துக்கள் அடங்கிய நூல்களைத் தேர்ந்தெடுத்து வழங்கும் பாங்கும் குறிப்பிடத் தக்கது.

**ஔவை நடராசன்**
**7–12–84**

# பொருளடக்கம்

## பிற்சேர்க்கை

# செட்டிநாடும் செந்தமிழும்

## 1

## யாதும் ஊரே, யாவரும் கேளிர்!

தமிழ்ப் பண்பாட்டுக்குக் கட்டியம் கூறும் இச்சொற்றொடரை ஈன்றது செட்டிநாடு.

தமிழ் நாகரிகத்தின் சிகரத்துக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் இந்த மண்ணின் மைந்தர்கள், தமிழின் பெருமையைப் பாரெங்கும் பரப்பி வந்திருப்பவர்கள், தொடர்ந்து இந்தப் பணியை ஆர்வமுடன் செய்து வருபவர்கள். சைவத்தைப் போல, தமிழும் இவர்களுடைய இரத்தத்தில் இரண்டறக் கலந்தது.

பூங்குன்றம்
பறம்பு நாடு
கானப்பேரெயில்
ஒக்கூர்

—இவை சங்ககாலச் செட்டிநாடு.

இருபதாம் நூற்றாண்டுச் செட்டிநாட்டிலும் புலவர்கள், புரவலர்கள், வள்ளல்கள் வாழையடி வாழையென வாழ்ந்து வருகின்றனர்.

சிற்றூர்களும் தமிழ்வளர்ச்சியின் தனித்தனிக் கூறுகளுக்கு உரமிட்டிருப்பதைச் செட்டிநாட்டு ஊர்ப்பட்டியல் செப்பும், உணர்த்தும்.

சங்க கால மரபுக்குச் சான்று பகரும் மங்கலச் சடங்குகள் நிகழிடம் செட்டிநாடு. மணிமேகலை - சிலப்பதிகாரம் சுட்டும்

பழக்கங்கள் பட்டுப்போய் விடாமல் பேணப்பெறும் காப்பகம் செட்டிநாடு.

கம்பனைத் தமிழர் உள்ளங்களில் நிலைபெறச் செய்திருப்பது செட்டிநாடு. கவியரசர் கண்ணதாசனைத் தந்திருப்பதும் செட்டிநாடே. தமிழ் இசைக்கும் தமிழ் நாடகத்துக்கும் செட்டிநாடு புத்துயிர் ஊட்டியிருப்பதை மறக்கவோ மறுக்கவோ இயலாது.

புத்திலக்கியப் பதிப்பகங்களின் ஊற்றுக்கண் இந்த நாடு. சுருங்கக்கூறின் செட்டிநாடு தமிழ்க்கோட்டை.

பாண்டித் தமிழும் பாரி வண்மையும் சூழ்ந்த செட்டி நாடு தமிழகத்தில் ஒரு சிறு பகுதி; எனினும், இங்கு வாழும் மக்கள் செய்திருக்கும் செந்தமிழ்த் தொண்டு மிகப்பெரிது. இதை ஓரளவு தெரிவிப்பதே இந்நூலின் நோக்கம்.

## செட்டிநாடு

செட்டிநாடு எது?

செட்டிநாடு என்பது இராமநாதபுர மாவட்டத்துத் தேவகோட்டை, சிவகங்கைக் கோட்டங்களையும், புதுக் கோட்டை மாவட்டத்துப் புதுக்கோட்டைக் கோட்டத்திலுள்ள திருமெய்யம் வட்டம் ஆகியவற்றைக் குறிக்கும். இப்பகுதியில் அடங்கிய 96 ஊர்களில் நகரத்தார் வாழ்ந்து வந்தனர். இவற்றுள் சில ஊர்கள் மறைந்து விட்டன; சேந்தணி, மேலமாகாணம், ஆலங்குடி, கொறட்டி, சித்தாட்டிவயல், பரியா மருதபட்டி, நெய்வாசல்பட்டி, பொய்யளூர், கூத்தளூர், சொர்ணநாதபுரம் என்ற தாணிச்சாவூரணி போன்ற சில ஊர்களில் இப்போது நகரத்தார் குடும்பங்கள் இல்லை. இந்த ஊர்களில் வாழ்ந்த நகரத்தார் அவ்வூர்களை விட்டுப் புது ஊர்களில் குடியேறினர். கி.பி. 1984-இல் இவர்கள் வாழும் ஊர்கள் 76 உள்ளன. இவற்றுள் 56 ஊர்கள் இராமநாதபுர மாவட்டத்திலும் எஞ்சிய 20 ஊர்கள் புதுக்கோட்டை மாவட்டத்திலும் இருக்கின்றன. தேவகோட்டையும் காரைக் குடியுமே பெருநகரங்கள்; ஏனைய யாவும் சிற்றூர்களே.

ஊர்களின் பட்டியலை அகரவரிசையில் கீழே காண்க:

| | வட்டம் |
|---|---|
| 1. அமராவதிபுதூர் | (காரைக்குடி) |
| 2. அரண்மனைச் சிறுவயல் | (காரைக்குடி) |
| 3. அரிமளம் | (திருமெய்யம்) |
| 4. அரியக்குடி | (காரைக்குடி) |
| 5. அலவாக் கோட்டை | (சிவகங்கை) |
| 6. அழகாபுரி கண்டனூர் (இதைக் கொல்லங்குடி அழகாபுரி என்றும் சொல்லுவர்) | (காரைக்குடி) |
| 7. அழகாபுரி நாட்டரசன்கோட்டை | (சிவகங்கை) |
| 8. ஆத்தன்குடி | (காரைக்குடி) |
| 9. ஆத்திக்காடு தெற்கூர் | (திருப்பத்தூர்) |
| 10. ஆவனிப்பட்டி | (திருப்பத்தூர்) |
| 11. உ. சிறுவயல் | (காரைக்குடி) |
| 12. உலகன்பட்டி | (திருப்பத்தூர்) |
| 13. ஒக்கூர் | (சிவகங்கை) |
| 14. கடியாபட்டி என்ற இராமச்சந்திரபுரம் | (திருமெய்யம்) |
| 15. கண்டமாணிக்கம் | (திருப்பத்தூர்) |
| 16. கண்டவராயன்பட்டி | (திருப்பத்தூர்) |
| 17. கண்டனூர் | (காரைக்குடி) |
| 18. கருங்குளம் | (காரைக்குடி) |
| 19. கல்லல் | (காரைக்குடி) |
| 20. கல்லுப்பட்டி | (தேவகோட்டை) |
| 21. காரைக்குடி | (காரைக்குடி) |
| 22. காளையார் மங்கலம் | (சிவகங்கை) |
| 23. கானாடு காத்தான் | (காரைக்குடி) |
| 24. கீழச்சிவற்பட்டி பில்லமங்கலம் அழகாபுரி | (திருப்பத்தூர்) |
| 25. குருவிக் கொண்டான்பட்டி | (திருமெய்யம்) |
| 26. குழிபிறை | (திருமெய்யம்) |
| 27. கொற்றமங்கலம் | (காரைக்குடி) |

| | |
|---|---|
| 28. கொப்பனாபட்டி | (திருமெய்யம்) |
| 29. கோட்டையூர் | (காரைக்குடி) |
| 30. கோனாபட்டு | (திருமெய்யம்) |
| 31. சக்கந்தி | (சிவகங்கை) |
| 32. சண்முகநாதபுரம் என்ற ஆராவயல் | (தேவகோட்டை) |
| 33. சிராவயல் | (காரைக்குடி) |
| 34. சிறுகூடற்பட்டி | (திருப்பத்தூர்) |
| 35. செம்பொன்னூர் | (காரைக்குடி) |
| 36. செயங்கொண்டபுரம் என்ற செக்காலை | (காரைக்குடி) |
| 37. செவ்வூர் | (திருப்பத்தூர்) |
| 38. சொக்கநாதபுரம் | (சிவகங்கை) |
| 39. சொக்கலிங்கபுரம் என்ற மதகுப்பட்டி | (சிவகங்கை) |
| 40. சொக்கலிங்கம்புதூர் என்ற சொக்கனேந்தல் | (காரைக்குடி) |
| 41. சோழபுரம் | (சிவகங்கை) |
| 42. தேவகோட்டை | (தேவகோட்டை) |
| 43. தேனிபட்டி | (திருமெய்யம்) |
| 44. நடராசபுரம் | (காரைக்குடி) |
| 45. நற்சாந்துபட்டி | (திருமெய்யம்) |
| 46. நாச்சியாபுரம் | (காரைக்குடி) |
| 47. நாட்டரசன் கோட்டை | (சிவகங்கை) |
| 48. நெற்குப்பை | (திருப்பத்தூர்) |
| 49. நேமுத்துப்பட்டி | (காரைக்குடி) |
| 50. பட்டமங்கலம் | (திருப்பத்தூர்) |
| 51. பலவான்குடி | (காரைக்குடி) |
| 52. பள்ளத்தூர் | (காரைக்குடி) |
| 53. பனங்குடி | (காரைக்குடி) |
| 54. பனையப்பட்டி | (திருமெய்யம்) |
| 55. பாகனேரி | (சிவகங்கை) |
| 56. பிள்ளையார்பட்டி | (திருப்பத்தூர்) |

57. புதுப்பட்டி (பொன்னமராவதி)
என்ற பொன். புதுப்பட்டி (திருமெய்யம்)

58. புதுவயல் (காரைக்குடி)

59. பூங்குடி என்னும் கீழப்பூங்குடி (சிவகங்கை)

50. பூலாங்குறிச்சி (திருப்பத்தூர்)

61. பொன்னமராவதி (திருமெய்யம்)

62. மகிபாலன்பட்டி (திருப்பத்தூர்)

63. மாநகரி (காரைக்குடி)

64. மிதிலைப்பட்டி (திருமெய்யம்)

65. ஆ. முத்துப்பட்டினம் (காரைக்குடி)

66. மேலைச்சிவபுரி (திருமெய்யம்)

67. ராங்கியம் (திருமெய்யம்)

68. ராயவரம் (திருமெய்யம்)

69. கொற்றமங்கலம் லெட்சுமிபுரம் (காரைக்குடி)

70. நெய்க்கோணம் லெட்சுமிபுரம்
(நெற்கோணம் என்பதன் மரூவு) (திருமெய்யம்)

71. வலையபட்டி (திருமெய்யம்)

72. விராமதி (திருப்பத்தூர்)

73. விரையாச்சிலை (திருமெய்யம்)

74. வெற்றியூர் (காரைக்குடி)

75. வேகுப்பட்டி (திருமெய்யம்)

76. வேந்தன்பட்டி (திருமெய்யம்)

ஊர்களின் எண்ணிக்கை அருகிவிட்ட போதிலும் 96 ஊர்க்கூட்டம் என்ற பெயரே இந்தச் சமூகத்தின் கூட்டங்களுக்கு நிலவி வருகிறது.

வீரசேகரபுரம், முறையூர், வேங்காவயல் ஆகியவையும் செட்டி நாட்டைச் சேர்ந்தனவே. ஆயினும் இவை 96 ஊர் என்ற பட்டியலுக்குப் புறம்பானவை.

## வட்டகைப் பிரிவு

குன்றக்குடி மலை, செட்டி நாட்டுக்கு நடுவில் அமைந்திருக்கிறது. எனவே அதற்குக் கிழக்கே, மேற்கே, தெற்கே

உள்ள ஊர்கள் கீழ வட்டகை, மேல வட்டகை, தெற்கு வட்டகை என்னும் பெயர்களால் வழங்குகின்றன. இவற்றின் விவரம் பிற்சேர்க்கையில் வட்டகைப் பிரிவு என்னும் தலைப்பில் காண்க.

கீழப்பத்தூர், மேலப்பத்தூர், நீண்ட கரைப்பிரிவு என்பவை புதுக்கோட்டைத் தனியரசுப்பகுதியைச் சேர்ந்திருந் தவை, 'வட்டகை'கள் ஆங்கிலேயருடைய நேரடியான ஆட்சிக்கு உட்பட்டிருந்தவை.

**எல்லைகள்**

செட்டிநாட்டின் எல்லையை* வெள்ளாற்றின் தெற்கு, பிரான்மலை என்னும் பறம்பு மலைக்குக் கிழக்கு, வைகைக்கு வடக்கு, வங்காள குடாக்கடலுக்கு மேற்கு என்று சொல்லலாம். இருபுறம் ஆறு, ஒரு புறம் மலை, பிறிதொரு புறம் கடல் என இயற்கையான எல்லைகள் அமைந்திருத்தல் சிறப்பாகக் கவனிக்கத்தக்கது.

செட்டிநாட்டு எல்லையே பாண்டி நாட்டின் எல்லையை உறுதிப்படுத்த உதவுவதாக டாக்டர் கால்டுவெல் கூறியுள்ளார்.

---

* *Dr. Caldwell says in his History of Tinnevelly:- There are certain geographical stanzas current in Tamil which give the boundaries and extent of the three Tamil kingdoms. The river Vellaru which is represented in the Pandya stanza as the northern boundary of the Pandya Country is also represented of the Chola Country. The Vellaru referred to rises in the hills near Marungapuri in Trichy Dt, takes a south - easterly course through the Native State of Pudukotta and falls into the sea in Palk Strait south of Point Calymore. This identification of the Vellaru is confirmed by the circumstance that it was an old custom prevalent amongst the Nattukottai Chetties that their women should never be allowed to cross the Vellaru, if being considered an act of bad omen for women to cross boundaries.*

இந்த எல்லைகள் பூங்குன்றை வேலங்குடிக் கல்வெட்டில் உள்ளன.

'வெள்ளாறது வடக்காமேற் குப்பிரான் மலையாத்
தெள்ளார் புனல்வைகை தெற்காகும் – ஒள்ளிய நீ
ரெட்டிக் கடற்கிழக்கா மிஃதன்றோ நாட்டரசண்சேர்
செட்டிநாட் டெல்லையெனச் செப்பு'

–பாடுவார் முத்தப்பச் செட்டியார்

திருச்சியிலிருந்து இராமேசுவரத்திற்கு இரயிலில் செல்லு வோம். இருபுறமும் வறண்ட நிலப் பகுதியில் இன்பக் காட்சி நல்கும் எழில்மிகு மாட மாளிகைகள் ஆங்காங்கு வானளாவி நிற்கின்றன. இங்ஙனம் பொட்டல் வெளியில் பொலிவு பெற்று விளங்கிய வளமனைகளைக் கொண்ட சிற்றூர்களே மேற்சொன்ன 'நகரங்களுள்' சிலவாகும்.

சென்னையிலிருந்து புதுக்கோட்டை வரை பறந்தும் விரைந்தும் வரும் இராமேசுவரம் எக்ஸ்பிரஸ், சேது எக்ஸ்பிரஸ் என்னும் தொடர் வண்டிகள் புதுக்கோட்டைக்கு வந்ததும் அவற்றின் வேகம் குறைந்து, அமைதி அடைந்து பல நிலையங் களிலும் நின்று ஆற அமர ஊர்ந்து செல்லும். செட்டி நாட்டின் எல்லையை மிதித்துவிட்டோம் என்பதற்கு இதுவே அறிகுறி.

## வாழும் மக்கள்

செட்டிநாட்டில் வாழும் மக்களில் பெரும்பாலோர் நாட்டார் நகரத்தார் என்ற இனப்பிரிவுகளில் அடங்குவர்.

நாவலர் பண்டித ந.மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள், கரந்தைத் தமிழ்ச் சங்க ஆண்டுவிழா ஒன்றில் பண்டிதமணி அவர்களைச் சுட்டி, "இப்பேரவையில் நகரத்தார் முன்னிலையில் நாட்டார் பேச நேர்ந்தமை குறித்து யான் பெரு மகிழ்ச்சி அடைகிறேன்" என்று கூறியதன் நயம் இங்கு நினைக்கத்தகும்.

நாட்டார் என்னும் சொல் கள்ளர், மறவர், அகம்படியர் என்னும் முக்குலத்துப் பெருமக்களைக் குறிக்கும்.

முக்குலத்தோர் சிலர் இப்போது தங்களை வல்லம்பர் என்று கூறிக்கொள்ளுகின்றனர். இச்சொல் தஞ்சாவூர்க்கு அருகேயுள்ள வல்லத்திலிருந்து வந்த பிள்ளைமாரைக் குறிக்கும். 'வல்லம் வேளாளர்' என்று இச்சமூகம், ஆவணப் பத்திரங்களில் குறிப்பிடப்பெறுகிறது.

சேர, சோழ, பாண்டிய மன்னர்களும் பின்னாளில் குறு நிலமன்னராக இருந்தவர்களும் முக்குலத்தவரே. நாட்டுக்கு உரியவர்கள் ஆகையால், இவர்கள் நாட்டார் எனப் பெயர் பெற்றனர்.

### கள்ளர்

தமிழ்நாடு பலவாறான படையெடுப்புக்களாலும், உள் நாட்டுக் குழப்பங்களாலும் பலமுறை அல்லற்பட்டபோது, தம் போர்த்திறனையும் வீரத்தையும் இவர்கள் நிலை நிறுத்தினர். கி.பி. 1324இல் மதுரையை ஆண்ட பராக்கிரம பாண்டியரை வெளிக்கடத்திக் காப்பாற்றியவர் இக் குலத்தினரே.

17-ஆம் நூற்றாண்டில் அரசு புரிந்த திருமலைநாயக்கர் மதுரை மாவட்டத்திலுள்ள ஊராண்ட உறப்பனூரைத் தலைநகராகக் கொண்ட கள்ளர் நாட்டை அமைத்துக் கொடுத்து, கள்ளர்களுக்குப் பல விருதுகளும் சலுகைகளும் வழங்கினார். இந்நாடு 24 கிராமங்களைக் கொண்டது.

கள்ளர் ச.மூகத்தைச் சேர்ந்த பலர் வேளாண்மைத் தொழிலில் சிறந்து விளங்குகின்றனர். வேறு சிலர், வெளி நாடு களுக்குச் சென்று நகரத்தார்களின் தொழில்களில் அவர்களுக்கு உறுதுணையாக இருந்தனர். பின்னர், தாமும் அதே தொழில்களைச் செய்து வந்தனர். இவ்வாறு கடல் கடந்து சென்று பொருளீட்டித் தாயகம் திரும்பியவர்கள் தங்கள் பெயருக்குப் பின்னர் "பிள்ளை" என்ற இறுதிச் சொல்லை இணைத்துக் கொண்டனர்.

இவர்களுள் சிலர் தங்களைச் "சேர்வைக்காரர்" என்றும் குறிப்பிட்டுக் கொள்கின்றனர். அம்பலப்பட்டம் பெற்றவர்கள் கள்ளர்களில் பலர் உள்ளனர். இப்போது, இது, சாதிப் பெயர் போல் இயற்பெயருக்குப்பின் அம்பலக்காரர் என்று சேர்த்துக் கொள்ளப்பெறுகிறது. கள்ளர் சமூகத்தவர் புதுக்கோட்டையில்

*1948*ஆம் ஆண்டு வரை ஆட்சி நடத்திய சிறப்புக்கு உரியவர் ஆவார்கள்.

### மறவர்

இராமநாதபுரம் பகுதியிலிருந்து மறவர்கள் செட்டி நாட்டுக்குக் குடியேறினர் என்பது வரலாறு. புதுக்கோட்டைச் சீமையில் போர் நடந்த காலம்தொட்டுப் பல்லாயிரக் கணக்கான மறவர்கள் செட்டி நாட்டுச் சிற்றூர்களில் சிறப்புடன் வாழ்ந்து வருகின்றனர். இவர்களுக்குத் "தேவர்" என்னும் பெயர் வழங்கி வருகிறது. இம்மரபு வீரத்திற்குப் புகழ் பெற்றது இராமநாதபுரம், சிவகங்கை மன்னர்கள் இம் மரபினரே.

### நகரத்தார்

இக்காலத்தில் பெயர் கூறாது "பட்டினம்" என்பது சென்னையைக் குறிப்பது போல, பூம்புகார் நகரம் பழங்காலத்தில் "நகரம்" என்றும், "பட்டினம்" என்றும் வழங்கப் பெற்றது. காவிரிப்பூம்பட்டினம் கடல் கொள்ளப்பட்டபோது, இவர்கள் அங்கிருந்து சிதறி, மறவர் நாட்டில் குடியேறி நகரங்களை உண்டாக்கியதாலும் பூம்புகார் நகரத்திலிருந்து வந்ததாலும் "நகரத்தார்" எனப் பெயர் பெற்றனர்.

சுந்தர பாண்டியன் என்னும் பாண்டிய மன்னனின் வேண்டுகோளுக்கிணங்க, நகரத்தார்கள் சோழ நாட்டிலிருந்து வந்தனர் என்று 'A General History of the Pudukkottai State' என்ற நூலில் கூறப்பெற்றிருக்கிறது. நகரத்தார்கள் திராவிடர் என்பதில் யாருக்கும் ஐயப்பாடு இல்லை.*

---

* *From my own personal observation and study of the Chettiar character, I have come to the conclusion that they are one hundred percent Dravidians today living in South India. These people had the least to do with Aryan races which came South from the North. Their individuality, the bond of brotherhood among them, their spirit of adventure their reverence for the elders of the community, their devotion to idol worship and ancestral religion, all these seem to establish that the Dravidian blood in them is so strong.*

**NILKAN PERUMAL**

*in climpses of Chettimarnad, 1937.*

*(p. 2,3)*

செட்டி நாட்டில் செட்டியார்கள் சிறுபான்மையோராக இருந்தும், கல்வி, பொருள் நிலை, செல்வாக்கு ஆகியவற்றில் 1950ஆம் ஆண்டு வரை ஏனையோரைவிடச் சிறந்து விளங்கியதால் இப் பகுதி "செட்டிநாடு" எனப் பெயர் பெற்றது போலும். தமிழகத்தில் வேறு எந்தப் பகுதியும் இவ்வாறு ஓர் இனத்தின் பெயரால் குறிப்பிடப் பெறவில்லை. செட்டியார் என்று இந் நூலில் குறிக்கப்பெறுவது நகரத்தாரையே (நாட்டுக் கோட்டைச் செட்டியாரையே) ஆகும்.

1. நகரத்தார்
2. நாட்டுக் கோட்டையார்
3. தன வணிகர்
4. தனவைசியர்
5. நாட்டரசன் கோட்டைச் செட்டியார்
6. செட்டிப் பிள்ளைகள்
7. நானா தேசிகள்
8. ஏழு கோயில் நகரத்தார்
9. 96 ஊர் நகரத்தார்

என்ற பெயர்கள் இவர்களுக்கு உண்டு. உள் நாடுகளுக்குள் வந்து கோட்டை போன்ற வீடு கட்டி வாழ்ந்ததால் 'நாட்டுக் கோட்டையார்' என்றும் அழைக்கப் பெற்றனர்.,

கோயிற்பிரிவுகளில் இவர்களுள் 9 பிரிவுகள் (நகரக் கோயில்கள்) உள்ளன. இவற்றுள் 22 கோத்திரங்கள் உண்டு. (விவரம் பிற்சேர்க்கையில் காண்க) இவற்றுக்கு உட்பிரிவு என்று பெயர். ஓர் உட்பிரிவினர் தம் உட்பிரிவைச் சேர்ந்த ஒருவரையே "சுவீகார மகன்" என்று ஏற்றுக்கொள்ள வேண்டும்; ஆனால், தம் உட்பிரிவைச் சேராத ஒரு பெண்ணையே திருமணம் செய்துகொள்ள இயலும்.

பூம்புகாரில் இவர்கள் ஏழு கோயில் பிரிவினராகவே இருந்தனர். செட்டிநாட்டுக்கு வந்து சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு பிள்ளையார்பட்டி, இரணிக்கோயில் என்ற புதிய கோயில் பிரிவுகள் இளையாற்றக் குடியினின்றும் உருவாக்கப் பட்டன.

## புள்ளிகள்

நகரத்தார் குடும்பங்களின் மொத்த எண்ணிக்கை 25,000 இருக்கலாம். ஒரு குடும்பத்தைப் "புள்ளி" (கலைக்கட்டு) என்று

குறிப்பிடுவது வழக்கம். செட்டியார்கள் மொத்தம் ஒரு மிலியன் (பத்து லட்சம்) பேர் இருப்பார்களா என்று ஐரோப்பிய அலுவலர் ஒருவர் இந்நூலாசிரியரை ஒருமுறை கேட்டார். இக்கருத்து நிலவுவதற்குச் செட்டியார்களின் முன்னாள் பொருளாதாரச் சிறப்பே காரணமாக இருந்திருக்கலாம். பொதுப்படையாகக் கூறுமிடத்து, இத்தகைய செழிப்பு, செட்டி நாட்டில் இப்பொழுது பரவலாக இல்லை. வாழ்ந்து முறிந்தவர்களே பெரும்பாலோராக உள்ளனர். வயது வந்தும் மணமாகாத கன்னியர் சில ஆயிரம் பேர் உள்ளனர். அக்காளுக்கு அல்லது தங்கைக்கு மணமாகாததால் தங்கள் திருமணமும் தடைப்படும் காளையரும் உள்ளனர்.

## குமாரவேலூர் முதலிய ஊரார்

குமாரவேலூர், சீனமங்கலம், சண்முகநாதபட்டணம், எஸ். சொக்கநாதபுரம், பனக்கரை, ஆவரங்குடி, ஆ. கருங்குளம், பாளையப்பட்டி, மித்திராவயல், மு. சூரக்குடி, ஏரியூர், பிரான் மலை போன்ற ஊர்களில் வாழும் சில நூறு குடும்பத்தார் இங்கே சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களும் தங்களை நாட்டுக் கோட்டையார் வம்சம் என்றே குறிப்பிடுகின்றனர். இவர்களும் 9 கோயில் பிரிவுகள், 22 கோத்திரங்கள் உடையவர்கள். புதுமை, கார்த்திகைச் சூப்படி, திருவாதிரை, திருமணம், மகாநோன்பு, பிள்ளையார் நோன்பு முதலிய சடங்குகளை நாட்டுக் கோட்டைச் செட்டியார் களைப் போலவே இவர்களும் செய்து வருகின்றனர்.

இரு நூறு ஆண்டுகளுக்குமுன் உறுதிக்கோட்டை வட்டகை நகரத்தார் 104 புள்ளிக்காரர் மட்டுமே இருந்தனர் என்று கூறப்படுகிறது. (1) ஏரியூர் (2) உறுதிக்கோட்டை (3) திட்டுக்கோட்டை (4) சருகணி (5) பனக்கரை (6) ஆவரங்குடி (7) கருங்குளம் (8) சூரக்குடி ஆகிய ஊர்களுக்கு இவர்கள் குடியேறினர். பின்னர் உறுதிக்கோட்டை, திட்டுக் கோட்டை, சருகணி, பனக்கரை ஆகிய ஊர்களில் வாழ்ந்த நகரத்தார் அவ்வூர்களை விட்டு வெளியேறி குமாரவேலூர், சீன மங்கலம், சொக்கநாதபுரம், சண்முகநாதபட்டணம் என்னும் ஊர்களுக்குக் குடியேறினர். இவர்களுடைய மக்கள் தொகை இப்போது 650 புள்ளிகளாய்ப் பெருகியிருக்கிறது. ஒரு காலத்தில் 96 ஊர் நகரக்கூட்டத்தில் ஒரு சர்ச்சை ஏற்பட்டதாகக் கூறுவர். அதன் விளைவாக இவர்கள் திருமணங்களுக்கு நகரக் கோயில்களிலிருந்து மாலை

அனுப்புவது நிறுத்தப்பட்டதாகவும் செவிவழிச் செய்தி நிலவுகிறது.

## முறையூர்ச் செட்டியார்

முறையூர்ச் செட்டியார்கள் என்ற பெயரில் 400 புள்ளி கள் முறையூர், புதுவயல், வீரகேசரபுரம், வேங்காவயல் ஆகிய நான்கு ஊர்களில் வாழ்கின்றனர். இவர்களுடைய பெண்டிர் பயன்படுத்தும் கழுத்து உறு, ஒற்றைக்கழுத்து, உறுவாகவே இருக்கும். அதனால் இவர்களை மற்றவர்கள் "ஒற்றை வடக் காரர்" என்று குறிப்பிடுகின்றனர்,

நாட்டுக்கோட்டை நகரத்தார் போலவே இவர்களுடைய திருமணங்களுக்கும், நகரக் கோயில்களிலிருந்து மாலை மரியாதை, விருதுகளும் அனுப்பப் பெறுகின்றன. திருவிளக்குக் காணிக்கையும் கொடுத்து வருகின்றனர். இசைவுப் பிடிமானமும் எழுதி வருகின்றனர்.

## ஆத்தங்குடிச் செட்டியார்

மேலூரைச் சுற்றிய நாவினிப்பட்டி, வல்லாளப்பட்டி, கொட்டக்குடி, அட்டைப்பட்டி முதலிய ஊர்களில் இவர்கள் சில நூறு குடும்பத்தினர் உள்ளனர். இவர்கள் 300 ஆண்டுகளுக்கு முன் கானாடுகாத்தான், சூரக்குடிப் பகுதியில் வாழ்ந்தவர்கள் என்று தெரிகிறது. ஆண்டுதோறும், கானாடு காத்தான் கரை மேல் அழகர் கோயிலுக்கு வந்து வழிபடுவதை இவர்கள் தங்களுடைய தலையாய கடமையாகக் கொண்டுள்ளனர்.

## "செட்டி" பெயர்க் காரணம்

செட்டி என்பது வணிகரைக் குறிக்கும் சொல். செட்டிறை, செட்டியிறை என்பன வணிகர்க்கு விதிக்கப் பெற்ற சுங்க வரிகள். *செட்டி நாட்டிலுள்ள சதுர் வேதமங்கலம், திருக்கோளக்குடி ஆகிய ஊர்களிலுள்ள கல்வெட்டுக்களில் வணிகக் குழுக்கள் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. அக்குழுக்கள் பயன்படுத்திய ஒரு முத்திரையும் கல்வெட்டில் பொறிக்கப் பெற்றிருக்கிறது.

---

* *Inscriptional Terms: T.N. Subramaniam*

வணிகரில் சிறந்தோர்க்கு "எட்டி" என்ற பட்டம் பாண்டிய அரசர்களால் கொடுக்கப் பெற்றது. எட்டிப் பூவும் எட்டி மோதிரமும் அவர்களுக்குப் பரிசாக வழங்கப் பெற்றன. 'எட்டி' என்பதே 'செட்டி' என மருவி வழங்குகிறது என்பர் சிலர்.

எட்டி சாத்தன் என்ற ஒரு தலைவன் இருந்ததாகவும் வரலாறு உண்டு. இவனைப் பற்றிப் பாண்டியர் காலம் என்னும் பகுதியில் கூறுவோம்.

"செட்டு" என்னும் சொல் "ஆர்" விகுதி பெற்றுச் செட்டியார் என்னும் சொல் ஏற்பட்டதென்பதே, பெரும் பாலோர் ஏற்றுக்கொள்ளும் கருத்து. 'முதலி' என்ற அரசாங்கப் பட்டம் முதலியார் என்று வழங்குவதும் இங்கு ஒப்பு நோக்கத் தகும். வாணிகத்தில் "செட்டு" என்பது ஆதாயத்தைக் குறிக்கும்.

செட்டு என்னும் சொல்லுக்குச் சிக்கனம் என்ற பொருளும் உண்டு. செட்டியார்கள் என்றதும் அவர்கள் வாழும் மாட மாளிகைகளும், குடும்பங்களில் நடைபெறும் சிறப்பு நிகழ்ச்சிகளுக்கு அவர்கள் செய்யும் பெருஞ்செலவுமே நினைவுக்கு வருவது இயல்பு. இவை உண்மையாயிருப்பினும், அன்றாட வாழ்வில் செட்டியார்கள் சிக்கனத்தின் சின்னமாகவே விளங்கி வந்திருக்கிறார்கள்.

"வீட்டினிற் செட்டாக வாழ்ந்திடுவார் – ஏதும்
வீணின்றி மிக்கக் கணக்கிடுவார்"

என்று சுவாமி சுத்தானந்த பாரதியார், 'தனவணிகர் கும்மி'யில் கூறியிருப்பது முற்றிலும் உண்மையே. காணி காணியாக ஈட்டிக் கோடி கோடியாக அறம் செய்பவர்கள் என்று புலவர் பலர் இச்சமூகத்தைச் சிறப்பித்துக் கூறுவர்.

பண்டைத் தமிழகத்தில் உள்நாட்டு வணிகர் "சாத்து" என்றும், கப்பல் வணிகர் "நாயகர்" என்றும் குறிப்பிடப் பெற்றனர். இருவகை வாணிபமும் செய்து சிறப்படைந்தவர் "எட்டி" ஆயினர்.

செட்டி என்னும் சொல்* வணிகர் குழுத் தலைவனைக் குறிக்கும். "ஸ்ரேஷ்டி" (தலைவன் - புனிதன்) என்னும் வடமொழிச் சொல்லிலிருந்து, தோன்றியதாக ஜவஹர்லால் நேரு எழுதியிருக்கிறார்.* இக்கருத்தைத் தமிழறிஞர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

சென்னைச் செட்டிகள் சென்னையிலும் தென்னகத்தி லும் மட்டுமன்றி பர்மா போன்ற நாடுகளிலும் பரவி வணிகம் செய்துவருகின்றனர்.

"சட்ட" என்பது சகரம். தமிழில் முதலில் வர நேர்ந்தபின் தோன்றிய சொல். அதற்குமுன் இது "செட்ட" என்றே இருந்ததென அறிதல் வேண்டும். இந்த இடைச் சொல் லடியாகப் பிறந்தவையே செட்டு, செட்டி என்பன. நடுவுநிலை என்பதுதான் இதன் வேர்ச்சொல்லின் பொருள்.

தமிழில் பண்டுதொட்டு வழங்கும் செட்டு, செட்ட, செட்டி முதலிய சொற்களைப் பிற மொழி மாந்தரும் எடுத் தாண்டார்கள். சேட் என்ற சொல்லையும் நோக்குக.

எனவே "செட்டி" தூய தமிழ்ச் சொல்லே! என்கிறார் கவிஞர் பாரதிதாசன்.

**நாட்டு வளம்**

இனி, நாட்டு வளத்தை ஆராய்வோம். புதுக் கோட்டைக் கோட்டத்துக்கு "தொண்டைமான் சீமை"** என்று ஒரு பெயர்

---

* *In his "Discovery of India" Jawaharlal Nehru says in chapter7 part 9 as follows:-*

*The Chettys of Madras have also been leaders in business and banking especially from ancient times. The word "Chetty" is derived from the sanskrit SHRESHTHI the leader of a merchant guild. The common appellation 'Seth' is also derived from "Shreshthi" The Madras Chettys have not only played an important part in South India; but they have spread out all over Burma, even in the remoter villages.*

** தொண்டைமான் சீமை:- தொண்டைமான்கள் புதுக் கோட்டையை ஆண்ட அரச குடும்பத்தினர் ஆவர்; புதுக்கோட்டைச் சீமை என்ற பெயர் 1661-ஆம் ஆண்டுச் செப்பேடு ஒன்றில் குறிக்கப்பட்டிருக்கிறது. 1688 வரையில் வழங்கி வந்தது.. 1686 முதல் 1948-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் மூன்றாம் நாள் வரை தனி அரசு இப்பகுதியில் நடைபெற்றது. இந்த அரசின் பரப்பு 1200 சதுர மைல்.

வழங்கிவந்தது. ஒரு காலத்தில் அது செழிப்பாக இருந்தாகப் பின்வரும் நாட்டுப் பாடல் வாயிலாக அறிகிறோம்.

"தேங்காய் உருளத் தினைஉருள–இந்தத்
தேங்காய்த் தண்ணீர் அலைமோத
மாங்காய் காய்த்து உருளுதடி–மகா
ராசன் தொண்டைமான் சீமையிலே"

ஆனால் கடந்த சில நூற்றாண்டுகளாக இது வறட்சிப் பகுதி யாகிவிட்டது.

செட்டிநாட்டின் பெரும்பகுதி இராமநாதபுர மாவட்டத்தில் (இன்றைய சிவகங்கை மாவட்டம்) இருப்பதை முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். 'மலையாளம் பேய்ந்து விளைகிற சீமை, தஞ்சாவூர் பாய்ந்து, விளைகிற சீமை, இராம நாதபுரம் காய்ந்து விளைகிற சீமை" என்பது நாட்டுப்புற மக்களிடையே வழங்கிவரும் ஒரு சொற்றொடர். இராமநாத புர மாவட்டத்தின் எஞ்சிய பகுதிகளில் உள்ள நீர்நிலைகள் கூடச் செட்டிநாட்டில் இல்லை. *போதிய மழையோ நீர்ப்பாசன வசதியோ கிடையாது. ஒரு நாட்டின் சிறப்பு அதன் நீர்வளம், நிலவளம் ஆகியவற்றைப் பொறுத்தது அன்று.

"எவ்வழி நல்லவ ராடவ
ரவ்வழி நல்லை வாழிய நிலனே"

**(அவ்வையார் புறம் 187)**

வறண்ட இப்பகுதியிலும்கூட, மக்களின் நன் முயற்சியால் தமிழ்க் கவிதை செட்டி நாட்டில் கருகிப் போகவில்லை. அவ்வப்போது புலவர்களும் புரவலர்களும் தோன்றிக்கொண்டுதான் இருந்தனர். இருக்கின்றனர். அடுத்து வரும் கட்டுரைகளில் இதை விவரிப்போம்.

** இத்தகைய வறண்ட நிலப்பகுதியில் செட்டியார்கள் குடியேறிய காரணத்தைச் "சிலப்பதிகாரக் காலம்" என்னும் கட்டுரையில் காண்க. குறிப்பு–கானாடுகாத்தானுக்கு அருகே காடுவெட்டி நாடாக்கி, செட்டிநாடு என்ற ஓர் ஊர் 1928–இல் இராசா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களால் புதிதாக அமைக்கப் பெற்றிருக்கிறது. இங்கு இரயில் நிலையம், பஞ்சாலை, தொழிற்கல்லூரி ஆகியன இயங்குகின்றன. இது 96 ஊர்களில் சேர்ந்ததன்று.

# 2

# சங்க காலம்

## முச்சங்கங்களின் வரலாறு

சங்க இலக்கியங்களில் செட்டிநாட்டைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் மிகுதியாக உள்ளன. முச்சங்கங்களின் வரலாற்றை அகவற்பாவில் தெரிவிக்கும் ஓர் ஓலைச் சுவடி செட்டி நாட்டில்தான் கண்டெடுக்கப் பெற்றது. செவ்வூரில் சிற்றம்பலக் கவிராயர் பரம்பரையினர் வீட்டில் பல சுவடிகள் இருந்தன. டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் அவர்கள் அங்கிருந்து பெற்ற சுவடிகளில் இதுவும் ஒன்று. இதை அடிப்படையாக வைத்துத்தான் முதற்சங்கம், இடைச் சங்கம், கடைச்சங்கம் பற்றியும் அப்புலவர் பற்றியும் பிற்காலத்தில் நூல்கள் எழுதப்பெற்றன.

## பெண்கள் கடல் கடப்பதில்லை

தொல்காப்பியத்தில் "முந்நீர்வழக்கம் மகடூவோடில்லை" என்று ஒரு சூத்திரம் இருக்கிறது. கடல் கடந்து வாணிகத்துக்குச் செல்லும்போது மனைவியரை அழைத்துச் செல்லுவதில்லை என்று இச் சூத்திரத்திற்கு இளம்பூரணர் உரை கூறியுள்ளார். இதே கருத்தை, 12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நாற்கவிராச நம்பி, தம் அகப்பொருள் விளக்கத்தில், "குல மட மாதரொடு கலமிசைச் சேறலும் பாசறைச் சேறலும் பழுதென மொழிப" என்று கூறுகிறார். பெண்மக்களைக் கடல் கடந்து அழைத்துச் செல்லுவதில்லை என்ற தமிழரின் பழமையான வழக்கம் செட்டி நாட்டில் பின்பற்றப்பட்டது. 1945ஆம் ஆண்டுக்குப் பின் இந்த வரம்பு கலைந்திருக்கிறது.

## வாணிகத் தொடர்பு

புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள கருக்காக் குறிச்சியில் 1898-இல் தங்க நாணயங்கள் தோண்டியெடுக்கப் பெற்றன. இவை 2000 ஆண்டுகளுக்கு முன் ரோமாபுரியை ஆண்ட

அரசர்களால் வெளியிடப் பெற்றவை. இந்த நாணயங்கள் லண்டனிலுள்ள பிரிட்டிஷ் மியூசியத்தில் இப்போது காட்சியில் வைக்கப்பெற்றிருக்கின்றன. இவை செட்டி நாட்டுக்கு அருகே கிடைத்திருத்தலை நோக்க. சங்க காலத்தில் (செட்டியார்கள் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து இங்குக் குடியேறுவதற்கு முன்னரே) இப்பகுதியில் வணிகர் பலர் இருந்தனர் என்று கொள்ளலாம்.

### வீடு அமைப்பு முறை

சங்க இலக்கியங்களில் செட்டியார்களின் பழக்க வழக்கங்கள், அவர்கள் அணிந்து வரும் ஆபரணங்கள் ஆகியவை குறிக்கப் பெற்றுள்ளன. ஓர் அறைக்குச் சென்றவுடன் அதற்குள் பிறிதோர் அறை இருப்பதைச் செட்டி நாட்டிலுள்ள பழமையான கட்டிடங்கள் . சிலவற்றில் காணலாம். இதை "உள் வீடு" என்பர். இவ்வகை வீடு அமைப்பைப் பற்றி, பத்துப் பாட்டில் ஒன்றான நெடு நெல்வாடையில் கூறப்பெற்றிருக்கிறது.

### காப்புக் கட்டுதல்

மங்கல நிகழ்ச்சிக்கு உரியவர்கள் கையில் காப்புக்கட்டுவது வழக்கம். நிகழ்ச்சி தொடங்கும்போது, இக்காப்புக் கட்டப் பெற்று, நிகழ்ச்சி முடிவடைந்த பின்னர் அவிழ்க்கப் பெறும். அகநானூற்றில் திருமணத்தன்று நிகழும் நிகழ்ச்சிகளை விவரிக்கும் பாடலில் அறுகம் புல் தண்டுகளால் வெள்ளி நூலிற் கோத்த ஒரு காப்பு கட்டப்பெற்றதாக வருகிறது.

### மணமக்களை வாழ்த்தும் முறை

பூவும் நெல்லும், கலந்து மணமக்களை வாழ்த்தும் முறை இன்றும் நகரத்தார் திருமணங்களில் நிலவுகிறது. "நெல்லொடு தூ உய்" என்னும் அகநானூற்றுப் பாடலில் இது கூறப் பெற்றிருக்கிறது.

மணப்பந்தலில், மணமக்கள் தலைகளில் அட்சதை நெல், அறுகம் பூ (புல்) ஆகியவற்றைப் போட்டு அறுகிடுதல் செட்டி நாட்டில் இன்றும் வழக்கமாக இருந்து வருகிறது. 'மங்கைக்கு அறுகிட வந்திருந்தார் மணப்பந்தலில்' என்ற ஔவையார் பாடலை இங்கு நினைவூட்டலாம்.

நகரத்தார் வீடுகளின் நடுப்பகுதி, திருமணம் முதலிய சடங்குகள் நிகழுமிடம் வளவு எனப்படுகிறது. வளவு, வளைவு

என்ற சொல்லின் மரூஉ. வளைத்துக் கொள்ளப்பட்ட இடம் என்னும் பொருள் உடையது. ஒரு கோயிற் பங்காளிகள் தங்கள் புள்ளிகள் சேர்ந்து வாழ்வதற்காக விலைக்கு வாங்கிக் கைப்பற்றிக் கொண்ட இடம் வளைவு அல்லது வளவு. வளவு 300 ஆண்டுகளுக்கு முன் காலி இடமாகவே இருந்தது. அதன் இரு மருங்கிலும் ஒவ்வொரு புள்ளிக்கும் ஓர் அறை அமைக்கப் பட்டது. அந்த அறையே வீடு எனப் பெயர் பெற்றது. காலி இடமாக இருந்த வளவில் மங்கள நிகழ்ச்சிகளுக்குக் காவணமும் சாவுச் சடங்குக்குப் பந்தலும் போடப்பட்டன. சூயஸ் கால்வாய் வெட்டப்பட்ட பிறகு ஏற்பட்ட செழிப்பால் வளவு, கவினுறு மண்டபமாக, திராவிடக் கட்டிடக்கலை நுணுக்கத்தின் விளக்கமாக எழும்பிற்று.

முகப்பும் வளவும் முதற் கட்டு. அதன் பின்னர் இருப்பவை இரண்டாம் கட்டு, மூன்றாம் கட்டு எனப் பெயர் பெறும்.

இந்த வளமனைகள் ஒரு தொகுதியாகக் கட்டப் பெற வில்லை. அதற்குத் தேவையான பொருள் வசதியும் நகரத் தார்க்கு இருந்ததில்லை. பணம் ஈட்ட ஈட்ட, ஒவ்வொரு கணக்கையும் முடித்துத் தாய்நாடு திரும்பியதும் அடுத்த கட்டு கட்டப்பட்டது. எனவே இரண்டாம் கட்டு எனப் படுவது, *CONSTRUCTION STAGE TWO*; மூன்றாம் கட்டு *CONSTRUCTION STAGE THREE.*

## மணமிடுதல்

பூவைக் கொண்டும் நெல்லைக் கொண்டும் மணமக்களைத் தொட்டு, நெருங்கிய உறவினர்கள் வாழ்த்துதல் இன்றும் செட்டி நாட்டில் வழக்கமாக இருக்கிறது. இதைப் பூமண மிடுதல், அரிமணமிடுதல் என்று கூறுவர். 'அரி' என்பது அரிசி என்ற பொருளில் சங்க இலக்கியத்தில் ஆளப்பெற்றிருக்கிறது.

## குடியேறி வாழும் முறை

சங்க காலப் புலவர்கள் ஊர்ப் பெயருடனும் பட்டப் பெயருடனும் இருந்து வந்தனர். செட்டி நாட்டில் ஓர் ஊரை விட்டுப் பிறிதோர் ஊரில் குடியேறி வாழும் வழக்கம் உண்டு. இவ்வாறு வாழுகின்ற குடும்பத்தினருக்கு சேந்தணியார் வீடு, பூலாங்குறிச்சியார் வீடு, உலகன்பட்டியார் வீடு என்று, அவர்கள் முன்னர் இருந்து வந்த ஊரைக் குறிப்பிடுவதுண்டு.

இன்னும் அவர்களுக்குச் சிறப்பாக அயல் நாடுகளில் வாணிகம் நடைபெறும் ஊரைக் குறிப்பிட்டு அவர்கள் இன்னாரென்று உறுதி செய்வது வழக்கம். இவ்வாறு, "ஈப்போ-சொ" "கம்பளி-நா" "மேல்மீன்-சா" என்ற குறியீட்டுச் சொற்கள் செட்டிநாட்டின் அன்றாட வாழ்வில் அடையாளங் காட்டப் பயன்படுத்தப் பெறுகின்றன.

## பாலை ஒழுக்கம்

சங்க இலக்கியத்தில் பெரும் பகுதி பாலை ஒழுக்கம் பிரிவு பற்றியதே, பாலை நிலப் பகுதியிலேயே இலக்கியத்தின் சுவை மிகுந்த பாடல்கள் உள்ளன. பொருள் ஈட்டுவதற்காக, தலைவன் கடல் கடந்த நாடுகளுக்குச் சென்றிருக்கிறான். அப்போது, தலைவி, தன் தலைவன் வருகின்ற காலத்தை எதிர் நோக்கி, அவன்பாலுள்ள காதலால், பெருந் துன்பங்களையும் பொருட்படுத்தாது நாட்களைக் கழிக்கிறாள். பர்மா, மலேசியா, இந்தோனேசியா, இந்தோ-சைனா முதலிய நாடு களிலுள்ள தலைவன் தன் குடியை உயர்த்த வேண்டுமென்ற நோக்கத்தால் பொருளீட்டுவதிலேயே பல ஆண்டுகளைக் கழித்தலும் இடையிடையே நாயகியின் உயர்ந்த குணங்களை நினைந்து வருந்தலும் இங்கே கருதற்பாலன.

## நாட்டுப் பிரிவுகள்

செட்டிநாட்டின் பல பகுதிகள் பல்வேறு பெயர்களால் சங்க இலக்கியங்களில் குறிக்கப் பெற்றுள்ளன. இவையாவன கானாடு, மிழலைக் கூற்றம், ஒல்லையூர்நாடு, பூங்குன்ற நாடு, பறம்பு நாடு என்பன.

## கானாடு

வெள்ளாற்றுக்கு வடக்கே உள்ள பகுதி கோநாடு* என்றும், வெள்ளாற்றுக்கு தெற்கே உள்ள பகுதி கானாடு என்றும் வழங்கப் பெற்றன. கானாட்டுக்குக் கான நாடு என்றும் பெயர் உண்டு. கான் நாடு, கான நாடு என்பன காட்டு நாடு என்று

---

* கோனாடு பெரும்பாலும் செட்டி நாட்டுக்குப் புறம்பான பகுதி. எனவே இதைப் பற்றிய விவரங்களை இங்குக் கூறாது விடுத்தோம். இராதா கிருஷ்ணய்யர் எழுதிய "புதுக்கோட்டை மானுவ" லில் இவ்விவரங்களைக் காணலாம்.

பொருள் படும். இந்நாட்டின் வட எல்லையாகக் கானாடு காத்தான் இருந்து வந்தது. சங்க காலத்தில், காளையார் கோவில் (இது பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்திலுள்ள ஒரு பாடல் பெற்றதலம்) கானப் பேர் என வழங்கி வந்தது. பாண்டி நாட்டின் கோட்டைகளுள் வலிமையால் சிறப்புற்றிருந்தது* கானப்பேர்க் கோட்டையாகும். வேங்கை மார்பன் என்னும் அரசனிடமிருந்து இதை உக்கிரப் பெருவழுதி என்ற பாண்டியன் வென்றதாகச் சங்க இலக்கியம் கூறும். "கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி" என்னும் சொற்களால் இதைஅறிகிறோம். கான் நாடு காத்தான் என்பதிலிருந்து காளையார் கோவில் அரசின் எல்லை கானாடு காத்தான் வரை பரவியிருந்ததென்று கருதலாம்.

மிழலைக் கூற்றம்

மிழலைக் கூற்றத்தைப் பற்றிச் "செந்தமிழ்" இதழில் கல்வெட்டுப் பேரறிஞர் டி. வி. சதாசிவப் பண்டாரத்தார் பின்வருமாறு எழுதியிருக்கிறார்.

"மிழலைக் கூற்றம் என்பது முற்காலத்திற் பாண்டி மண்டலத்தில் இருந்த உள்நாடுகளுள் ஒன்றாகும். அவ்வுண்மையை,

"கோச்சடைய வன்மரான திரிபுவனச் சக்ரவர்த்திகள் சீவல்லிய தேவற்கு யாண்டு இருபத்தஞ்சாவு மேஷ நாயிற்றுப் பூர்வ பக்ஷத்து ஏகாதசியும் சனிக்கிழமையும் பெற்ற மகத்து நாள் பாண்டி மண்டலத்து மிழலைக் கூற்றத்து ஒக்கூருடையார்" என்ற திருவீகளர் தஞ்சை மாவட்டம் (மன்னார்குடி வட்டம்) கல்வெட்டாலும் வேறு சில கல்வெட்டுக்களாலும் இனிதுணரலாம்.

"வீர சோழியம்" என்ற இலக்கண நூலின் ஆசிரியராகிய புத்தமித்திரன் என்பார் மிழலைக் கூற்றத்திலுள்ள பொன்பற்றியில்* வாழ்ந்து கொண்டிருந்த குறுநில மன்னர் என்பது

---

* பொன்பற்றி, அறந்தாங்கிக் கோட்டத்தில் ஆவுடையார் கோயில் அருகே இருக்கிறது. இது செட்டிநாட்டு எல்லைக் குட்பட்டது.

"ஈண்டுநூல் கண்டான் எழின்மிழலைக் கூற்றத்துப்
பூண்டபுகழ்ப் பொன்பற்றிக் காவலனே—மூண்டவரை
வெல்லும் படைத்தடக்கை வெற்றிபுனை வீரன்றன்
சொல்லின் படியே தொகுத்து''.

என்ற (வீர சோழிய உரையிலுள்ள) பாடலால் அறியப்படுகிறது.

மணிவாசகப்பெருமானை இறைவன் ஆட்கொண்டருளிய தலமாகிய திருப்பெருந்துறை மிழலைக் கூற்றத்திலிருந்ததோர் ஊர் என்பது கல்வெட்டுக்களாலும் பெரும்பற்றப் புலியூர் நம்பியின் திருவிளையாடற் புராணத்தாலும் அறியப்படுகின்றது. அவ்வூர் இக்காலத்தில் ஆவுடையார் கோவில் என்ற பெயரோடு அறந்தாங்கிப் பகுதியில் வெள்ளாற்றிற்குத் தெற்கே ஒரு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது.''

பண்டாரத்தார் அவர்களின் மேற்கண்ட குறிப்புக்களுடன் பின்வரும் சில செய்திகளும் ஒப்பு நோக்கத்தக்கவை.

திருக்களர்க் கல்வெட்டில் மிழலைக் கூற்றத்து ஒக்கூருடையார் என்று குறிப்பிடப் பெற்றிருக்கிறது. மிழலைக் கூற்றம் செட்டி நாட்டில் இருக்கிறது; ஒக்கூருடையார் என்ற ஒரு பிரிவினரும் நகரத்தார்களுள் உள்ளனர். மேலும் திருக்களரில் திருக்கோவில் திருப்பணி செய்திருப்பவர் கோவிலூர் மடத்துத் தலைவர் வீரசேகர ஞானதேசிகர் என்ற செட்டியாரே ஆவார், ஒக்கூர் எனும் ஊர் செட்டிநாட்டில் இன்றளவும் உளது. எந்தக் கோவிலிலும் ஒக்கூர் பிரிவினருக்கே முதல் மரியாதை கொடுக்கப் பெறுகிறது.

ஒல்லையூர் நாடு

"ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே''

என்ற 242-ஆம் புறப்பாட்டில் இந்நாடு கூறப்படுகின்றது. பொன்னமராவதிக்கு அருகேயுள்ள ஒலியமங்கலம்என்றஊர் முற்காலத்தில் ஒல்லையூர் மங்கலம் என்ற பெயருடையதாயிருந்ததென்பது அவ்வூரிலுள்ள வரகுணிசுவரர் கோவில் கல்வெட்டால் தெரிகிறது. அக்கல்வெட்டு, "கோனாடான கடலடையா திலங்கை கொண்ட சோழ வள நாட்டு ஒல்லையூர்க் கூற்றத்து

ஒல்லையூர் மங்கலத்து உடையார் வரகுணீசுவரமுடைய நாயனார் கோவில்'' என்று கூறுகிறது. எனவே, ஒல்லையூர் மங்கலத்தைத் தலைநகராகக் கொண்டது ஒல்லையூர்க் கூற்ற மெனப்படும். இக்கூற்றமே, சங்க காலத்தில் ஒல்லையூர் நாடென்று வழங்கியதாகும்.

ஒல்லையூர்கிழான் மகன் பெருஞ் சாத்தன் பாடிய பாடல் புறநானூற்றில் இருக்கிறது. ஒல்லையூர் தந்த பூத பாண்டியன் அகநானூற்றில் ஒரு பாடலையும் புறநானூற்றில் மூன்று பாடல்களையும் பாடியுள்ளான்.

பூங்குன்ற நாடு

இந்நாடு 24½ கிராமங்களையுடையது. அவையாவன:-

1 மகிபாலன்பட்டி
2 நெல்மேனிப்பட்டி
3 வேலங்குடி
4 மருதுக்குடிப்பட்டி
5 பாப்பான்பட்டி
6 கொன்னத்தான்பட்டி
7 மலம்பட்டி
8 திருக்கோளக்குடி
9 ஆத்திரம்பட்டி
10 மின்னக்குடி
11 சந்தனம்பட்டி
12 கருப்பன்பட்டி
13 சுண்டைக்காடு
14 நல்லிப்பட்டி
15 கண்டவராயன்பட்டி
16 கருவேப்பிலாம்பட்டி
17 திருக்களாப்பட்டி
18 சோளம்பட்டி
19 வஞ்சினிப்பட்டி
20 காவினிப்பட்டி
21 கலாமடம் (கிளாமடம் என மருவி வழங்கி வருகிறது.)

22 கோயிலாப்பட்டி

23 பிலாக்குடிப்பட்டி

24 பையூர்

25 பறியா மருந்து பட்டி என வழங்கும் பெரிய மருது பட்டி உட்பட நெற்குப்பைக் கீழத்தெரு (கிராமத்தின் ஒரு பகுதி மட்டும் சேர்ந்திருந்ததால் இது அரைக்கிராமமாகக் கணக்கிடப்பெற்றது)

பூங்குன்ற நாட்டைச் சேர்ந்த மங்கலங்களாவன:-

1 மகிபாலன்பட்டி

2 வேலங்குடி

3 சுண்டைக்காடு

4 வஞ்சினிப்பட்டி

5 கண்டவராயன்பட்டி

பூங்குன்ற நாட்டின் தலைநகர் மகிபாலன்பட்டி. மகிபாலன் என்பது முன் ஆண்ட அரசர் ஒருவரின் பெயர். அவ்வூர் அம்மன் கோவிலிலுள்ள தெய்வத்தின் பெயர் பூங்குன்றநாயகி; அங்குள்ள ஐயனாருக்குப் பூங்குன்ற ஐயனார் என்று பெயர் வழங்கப் பெறுகிறது.

மகிபாலன்பட்டியில் நடைபெறும் சமூகக் கூட்டங்களிலும் பூத்திருவிழா முதலிய நிகழ்ச்சிகளில் இந்த $24\frac{1}{2}$ கிராம மக்களும் கலந்து கொள்ளுகின்றனர்.

"புறநானூற்றுச் சொற்பொழிவுகள்" என்னும் நூலில் ஆராய்ச்சியாளர் சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் "புறநானூறும் கல்வெட்டுக்களும்" என்ற தலைப்பில் கொடுத்திருக்கும் பின்வரும் பகுதியை இங்கே தருகிறோம்.

பூங்குன்றம்:-

படிக்குந்தோறும் மிக்க இன்பத்தை விளைவிக்கும் இயல்பு வாய்ந்த "யாதுமூரே யாவருங் கேளிர்" என்ற 192 ஆம் புறப்பாட்டை இயற்றிய புலவர் பெருமான் இவ்வூரினர் ஆவர். இது பாண்டி மண்டலத்தின் உள் நாடுகளுள் ஒன்றாகிய பூங்குன்ற நாட்டுக்குத் தலைநகர் என்பது "பூங்குன்ற நாட்டுப் பூங்குன்றமும்" என்ற கல்வெட்டுப் பகுதியினால் பெறப்படுகிறது. இராம

நாதபுரம் ஜில்லா திருப்புத்தூர் தாலுகாவிலுள்ளதும் இருபெரு மொழியினும் நுண்மாணுழைபுலம் படைத்த புலவர் பெருமானாகிய மகா மகோ பாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் தோன்றியதும் ஆகிய மகிபாலன்பட்டியே இப்பூங்குன்றம்* என்பது அங்குள்ள குகைக் கோயிலில் காணப்படும் கல்வெட்டொன்றால் புலப்படுகிறது.**

"ஸ்வஸ்தி ஸ்ரீ கோச்சடைய வர்மரான திரிபுவனச் சக்ரவர்த்திகள் எம்மண்டலமுங் கொண்டருளிய ஸ்ரீ சுந்தர பாண்டிய தேவர்க்கு யாண்டு 10-வது சிங்கநாயிற்று அமர பக்ஷமும் துதியையும் திங்கட்கிழமையும் பெற்ற பூரட்டாதிநாள் உடையார் குலசேகர ஈஸ்வரமுடையநாயனார் தேவதானம் பூங்குன்ற நாட்டுப் பூங்குன்றத்துடையார் திருப்பூங்குன்ற முடைய நாயனார் ஆதிசண்டேசுவர நாயனார்க்கு இந் நாட்டு நாட்டவரோம் பிரமாணம் பண்ணிக்கொடுத்த பரிசாவது"

கடல் கடந்த நாடுகளுக்கெல்லாம் பாய்மரக் கப்பல் களிலே சென்று வாணிப உறவுகொண்டு சிறப்பெய்திய மக்களிடையே தோன்றிய ஒரு புலவர்தானே, "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்று பாடியிருக்க முடியும்? புறநானூற்றில் மட்டுமின்றிக் கணியன் பூங்குன்றனாருடைய பாடல்கள் குறுந்தொகையிலும் நெடுந்தொகையிலும் உள.

கணியன் பூங்குன்றனார் தவிர, சங்க இலக்கியங்களில் இடம் பெறுகின்ற செட்டி நாட்டுப் புலவர்கள் ஒக்கூர் மாசாத்தியார், மாற்றூர்கிழார் மகனார், கொற்றங் கொற்றனார் கபிலர், கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் ஆகியோர் ஆவர்.

ஒக்கூர்

ஒக்கூர் என்னும் ஊர் சிவகங்கைக்கு அருகே இருக்கிறது. மாசாத்தியாரின் பாடல்கள் புறநானூற்றில் உள்ளன.

---

* "பூங்குன்றநாட்டுப் பூங்குன்றத்" திற்கு மகிபாலன்பட்டி என்ற பெயர் இடைக்காலத்தில் சோழமன்னர் காலத்தில் உண்டாயிற்று. இக்குன்று இப்போது குடகமலை என்றும் வழங்குகிறது.

** இக்கல்வெட்டு நெற்குப்பை-மகிபாலன்பட்டி வழியில் சாலையின் ஓரத்தில் இருக்கிறது.

*சாத்தனார் என்பதன் பெண்பால் சாத்தியார். சாத்தப்பன் சாத்தம்மை என்ற பெயர்கள் இன்றளவும், செட்டி நாட்டில் வழங்கி வருகின்றன. சாத்து என்பது வணிகச் சாத்தைக் குறிக்கும்.

ஒக்கூர் மாசாத்தனுர் என்ற சங்ககாலப் புலவர் அகம் 14, புறம் 248 ஆகிய பாடல்களை இயற்றியவர்.

ஒக்கூர் மாசாத்தியார் இயற்றியன:-

குறுந்தொகை 126, 139, 186, 220, 275 அகம் 324 புறம் 279

அகம் 384-ஆம் பாடலைப் பாடியவர் குடவாயிற் கீர்த்தனார் என்பவர் என்று ஒரு பாடம் உண்டு; ஒக்கூர் மாசாத்தியர் என்றும் ஒரு பாடல் உள்ளது.

இவ்வூரில் இந்நாளில் சிறந்து விளங்கும் சி. கரு. சி. கரு அரு சோம. இராமநாதன் செட்டியார் என்னும் பெரு வணிகரின் மணிவிழா 1982 செப்டம்பரில் இனிது நிகழ்ந்தது. அவ்வமயம் வெளியிடப்பெற்ற மலரில்* ஒக்கூரைப் பற்றிய அரிய இலக்கியக் குறிப்புகள் உள்ளன. இவை ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படக்கூடும் என்று கருதி, சில பகுதிகளை இங்கே தருகிறோம்.

1975-ல் ஒக்கூர் வழியாக, தமிழக முதலமைச்சர் டாக்டர் கலைஞர் பயணம் செய்தார். மாசாத்தியார் நினைவுச் சின்னம் ஏதாவது உளதா என்று மாவட்ட ஆட்சித்தலைவரை, கலைஞர் வினவினார். அதன் பயனாக ''கெடுக சிந்தை கடிதிவள்'' என்னும் பாடல், கல்வெட்டாக வடிக்கப் பெற்றது, செல்வர் இராமநாதன் செட்டியார் கொடையாக அக்கல்வெட்டு, பெரிய அளவில் 1982-ல் அன்னாருடைய மணிவிழாவில் புதுப்பிக்கப் பெற்றது.

---

*மகா சாஸ்த்தான் என்ற பெயர் புத்தருக்கு உண்டு. இப்பெயரே மாசாத்தான் எனத் தமிழில் மருவி வழங்குவதாயிற்று என்பர் சிலர்.

* பதிப்பாசிரியர்கள்; கவிஞர் அரங்க. சீனிவாசன், டாக்டர். ஆறு. அழகப்பன்.

கபிலர்

கபிலர் செட்டிநாட்டவரே என்று கருத இடமிருக்கிறது. பாரியும் கபிலரும் ஒரு பகுதியிலேயே வாழ்ந்த சிறப்புப் பறம்பு நாட்டின் ஒரு பகுதியான செட்டி நாட்டுக்கே உண்டு. ஆராய்ச்சியாளர் வே. வேங்கடராசுலு ரெட்டியார் அவர்கள், "கபிலர்" என்னும் நூலில் பின்வருமாறு எழுதியிருக்கிறார்கள்.

"அவர் (கபிலர்) பிறந்து வளர்ந்த ஊரின் பெயரும் அவரைப் பெற்றுவளர்த்த தாய் தந்தையரின் பெயரும் இவையென உறுதியாக அறுதியிட முடியவில்லை என்பதே உறுதியுடைத்து...

"கபிலர் பிறந்த ஊரும் நாடும் இவையே எனத் துணிந்து கூறுதல் இயலாதாயினும் அவர் வேள் பாரியைச் சார்ந்து அவன் உயிர்த்தோழனாய் அவனுடன் நெடுங்காலம் வாழ்ந்திருந்தனராகலானும், அவர் பாண்டி நாட்டினர் என்று பாண்டி மண்டல சதகத்தான் அறியப்படுதலானும் அவர் பாண்டி நாட்டில் நெடுங்காலம் வாழ்ந்திருந்தார் என்பதில் ஐயம் இலது".

நன் முத்துக்கள்

அகநானூற்றுப்பாடலில் முல்லை நிலக் காட்சிகளையும் ஆயர்களின் கொடும்பாடற்ற வாழ்க்கையையும் இயற்கையோடு பொருந்தப் புனைந்துரைக்கின்றார் மாசாத்தனார்.

'நல்வினத்து ஆயர்' எனப்படும் பழங்குடிகள் வாழும் முல்லை நிலம் வளம் மிக்கது. காடுகளும் தண்பதப் பெருவழிகளும் நிறைந்தது. அந்நிலம் அரக்கை உருக்கி வார்த்தது போலச் செந்நிறமாகக் காட்சி தருகின்றது. மக்கள் நடந்து செல்லத்தக்க வழி நெடுகிலும் நீலநிறமான காயா மலர்கள் உதிர்ந்து பரவிக் கிடக்கின்றன. அவற்றின் இடை இடையே திட்டுத்திட்டாக அமைந்த பட்டுத் துணிகள்போல் செக்கச் செவேல் எனத் தம்பலப் பூச்சிகள் பரந்து கிடக்கின்றன. இக்காட்சி மணியும் பவளமும் கலந்து கிடப்பதுபோல் கண்ணுக்கு இனிமை தருகின்றதாம்!

'அரக்கத் தன்ன செந்நிலப் பெருவழிக்
காயாஞ் செம்மல் தாஅய்ப் பலவுடன்
ஈயன் மூதாய் வரிப்பப் பவளமொடு
மணிமிடைந் தன்ன குன்றம்'

இவ்வூர்ப் புலவர் இன்றும் நாம் காணும் இந்த ஊரின் செம்மண்ணைப் பாடுகிறார்!

அடுத்து மாசாத்தனார், இவ்வூரில் (ஒக்கூரில்)உள்ள பசுக் கூட்டங்கள் மாலையில் புல்மேய்ந்து வருவதனைப் பார்க் கிறார். அவை மேயும்பொழுது பாலைத் திருடும் புல்லர் கூட்டம் இவ்வூரில் இல்லை. மாலையில் பசுக் கூட்டம் திரும்பிய போது பெருத்த மடிகளில் உள்ள காம்புகளில் பால்கசிகிறது. இதனைப் புலவர் கற்பனை வளத்துடன் பாடவேண்டும், இந்தச் சிறிய காட்சியைக் கவிஞர் எவ்வாறு கற்பனை செய்கிறார்!

மாசாத்தனாரின் மற்றோர் பாடல் புறநானூற்றில் தாபதநிலைத் துறையில் அமைந்திருக்கின்றது. அவலச்சுவை இழையோடும் இப்பாடலில் கணவனை இழந்த ஒருத்தியின் உள்ளத்துணர்வு சித்திரிக்கப்பெற்றுள்ளது.

ஒக்கூர் மாசாத்தியார்

ஒக்கூர் அந்நாளில் ஓர் அணி நகரமாக விளங்கியது. வள மான அந்நகரின்மேல் ஒரு முறை பகைவர் படையெடுப்பு நிகழ்ந்தது. மண்ணாசை காரணமாக அதைக் கைப்பற்றிவிட எண்ணிய பகைவர்கள் பெரும்படையுடன் வந்து தாக்கினர். ஆனால், அவர்களின் எண்ணம் நிறைவேறவில்லை.

ஒக்கூர் மறவர்கள் பகைப்படையைக் கண்டு கலங்க வில்லை; மாறாக, அடிக்குங்கோலுக்கு அஞ்சாது மண்டி எழும் பாம்புபோல் சீறி எழுந்தனர்; பகைவர்களைக் கடுமையாக எதிர்த்துப் போரிட்டனர். வீர மறவர்கள் மட்டுமல்லர். விளை யாட்டுக் களங்களில் ஈடுப்பட்டிருந்த இளைஞர்களும் கூடப் போர்க்களம் புகுந்து வேல்களை வீசினர்; வில்லம்புகளைத் தொடுத்தனர்; விழுப்புண்களை அஞ்சாது ஏற்றுக்கொண்டு வீரம் காட்டிப் போரிட்டனர்; பகைவர் படை அஞ்சிப் பின் வாங்கியது.

ஒக்கூர் மாசாத்தியார் வாழ்ந்த காலம் அது. அவர் இப் போர் நிகழ்ச்சிகளைக் கண்ணால் கண்டார். ஒக்கூர் மக்களின் ஒற்றுமை உணர்வையும் மாற்றானுக்கு இடங்கொடாமல் மண்டிப் போரிடும் வீர எழுச்சியையும் கண்டு வியந்தார். அக் காட்சிகளை 'முதின் முல்லை' என்ற துறையில் அமைத்து ஒரே பாடலாகப் பாடினார்.

போர் நடந்துகொண்டிருந்தது. இன்னும் முடியவில்லை போர்ப் பறை காலையில் ஒலித்தது. ஒக்கூரில் வசித்து வந்த வீர மங்கை ஒருத்தி அப்பறை ஒலியைக் கேட்டாள். மறக்குடியில் பிறந்த அவளது வீர நெஞ்சம் உணர்ச்சியால் கொதித்தது. பகைவர் அழிக்கப்படாமல் இன்னும் உயிருடன் இருக்கின்றார்களே என்ற உணர்வு அவளை வாட்டியது.

முன்றாம் நாள் நடந்த போரில் அவள் தமையன் போர்க்களம் சென்று பகைவர்களின் யானைப் படைகளை எதிர்த்துப் போரிட்டு வீரமரணம் அடைந்தான்.

நேற்று நடந்த போரில் அவள் கணவன் பகைவர்களைக் கொன்று தானும் மடிந்தான். இன்று மீண்டும் போர்ப்பறை முழங்குகின்றது; பகைவர் இன்னும் அழியவில்லை. இந்த எண்ணத் தீயில் அவள் வெந்து கருகினாள், இன்று போர்க்களம் புகுவதற்கு அவள் குடும்பத்தில் ஆடவர் எவரும் இல்லை. பகைவரை அடியோடு அழித்து ஒழித்தாக வேண்டுமே! என்ன செய்வது? அவர்களுக்கு ஒரே மகன். குடி விளங்குவதற்காக இருக்கும் ஒரே குலக்கொழுந்து. பால் மணம் மாறாத அப் பச்சிளம் பாலகன் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தான்.

அவனைத் தேடிச் சென்று அழைத்து வந்தாள்; உடலில் படிந்திருந்த புழுதிபோக நீராட்டினாள். பரட்டைத் தலையில் எண்ணெய் தடவிச் சீவினாள்; வெண்மையான ஆடை ஒன்றை உடுத்தாள், முன்னோர் பயன்படுத்தி வந்த வேல் ஒன்றை எடுத்து வந்து அவள் கொடுத்து, 'போர்க்களம் சென்று வா மகனே! வென்றுவா! என்றுகூறி விடைகொடுத்து அனுப்பினாள்.

இதனைக் கண்டு கொண்டிருந்த ஒக்கூர் மாசாத்தியாரின் உள்ளம் கலங்கியது; மறக்குடி மங்கையின் வீர உணர்வை அவர் பாராட்டிய போதிலும், அவள் துணிச்சலில் காணப்பட்ட கடுமையை அவர் கடிந்துரைக்கத் தவறவில்லை.

"கெடுக சிந்தைகடிது அவள் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தகுமே:
மேனாள் உற்ற செருவிற்கு இவள்தன்னை
யானை எறிந்து களத்தொழிந் தனனே;
நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்
பெருநிரை விலக்கி ஆண்டு பட்டனனே;
இன்றும் செருப்பறை கேட்டுவிருப்புற்று மயங்கி

வேல்கைக் கொடுத்து வெளிது விரித்து உடீஇப்
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமகன் அல்லது இல்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே'' —புறம்

அகத்துறைப் பாடல்கள்

அகப்பொருள் அமைய இவர் பாடிய பாடல்கள் 7. அவை அகநானூற்றில் இரண்டும் குறுந்தொகையில் ஐந்துமாக இடம் பெற்றுள்ளன. தமிழ்நாட்டு மகளிரின் இல்லற மாண்பையும். கற்பின் திண்மையையும், கணவர் மாட்டு அவர்கள் கொண்டிருந்த அன்பின் ஆழத்தையும் அவை விளக்குகின்றன.

அன்பே வடிவமான தலைவன் பொருள் தேடி அயல் நாடு செல்லுகின்றான். தலைவி அவன் பிரிவைத் தாங்காமல் வருந்துகிறாள். காகத்தின் இரு கண்ணுக்கு ஒன்றே மணி கலந்தாங்கு வாழ்ந்த அவர்களிடையே பிரிவு பெரு வேதனையை விளைத்துவிட்டது. தலைவன் கூடியிருந்த காலத்தில் இன்பம் தந்த பொருளெல்லாம் இப்போது துன்பம் தருவனவாய் மாறி விட்டன.

கொல்லையில் வளர்ந்திருக்கும் முல்லைக் கொடியை எடுத்துக் கொள்வோம். அது அவளுக்காகவே குலுங்கப் பூத்துள்ளது. அவன் கூடியிருந்தபோது அவள் அவற்றைப் பறித்து மாலை தொடுத்து அணிந்து மகிழ்ந்தாள்; அவை நறுமணம் கமழ்ந்து கூந்தலை அழகு செய்தன! அவளுக்கும் அவனுக்கும் உள்ள காதலுக்கு இறுக்கமும் தந்தன. ஆனல் இன்று?

அவள் நிலையைக் கண்டு அம்முல்லை மலர்கள் எண்ணி நகைக்கின்றனவாம்.

''நங்காய்! உன் காதல் என்ன ஆயிற்று? உன்னை உயிரெனப் பாராட்டிய உன் துணைவர் உன் அழகையும் இளமையையும் அடியோடு மறந்துவிட்டார். தாம் சென்ற இடத்திலேயே அது எங்கு என்றுகூட உனக்குச் சொல்லாமல் தங்கி விட்டார். ஐயோ பாவம்! உன்னைக் காட்டிலும் பொருள் அல்லவா அவருக்குப் பெரிதாகிவிட்டது! உன் அழகும் அன்பும் என்னவாயின?'' என்றுகூறி எள்ளுவது போல் நக்கின்றனவாம்!

இளமை பாரார்; வளர் நசைஇச் சென்றோர்
இவணும் வாரார் எவண ரோவெனப்
பெயல் புறந் தந்த பூங்கொடி முல்லைத்
தொகுமுகை இலங்கை யிறாக
நகுமே தோழி நறுந்தன் காரே''

—குறுந்தொகை 126

## இயற்கை உவமைகள்

உவமைகளை உள்ளது உள்ளவாறே இயற்கை நவிற்சியாக எடுத்துக் கையாளுவது சங்கப் பாடல்களின் தனிச்சிறப்பு. இச்சிறப்பை ஒக்கூர் மாசாத்தியாரின் பாடல்களில் காணலாம். வாழ்க்கையில் நாம் காணும் இயற்கையான காட்சியினை மிகைப்படுத்தாமல் உள்ளது உள்ளபடியே கூறும் இயல்பு நவிற்சியை நயம்படக் கையாளுகின்றார். உவமைகளைக் கையாளுமிடங்களிலும் இயற்கை இழையோடுகின்றது.

முல்லை நிலத்துச் செந்நிற வயல்களில் பசிசைப் பசேல் எனப் பசும் பயிர்கள் வளர்ந்து தழைத்திருக்கின்றன. காற்றில் ஒளிந்தாடும் அவற்றின் காட்சி கண்ணுக்கினிமை வழங்குகின்றது. மிகவும் ஈன்றணிமையை உடைய மெல்லிய கிளிக்குஞ்சுகளின் சிறகை அவற்றிற்கு உவமை கூறுகிறார் புலவர்.

''தளிரியல் கிள்ளை இனிதின் எடுத்த
வளராப் பிள்ளைத் தூவி யன்ன
வார்பெயல் வளர்த்த பைம்பயிர்''

—அகம் 324

தளிர் போன்ற கிள்ளைகள் தாய்மைப் பாசத்தோடு குஞ்சுகளை வளர்ப்பதுபோல முல்லை நிலத்துக் கார்மேகங்கள் பருவத்தில் மழை பொழிந்து பசும் பயிர்களை வளர்க்கின்றனவாம்.

முல்லை நிலப் பெருவழிகளில் பலவகை மரங்கள் வளர்ந்திருக்கின்றன. அவை வழிநெடுகிலும் பல வண்ண மலர்களை உதிர்க்கின்றன. கருமணல் இடையே அவ்வண்ணப் பூக்கள் உதிர்ந்து கிடக்கும் காட்சிக்கு மீன்கொத்திப் பறவையின் இறகை உவமை கூறுகின்றார். பறவை இனங்களில் அழகான வண்ணங்கள் நிறைந்த சிறகைப் பெற்றிருப்பது மீன்கொத்தி அல்லவா?

சிரல்சிறகு ஏய்ப்ப அறற்கண் வரித்த
வண்டுண் நறுவீ.'

முல்லை நிலப்பகுதியில் தலைவன் ஊர்ந்துசென்ற தேர்க் கால் 'சுவட்டின் வழியே மழைநீர் விரைந்து பாய்கின்றது. இக் காட்சிக்குப் 'பாம்பு விரைந்து ஊர்ந்து செல்வதுபோல என்ற உவமையை எடுத்தாள்கிறார்.

''தண்ணில மருங்கின் போழ்ந்த வழியுள்
நிரைசெல் பாம்பின் விரைபுநீர் முடுக''

இத்தகைய இனிய பாடல்களைப் பாடிய மாசாத்தியார் பிறந்தமையால்' 'ஒக்கூர்' இலக்கியச் சிறப்புப் பெற்றுள்ளது. 19ஆம் நூற்றாண்டில் சவ்வாதுப் புலவர் வாழ்ந்து இலக்கியத் தொண்டாற்றியதும் இவ்வூரே!

பரிமேலழகர்

தமிழ் இலக்கிய வரலாறு - 13 - ஆம் நூற்றாண்டு என்னும் சிறந்த ஆராய்ச்சி நூலில் பக்கம் 67-68 ல் அறிஞர் மு. அருணாசலம் பின்வருமாறு எழுதியுள்ளார்.

குறளுரை ஏட்டுப் பிரதிகளில் காணும் பாடலொன்று இவர் (பரிமேலழகர்) ஒக்கை காவலர் என்று கூறும்.

''விரைத்தார் அலங்கல் திருவள்ளுவர் முன்னம்வெண் குறட்பா
நிரைத்தார் மிகுபொருள் நான்கும் விளங்க நெறிப்புலவர்
உரைத்தார் பலரும் அதற்குரை தன்னை உலகறியக்
கருத்தான் வகுத்தமைத் தான்கலை தேர்ஒக்கை காவலனே''.

ஒக்கை என்பது ஒக்கூர். இது பாண்டி நாட்டுள்ள ஊர் என்று கருதல் வேண்டும். மற்றோர் ஏட்டுப் பிரதிப் பாட்டில் இவர் மதுரை நகரினர் என்றும் குறிப்பிடப் பட்டுள்ளார்.

''முன்னுரைத்த தேவர்குறள் [முதறிஞர் போற்றுபொருள்]
இன்னதிது என்றுரைக்க எய்தினான் - முன்னூற்
புரிமேல் அழகியகோப் போற்றுதமிழ்க் கூடல்
பரிமே லழகியனென் பான்.''

இப்பாடல் கூறுகின்றபடி இவர் பாண்டி நாட்டு அரசனால் சிறப்புச் செய்யப்பெற்று ஒக்கூரில் தலைவராக வாழ்ந்திருந்தார் என்று கருத இடமுண்டு. இவரது குறள் உரையில் காணும்

அரசியல் செய்திகள், அறிவாற்றல் கருத்துக்கள் யாவையும் இவருடைய பெருந்தகுதிக்கும் கல்விப் பரப்பிற்கும் சான்று பகர்வன. இளமையில் பாண்டிநாடு சென்று சிறப்போடிருந்து முதுமையில் மீண்டும் காஞ்சியடைந்து தம் ஆற்றல்கள் புலப் படுமாறு பேருரைகள் செய்தார் என்று கருதலாம். இவர் வரலாறு குறித்து நாம் அறிவது இவ்வளவே.

பரிமேலழகர் திருக்குறளுக்கும் பரிபாடலுக்கும் உரை செய்தவர் என்பது எல்லோரும் அறிந்த செய்தி. திரு முருகாற்றுப் படைக்கும் இவர் உரை செய்தார் என்று ஓர் உரையும் அச்சாகியுள்ளது.

## பறம்பு நாடு*

செட்டி நாட்டின் மேற்கு எல்லையான பறம்புமலை பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் திருப்புத்தூர் வட்டத்தில் இருக்கிறது. இப்பொழுது பிரான்மலை என இது வழங்குகிறது. இவ்வூர் திண்டுக்கல்-காரைக்குடிச்சாலையிலுள்ள மட்டியூர் என்னும் சதுர்வேதமங்கலத்திற்கு வடக்கே எட்டுக் கிலோ மீட்டர் தொலைவில் இருக்கிறது. காரைக்குடி யிலிருந்து பிரான்மலை 41 கி.மீ; திருப்புத்தூரிலிருந்து 19 கி.மீ; மதுரை - திருச்சி சாலையிலுள்ள பள்ளப்பட்டியிலிருந்து 6 கி.மீ. இம்மலையின் உயரம் 1800 அடி. மலை அடிவாரம் வரை பேருந்துகள் செல்லுகின்றன.

பாரி ஆண்ட நாடு பறம்புநாடு. அவன்மலை பரம்புமலை, பரம்பு மலை பரன் மலை என்றாகிப் பிறகு பிரான் மலை என்று அமைந்திருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். பிரான் மலைக்குக் கொடுங்குன்றம் என்றும் பெயர் வழங்கு கிறது. இங்குள்ள இறைவன் கொடுங்குன்றநாதர். இத்தலம் திருஞானசம்பந்தரால் பாடப் பெற்றது. சங்க காலத்தில் பறம்பு மலையில் ஒரு கோட்டை இருந்தது. பலாமரங்கள் மிக்கிருந்தன; நிழல் தரும் சோலைகளும் இருந்தன. ஆயிரத் துக்கு மேற்பட்ட அருஞ்சுனைகள் இன்றும் இன்பக் காட்சி யளிக்கின்றன.

பறம்புமலை, பறம்புநாட்டின் தலைநகராக இருந்தது. அந்நாடு இப்போது பரமக்குடி என வழங்கும் பறம்பக்குடி

---

* 14-ஆம் நூற்றாண்டுக்குப் பின், பறம்பு நாடு திருமலை நாடென வழங்குவதாயிற்று.

வரையுள்ள 300 சிற்றூர்களைக் கொண்டது. அது பாண்டிய அரசுக்கு உட்பட்டிருந்த ஓர் உள்நாடு என்பர்.

பாரி, கடையெழு வள்ளல்களில் தலை சிறந்தவன்; அவனுடைய தன்னேரில்லாக் கொடையைப் பாராட்டும் வகையில் "கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினுங் கொடுப்பாரிலையே" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியுள்ளார். கைமாறு வேண்டாது ஈயும் மாரியைப் பாரிக்கு உவமையாகக் கூறி, கபிலர் பாடிய பாடலும் இங்கே குறிப் பிடத்தக்கது.

"பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவர் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனு மல்லன்;
மாரியும் உண்டீண் டுலகு புரப்பதுவே."

படரக் கொழு கொழும்பின்றித் தவித்த முல்லைக் கொடிக்கு, மலைவளம் காணச் சென்ற பாரி, தன்பொற்றேரைக் கொடையாக அளித்தான். இச்செய்தி, பல இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது.

"இவரே, பூத்தலை யறா அப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி மகளிர்
... .... ... ... ... ...
ஊருட னிரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்வ நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்"

(புறநானூறு)

"நறுவீ யுறைக்கும் நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்கு வெள்ளருவி வீழுஞ்சாரல்
பறம்பிற் கோமான் பாரியும்"

(சிறுபாணாற்றுப்படை)

"முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும் —சொல்லின்
நெறிமடற் பூந்தாழை நீடுநீர்ச் சேர்ப்ப!
அறிமடமும் சான்றோர்க் கணி"

(பழமொழி நானூறு)

''முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
எல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத்—தொல்லை
இரவாம லீந்த இறைவர்போல் நீயும்
கரவாமல் ஈகை கடன்''

(புறப்பொருள் வெண்பா மாலை)

பறம்பு நாடு என்பது பிரம்பூர் நாடு எனவும் மருவி வழங்கி வருகிறது. நகரத்தாரில் ஒரு பிரிவாகிய மாற்றூர்க் கோவிலைச் சேர்ந்தவர்கள் தங்கள் திருமணங்களில் எழுதும் இசைவுப் பிடிமானத்தில், ''கேரள சிங்கவளநாடாகிய பிரம்பூர் நாட்டில்'' என்று இன்றளவும் எழுதி வருகிறார்கள்.

தரணியிலே பெருவள்ளலாகத் தோன்றியவன் பாரி. பேரருளுக்கும் பெருங்கொடைக்கும் பெயர்பெற்று விளங்குபவன் பாரி. தன்னுடைய குடிமக்களுடைய உள்ளங்களில் நல்லிடம் பெற்றுச் சிறப்பெய்தியவன் பாரி. அந்த வள்ளலின் தலைநகராகிய பிரான்மலையில் கல்வெட்டுக்களையும் வேறு பலவகைச் சான்றுகளையும் இன்றுங் காணலாம். அப்பகுதி மக்கள் பாரி விழாவைச் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர். பாரி வேட்டைக்குச் செல்லும் வழக்கம் இன்றும் செட்டிநாட்டுச் சிற்றூர்களில் உண்டு.

பாரியைப் போலவே, தக்கார் இவர்—தகாதவர் இவர் என்று வரையறை செய்யாமல் வாரி வழங்குதலைக் கடமையாகக் கொண்டுள்ள அன்பர் சிலர் இன்றும் செட்டிநாட்டில் உள்ளனர். புலவர்க்குக் குறையாது கொடுப்பதுடன், அளந்தெடுத்து உதவி வரன் முறை வணிகர் வளத்தழகை வலியுறுத்தும் அன்பர்களும் செட்டிநாட்டில் தலைமுறை தலைமுறையாக இருந்து வருகின்றனர்.

### சங்க கால மரபு

''உதியன் சேரன்'' என்னும் சொற்றொடர் உதியன் மகன் சேரன் என்று பொருள்படும். இந்தச் சங்ககால மரபு இன்றும் நகரத்தார்கள் திருமணம் முதலிய நிகழ்ச்சிகளில் எழுதும் மொய்ப்பண ஏட்டில் பின்பற்றப்படுகிறது.

சான்று:-

சோமசுந்தரம் செட்டி லெட்சுமணன்
அழகப்ப செட்டி வள்ளியப்பன்

ஏகப்ப செட்டி திருநாவுக்கரசு
சண்முகம் செட்டி மெய்யப்பன்

எவ்வளவுதான் செல்வாக்கும் பட்டங்களும் பெற்றிருப்பினும் இவ்வகையிலேயே இந்த ஏடுகளில் பெயர்கள் எழுதப் பெறும்.

சான்று:-

செட்டிநாட்டரசர் அண்ணாமலையார் பெயர் 'முத்தையா செட்டி அண்ணாமலை' என்று மட்டுமே குறிக்கப் பெறும்.

இவ்வாறே கவியரசர் கண்ணதாசன் பெயர், அவரைச் சுவீகாரமாக ஏற்றுக்கொண்டவர் பெயர். அவர் கவிஞர்க்கு இட்டபெயர் ஆகியவற்றால் மட்டுமே மொய்ப்பண ஏட்டில் இடம் பெறும்.

# 3 சிலப்பதிகாரக் காலம்*

## பாலைவனத்தில் குடிபுகுந்தமை

நகரத்தார்கள் காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்தனர் என்பது வரலாறு. இவர்களுடைய நகரங்கள் கடற்கரையை அடுத்திராமல் மேடான இடங்களில் அமைந்திருக்கின்றன. இதை நோக்கும்போது, காவிரிக்கரையில் கடற்கரையோரத்தில் பூம்புகாரில் வாழ்ந்த மக்கள் கடலாலும் ஆற்றாலும் தங்கட்கு நேர்ந்த இன்னல்களைக் கண்டு அஞ்சிப் போலும் பாலைவனத்தை நாடி அங்கே குடிபுகுந்தனர் என்று எண்ண இடந்தருகிறது.

## வெள்ளத்தின் நினைவு

கடல் நீர் காவிரிபூம்பட்டினத்துள் நுழைந்து அந்நகரத்தையே விழுங்கிய நினைவு நகரத்தார்க்கு உண்டு. அத்தகைய இயற்கைச் சீற்றம் மீண்டும் தங்களைப் பாதிக்குமோ என்ற அச்சமும் நிலவுவது இயல்பே.

## இதன் விளைவு

இவர்கள் கட்டும் வீடுகள் உயரமான அடிப்பகுதியின் மேல் அமையும். 18 படிகள் ஏற வேண்டிய வளமனைகளும் உள்ளன.

வெள்ளத்தில் சிக்கி வீட்டை விட்டு வெளியே போகப் பல நாட்கள் ஆகும், எனின், உண்ண வழிஎன்ன? இந்நாளில் போல ஹெலிகாப்டரிலிருந்து சோற்றுப் பொட்டலங்களும் 'பிரெட்' போன்றஉணவுகளும் அக்காலத்தில் கனிவுடன் போடப் படவில்லை. எனவே, நகரத்தார்கள் ஓராண்டுக்குத் தேவையான அனைத்து உணவுப்பொருள்களையும் சேமித்து வைத்துக் கொள்வதை வழக்கப்படுத்திக் கொண்டனர்.

---

* சிலப்பதிகாரமும் மணிமேகலையும் சங்க காலத்தையடுத்துச் செய்யப் பெற்றவை என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. ஆகவே இவை இங்குத் தனியே குறிக்கப் பெற்றன.

காய்கறிக்குப் பதிலாக, அவசரத்திற்குப் பயன்படுத்திக் கொள்ள பாசிப்பயறு, தட்டப்பயறு, மாவற்றல், தேங்குழல் வற்றல், கத்தரி வற்றல் என்பவற்றைச் சேமித்து வைத்துக் கொள்ளும் மரபு இவர்களுடன் இரண்டறக் கலந்துவிட்டது.

## சிலம்பின் தீவினை

நகரத்தார் குலப் பெண்கள் காலில் கொலுசு, தண்டை, சிலம்பு என்ற அணிகள் அணிந்து கொள்வதில்லை. கோவலன் வழியில் வந்தவர்கள் என்று கருதுவதற்கேற்றவாறு, சிலம்பின் தீவினையால் கோவலன் மாண்டான்; அதனாற் காலிற் சிலம்பு முதலிய அணிகள் அணிதலாகாது என்று எண்ணித்தான் அணியாது விட்டனர் என்று கருதுகிறோம்.

## வணிகச் சிறப்பு

''கலத்தினும் காலினும் தருவன ரீட்டக்
குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்''

என்று இளங்கோவடிகளால் புகழப் பெற்றவர் தன வணிகரே என்று பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் ''தனவணிகர் தன்மை'' என்னும் நூலுக்கு வழங்கிய முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

## வேறு வைத்தல்

சிலப்பதிகாரத்தில் ''மனையறம் படுத்த காதை'' என்று ஒரு காதை இருக்கிறது. இது, மணமானபின் மணமக்களைத் தனி குடித்தனமாக வேறு வைப்பதைக் குறிப்பது. இன்றும் இவ்வழக்கம் நகரத்தார் சமூகத்தில் நிலவிவருகிறது. இவர்களுடைய குடும்பங்களில் தந்தையும் மகனும் ஒரு மாளிகையிலேயே வாழ்ந்தாலும், தனித்தனியே குடும்பம் நடத்துவதையும், தனியாக உணவாக்கிக் கொள்வதையும், தனித்தனியே விருந்தினரை உபசரிப்பதையும், வரவு செலவு கணக்குகளைத் தனித்தனியே வைத்துக் கொள்வதையும் இன்றும் காணலாம்.

திருமணம் நிறைவெய்திய சில திங்கள்களுக்குப் பின்னர், மணமக்கள் தனிக்குடும்பம் நடத்துவதற்காக ஒரு மங்கல நிகழ்ச்சி ஏற்பாடு செய்யப் பெறும். இதை வேறு வைத்தல் என்பர். வீட்டில் அவர்களுக்கென ஒதுக்கப் பெறும் பகுதிகளில்

அன்று தொடங்கி மணமக்கள் தனியே உணவாக்குவர். வேறு வைக்கும் நாளில் கத்தரிக்காய்க் குழம்பு, வாழைக்காய்ப் பொரியல், பருப்பு இம்மூன்றையும் சமைப்பர். மணமக்களுக்குச் சமையல் செலவுகளுக்காக ஓராண்டுக்கு 200 ரூபாயும் இரண்டு பொதி நெல்லும், மணமகளிடம் மணமகனின் தாய் தந்தையர் வழங்குவர். இத்தொகைக்கு 'வருஷத்துப் போகம்' அல்லது 'பொதி போடுதல்' என்று பெயர்.

பாய் மிடைதல், உணவருந்தப் புகும் கணவனுக்குத்* தடுக்குப் போடுதல் முதலிய பழக்கங்களும் சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பட்டுள்ளன. இவை இன்றளவும் செட்டி நாட்டில் நிலவி வருகின்றன. தமிழ்நாட்டின் பிற இடங்களில், மணமகன் குதிரை ஏறுவது மாமன்மார் தோள் மேல் ஆடுவதாக அமைந்து விடுகிறது; வேறு சில இடங்களில் மாமன்மார் குதிரை போல ஆடுவர்: உண்மைக் குதிரையை வரவழைத்து, மாப்பிள்ளை அதன் மீதேறி ஊரை வலம் வந்து, வீடுதொறும் அவருக்கு ஆரத்தி எடுத்து ஊரவர் வாழ்த்துவது செட்டிநாட்டு வழக்கம்.

கோவலனும் கண்ணகியும் சோழ நாட்டிலிருந்து மதுரைக்குக் கொடும்பை என்னும் கொடும்பாளூர் **வழியாகச் சென்றதாகச் சிலப்பதிகாரம் கூறும். கண்ணகி, கண்ணம்மை, கண்ணாத்தாள் என்ற பெயர்கள் செட்டி நாட்டில் இன்றளவும் வழக்கிலுள்ளன. பெண்கள் தமக்குள் வாய்ச் சண்டையிடும் போது, 'கண்ணாத்தாள் தான் உன்னைக் கேட்க வேண்டும்' என்று கூறுவர்; கண்ணகிதான் அவர்களுடைய குல தெய்வமாகிய கண்ணாத்தாள்.

சதுக்க பூதங்கள் பற்றிய குறிப்புக்கள் சிலப்பதிகாரத்தில் உள்ளன. நாட்டரசன் கோட்டையில் 'பூதக்குடித்தெரு' இருப்பதும், கண்ணாத்தாள் கோவில் இருப்பதும் குறிப்பிடத்தக்கன.

---

* தடுக்கு ஓலையால் மிடையப் பெறுவது. தவிசுப் பலகைக்கு பதிலாகப் போடப்படுவது. ஒருவர்மட்டும் இருக்கத்தக்க அளவினை உடையது.

** கொடும்பாளூர், கோனாட்டின் தலைநகர் என்று சேக்கிழார் கூறுகிறார். இவ்வூர் புதுக்கோட்டை மாவட்டத்தில் உளது. இவ்வூர் வழியாகப் புதுக்கோட்டையிலிருந்து மணப்பாறைக்குப் பேருந்துகள் செல்லுகின்றன.

### கண்ணகியின் தமிழ்ப் புலமை

கோவலன், ''ஏகாச் சிறப்பின் இசை விளங்கும்பெருங்குடி மாசாத்துவானுக்கு மகனாய்த்'' தோன்றியவன். அவன் மனைவி யாகிய கண்ணகியும் பெருங்குடி வணிகர் மரபில் பிறந்தவளே. அவளுடைய தமிழ்ப் புலமையை, யாப்பருங்கல விருத்தியிலுள்ள பத்தினிச் செய்யுளால் அறியலாம் :-

''கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க
ஒண்செய் குருதியினோஒ கிடந்த - கெண்டிக்
கெழுதகை யில்லேன் கிடந்துடப் பன்னாள்
அழுத கண்ணீர் துடைத்த கை.''

நகரத்தார் சமூகம் கண்ணகியின் மரபு ஆதலாற் போலும் பரம்பரையாகத் தமிழ்ப்புலமை நிறைந்ததாக இருந்து வருகின்றது.

### மணிமேகலையின் ஆசிரியரும் செட்டிநாடும்

''மணிமேகலையை'' யாத்தவர் மதுரைச் சீத்தலைச் சாத்தனராவர். சாத்தன், சாத்தப்பன் என்ற பெயர்கள் செட்டிநாட்டில் வழங்கி வருவதை இரண்டாம் கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறோம். மணிமேகலை ஆசிரியர் வாணிபம் செய்தவர். அவர் ஈடுபட்டிருந்த வாணிபம் கூலவாணிகம் ஆகும். இரத்தினம், சுவர்ணம் பலசரக்கு முதலிய வியாபாரங் களை நகரத்தார்கள் செய்வதாகப் பூங்குன்றை வேலங்குடியில் நகரத்தார் நிருணயம் செய்த சாதிமுறை நியாயங்களில் குறிப் பிடப் பெற்றிருப்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. மேலும் இவர் மதுரையை அடுத்து வாழ்ந்தவர். செட்டி நாட்டில் சில இடங்கள் மதுரையிலிருந்து சிறு தொலைவிலேயே உள்ளன. மணிமேகலையில், ஆபுத்திரனோடு மணிபல்லவ மடைந்த காதையில்,

''மாபெரும் பீடிகை வலங்கொண் டேத்துழிக்
கம்பளச் செட்டி கலம் வந் திறப்ப .........
அங்கவன் பாற்சென் றவன்றிற மறிந்து''

என்று தொடங்கும் வரிகள் வாயிலாக நகரத்தார்களின் வாணிபத்தையும் அவர்களிடம் மக்களுக்குள்ள நம்பிக்கையை யும் சிறப்பித்துக் கூறியிருக்கிறார். இவற்றால் சாத்தனார் நகரத்தார்ரே என்று கொள்ளலாம்.

திரு ஆதிரை

பெண் திலகமான ஆதிரை என்பாள் மணிமேகலையில் குறிப்பிடப் பெற்றிருக்கிறாள்: இவள் நகரத்தார் மரபினளே. இன்றும், செட்டி நாட்டில், வயது வந்த பெண்களுக்கு — திருமணத்திற்கு முன்னர் — "திரு ஆதிரை" என்னும் பெயருடன் ஒரு சிறப்பு நிகழ்ச்சி நடைபெற்று வருகிறது. இது மார்கழித் திங்களில் திரு ஆதிரை நட்சத்திரத்தன்று நிகழும். "திரு ஆதிரை" செய்த பெண்களே இறந்தபின் எரிக்கப்படுவர். "திரு ஆதிரை" செய்யப்பெறுமுன் இறந்துவிடும் பெண்களைப் புதைப்பதே வழக்கம்.

திருமணத்திற்கு உரிய பருவமடைந்த பெண்களை விளம்பரப்படுத்தும் நிகழ்ச்சியாகத் திரு ஆதிரை அமைந்தது போலும்.

மணிமேகலை வணிகர் குலத்துக் கோவலன் ஈன்ற பைங்கொடியே. அவளுக்கு அமுதிட்டவளும் அக்குலத்தவளே. மணிமேகலையால் உயர்ந்தவள் என்று கருதப் பெற்ற ஆதிரை போல, தம் குலத்து மகளிரெல்லாம் விளங்க வேண்டுமென்பது இவ்விழாவின் கருத்துப் போலும்! மணிமேகலை பாத்திரம் பெற்றதும் ஒரு பத்தினிப் பெண்ணிடம் முதலில் பிச்சை பெற வேண்டுமென்ற நியதியை அறிந்து ஆதிரை என்பாளிடம் பிச்சை கேட்டாள். "பாரக மடங்கலும் பசிப்பிணி யறுக" என்று சொல்லி, அவளிட்ட பிச்சை பெருகி, உலகப் பசிப்பிணியை நீக்கிற்று. அவ்வாறே இப்போது "திரு ஆதிரை" செய்து கொள்ளும் பெண்கள் வீடுவீடாகச் சென்று,

"ஆடி ஆடி வாரோம் அவரைக்காய் போடுங்க
பாடிப்பாடிவாரோம் பாடவரங்காய் போடுங்க
கூடிக்கூடி வாரோம் கொத்தவரங்காய் போடுங்க"

என்று இன்றும் உணவுப் பொருள்களையே விரும்பிக் கேட்டு வருகின்றனர். இந்நிகழ்ச்சிகள் மார்கழித் திரு ஆதிரையில் மணிவாசகர் மார்கழி நீராடல் திருவெம்பாவையை ஆதாரமாக வைத்து நடை பெறுகின்றன.

ஐம்படைத் தாலி

இது, காவலாகக் குழந்தைகளின் கழுத்தில் பூட்டப் பெறும் ஓர் அணிகலன். காத்தற் கடவுளாகிய திருமாலுடைய

ஐந்து ஆயுதங்கள் போலப் பொன்னாற் செய்யப்படுதலின் இது இப்பெயர் பெற்றது. சங்கு, சக்கரம், கதை (கதாயுதம்); கட்கம், வில் (சாரங்கம்) என்பவற்றின் வடிவமாக இது அமைக் கப்பெற்றது. *

இங்ஙனம் ஐம்படைத்தாலி அணிதல் இக்குலத்தில் தொன்று தொட்டு வருகின்ற மரபாகும். தாலிக் கயிற்றில் இவை சிறந்து விளங்கக் காணலாம்.

## கும்மாயம்

"பயிற்றுத் தன்மை கெடாது கும்மாய மியற்றி" என்று மணிமேகலையில் ஓர் உணவு வகை குறிக்கப்பெற்றிருக்கிறது** புழுக்கிய பச்சைப் பயிற்றோடு சருக்கரை முதலியன கூட்டி ஆக்கப்படுவதொரு சிற்றுண்டி என்று இதற்கு டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் விளக்கம் எழுதியுள்ளார்கள். இந்த உணவு இன்றும் செட்டி நாட்டில் ஆக்கப் பெறுகிறது. பாசிப் பயிறு, பச்சரிசி இரண்டையும் கலந்து கும்மாயம் செய்வர்.

## மூலப் பிரதி கிடைத்த வரலாறு

டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்களுடைய சிலப்பதிகாரப் பதிப்பில் மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர் அவர்களிடத்தில் கிடைத்த மூலப் பிரதி குறிப்பிடப் பெற்றிருக்கிறது.

"என் சரித்திரம்" என்னும் நூலில் 949 - ஆம் பக்கத்தில் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் எழுதியுள்ள பின் வரும் பகுதி குறிப்பிடத்தக்கது.

மிதிலைப்பட்டிப் பிரதியை வைத்துக் கொண்டு பார்த்த தில் சிலப்பதிகாரம் பல இடங்களில் திருத்தமடைந்தது. பல இடங்களில் பாடல்களுக்குத் தலைப்புகள் இருந்தன. அந்தப் பிரதியை ஆராய ஆராய, மிதிலைப் பட்டியின் சிறப்பு மேலும் மேலும் புலப்பட்டது. ... மிதிலைப்பட்டிப்பிரயாணம்நேர்ந்திரா

---

* மணிமேகலை, மலர் வனம் புக்க காதை, வரி 138.

** மணிமேகலை காதை 27, வரி 185

விட்டால், கலங்கியிருந்த என்மனதில் அமைதி தோன்றியிராது. அந்த நினைவினாலேதான், மிதிலைப் பட்டியைப் பற்றிப் பிற் காலத்தில், 'தமிழ் நாட்டில் எவ்வளவோ புண்ணிய ஸ்தலங்கள் இருக்கின்றன. சிவஸ்தலங்களும் விஷ்ணு ஸ்தலங்களும் சுப்பிரமணிய ஸ்தலங்களும் பல உள்ளன. அவற்றைப் போலத் தமிழ்த்தெய்வம் கோவில் கொண்டுள்ள ஸ்தலங்களுள் ஒன்றாகவே மிதிலைப்பட்டியை நான் கருதியிருக்கிறேன்," என்று எழுதினேன்.

உரைப் பதிப்பு

சிலப்பதிகார மூலத்தையும் 18 பகுதிகட்கு மட்டும் அரும்பதக் குறிப்பையும் ஐயரவர்கள் வெளியிட்டார்கள். இப்பேரிலக்கியத்திற்கு அடியார்க்கு நல்லார் உரையும் வழக்குரை காதை வரையில்தான் உள்ளது. அதன் பின்னர் சிலப்பதிகாரம் முழுமைக்கும் திருத்தமான உரையை ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். அந்நூலின் முன்னுரையில் நாட்டார் அவர்கள் எழுதியிருக்கும் பின்வரும் பகுதியை இங்கே தருவோம்:-

> "பாகனேரியிலுள்ள தனவணிகர் குலமணியும் அளவு கடந்த தமிழ்ப்பற்றுடையாருமாகிய திருவாளர் வெ. பெரி பழ. மு. காசி விசுவநாதச்செட்டியார் அவர்கள் சிலப்பதிகாரத்தில் பன்னிரண்டு உறுப்புகட்கு அடியார்க்கு நல்லார் உரையின்மையானும், அரும்பதவுரை கொண்டு நூற்பொருளைமுற்றுணர்தல் கற்பார்யாவர்க்குமெளிதன்றாகலானும் நூன் முழுதுக்கும் ஒரு தன்மையாகத் தெளிந்த முறையில் ஓர் உரை எழுதுவித்து வெளியிடுதல் நலமெனக்கருதி உரை எழுதும் பணியினை எனக்கு உதவினர்."

இதேபோன்று திரு. காசிவிசுவநாதச் செட்டியார் அவர்களின் முயற்சியாலும் பொருள் உதவியாலும் மணிமேகலைக்கு நாட்டார் அவர்களும் சித்தாந்தக் கலாநிதி, பேராசிரியர் ஔவை துரைசாமிப் பிள்ளை அவர்களும் உரை எழுதியுள்ளனர்.

அகநானூற்றில் 80 பாட்டுக்களுக்கு மட்டுமே உரைவெளி வந்திருந்தது. 400 பாட்டுக்களுக்கும் தெளிவான ஒரே வகையானஉரையைநாட்டார்அவர்களும் கரந்தைக் கவிஅரசு அரங்க

வேங்கடாசலம் பிள்ளை அவர்களும் ஆக்கியுள்ளனர். இதற்கும் திரு. காசிவிசுவநாதச் செட்டியார் அவர்களே முதற் காரணம் ஆவார்கள். அவர்களுடைய பேருதவியும் தமிழ் வளர்ச்சியின் கண் அவர்கள் கொண்டிருக்கும் பேரார்வமும் நினைக்குந்தோறும், அனைவரும் பெருமை பாராட்டுதற்குரிய செயலாயுள்ளது.

## சிலம்பும் செட்டிநாடும்

சிவபெருமானையும், முருகனையும் தங்கள் குல தெய்வங்களாகக் கொண்டவர்கள் இம் மரபினர், ஆதிரை நட்சத்திரம் சிவபெருமானுக்கு உரித்தாதலாலும், சிவனைக் கண்டவுடன் சக்தியையும் காணவேண்டுமென்ற காரணத்தாலும் 'திருவாதிரை' நட்சத்திரத்தில் மார்கழிமாதத்தில் 'திருவாதிரை' என்ற சடங்கொன்றை இவர்கள் கொண்டாடி வருகிறார்கள். மார்கழி மாதம் பெண்களுக்குச் சிறந்த மாதம் என்பதைத் திருப்பாவை, திருவெம்பாவையால் அறிகிறோம்.

கார்த்திகை நட்சத்திரம் முருகனுடைய நாளாகும். முருகன் 'தமிழ்ச் செவ்வேள்' என்னும் காரணம்பற்றி தமிழ்க் கடவுளைப் போற்றிக் கார்த்திகை மாதத்தில், கார்த்திகை நட்சத்திரத்தில் கார்த்திகைப் புதுமை என்னும் ஒரு விழாவையும் நகரத்தார் கொண்டாடினர். 1945க்குப் பிறகு இந்த நிகழ்ச்சி அருகிவிட்டது.

சிலப்பதிகாரத்தில் 'கண்டேத்தும் செவ்வேள்' என்ற குறிப்பும் 'மாதரார் தொழுதேத்த வயங்கு புகழ் கண்ணகி' என்ற தொடரும் வருகிறது. இதில் நகரத்தார் கைக்கொள்ளும் கார்த்திகை, திருவாதிரை விழாக்களின் குறிப்புகள் அடங்கி நிற்கின்றன. இதிலிருந்து பெண்ணும், ஆணும் திருமணம் ஆகுமுன்பு தங்கள் தங்கள் சிறப்பை ஆண்கள் குதிரை ஏறி ஊர்வலம் வருவதாலும் பெண்கள் ஒப்பனை செய்து ஊர்வலம் வந்து வாங்கிய பொருளைச் சமைத்து விருந்திட்டதாலும் அறிகிறோம்.

கோவலனுக்கும் கண்ணகிக்கும் திருமணம் ஆனவுடன் அவர்கள் தனி வீட்டில் வாழ்கிறார்கள். இதை இளங்கோவடிகள் 'வேறுபடு திருவின் வீறு பெறக்காண' என்ற தொடரால் குறிக்கிறார். இதைத் தான் செட்டியார்கள் 'வேறு வைப்பது'

என்பர். திருமணம் ஆனதும் மணமக்களைத் தனியே பிரித்துக் குடும்பம் நடத்தவைக்கும் பழக்கம் செட்டியார்களிடத்தில் சிறப்பாக இருந்து வருகிறது. ''உள்ளது சிதைப்பார் உயர் எனப்படார்'' எனக் குறுந்தொகை கூறும். அடி முதலீட்டைக் கரைத்து விடாமல் வருமானத்தைப் பெருக்கி, அது கொண்டு வாழும் பழந்தமிழர் பண்பாடு இக்குடியில் இருப்பதை இன்றும் ஓரளவு காணலாம். பழந்தமிழ் நாட்டிலே தாய் தந்தையர் தேடிவைத்த பெரும் பொருள்களை மக்கள் தாமே முயன்று மேலும் வளர்த்தனர். அதை விட்டு விட்டுச் சோம்பல் காரண மாக முயற்சி குன்றி உள்ள பொருள்களைச் சிதைத்து வாழ்வது வாழ்வாகாது. இந்தக் குறிக்கோளைக் கோவலனும் கொண்டிருந்தான். நகரத்தாரும் இன்றும் கொண்டிருக்கின்றனர்.

வாழ்க்கையில் முதற்படி திருமணம். அடுத்தபடியாக உள்ளது குழந்தைச் செல்வம். மக்கள் செல்வமே குடியை விளக்கும் சிறந்த ஒளி விளக்காக அமைந்தது. 'மயக்குறும் மக்களை இல்லோர்க்குப் பயக்குறை இல்லை தாம் வாழும் நாளே' என்று பாண்டியன் அறிவுடைநம்பி கூறினான். சிறப்புக்குரிய அத்தகைய குழந்தைப்பிறப்பை அறிவிப்பதை ஒரு சடங்காகக் கொண்டார்கள் செட்டியார் மரபினர். குழந்தை நன்றாகக் கருவிலே வளர மருந்து அவசியமாதலால், முதல் தடவை கருவுற்றிருக்கும் போது, ஐந்தாம் மாதமோ அல்லது ஏழாம் மாதமோ, 'மருந்து குடிப்பது' என்பதையும் சடங்காக வைத்தார்கள். குழந்தை பிறந்தவுடன் அது புதுமையாகக் காட்சி தருவதால் புதுமை என்ற சடங்கையும் கொண்டார்கள். கண்ணகிக்கு மகப்பேறு இல்லை. ஆனால் மாதவிக்கு மணிமேகலை பிறந்தவுடன், ஊரில் எல்லோரையும் கூட்டி முத்தும் மணியும் அளித்துச் சிறப்பித்தான் கோவலன். ''அணி மேகலையார் ஆயிரம் கணிகையர் மணிமேகலை என வாழ்த்திய அந் நாள், செம்பொன்மாரி செங்கையில் ஈந்து'' எனவரும் சிலப்பதிகார வரிகள் இதற்குச் சான்றாகும். இவன் செட்டியார் மரபினனாய் கருதப்படுதலின் இந்தச் சடங்குகளையும் செய்தான் எனக் கொள்ளலாம்.

விருந்தோம்பல் சிறந்த அறம். நகரத்தார் இதை இன்றும் பொன்னேபோல் போற்றி வருகின்றனர். விருந்தினர் தூரத்தே வருகின்றபோது மலர்ந்த முகத்தைக் காட்டியும் பக்கத்தில் வந்தவுடன், இனிய சொற்களைக் கூறியும் இவை இரண்டும் முடிந்தபின் நன்றாக உபசரித்தும் மகிழ்கிற சிறந்த பண்பு

இவர்களிடத்து இருப்பது பார்க்கத் தகும். உண்டியும், உடையும், உறையுளும் கொடுத்து வந்தவர்களுக்கு வரிசை தரும் பேறு இங்கு மிகுதியாகக் காணப்படுகிறது இதனையே "அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும், துறவோர்க்குஎதிர்தலும் தொல்லோர் சிறப்பின் விருந்து எதிர் கோடலும் இழந்த என்னை" என்று கண்ணகி தான் இல்லறம் நடத்தாமையால் விருந்தெதிர் கொள்ளும் வாய்ப்பை இழந்ததற்கு வருந்தியதாகச் சிலப்பதிகாரம் கூறுகிறது. நகரத்தார் பண்பாட்டில் வளர்ந்த கண்ணகி இவ்வாறு வருந்துவது இயல்பே. வெளி நாடுகளுக்குச் சென்று வாணிபம் செய்யும் இடத்தில் கூட, செட்டியார்கள் விருந்துபசரிக்க மறந்தார்களில்லை. இராமன் சென்ற இடமெல்லாம் அயோத்தி என்று கூறுவது போல, இச் சமூகத்தினர் செல் லும்நாடுகள் தோறும், இவர் தம் பண்பாட்டுச் சின்னங்களைக் காண்கிறோம். கண்ணகி செட்டி மகளாதலால் அவள் கோவலனோடு வாழும் வாழ்விழந்ததை நினையும் போது, விருந்து எதிர் கொள்ளும் வாய்ப்பிழந்தேனே என்று வருந்துகிறாள்.

இனி செட்டி நாட்டிலே தரையை மெழுகி அதன் மேலே குருத்துப் பனை ஓலையால் மேய்ந்த தடுக்கிட்டு, அதன் முன் வாழையிலை போட்டு அமுதுண்பார்கள். தடுக்கு என்பதுஇரண்டடிச் சதுரமுள்ளதாயிருக்கும். இத்தடுக்குகள் கடைகளில்வாங்கும் பொருள் அல்ல. குடும்பப் பெண்கள் தாமே மிடைவது. இப்பழக்கம் கண்ணகி கோவலனுக்கு உணவிட்டதாகச் சொல்லுமிடத்தில் சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட்டிருப்பதை நாம் காண்கிறோம். கண்ணகி தண்ணீர் தெளித்துத் தரையைக் கையால் தடவி மெழுகினாள் பின்பு வெண்மையான பனை ஓலையாலான தடுக்கு ஒன்றைப்போட்டாள். அதில் கோவலன் அமர்ந்ததும் உணவு பரிமாறினாள்.

"தாலப் புல்லின் வால்வெண்தோட்டு
கைவன் மகடு உக்கவின் பெறப் புனைந்த
செய்வினைத் தவிசிற் செல்வன் இருந்தபின் ..."

இங்கே கவனிக்க வேண்டியது ஒன்று இருக்கிறது. பெண்களால் அழகாகச் செய்யப் பெற்ற தவிசு என்று தடுக்கைப் பற்றிச் சிலப்பதிகார வரிகள் கூறுகின்றன, இந்தத் தடுக்குகளை வர்ணங்கள் உள்ளனவாகப் பெண்களே தம் கைத்திறமையால்

செய்யும் பழக்கம் இன்றும் நகரத்தார் சமூகத்தில் ஒவ்வொரு குடும்பத்திலும் இருக்கிறது. ஓர் ஐயம் இங்கே எழுப்பலாம். இராமநாதபுரம் திருநெல்வேலி மாவட்டங்களில் பிற சமூகப் பெண்களும் பாய்தடுக்கு முதலானவற்றைச் செய்கிறார்களே என்பதுதான் அந்த ஐயம். ஆனால் இந்தச் சந்தேகத்திற்குச் சிலப்பதிகாரம் இடம் வைக்கவில்லை. பிற இடங்களில் பழுப்பு நிறமுள்ள சாறு ஓலையில் பெட்டியும் பாயும் மிடைவதுதான் இன்று நடைமுறையாகக் காண்கிறது. நகரத்தார் பெண்கள் தான் பனை ஓலையில் நல்ல வெண்மை தரக்கூடிய குருத்து ஓலையை வாங்கி அதில் கைவினை வண்ணத்தை காட்டு கிறார்கள். இந்த வெண்மையான குருத்து ஓலைகளைத் தேர்ந் தெடுப்பதிலும் பக்குவப்படுத்துவதிலும் அவர்கள் நிகரற்றவர் கள்.1 எனவே, 'தால்புல்லின் வால்வெண்—தோட்டுக்' என்று இளங்கோவடிகள் கூறியது செட்டி நாட்டுக்குள் பயன்படுத்தப் பெறும் தடுக்குகளையே குறித்தன என்று கொள்ளலாம்.

# 4. பல்லவர் காலம் (கி.பி. 300-900)

## பூங்குன்ற நாட்டில் சமண முனிவர்கள்

4,5-ஆம் நூற்றாண்டுகளில் பூங்குன்ற நாட்டில் சமண முனிவர் பலர் வாழ்ந்ததை நாலடியார் கூறும். இன்றும் பூங்குன்ற நாட்டின் தலைநகரான மகிபாலன்பட்டி அருகேயும் இராயவரத்தை அடுத்த தேக்காட்டூரிலும் சமண விக்கிரகங்களைக் காணலாம். கல்லில் அமைத்த படுக்கைகளுக்கு (1) தேனி மலை (2) சித்தன்னவாசல் புகழ்பெற்றன. தேவகோட்டைக்கு அருகேயுள்ள அனுமந்தக்குடியில் சமணர்கோவில் ஒன்று உள்ளது.

காளையார் கோயில் - சருகணிச் சாலையிலுள்ள புளியடிதர்மமம் என்னும் ஊருக்கும் சண்முகநர்த பட்டினம் என்னும் சிற்றூர்க்கும் இடைப்பட்ட பகுதியில் பல ஊர்களில் சமணத்தடயங்கள் காணப்படுகின்றன.

## ஐந்நூற்றுவர்

புதுக்கோட்டை மாவட்டத்தில் நார்த்தாமலை என இப்போது மருவி வழங்கும் ஊர் ஒன்று உண்டு. நகரத்தார் மலை என்பதே சரியான பெயர். இங்கு இருக்கும் கோவில், பல்லவர் ஆட்சியில் ஏற்பட்டது. இம்மலைச்சரிவில் தமிழ் வணிகர் தலைநகரமான திருவெண்ணெயில் இருந்தநாக இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இவ்வூரே 'சமணர் குண்டு' இருக்கும் செட்டி பட்டி என்ற பெயருடன் சிற்றூரிலும் சிற்றூராக இன்றும் இருந்து வருகிறது. செட்டிபட்டியில் ஐந்நூற்றுவப் பெரும்பள்ளி ஒன்று இருந்ததென்பர். பல்லவர் காலத்தில் "திசையாயிரத்து ஐந்நூற்றுவர்" என்றும், "ஐந்நூற்றுவர்" என்றும் குறிக்கப் பெற்ற வணிகர் இப்பகுதியில் வாழ்ந்தனர். அவர்கள் கடல் கடந்த நாடுகளுடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தனர். இன்றளவும் நகரத்தாரில் மாற்றூர்க் கோவில் பிரிவினர் வழிபடும் கடவுளின் பெயர் "ஐந்நூற்றீசர்" எனப்படும். மாற்றூர் என்னும் நகரில் ஐந்நூற்றீசுவரர் கோவில் இருக்கிறது.

ஐந்நூற்றுவதேவன், ஐந்நூற்றுவப் பேரறையன் ஆகிய இருவரும் கையெழுத்திட்ட ஓர் ஆதாரத்தின் படி விரையாச் சிலைக் கல்வெட்டில் இருக்கிறது.

9-ஆம் நூற்றாண்டு அளவில் புதுக்கோட்டைப்பகுதியில் நகரம் என்ற ஆட்சிக்குழு இருந்தது. வணிகர்களே இதில் உறுப்பினராய் இருந்தனர். ஆதாரம் — புதுக்கோட்டை கல்வெட்டுக்கள்.

ஐந்நூற்றுவர் பல்வேறு நகரினர் ஆவர். பில்லமங்கலம், அழகாபுரி, பொன்னமராவதி முதலிய இடங்களில் அவர்கள் இருந்தனர். நெல், அரிசி, கடலை முதலிய உணவுவகைகளையும் குதிரை போன்ற வாணிப்ப் பொருள்களையும் வாணிபம் செய்தனர். அவற்றிற்கு வரி வசூலித்துக் கோவிலுக்குக் கொடுத்தனர் என்ற செய்திகளை 1903-ஆம் ஆண்டு 154-ஆம் எண்ணுடைய பிரான்மலைக் கல்வெட்டுக் கூறுகிறது. இத்தகைய தொழில்கள் நகரத்தார் பற்றிய வேலங்குடிக் கல்வெட்டிலும் இடம் பெற்றிருக்கின்றன.

ஐந்நூற்றுவர் பெயரால் பில்லைமங்கலத்தில் ஊருணி ஒன்று இருந்தது. ஐந்நூற்றுவ மங்கலம், ஐந்நூற்றுவ நல்லூர் என்னும் ஊர்கள் பிரான் மலைக்கு அருகே இருந்தன என்றெல்லாம் விரையாச்சிலைக் கல்வெட்டு (புதுக்கோட்டை-393) வாயிலாக அறிகிறோம்.

இலக்கியத்தில் சுந்தரபாண்டியபுரம் எனக் குறிக்கப் பெறுவது இப்பில்லைமங்கலமே.

### கடல் வாணிகத்திற் சிறந்த தமிழர்

கி.பி. 640—இல் காஞ்சிபுரத்திற்கு வந்த சீன யாத்திரிகரான யுவான் சுவாங் தென்னிந்தியாவிலிருந்து கடல் கடந்து கிழக்கிந்திய நாடுகளுக்குச் சென்றான். அவன் சென்ற கப்பலில் 600 பயணிகள் இருந்தனர். கடல் நீரை நன்னீராக்கும் கருவியை அக்காலத்தமிழர் அறிந்திருந்தனர் என்று அவன் கூறியுள்ளான். கிழக்கிந்தியத் தீவுகளை ஆண்ட அரசர்களோடு பல்லவர்கள் அரசியல் உறவு கொண்டனர்; அவர்கள் பொருட்டு நாகையில் பௌத்த விகாரத்தைக் கட்டினர். சீனயாத்திரிகர்களும் சீன வணிகரும் பல்லவர் ஆண்ட தமிழ்நாட்டுப் பகுதிகளுக்கு வருகை புரிந்தனர். சயாம் முதலிய நாடுகளில் தமிழ் வணிகர் வாழ்ந்திருந்தனர்.

இவ்விவரங்களைக் காண, பல்லவர் காலத்தில் கடல் கடந்த தமிழ் வணிகர் யாவர்? அவர்கள், சிலப்பதிகாரக் காலம் முதல் இன்றளவும் கடல் கடந்த நாடுகட்குச் சென்று வாணிகம் செய்யும் நகரத்தார் மரபினரேயன்றி வேறு யாராக இருத்தல் கூடும்?

இங்ஙனம் கடல் கடந்த நாடுகளில் வணிகர் சென்று ஏற்படுத்திய செல்வாக்கினாலும் கடல் வாணிபத்தில் பல்லவர் கொண்டிருந்த மிகுந்த கவனத்தினாலுமே கழற்சிங்கன் என்ற பல்லவனைப் பாடவந்த சுந்தரர் தமது திருத்தொண்டத் தொகையில்,

"கடல்சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்" என்று பாடியருளினார்.

## பல்லவராயர்

புதுக்கோட்டைப் பகுதி சிலகாலம் 'பல்லவராயன் சீமை' என்று பெயர் பெற்றிருந்தது. அதை ஆண்ட மன்னர்கள் பல்லவ ராயர் என அழைக்கப் பெற்றனர். அங்கு ஆட்சி செலுத்திய கள்ளர்கள் செந்தலை முதலிய இடங்களில் சிற்றரசர்களாகவும் பல்லவர்களுடைய படைத்தலைவர்களாகவுமிருந்து வந்த பழங்குடி மக்களாவர். ஆதலின், பல்லவர்களின் விருதுப்பெயர் களை அவர்களும் சூட்டிக்கொண்டனர்.

## நாட்டார்—நகரத்தார்

நாட்டார், நகரத்தார் என்ற பிரிவுகள், பல்லவர் காலத் திலேயே நிலவின. 'தமிழக வரலாறு' என்னும் நூலில் (கழக வெளியீடு) பல்லவர் காலம் என்னும் பகுதியில் வ. பொன்னு சாமிப்பிள்ளை பின்வருமாறு கூறுகிறார்.

"மண்டலாதிபதிகளுக்கும், கோட்டங்கள் நாடுகள் முதலியவற்றின் அதிகாரங்களுக்கும் (திருவாய்க் கேள்வி கள் வாயிலாக) அரசர் கட்டளைகள் அனுப்பப்பட்டன. பல்லவப் பெரு நகரங்களில் நகரத்தார் என்னும் குழுவினரும் நாடுகளில் நாட்டார் என்னும் குழுவினரும் முறையே மக்களின் நலனைப் பேணி வந்தனர்."

பாடல் பெற்ற தலங்கள்

சமயாசாரியார்கள் பல்லவர்காலதிதில் வாழ்ந்தவர்கள் ஆதலின் செட்டி நாட்டின் சமயநிலையை இக்கட்டுரையில் தெரிவிப்போம்.

அரியக்குடி, திருக்கோட்டியூர் திருமெய்யம் ஆகிய வைணவதலங்கள் செட்டிநாட்டிலுள்ளன, திருக்கோட்டியூரைப் பெரியாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை யாழ்வார் ஆகியோர் பாடியுள்ளனர். இத்தலத்தை,

வான் பார்க்கும் பைங்கூழ்போல்
வாளா உனதருளே
யான் பார்க்க, நீ பார்த்து
இரங்கிஞய் —தேன் பார்ப்பின்
ஓசைத் திருக் கோட்டி
யூரானே இன்னமும் என்
ஆசைத் திருக்(கு) ஓட்டி ஆள்''

என்று பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் சிறப்பித்துள்ளார்.

வைணவ சமயத்தைப் பெரிதும் பரப்பிய ஸ்ரீராமாநுசர். சரம சுலோக உபதேசம் பெற்ற தலம் இதுவே. அவருடைய பஞ்சாசாரியருள் ஒருவராகிய திருக்கோட்டியூர் நம்பியின் ஊரும் இதுவேயாகும். பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பாடியிருக்கும் மற்றொரு தலம் திருமெய்யம். இதை ஆழ்வார்கள் பலரும் பாராட்டியுள்ளனர். இங்குள்ள பெருமாளின் பெயர் சத்தியமூர்த்தி. இப்பெயரை, செட்டிநாட்டினர் தூய தமிழில் மெய்யப்பன் என்று ஆடவர்க்கும் மெய்யம்மை என்று பெண்டிர்க்கும் இடுவர். சிறந்த சொற் பொழிவாளராகவும் அரசியல் தலைவராகவும் விளங்கிய காலஞ் சென்ற திரு. சத்தியமூர்த்தி இவ்வூரின் சுற்றுப்புறத்தில் பிறந்தவர் ஆவார்.

திருவாய் மொழியைப் பாராயணம் செய்வோர்க்கு ஒரு கிராமம் பரிசிலாகக் கொடுக்கப் பெற்ற செய்தி பொன்னமராவதியில் 1449-ல்இல் பொறிக்கப்பெற்ற ஒரு கல்வெட்டிலிருந்து தெரிகிறது.

சைவ சமயத்தைப் பற்றிய வரையில் செட்டிநாடு இல்லை என்ருல் பிற்காலத்தில் சைவசமயம் சிறந்திராது என்று தருமபுர ஆதீனப் புலவராக இருந்த டாக்டர் ச. தண்ட

பாணி தேசிகர் ஒரு முறை கூறியது முற்றிலும் உண்மையே யாகும். செட்டிநாட்டிலுள்ள சைவக் கோவில்கள், நால்வரா லும் வழிபடப் பெற்றவை. இவற்றுள் திருப் பெருந்துறை திருவாசக புகழ்ப் பெற்ற தலம்; சங்க இலக்கியத்தில் குறிக்கப் பெற்றுள்ள கானப்பேர் என்னும் காளையார் கோவில் சுந்தரர் தேவாரத்திலும் சம்பந்தர் தேவாரத்திலும் பாடப் பெற்றது. திருப்பத்தூர், சுந்தரராலும் திருநாவுக்கரசராலும் பாடப் பெற்றிருக்கிறது. சம்பந்தர், பிரான் மலையையும் திரு ஆடானையையும் பாடியுள்ளார்.

தேவாரம் திருவாசகம் ஆகியவற்றைத் தமிழ் நாடெங்கும் பல பள்ளிக்கூடங்கள் வாயிலாகப் பரப்பிய பெருமை நகரத் தார்க்கு உண்டு. செட்டிநாட்டில் பல ஊர்களில் தேவாரப் பாடசாலைகளும் திருவாசக மடங்களும் 1941 வரை இயங்கி வந்தன. திருவாடானை, திருக்கோகர்ணம், இளையான்குடி, கண்டதேவி, திருக்கோளக்குடி ஆகிய ஊர்களிலும், நகரத்தார் முதலிற் குடியேறிய ஒன்பது நகரங்களிலும் மிகப் பெரிய கோவில்கள் உள்ளன. சைவ நாயன்மார்களில் ஒருவரான இளையான்குடி மாற நாயனார் பிறந்த இளையான்குடி செட்டி நாட்டு எல்லைக்குள்ளேயே இருக்கிறது.

செட்டியார்கள் சைவ சமயத்தவராக மட்டுமே இருக்க வேண்டும் என்ற கட்டுப் பாடும் இருந்து வருகிறது. "அந்நிய மதங்களில் சேரக் கூடாது" என்று பூங்கொன்றை வேலங் குடிக் கல்வெட்டு குறிக்கிறது. தமிழகத்திலுள்ள எத்தனையோ சமூகத்தவர் பிற சமயங்களைப் பின் பற்றியிருப்பினும் நகரத்தார்களுள் அவ்வாறு சமயம் பார்த்துச் சமயம் மாறிய வர்களைக் காணல்—முன்னாளிலும் சரி, இன்றும் சரி—இல்லை என்று உறுதியாகக் கூறலாம்.

# 5. திருமடங்கள்

தமிழ் நாட்டுத் திருமடங்கள் சைவத்தோடு தமிழையும் வளர்த்து வருகின்றன. செட்டிநாட்டில் உள்ள திருமடங்களின் தமிழ்ப்பணியை இக்கட்டுரையில் குறிப்பிடுவோம்.

1. திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி.

இந்த ஆதீனம், திருவண்ணாமலையில் ஏற்பட்டது.

ஆதிகுருமணியாகிய தெய்வசிகாமணி தேசிகர் முதல் பதினாறாவது குருமூர்த்திகளாகிய நாகலிங்கதேசிகர் வரை, திருவருணையிலேயே இருந்து வந்தனர்.

பதினேழாவது குருமூர்த்திகளான நாகலிங்க தேசிகர் இராமேசுவர யாத்திரையை மேற்கொண்டார். இராமநாதபுரம் சேதுபதி, தேசிகரை வரவேற்று, இராமேசுவர யாத்திரையைச் செய்வித்து "தங்கள் மரபு இம்மாவட்டத்திலேயே எழுந்தருளியிருத்தல் வேண்டும்" என வேண்டினார்

அவ்வாறே பதினேழாவது பட்டம் நாகலிங்க தேசிக குருமூர்த்திகள் தமது சீடர்களில் முதன்மையான (18) குமரசாமிதேசிக குருமூர்த்தியைக் குருபீடத்தில் அமரச்செய்து அவர்கள் திருவண்ணாமலையை அடைந்தார்கள்.

அவர்களின் பின் (19) திருச்சிற்றம்பல தேசிகர், (20) சிதம்பரநாத தேசிகர், (21) சிவக்கொழுந்து தேசிகர், (22) நமச்சிவாய தேசிகர், (23) அகத்தீசுவர தேசிகர், (24) பொன்னம்பல தேசிகர், (25) ஏகாம்பர தேசிகர், (26) வைத்தியநாத தேசிகர் (27) அண்ணாமலை தேசிகர், (28) ஞானப்பிரகாச தேசிகர், வரை பிரான்மலையிலேயே தலைமை இடமாக அருளாட்சி புரிந்தார்கள்.

ஆதீனச்சீடர்கள் சென்னை முதல் கன்னியாகுமரி வரை ஏன் இலங்கை வரையிலும் சென்று சித்தாந்தச் செந்நெறியைப் பரப்பி ஆங்காங்கே கிளைமடங்கள் நிறுவினர்.

பிரான்மலையிலிருந்து மூலிகைகளை எடுத்துச்சென்று சென்னைக் கடற்கரைவாழ் ஏழைகளுக்கு மருத்துவ உதவி செய்தவர் அமிர்தலிங்கத்தம்பிரான் என்பவராவர். அவர் மயிலாப்பூர் புராணம் இயற்றியதோடு சென்னையில் இரண்டு மடங்களையும் தம் ஆதீனத்தின் சார்பாக நிறுவி, தமிழை வளர்த்தார். இக்கட்டளை மடத்திலிருந்த சரவண சுவாமிகள் என்பார், உ.வே. சாமிநாதய்யர் அவர்கள் ஏடுதேட முதன்முறையாகப் பயணம் சென்றபோது உதவியவர்கள். இவ்வாறே இந்த ஆதீனச் சீடர்கள் குன்றக்குடி, திருப்புத்தூர், திருக்கோளக்குடி, சதுர்வேதி மங்கலம், தேனாட்சியம்மன் கோவில் முதலிய இடங்களில் சிவாலயத் திருப்பணி செய்து பல நிவந்தங்கள் ஏற்படக் காரணராயிருந்தனர்.

இறுதியில் இத்திருக்கோவில்களை, குருபீடத்திலேயே சேர்த்தார்கள். இத்தகைய நிலையில் குன்றக்குடியில் வாழ்ந்த ஆதீனச்சீடர், சங்கரலிங்கத் தம்பிரான் என்னும் தவ முனிவராவார். இவர்கள்பால் தமிழ் பயின்ற நாற்பது புலவர்கள், இராமநாதபுரத்திலிருந்தும் பிரிந்த சிவகங்கைப் பகுதியை ஆண்ட மருது சகோதரர்களின் அவையை அலங்கரித்தனர் என்பர் மயூரகிரிக்கோவையில் சாந்துப் புலவர் இச் செய்தியை உறுதிப்படுத்துகிறார்.

யாழ்ப்பாணத்தில் உள்ள ஒரு சிற்றூர் திருநெல்வேலி எனப்படுவது. அங்குதான் ஞானப்பிரகாச முனிவர் என்பவர் கி.பி. 1650 அளவில் வாழ்ந்தார். அவர் குன்றக்குடி ஆதீனத்தில் தங்கியிருந்து துறவு பூண்டார். அரிய நூல்கள் சிலவற்றை இயற்றியிருக்கிறார்.

இவ்வாதீனத்தைச் சார்ந்தபின் மேற்கூறிய ஞானப் பிரகாசமுனிவர் சித்தியாருக்கு சுபக்க உரை தந்தனர். இவ்வுரை சிவஞானமாபாடியத்திற்கு முன்னரே எழுந்தது. ஏனென்றால் ஞானப்பிரகாசர் உரையில் ''எடுத்து'' என்னும் சொற்குறித்து சிவசமவாதகண்டம் என மறுப்பு எழுதினார்கள். சிவஞான முனிவர் வஸ்ஸிரதண்டம் என்னும் பெயரிட்டு மறுப்பு எழுதி சமாதானத்தைக் குன்றக்குடி ஆதீனத்தார் கூறினர். இது குறித்து 1875இல் (யுவ ஆண்டு) வெளிவந்த சிவஞான சித்தியார் தத்துவ உரையை வெளியிட்ட கொன்றை மாநகரம் சண்முக சுந்தர முதலியார் பின்வருமாறு கூறுகின்றார். ''மறுப்புக்கள்

ஒவ்வோர் அபிமான வகையால் உண்டாயின அன்றி முதல் நூல் கருத்திற்கும் உரைக்கும் ஞானப்பிரகாசர் உரை மிகவும் ஒத்தே இருக்கின்றது''.

பெரியபுராணத்திற்கு மிகச் சிறந்த பதவுரை தந்தருளியவர்கள் இந்த ஆதீனத்தைச் சார்ந்த ஆறுமுகத்தம்பிரான் சுவாமிகளாவார்கள்.

மற்றும் ஆதீன அடியவர்கள் தெய்வசிகாமணி நான்மணிமாலை, சிற்குருபதிகம், அருணாசல தேசிகமாலை முதலிய நூல்களை இயற்றியுள்ளனர். பௌஷ்கர ஆகமத்திற்கு சிறந்தவிருத்தியும் ஞானப்பிரகாச முனிவர் செய்துள்ளார். வடமொழி நூல்கள் பலவற்றையும் இவ்வாதீனத்தைச் சார்ந்தவர்கள் படைத்துள்ளனர்.

இளங்கோவடிகளின் நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் பிழையற்ற பதிப்பு வருவதற்கு திரு. உ. வே சாமினாத ஐயரவர்கட்கு ஏடு கொடுத்துதவியதும், ஆறுமுகநாவலருக்குச் சிவிகை மரியாதை தந்ததும் இந்த ஆதீனம்.

குன்றக்குடி அடிகளார்

இந்த ஆதீனத்தில் 1949—இல் இளவரசு ஆகி 1952 முதல் 45—ஆவது பட்டம் குருமகாசந்நிதானமாக இருந்து வருபவர்கள் குன்றக்குடி அடிகளார் எனப்பெறும் தெய்வ சிகாமணி அருணாசல தேசிகர் ஆவார்கள்.

இவர்கள் தம் கல்வி நிலையங்களில் தமிழ்க் கல்விக்கும் தம் கோயில்களில் தமிழ்மொழிக்கும் சிறப்பிடம் தந்து வருகிறார்கள். தமிழ்ப் புலவர்களை இவர்கள் ஆதரித்து வருகிறார்கள். இவர்கள் தருமைக் கல்லூரியில் பயின்ற தமிழ்ப் புலவர் என்பது குறிப்பிடத்தக்கது.

தமிழ் அர்ச்சனை இயக்கத்தைத் தொடங்கியவர் குன்றக்குடி அடிகளாரே. கயிலைக் குருமணி என்னும் புகழ்ப் பெயர்பெற்ற தருமை ஆதீனம் 25 வது குருமகாசந்நிதானத்தின் ஆதரவுடன், குன்றக்குடி அடிகளார், தமிழ் அர்ச்சனை இயக்கத்தை மிகவும் உறுதியுடன் மேற் கொண்டார்கள். அது தொடர்பாக உயர்நீதி மன்றத்திலும், உச்ச நீதிமன்றத்திலும் தொடரப்பட்ட வழக்குகளிலும் பெரும் பங்கு கொண்டார்கள்.

சமயநெறிகளில் மக்களை இணைத்து மகிழ்விக்கவும் அவர்களுக்கு உரிய பணிகளைச் செய்யவும் தமிழக அரசின் ஓர் உறுப்பாக தெய்வீகப் பேரவை 13—6—1966 இல் தொடங்கப் பெற்று 1976 வரை செயல்பட்டது தமிழ் நாட்டிலுள்ள எல்லாத் திருமடங்களின் தலைவர்களும் இந்த அவையில் உறுப்பினராக இடம் பெற்றிருந்தனர். பேரவைக்கு ஈராயிரம் கிளைகள் இருந்தன. இப்பேரவையின் தலைவராக குன்றக்குடி அடிகளார் சில ஆண்டுகள் இருந்து வந்தார்கள். அக்காலத்தில் அவர்களுடைய பெருமுயற்சியால் தெய்வீகப்பேரவை பின்வரும் தமிழ்ப் பணிகளைச் செய்தது.

(1) பட்டமளிப்பு விழாக்களில் பட்டம் பெற்றவர்களுக்கு திருக்குறள் படிகள் வழங்கப் பெற்றன.

(2) 'அருளோசை' 'செய்திக் கதிர்,' என்னும் பெயர்களில் இரு திங்கள் இதழ்களைப் பேரவை வெளியிட்டது.

(3) இறைப் பற்றை வளர்க்கும் நோக்கத்துடன் அப்பரடிகள் ஆண்டாள், திருஞானசம்பந்தர் ஆகியோரைப் பற்றிச் சில வெளியீடுகளைச் சிறுவர்களுக்காக வண்ணப் படங்களுடன் அச்சிட்டுப் பல்லாயிரக்கணக்கில் பேரவை வழங்கிற்று.

(4) பேரவையின் மாநில மாநாடுகளை ஒட்டிச் சில மலர்களையும் திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டு மலரையும் இலக்கியமணம் கமழ, பேரவை வெளியிட்டது.

தமிழ்நாடுமுழுவதும் திருக்குறளைப் பரப்பப் பணிபுரிந்து வரும் திருக்குறள் கழகத்தின் மாநிலத் தலைவராக குன்றக்குடி அடிகளார் இருந்து வருகிறார்கள்.

பாரி வள்ளல் வாழ்ந்த பறம்பு மலையில் பாரிவிழாவை அடிகளார் இலக்கிய விழாவாக நடத்தி வருகிறார்கள்.

ஞானியார் அடிகள் போன்று நாவன்மை படைத்து, தம் புலமையாலும் பேச்சு வன்மையாலும் தமிழ் நாட்டிலும் கடல் கடந்த பல நாடுகளிலும் குன்றக்குடி அடிகளார் தூய தமிழைப் பல்லாயிரம் மேடைகளில் 1950 முதல் பரப்பிய வண்ணமாக இருக்கிறார்கள். இவர்களுடைய சொற்பொழிவுகள் நூலாக வெளிவந்துள:

'தமிழகம்' என்ற இதழை இவர்கள் சில காலம் வெளியிட்டு வந்தார்கள். சமயத்தோடு மொழிக்கும் இவர்கள் செய்து வரும் தொண்டுகள் பெரிதும் பாராட்டத்தக்கவை.

பட்டிமன்றத் தலைவர் என்ற நிலையில் அடிகளார் அள்ளி வீசும் சிந்தனைக் கதிர்களும் அவையினரைக் கவரும் வண்ணம் வழங்கும் தொடுப்புரைகளும் தொகுப்புரைகளும் ஈடு இணையற்றவை. வாதம் செய்யும் முறையால் காவி உடை உடுத்த வழக்குரைஞராயும் தீர்ப்பு வழங்கும் திறத்தால் சிறந்த நீதிபதியாகவும் இவர்கள் விளங்குவதைக் கண்டும் கேட்டும் மகிழ்பவர்கள் பட்டிமன்றத் தலைமைக்கு என்றே இவர்கள் பிறந்தவரோ எனக் கருதுவர்.

இந்த நூற்றாண்டின் மேடைப் பேச்சாளருள் விரல்விட்டு, எண்ணத் தக்கவருள் அடிகளார் ஒருவர். தாம் பேசிய கருத்துக்களைச் சாறு பிழிந்து தொகுத்து நிரல்படக்கூறி நினைவூட்டும் பாணி இவர்களுடைய தனிச் சிறப்பு.

நூல்கள்: வள்ளுவர் உலகம், குறட்செல்வம், குறள்வாழ்வு திருவள்ளுவர் காட்டும் அரசு, சொல்லமுதம், அமுதமொழிகள், முத்து மொழிகள், அடிகளார் பொன்மொழிகள், உவமை நலம் அருளியலும் அறிவியலும், சமய மறுமலர்ச்சி, அப்பர் அமுது, திருவாசகத்தேன், ஈழத்துச் சொற் பொழிவுகள், பெரியபுராணச் சொற்பொழிவுகள், பொங்கல் பரிசு, மண்ணும் விண்ணும், கவியரங்கில் அடிகளார் தலைவர் பெரியார்க்கு—விஞவிடை அற வழிகாட்டி புனித நெறி, வாழ்க்கை விளக்கு முதலியன.

நாடக நூல்கள்: கலங்கரை விளக்கு, புரட்சி பூதது வள்ளல் பாரி, பாரதத்தாய்.

நமது நிலையில் சமயமும் சமுதாயமும் என்ற தலைப்பில் அடிகளார் சென்னைப் பல்கலைக்கழகத்தில் நிகழ்த்திய அறக் கட்டளைச் சொற்பொழிவுகள் நூலாக வெளிவந்துள்ளன. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் அடிகளார் அறக் கட்டளைச் சொற்பொழிவுகள் செய்துள்ளார்.

## கோவிலூர்த் திருமடம்

தமிழ் நாட்டுத் திருமடங்களில் கோவிலூர்த் திருமடம் தனிப்பெருமை கொண்டது. சைவசித்தாந்தக் கொள்கைகளை விளக்க, பல மடங்கள் உள. அவ்வாறே வைணவக்கொள்கைக்கும்

மடங்கள் இயங்குகின்றன. ஆனால் வேதாந்தக் கொள்கைக்கு விளைநிலமாக அமைந்த மடம், கோவிலூர்த் திருமடமே.

இஃது ஒரு தாய் மடம். இதற்குப் பல சேய் மடங்கள் தமிழகத்தில் உண்டு. வடநாட்டிலும் இதற்குச் சார்பு மடங்கள் உண்டு என்பர்.

வேதாந்தக் கொள்கை, மிகப் பழைமை வாய்ந்தது. அதனை விளக்கும் நூல்கள் பல வெளிவந்துள்ளன. ஆயினும் தமிழ்நாட்டு வேதாந்தம் எத்தகையது என்பதனைச் சிறப்பாக விளக்க அவை தவறின. அவ்வாறு விளக்க வேண்டுமாயின் கோவிலூர்த் திருமடம் தந்த நூல்களையும் நுட்பம் வாய்ந்த உரைகளையும் படித்து அன்னமென நின்று இந்திய வேதாந்தத்தையும் தமிழகவேதாந்தத்தையும் பிரித்து உணர்ந்து பயிலுவதல் முறையும் நிறையும் ஆகும்.

தென்னாட்டுத் திருமடங்கள் பலவும் காலப் பழமை வாய்ந்தன. வரலாற்று மூலங்கள் கொண்டன. கோவிலூர் மடமோ இரண்டு நூற்றாண்டுகளுக்கும் உட்பட்ட கால வரலாறே உடையது; ஞான தேசிகர் ஒன்பதின்மர் அருளாட்சி செய்தபின் ஒன்பதாம் குரவராக அருள்மிகு அரு.இராமநாத சுவாமிகள் அவர்களைத் தலைவராகக் கொண்டு திகழ்வது.

கோவிலூர் வரலாற்றைப் புராண அடிப்படையில் காட்டுவன இருநூல்கள். ஒன்று, திருவிடைமருதூர், பிரம்மஸ்ரீ பிச்சு சாத்திரிகள் பாடிய சமிவனமான்மியம். மற்றொன்று, 'புராணக் கம்பர்' என்று புலமையுலகம் போற்றிய மகா வித்துவான் திருசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய கோவிலூர்ப் புராணம். இவை இரண்டும் திருமட வரலாறு மட்டும் கூறுவன அல்ல; தல வரலாறு பாடுவன.

தமிழ் நாட்டு மடங்கள், தமிழன்றி வாழா. அவை மக்களுக்கு நல்வழி காட்டவும் துறவிகளுக்கு வீடுபேறு கூட்டவும் தோற்றுவிக்கப் பெற்றவை. இத்தகைய குறிக்கோள்மிக்க அருள் நிலையங்கள், தாய்மொழியை எவ்வாறு புறக்கணிக்கும்? எனவே அவை தமிழையே விளக்க மொழியாகப் பயிற்று மொழிபோல் கொண்டன.

வேதாந்த மடங்கள் "யானே எங்குமாம் பிரமம்" என்ற முடிநிலைக் கொள்கையை உயிர்க் கொள்கையாக உடையன.

'வான மல்லேன் வனியல்லேன்
அழல் நீ ரல்லேன் மண்ணல்லேன்
ஞான மல்லேன் வினையல்லேன்
நானே சிவமென்று எண்ணினோன்
ஊன மில்லா ஒரு சிவமே யாவன்
இவ்வாறு உன்னா தான்
ஈன மெல்லா முடைய உடம்
பெடுத்துச் சுழலுமெஞ் ஞான்றும்''

என்ற வீர சைவப் புலவர் சிவப் பிரகாசர், இக்கொள்கையைத் தெளிவுற விளக்குவர். இதனைக் கற்றார்க்கும் மற்றார்க்கும் உணர்த்திக் கடைத் தேற்றம் செய்தற்காகத் தோன்றியமடமே கோவிலூர் மடம். ஆதலின் வேதாந்தக் கருத்துக்கள், இம் மடத்தின் அறிஞர்களால் எளிமைப்படுத்தப் பட்டன.

வேதாந்தக் கருத்துக்கள் வடமொழியிலேயே எழுதப் பட்டிருந்தன. கி.பி.13-ஆம் நூற்றாண்டு முதல் அவை தமிழ்ப் படுத்தப்பட்டன. கி.பி.15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப் பெறும் தத்துவராயசுவாமிகள், தமிழ்நாட்டு வேதாந்தி களுக்குத் தாய் போன்றவர். இவர் கற்றுத்துறைபோகி முற்றத் துறந்து வேதாந்த நுட்பமிக்க கருத்துக்கள், பல அமைய 20 நூல்கள் பாடியவர். இந் நூல்களைக் கோவிலூர்த் துறவிகள், கொள்கை நூல்களாக ஏற்பர்.

தத்துவராயருக்கு இரண்டு நூற்றாண்டுகள்முன் கி.பி.13 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் பட்டனார் என்பார். இவர் வேதாந்த நோக்கில் பகவத் கீதையைத் தமிழில் பாடினார். இதுவே தமிழில் தோன்றிய முதல் வேதாந்த நூல் என்பர், இலக்கிய வரலாற்றாசிரியர் அறிஞர் மு.அருணாசலம். இந் நூலுக்கு உரை வரைந்த பெருமை கோவிலூர் மடத்திற்கு உண்டு. இந்நூலுக்குப் பழைய உரைகள் இருப்பினும் விளக்க மாகவும், வடமொழிக் கருத்துடன் உறழ்ந்தும் எழுதிய இம் மடத்தின் உரையே இப்போது எல்லாராலும் பயிலப் படுகின்றது.

வசிட்டர் இராமபிரானுக்கு உபதேசித்தது ஞான வாசிட்டம் என்பர். இந்நூலின் தமிழாக்கத்திற்குக் கோவிலூர் மடம் நித்தியானந்த சுவாமிகள் உரையெழுதியுள்ளார். இப் பேருரையினை அனைவரும் போற்றுவர்.

பிரும்ம சூத்திரக் கருத்துக்களை விளக்கும் வகையில், 'கைவல்லிய நவநீதம்' என்னும் செய்யுள் நூலை நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் பாடியுள்ளார். இந்நூலுக்கு அருமையான உரை வரைந்தவர் பொன்னம்பல சுவாமிகள். இவ்வுரை ''தத்துவார்த்த தீபம்'' என்று கூறப்பெறும். சமய உரைகளில் சிவஞான போதத்திற்குச் சிவஞான முனிவர் எழுதிய உரை போன்றது இது. இவ்வுரையில் வடசொற்கலப்பு மிகுதி; அதற்குக் காரணம் சமய விளக்கமே. வேதாந்தக் குறியீடுகள் பல வடமொழியன. ஆதலின் இவ்வுரையில் மணிப் பிரவாள அமைப்பு, ஓரளவு இடம்பெறுகின்றது. இவ்வுரை, தமிழ்மரபு கொண்டது உரையாசிரியர் வழியது, சொல்லுக்கு எழுதும் விளக்கங்கள் சுவை பயப்பன.

''யாவரும் முடிமேற் கோடலானும், யாவரினும் பெருமையுடைமையானும், அபக்குவர் அண்மைக்கணிருந்தும், அடையாமையானும், பக்குவர் சேய்மைக்கணிருந்தும் தேடி வந்தடைதலானும், 'பதும பாதம்' என்றார்''.

இப்பகுதியைப் படிக்கும் போது, பழைய உரைகள் நினைவுக்கு வருகின்றன.

கோவிலூர் மடம், தமிழுக்குச் செய்த தொண்டுகளில் உரைத்தொண்டு மறக்க முடியாதது. வேதாந்தக் கருத்துக்களை இவ்வுரைகள் விளக்கின.

கோவிலூர் மடத்தைச் சேர்ந்தவர்கள், செய்யுள் பாடும் ஆற்றல் நன்கு கைவரப்பெற்றவராக இருந்தனர். இம்மடத்தைச் சேர்ந்த மா.சோமசுந்தர சுவாமிகள், மதுரை மீனாட்சியம்மன் மீது சிற்றிலக்கியங்கள் பலவற்றைப் பாடியுள்ளார்.

கோவிலூர் ஆதீனத்தின் முதற்குரவரான ஆண்டவர் ஓதாதுணர்ந்த ஞானி; பொருள் வைத்த சேரியில் உகந்த லிங்க தேசிகரால் ஞானம் கைவரப்பெற்ற அருளாளர். இவருடைய பாடல்கள், தெளிந்த நீரோட்டம் போன்றன. வேதாந்த உரைகளில் வட சொற்கள் மிகுந்துள்ளனவே என ஏங்குவாருக்கு இத்துறவிகள் பாடிய தமிழ்ப் பாடல்கள், 'குளிர் தருவாய்' அமைவன.

ஆண்டவர் அவர்கள், பிள்ளையார் பட்டிக் கற்பக விநாயகர்மீது பாடிய பாடல்:—

முற்பலத்தில்யான் புரிந்த தீவினைகள் முழுதகற்றும்
முகத்தி னானை
அற்பசுகத் தெனையழுத்தா ஐங்கரனை பிற் பவமுந்
அகற்றும் கோவை
சொற் பழுது புரியாத வணிகர்குலம் தினம் பணியும்
துணைத்தா ளானைக்
கற்பகத்தின் மிடிய கற்றும் கற்பகமாம் நாயகனைக்
கருத்தில் வைப்பாம்.

இவ் வறுசீர் விருத்தம் சந்த மிடுக்குடன் அமைந்துள்ளது. இப்பாடல். "சொற்பழுது புரியாத வணிகர் குலம்' என்னும் தொடர், எவ்வளவு பெருமைக்குரியது! நாட்டுத் தனவணிகர்கள் நாணயமே மானமாகவும் கற்பாகவும் கொண்டவர்கள். அவர்களைச் 'சொற் பழுது புரியாத வணிகர் குலம்' என்று அருளாளர் பாடினார்," சொல்லிலும் இலாபம் கொள்வார், என்று பாடிய திருவிளையாடற் புராண ஆசிரியர் கூற்றையும் ஆண்டவர் கூற்றையும் ஒப்பு நோக்கின், ஆண்டவர் கூறிய அழுத்தம் பெறப்படும்.

கோவிலூர் மடத்தில் நிர்வாகத்திற்குத் தரும் முதன்மை மிகக் குறைவு, ஞான அறிவுக்கே அவர்கள் சிறப்பிடம் தந்தனர். பாடம் கேட்டல் என்பது, கோவிலூர் மடத்திற்கு உரிய வழக்கு. துறவிகள் இரு வரிசைகளிலும் அமர, ஞானத் தலைவர் நடுவே வீற்றிருக்க இரவு ஏழு மணிக்குப் பாடம் தொடங்கும். இக்காட்சி கண் கொள்ளாக் காட்சி. கோவிலூர் மடத்தில் ஏழாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த மகா தேவ ஞான தேசிக சுவாமிகள், பாடம் சொல்லும் முறையும் அதனைக் கடைப் பிடியாகக் கொண்ட உறுதியும் போற்றுதற் குரியன. அவர்களின் மாணவர்களே மிகப் பலர். எனவே பாடஞ் சொல்லியும் தமிழ் வளர்த்தனர். பாடம் கேட்டவர்கள் அவற்றைப் பற்றியே சிந்திப்பர். இறைவனுக்குப் பனிமலர் எடுக்கும் போதும் அவற்றை மாலையாகத் தொடுக்கும் போதும் வேதாந்த பாடங்கள் பற்றியே பேசுவர்; திருவாசகம் முதலிய பாக்களையே ஓதுவர்.

"திருவும் கலைவா ணியும் அன்பின்
சேவித் தெதிர்நின் றுளமகிழத்
தெய்வ மகளிர் பற் பலரும்
செங்கை குவித்துத் தினம் போற்றக்

குருவினருளால் தத்துவத்தின்
கூட்டம் கழித்துக் குறிப்புணர்ந்தோர்
கூடிக் குலவித் தமிழ் வேதம்
கொழிக்கும் திருவாசகம் பாடித்
தெருளு மனம் பூரிப்ப''

நிற்கின்ற காட்சியைத் திரு நெல்லையம்மை பிள்ளைத் தமிழ் காட்டும். கோவிலூர் அடியார்கள், தமிழ் வேதமாம் திருவாசகத்தில் அழுத்தம் மிக உடையரர்கள்.

கோவிலூர்த் திருமடம், வேதாந்த உரைகளாலும், செய்யுளாலும். வேதாந்தக் கல்வியாலும் தமிழ் வளர்த்த நிலையம். தமிழில் வேதாந்தத்தை அறிய வேண்டுமாயின் கோவிலூர் மடமே சரண்.

வசிட்டர் இராமபிரானுக்கு உபதேசித்த ஞானவாசிட்டம் என்னும் நூலின் தமிழாக்கத்தோடு கோவிலூர் மடத்து நித்தியானந்த சுவாமிகள், சம்சார தரணி என்னும் வியாக்கியானத்தின் மொழி பெயர்ப்பையும் இணைத்துள்ளார். கோவிலூர் ஸ்ரீ சுப்பையா ஞான தேசிகர், இந்நூலுக்கு வீரசேகரம் என்ற பேருரையை ஆக்கியுள்ளார்.

சொர்ணநாதபுரம் பழனியப்ப அய்யா, பின்வரும் நூல்களைப் படைத்துள்ளார்.

1 வெயிலுகந்த விநாயகர் பதிகம்
2 பழனிமலைச் செட்டியார் மாலை
3 கல்லுளி மாலை
4 பொன் மாரி அந்தாதி
5 சீரலைவாய்ப் பதிகம்
6 பழனிப் பதிகம்
7 விடுதிக் கவிகள்
8 தோத்திரப் பாமாலை
9 தனிப் பாடல்கள்
10 ஆண்டவர் முத்துராமலிங்க ஞான தேசிகர் சரித்திரம்.

கைவல்ய நவநீதத்திற்கு 'பதசாரம்' என்ற உரையை, துறவு ஆண்டவர் எழுதியுள்ளார்கள். அவர்கள் பின்வரும் நூல்களைத் தக்காரைக் கொண்டு தமிழில் மொழி பெயர்த்துள்ளார்கள்.

1 சமிவன க்ஷேத்திர மான்யம்
2 விவேக சூடாமணி
3 ஜீவன் முக்தி விவேகம்
4 சூத சம்ஹிதை முக்தி கண்டம்
5 சூத கீதை
6 ரிபு கீதை

நெற்குப்பையில் வாழும் இளையாற்றக்குடி கழனிவாசல்குடி நகரத்தார் நடத்தி வரும் வைகாசி விசாகத்தின் பொன் விழா 7—6—1961 ல் கோவிலூர் ஆதீன கர்த்தர் 9—ஆவது பட்டம் ஸ்ரீ—ல—ஸ்ரீ இராமநாத ஞான தேசிகர் அவர்கள் தலைமையில் நடை பெற்றது. அப்போது கோவிலூர் ஆதீனத்தின் சார்பில் சுவாமிகள், புகழ் பெற்ற எழுத்தாளரும் கவிஞருமான மீ. ப. சோம சுந்தரம் அவர்களுக்கும் சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களுக்கும் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்கள்.

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை எழுதியுள்ள கோவிலூர்ப் புராணம் பாயிரம், திரு நாட்டுப் படலம், திரு நகரப் படலம், நைமிசப் படலம், தல விசேடப் படலம் வீர பாண்டியன் சமிவனம் அடைந்த படலம், மாயப்புலி நீங்கிய படலம், கொற்ற வாளீசப் படலம், உபநிடதப் பொருளுரைத்த படலம், மதுப்பிரியர் துதியுரைத்த படலம் சுவேதராசப்படலம், அன்னதான மகிமை உரைத்த படலம், சுதன்மை அருள் பெறு படலம், தீர்த்த மகிமைப் படலம், சாபவிமோசனப் படலம் ஆகிய பதினைந்து படலங்களையும் 849 செய்யுட்களையும் உடையது.

வீரசேகர ஞான தேசிகரிடம் பயின்ற புலவர் பலர் ஆவர். அவர்களுள் அடைக்கல அடிகள் குறிப்பிடத்தக்கவர்; இவர் தஞ்சை குப்புசாமி ராசு மொழி பெயர்த்த 'பால போதம்' என்னும் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் அளித்துள்ளார்.

கோவிலூர்ச் சிதம்பர சாமியின் மாணவரும் துறவியுமான இராமசாமிச் சாமி (19 ஆம் நூ) நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களை ஆராய்ந்து அச்சிட்டுள்ளார். அவற்றுள் சில வருமாறு:

(1) ஒழிவில் ஒடுக்கம் (2) இலட்சணா விருத்தி (3) சீவன் முக்திப் பிரகரணம் (4) நானாசீவ வாதக் கட்டளை (5) கீதாசாரத் தாலாட்டு (6) சசிவர்ண சரித்திரம் (7) சசிவர்ண போதம் (8) துவாதச நாம சங்கீர்த்தனம். ஐந்திலக்கணங்களையும் ஒன்று சேர்த்துப் பஞ்சலட்சணம் என்னும் பெயருடன் பதிப்பித்துள்ளார். கோவிலூர் மடத்தில் இருந்த பெருவாரியான ஏட்டுச் சுவடிகளை எடுத்து அச்சிட்டவர் இவரே.

3. திருப்புவனம் வேதாந்த மடம்

இங்கு 20-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில்'இந்தமடத்தை நிறுவிய காசிநாதாந்த ஞானாச்சாரிய சுவாமிகள் வேதாந்த சாத்திரங்களை கற்பித்தும் மொழிபெயர்த்தும் நூற்றுக்கு மேற்பட்ட நூல்களை வெளியிட்டுள்ளார். இவர்கள் அரிதின் முயன்று திரட்டிய நூலகம் இவர்கள் காலத்திற்குப்பின் கோவிலூருக்கு கொண்டுவரப் பெற்றது.

4. சிவானந்த சுவாமிகள் வேதாந்தமடம் (இளையான்குடி)

இது கோவிலூர் மடத்தின் கிளைமடம். இந்த மடத்தின் குரு முதல்வர் ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவானந்த ஞான தேசிக சுவாமிகள் இயற்றிய நூல்கள் வருமாறு.

அச்சு இயற்றியவை

1 சற்குரு பாமாலை
2 கொடுமளூர் திருப்புகழ்
3 இளையான்குடி திருப்புகழ்
4 தெக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம்
5 சற்குமது சப்தரச மஞ்சரி
6 மதுரை, குட்டைய ஞானதேசிக ஸ்வாமிகள் மீது ஸ்தோத்திரம்
7 இளையான்குடி மாற நயினார் மீது சரித்திர ஸ்தோத்திர வரலாறு

அச்சு இயற்றவேண்டியன

1 அன்பு நெறிவிளக்கம் (என்ற) ஞான நெறி விளக்கம்
2 நால்வர் திருமணி மாலை
3 சிவலிங்க ஸ்தோத்திரம்

4 ஸ்தோத்திர கதம்பம்
5 சற்குரு பாமாலை
6 அகிலாண்டேஸ்வரி ஸ்தோத்திரம்
7 திருமூலநாதர் மீது திருத்தாண்டகம்
8 சற்குரு ஸ்தோத்திரம்
9 சற்குரு அனுபூதி
10 ஸ்ரீவானவந்தம்பாள்மீது அந்தாதி
11 ஸ்ரீநாகநாத சுவாமிமீது அந்தாதி

## (5) நிரம்பவழகிய தேசிகர் ஆதீனம், துழாவூர்.

இவ்வாதீனம் குன்றக்குடி என்னும் தலத்தின் தெற்கே அமைந்துள்ளது. துழாவூர் ஒரு சிற்றூர். இச்கிராமத்திற்குச் செல்ல நல்ல பாதை முதலியனதோன்றுமில்லை. குன்றக்குடியிலிருந்து கால்நடையாகத்தான் செல்ல வேண்டும்.

இவ்வாதீனத்தார் இல்லறவாசிகளே, குடும்பத்தின் முதற்பிள்ளையே தலைவராக வருவது மரபு. இவர் தங்களிடம் வரும் நாட்டுக்கோட்டை நகரத்தார் பெண்களின் தீட்சா குருவாக விளங்குகிறார்கள். 1863 இல் அன்பளிப்பாககொடுக்கப்பட்ட 100 ஏக்கர் நிலங்களுள்ளன. அந்நிலங்களின் உரிமையை ஆதீனத்தார் ஆண்டு வருகின்றனர் இவர்கள் ஆன்மார்த்த வழிபடுகடவுள் வாஞ்சீஸ்வரர் மங்களாம்பாள்.

இவ்வாதீனத்தை தோற்றுவித்தவர் நிரம்பவழகிய தேசிகர்என்பவர். இவர்தம் வரலாற்றை அபிதானசிந்தாமணி, தமிழ்ப்புலவர் சரித்திரம், திருப்பரங்கிரிப்புராண முகவுரை முதலியன வெவ்வேறு விதமாகக் கூறுகின்றன. அவற்றினின்றும், செய்திகளை ஒருவாறு சுருக்கிக் கூறலாம்.

நிரம்பவழகிய தேசிகர் சோழ மண்டலத்தில் திருமறைக்காட்டில் சைவ வேளாளர் குருமார்களாகிய அபிஷேகத்தர் குலத்தில் தோன்றியவர். இவரது இயற்பெயர் நிரம்பவழகியர். அவ்வூரிலுள்ள அபிஷேகத்தர் யாவரும் வடமொழி, தமிழ் மொழி இரண்டிலும் புலவராக விளங்குறார்கள். இவரும் அவ்வூரிலேயே இருமொழியும் பயின்றார். இவர் தம் மரபுக்கேற்றபடி சிவதீட்சை முதலியன பெற்று சைவசித்தாந்த சாத்திரங்களைக்கற்கவிரும்பி அக்காலத்தில் திருவாரூரில் சிறப்புற்று விளங்கிய ஞானப்பிரகாசரையடைந்து அவற்றைக் கற்று உணர்ந்தார்.

நிரம்பவழகியர் இலக்கண இலக்கியங்களிலும் சைவசாத்திரங்களிலும் சிறந்து விளங்கினார். சேதுபுராணம் என்னும் நூலை இவர், சேதுபதியின் வேண்டுகோளுக்கிணங்க, பாடியருளினார். திருப்பரங்கிரிப் புராணம், திருவருட்பயன் உரை, சிவஞானசித்தியார் உரை முதலியனவும் இவர் இயற்றியனவே.

துழாவூரில் நாட்டுக்கோட்டை நகரத்துப் பெண்களின் தீட்சா குருவாக இருந்து வந்திருக்கிறார். இவ்விடத்திலேயே ஒரு மடாலயத்தையும் நிறுவினார். இவர் பரம்பரையினரே இன்றும் இவ்வூரில் வசித்து வருகின்றனர்.

இவர்களுக்குப்பின் வந்தவர்கள் யாரும் சிறப்பான நூல்களோ செயல்களோ செய்ததாகத் தெரியவில்லை. இவருடைய காலம் கமலஞானபிரகாசர் வாழ்ந்த 16ஆம் நூற்றாண்டாகும். மேலும் இவருடைய சீடரான சம்மந்த முனிவர் என்பவர் 1592 -இல் திருவாரூர்ப்புராணம் என்னும் நூலியற்றி உள்ளார். இதனாலும் இவர் 16ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர் என அறியலாம். இவர் இயற்றிய நூல்களின் விவரம் வருமாறு.

அ. சேதுபுராணம்

திரு இராமேசுவரத்தில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள இறைவன் பெருமை முதலியவற்றைக் கூறும் நூல் நாற்பத்தொன்பது சருக்கங்களையும் 3438 விருத்தங்களையும் உடையது. இதனை யாவரும் கற்றுணரக்கூடியநிலையில் எளியசொற்களால் பாடியுள்ளார். பாக்கள் சொல்லின்பமும் பொருளின்பமும் உடையன. இப்போதும், கோயிலின் முன், இந்நூல் ஓதப் பெறுகிறது.

ஆ. திருப்பரங்கிரிப் புராணம்

இது திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் பெருமையைக் கூறும் நூல். பதினோரு சருக்கங்களையும் 526 விருத்தங்களையும் உடையது.

இ. திருவருட் பயன் உரை

கொற்றவன்குடி உமாபதிசிவாச்சாரியார் செய்த நூலுக்கு ஒரு பொழிப்புரை.

ஈ. சிவஞான சித்தியார் உரை

சிவஞான சித்தியார் உரைகளுள் இவர் செய்த உரையை மற்ற சித்தியாருரை ஆசிரியர்கள் பலவிடங்களில் மறுத்து உரைக்கக் காண்கின்றோம்.

துழாவூர் மடம் — இன்று

நிரம்ப வழகிய தேசிகருக்குப் பின் முறையாக யார் யார் பட்டதிதுக்கு வந்தனர் என்று திட்டமாக கூறுதற்குரிய சான்று கள் இல்லை.

துழாவூர் மடம் என்பது நகரத்தார் பெண்கள் உபதேசம் கேட்பதற்காக ஏற்பட்டது.

"நகரத்தார் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து வந்தபோது ஆடவர் எண்ணிக்கைக்கு ஏற்பப் பெண்கள் இல்லாததால் வேளாளப் பெண்களைத் திருமணம் கொள்ள விரும்பினர். அவ்வாறு திருமணம் செய்து கொடுப்பதற்கு வேளாளர்கள் ஒரு நிபந்தனையுடன் இசைந்தனர். துழாவூரிலுள்ள தங்கள் மடத்தில் நகரத்தார் பெண்கள் உபதேசம் கேட்டுக்கொள்ள வேண்டும் என்பதே அந்த நிபந்தனை" என்பது செவிவழிச் செய்தி.

(குறிப்பு: நிரம்ப அழகிய தேசிகர் ஆதீனம் பற்றிய தகவல்களுக்கு ஆதாரம் சென்னை லிங்கி செட்டித் தெருவில் உள்ள மறைமலை அடிகள் நூல் நிலையத்தில் உள்ள கையெழுத்துப்படி)

# 6. குடைவரைக் கோயில்கள்

குகைக் கோவில்கள் அமைத்த பெருமை பல்லவர்க்கு உண்டு. பல்லவர் ஆட்சியின் தலைநகராக இருந்த இடங்கள் நீங்கலாக, மிகுதியான குடைவரைக் கோவில்கள் செட்டி நாட்டிலேயே காணப்பெறுகின்றன.

## தேனி மலை

தேனிமலையில் குகைக் கோவில் உளது. இதன் சுவரில் ஜெயினக் கடவுளாகிய அர்ஹத்தின் உருவம், அவர் தலையில் மூன்று குடைகளுடன் இருக்கிறது. தேனூர்மலை என்பதே தேனிமலை; அருகேயுள்ள ஊரின் பெயர் தேனூர். தேனூர் மலை ஐங்குறுநூற்றில் குறிக்கப்பட்டிருக்கிறது.

## மலையக்கோவில்

நற்சாந்துபட்டியை அடுத்த மலையக்கோவிலில் பல்லவ கிரந்தத்தில் கல்வெட்டொன்று இருக்கிறது. இங்குள்ள குகைக் கோவில் முதலாம் மகேந்திரவர்மன் காலத்தில்கட்டப்பெற்றது

மலையடிப் பட்டியில் எட்டாம் நூற்றாண்டு ஓவியங்கள் உள்ளன. இவற்றின் சிறப்பைப் பற்றி கல்கத்தா பல்கலைக் கழகத்து நுண்கலைப் பேராசிரியர் நிகர் ரஞ்சன் ரே என்னும் அறிஞர் பாரதிய வித்யாபவன் வெளியிட்டுள்ள *History and Culture of the Indian People Vol.3.* என்னும் நூலில் எழுதியிருக்கிறார்.

## திருமெய்யம்

திருமெய்யத்திலுள்ள கல்வெட்டுக்கள் பல்லவர்காலத்தில் ஏற்பட்டன.

## குடுமியான்மலை

குடுமியான் மலையில் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த பல்லவ மகேந்திரவர்மனது இசைவிளக்கக் கல்வெட்டு வரலாற்றுப் புகழ் பெற்றதாகும். அங்குள்ள குடைவரைக் கோவில் அற்புதமான வேலைப்பாடுடன் அமைந்தது.*

---

*விவரம் *Administration & Social Life Under the Pallavas, Dr. Meenakshi* என்னும் ஆராய்ச்சி நூலில் காண்க.

### பிள்ளையார் பட்டி

நகரக் கோவில்களுள்ள ஊர்களில் ஒன்றான பிள்ளையார் பட்டியில் பல்லவர் அமைத்த குடைவரைக்கோவில் இருக்கிறது. கி.பி. 630 முதல் 668 வரை ஆண்ட முதலாம் நரசிம்மவர்மன் காலத்தில் இத்திருப்பணி நிகழ்ந்திருக்கக் கூடுமென ஆராய்ச்சி யாளர் கம்பனடிப்பொடி கருதுவார். இக்கோவில் 13 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பிள்ளையார் பட்டிக் கோவில் நகரத்தார்களுக்கு உரிமையாயிற்று.

### குன்றக்குடி

குன்றக்குடியில் குடைவரைக் கோவில் ஒன்று இருக்கிறது.

### பூங்குன்றம்

மகிபாலன்பட்டி — நெற்குப்பைச் சாலையிலுள்ள பூங்குன்றத்திலும் புதுக்கோட்டை நகரத்துத் திருக்கோகர்ணத் திலும் பிற இடங்களிலும் குடைவரைக் கோவில்கள் உள்ளன.

# 7. சோழர் காலம் (கி. பி. 900-1300)

சோழ மன்னர்களுக்கும் நகரத்தார்களுக்கும் மிகுதியான தொடர்பு இருந்தது. மனுநீதிச் சோழராசன் காலம் முதல் பூவந்திச் சோழன் காலம் வரை, நகரத்தார் காவிரிப்பூம் பட்டினத்தில் மிகச் சிறப்பாக வாழ்ந்து வந்தனர். இன்றைய அமெரிக்க நாட்டில், சிறுபான்மையினரான யூதர்களுக்கு அந்த அரசிடம் உள்ள செல்வாக்கை உவமையாகச் சொல்லலாம். நகரத்தார் எண்ணாயிரம் குடும்பத்தார் பூம்புகாரில் வடக்குத் தெருவில் வாழ்ந்தனர் என்பது வரலாறு. சோழ மன்னர்க்கு மகுடம் சூட்டும் உரிமையையும் இச்சமூகத்தினர் பெற்றிருந்த னர் என்பர்.

## வெளிநாடுகளுடன் தொடர்பு

இராஜராஜ சோழனுடைய காலத்தில் (கி.பி. 988-1014) நகரத்தார் மத்தியதரைக்கடலினையடுத்த நாடுகளுக்குச் சென்று வியாபாரம் செய்தனர் என்று (எகிப்தில் கிடைத்து இப்போது பாரிஸ் மாநகரிலுள்ள லூவர் பொருட்காட்சி மண்டபத்தில் வைக்கப் பெற்றுள்ள) படங்கள் சிலவற்றிலிருந்து மறைமலை அடிகளார் முடிவு செய்துள்ளார்.

முதற் குலோத்துங்கசோழன் காலத்தில் திசையாயிரத்து ஐந்நூற்றுவர் சுமத்திராவுக்குச் சென்றிருந்ததாகச் சுமத்திராத் தீவிலுள்ள கல்வெட்டுக்களின் வாயிலாக அறிகிறோம்.*

சோழர் காலத்தில் தமிழ்நாட்டிற்கும் ஈழநாட்டிற்கும் இடையே அமைந்த தொடர்பு செட்டிநாட்டுத் துறைமுகங்களான தொண்டி, பாசிப்பட்டினம் வழியேயாகும். பாண்டியர் காலத்தில் இத்துறைமுகங்கள் சிறப்புற்றிருந்ததை இத்தாலிய யாத்திரிகரான மார்கோ போலோ எடுத்துக் கூறியுள்ளார். அவர் தமிழ்நாட்டைப் பற்றி எழுதி வைத்துவிட்டுப் போயுள்ள விவரங்கள் யாவும் இராமநாதபுர மாவட்டத்தில் சின்னாட்கள் அவர் தங்கியிருந்தபோது சேகரித்தவையே.

---

* *LOBOE TOEWA (SUMATRA)* கி.பி. 1088.
விவரம் கே ஏ. நீலகண்ட சாத்திரியார் எழுதிய 'சோழர்' இரண்டாம் தொகுதி. முதற்பகுதியில் 421, 440 ஆம் பக்கங்களில் காண்க.

## கேரள சிங்க வளநாடு

செட்டி நாட்டின் சில பகுதிகள் கல் வாச நாடு என்றும் சில பகுதிகள் கேரள் சிங்க வளநாடு என்றும் இக்காலத்திலும் இசைவுப் பிடிமானங்களில் எழுதப்படுகின்றன. இப் பெயர்கள் செட்டிநாடு சுங்கமில்லாச் சோழநாட்டின் ஒரு பகுதியாக இருந்தபோது சோழ அரசர்களால் வழங்கப் பெற்றவை. சோழ மன்னர்கள் ஒவ்வொரு மண்டலத்தையும் பல வளநாடுகளாகப் பிரித்திருந்ததாகவும், ஒவ்வொரு வளநாடும் இரண்டிரண்டு பேராறுகளுக்கு இடையில் அமைந்திருந்த நிலப்பரப்பாகும் என்றும் "முதற்குலோத்துங்க சோழன்" என்னும் நூலில் டி.வி சதாசிவபண்டாரத்தார் எழுதியிருக்கிறார். இதை நோக்க கேரள சிங்க வளநாடு என்பது வெள்ளாற்றுக்கும் வைகை ஆற்றுக்கும் இடையிலுள்ள நிலப்பரப்பைக் குறித்திருக்கக்கூடும்

குலோத்துங்க சோழன் காலத்திலேயே நார்த்தாமலை ஏற்பட்டது. நகரத்தார் மலை என்பதே நார்த்தா மலை என மருவி வழங்கி வருகிறது. வணிகர் பலர் இம் மலை மீதே வாழ்ந்தனர்.

பொன்னமவராதிக்கு அருகேயுள்ள நகரப்பட்டிக்குச் செல்லும் வழியிலுள்ள அம்மன் குறிச்சியில் சோழர் கோயில் ஒன்று இருக்கிறது. இதைப் பற்றிப் பிற்சேர்க்கையில் கூறியுள்ளோம்.

பொன்னமவராவதி- மேலைச்சிவபுரி சாலையிலுள்ள ஏனாதியில் சோழர் காலத்துச் சிவன் கோவில் இருக்கிறது. பொன்னமராவதியிலும் சோழ மன்னர் கட்டிய சிவன்கோயில் ஒன்று உண்டு.

கொப்பனா பட்டியிலிருந்து கூழிபிறை செல்லும் சாலையில் சுந்தரம் என்னும் சிற்றூர் உள்ளது. இங்குள்ள தான்தோன்றி ஈசுவரர் கோவிலிலுள்ள இராஜராஜ சோழன் காலத்துக் கல்வெட்டு இக்கோவிலுக்கு நகரத்தார் பொன் வழங்கியதைக் கூறுகிறது.

## பிற தொடர்புகள்

இராஜராஜ சோழன், குலோத்துங்க சோழன் ஆகிய இருவருடைய கல்வெட்டுக்களும் குன்றக்குடியில் உள்ளன,

சோழர் காலத்தில் சாளுக்கியர் ஆட்சிக்குட்பட்ட நாடு களுக்கு நகரத்தார் சென்று வாணிகம்செய்வாராயினர். அதன் பயனாக "வராகன்" என்னும் நாணயம் தமிழ் நாட்டுக்கு வந்தது. அதன் மதிப்பு ரூ 3.50. இன்று அந்த நாணயம் செலா வணியில் இல்லாவிட்டாலும், அச்சொல் செலாவணியாக இருந்து வருகிறது. ஒருவருக்கு ஓராயிரம் வராகன் சம்பளம் என்றால், (மூன்று ஆண்டுகளுக்கு) ரூ 3, 500 ஊதியம் என்பது பொருள்.

சோழர்களுடைய முறையைப் பின்பற்றி, இக்காலத்தி லும் செட்டிநாட்டில் நகரக் கூட்டங்கள் நடைபெற்று வரு கின்றன; வட்டகை, கரைஎன்னும் பிரிவுகளும் நிலவுகின்றன.

சோழர் பயன்படுத்திய "நாய்ச்சியார்" என்னும் சொல் செட்டிநாட்டில் வழக்கத்தில் இருக்கிறது. பெண் மக்களுக்கு நாச்சி, நாச்சியார் அம்மை என்றும் ஆடவர்க்கு நாச்சியப்பன் என்றும் பெயர் இடுவர். "உக்கிராணம்" என்னும் சொல்லைப் பண்டகசாலை என்னும் பொருளில் பாமரரும் பயன்படுத்தி வருகின்றனர். "பெண்டுகள்" என்னும் சொல், மனைவி என்னும் பொருளில் வழங்கி வருகிறது. இச்சொல், முதல் இராஜராஜ சோழனுடைய கல்வெட்டில் காணப்படுகிறது. தென்னிந்தியக் கல்வெட்டில் இரண்டாம் தொகுதி இரண்டாம் பக்கத்தில் இக் கல்வெட்டு அச்சிடப் பெற்றிருக்கிறது. உரிய பகுதியாவது:

"நாம் எடுப்பிச்சத் திருக்கற்றளி ஸ்ரீராஜராஜேஸ்வர
முடையார்க்கு
நாம் குடுத்தனவும் அக்கன் குடுத்தனவும்நம்
பெண்டுகள் குடுத்தனவும்"

வட்டம், வாசி என்ற சொற்கள் செட்டிநாட்டில் மிகுதி யாக வழங்கி வருகின்றன. சில்லறை மாற்றிக் கொடுப்பதற்கும், கள்ள நாணயம் இல்லை என்று பொறுப்புச் சொல்வதற்கும். ஓர் ஊரில் பெற்றுக் கொண்ட பணத்தைப் பிறிதொரு ஊரில் கொடுப்பதற்குப் பெற்றுக் கொள்ளும் கழிவுத் தொகைக்கும் வட்டம், வாசி என்று பெயர். இவ்வாறு வட்டம் வாங்கும் வழக்கம் சோழர்காலத்திலேயே ஏற்பட்டது. திருஞானசம்பந்த சுவாமிகள், "வாசிதீரவே-காசு நல்குவீர்-மாசின் மிழலையீர்

-ஏசவில்லையே'' என்று பாடியிருப்பதையும் இங்கே குறிப்பிட லாம். (திரு இருக்குக் குறள் பதிகம் 92:1)

செட்டிநாட்டிலுள்ள உ. சிறுவயல் என்னும் ஊர் உய்யக் கொண்டான் என்ற சோழ அரசன் பெயரால் ஏற்பட்ட செறு வயல் என்று கூறுவர்.

பட்டினத்தடிகள்

பொருட் செல்வத்தையெல்லாம் துறந்து, துறவறச் செல்வராக விளங்கிய பட்டினத்தடிகள் நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்தவரே.* நகரக் கோவில்களுள் ஒன்றான இளையாற்றக் குடியில், ''பட்டினசாமி வகுப்பு'' என ஒரு பிரிவு உண்டு. இப் பிரிவினரின் குல முதல்வர், பட்டினத்தடிகளே ஆவர்.

தென்னிந்தியக் கல்வெட்டுகள் எட்டாம் தொகுதியில் 425முதல் 442வரை இருப்பவை பிரான்மலைக் கல்வெட்டுக்கள். இவற்றுள் 422-ஆம் கல்வெட்டு சொக்கநாதர் கோவில் தெற்குச் சுவரில் உள்ளது. வணிகர் சேர்ந்து அறம் செய்யக் கையெழுதி திட்டதைத் தெரிவிக்கும் இக்கல்வெட்டில் பட்டினத்தடிகளின் பெயரும் குறிப்பிடப் பெற்றிருக்கிறது.

''ரமுடையார் உடைய பிள்ளை பெராம் பூருடையார்
தாதர் காளையர் காவுப் பெருந்தெரு
பட்டின சுவாமிகள் வணிகர் மாதர்கள்
சொக்க ஞானசம்பந்தர் எறிபடைநல்லூர்''

வரி 29

பட்டினத்தடிகளுக்குக் காவிரிப் பூம்பட்டினத்தில் வீடு இருந்த செய்தியும், சிதம்பரம் செட்டியார் மனைவியாகிய சிவகாமியம்மையார் பெற்ற சிவகலையம்மையாரை அவர் மணந்துகொண்ட செய்தியும் அவர் வரலாற்றில் உள.பட்டினத் தடிகளின் உயர்நிலையைக் கேள்விப்பட்டதும் அவரது உற்றார் உறவினர் திருவொற்றியூர் எய்தியதாகவும் வரலாறு கூறுகிறது. இவ்வூரில், நகரத்தார்கள் பெரியதொரு மடம் அமைத்திருப் பதும் இங்குள்ள கோவிலில் பட்டினத்தடிகளின் பரம்பரை யினர் என்றகாரணத்தால் நகரத்தார் சமூகத்தில் பட்டினசாமி

*பட்டினத்தார் என்ற பெயரில் பலர் இருந்ததாகவும் வரலாறு கள், ஆராய்ச்சிகள் வெளிவந்துள்ளன.

வகுப்பைச் சேர்ந்த ஒருவர் இன்றளவும் அறங்காவலர் ஒருவ ராக இருந்து வருவதும் இங்கே குறிப்பிடத்தகுந்தவை.

காவிரிப் பூம்பட்டினத்திலும் நகரத்தார் ஒரு மடம் அமைத்து, பட்டினத்தடிகளின் நினைவைப் பத்து நாள் விழா வாக ஆண்டுதோறும் கொண்டாடி வருகின்றனர்.

தாயாரை ''ஆத்தாள்'' என அழைப்பது நகரத்தார் களிடையே வழக்கமாக இருந்து வருகிறது. பால்மணம் மாறாப் பச்சிளங்குழந்தைகள், ''ஆத்தாத்தா அன்பாத்தா கஞ்சிஊத்திக் காப்பாத்து''என்று மழலை மொழியில் சொல்லுவர். பட்டினத் தடிகள் தம் பாடலில் தாயாருக்குத் தகனக்கிரியை செய்தது பற்றி,''அரிசியோ நானிடுவேன் ஆத்தாள்தனக்கு வரிசையிட்டுப் பார்த்துமகிழாமல்'' என்று குறிப்பிட்டிருக்கிறார். தேட்டேது மில்லை என்ற சொல்லையும் அவர் கையாண்டிருக்கிறார். தேட்டு என்பது பொருள் தேடுதலைக் குறிக்கும். இவ்விரு சொற்களையும் இன்றளவும் நகரத்தார் சமூகத்தார் பயன் படுத்தி வருகின்றனர்.

பட்டினத்தடிகள் இயற்றிய நூல்களாவன: கோயில் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடை மருதூர் மும்மணிக் கோவை, திரு ஏகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது ஆகியவை.

கோனாபட்டு கற்பக விநாயகர் கோவிலில் பட்டினத் தடிகள் வரலாறு பாடல்களாகப் பதிக்கப்பட்டிருக்கிறது.

# 8. பாண்டியர் காலம் [கி.பி 300-1700]

## சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பகுதி

தமிழ் மூவேந்தரான சேர சோழ பாண்டியருள் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பெருமை பாண்டியர்க்கே உரியது. அப்பாண்டியரால் ஆளப் பெற்ற பாண்டிய நாட்டின் ஒரு பகுதி செட்டி நாடு.

''பாண்டிய நின் நாட்டுடைத்து நல்ல தமிழ்'' என்ற சொற்றொடரும் பாண்டி நாட்டுக்கும் தமிழுக்கும் உள்ள தொடர்பை வலியுறுத்துகிறது. மேலும் இளங்கோவடிகள் (சிலப்பதிகாரம் நாடு காண் காதைவரி 58) சேக்கிழார்(பெரிய புராணம் திருநாவுக்கரசர் புராணம் பாக்கள்400, 412 மூர்த்தி நாயனார் புராணம் பாக்கள் 12, 13) கம்பர் (நாடவிட்டபடலம்) ஆகிய பெரும் புலவர்களும் பாண்டி நாட்டையே செந்தமிழ் நாடென்று சிறப்பித்துள்ளனர்.

## பாண்டியரின் அழைப்பு

சோழ நாட்டில் சிருடனும் சிறப்புடனும் வாழ்ந்து வந்த நகரத்தார் பாண்டிய மன்னர்களின் அழைப்புக் கிணங்கியே பாண்டி நாட்டுக்கு வருவாராயினர். பாண்டிய மன்னர்கள் அவர்களுக்கு வழங்கிய இளையாற்றக்குடி முதலிய ''நகர''ங் களிலேயே தங்கள் கோவில்களை அமைத்துக் கொண்டு நெடுங் காலம் ஏழுபிரிவுகளாகவும் பின்னர் பிள்ளையார் பட்டிக் கோயில் இரணிக்கோயில் என்பன ஏற்பட்டு ஒன்பது பெரும் பிரிவுகளாகவும் வாழ்ந்து வருகின்றனர்.சோழ நாட்டிற் போலப் பாண்டிய நாட்டிலும் வாணிகம் செழிக்கச் செய்தனர்.

## வாணிகச் செழிப்பு

பாண்டியர் ஆட்சியில் வாணிகம் சிறந்திருந்ததை மார்கோ போலோ குறிப்பிட்டுள்ளார். முத்துக்களாலேயே பாண்டியர்க்குப் பெரு வருவாய் கிடைத்தது. செட்டியார்கள் முத்து முதலிய பொருள்களை வியாபாரம் செய்து வந்ததும்

இங்கே கருத்திற் கொள்ளத்தக்கது. முத்து, முத்தையா, முத்தப்பன், முத்துக்கருப்பன், முத்தாத்தாள் என்ற பெயர்கள் முத்துவாணிகத் தொடர்பால் ஏற்பட்டன.

'எட்டிச் சாத்தன்'

எட்டி என்னும் சிறப்புப் பெயர் வணிகர்க்குப் பாண்டியரால் கொடுக்கப் பெற்றதை இந்நூலில் ஏற்கெனவே தெரிவித்துள்ளோம். சீமாரன்பரசக்கர கோலாகலன் காலத்தில் ''எட்டிச் சாத்தன்'' என்ற அரசியல் தலைவனுக்குப் பரிசில்கள் வழங்கப் பெற்றன.

நெடுஞ்சடையன் பராந்தகன் காலத்திலிருந்த அரசியல் தலைவர்களில் ஒருவனுக்கு ஏனாதிசாத்தன் சாத்தன் என்னும் பெயர் இருந்தது. ஏனாதி என்னும் இச் சிற்றூர் சன்மார்க்க சபையால் புகழ் பெற்ற மேலைச் சிவபுரியிலிருந்து பொன்னமராவதிக்குச் செல்லும் வழியில் உளது. அந்த ஊரினரான சாத்தன் சாத்தன் என்னும் அரசியல் தலைவர்க்குப் பாண்டியர் பரிசளித்தனரென்பது வரலாறு.

காளையார் கோவிலுக்கும் பாண்டியர்க்கும் உள்ள தொடர்பையும் கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி என்னும் சொற்றொடரைப் பற்றியும் முன்னரே குறிப்பிட்டுள்ளோம். சுந்தர பாண்டியனுடைய அரசியல் அலுவலர் ஒருவர் இவ்வூரைச் சேர்ந்தவரே ஆவார். அவர் பெயர், திருக்கானப் பேருடையான் மழவ சக்கரவர்த்தி என்பதாகும்.

கல்வெட்டுக்கள்

சடையவர்மன் வீர பாண்டியனது ஆட்சியின் 23-ஆம் ஆண்டு முடியவுள்ள கல்வெட்டுக்கள் புதுக்காட்டைப்பகுதியிலேயே உள. 14-ஆம் நூற்றாண்டில் மதுரையை ஆண்ட முஸ்லிம் மன்னர்களின் ஆட்சியைக் குறிக்கும் கல்வெட்டுக்கள் இராங்கியத்திலும் பனையூரிலும் உள்ளன.

வெளிநாட்டுத் தொடர்பு

விசய நகரப் பேரரசுக் காலத்தில் தாய்லந்துக்கும் அங்கோர் வாட்டு முதலிய பகுதிகளுக்கும் நகரத்தார் சென்று தமிழர் பெருமையைப் பரப்புவாராயினர்.

ஏழகப்படை

பாண்டிய நாட்டுக்குப் பெரும்புகழ் தந்த ஏழகப்படை செட்டிநாட்டிலுள்ள கழநிவாசல் என்னும் ஊரில் இருந்தது. இவ்வூர் காரைக்குடிக்கு அருகே இருக்கிறது. கழநி வாசல் குடியார் என்ற பிரிவும் செட்டியார்களுள் இளையாற்றக் குடிக்கோவில் புள்ளிகளில் இருந்து வருகிறது. கழனி வாசல் குடிப் பிரிவினர் ஆட்சியில் இளையாற்றக்குடியில் உள்ள பெருமாள் கோவிலுக்கு ஏழகப் பெருமாள் விண்ணகரம் என்று பெயர் வழங்குகிறது.

1956 ஜனவரியில் வெளியான "கலைமகள்" இதழில் கம்பனடிப்பொடி சா. கணேசன் அவர்கள் எழுதியுள்ள கட்டுரையின் ஒரு பகுதி வருமாறு

"இங்கே (கழநிவாசலில்) வசித்த நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் தொகை நிலையால் ஐஞ்ஞூற்றுவர் என்றும் வகை நிலையால் எழுவகையார் அல்லது ஏழகத்தார் என்றும் குறிப்பிடப் பெற்றார்கள். அவர்களுக்குள்ளே ஒரு பிரிவினரான, அதாவது எழுவகை நகரத்தார்க்குள் ஒரு வகையினரான வயிரவன் கோயிலார்க்கு ஏழகப் பெருந் தெருவான வீரபாண்டியபுரமுடையார் என்ற கோத்திரப் பெயர் வழங்கி வருகிறது. அதுவன்றியும் அவர்களின் உட் பிரிவு மூன்றுக்கும் சிறுகுளத் தூருடையார், கழனிவா யிலுடையார், மருகேந்திரபுரமுடையார் என்ற பெயர்கள் வழங்கி வருகின்றன."

ஏழகப் படையின் கோட்டைக்குக் கிழ்பால், மக்கள் வாழ்ந்த ஊரே இன்றைய கோட்டையூர்.

கம்பன் அடிப்பொடி அவர்கள், 1978-ஆம் ஆண்டில் வெளிவந்தகோவிலூர் திருக்குடநீராட்டுமலரில் பின்வருமாறு எழுதியிருக்கிறார்கள்:-

"இப்பொழுது உள்ள கோவிலூர் என்பது தமிழ் நாட்டில் 10-ஆவது நூற்றாண்டில் மிகப் பிரபலமாக இருந்த கழனிவாயில் என்ற ஏழகப்பெருந் தெருவின் ஒரு பகுதி யாகும். இந்த ஏழகப் பெருந்தெருவில் பல ஆலயங்கள் அன்று புகழுடன் விளங்கின. அவற்றுள் கொற்றவாள் ஈசர் கோயில் என்னும் ஆலயமும் ஒன்று. மற்றொன்று ஏழகப் பெருமாள் விண்ணகரம்.

இவை அல்லாமல் கொற்றவை கோயில்கள் சிலவும் இங்கு இருந்தன. இப்போது பெருவளர்ச்சியடைந்திருக்கும் காரைக்குடி நகரம் இதனுடைய ஒரு பகுதியே ஆகும்.

இன்று வரலாற்றுப் பெருமை மிக்கதும், மிக்க வீரம் செறிந்ததுமான ஏழகப் பெரும்படை இங்குதான் இருந்தது. அந்தப் பெரும் படைதான் மூன்றாம் குலோத்துங்க சோழனுக்கும் குலசேகர பாண்டியனுக்கும் நடைபெற்ற பெரும் போரில் சதுர்வேதமங்கலம் என்று இன்று வழங்கும் மட்டியூருக்குப் பக்கத்தில் பொருதி சோழப் படைக்குப் பெருஞ்சேதத்தை உண்டாக்கியதாகும். இந்தப் படை அக்காலத்து முறைப்படி தனவணிகர்களைச் சார்ந்து அவர்களால் பேணிப் பரிபாலிக்கப் பட்ட படையாகும்.

இடைஇரு வகையோர் அல்லது
படை வகை பெறார் என்மனார் புலவர்

-தொல்காப்பியம்

க்ஷத்திரியர், நாட்டைக் காக்கும் பொறுப்பு ஏற்றுப் படை வைத்துக் கொள்ளுவர். வைசியர், தங்களுடைய வாணிகத்தைக் காக்க, படை வைத்துக் கொள்ளுவர்.* நாட்டுக்கு அபாயம் விளைந்தால் அப்போது இரு படைகளும் நாட்டைக் காக்க ஒன்று பட்டுப் போரிட வேண்டும்.

* *Private Army or Regiment*

# 9. அண்ணாமலை அரசர்

இந்த நூற்றாண்டில் தமிழுக்கு ஏற்றம் கொடுக்க ஒல்லும் வகையால் எல்லாம் உழைத்த பெருமகன் செட்டிநாட்டரசர் இராசா சர் சா. ராம. மு. அ. அண்ணாமலைச் செட்டியார் ஆவார். இவர் காலம் 1881 முதல் 1948வரை.

இளமையிலேயே இவர் தமிழ் ஆர்வம் மிக்கவராக விளங்கினார்.

## மீனாட்சி தமிழ்க் கல்லூரி

தமிழ் வித்துவான் தேர்வு எழுத விரும்புபவர்கள், கல்விக்கூடம் ஒன்றில் முறையாகச் சேர்ந்து பயில வசதியாக சிதம்பரத்தை அடுத்த திருவேட்களத்தில் (1929—இல் தான் அது அண்ணாமலைநகர் ஆயிற்று) வள்ளல் அண்ணாமலையார் 1924—ஆம் ஆண்டில் ஒருகல்லூரி தொடங்கினார். மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் இந்தக் கல்லூரியின் முதல்வராகப் பணியாற்றினார்கள்.

## தமிழுக்கு அரியாசனம்

1929—இல் பல்கலைக்கழகம் உருவாயிற்று. அதன் ஒரு பகுதியாக, தமிழ்ப்புலம் நிறுவப்பெற்று, பேராசிரியக் கட்டில் அமைக்கப் பெற்றது. தமிழுக்கு என்று ஒரு பேராசிரியக் கட்டில் ஏற்பட்டது அதுவே முதன் முறையாகும்.

எம். ஏ. படிப்புக்குச் சமமான பி. ஏ. (ஆனர்ஸ்) பட்டப் படிப்பில் தமிழ் இலக்கண இலக்கியங்களைச் சிறப்பாகப் பயிலுவதற்குரிய பாடத்திட்டம், முதல் தடவையாக அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வகுக்கப்பெற்றது.

அண்ணாமலைப் பல்கலைக்கழக வெள்ளி விழா நிகழ்ச்சிகளை வெள்ளித்திரைப்படமாக நான் (இந்நூலாசிரியர்) எடுத்தேன். மேற்கூறிய நிகழ்ச்சிகளை நினைவுபடுத்தும் வகையில் "இந்தியா, 1947—இல் சுதந்தரம் பெற்றது. தமிழ்மொழி, அடிமைத் தளைகளிலிருந்து அதற்கு 18 ஆண்டுகள் முன்னரே விடுதலை பெற்றது. விடுவித்தவர் அண்ணாமலை அரசர்" என்று அந்த வசனத்தில் குறிப்பிட்டிருந்தேன்.

விபுலானந்தர்

தமிழ்ப் பேராசிரியராக யாரை நியமிப்பது? தகுதியும் திறமையும் உடைய ஒருவர் சந்திரமண்டலத்தில் இருந்தாலும் அவரை அழைத்துவந்து, அண்ணாமலையில் அமர்த்த அரசர் உறுதி கொண்டார். அவர் இயல்பு அத்தகையது.

தொழில் தொடர்பாக ஈழநாட்டுக்குச்செல்லும்போதெல்லாம், விபுலானந்த அடிகளின் முத்தமிழ்ப் புலமையையும், மும்மொழி அறிவையும் பற்றி அரசர் கேள்விப்பட்டிருந்தார். அவரையே, தமிழ்ப் பேராசிரியராக நியமிக்க விரும்பினார். எனினும் அவரை அணுகவில்லை.

அடிகள் இராமகிருஷ்ண மடத்தில் சேர்ந்து அதன் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு, ஆன்மீகப்பணிகள் செய்து கொண்டிருந்ததை அரசர் அறிந்திருந்தார். எனவே அரசர் திடீரென்று கல்கத்தாவிற்குச் சென்றார். பேலூரில் உள்ள இராமகிருஷ்ண மடத்தின் தலைமை நிலையத்திற்குப் போய், மடத்தின் தலைவரை முறைப்படிவணங்கினார். தாம் ஒருபல்கலைக்கழகம் தொடங்கியிருப்பதையும், தமிழ்ப் பேராசிரியர் ஒருவரை நியமனம் செய்ய விரும்புவதையும் அதற்கு இராமகிருஷ்ணமடத்தின் தலைவருடைய உதவி தேவை என்பதையும் கூறினார்.

தலைவர் விவரங்களைக் கேட்டார், "தங்களிடம் அவர் (விபுலானந்தரிடம்) இசைவு தெரிவித்திருந்தால் எங்களுக்கு ஒரு தடையும் இல்லை" என்று மடத்தின் தலைவரான அந்தப் பெருந்துறவி கூறினார்.

"விபுலானந்தருக்கு இச் செய்தி ஒன்றும் தெரியாது. மடத்தில் துறவியாக இருப்பவர் ஒருவரை நான் அணுகுவது முறையாகுமா? உங்களுடைய ஊழியரை விடுவிக்கும் உரிமையில் நான் தலையிடலாமா?" என்று அரசர் கூற, துறவி மனம் நெகிழ்ந்தார்.

"விபுலானந்தர் இப்போது இமயமலையின் அடிவாரத்தில், இராமகிருஷ்ண மடத்துப் பணிகளைக் கவனித்துக்கொண்டிருக்கிறார். 'பிரபுத்த பாரதா' என்னும் ஆங்கில இதழின் ஆசிரியப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டிருக்கிறார். அவருக்குத் தங்கள் கருத்தை இன்றே தெரிவிப்போம். அவர் விரும்புவார் ஆயின் உடனே விடுவித்து உங்கள் எண்ணத்தை மகிழ்ச்சியோடு நிறைவேற்றுவோம்" என்று பெருந்துறவி கூறினார்.

இதன் விளைவாக, விபுலானந்தரின் தமிழ் அறிவு, தமிழ் நாட்டுக்குப் பயன்பட்டது. யாழ் நூல் வெளிவந்தது. ஈழத்து மாணாக்கியர்—இரு பாலாரும்-உயர் தமிழ் கற்கவும் இசை பயிலவும் அண்ணாமலை நகருக்கு ஆண்டுதொறும் வருவாராயினர். அவர்கள் தங்கள் நாட்டில் பரப்பிய உணர்ச்சியின் விளைவுகளே இன்று ஈழத்தில் நாம் காணும் தமிழ் மறுமலர்ச்சி என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கது.

'கா.சு'

நிகரற்ற தமிழ்ப் புலமை பெற்றிருந்த கா.சுப்பிரமணிய பிள்ளை, எம்.எல் என்னும், சட்டத்துறையில் உயர்பட்டம் பெற்றிருந்ததால், கல்கத்தாவில் சட்டக்கல்லூரியில் பணியாற்றிக் கொண்டிருந்தார். அவரை அண்ணாமலை அரசர் தமிழ்ப்பேராசிரியராக நியமித்துத் தமிழ்நாடெங்கும் செல்லும் 'காசு' ஆக உலாவரச் செய்தார்.

நாவலர் பாரதியார்

ஓடிவிளையாடும்பருவத்திலேயே கவியரசர் சுப்பிரமணிய பாரதியாருடன் கூடி விளையாடியவர் எட்டையபுரத்துச் சோமசுந்தர பாரதியார். பல்லாண்டுகள் தமிழ் ஆராய்ச்சியில் ஈடுபட்டுவந்த போதிலும்,சோமசுந்தரபாரதியார்,தொழிலால் வழக்கறிஞராகவும் அரசியல் சார்பால் தேசிய இயக்கத்தைச் சார்ந்தவராகவும் திகழ்ந்தார். செல்வச் செழிப்பில் மிதந்து கொண்டிருந்த சோமசுந்தர பாரதியாரை, அரசர் பல முறை சந்தித்து அவர் தம் வருவாயைத் தியாகம் செய்து தமிழ்ப் பேராசிரியர் பதவியை ஒப்புக் கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தி அவரை இணங்க வைத்தார்.

இதன் விளைவுகள் தமிழ்நாட்டையே குலுங்க வைத்தன.

பண்டிதமணி

புலவர்கள் போற்றும் புலவராக விளங்கிய பண்டிதமணி, விழாக்களில் சொற் பொழிவாற்றுவது தவிர வேறு வகையில் தம் அறிவைப்பயன்படுத்தாது இருப்பதை அரசர் உணர்ந்தார், ''வாய்ப்பு வழங்காவிடில் சூரனும் சோம்பி மடிவான்'' என்று கருதினார். பல்கலைக்கழகத்தில் பணிபுரியுமாறு அவரை அழைத்தார். பொருள் வளத்துடன் வாழ்ந்து வந்த பண்டிதமணி ஏதாவது ஒரு சாக்குச் சொல்லி, காலந்தாழ்த்தி வந்தார்.

நகரத்தார் எவரும் ஆசிரியப்பணிக்குச் சென்றதில்லை என்று சொல்லித் தப்பிக்கப் பார்த்தார். ''நீங்களே வழிகாட்டுங்கள்'' என்றார் அரசர்.

''என் உடல் அமைப்பு, ஆசிரியர் பணிக்கு இடையூறாக இருக்கும்'' என்றார் பண்டிதமணி. இத்தகைய கூற்றுக்களுக்கெல்லாம் சமாதானம் சொல்லி, நினைத்ததை முடித்தார் அரசர். அதன் பயனாக, தமிழுக்கு மற்றுமொரு மகா மஹோபாதியாயர் கிடைத்தார்.

## சேதுப் பிள்ளை

திருநெல்வேலி நகராண்மைக் கழகத் துணைத் தலைவராக இருந்த திரு ரா.பி. சேதுப்பிள்ளை, அரசியலிலும் பொது வாழ்விலும் நாட்டம் கொண்டிருந்தார். தமிழ்ப்பணியே அவருக்கு ஏற்றது என்று அரசர் கருதினார். திருநெல்வேலியில் இருந்த நீதிக்கட்சித் தலைவரான அவருடைய உறவினர்கள் வாயிலாக இளைஞர் சேதுப்பிள்ளைக்குத் தன் கருத்தை அறிவுறுத்தினார்.

பயன், தமிழுக்கு ஒரு சொல்லின் செல்வர் கிடைத்தார். அளப்பரிய நூல்களை அவர் படைத்தார்.

## ஏனையோர்

இவர்கள் அனைவரும் பழுத்த தமிழ் அறிஞர்களாக இருந்த போதிலும் வேறு துறைகளில் தம் கவனத்தைச் செலுத்தி வந்தவர்கள் என்பது குறிப்பிடத் தக்கது. அந்த நீர்களைத் தமிழ் வாய்க்காலுக்குத் திருப்பிவிட்டவர் அரசர்.

ஏனைய இடங்களில் தமிழாசிரியர்களாக இருந்த நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரைவேந்தர் அவ்வை துரைசாமிப் பிள்ளை, வெள்ளைவாரணர், சதாசிவப் பண்டாரத்தார் போன்ற எத்துணையோ புலவர்களும் ''தமிழ்ப் பல்கலைக் கழகத்தில்'' நியமிக்கப் பெற்றனர்.

## மகாவித்துவான்

மகாவித்துவான் ரா. இராகவ ஐயங்காரின் புலமையை அரசர் அறிந்தார். அவரையும் பல்கலைக் கழகத்தில் நியமித்தார். தமிழ்த்துறைத் தலைவரான நாவலர் பாரதியார்

தமக்குத் தெரியாமல் ஒருவர் தமிழ்த்துறையில் நியமிக்கப் பெற்றதை விரும்பவில்லை. அரசர் மீது இருந்த ஆத்திரத்தை ஐயங்கார்மீது காட்டினார். இன்னின்ன ஆசிரியர்கள் இன்ன வகுப்புக்கு இன்ன பாடம் நடத்துவது என்பதை முடிவு செய்ய வேண்டியிருந்தது. பேராசிரியரின் மீசையில் கோபக் கனல் துடிப்பதைப் பார்த்த ஐயங்கார் தமிழ் எம். ஏ. வகுப்பு வேண்டாம், வித்துவான் வகுப்பே எனக்குப்போதும் என்றார்.

ஐயங்கார் அண்ணாமலைக்கு வந்தபோது அவருக்குவயது 50க்கு மேல் இருக்கும். அந்தக்காலத்தில் அது பெரிய வயது. நூல்களைப் படிப்பதற்கு ஒரு கண்ணாடி, எதிரே உட்கார்ந் திருக்கும் மாணவர்களைப் பார்க்க மற்றொரு கண்ணாடி, இவ் விரண்டில் எது என்று தேடிப்பார்க்க மூன்றாவது கண்ணாடி யைப் பயன் படுத்தினார் என்பர்.

மகாவித்துவானின் புலமையை காளையரும் கன்னியரும் உணரவில்லை. அவர்களுக்குப் பாடம் நடத்தவும் அவர் விரும்ப வில்லை. பரந்துபட்ட சென்னை இராசதானியிலேயே பெரிய நிலக்கிழாராக இருந்த சேதுபதியின் அரண்மனைக்கே திரும்பிச் சென்று கவலையின்றிவாழலாமா என்று "ராரா" நினைத்தார்.

செய்தி, அரசர்க்கு எட்டியது. அரசர், விரைந்து செயலாற்றும் துணிவு உடையவர். பல் குழுவினரையும் பாழ் செய்யும் உட்குழுவினரையும் கலந்து அவர் கருத்துக் கேளாமல் தாமே முடிவு எடுக்கும் மதி நுட்பம் வாய்ந்தவர்.

உடனே தமிழ் ஆராய்ச்சிப் பகுதியைத் தொடங் கினார். அப்பொறுப்புக்களுக்கு மகாவித்துவான் ரா. இராகவ ஐயங்காரை நியமித்து ஒரே கல்லில் பலமாங்கனிகளை வீழ்த்தி ஏராளமான பிரச்சினைகளுக்கு ஒரு நொடியில் தீர்வு கண்டார்.

### கவிமணி

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை போன்ற சில அறிஞர் பெருமக்கள் அவர்கள் விருப்பியபோது அண்ணாமலை நகரில் சிலநாட்கள் தங்கியிருப்பது (VISITING PROFESSOR) என்ற ஏற்பாட்டையும் நிறைவேற்ற அரசர் விரும்பினார். அதற்காக இரண்டு வீடுகளும் ஒதுக்கப்பட்டுத் தயாராக வைக்கப்பட்டிருந்தன.

விளைவு

இவ்வாறெல்லாம் தொலை நோக்குடன் அரசர் செயல் பட்டார்.

அதன் பயனாக, தமிழ் மொழியை ஆழமாகப் படிக்க விரும்பிய இளைஞர்களெல்லாம் மலரைமொய்க்கும் வண்டுகள் போல அண்ணாமலை நகருக்குச் சாரை சாரையாகச் சென்றனர். அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவர்கள் என்று தங்களைச் சொல்லிக் கொள்வதில் பெருமிதமும் பூரிப்பும் கொண்டனர்.

இளைஞர் பலரும் தங்களுடைய வடமொழிப் பெயர் களை மாற்றிக்கொண்டு தனித் தமிழ்ப்பெயர்களுடன் அண்ணா மலை நகரிலிருந்து வெளிவந்தனர்.

சான்று:

| | |
|---|---|
| நாராயணசாமி | நெடுஞ்செழியன் |
| இராமையா | அன்பழகன் |
| சோமசுந்தரம் | மதியழகன் |

இவ்வாறு நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் தங்கள் பெயர் களை மாற்றிக் கொண்டதோடு, மேடைகளில் தமிழ் நாடெங் கும் முழங்கி ஒரு புதிதுணர்ச்சியைத்தமிழ் மக்களிடம் உருவாக் னர்.

அண்ணாமலையில் படித்தவர்களே இந்தியாவிலும் அண்டை நாடுகளிலும் உள்ள பல்கலைக்கழகங்களில் தமிழ் ஆசிரியர்களாகவும் பேராசிரியர்கள் ஆகவும் ஆயினர். உலகத் தமிழ் மாநாடுகள் கூட்டவும் காரணமாக இருந்தனர்.

மேலே நாம் குறிப்பிட்ட தமிழ்ப் பேராசிரியர்களிடம் பயின்றவர்களில் சிலர் இன்றைய தமிழ்ப் பல்கலைக் கழகம் உட்படப் பல பல்கலைக் கழகங்களில் துணை வேந்தர் ஆயினர்.

பிற மொழிகளில் பெரும் புலமை படைத்தவர்களும் வாழ்க்கையின் பல்வேறு கூறுகளில் ஏற்கெனவே வெற்றிகண்ட வர்களும் தமிழ்ப் பேராசிரியர்களாக இருந்ததால் பல்கலைக்

கழகத்தின் ஏனைய துறைகளைச் சேர்ந்த ஆசிரியர்களும் தமிழ்த் துறையை மதித்தனர். தாங்களும் ஓரளவாவது தமிழறிவு பெற விழைந்தனர்.

அண்ணாமலை அரசரின் காலம் அண்ணாமலைப் பல் கலைக் கழகத்தின் பொற்காலமாகவும் தமிழுக்கு ஏற்றம் தந்த நாளாகவும் விளங்கிற்று. அரசர் காலத்துடன், தமிழ் மொழி வளர்ச்சியின் சிறப்பானதொரு காலகட்டம் முடிவடைந்தது.

விசுவபாரதி

1947-இல் திரு. இராசகோபாலாச்சாரியார் மேற்கு வங்காளத்தின் ஆளுநராக நியமிக்கப் பெற்றார். ஆளுநர் என்ற முறையில் அவர் (சாந்தினிகேதனத்தில் கவியரசர் இரவீந்திர நாத தாகூர் நிறுவிய) விசுவ பாரதி பல்கலைக் கழகத்தின் வேந்தரும் ஆனார்.

அங்கே அவர் சென்றபோது, சீனமொழி, ஜப்பானிய மொழி, நேப்பாள மொழி போன்றவையெல்லாம் கற்பிக்கப்படு வதையும் ஏராளமான மொழிகளில் வெளிவந்த நூல்கள், பல் கலைக் கழக நூலகத்தில் இருப்பதையும் கண்டார். தமிழ் நூல் ஒன்றுகூட இல்லாததை உணர்ந்தார். அந்தக் குறையை நிறை செய்ய விரும்பினார், மூதறிஞர் இராஜாஜி.

தமிழ் நூல்கள் அனுப்பும்படி, சென்னை மாநில அரசையோ பல்கலைக் கழகங்களையோ இராஜாஜி கேட்டுக் கொண்டிருக்கலாம். அவர் அவ்வாறு செய்யவில்லை. சிவப்பு நாடாவுக்குள் சிக்கிக் கொண்டிருக்கும் அரசு இயந்திரத்தின் ஆமை வேகமும் அணுகு முறைச் சிக்கல்களும் அவருக்கு நன்றாகத் தெரியும்.

எனவே, முப்பதாண்டுக் காலம் தன்னுடைய கெழுதகை நண்பராக இருந்தவரும் தமிழ் வள்ளலுமான அண்ணாமலை அரசர்க்கு இராஜாஜி ஒரு கடிதம் எழுதினார். கிடைக்கும் தமிழ் நூல்கள் அனைத்தையும் வாங்கி விடும்படி பெரிய அண்ணாமலை, சின்ன அண்ணாமலையைக் கேட்டுக் கொண்டார். நூல்கள் யாவும் சேகரிக்கப்பெற்ற பிறகு தமிழ்க் கோமான் டி.கே.சி., 'கல்கி' ஆசிரியர் திரு. கிருஷ்ணமூர்த்தி, சின்ன அண்ணாமலை மூவரும் கல்கத்தாவிற்குச் சென்று ஆளுநர் மாளிகையில் சில நாள் தங்கியிருந்து பின்னர் சாந்தினி கேதனத்தில் முறைப்படி நூல்களை அன்பளித்தனர்.

அரசர் கடைசியாக மேற்கொண்ட தமிழ்ப் பணி இந்த அன்பளிப்பே யாகும்.

இந்த நூல் கொடையின் விளைவாக, இப்போது ஒரு தமிழ்த் துறை விசுவபாரதியில் இயங்குகிறது. திரு. சொ. முத்தையா (தலைவர்), திரு.க. சுப்பையா ஆகியோர் பணி யாற்றி வருகின்றனர்.

''காந்தி யடிகள் திருவுள்ளம் கனிந்து போற்றும் குருதேவன்
ஆய்ந்த அகில கலையாளன் அண்ணல் தாகூர் அமைத்தவுயர்
சாந்தி நிகேதப் பெரும் பொழிலில் தமிழகம் கமழச் செய்து புகழ்
ஏந்தும் அண்ணா மலை மன்னன் என்றும் வாழ்க! வாழ்கவே!''

என்று கவிமணி இச்செயலைச் சிறப்பித்துள்ளார்.

### பயிற்சி மொழி

கல்லூரி அளவிலும் பயிற்சிமொழியாகத் தமிழ்மொழி பயன்பட வேண்டும் என்று அரசர் விரும்பினார். அதற்குத் தேவையான இயற்பியல், வேதியல், தாவர இயல் நூல்கள் பலவற்றையும் அவ்வத்துறையினர் தமிழ்த் துறையினருடன் சேர்ந்து அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1933-இல் உருவாக்கி முடித்தனர்.

### தமிழ் இசை

இளமையிலேயே அண்ணாமலை அரசர்க்கு இசையறிவு இருந்தது. 1930 - இல் அண்ணாமலை நகரில் ராஜா அண்ணாமலை இசைக் கல்லூரியைத் தொடங்கினார். அதைத் தொடர்ந்து தமிழ் இசை இயக்கம் உருவாயிற்று.

மூன்று மணி நேரக் கச்சேரியில் துக்கடாப் பகுதியில் மட்டும் இரண்டொரு தமிழ்ப் பாடல்கள், திரைப்படப் பாடல் கள் இடம் பெற்றன. இது தவிர, இசையரங்குகளில் தமிழ்ப் பாடல்களுக்கு வாய்ப்பு மறுக்கப்பட்டது.

''முதல் பாடலும் கடைசிப் பாடலும் தமிழ்ப் பாடல் களாக இருக்க வேண்டும்; பாடப்படும் பாடல்களில் பெரும் பான்மை தமிழ்ப்பாடல்களாக இருக்க வேண்டும்'' என்ற குறிக் கோளுடன் தமிழ் இசை இயக்கம் நடத்தப்பட்டது. இந்த இயக்கத்தைப் பாடகர்களும் செய்தித்தாள் முதலாளிகளும்

அவர்களைச் சார்ந்தவர்களும் கடுமையாக எதிர்த்தனர். எதிர்ப்பு பலமாக உருவானதும் அரசர் முழு மூச்சுடன் போர் தொடுத்தார். தமிழில் பாடக் கூடியவர்களைத் திரட்டினார். தமிழ் இசைமாநாடுகளை நகரங்களிலும் சிற்றூர்களிலும்கூட நடத்தினார். தமிழுக்கு ஆதரவான சிறு இதழ்கள் யாவும் தமிழ் இசைமலர் வெளியிட ஆவன செய்தார். தமிழ்ப் பாடல்களைத் தொகுத்து அச்சிட வழிவகை கண்டார். தமிழ் இசை இயக்கத்துக்கு எதிர்ப்புத் தெரிவித்த பாடகர்களை, நிகழ்ச்சி களுக்கு அழைப்பவர்களைச் சந்தித்தார். பாடகர் இன்ன இன்ன பாடல் பாடவேண்டும் என்று முன்கூட்டி முடிவு செய்து, பாடல்களின் விவரம் அடங்கிய நிகழ்ச்சி நிரலை அச்சிட்டு வழங்குவது என்ற ஏற்பாட்டை அமலுக்குக் கொண்டுவந்தவர். தமிழ் இசை இயக்கப் பிரசாரப் படையாக, மேடைகளில் முழங்கக் கூடிய ஓர் அணியைத் திரட்டி தமிழகமெங்கும் அவர் கள் உலா வரச் செய்தார். வானொலி நிலையத்தின்முன் தமிழ் இசை ஆதரவாளர்கள் பெரிய அளவில் கிளர்ச்சி நடத்தினர்.

தொடர்ந்து இயக்கத்தின் குறிக்கோளை நிறைவேற்ற தமிழ் இசைச்சங்கத்தை, அரசர்சென்னையில் தோற்றுவித்தார்.

தமிழ் இசையை நிலைநாட்ட அரசர் மேற்கொண்ட அருஞ் செயல்களையும், மிகவும் வலுவான எதிர்ப்பைச் சமாளித்து அவர் வெற்றிகொண்டதையும் முற்றிலும் மாறு பட்ட இன்றைய சூழ்நிலையில் வாழும் நாம் புரிந்து கொள்ள முடியாது.

**நூல்கள்**

அரசருடைய ஆதரவால் வெளிவந்த சிறந்த நூல்கள் நூற்றுக்கு மேற்பட்டவை ஆகும்.

அண்ணாமலைஅரசருடையதமிழ்ப்பணிகளை அவருடைய ஆண், பெண் மக்கள் வழியினர் தொடர்ந்து செய்து வரு கின்றனர்.

## டாக்டர் ராஜா சர் தமிழிசைக்காவலர் பத்மபூஷண் மு. அ. முத்தைய செட்டியார் டி.லிட், எல்.எல்.டி. (1905—1984)

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் இணைவேந்தர், தமிழ் இசைச் சங்கத்தின் துணை தலைவர் என்ற முறைகளில் இவர்கள் செய்த பலவகைப் பணிகளை நாடு நன்கறியும்.

குறிப்பாக மதுரையில் தமிழ் இசைச் சங்கத்திற்குக் கவினுறு கட்டிடம் கட்டப் பெற இவர் மேற்கொண்ட முயற்சிகள் போற்றத்தக்கன.

இவர் பொறுப்பில் உள்ள ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அறக்கட்டளையும், பொள்ளாச்சி தொழிலதிபர் சன்மார்க்கச் செல்வர் காந்திய வள்ளல் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களுடைய சக்தி அற நிறுவனமும் இணைந்து, ஆண்டுதொறும் சென்னை ராணி சீதை ஆச்சி மன்றத்தில் இசை விழாக்கள்-இசை ஆராய்ச்சி அரங்குகளை நடத்தி வருகின்றனர்.

சென்னை எழும்பூரில் இவர்கள் நிறுவியுள்ள தமிழ்-சமஸ்கிருதம் மற்றும் இந்திய மொழிகள் ஆராய்ச்சி நிறுவனம் அதற்கெனக் கட்டப் பெற்ற கட்டிடத்தில் இயங்கி வருகிறது.

திரு. முத்தைய செட்டியார் அவர்கள் தம் நீண்ட பொது வாழ்வில் கலந்து கொள்ளாத தமிழ் விழா இல்லை எனலாம்.

ஒரு நூற்றுக்கும் மேற்பட்ட தமிழ்ப் புலவர்களுக்குப் பொன்னாடை போர்த்தி அல்லது வேறு வழிகளில் சிறப்புச் செய்த பெருமை இவர்களைச் சேரும்.

## டாக்டர் எம். ஏ. எம் இராமசாமி (பி. 1931)

இவர் அரசர் முத்தைய செட்டியாரின் இரண்டாவது மைந்தர். 1984 ஜூன் முதல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் இணைவேந்தராக இருந்து வருகிறார். தமிழ் இசை இயக்கத்தை மேன்மேலும் வளர்க்க உறுதி கொண்டுள்ளார். இவர் அண்ணாமலை அரசர் போன்ற செயல் திறன் மிக்கவர்.

## குமாரராணி மீனா முத்தையா

இவர், தம் கணவரும், அரசர் முத்தையச் செட்டியாரின் மூத்த மகனுமானகுமாரராஜா மு. அ. முத்தையா செட்டியார் இறந்தபின் அவர் நினைவாக தஞ்சாவூர்க் கலையான கண்ணாடியில் ஓவியங்கள் வரைவதை வளர்த்து வருகிறார். ஆசிரியர் பலரை ஊக்குவித்து ஒரு கலைக்கூடத்தைச் சென்னையில் தம் மாளிகையிலேயே சிறப்பாக இயக்கி வருகிறார். பம்பாய் முதலிய நகர்களில், தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி - பண்பாட்டு துறையின் ஒத்துழைப்போடு பொருட் காட்சிகளும் நடத்தி வருவதும் குறிப்பிடத்தக்கது.

திரு. ஆர். இராமநாதன் செட்டியார் (பி. 1913)

இவர் அண்ணாமலை அரசரின் இரண்டாவது மகன் ஆவார்.

இவருடைய விடா முயற்சியாலும் பொருளுதவியாலும் நகரத்தார் வரலாறு, அறங்களின் விவரங்களுடன் தொகுக்கப் பெற்றது. தகவர்களைக் கொண்டு சரிபார்த்துப் பண்டிதமணி அவர்களுடைய விரிவான முன்னுரையுடனும் 1953- இல் இந்நூல் வெளியிடப்பெற்றது.

அரசருடைய குடும்பத்தில் இறுதிவரை பண்டிதமணி அவர்களுடன் தொடர்பு கொண்டிருந்தவர் இவரே ஆவார். பண்டிதமணி இறந்த செய்தியறிந்ததும் இவர் விமானத்தில் திருச்சிக்கு வந்து, மகிபாலன்பட்டியின் எல்லையைஅடைந்தார். அவ்வூரைச் சூழ்ந்துள்ள காட்டாற்றில் திடீரென வெள்ளம் ஏற்பட்டது. அக்காலத்தில் பாலம் கட்டப்பெறவில்லை. கலைதி தந்தை கருமுத்து தியாகராசச் செட்டியாரும் இராமநாதன் செட்டியாரும் மொட்டை வண்டியில் ஏறி, ஆற்றைக் கடந்து கரை சேர்ந்தது புலவர்பால் அவர்கள் கொண்டிருந்த மதிப்பினை உணர்த்தும்.

அரசர் குடும்பத்தில் பண்டிதமணி அவர்களுடன் முதல் தொடர்பு கொண்டவர், திரு. இராமநாதன் செட்டியாருடைய சுவீகாரத் தந்தையார் திவான் பகதூர் சா. ராம. மு. ராம. இராமசாமிச் செட்டியார் ஆவார். அவர், அக்காலத்து வழக்கப் படி, 1901 க்கும் 1915க்கும் இடையில் தமிழ்ப் புலவர்கள் எழுதிய நூல்கள் பலவற்றுக்கு ஆங்கிலத்தில் முன்னுரை வழங்கியுள்ளார்,

திரு. மு. அ. சிதம்பரம் (பி. 1918)

அண்ணாமலை அரசரின் மூன்றாவது மகனான இவர், தமிழ் இசைச் சங்கம் சென்னையில் தொடங்கிய நாள்முதல் இன்றளவும் அதன் செயலராக இருந்து வருகிறார்.

இவரும் இவர் மகன் திரு. ஏ. சி முத்தையாவும் எம், ஏ. சி. அறக் கொடை நிறுவியிருக்கின்றனர். சிறந்த தமிழ் நாவல் அல்லது தமிழ்நாடு மற்றும் தமிழ்ப்பண்பாடு தொடர்பான நுண்கலைகள் பற்றிய (இசை, நடனம், ஓவியம், சிற்பம் மற்றும் கட்டிட வடிவமைப்பு) மற்றும் தமிழ்

ஆராய்ச்சிப் படைப்புகளுக்கும் மிகச் சிறந்த சிறு கதைத் தொகுப்பு, கவிதைகள் தொகுப்பு அல்லது இதிகாசம் அல்லது நாடகம் அல்லது நெடுங்காவியம் ஆகியவற்றுக்கு டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் பரிசினை இந்த நிறுவனம் வழங்குகிறது.

மேற்கண்ட துறைகளில் ஏதேனும் ஒன்றில் மிகச் சிறந்ததாகத் தேர்ந்தெடுக்கப்படும் நூலின் ஆசிரியருக்கு ரொக்கப் பரிசாக ரூ 10,000/- வழங்கப்பெற்றது. 1983 முதல் பரிசுத் தொகை ரூ 20, 000 ஆக உயர்த்தப் பெற்றிருக்கிறது. திட்டம் பற்றிய முழுவிவரங்களைத் தெரிந்து கொள்ள

செயலாளர், நிர்வாகக் குழு,
டாக்டர் ராஜாசர் அண்ணாமலைச் செட்டியார் பரிசு
எம். ஏ. சி. அறக்கொடை
36-40 அரண்மனைக்காரத் தெரு,
சென்னை-600001

என்ற முகவரிக்கு ஒவ்வோர் ஆங்கிலப் புத்தாண்டு பிறந்ததும் எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

இதுவரை கீழ்க்கண்டவர்களுக்குப் பரிசுகள் கொடுக்கப் பெற்றிருக்கின்றன.

1975—திரு. அகிலன்
1976—(1) கூத்த நூல் — திரு. ச. து. ச. யோகி
(2) யாழ்நூல் — விபுலானந்த அடிகள்
(3) பஞ்சமரபு — வெ. ரா. தெய்வசிகாமணி கவுண்டர்
(4) கருணாமிருதசாகரம் — ஆபிரகாம் பண்டிதர்
1977— திரு நீல. பத்மநாபன்
1978— திரு.ம.ப. பெரியசாமிதூரன்
1979— திரு. கோவி மணிசேகரன்
1980— திரு. வி .கணபதி ஸ்தபதி
சிறப்புப் பரிசு—கவியரசர் கண்ணதாசன்
1981— திரு. நா. பார்த்தசாரதி(தீபம்)
1982— திரு.கி.வா.ஜகந்நாதன்
1983— திரு.மீ.ப. சோமசுந்தரம்

கானாடுகாத்தான்

'சிவிசிடி' வேங்கடாசலம் செட்டியார்

அண்ணாமலை அரசருடைய மகள் மீனாட்சி ஆச்சியின் கணவர்.

இவர் தமிழ் இலக்கிய ஆர்வமும் இசைப் புலமையும் மிக்கவராகத் திகழ்ந்தார்.

'திருத்தலப் பயணம்' என்னும் நூல் வெளிவரக் காரணமாக இருந்தார்.

காரைக்குடி அழகப்பர் கல்லூரிச் செயலராக இருந்த போது, தமிழ் ஆராய்ச்சித் துறையை அங்கு நிறுவி தமிழ்க்கடல் ராய சொ-வின் புலமை பயன்படச் செய்தார்.

காரைக்குடி கம்பன் மண்டபம் கட்ட, நன்கொடைகளை வசூலித்த செயலர் இவரே ஆவார்.

புலவர் பலருடன் தொடர்பு கொண்டும் நகைச்சுவை யாக மேடைகளில் பேசியும் இவர் செய்த பணி சாலச் சிறந்தது.

கோட்டையூர் அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார்

அண்ணாமலை அரசரின் மகள் உண்ணாமலை ஆச்சியின் கணவர். இவர் தமிழ்ப் புலவர்களை மதிப்பவர். தமிழ்இசைக்கு அறக்கட்டளைகள் நிறுவியிருப்பவர். மேலைச் சிவபுரி சன்மார்க்க சபையின் புரவலர். பெருவள்ளல்.

தமிழ்க் கடல் 'ராய சொ' நினைவு அறக்கட்டளையை மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் நிறுவியுள்ளார்.

கற்கோயில் கட்டும்போது, பயனுள்ள விரிவான சொற் கோயிலாக அத்தலத்தைப் பற்றிய அரிய பெரிய மலர் ஒன்றைவெளிக் கொணரச் செய்வதும் இவர் இயல்பு

கண்டனூர் திருவாளர் ப. லெட்சுமணன்

பி. 1-3-1938 இவர் அண்ணாமலை அரசரின் மகள் திருமதி லெட்சுமிஆச்சி லெ. சித. பழ. பழனியப்பச்செட்டியார் ஆகியோருடைய மகன் ஆவார்.

28-2-1970இல் இவர் தம் தம்பி திரு. சிதம்பரம், நண்பர் பாரதி ஆகியோருடன் சேர்ந்து இலக்கியச் சிந்தனை என்னும் அமைப்பைத் தொடங்கினார்.

இலக்கியச் சிந்தனையின் செயல்முறை:

ஒவ்வொரு மாதமும் தமிழ் வார, மாதப்பத்திரிகைகளில் வெளியாகும் சிறுகதைகளில் சிறந்தவற்றை ரசனைமிக்க ஆய்வாளர் ஒருவர் தேர்வு செய்வார். மாதத்தின் கடைசிச் சனிக்கிழமையன்று சிறப்புக் கூட்டம் ஒன்றில் அவருக்குப் பரிசளிக்கப்படும். இலக்கியப் பொறுப்புள்ள அன்பர் ஒருவர் சிறப்புரை ஆற்றுவார்.

ஓராண்டின் பன்னிரண்டு படைப்புக்களையும் சீர்தூக்கி அதை அந்த ஆண்டின் சிறந்த சிறுகதையாக அறிவிப்பார், இன்னொரு நடுவர். இவை தொகுக்கப்பெற்று நூல் வடிவம் பெறும். ஒவ்வோர் ஆண்டிலும் தமிழ்ச்சிறுகதையின் தேக்கம், அல்லது வளர்ச்சி எந்தப்போக்கிலிருந்தது என்று கணக்கிட விரும்பும் திறனாய்வாளருக்கு இந்த நூல் ஓர் ஆதாரம் ஆகும்.

பிற மாநிலங்களைச் சேர்ந்த இலக்கியப் பெருந்தகையினர் ஆண்டு விழாவில் பங்கேற்றுச் சிறப்புரை ஆற்றுவார்கள். திருவாளர்கள் சிவராம்கரந்த், அனந்தமூர்த்தி, குஷ்வந்த் ஆகியோர் சிலபொறுக்கு மணிகள். இவர்கள் ஆற்றியுள்ள பேருரைகள் சிறந்த மொழிப்பாலமாக அமைகின்றன.

புதினங்களும் திறனாய்வு செய்யப்படுகின்றன. அவை கையெழுத்துப் படியாகவும் இருக்கலாம். அல்லதுஅந்தஆண்டு பத்திரிகைகளில் தொடராக வெளியாகியும் இருக்கலாம். அதே ஆண்டின் முதற்பதிப்பு வெளியீடாக இருந்தாலும் ஆய்வுபெறத் தகுதியுண்டு.

கையெழுத்துப்பிரதி சிறந்த நூலாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றால் அதைவெளியிடவும் இந்த அமைப்பு துணைசெய்யும். தேர்வு பெறும் நூலுக்கு ரூபாய் ஐயாயிரம் பரிசு வழங்கப்படுகிறது. இதுவரை 14 நூல்களுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றுள்ளன.

ஒரு பேட்டியில் திரு. சிதம்பரம், பின்வருமாறு கூறியுள்ளார்.

''என் தம்பி திரு. சிதம்பரமும் நானும் சிறுகதை இலக்கியம் வளர இந்த விரிவான முறையைக் கையாண்டு ஊக்குவிக்க வேண்டும் என்று விரும்பியதன் விளைவுதான் இலக்கியச் சிந்தனை.

பள்ளி, கல்லூரி நாட்களிலேயே எனக்குத் தமிழில் ஈடுபாடு இருந்தது. திரு.அ ச. ஞா அவர்கள் துணையுடன் ஐயப்பாடுகளைத் தீர்த்துக்கொண்டு நானே படித்தேன்.- புலமை பெற்றேன் இல்லை.

·விமரிசனரைத் தேர்ந்தெடுத்ததும் எங்கள் பணி முடிந்தது. கதையைத் தேர்ந்தெடுப்பது விமர்சகரின் பணி. இதே போல் விமரிசகரைக் குறிப்பிட்ட அவர் ஆண்டின் சிறந்த கதையை முடிவு செய்கிறார். சிறுகதைத் தொகுதிகள் 14, இது வரை வெளிவந்துள்ளன வானதி துணையுடன்.

இலக்கியச் சிந்தனை வழங்கும் பரிசு (ரூ 5,000) பெற்ற நூல்கள் வருமாறு

(1) விட்டல் ராவ்-போக்கிடம்
(2a) அசோகமித்திரன்—18 அட்சரக்கோடு
(2b) வண்ண நிலவன் — கடல் புரத்தில் } இரண்டு நூல்களுக்கும் பகிர்தல்
(3a) ஜெயகாந்தன் — நினைக்கப்படும்
(3b) கி. ராஜநாராயணன் — பிஞ்சுகள் } ,,
(4a) ராஜம் கிருஷ்ணன் — கருப்பு மணிகள்
(4b) பூமணி — பிறகு } ,,
(5a) கோமதி சுவாமிநாதன் — தண்ணீர் தண்ணீர்
(5b) பாலகுமரன் — மெர்க்குறிப் பூக்கள் } ,,
(6) ராஜம் கிருஷ்ணன்–சேற்றில் மனிதர்கள்
(7) ரகுநாதன்-பாரதி காலமும் கருத்தும்
(8) தி. ஜானகிராமன்-நளபாகம்

இலக்கியச் சிந்தனை, தமிழ் இலக்கிய வளர்ச்சியை ஊக்குவிக்கப் பெரிதும் துணை செய்து வருகிறது.

## திரு. ப. சிதம்பரம் B.Sc, BL, M.B.A. (HARVARD)

திரு. லெட்சுமணன் அவர்களின் இளவல் இலக்கியச் சிந்தனையின் தொடக்க கால அமைப்பாளருள் ஒருவர். காங்கிரஸ் கட்சியின் மேடைகளில் தமிழில் முழங்குபவர்.

# 10. கருமுத்து

ஆத்திக்காடு தெற்கூர் கருமுத்து குடும்பம், பண்டிதமணி அவர்கள் குடும்பத்துடனும் மேலைச்சிவபுரியில் சன்மார்க்கசபை நிறுவிய குடும்பத்துடனும் கொள்வினை கொடுப்பினை உறவு கொண்டது.

இலங்கையில் பெரிய அளவில், புதுவகைத் தொழில்கள் செய்துவந்ததால், அந்தநாடெங்கும் செல்வாக்குப்பெற்றிருந்த குடும்பமாகவும் இது திகழ்ந்தது. தமிழறிஞர்பலரும் கருமுத்து குடும்பத்துடன் எந்த வகையிலாவது தொடர்புடையவராக இருந்திருக்கின்றனர்.

சன்மார்க்கசபை தோன்றியபோது, அதாவது 1909-இல் கருமுத்து அருணாசலம் செட்டியாரும் அவர் தம்பிமார்களும் சபைக்கு 5,000 ரூபாய் நன்கொடை வழங்கினர். அன்றைய விலைவாசியில் இதுமிகப்பெரிய தொகையாகும். அதை வியந்து ஒரு புலவர் பாடிய பாட்டு இது:

''ஈதெற்கூர் ஈதெற்கூர்'' என்றே பல்
நல்லறமும் இயைந்து நாடும்
ஆதெற்கூர்ப் புனைஅருணா சலமுமவன்
சோதரரும் அரிய கல்விக்
காதற்கோர் கூறுதவு மாதேவன்
திருவருளால் வாழி வாழி!

## கருமுத்து அழகப்பச் செட்டியார் (1876-1934)

கருமுத்து பொதுக்குடும்பத்தின் திருப்பணியாக சிக்கல் சிங்காரவேலர் கோயிலைக் கற்கோயிலாகக் கட்டி முடிக்கும் பொறுப்பை இவர் ஏற்றுச் செம்மையாக நடத்தி இனிது நிறைவேற்றினார். பல்லாண்டுகள் அந்தக் கோயிலின் அறங்காவலராகவும் இருந்தார்.

இலக்கிய நிகழ்ச்சிகளும் தமிழிசை அரங்குகளும் கோயில் விழாக்களின்போது நடைபெற வசதியாக, பெரியதொரு மண்டபத்தைக் கோயில் வாயிலில் இவர் கட்டினரர்.

தம் வாழ்நாள் முழுவதும் மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபையுடன் தொடர்பு கொண்டிருந்தார்.

சோழவந்தானூர் மகாவித்துவான் அரசன் சண்முகனாரை இவர் இலங்கைக்கு அழைத்துச் சென்றார். இலங்கையின் முடி சூடா மன்னராக விளங்கிய சர். பொன்னம்பலம் இராமநாதன் மற்றும் ஈழநாட்டுச் செல்வர்களிடமும் சண்முகனாரை அறிமுகப்படுத்தினார்.

## கலைத்தந்தை கருமுத்து தியாகராசச் செட்டியார் (1893-1974)

இவர், அருணாசலம் செட்டியார், அழகப்பச்செட்டியார் ஆகியோரின் தம்பி ஆவார்.

இளமையில் இவர் கொழும்பில் கல்வி பயின்றார். பெரும் புலமை மிக்க ஆசிரியர்களிடம் ஆங்கில மொழியைப் பயின்று, அந்த மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்களே வியக்கும் வண்ணம் ஆங்கிலத்தில் எழுதவும் பேசவும் ஆங்கிலச் சொற்களை உச்சரிக்கவும் திறமை பெற்றார். எனினும், அவ்வாறே தமிழிலும் பயிற்சி பெற வேண்டும் என்ற எண்ணமே இந்த இளைஞர்க்குத் தலையாய எண்ணமாக இருந்தது.

மாணவராக இருந்தபோதும், ஆங்கில நாளிதழ் ஒன்றில் துணை ஆசிரியராகப் பணி புரிந்தபோதும், தியாகராசர் தனி மாணவராக சிற்கைலாசப் பிள்ளை என்பாரிடம், தமிழ் கற்றார். சிற்கைலாசப் பிள்ளை யாழ்ப்பாணத்தவர்; இலக்கண இலக்கியங்களைக் கசடறக் கற்றவர். பல நூல்களை யாத்தவர். தம் மாணாக்கர்க்கு இலக்கியச் சுவையில் ஈடுபாடு ஏற்படச் செய்யும் ஆற்றல் கைவரப் பெற்றவர்.

சர். பொன். இராமநாதன் அவர்களுடைய இளவல் சர் பொன்னம்பலம் முத்துக்குமாரசுவாமியும் தியாகராசரும் நாள் தோறும் இரண்டு மணி நேரம் சிற்கைலாசப்பிள்ளை அவர்களிடம் ஈராண்டுகள் கொழும்பு மாநகரில் தமிழ் நூல்களைப் பயின்றனர். சர் பொன். முத்துக்குமாரசுவாமி, தாயுமானவர் பாடல்கள் உட்படச் சில தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார்.

குடும்பத்தில் பங்கு பிரித்துக்கொண்டு, ஏதாவது ஒரு தொழில் தொடங்க விரும்பி தியாகராசர் மதுரைக்கு வந்தார். தொழில் பற்றிய முடிவுக்கு வர இரண்டு மூன்று ஆண்டுகள் ஆயிற்று. அந்த இடைக்காலத்தில், சில மாதங்கள் மகா வித்துவான் அரசன் சண்முகனார் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தங்கியிருந்தார். நாள்தொறும் அங்கே சென்று அவரிடம் தொல்காப்பியம் படித்ததாக, தியாகராசரே எழுதியிருப்பதிலிருந்து நமக்குத் தெரிகிறது.

சிறு பருவத்தில் ஏற்பட்ட இந்தத் தமிழ்க்காதல் தியாகராசரின் வாழ்நாள் முழுவதும் நீடித்து நிலவியது. கணக்காயர் நாவலர் சோமசுந்தரபாரதியார் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பேராசிரியராகப் பதவியேற்கச் செல்லுவதற்கு முன், பன்னிரண்டு ஆண்டுகள் ஒவ்வொருநாளும் தியாகராசர், பாரதியாருடன்தமிழ் மொழி இலக்கியம் குறித்து அரைமணி நேரமாவது உரையாடுவாராம். இந்த உரையாடலுக்கு உரிய நேரம் இரவு8-30 மணி. திருப்பரங்குன்றம் திருக்கோயிலில் வழிபாடு முடித்துவிட்டு மீனாட்சி ஆலைக்குத் திரும்பும் வழியில் வழக்கறிஞர் சோமசுந்தர பாரதியாருடைய பசுமலை மாளிகை இந்தச் சந்திப்புகளின் நிகழிடமாக விளங்கியது.

சங்க இலக்கியங்களில் பல நூல்கள் தியாகராசர்க்கு மனப்பாடமாக இருந்தன. பிற்காலத்தில் தியாகராசர் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிய விரும்பி, மனுச் செய்த முதுகலைப் பட்டதாரிகள் உரிய நூல்களையோ அவற்றின் பகுதிகளையோ ஒப்புவிக்கஇயலாமல் தடுமாறினர். அப்போது கல்லூரி நிறுவிய வள்ளலே தம் வினாக்களுக்கு விடையும் விளக்கமும் அருவி நீரின் சாரல்காலத்து வீழ்ச்சியை போலச் சொல்லுவார். பேட்டிக்கு வந்தவர் மட்டுமன்று உடனிருக்கும் தமிழ்ப் பேராசிரியர்களான மூதறிஞர்களும் முதுபெரும்புலவர்களும் வாய்க்குள் ஈ செல்லும் அளவுக்குத் திறந்தவாய் மூட இயலாமல் தியாகராசரின் புலமையை வியந்தனர்.

திருவாசகம் முழுவதும் தியாகராசர்க்குப் பாராயணமாக இருந்தது. எந்தப்பகுதிக்கும் புதிய உரை கூறும்அளவுக்கு அந்த நூலில் ஈடுபாடு கொண்டு நுண்மாண் நுழைபுலம் பெற்றிருந்தார்.

தம் துணைவியார் திருமதி இராதா தியாகராசன் அம்மையாரை, முறையாகத் தமிழ்ப் பயிலச் செய்து திருவாசகத்தைப் பற்றி ஆராய்ந்து பி எச். டி பட்டம் பெறும் நிலையை அடையச் செய்ததும் கலைத் தந்தை அவர்களின் உள்ளப் பாங்கினை உணர்த்தும்,

இளமை தொட்டே தமிழ் நூல்களை வாங்கி, முழுமையாகப்படித்து அவற்றைப் பேணி வந்தார். பல நகரங்களிலும் அவர் அமைத்துக் கொண்ட கவினுறு மாளிகை ஒவ்வொன்றிலும் சிறந்த தமிழ் நூலகத்தையும் உருவாக்கிக் கொண்டார்.

1930 ஆம் ஆண்டு அளவில் அச்சிடப் பெற்று மீனாட்சி ஆலை பங்காளிகளுக்கு அனுப்பப் பெற்ற ஆண்டறிக்கையில் ஆங்கிலத்தோடு அருந்தமிழும் சரிசமமான இடம் பெற்றிருப்பதையும் பார்க்கிறோம்.

மகாமகோபாத்தியாயர்களான டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் பண்டிதமணி அவர்கள் ஆகிய இருவருடனும் இளமையிலேயே பழகும் பேறு இவர்களுக்குக்கிட்டியது. சென்னை திருவான்மியூரில் கலைநடம் பயிலும் கலாச்சேத்திரத்துடன் இணைந்து இயங்கும் உ. வே. சாமிநாத ஐயர் நூல் நிலையத்தின் வளர்ச்சியில் பேரார்வம் காட்டி அதற்கு உறுதுணையாக இருந்தார் கலைத் தந்தை.

அரசியல் ஈடுபாட்டால் தேசிய இயக்கத்தைச் சார்ந்திருந்த தியாகராசர், ஹிந்தி மொழி இந்திய அரசு மாநில அரசு ஆகியவற்றின் வாயிலாகத் திணிக்கப்பட்டால் தமிழுக்கு ஊறு உண்டாகும் என்று கருதினார். அதனால் காங்கிரஸ் கட்சியினின்றும் விலகிக்கொண்டார். 1937-இல் மூதறிஞர் இராஜாஜி அவர்கட்கு இவர் வரைந்த நீண்ட முடங்கல் ஒரு சிறு நூலாக அச்சிடப் பெற்றிருக்கிறது. அது ஒரு பேரிலக்கியமாகும்.

தனித்தமிழ் ஈடுபாடு தியாகராசர்க்கு இயல்பாகவே ஏற்பட்டு, படிப்படியாக வளர்ச்சி பெற்றது. 1941 - இல் விபுலானந்த அடிகளாரை அழைத்து வந்து மதுரையில் ஒரு தமிழ் விழாவை சர் பி .டி. ராசனும் சோமசுந்தரபாரதியாரும் தியாகராசரும் ஏனையோரும் புதுமண்டபத்தில் நடத்தினார்கள். பிற்காலத்தில்(1948—1953) தமிழ்வளர்ச்சிக்கழகத்தின் தமிழ் விழாக்கள் பெரியஅளவில் நடைபெறவும், அவற்றையும் மிஞ்சும் வகையில் உலகம் தழுவிய தமிழ் மாநாடுகள் கூட்டவும்

புதுமண்டபத்தில் 194:-இல் நடைபெற்ற மாநாடு வழிகாட்டி யாக இருந்தது. அழைப்பிதழ்களில்'ஸ்ரீ' என்னும் சொல்லுக்குப் பதிலாக 'திரு' என்ற அடைமொழியையே பயன்படுத்த வேண்டுமென்று தியாகராசர் பெரியதொரு போராட்டமே நடத்தினாராம். மாநாட்டுச் செயற்குழு மூன்று முறை கூடிய பிறகே இந்தக் கருத்தை ஏற்றுக் கொண்டதாம்.

ஒரு சொல்லைப் படிக்க அல்லது கேட்க நேர்ந்தால் அதன் வரலாறு பற்றிய ஆராய்ச்சியிலும் அதனுடைய வேர்ச் சொல் என்ன என்பதைத் தெரிந்து கொள்வதிலும் கலைத் தந்தை தியாகராசர் தம் பணிகளுக்கிடையே மணிக் கணக்கில் செலவிடுவார். பெருந் தொழில் தொடர்பாக அவருடைய ஆணையை எதிர் பார்த்து, கோப்புகளுடன் நிற்கும் ஆலை அலுவலர்களாலும் வங்கி அலுவலர்களாலும் அன்று முழுவதும் அவர் கவனத்தை ஈர்க்க இயலாது.

பிறப்பாலேயே செல்வராக இருந்த கலைத் தந்தை அவர்களிடம் பெருஞ் செல்வம் மீண்டும் வந்தடைந்தபோது அது ஒன்று பத்தாகி, நூறாகிப் பெருகியது. அவ்வமயம் பெரும் புலவர் பலரை தியாகராசர் கல்லூரிக்கும் தம் அரண்மனைக்கும் நியமித்தார்.

குறிப்பிடத்தக்கவர்கள்; உரைவேந்தர் அவ்வை துரை சாமிப்பிள்ளை, பேராசிரியர் அ. கி பரந்தாமனார், டாக்டர் மா, இராசமாணிக்கனார், பேராசிரியர். அ. மு. பரம சிவானந்தம், அகராதிப் பணியை முடித்துச் சென்னைப் பல்கலைக் கழகத்திலிருந்து ஓய்வு பெற்றிருந்த டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார், நாகர்கோயில் கல்லூரி யிலிருந்து துரத்தப்பட்ட பேராசிரியர் சி. இலக்குவனார், பெரும் புலவர் சேலம் வரத நெஞ்சைய பிள்ளை.

தமிழ் வளர்ந்த மதுரையில் 1920 க்குப் பிறகு தமிழ் மொழி வளர்ச்சியும் தமிழார்வமும் வறண்டு கிடந்தன. இத்துணைப் புலவர்களும் மதுரைக்குவர நேர்ந்ததால், மதுரை மாநகரில் நாள்தொறும் தமிழ்க் கூட்டங்கள் பெருகின. தமிழ் உணர்ச்சி ஓங்கிற்று. திருவள்ளுவர் கழகம் வீறுடன் செயல் பட்டது. தமிழ்ச் சங்கத்தின் பொன்விழா சீருடன் கொண்டாடப் பெற்றது.

இந்தப் புலவர்களைப் பயன்படுத்தி, மதுரை இராமநாத புரம் திருநெல்வேலி மாவட்டங்கள் எங்கணும் தமிழ் மன்றங்கள் புதிதாகத் தோன்றின அல்லது மறுமலர்ச்சி பெற்றன.

தமிழ்வளர்ச்சி தொடர்பான அனைத்து முயற்சிகளுக்கும் கலைத்தந்தை ஆதரவாக இருந்தார். அளவோடு வழங்கினார்.

டாக்டர் இலக்குவனார் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த தொல்காப்பியம் வெளிவரப் பொருளுதவினார்.

சென்னைப் பல்கலைக் கழகப் பகுதியில் தலைநகராகிய சென்னை மாநகர்க்கு வெளியே தமிழ்முதுகலை வகுப்பு மதுரை தியாகராசர் கல்லூரியிலேயே தொடங்கப்பெற்றது. நாடறிந்த பெரும் புலவர்கள் அங்கே பணி செய்ததால், தென்மாவட்டங் களில் நல்ல தமிழ் கற்க விழைந்த இளைஞர்கள் 1950க்குப் பிறகு மதுரை தியாகராசர் கல்லூரிக்கு விரைந்தனர்.

இக்கல்லூரியில் ஆண்டுதோறும் ஒரு புலவர்க்கு விழா எடுக்கப்பட்டது. இந்த ஏற்பாடு, தமிழக அரசு இப்போது புலவர்களுக்கு நூற்றாண்டு விழாக் கொண்டாடுவதற்கு முன்னோடியாக அமைந்தது எனலாம். இன்றைய தமிழ் வளர்ச்சியில் முதன்மை பெற்றுள்ள டாக்டர் காளிமுத்து (அமைச்சர்), டாக்டர் அவ்வை நடராசன் (தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி--பண்பாட்டுச் செயலர்), புதுக்கவிதை முன்னோடி களான மு. மேத்தா, நா. காமராசன், அப்துல்ரஹீம், மீரா போன்றோர் தியாகராசர் கல்லூரியில் உருவானவர்களில் சிலர் ஆவர்.

"கருமுத்து இல்லாவிட்டால் இந்தக் காளிமுத்துஇல்லை" என்று அமைச்சர், தமிழ் இலக்கிய டாக்டர் பட்டம் பெற்ற திரு. காளிமுத்து கூறும் அளவுக்குத் தமிழ் உணர்ச்சி பெற்றவர் பலர் ஆவர்.

இலக்கிய விழாக்கள், மாநாட்டு உரைகள் வானொலிப் பேச்சு ஆகியவற்றுக்குக் கலைத்தந்தை அவர்கள் இசைவு தெரி வித்துவிட்டால், அங்கு பேச வேண்டுவன குறித்து ஆழமாயும் அழுத்தமாயும் சிந்திப்பார். பின்னர் அந்தச் சிந்தனைகளுக்குச் செம்மையான எழுத்து வடிவம் கொடுப்பார். மீண்டும் மீண்டும் திருத்துவார். நூற்றுக்கு மேற்பட்ட நூல்களைத் தமிழ்ப் பேராசிரியர்களுடன் அமர்ந்து புரட்டிப்பார்த்து, மேற்கோள்

களைச் சேர்ப்பார். உரிய சொற்களைத் தேடிப் பிடித்து, அந்த உரையில் இடம் பெறச் செய்வதற்காக மணிக்கணக்கில் மீனாட்சி ஆலை வளமனையில் பட்டி மண்டபமே நிகழும்!

தமிழ்நாட்டில் நல்லதமிழ் பரவவேண்டும் என்பதற் காகவே 'தமிழ்நாடு' நாளிதழ் தொடங்கினார். ஆண்டுதொறும் ஒரு நூறாயிரம் இழப்பு ஏற்பட்டது. ஏறத்தாழ இருபது ஆண்டு கள் இதழ் இயங்கியது. கடை விரித்தோம் வாங்குவாரில்லை என்ற நிலையில் இதழ் நிறுத்தப்பட்டது.

கலைத் தந்தை அவர்களுடன் பழகிய ஆலை அரசர்கள், ஏனைய தொழிலதிபர்கள், நண்பர்கள், உறவினர், பணியாளர், மதுரை வங்கியின் இயக்குநர்கள் ஆகிய அனைவரும், அவர் தொடர்பால் தமிழ்ப் புலவர்களை இனங் கண்டு மதிக்கத் தொடங்கினர். தமிழையும் மதிக்கத் தலைப்பட்டனர்.

பல்லாண்டுகள் தமிழ் பயின்று பழந் தமிழ் நூல்களை ஆராய்ந்து ஐரோப்பிய மொழிகள் சிலவற்றில் பெயர்த்துப் புகழ் பெற்ற, செக்கோசுலவாக்கிய நாட்டுத் தமிழறிஞர் டாக்டர் கமில் சுவலபிலை, கலைத்தந்தை அவர்கள் மதுரையில் வரவேற்றுப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்கள்.

1968-இல் பேரறிஞர் அண்ணா அவர்கள் ஆட்சியில் சென்னை மாநகரில் சிறப்பாக நடைபெற்ற இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டுப் பேராளர்கள் மதுரைக்கு வந்திருந்த போது, அவர்களுக்குக் கலைத்தந்தை அவர்கள் விருந்து படைத்து அனைவர்க்கும் தனித்தனியே பரிசில்கள்வழங்கினார்.

தமிழகப் புலவர் குழுவினர்க்கும் ஒரு முறை இவ்வாறு சிறப்புச் செய்தார்.

இசுபானிய நாட்டிலிருந்து வந்த ஒரு திராவிடர் (*A DRAVIDIAN FROM SPAIN*)என்று தம்மைக் கூறிக் கொண்ட திராவிட மொழியியல்—திராவிடர் தொல்லியல்—திராவிடர் வரலாற்று ஆய்வாளரான ஹீராஸ் பாதிரியாரிடம் கலைத் தந்தை அவர்கள் மிகப் பெரிய அளவில் மதிப்பு வைத்திருந் தார். உடல் நலம் குன்றி, மரணப் படுக்கையில் அவர் இருந்தபோது, கலைத்தந்தை அவர்கள் காட்டிய பரிவு ஒரு தனிநூலுக்கு உரியது.

தமிழரின் தொன்மையான கட்டிடக் கலைக்கும் கலைத் தந்தை அவர்கள் புரவலராக விளங்கி வந்தார்கள்.

மதுரையில் வகை வகையான புதிய கல்லூரிகளைச் சிறந்த முறையில் தம் பொருள் கொண்டு கலைத்தந்தை அவர்கள் அமைத்ததால், அங்கு ஒரு பல்கலைக் கழகம் உருவாக வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. தமிழுக்கு ஏற்றம் கொடுத்து தமிழ் அறிஞர்களான பன்மொழிப் புலவர் தெ. பொ. மீ., டாக்டர் மு. வ., கவிஞர் குலோத்துங்கன் என்ற வா. செ குழந்தைசாமி, டாக்டர் வ. சுப மா. ஆகியோர் அடுத்தடுத்துத் துணைவேந்தர்களாக வருவதற்குரிய அடித்தளத்தை மதுரைப் பகுதியில் போட்டவர் கலைத்தந்தை,

உரைவேந்தர் அவ்வை துரைசாமிப் பிள்ளை அவர்களிடம் முறையாகத் தமிழ் பயின்றவரும் கலைத்தந்தை அவர்களுடைய வாழ்க்கைத் துணைவியாருமான டாக்டர் இராதா தியாகராசன் அவர்கள் திருவாசகத்தில்-அருளியல் என்ற தலைப்பில் தமிழ் நூல் ஒன்றை இயற்றியுள்ளார்கள். இது, பி எச். டி பட்டத்திற்கு இவர் படைத்த ஆங்கில ஆய்வினை ஓரளவு தழுவியதாயினும், தனி நூலாக ஆக்கப்பெற்றது. தனிப்பட்ட முறையிலும், தியாகராசர் கல்லூரி வாயிலாகவும், பழனி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் வாயிலாகவும் இவர்கள் ஒல்லும் வகையாலெல்லாம் தமிழ்ப்புலவர்களை தமிழ் அறிஞர்களை ஆதரித்து வருகிறார்கள். இவர்கள் மகனார் திரு. தி. கண்ணன், சிறந்த முறையில் தமிழில் எழுதவும், பேசவும் ஆற்றல் கைவரப் பெற்றவராக விளங்குகிறார்.

தி. மாணிக்கவாசகம், தி.சு. சொக்கலிங்கம் ஆகியோரைப் பற்றிப் பிறிதோரிடத்தில் கூறுவோம்.

# 11. வை. சு. சண்முகனார்

1918-ஆம் ஆண்டில் பாரதியார் புதுச்சேரியில் இருந்த பொழுது அவரிடம் கடிதத்தொடர்பு கொண்டேன். 7-2-1919 அன்று மாலை 3 மணிக்குக் கீழக் கடையத்தின் தென்கிழக்கு மூலைக் கோடியில் இருந்த பாழடைந்த ஓர் வீடு தேடிச்சென்று இங்குதான் பாரதியார் இருக்கிறாரா என்று வினாவியபோது உள்ளேயிருந்து, நல்ல சிவந்த மேனி மழுங்கச்சிறைத்த வழு வழுப்பான தலை, கரிய மின்னலிடும் உறுதியான தாடி மீசை களுடன் அசல் 'முசல்மான்' வடிவில் பாரதியார் வந்து அமைதி யாக நின்றார். ஐயமுற்று மூன்று விநாடி நேரத்தில் அவரின் விரிந்த, சுடரொளி வீசும் கண்களைக்கண்டு உறுதி பெற்றுக் கைகூப்பி வணங்கினேன்.

'கானாடுகாத்தானிலிருந்து வருகின்றீர்களா?' என்று அவர் கேட்டதும் என்னை அறியாமல் எனது கண்களில் நின்று கண்ணீர்த் துளிகள் விழுந்தன. எனது வாய் பேசத் துணிய வில்லை.

ஆம் என்று மட்டும் கூறிவிட்டு அருள் ஒளிவீசும் அவர் முகத்தையே பார்த்துக்கொண்டு நின்றேன்.

இவ்வாறு கானாடுகாத்தான் வை. சு. சண்முகனார் அவர்கள்தாம் முதன்முதலாகக் கவியரசர் பாரதியாரைச் சந்தித்த நிகழ்ச்சியைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

கானாடுகாத்தான் வை. சு சண்முகனார் அவர்கள் தலை சிறந்த தமிழறிஞர். கவிஞர்களின் புரவலர். ஒழுக்கத்தின் உருவ மாய், கம்பீரத்தின் சின்னமாய், அருளின் இல்லமாய் வாழ்ந்தவர்.

கவியரசர் பாரதியாரை, இன்று அவரைப் போற்றும் தலைவர்களும், பிறரும் புறக்கணித்து ஒதுக்கிய காலத்தே அவருக்கு உற்றுழி உதவியும்-உறுபொருள் கொடுத்தும் பேணி யவர். அதியமான் ஔவையாருக்கு நெல்லிக்கனி கொடுத்துப் பொன்றாப் புகழடைந்ததுபோல, பாரதியாருக்குக் காலத்தால் உதவிசெய்து புகழ்கொண்டவர் இவர்.

பாரதியார் கானாடுகாத்தான் திரு.வை. சு.சண்முகனார் வீட்டிற்கு வந்திருந்தார். அப்பொழுது கையைக் கட்டிக் கொண்டு விறைப்பாக அங்கும் இங்கும் உலவிக்கொண்டிருந் தார். 'ஏதாவது கவிதை பாடலாமே' என்றார் வை. சு. ச. கவிதை, வேண்டும் போதெல்லாம் வராது; அதுதானாக வர வேண்டும்' என்றார் பாரதியார். பிறகு திடீரென்று 'கவிதை தானே, இதோ பாடுகிறேன், கேளுங்கள்' என்று சொல்லி இப் பாடல்களைப் பாடத் தொடங்கினார்.

### செட்டி மக்கள் குலவிளக்கு

பல்லாண்டு வாழ்ந்தொளிர்க! கானாடு
காத்த நகர்ப் பரிதி போன்றாய்,
சொல்லாண்ட புலவோர்த முயுர்த்துணையே,
தமிழ்காக்குந் துரையே, வெற்றி
வில்லாண்ட இராமனைப்போல் நிதியாளும்
இராமனென விளங்குவாய் நீ
மல்லாண்ட திண்டோளாய், சண்முகநா
மம் படைத்த வள்ளற் கோவே. 1

செட்டி மக்கள் குலத்தினுக்குச் சுடர் விளக்கே
பாரதமா தேவி தாளைக்
கட்டியுளத் திருத்திவைத்தாய், பராசக்தி
புகழ்பாடிக் கனிந்து நிற்பாய்,
ஒட்டியபுன் கவலை பயஞ் சோர்வென்னும்
அரக்கரெல்லாம் ஒருங்குமாய
வெட்டியுயர் புகழ்படைத்தாய் விடுதலையே
வடிவமென மேவி நின்றாய். 2

தமிழ் மணக்கும் நின்னாவு; பழவேத
உபநிடத்தின் சார மென்னும்
அமிழ்துநின தகத்தினிலே மணம் வீசும்;
அதனாலே யமரத் தன்மை
குமிழ்படநின் மேனியெலா மணமோங்கும்;
உலகமெலாங் குழையுமோசை
அமிழ்படுவேய்ங் குழலுடைய கண்ணனென
நினைப்புலவோர் ஓதுவாரே 3

பார்த்த தனாதிபதி யென நினையே
வாழ்த்திடுவார் பாரிலுள்ளோர்;
ஈரமிலா நெஞ்சுடையோர் நினைக்கண்டா
லருள்வடிவ மிசைந்து நிற்பார்;

நேரறியா மக்களெலா நினைக்கண்டால்
நீதி நெறி நேர்ந்து வாழ்வார்.
யாரறிவார் நின் பெருமை? யாரதனை
மொழியினிடை யமைக்க வல்லார்? 4

பலநாடு சுற்றி வந்தோம்; பலகலைகள்
கற்றுவந்தோ மிங்கு பற்பல்
குலமார்ந்த மக்களுடன் பழகி வந்தோம்;
பலசெல்வர் குழாத்தைக் கண்டோம்;
நிலமீது நின்போலோர் வள்ளலையாங்
கண்டிலமே, நிலவை யன்றி
புலனாரச் சகோரபக்ஷி களிப்பதற்கு
வேறு சுடர்ப் பொருளிங் குண்டோ? 5

மன்னர்மிசைச் செல்வர்மிசைத் தமிழ்பாடி
யெய்ப்புற்று மனங்கசந்து
பொன்னனைய கவிதையினி வானவர்க்கே
யன்றி மக்கட் புறந்தார்க் கீயோம்
என்னநம துளத்தெண்ணி யிருந்தோமற்
றுன்னிடத்தே இமையோர்க் குள்ள
வன்னமெலாங் கண்டு நினைத் தமிழ்பாடிப்
புகழ்தற்கு மனக்கொண் டோமே. 6

மீனாடு கொடியுயர்த்த மதவேளை
நிகர்த்தவுரு மேவி நின்றாய்
யா[ம்] நாடு பொருளையெமக் கீந்தெமது
வறுமையினை யின்றே கொல்வாய்
வானாடு மண்ணாடுங் களியோங்கத்
திருமாது வந்து புல்கக்
கானாடு காத்தநக ரவதரித்தாய்,
சண்முகனாங் கருணைக் கோவே.

சித்தார்த்தி-ஐப்பசி யரு.
1919, அக்டோபர் 31,
கானாடுகாத்தான்

சி. சுப்பிரமணிய பாரதி

---

காரைக்குடியிலிருந்து வந்த 'எழில்' பத்திரிகையின் ஏவிளம்பி ஆண்டு மாசித் திங்கள் இதழில் 65-69 பக்கங்களில் வெளிவந்தது. சென்னை, சக்தி காரியாலயம் வெளியிட்ட "பாரதியார் கவிதைகள்" நான்காம் பதிப்பில் இக் கவிதைகள் சேர்க்கப் பெற்றுள்ளன.

# 12. ஏனைய புரவலர்கள்

பூமா திருந்தென் புவிமா திருந்தென்ன பூதலத்தில்
நாமா திருந்தென்ன நாமிருந் தென்ன நன்னாவலர்க்குக்
கோபான முகர் மால் சீதக் காதி கொடைமிகுந்த
சீமானிறந் திட்டபோதே புலமையும் செத்ததுவே.

—படிக்காசுத் தம்பிரான் பாடிய சரமகவி.

பாரி வள்ளலின் காலந் தொட்டு இன்றளவும் புரவலர் பலரை ஈன்றெடுத்த பெருமை செட்டி நாட்டுக்கு உண்டு. அத்தகைய பெரு மக்கள் சிலரின் தமிழ்ப்பணியை இக்கட்டுரையில் சுட்டுவோம்.

தமிழ்ப் புரவலர்களாக இருந்தபெருமை மூவேந்தர்க்கே உரியதாகும். முடிவேந்தர் மூவரும் இயல்வல்ல புலவர்களையும் இசையிற் சிறந்த பாணர்களையும் நாடகம் ஏத்தும் கூத்தர்களையும் 'பொன்னும் மணியும் பூந்துகிலும் பொற்பட்டும் இன்ன பிறவும்' இனிது அளித்து ஆதரித்தனர்.

## மருது பாண்டியர்

பழந்தமிழ்மன்னர்களைப் போலவே 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் செட்டிநாடு உள்ளிட்ட பகுதியை ஆண்ட மருது பாண்டியரும் தமிழ்ப் புலவர்களை ஆதரித்தார். இவரது விருப்பப்படியே சாந்துப்புலவர் 'மயூரகிரிக் கோவை' பாடினார். மருதரசர் அவையில் 21 தமிழ்ப் புலவர் இருந்ததற்கு ஆதாரங்கள் உள்ளன. சங்க கால மன்னர் போல, மருதரசரும் தமிழ்ப் புலவர்கட்குத் தலைமையிடம் தந்தும் பரிசு பல நல்கியும் அவர்களை ஆதரித்தார்.

அவர்க்குப் பின்னர் அத்தகைய சிறப்பு செட்டிநாட்டினர்க்கே உண்டு என்று துணிந்து கூறலாம். அரசர் பின்னோர் வணிகர் என்று இளங்கோ இயம்பியது இன்றளவும் பொருத்தமாக உளது.

*பெத்தாச்சி வள்ளல் [இறந்தது 30-4-1924]

ஆண்டிப்பட்டி குறு நில மன்னராக விளங்கியவர்களும் கானாடு காத்தானைச் சேர்ந்தவர்களுமான திவான் பகதூர் சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியார் வள்ளல் உள்ளம் படைத்தவர். கருவூரில் கொலு வீற்றிருந்து அவர் புலவர்க்கு வாரி வழங்கியுள்ளார். ''அவரிடத்தில் பரிசு பெற்ற பாவலரும் நாவலரும் கலைவாணர்களும் எண்ணத் தொலையாதவர்'' என்கிறார் நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை. பெத்தாச்சி செட்டியார் நான்கு ஆண்டுகள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் துணைத் தலைவராக இருந்தார். அச்சங்கத்திற்குப் பல்லாயிரம் ரூபாய் பொருளுதவி செய்துள்ளார். கரந்தைத் தமிழ்ச்சங்கத்துடனும் இவருக்கு மிகுந்த தொடர்பு உண்டு. கரந்தை தமிழ்ச் சங்க ஆண்டு விழாக்களிலே மூன்றாம் ஆண்டிலும் பன்னிரண்டாம் ஆண்டிலும் இவர்கள் தலைமை தாங்கியிருக்கிறார்கள். 1923-ஆம் ஆண்டு செப்டம்பர் திங்களில் பெத்தாச்சி வள்ளல் கரந்தைத் தமிழ்ச் சங்கத்துக்குக்கட்டிடம் கட்ட நிலம் வாங்குவதற்காகப் பொருளுதவி செய்தார்; தம் அரண்மனைப் புலவராயிருந்த திருஞானசம்பந்தக்கவிராயரையும் சங்கத்திற்கு வேண்டும் உதவிகளைச் செய்யுமாறு பணித்து, அவருக்கு ஏற்படும் செலவுகளையும் தாமே ஏற்றுக் கொண்டார். ஏராளமான தமிழ் நூல்களையும் வழங்கினார். 'பெத்தாச்சி புகழ் நிலையம்' என்னும் இந்நூல் நிலையம் அவர் இறந்த பின்னர் அவருடைய தம்பி சர். மு. சித. முத்தையச் செட்டியார் அவர்களால் திறந்து வைக்கப்பெற்றது. அப்போது கொடுக்கப்பெற்ற வரவேற்பிதழில் காலஞ் சென்ற பெத்தாச்சி வள்ளலை,

''எங்கள் சங்கத்தின் எழிற்புர வலனாய்
ஆயிரம் ஆயிரம் ஆயமாப் பொருளொடு
எண்ணில் அடங்கா தியல் நூலும்
பிறவும் அருளியும் அறவுரு வாய
பெத்தாச்சியாய நற்றமிழ் வள்ளல்''

என்று கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார் பாராட்டியுள்ளனர்.

---

*பெத்தாச்சி—'அன்பினால் கட்டுண்ட தாயைப் போன்ற அன்புடையவன்'

பாளையங்கோட்டைச் சைவ சபைக்கும் பெத்தாச்சி வள்ளல் பெரும் பொருள் உதவியுள்ளார்; காயக சிகாமணி அரிகேச நல்லூர் முத்தைய பாகவதரைப் பெரிதும் ஆதரித்துள்ளார். திருவாங்கூர்ப் பல்கலைக் கழக ஆராய்ச்சித்துறைத் தலைவராயிருந்த மு. இராகவ ஐயங்கார் அவர்கள் இயற்றிய சேரன் செங்குட்டுவன் என்னும் நூல் இவர்கள் உதவியாலேயே வெளிவந்தது. 'இந்நூலின் நாயகனான சேரர் பெருமான் வீற்றிருந்து ஆட்சி புரிந்த வஞ்சிமா நகரின் பரிபாலனத் தலைமை பூண்டுள்ள இப்பிரபுவுக்கு அவனது வரலாற்றுநூலை ஆதரிக்கும் உரிமை இயல்பாக உண்டன்றோ' என நூலாசிரியர் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

பெத்தாச்சி வள்ளல் 122 மாணவர்க்குத் திங்கள்தோறும் பொருள் அனுப்பி அவர்கள் கல்வி கற்க உதவி வந்தார். ஒரு முறை, ஒரு நண்பர் அவரிடம் "எல்லாச் செல்வமும் நிறைந்த தங்களுக்குக் குழந்தைகள் இல்லாத ஒரு குறை மட்டும் இருக்கிறது. சுவீகார மகனாக ஒருவரை ஏற்றுக்கொண்டால், இந்தக் குறையும் நிறையாகுமே" என்றாராம் அதற்கு வள்ளல் 'எனக்கு 122 குழந்தைகள் உள்ளனர்' என்று சொல்லி அவர்களுடைய பெயர்களையும் படித்தாராம். இத்தகையாரே உண்மை வள்ளல்கள் ஆவர்.

பெத்தாச்சிசெட்டியார் உதவியால் ஏராளமானநூல்கள் பதிப்பிக்கப் பெற்றன. அவற்றின் பட்டியலை முறையாகத் தொகுக்க இயலவில்லை. அரசன் சண்முகனாரின் மாணவரான ம. கோபாலகிருஷ்ணய்யர் இயற்றிய 'அரும் பொருட்டிரட்டு' முதலிய நூல்களும் பல ஆங்கில நூல்களின் மொழிபெயர்ப்புகளும் குறிப்பிடத்தக்கவை. இவை பெரும்பாலும் 1915-ஆம் ஆண்டில் வெளிவந்தன.

## முறையூர் வள்ளல் பழ. சி. சண்முகம் செட்டியார்

(26—1—1875—9—7—1930)

பல கலைகளில் வல்லுநராக விளங்கிய இவர்கள் கருப்பையா பாவலர்*என்பவரைத் தமது மாளிகைப் புலவராக

---

* கருப்பையா பாவலரைப்பற்றி, இலக்கிய வரலாறு—இரண்டாம் பகுதியில் பேராசிரியர் கா. சு. பிள்ளை அவர்கள் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார்கள்.

வைத்திருந்து ஆதரித்து வந்தார்கள்; மு. ரா. கந்தசாமிக் கவிராயர் அவர்கள் வாயிலாக, புலவர் பலர் இயற்றிய 'தனிச் செய்யுட் சிந்தாமணி' ஒன்றைத் தொகுத்து வெளியிட்டார். கந்தசாமிக் கவிராயர் அவர்கள் குமணசரித்திரம் பாடிய போதும் இவர்கள் மிகுதியான பொருள் வழங்கினார்கள். சோழாந்தநல்லூர் (சோழவந்தான்) அரசன் சண்முகனார் அவர்களையும், புலவர் பீமகவி அவர்களையும் இப்புரவலர் ஆதரித்துள்ளார்.

குமண சரித்திரம், முறையூர் பிரபந்தத் திரட்டு, திருப் போரூர் வண்ணம், திருப்போரூர் திரிபதாதி, நாமகள் இரட்டை,மணிமாலை,திருக்கோட்டாற்றுக் கலம்பகம் முதலிய நூல்கள் வெளிவர இவர் உதவினார்.

வேம்பத்தூர் பிச்சு பாரதிகள், பறம்புமலை தெய்வ சிகாமணி ஐயர்,குன்றக்குடி அப்பாவு பிள்ளை, அட்டாவதானம் மீனாட்சி சுந்தரக் கவிராயர், வெள்ளகால் வெ ப.சுப்பிரமணிய முதலியார் போன்ற தமிழறிஞர்களுடன், வள்ளல் தொடர்பு கொண்டிருந்தார்.

அட்டாவதானம் முத்து வேங்கடாசலம் ஐயங்கார், மதுரை குப்புசாமி நாயுடு, வித்துவான் நா. ராமசாமி நாயுடு சாமாராயர் முதலானோர் வள்ளலைப் பாடியுள்ளனர்.

புலவர்கட்கு அன்பளிப்பாக, துணி வகைகளை வழங்கு வதற்காகவே வள்ளல் சண்முகனார் மதுரையில் ஒரு சவுளிக் கடை வைத்திருந்தார். முறையூரில் வழங்கும் சீட்டுக்கு மதுரை யில் பட்டாடையும் பொன்னாடையும் புத்தாடையும் கொடுக்கப் பெற்றன.

இவர் ஆதரித்த புலவர்களின் பட்டியல் தொகுத்தால் ஒரு நூறு பேர் இடம் பெறுவர். வரவு செலவு தெரியாமல் வழங்கியதால், இவருடைய வள்ளன்மை உரிய பயனை அளிக்கவில்லை. இவருடைய விரிவான வரலாறு, ஒரு சோகக் கதையாக வெளிவந்திருக்கிறது ஆசிரியர்கள்: அரு. சொ. அரங்க சீனிவாசன். நூலின் பெயர்—வள்ளல் சண்முகனார்.

## திவான் பகதூர் தர்மபூஷணம்
## தீ. நா. மு. முத்தையச் செட்டியார்
## எப். ஆர். எஸ். ஏ. (லண்டன்) எம். எல். சி. (1883—1936)

இவர்கள் இராமச்சந்திரபுரத்தில் தோன்றியவர்கள். இவர்களுடைய தந்தையார் நாச்சியப்பச் செட்டியார் அவர்கள் திருப்பாதிரிப்புலியூர் கோவில் திருப்பணி செய்தும் பிற வகைகளிலும் 25லட்சம் ரூபாய் தருமம் செய்தவர்கள். நாச்சியப்பச்செட்டியார் அவர்களின் வாழ்க்கை வரலாற்றைத் திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகள் எழுதியிருக்கிறார்கள்.

முத்தையச் செட்டியார் அவர்கள் 32 லட்சம் ரூபாயைத் தரும காரியங்களில் செலவு செய்தவர்கள். இராமலிங்க அடிகளின் பிரபந்தத்திரட்டு என்னும் நூலை 1923-இல் இவர்கள் வெளியிட்டு அன்பளித்து உதவினார்கள். அடுத்த ஆண்டில் சன்மார்க்கத் திருநெறிக் குறிப்புக்களையும் சரித்திர வரலாறுகளையும் சேர்த்து திருஅருட்பாவைச் சுத்தப்பதிப்பாக வெளியிட்டார்கள். வடலூரிலிருந்து கையெழுத்துப்பிரதிகளை வரவழைத்து, அப்பிரதிகளுடன் திருஅருட்பாவை ஒப்பு நோக்கி, பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் மோ. கந்தசாமி முதலியார் அவர்களைச் சரிபார்க்கச் செய்து, 2000 பிரதிகள் அச்சிட்டு அவற்றை அன்பளிப்பாகக் கொடுத்தார்கள். இந் நூலின் அடக்க விலை அந்நாளில் படி ஒன்றுக்கு 30 ரூபாய் ஆயிற்று என்பது இங்குக் குறிப்பிடத் தகுந்தது. பின்னர், இவர் திருவாசகத்தை நாடெங்கும் பரப்புமாறு இரண்டணாப் பதிப்பாக,* சென்னைச்சைவ பரிபாலன சபை வாயிலாக அதனை வெளியிட்டார்.

முத்தையச் செட்டியார் அவர்கள் திருப்பாதிரிப்புலியூரில் தமிழ்ப்பாடசாலை ஒன்றையும், திருமெய்யத்தில் சத்தியமூர்த்தி உயர்நிலைப்பள்ளியையும் நிறுவியவர்கள். டாக்டர் உ. வே சாமிநாதஐயர் அவர்களுடைய நூல்கள் சில வெளிவருவதற்குப் பெரும்பொருள் உதவிசெய்தவர்கள். நாகைநீலலோசனிஇதழுக்கும், சென்னை ரசிக ரஞ்சன சபைக்கும் இவர்கள் புரவலராக இருந்தார்கள்.

---

* இரண்டணா-12 காசு

## கோனூர் ஜமீன்தார் பெ. ராம. ராம. சித. சிதம்பரம் செட்டியார் (1906-52)

இவர்கள் நற்சாந்துபட்டியைச்சேர்ந்தவர்கள். தமிழ் அன்பர்களை விருந்தினராக ஏற்று நன்குஉபசரித்து அவர்களிடம் அளவளாவித் தமிழின்பம் நுகர்தலையே வாழ்க்கையின் சிறந்த நோக்கமாகக் கொண்டு ஒழுகியவர்கள்; பல புலவர்களுடன் நெருங்கிய கூட்டுறவும் தொடர்பும் கொண்டவர்கள்; தமிழ் அன்பர்கள் பலர்க்குப் பல்லாற்றானும் ஆதரவு தந்தவர்கள். புதுக்கோட்டையில் இவர்கள் நிறுவிய இராம நிலையத்தில் புலவர்களுக்குத் தங்க இடம் கொடுத்து, பக்கத்திருந்து இன்னமுது ஊட்டி, அவர்களுடைய தமிழ் ஆராய்ச்சிகளுக்கு வேண்டும் வசதிகளையும் செய்து கொடுத்தவர்கள். தமிழ்ப் பெரும்புலவர்களில் இராம நிலையத்திற்கு வராதவர்கள் யாருமேயில்லை எனலாம்.

இவர்கள் குடும்பத்தார் திருக்கொள்ளம்புதூரில் செய்துள்ள திருப்பணிகள் பல; அங்குக் கும்பாபிடேகம் நடத்திய போது, சைவப் புலவர்கள் மாநாட்டைக் கூட்டிவைத்தும், தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகளும் கவியரங்கங்களும் அமைத்தும் பிற திருப்பணியாளர்களுக்குச் சிதம்பரம் செட்டியார் அவர்கள் வழிகாட்டினார்கள்.

கரந்தைத் தமிழ்ச் சங்கத்திற்கு இவர்கள் பெரும்பொருள் உதவியுள்ளார்கள். தம் குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் அச்சங்கத்திற்குப்பொருள் வழங்க இவர்கள் தூண்டுகோலாக இருந்தார்கள். தமிழ் இசைச் சங்கம், மேலைச் சிவபுரி சன்மார்க்க சபை ஆகியவற்றுக்கும் தமிழ்த் தொண்டில் ஈடுபட்டுள்ள பிற மன்றங்கள் பலவற்றுக்கும் இவர்கள் பொருள் வழங்கியுள்ளார்கள். இளைஞர் பலர்க்குத் தமிழ்க் கல்வியூட்டி, அவர்கள் புலவர்களாகத் திகழ இப் பெருமகன் உதவி செய்திருக்கிறார்.

சிதம்பரம் செட்டியார் அவர்கள் பண்டிதமணி அவர்களின் இனிய நண்பராகஇருந்தார்கள். அப்புலவர்பெருமானின் நூல்கள் சிலவற்றை அச்சிட்டு வெளியிடுவதற்கு வேண்டும் பொருளை அன்புடன் உதவி புரிந்தார்கள். பண்டிதமணி அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவுவிழாவில் அரிய கட்டுரைகளைக் கொண்ட மணிமலர் ஒன்று இவர்களுடைய முயற்சியாலேயே வழங்கப் பெற்றது.

இவர்கள் தம் தாயாரின் நினைவு மலராக கரந்தைக் கவியரசு அவர்களைக்கொண்டு காரைக்காலம்மையார் வரலாற்றை எழுதுவித்து வெளியிட்டார்கள். பேராசிரியர் டாக்டர் ச.சோமசுந்தர பாரதியார் அவர்கள் இயற்றிய "மங்கலக் குறிச்சிப் பொங்கல் நிகழ்ச்சி" என்ற செய்யுள் நூல் இவர்களுடைய பொருளுதவியாலேயே வெளியிடப்பெற்றதாகும்.

1939 முதல் விபுலானந்த அடிகள் இறைவன் திருவடி நிலையடைந்த நாளாகிய 19-7-1947 வரை சிதம்பரம் செட்டியார் அவர்கள் அடிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்கள். இவர்களுக்கு இயற்கையாகவே தமிழ்ப் புலவர்களிடம் இருந்து வந்த தனியன்பை உணர்ந்த விபுலானந்த அடிகளார், சிதம்பரம் செட்டியார் இல்லத்தில் அடிக்கடி வந்து தங்கினார்கள். இவர்கள் குடும்பத்து வழிபடு கடவுள்மீது விபுலானந்த அடிகள் பெருந்தேவபாணி ஒன்றைப் பாடியுள்ளார்கள். இவர்கள் குடும்பத்தார் திருப்பணி செய்துள்ள திருக்கொள்ளம்புதூர் என்னும் தலத்திலேயே 5-6-1947-இல் யாழ் நூல் அரங்கேற்றப் பெற்றது. அந்நூல் வெளிவரப் பொருளுதவிசெய்தவர்களும் சிதம்பரம்செட்டியார் அவர்களே.

இவர்களுடைய புதுக்கோட்டை மாளிகையான இராம நிலையத்திலும், இலங்கையில் வட்டவளையிலுள்ள இவர்களுடைய உட் ஸ்டாக்தோட்டத்திலுமே யாழ் நூல் எழுதப் பெற்றது. இந்நூலை இயற்றிக் கொண்டிருந்தபோது அடிகள் திடீரென நோய்வாய்ப்பட்டார்கள். சிதம்பரம் செட்டியார் அவர்கள் பெருஞ்செலவு செய்து மருத்துவ உதவியை ஏற்பாடு செய்தார்கள். அடிகள் நோய்த் துன்பத்தினின்றும் முற்றிலும் விடுதலை பெறவில்லையெனினும் சிறந்த மருத்துவ உதவியின் காரணமாக யாழ்நூல் முடிவடையும் வரையிலாவது உயிருடன் இருந்தனர் என்று சொல்வது பொருந்தும்.

யாழ்நூலின் படிகளை விற்றுப் பொருளீட்டிக்கொள்ளும் உரிமையை சிதம்பரம் செட்டியார் அவர்கள் கரந்தைத் தமிழ்ச் சங்கத்திற்குக் கொடுத்தார்கள். இச் சங்கத்திற்கு அவர்கள் புரவலராக இருந்தார்கள் என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கது. சைவ சித்தாந்தம் பற்றி ஆங்கிலத்தில் தக்கதொரு நூல்வெளிவர முயன்று கொண்டிருக்கும்போதே சிதம்பரம் செட்டியார் அவர்கள் இறைவன் திருவடி நிழலை அடைந்தனர்.

தமிழ்ப்புலவர்களுக்குச் சிதம்பரம் செட்டியார் வழங்கிய பொருளுக்கும் தமிழ் மாணவர்களுக்கு அவர்கள் காட்டி வந்த ஆதரவுக்கும் கங்கு கரையில்லை.

இலங்கையில் இவர்களுக்குச் சொந்தமாக இருந்த தேயிலைத் தோட்டத்தில் (உட்ஸ்டாக் எஸ்டேட்டில்) யான் சிலநாள் தங்கியிருந்தபோது உருவானதே என்னுடைய 'வளரும் தமிழ்' என்ற நூல்.

## சி. உ. சுப. உடையப்பா [இறந்தது 1954]

இராமநாதபுர மாவட்டக் குழுவின் தலைவராக இருந்தும் அரசியல் இயக்கத்தில் ஈடுபட்டுப் புகழ் பெற்ற இப் பெரியார் பாகனேரியைச்சேர்ந்தவர்கள். நாட்டார் சமூகத்தில் தோன்றியவர்கள். இவர்களுக்குத் தமிழ்ப் பற்று மிகுதியாக இருந்தது.

இவர்கள் பல ஆண்டுகள் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆட்சிக்குழுவில் உறுப்பினராக இருந்தார்கள். புலவர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களையும் ஏனையோர் சிலரையும் உடையப்பா அவர்கள் பெரிதும் ஆதரித்திருக்கிறார்கள். தஞ்சை நாட்டார் பேரவையின் ஆண்டு விழாவில் இவர்கள் தலைமை தாங்கியிருக்கிறார்கள்.

இவர் மகனும் தமிழகச் சட்டப் பேரவை உறுப்பினரும் நல்ல பேச்சாளருமான திரு உ. சுப்பிரமணியம் ஒரு பயண நூலை இயற்றியிருக்கிறார்.

## டாக்டர் இராம. அழகப்பச் செட்டியார் (1909-1958)

சிறந்த வள்ளலாக விளங்கிய டாக்டர் அழகப்பச் செட்டியார் அவர்கள் தமிழ்ப்புரவலராவும்இருந்து வந்தார்கள். தமிழில் சிறந்த சொற்பொழிவாளராகவும் காரைக்குடி கம்பன் கழகத்தின் தலைவராகவும் 'குமுதம்' என்னும் இதழின் கௌரவ ஆசிரியராகவும் இவர்கள் இருந்து வந்தார்கள்.

1943-ஆம் ஆண்டு இவருடைய மகள் திருமணம் நடைபெற்றபோது திருவாங்கூர் (இப்போது) கேரளப் பல்கலைக் கழகத்திற்கு ஒருலட்சம்ரூபாய் நன்கொடை கொடுத்துத்தமிழ்க் கல்விக்கு அங்கு ஒரு பேராசிரியக் கட்டில் நிறுவினார்கள்.

மலையாள மொழிக்குப் பேராசிரியக் கட்டில் அமையுமுன்னரே தமிழுக்கு அத்தகைய சிறப்பு ஏற்பட்டது குறிப்பிடத்தக்கது. சங்கஇலக்கியங்களுக்குச் சொல்லடைவு தொகுக்கும்வேலையை இங்கு டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் செய்திருக்கிறார்.

இக் கொடையைப் பற்றி டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் பின்வருமாறு பாடியுள்ளார்கள்:

''சிலம்பு பிறந்த திருநாடென் றெண்ணி
கலங்கு தமிழியலைக் காண - இலங்கும்
இலக்கமொன் றீந்தான்; இடும்பை தனக்கும்
கலக்கமொன் றீந்தான் களித்து.''

கலைக்களஞ்சியம் ஒன்று தமிழில்வெளிவர வேண்டுமென்று 1947-இல் கல்வி அமைச்சராக இருந்த தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் எண்ணிய மாத்திரத்தில் டாக்டர் அழகப்பச்செட்டியார் அவர்கள் ரூபாய் 10, 000 - மும் திருஷ்டிப் பரிகாரத்திற்காக ரூ 1-ம் அன்பளிப்பாக வழங்கினார்கள். இவர்கள் கலைக் களஞ்சியச் செயற்குழுவில் ஓர் உறுப்பினராக இருந்து வந்ததும் இங்கே குறிப்பிடத் தக்கது.

அழகப்பா கல்லூரியின் அறக்குழுவின் உதவியால் கலைச் சொற்களைத் தமிழில் ஆக்குவதற்கான ஒரு முயற்சியும் அக் கல்லூரியின் ஆதரவில் தொடங்கிற்று. இதற்கென 1954-இல் திரு. இராசகோபாலச்சாரியாரின் வாழ்த்துடன் திரு. சா. கணேசன் முதலிய ஐவர் கொண்ட குழு ஒன்று அமைக்கப் பெற்றது. 1958 முதல் அழகப்பா கல்லூரியில் தமிழ் முதுகலை வகுப்பு நடைபெற்று வருகிறது.

### க. வீ. அழ. மு. இராமநாதன் செட்டியார் (இ. 1955)

கோட்டையூர் ஊரினர். வள்ளல் அழகப்பரின் சித்தப்பன் மகன். டி. கே. சி. - யின் இனிய நண்பர். பல புலவர்களை ஆதரித்தவர். 1500 பக்கங்கள் கொண்ட இராமாயண வெண்பாவை அச்சிட்டு அன்பளித்தவர்.

### கோனாபட்டு பெ. சித. வி. விசுவனாதச் செட்டியார்

இவர்கள் சிறந்த தமிழன்பர்; கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் தலைவராக இருந்த தமிழவேள் த. வே. உமாமகேசுவரனாருடன் 40 ஆண்டுகளாகத் தொடர்பு கொண்டு, அச்சங்கத்திற்குத்

தன்மகன் சிதம்பரனார் திருமணத்தின் போது நன்கொடை வழங்கினார். இதுவன்றி, மலேசியாவில் மூவாரிலும் கோலாலம் பூரிலும் உள்ள தமது கடைகளின் வாயிலாகப் பலரிடம் முயன்று நிதி சேர்த்துக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்திற்கு அனுப்பினார்கள்.

கரந்தைக் கவியரசு அவர்கட்கும் வேறுசில புலவர்கட்கும் இவர்கள் பொருளுதவி செய்துள்ளார்கள். இவர்களுடைய புதல்வருள் ஒருவர் திருவாளர் விசு. திருநாவுக்கரசு. இவரைப் பற்றிய குறிப்புக்களைப் பிறிதொரு கட்டுரையில் காண்க.

நாச்சியாபுரம் சு. வி. நா. நாச்சியப்பச் செட்டியார்

(இ. 1957)

வியாபாரத்தைக் கருதியும் வேலை வேண்டியும் தமிழ் நாட்டின் பல பக்கங்களிலிருந்தும் கேரள மாநிலத்துக் கொச்சி, மட்டாஞ்சேரி, வெல்லிங்டன் தீவு, திருப்பணத்துறை, எர்ணா குளம், ஆல்வாய், பெரும்பாவூர் முதலிய இடங்களிலே வந்து குழுமியிருக்கும் தமிழ்மக்கள் அனைவரும் ஒன்று சேர்வதற்கும், அடிக்கடி ஒருவரை யொருவர் சந்தித்துக் கொள்வதற்கும் வழிசெய்ய வேண்டுமென்ற முயற்சியே எர்ணாகுளத்தில் தமிழ்ச் சங்கமாக 14 - 6 - 1953-இல் உருவெடுத்தது.

அச்சங்கத்தைப் பற்றி அதன் செயலாளர் திரு. குழந்தைவேல் அவர்கள் 1954- இல் இந்நூலாசிரியர்க்குப் பின் வருமாறு எழுதியிருந்தார்கள்.

"எங்கள் செயல்களெல்லாம் வெற்றி பெறக் காரணம் எங்கள் சங்கத்தின் தலைவரும், பேரன்புப் பெருந்தகைய மான உயர்திருவாளர் சு. வி. நா. நாச்சியப்பச்செட்டியார் அவர்கள் தான் என்றால் அதுமிகையாகாது. அவர்கள்தான் எங்கள் சங்கத்தின் ஆணி வேர். கொச்சியில் திரு. நாச்சியப்பச் செட்டியாரவர்களை வணிகத் துறையில் அறியாதவரே இல்லையெனலாம் அவர்கள் மனம் மிக மிகப்பரந்தது; அதிலே தமிழுக்கு நிறைய இடம் வைத்திருக் கின்றார்கள். தமிழ் வளர வேண்டும், தமிழ் மக்கள் நலன் வளர வேண்டுமென்று மிகுந்த ஆசைப் படுகிறார்கள். அன்னாரின் முயற்சிகள் எர்ணாகுளம் தமிழ்ச் சங்கத்தின் சரித்திரத்திலே பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட

வேண்டுமென்பது எங்கள் கருத்து. சுருங்கக் கூறினால் தமிழ்ச் சங்கத்தின் பெருமை அவர்களுடைய பெருமை யென்று சொல்ல விரும்புகின்றோம்.''

சங்கத்திற்கு ஒரு சொந்தக் கட்டிடம் தேவையென்பதை எங்கள் சங்கத்தலைவர் திரு. செட்டியாரவர்களிடம் கூறியிருக்கின்றோம். அவர்களும் அதை ஆமோதித்திருக்கிறார்கள்; அன்னாரின் துணையும் தமிழன்னையின் ஆசியும் எங்கள் ஆசைகள் நிறைவேற வழி செய்யுமாகுக!

தமிழ்ச் சங்கத்தின் மூலமாகத் திருவாங்கூர் கொச்சி அரசியலாரை அணுகி, பெருமுயற்சி செய்து, எர்ணாகுளத்தில் ராமவர்மா உயர்நிலைப் பள்ளியில்,முதலிரண்டு வகுப்புக்களுக்கு எல்லாப் பாடங்களையும் தமிழிலேயே போதிக்கும் படியாக அனுமதி பெற்று, 1953 -ஆம் ஆண்டில் முதல் வகுப்பு மாத்திரம் சிறப்பாக நடைபெற்றது. இனி ஆண்டு தோறும் ஒவ்வொரு வகுப்புக்கள் கூட்டி அமைக்கப்படும்.

இது தவிர, பள்ளியில் சேர்க்க இயலாத கொஞ்சம் பெரிய பிள்ளைகளுக்கு, தமிழ்ச் சங்கக் கட்டிடத்திலேயே, நல்ல பயிற்சி பெற்ற ஓர் ஆசிரியை நியமித்து, வகுப்புக்கள் நடத்த ஏற்பாடு செய்து, அதுவும் சிறப்பான முறையில் நடந்து வருகின்றது. அடிக்கடி தமிழிசைக் கச்சேரிகளுக்கு ஏற்பாடு செய்து தமிழ் மக்களும் ஏனையோரும் இசை இன்பத்தில் திளைக்க முயற்சி செய்து வருகின்றோம்.''

குப.அரு.நடராசன் செட்டியார்,வேந்தன்பட்டி(1904-1963

1920-இல் 'திருவள்ளுவர் வாசக சாலை' என்ற பெயரில் இவர் வேந்தன்பட்டியில் நூலகம் நடத்திவந்தார்.

தம் நண்பர்களுடன் சேர்ந்து இப்பகுதியில் 1932-இல் தொடங்கிய மரக்கடைக்கு திருவள்ளுவர்க்கு உரிய 'பெரு நாவலர்' என்னும் பெயரை இட்டார். இப்பெயரிலேயே இக் கடை இன்றளவும் இயங்கிவருகிறது.

இவர் தொடங்கிய கதர்க்கடை ''பெருநாவலர் கதர்ச் சாலை'' என்னும் பெயர் தாங்கியதும் குறிப்பிடத்தக்கது.

தமிழ்ப் பொன்மொழிகளையும் குறட்பாக்களையும் விழாக்காலங்களில் அட்டைகளில் எழுதித் தொங்கவிடும் பழக்கத்தை இவர் பரப்பினார்.

தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் நடைபெற்ற இலக்கிய விழாக்களுக்கு ஆர்வமுடன் சென்று வந்தார். 1926-ஆம் ஆண்டில், ஒரிரு நூல்களுக்கு ஓராயிரம் படிகளுக்கு உரிய தொகையை சாது அச்சுக்கூடத்தில் முன்பணமாகக் கொடுத்து அவை வெளிவர உதவினார்.

இந்நூலில் குறிப்பிடப் பெற்றிருக்கும் டாக்டர்:ந. மாணிக்கம், இவருடைய மகனார் ஆவார்.

பழ.பெரி.பெரி.பெரியகருப்பன் செட்டியார்
நெற்குப்பை (1890-1969

தமிழிலும் வடமொழியிலும் புலமை பெற்றிருந்தார் பெரியதொரு நூலகத்தைப் பேணி வளர்த்தார்; அந்நூல் நிலையம் இன்றும் இவர் இல்லத்தில் உள்ளது. தென்னிந்தியத் திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் தொடக்க காலப் பங்காளியும் ஆவார்.

பெரும் புலவர் பலருடன் தொடர்பு கொண்டிருந்தார்.

பொன்மொழிகள், திருக்குறள்கள் தாங்கிய அட்டைகளை எங்கும் பரப்பினர். தம் கொடையாக, ஒரு தேவாரப்பள்ளியை நடத்தினார்.

இன்ன இன்ன தமிழ்ப்பாடல்களைப் பாடவேண்டும் என்று வரையறை செய்து விவரமான நிகழ்ச்சி நிரல் அச்சிட்டு அதற்கு ஒப்புக்கொண்ட இசைவாணர்களையே அழைத்து தம் இல்லத்து நிகழ்ச்சிகளை நடத்தும் பழக்கத்தை இவர் 1929 -இலேயே கடைப்பிடித்து வந்தார்.

இவர் இந்நூலாசிரியரின் சிறிய தந்தையார் ஆவார்.

இவருடைய தந்தையார் (நூலாசிரியரின் பாட்டனார்) பெரியகருப்பன் செட்டியார் சிவக்ஷேத்திர விளக்கம் என்னும் நூலை இயற்றியுள்ளார்.

## தமிழ்வள்ளல் தேவகோட்டை உ. ராம. மெ.சுப சேவு. மெ மெய்யப்ப செட்டியார் (1910–1967)

தமிழ் என்றால் மெ. அவர்கட்குக் கற்கண்டு.

திருவையாற்றுத் திருப்பணி வேலைகளில் நாள்தோறும் ஈடுபட்டு மேற்பார்த்துக் கொண்டிருந்த போது, தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த சக்திவேல் பிள்ளை என்ற பெரும் புலவருடைய தொடர்பு ஏற்பட்டது. புலவரைத் திருவையாற்றிலேயே, தங்கியிருக்கச்செய்து, தமிழ் இலக்கண இலக்கிய அறிவை வளர்த்துக் கொண்டார்கள். பிறகு தமிழ் நாட்டிலுள்ள அனைத்துப் புலவர்களுடனும் மெ. அவர்கள் தொடர்பு கொண்டார்கள்.

தமிழ்நூல் எதையாவது வெளியிடவேண்டும் என்று யார் கூறினாலும் அப்பணிக்கு மெ. அவர்கள் உதவினார்கள்.

ஏராளமானவர்கள் தமிழ் மொழியை முறையாகவும் ஆழமாகவும் படிக்க வேண்டுமென்று மெ. அவர்கள் விரும்பினார்கள். மயிலம், திருவையாறு, மேலைச் சிவபுரிக் கல்லூரிகளில் படிக்க முன்வந்த அனைவருக்கும் இன, மத வேறுபாடு பாராமல் தங்கு தடையின்றிப் படிக்க எல்லா வசதிகளையும் தம் செலவில் ஏற்பாடு செய்து கொடுத்தார்கள்.

திருவையாறு அரசர் கல்லூரியில் பேராசிரியராக விளங்கும் காளையார் கோயில் திரு. சொர்ணகாளீசுவரன், மெ. அவர்கள் ஆதரவும் ஆசியும் பெற்றவர். இந்த வள்ளலின் அரவணைப்பில் வளர்ந்தவர் பலர் ஆவர்.

எண்ணி முடியாத சங்கங்கள், தமிழ்ப்புலவர் மாநாடுகள் ஆகியவற்றிற்கு மனமுவந்து நன்கொடை வழங்கிய வள்ளலாக மெ. அவர்கள் தம் வாழ்நாள் முழுவதும் திகழ்ந்தார்கள்.

தமிழ்ப் புலவர்கள் பலரும் சேர்ந்து, அவர்களுக்கு 'தமிழ் வள்ளல்' என்ற பொருத்தமான பட்டத்தைச் சூட்டினார்கள். பலாப்பழத்தை ஈக்கள் கூட்டம் மொய்ப்பதுபோல மெ. அவர்களை எப்போதும் புலவர்கள் சூழ்ந்தவண்ணமாக இருந்தனர். காலை 9 மணிக்குத் தொடங்கி விடும் இந்நிகழ்ச்சிக்கு ஓய்வே இராது. இதனால் தொழில் தொடர்பாக மெ. அவர்களிடம் தகவல்களைக் கேட்டுக் கொள்ள விரும்பிய கணக்கர்கள், செயலாளர்கள், ஊழியர்கள் முதலாளியை அணுக இயலாமல் தவிப்பார்கள்.

புலவர்கள் பரிசில் பெறத் தேவக்கோட்டையை நோக்கிப் படையெடுத்த வண்ணமாக இருந்தனர். வந்தவர்கள் அனைவருக்கும் கனிவான வரவேற்பும், வயிறு நிறையச் சுவையான உணவும் அவருடைய வளமனையில் உறுதியாகக் கிடைக்கும். அவர்கள் அனைவருடனும் மெ. அவர்கள் இலக்கிய நயங்களை ஆராய்ந்த வண்ணமாக இருந்தார்கள். மிகப்பெரிய நூலகத்தை அவர்கள் வைத்திருந்தார்கள். கிடைத்தற்கரிய நூல்கள் அதில் இடம் பெற்றிருந்தன.

இரவு 11 மணிக்கு மெ. அவர்கள் துயில் கொள்ளுவார்கள் அந்நேரத்திலும் ஒரு புலவர் வருவார். மெ. அவர்களின் குடும்பத்தார் அனைவரும் புலவர்கள் செட்டியாரை நேரம் காலம் பார்க்காமல் மொய்ப்பதைப் பொறுக்கமாட்டார்கள். அவர்கட்குத் தெரியாதபடி, வந்த புலவரின் வறுமை நீங்க, வள்ளல் வாரி வழங்கிப் புலவரை நொடிப்போதில் அனுப்பிவைப்பார்.

தம்மைக் காணவந்த புலவர்கள் தவிர, ஏனைய புலவர்கட்கும் சொல்லியனுப்பி, மெ. அவர்கள் அப்புலவர்களுடனும் பல நூல்களை ஆய்ந்தும், பொதுப்படையாக அளவளாவியும் மகிழ்ந்தார்கள். தேவகோட்டை, புலவர் நாராயணசாமி ஐயர் புலவர் பால சுப்பிரமணிய ஐயர் போன்றோர் இவ்வகையினர் ஆவர்.

நேரில் வாராமல், தங்கள் நிலைகளை எழுத்தில் வடித்தனுப்பும் புலவர்கட்குக் கணக்கே இராது. சராசரி ஒரு நாளில் மெ. அவர்கட்குப் புலவர்களிடமிருந்து 30 கடிதங்களாவது வரும். அவையாவும் கவிதை வடிவிலேயே இருக்கும்.

அந்தச் செய்யுட்களை, அன்று வருகைதரும் புலவர்களுடன் ஆராய்வார். மீண்டும் மீண்டும் படிப்பார். இலக்கணப் பிழைகள் உண்டா என்று கேட்பார். பிறகு தாமே அப்பாடல்களின் குறைகளையும் பொருளையும் எடுத்துக் கூறுவார். குறை நிறை எது இருப்பினும் வள்ளல் அனுப்பிவைக்கும் கொடையிற் குறையிராது.

வெளியூர்கட்குச் செல்லும்போதும் மெ. அவர்கள் தனியே செல்லமாட்டார்கள். இரு புலவர்களாவது பக்கத்தில் இருப்பார்கள். வழியில் வேறு சில புலவர்களும் சேர்ந்து கொள்வார்கள். தமிழ்ப் புலவர்கள் அனைவருக்கும் அவர்கள் காட்டிய மரியாதைக்கு ஈடு இணையே இல்லை. அவர்கட்குத் தம்மோடு

சரிசமமான நிலையை வழங்கினார்கள், வீட்டிலும் சரி வெளியூர் களிலும் சரி, அனைவரும் அவருடன் சேர்ந்துதான் உண்ண வேண்டும். தம் நெருங்கிய பங்காளிகளுக்குக் கொடுத்த மரியாதையை மெ. அவர்கள் புலவர்கட்கும் அளித்து வந்தார் கள்.

சிறுவன் என்றோ ஏழையாக இருக்கிறான் என்றோ யாரையும் மெ. அவர்கள் அலட்சியப்படுத்தியதில்லை. சிறியன சிந்தியாதவராகிய அக்கோமான் வெளியூர்களில் ஓயாமல் சுற்றுப்பயணம் செய்தார்கள். அப்போது அந்தந்த ஊரில் சுவை யான சிற்றுண்டிகள் எங்கே கிடைக்கும் என்பதையறிந்து வைத்திருந்தார்கள். அந்தச் சிற்றுண்டிக் கடைகள் இருக்கும் வீதி குறுகலாக இருக்கும். பகட்டான அறிவுப்புப்பலகைகள் இரா. அங்கே போடப்பட்டுள்ள மேசைகள், நாற்காலிகள் கவர்ச்சியாக இரா. இக்குறைகளை மெ. அவர்கள் சிறிதும் பொருட்படுத்த மாட்டார்கள். மெ. அவர்கள் அவர்தம் புலவர் படையினருடன் சென்று, இச்சிற்றுண்டி விடுதிகளுக்கு அளித்த ஆதரவு குறிப்பிடத்தக்கது.

பள்ளிக்கூடங்களிற் பரிசுகள்ாக வழங்க, நூற்றுக்கணக் கான தமிழ் நூல்களை வாங்கி அளித்துவந்தார்கள்.

சில புலவர்களுடைய குடும்பங்களில் நெடுங்காலமாக நிலவிய பிணக்குகளையும், மெ. அவர்கள் தீர்த்து வைத்தார் கள்.

தைப்பொங்கல் அன்று தம் பெண் மக்கள் வீடுகட்குச் சீர் அனுப்புவது போலவே, மெ அவர்கள் தமிழ்ப்புலவர் சிலர் வீடு கட்கு அரிசி, கரும்பு, தேங்காய், மஞ்சட்கொத்து முதலியவற்றை ஆண்டுதோறும் அனுப்பி வந்தார்கள். புலவர்கள் வீட்டுச் சிறப்பு நிகழ்ச்சிகளிலும், தம் குடும்பத்து நிகழ்ச்சிகளிலும் புலவர் களுக்கு மெ. அவர்கள் தவறாமல் பொருள் வழங்கிவந்தார்கள்.

தேவகோட்டை நகரத்தார் உயர்நிலைப்பள்ளியில் திரு வள்ளுவர் விழா, திருக்குறள் போட்டி ஆகியவை ஆண்டுதோறும் சிறப்பாக நடைபெற வழி வகுத்தார்கள்.

மெ. அவர்கள் தஞ்சை நாட்டார் பேரவையின் தலைவ ராக இருந்தார்கள். கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் புரவலராக வும் இருந்து வந்தார்கள்.

மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்த ராக இருந்த பன்மொழிப் புலவர், பல்கலைச்செல்வர், பெரும் பேராசிரியர், டாக்டர். தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் பெரும் புகழும் பதவிகளும் பெறுதற்கு முந்திய காலத் தில், அவர்களை மதித்துப் பாராட்டி இடையறாத் தொடர்பு கொண்டிருந்தவர்கள்,மெ. அவர்கள். "குருதேவர்"என்று தெ. பொ. மீ அவர்களை அன்புடன் அழைத்த குழாத்தினர் அனை வரும் மெ. அவர்கட்கு அறிமுகமாயிருந்தனர்.

மெ. அவர்களின் முயற்சியாலும் பொருளுதவியாலும்

(1) குருதேவர் அவர்களின் கல்வித் தொண்டுக்கு வெள்ளி விழா 1954 டிசம்பரில் கொண்டாடப்பெற்றது.

(2) சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப்பள்ளியில் குரு தேவரின் உருவச் சிலை நிறுவப்பெற்றது.

(3) கட்டுரைகளாக அவ்வப்போது வெளிவந்த இதழ் களில் மட்டுமே இடம் பெற்றிருந்த குருதேவரின் கட்டுரைகள் தொகுக்கப்பெற்று நூல்வடிவில் மணிவிழா மலர்களாக மலர்ந் தன. பின்னர் குருதேவர் பொற்காலத்தில் அடியெடுத்து வைத் தார்.

மெ. அவர்கள் அழுத்தமான தமிழ் மொழிப்பயிற்சி பெற்றிருந்தார்கள் என்பது அவர்கள் எழுதியுள்ள பின்வரும் நூல்களிலிருந்து தெரியவரும்.

(1) திருவையாறு அறம் வளர்த்த நாயகி பதிகம்.

(2) கருதாவூரணி ஸ்ரீ கைலாச விநாயகர் நான்மணிமாலை.

(3) குன்றை நகர்க் குமரன் போற்றிப்பதிகம்.

(4) ஸ்ரீ செயங்கொண்ட சோளீசர் போற்றிப்பதிகம்.

(5) திருவேடகம் ஸ்ரீ ஏடகநாதர் மெய் வருக்கமாலை.

(6) திருவையாறு ஐயாறப்பர் நவமணிமாலை.

(7) கோட்டைவயல் ஸ்ரீ நடராசர் உயிர் வருக்கமாலை

(8) இலம்பையங் கோட்டூர் ஸ்ரீ அரம்பேசன் திரு விருத்தப்பதிகம்.

(9) சிவபூசை முறை அநுட்டான விதி.

(10) சைவ சித்தாந்த விதி

(11) சைவ தர்ப்பண விதி

(12) சட் பிரபந்தம்

(13) துவைதப் பிரபந்தம்.

## தோல் ஏற்றுமதிப் பெருவணிகர் தாமரைச் செல்வர் ஆ. நாகப்பச் செட்டியார் (1915-1982)

மேலைச் சிவபுரி ஊரினர். தாம் பயின்ற சன்மார்க்க சபையின் செயலராகவும் கல்லூரிக் குழுவின் தலைவராகவும் பணி செய்தார். கல்லூரி மாணவர்கட்கு நாகப்ப இல்லம் கட்டி வழங்கினார். வேண்டும்போதெல்லாம் நிதியளித்துச் சபையைக் காத்தார்.

பண்டிதமணி, பன்மொழிப் புலவர் தெ. பொ. மீ. முதலான பெரும் புலவர்களிடம் ஈடுபாடு கொண்டிருந்தார்.

## சித்தாந்த மணிமொழிச் செல்வர் மகிபாலன்பட்டி சி. ராம. இராமசாமிச் செட்டியார் (1903-1970)

பண்டிதமணி அவர்களின் வீட்டு மாணவராகப் பயின்று சைவசமய நூல்களில் தேர்ச்சி பெற்றுப் புலவராகவும் புரவலராகவும் வாழ்ந்தார்கள். கவிஞர். சைவசமயச் சொற்பொழிவாளர். தேவார திருவாசகங்களை இசையுடன் பாடுபவர். இனிமையாக இவற்றை ஓதும் ஓதுவார்களை ஆதரிப்பவர்.

மலேசியாவில் சைவம் தழைக்கவும் தமிழ்ப்பயிர் வளரவும் இவர்கள் ஆற்றிய தொண்டுகளை நேரில் கண்ட தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள், இவர்க்கு 'சித்தாந்த மணி மொழிச் செல்வர்' என்ற பட்டத்தைச் சூட்டினார்கள்.

இவர்கள் மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையின் வளர்ச்சிக்குத் தாமும் நிதி வழங்கி ஏனையோரிடத்தும் பெருநிதி சேர்க்க உதவினார்கள்.

சித்தாந்தம், சப்பான் பயணம் குறித்துப் பல கட்டுரைகளை எழுதியுள்ளார்கள்,

வெளியிட்ட நூல்: கவிஞர் பெரி. இலக்குமணச் செட்டியார் இயற்றிய பூம்புகார் ஆற்றுப்படை.

காரைக்குடி திரு 'ஏவிஎம்' (1907-1979)

திரையுலக மேதை திரு ஏ.வி. மெய்யப்பன் அவர்கள் தம் இருபதாம் வயதிலேயே பி.ஸ்ரீ., தி.ஜ.ர. போன்ற எழுத்தாளர்களுடன் பழகியவர்கள். வாழ்க்கை முழுதும் தமிழ் நூல்களைப் படித்துக் கொண்டிருந்தவர். வளரும் எழுத்தாளர்க்கு வாழ்வளித்தவர். மணிவிழா கண்ட எழுத்தாளர்க்குப் பண முடிப்பு வழங்கியவர். தம் இல்லத்துத் திருமணங்களில், எழுத்தாளர்க்குப் பரிசும் சன்மானமும் வழங்கியவர். தொழில் முறையில் பணம் கொடுத்து வாங்கிய பாரதியார் பாடல்கள் உரிமையை, தமிழக அரசுக்கு வழங்கி அந்தப்பாடல்களை நாட்டுடமையாக்க உதவியவர்.

தமிழின் இனிமை கெடாதபடி, திரைப்படங்களில் தமிழ்ச் சொற்கள் உச்சரிக்கப்பட வேண்டும் என்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தவர்.

நாமக்கல் கவிஞரின் இனிய நண்பராகத் திகழ்ந்தார். புதுவைக்குயில் புரட்சிக்கவிஞர் பாரதிதாசனுக்கு வழங்க முதல் நன்கொடை கொடுத்து, பேரறிஞர் அண்ணா ஒரு நிதி திரட்டுவதற்கு வழிவகுத்தார்.

நூற்றுக் கணக்கான பாடல்களை மனப்பாடம் செய்திருந்தார். குழந்தை இலக்கிய வளர்ச்சிக்கு ஒல்லும் வகையாலெல்லாம் துணையாக இருந்தார். சென்னைக் கம்பன் கழகத்துக்கு ஊன்றுகோலாக விளங்கினார்.

தேர்ந்தெடுத்த பாடகர்களைக் கொண்டு, கவியரசர் சுப்பிரமணிய பாரதியார் பாடல்களைத் திரைப்படங்களில் பாடச் செய்தவர் ஏவிஎம். அதன் விளைவு பட்டிதொட்டியெல்லாம், படம் பார்த்தவர்கள் திரைப்பட அரங்கைவிட்டு, வெளியே வந்தபோது, பாரதி பாடல்களைத் தெருவெல்லாம் முழங்கிக் கொண்டவாறே தங்கள் வீடுகளை அடைந்தனர்.

இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டின் ஊர்வலச் சிறப்பு, ஏவிஎம்-மின் கைவண்ணம் ஆகும்.

இவர் மகன் திரு. சரவணன், தமிழ் எழுத்தாளர்கள், கவிஞர்கள், அமைப்புக்களுடன் இனிய தொடர்பு கொண்டுள்ளார். பல இதழ்களில் சுவைமிக்க கட்டுரைகள் எழுதி வருகிறார்.

'சேந்தணியார்' இராமசாமிச் செட்டியார் (பி. 1901)

கல்வி வள்ளல் என்று போற்றப் பெறுபவர் காரைக்குடி ராம. வீர. ராம. இராமசாமிச் செட்டியார். இவர் தமிழ்ச் சான்றோர் ஆவார்.

இவர் தம் நெருங்கிய நண்பர் சா. சு. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் தமிழுக்குச் சிறப்புத் தரும் குருகுலம் என்னும் உயர்நிலைப்பள்ளியை அமராவதிபுதூரில் நிறுவினார். உலகப்போரால் அந்த நிறுவனத்துப் பணங்கள் சிங்கப்பூரில் முடங்கிக் கிடந்தபோது, குருகுலத்தைத் தாமே நடத்தினார்.

மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபைக்கும் ஏனைய நிறு வனங்களுக்கும் தமிழிலும் பிற துலறகளில் உயர்கல்வி படிப்ப வர்க்கும் வாரி வழங்கி வருபவர்.

இயற்கைக் கொடைஞனான இவர் பெயரால் இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடியில் இயங்குகிறது. கல்லூரியை இவர்களே 18-6-1967-இல் திறந்து வைத்தார்கள். "என் மகன் பெரியகருப்பன் தன் உழைப்பால் தேடிய தன் பொருளைக் கொண்டு, என் பெயரால் தமிழ்க் கல்லூரியை நான் இருக்கும் போதே அமைத்தது எனக்கு அளவற்ற மகிழ்ச்சியைத் தருகிறது. ஒரு தந்தை பெறக்கூடிய பேறுகளுள் இது மிகவும் பெரியது; போற்றத்தகுந்தது. இக்கல்லூரியும் என் மகனும் நெடிது வளர்ந்து நாட்டுக்கும் மொழிக்கும் நற்றொண்டு செய்யவேண்டும் என இறைவனை வேண்டுகின்றேன்" என்று அவ்வமயம் பாராட்டி னார்கள்.

இராயவரம்

திரு. ப. வ. ராம குழந்தையன் செட்டியார்(பி. 1918)

இவர் புலவரும் புரவலருமாவார். கம்பராமயணப் பாடல் களை மனனம் செய்திருக்கிறார். சிறந்த மேடைப் பேச்சாளர்.

காரைக்குடியிலும் சென்னையிலும் நடைபெறும் கம்பன் கழகங்களில் பெரும் பொறுப்பு வகித்து வருகிறார். காரைக்குடி யில் தமிழ்க் கடலின் சிலை திறக்க உதவிய மூவருள் ஒருவர்.

கருவமிலாக் கலைஞானம் கார்பொழியும் கவிஞானம்
கருத்தறியும் டி. கே. சி. கடல்மடையார் இராயசொவாம்
இருபெரியோர் உளங்கவர்ந்து இலக்கியத்தில் சுவைசேர்த்து
தருமநெறிப் பணிபுரியும் கலையரசர் குழந்தைஜயா!

என்று இவரைக் கவியரசர் கண்ணதாசன் பாடியுள்ளார்.

காரைக்குடி திரு. சா. நா. அ. சொ. அண்ணாமலைச் செட்டியார் (பி. 1920)

காரைக்குடி கம்பன் மணி மண்டபத்தில் விருந்தினர் இல்லம் கட்டிய கொடைஞர். கம்பன் அறக்கட்டளையின் அறங்காவலருள் ஒருவர்.

தமிழ்க்கடல் ராய சொ - வின் மாணவர் என்று சொல்லிக் கொள்வதில் பெருமிதம் அடைபவர், அவர் தம் சிறு நூல்களை தம் இல்லத்து நிகழ்ச்சிகளின் போது அச்சிட்டு வழங்கியவர். ராய சொ நினைவாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சொற்பொழிவுகள் நடைபெற அறக்கட்டளை நிறுவியிருக்கிறார்.

மலேசியாவிலும் காரைக்குடிப் பகுதியிலும் தமிழ்ப் பணிகளுக்கு ஆதரவு தருபவர்.

தேவகோட்டை திரு. சேவு. அ. அண்ணாமலைச் செட்டியார் (பி. 1923)

தமிழ் வள்ளல் மெ. அவர்களின் தம்பி, சேவுகன் அண்ணாமலை கல்லூரி நிறுவுனர்.

எழுத்து, இவர்களுடைய பொழுது போக்கு. குறிப்பிடத் தக்க படைப்புக்கள்: 'தமிழ் நாடு' நாளிதழில் தொடர்ந்து வாரந்தொறும் எழுதி வந்த 'மலேசியாக் கடிதங்கள்' 'மலேசியாவில் தமிழ்ப் பண்பாடு' என்னும் ஆராய்ச்சிக் கட்டுரை.

இவர்தம் கல்லூரியில் தமிழுக்குச் சிறப்பிடம் உண்டு. புலவர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்களை ஊக்குவிக்கும் பண்பு உடையவர்.

தமிழில் சரளமாகப் பேசவும், வெண்பாக்கள் இயற்றவும் வல்லவர், சைவசித்தாந்தம் பாடம் கேட்டவர்கள்.

பண்டிதமணி நினைவாக, மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் சொற்பொழிவுகள் நிகழ்வதற்கும் அந்தப் பொழிவு கள் நூலுருவம் பெறவும் அறக் கட்டளை நிறுவியுள்ளார்கள்.

திரு. எல். சோமு

புகழ்பெற்ற பெ. ராம. குடும்பத்தின் வழித் தோன்றல் 17—9—1937 இல் நற்சாந்துபட்டியில் பிறந்தவர். கோவை—நீலகிரி மாவட்டங்களில் தொழில் அதிபர். "திருவருட் செம்மல்''

கோயம்புத்தூர் சன்மார்க்க சங்கம் முதலிய அமைப்புக்களின் தலைவர். கம்பன் கழகம் போன்ற சங்கங்களில் ஆர்வமுடன் பங்கு கொள்பவர்.

தமிழ் இலக்கியச் சுவைஞர். கவிதை நடையில் உரையாற்றும் இனியபேச்சாளர். தமிழ் அறிஞர்களுக்குப் பேராதரவாளர். நாள்தொறும் நூல் நயம் அறிந்து பொழுதும் தமிழமுதம் பருகி மகிழ்ந்தும் மகிழ்வித்தும் வரும் தென்றமிழ் வல்ல வித்தகர். இலக்கிய மணம் கமழும் கடிதங்கள் கவிதைகள் பலவற்றை இவர் எழுதாத நாளெல்லாம் பிறவாத நாளே.

சோமு பதிப்பகம் என்ற பெயரில் சிறு நூல்களை அச்சிட்டு அன்பளிப்பாக வழங்கி வருகிறார்.

திருக்கொள்ளம்புதூர்க் கோயில் குடமுழுக்கு நினைவாக வெளியிடப் பெற்ற பெ. ராம. குடும்பத் திருப்பணிகள் என்ற நூல் இவருடைய கை வண்ணமாகும்.

கவியரசர் கண்ணதாசன் பாடல்களையும் புகழையும் பரப்புவதே இவருடைய குறிக்கோள். தோற்றத்திலும் திரு. சோமு, கவிஞரை நினைவூட்டுகிறார். கவிஞரின் குடும்ப நலத்தைப் பேணிக் காக்க விரும்பி, பெரியவர்கள் பலர்கொண்ட அறக் கட்டளையை உருவாக்கி நிதி சேர்த்த பெருமை இவருக்கு உரியது.

கவிஞர் மணிமண்டபம் அமைக்கத் தமிழக அரசு முடிவு செய்து அறிவிக்கக் காரணமாக இருந்தவர் இவரே ஆவார்.

ஆண்டு தொறும் அக்டோபர் 17 - இல் கண்ணதாசன் விழாவையும் மார்கழித் திங்களில் ஒரு வாரத்துக்குத் திருவெம்பாவைவிழாவையும் சிறந்த இலக்கிய விற்பன்னர்களை வரவழைத்துக் கோவையில் செம்மையாக நடத்தி வருகிறார்.

வள்ளலார் பாடல்களிலும் கண்ணதாசன் கவிதைகளிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்.

சொந்தமாகப் பெரியதொரு நூலகத்தை உருவாக்கி வருபவர்.

ஜப்பானியருடைய தொழில் நிர்வாக முறைகளின் சிறப்பியல்புகளைக் குறித்து இவர் தமிழ் நூல் ஒன்றை எழுதியிருக்கிறார்.

மாண்புமிகு இராம வீரப்பன்

புதுக்கோட்டைக்கு அருகேயுள்ள வல்லத்தராக்கோட்டை ஊரினர். மணிவிழாவை நோக்கி, வீறு நடை போட்டுக் கொண்டிருக்கும் இளைஞர். சீரிய சிந்தனையாளர். இளமைக்காலத்தில் செட்டி நாட்டில் வாழ்ந்தவர். பள்ளிப் படிப்பை முடிக்கும் வாய்ப்பை இழந்த போதிலும், அதைத் தம் முயற்சியால் ஈடு செய்து, புது நூல்களைப் படிப்பதற்கு நாளும் நேரம் ஒதுக்கிக் கொண்டிருக்கிறார்.

சிறுவயதிலேயே தமிழ் இசை இயக்கத்திற்குப் பேராதரவு காட்டித் தம் உணர்ச்சிகளை வெளிப்படுத்திய சிறப்பு இவர்க்கு உரியது.

திரு ஏ கே. வேலனுடன் சேர்ந்து, தஞ்சாவூரிலிருந்து 'கதிரவன்' என்ற இதழைச் சில காலம் நடத்தினார்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் எழுதி நடித்த ஆரம்பகால நாடகங்களை மாறுபட்ட அரசியல் கருத்துடையவர்களும் பார்த்துப் பாராட்டச்செய்தது இவருடைய சாதனைஎனலாம்.

தமிழ் எழுத்தாளர்களுடன் 'ஆர். எம் வீ' அவர்கட்கு நிறைந்த தொடர்பு உண்டு.

1977 முதல் தமிழகஅரசு செய்துவரும் பரந்த விரிந்த பல்வேறு தமிழ் வளர்ச்சிப் பணிகள் அனைத்திற்கும் அச்சாணியாக இருப்பவர். நெஞ்சில்பட்டதை அஞ்சாமல் உரைக்கும் துணிவு படைத்தவர். நல்ல தமிழில் மணிக்கணக்கில் முழங்க வல்ல மேடை மணி.

அனல் தெறிக்கும் அரசியல் நெடுஞ்சாலையிலும் குளிர்ந்த இலக்கியச் சோலையிலும் பீடு நடை போடுபவர். செட்டிநாட்டார் எழுதும் கணக்குகளில் கையாளப் பெறும் கூட்டெழுத்து முறையை, தமிழக அரசின் கோப்புகளிலும் பயன்படுத்தி வருபவர்.

"நான் செட்டிநாட்டில் பிறந்தேன். செட்டிநாட்டில் வளர்ந்தேன். என் திருமணம் கூட திருப்பரங்குன்றத்தில் 1956-இல் நகரத்தார் விடுதியில் தான் நடை பெற்றது. செட்டி நாடு தமிழுக்குச் செய்திருக்கும் அளவுக்கு, தமிழ்நாட்டின் வேறு எந்தப் பகுதியும் செய்யவில்லை" என்றெல்லாம் அரங்குகளில் பெருமிதத்தோடு கூறி, பூரிப்படைபவர் ஆர் எம் வீ.

செய்தி அற நிலையைத் துறை அமைச்சராக இவர்கள் தமிழ்நாட்டுத் திருக்கோயில்கள் அனைத்திலும் தமிழ் ஏற்றம் பெறவும் தேவார திருவாசகங்கள் அவற்றுக்கு உரிய இடத்தை மீண்டும் அடையவும் ஓதுவார்கட்கு மறுவாழ்வு அளிக்கவும் ஆவன அனைத்தும் செய்து வருகிறார்கள்.

பல்கலைக்கழகங்கள் ஆராய்ச்சிப் பட்டங்களுக்கு உரிய ஆய்வு ஏடுகளைத் தமிழில் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்பது இவருடைய அவா.

ஹிந்தி எதிர்ப்பு இயக்கம் என்பது ஆங்கிலக் கல்விக்கு அடிமை மோகத்தை உருவாக்கித் தமிழைப் புறக்கணிப்பது என்ற நிலையை உண்டாக்கி விட்டது. இந்தச் சூழலில், தாய் மொழியாம் தமிழ்க் கல்வியின் தேவையைத் தமிழ்நாட்டில் வாழும் தமிழர்கள் உணர்வது இன்றியமையாதது என்ற கருத்தை மாண்புமிகு "இராமவீ" மேடைதொறும் வலியுறுத்தி வருகிறார்.

உலகத் தமிழ்ச் சங்கம் அமைப்பதற்கான குழுவின் தலைவராக இருந்து அதை உருவாக்க வழி வகுத்தவர் இவரே.

இந்தியாவுக்கு வெளியே சென்று பல நாடுகளில் குடியேறியுள்ள தமிழர்களின் அடுத்த தலைமுறையினரிடையே தமிழ்ப் பண்பாட்டையும் தமிழ் மொழியையும் பரப்பவும் மாண்புமிகு இராமவீ அவர்கள் பல திட்டங்கள் வகுத்து வருகிறார்கள்.

# 13. மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபை

இந்நூற்றாண்டின் தொடக்க காலத்தில் செட்டி நாட்டில் புரவலர் பலர் இருந்தனர். அவர்கள் தம்மை நாடி வந்த புலவர்களுக்குப் பொருள் வழங்கியும் அவர்களை உபசரித்தும் அவர்கள் எழுதியும் பதிப்பித்ததுமான தமிழ் நூல்களுக்கு ஆதரவு கொடுத்தும் வந்தனர்.

இத்தகைய புரவலர்க்குள் மேலைச்சிவபுரி. வ. பழ. சா. பழனியப்பச் செட்டியாரும் அவருடைய தம்பி அண்ணாமலை செட்டியாரும் குறிப்பிட தக்கவர் ஆவர். தமிழ்ப்புலமை மிக்க பண்டிதமணி அவர்கள், நண்பராக வாய்த்தது இப்புரவலர் களுக்கும் ஏனைய புரவலர்களுக்கும் உள்ள சிறப்பான வேறு பாடாகும். இயல்பாகவே தமிழ்ப் புலவர்களுக்கு வரையாது வழங்கும் இவர்களது தமிழ்ப் பற்று பண்டிதமணியின் கூட்டுறவால் சன்மார்க்க சபையாக உருவாயிற்று.

## சபைத் தொடக்கம்

சன்மார்க்க சபை (13-5-1909) சௌமிய ஆண்டு சித்திரைத் திங்கள் 31-ஆம் நாளில் நிறுவப் பெற்றது. சோழவந்தான் மகாவித்வான் அரசஞ்சண்முகனார் இச்சபை யைத் தொடங்கி வைத்தார்.

## நோக்கங்கள்

சபையின் நோக்கங்கள் "ஒழுக்கம் கல்வி முதலிய பல விஷயங்களைப் பற்றி உபந்நியாசங்கள் புரிவித்தலும் தக்க பண்டிதர் ஒருவரை இச்சபையின் உபாத்தியாயராக நியமனஞ் செய்து ஆங்குச் சேரும்சிறுவர்களுக்குக் கல்வி பயிற்றுவித்தலும் சபையில் வந்து படிப்பார் பலருக்கும் உபயோகமாகும்படி தமிழ் சமஸ்கிருத பாஷைகளிலுள்ள முக்கியமான எல்லாப் புத்தகங்களையும் தொகுத்து வைத்தலும் இலௌகீக சம்பந்த மானவும் இலக்கண இலக்கிய சாஸ்திர சம்பந்தமானவும் ஆகிய பத்திரிகைகளை தருவித்தலும் பிறவுமாம்"

சபை தொடங்கிய இரண்டாம் ஆண்டிலேயே (1911) சபைக்கென சிறந்த கட்டிடம் அமைக்கப் பெற்றது. கட்டிடத்

திறப்பு விழாவில் தமிழ்ப் புலவர் பெருமக்கள் பங்கு கொண்டனர். இவ்விழாவின் சிறப்பை விரோதிகிருது சித்திரை 20 உ. சுதேசமித்திரன் இதழில் எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை மிக விரிவாக எழுதியிருக்கிறார். அன்று "தொல்காப்பியனார்" நூல் நிலையமும் நிறுவப் பெற்றது சபையின் நீடிய வளர்ச்சி கருதி வ. பழ. சா. குடும்பத்தாரும் ஏனைய நகரத்தார்களும் ரூபாய் ஐம்பதாயிரம் வரை பொருள் உதவினார்கள்.

## ஆண்டு விழாக்கள்

போக்குவரத்து வசதியும் விளம்பரக் கருவிகளும் பிரச்சார முறைகளும் பெருகாத இந்த நூற்றாண்டின் தொடக்க காலத்தில் சன்மார்க்க சபையின் ஆண்டு விழாக்கள் மூன்று நாட்கள் மிகப்பெரிய இலக்கியத் திருவிழாக்களாக கொண்டாடப் பெற்றன.

வெளியூர்களிலிருந்து மூவாயிரம் மக்கள் விழாக்காண வருவார்கள். ஒழுங்கான சாலைகளோ, கார்வசதியோ, இல்லாமையின் விழாக் காண வரும் பெருமக்கள் பல கண்மாய்களைத் தாண்டி மாட்டு வண்டிகளில் வருவார்கள். இவர்களுக்குச் செவிக்கும் வயிற்றுக்கும் உணவு ஏற்பாடு செய்யும் வ. பழ. சா. குடும்பத்தார் அன்பர்களின் வண்டி மாடுகளுக்கு உணவாகப் பயன் படுவதற்காக வைக் கோல் போர்களையும் விழாவுக்குச் சில வாரங்கள் முன்னதாகவே அமைத்து விடுதல் வழக்கமாக இருந்தது. இவ் விழா பற்றியும் அப்போது வந்த புலவர் பெருமக்களின் சிறப்பு இயல்புகள் பற்றியும் இப்பகுதி வாழ் முதியவர்கள் இன்றும்பெருமையாகநினைவு கூறுகின்றனர்

இவ் விழாக்களில் தமிழ் நாட்டின் தலை சிறந்த புலவர் பெருமக்கள் கலந்து கொண்டு சொற்பொழிவுகள் ஆற்றுவர் டாக்டர் உ.வே. சாமிநாதஐயர் அவர்கள் சபையின் 5. 16. 25 ஆகிய மூன்று ஆண்டு நிறைவுகளில் தலைமை தாங்கி சிறப்பித்துள்ளார்கள். மற்றும் மு. ரா. கந்தசாமிக் கவிராயர், மு. ராகவையங்கார், ரா. ராகவையங்கார், டி. கே. சீனிவாச ஐயங்கார், விபுலானந்த அடிகள் திரு. வி. க., த வே. உமாமகேசுவரம் பிள்ளை, ச. சோமசுந்தர பாரதியார், ந.மு. வேங்கடசாமி நாட்டார், வே. ப. சுப்பிரமணியமுதலியார் சி. கே. சுப்பிரமணிய முதலியார். கரந்தைக் கவியரசு

வேங்கடாசலம்பிள்ளை கா. சுப்பிரமணிய பிள்ளை. ரா. பி. சேதுப்பிள்ளை, டாக்டர். மு. வ. ஆகியோர் ஆண்டு விழாத் தலைவர்களில் சிலராவர்.

தவத்திரு. ஞானியாரடிகள். ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை, ந. சிவகுருநாத பிள்ளை முதலியோர் பலமுறை சிறப்புச் சொற்பொழிவு ஆற்றியுள்ளனர்.

## ஈழநாட்டுத் தொடர்பு

ஈழ நாட்டுத் தமிழ்ப் புலவர்களின் தொடர்பும் சபைக்கு நிரம்ப உண்டு. சபை தொடங்கிய 1909-இல் ஆறுமுக நாவலரின் மாணவர் "சைவ உதய பானு" ஆசிரியர் சு. சரவணமுத்துப் பிள்ளை கலந்து கொண்டுள்ளார். வித்வான் சி. தாமோதரம் பிள்ளை, சாமிநாத பண்டிதர், சு. நவநீதகிருஷ்ண பாரதியார் மற்றும் பலர் விழாக்களில் பங்கு கொண்டுள்ளனர். சுவாமி விபுலானந்தாவுக்கும் சபைக்கும் நெருக்கமான தொடர்பு உண்டு. சபையின் 23, 33 ஆம் ஆண்டு விழாக்களில் தலைமை தாங்கியும் பல முறை சிறப்புச் சொற்பொழிவுகள் ஆற்றியும் உள்ளார், சிறப்பாகச் சொல்வதென்றால் இவ்விருபதாம் நூற்றாண்டின் புலவர் பெருமக்கள் அனைவரும் சபையின் விழாக்களில் கலந்து கொண்டிருக்கிறார்கள் எனலாம். சபை ஆண்டு விழாக்களில் தமிழ் முன்னேற்றம் பற்றிப் பல கருத்துக்கள் தெரிவிக்கப் பெற்று தீர்மானங்களாக நிறைவேறியுள்ளன. காலப்போக்கில் அரசினரால் அவை நிறைவேற்றப் பெற்றும் உள்ளன.

## கல்விப்பணி

செவிவழித் தமிழ்ப் பயிரை வளர்ப்பதுடன் சன்மார்க்க சபை அமையவில்லை. இப்பகுதிசிறார்களுக்கென தொடக்கப் பள்ளி அமைத்து தேவாரம் நீதிநூல்களுடன் சிறந்த கல்வி பயிற்றி வருகிறது. இதுபோது தமிழ்மொழி வாயிலாக 'மழலையர் பள்ளி' ஒன்றையும் நிறுவி இருக்கிறது. இவ்வூரில் அரசினர் உயர்நிலைப்பள்ளி அமைக்க ஆவனசெய்து அதற்குரிய நிலத்தையும் கொடுத்திருக்கிறது, உயர்நிலைப்பள்ளி அமைக்க பெரும்நிதியை முன்னாள் தலைவர் சாமிநாதன் செட்டியார் மக்கள் வழங்கினர்.

## நூல்நிலையம்

சபையின் சார்பில் உள்ள "தொல்காப்பியனார் நூல் நிலையம்'' சிறப்பாக இயங்கிவருகிறது. இன்றுகிடைத்தற்கரிய நூல்கள் பல இங்கு உள்ளன. மாணவர்க்கும்பொதுமக்களுக்கும் இது நன்கு பயன்படுகிறது. தொல்காப்பியருக்கு தமிழ்நாட்டில் ஏற்பட்ட முதல் நினைவுச் சின்னமாக இது திகழ்கிறது.

## செந்தமிழ்க் கல்லூரி

சபையின் சிறந்த உறுப்பு கணேசர் செந்தமிழ்க்கல்லூரி யாகும். இது தொடக்க காலத்தில் மதுரைத் தமிழ்ச்சங்கம் நடத்திய பிரவேசம் பால பண்டித வகுப்புக்களுக்கு மாணவர் களைப் பயிற்றுவித்து அனுப்பி வந்தது. அப்போது இங்கு பயின்ற மாணவர்கள் சிறப்பாக தேர்ச்சி பெற்று நாடு முழுதும் நற்பெயர் எடுத்தனர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நெடுநாள் இலக்கணப்பேராசிரியராக விளங்கி நாடு மிகவும் மதித்துப்போற்றிய வித்வான் மு.அருணாசலப்பிள்ளைஇச்சபை யின் மாணவராவார்.

1939ஆம் ஆண்டுமுதல்இக்கல்லூரி சென்னைப் பல்கலைக் கழகத்தோடு இணைந்து வித்வான் வகுப்புக்களை நடத்தி வருகிறது.

திருச்சி மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி ஆகிய தென்மாவட்டங்களில் வித்வான் வகுப்பு தொடங்கிய முதல்கல்லூரி இதுவே. புலமை சான்ற ஆசிரியர் கள் இங்கு தொண்டாற்றி வருகின்றனர். நெடுந்தொலைவி லிருந்து வந்து கல்வி பயிலும் ஏழை மாணவர்களுக்கு பொருள் உதவியும் செய்யப் பெறுகிறது.

## ஆசிரியர்கள்

இங்கு ஆசிரியராகவும் மாணவர்களாகவும் இருந்த பலர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆசிரியராகச் சேர்ந்த னர். இவ்வகையில் அன்றைய தமிழ்ப் பல்கலைக் கழகத்துக்கு சன்மார்க்க சபை வித்து எனலாம். பேராசிரியர் மு. அருணா சலம்பிள்ளை, மீ. முத்துசாமிப்பிள்ளை, அமிர்தலிங்கம் பிள்ளை தொல்காப்பிய எழுத்ததிகாரத்திற்கு குறிப்புரை எழுதிய சோழவந்தான் கந்தசாமியார், சொல்லதிகாரத்திற்கு விளக்க

உரை எழுதிய ஆ. பூவராகம் பிள்ளை ஆகியோர் முன்பு இச் சபையில் பணி யாற்றியவர்களே.

சென்னைப் பல்கலைக் கழகத்தோடு 1939ஆம் ஆண்டு கல்லூரி இணைந்தது முதல், இன்றுவரை கல்லூரி முதல்வராகப் பணி ஆற்றிய அனைவருமே அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துப் பட்டதாரிகளே ஆவர். இவ்வகையில் கொண்டும் கொடுத்தும் உள்ள இவ்வுறவு குறிப்பிடத்தக்கதாகும்,

## மாணவர்கள்

''இக்கல்லூரியில் மாணவர் தேர்வு எண்ணிக்கை மிக்க தாகும். இதுவரை ஆயிரத்திற்கும் மேற்பட்டவர்கள் புலமைப் பட்டம் பெற்று நாடெங்கும் பணிபுரிகின்றனர். மதுரை காமராசர் பல்கலைக்கழக தலைமைத் தமிழ்ப் பேராசிரியர், டாக்டர் இராம. பெரியகருப்பன் (தமிழண்ணல்), மாநிலக் கல்லூரி தலைமைப் பேராசிரியர் டாக்டர் மெ.சுந்தரம், கவியரசு, முடியரசன் போன்ற பலர் இக்கல்லூரியில் பயின்றவராவர். சில ஆண்டுகளாக இங்கு B. Litt பட்டப்படிப்புகள் நடந்து வருகின்றன. வகுப்பு அறைகள், மாணவர் விடுதி, மாணாக்கியர் விடுதி முதலியன நன்கு அமைந்துள்ளன.

## பட்டங்கள்—நூல்வெளியீடுகள்

தமிழ் அறிஞர்கள் இச்சபையை ''பண்டிதமணி சபை'' என்றே குறிப்பிடுவர். பண்டிதமணி கதிரேசனார், சபையைத் தோற்றுவித்து தம் இறுதிக்காலம் வரை சபையைக் கண் என காத்து வந்தார். தம் தமிழ்த்தொண்டுகளுக்கெல்லாம் சபையே நிலைக்களம் என்று உறுதி பூண்டார். அவர்கள் கலந்து கொள்ளாத விழாவே இங்கு இல்லை எனலாம். கதிரேசனார்க்கு 'பண்டிதமணி' என்னும் நாடு மதித்தபட்டம் 1925இல் டாக்டர் உ.வே.சா. தலைமையில் சபையே வழங்கிச்சிறப்பித்தது. அது போது ரா. ராகவையங்கார் அவர்களுக்கு ''மகாவித்வான்'' என்ற பட்டத்தையும் சபைவழங்கிற்று. பண்டிதமணி அவர்களை சுக்ரநீதி, மண்ணியல் சிறுதேர் முதலிய நூல்கள் எழுதச் செய்து சபை வெளியிட்டது.

''சபையை நான் வளர்த்தேன் எனப்பலர் சொல்லுவார்கள். உண்மையில்சபை தான் என்னை வளர்த்தது'' என அடிக்கடி பண்டிதமணியார் அடக்கத்தோடு குறிப்பிடுவார். இவ்வாறு

சபைக்கும் பண்டிதமணிக்கும் உள்ள அகலாத தொடர்பை நினைத்து, அவர்தம் அருமை மக்கள் பண்டிதமணி எழுதிய திருவாசக கதிர்மணி விளக்க உரை, உரைநடைக் கோவை போன்ற பல நூல்களின் பதிப்பு உரிமையைச் சபைக்கே வழங்கிப் பெருமை பெற்றனர். பண்டிதமணி அவர்களின் சிறந்தநினைவுச்சின்னம்மேலைச்சிவபுரிச் சன்மார்க்கசபைதான் என்பது சாலப்பொருந்தும்.

புதிய கட்டிடங்கள்

சபையின் பழைய மாணவர்கள் சபையின்பால் பேரன்பு கொண்டிருப்பது தனிச்சிறப்பாகும். சபைப்பழையமாணவரும் இந்தியத்தோல் வணிகத்தில் சிறப்பிடம்பெற்று அத்துறையில் உலகமதிப்புப் பெற்றவருமான மேலைச்சிவபுரி ஆ. நாகப்பச் செட்டியார் அவர்கள் சபைச்செயலராகவும் கல்லூரிக் குழு தலைவராகவும் நீண்டநாள்பணிபுரிந்தார் 'நாகப்பா மாணவர் இல்லம்' என்றபெயரில் நவீனவசதிகளுடன் கூடிய பெரியமாண வர் விடுதியைக் கட்டி நன்கொடையாக வழங்கியுள்ளார்.

மற்றும் ஒரு பழைய மாணவராகிய மகிபாலன் பட்டி சித்தாந்த மணிமொழிச்செல்வர் சி.ராம. ராமசாமி செட்டி யார் அவர்களின் நினைவாகசிறந்ததொருமாணவியர்விடுதியை அமைத்து அவர் திருமகனார் நாகப்பர் சபைக்கு வழங்கி யுள்ளார்.

சபையின் வளர்ச்சி கருதி கோட்டையூர் திருப்பணிச் செல்வர் அ.க.அ.சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் சமீபத்தில் பெருந்தொகையை நன்கொடையாக வழங்கினார் கள். அப் பெருமகனாரின் மனம் உவந்த இக் கொடை சபை வளர்ச்சியில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

சபை வெள்ளிவிழா பொன்விழா வைரவிழாக்களைச் சிறப்பாகக் கொண்டாடியது. 1959இல்வெளிவந்தபொன்விழா மலர் சிறந்தபுலவர்களின் கட்டுரைகளைக் கொண்டது. சபை யின் தொண்டுகள் பற்றி டாக்டர் வ. சுப. மாணிக்கனார் அதில் விரிவாக எழுதியுள்ளார்.

சபையை தோற்றுவித்த பழனியப்பச் செட்டியார்மகன் சாமிநாதன் செட்டியாரும் அவர்தம்பி சிதம்பரம் செட்டியாரும் சபைத்தலைவர்களாக இருந்து அரும்பணிபுரிந்தனர். மேற் கூறிய சாமிநாதன் செட்டியார் நினைவாக கல்லூரி வகுப்

பறைக் கட்டிடங்கள் கட்டி அவர்தம் மக்கள் பெரும் நிதி வழங்கினர். சிதம்பரம் செட்டியார் தம் நன் கொடையால் தொடக்கப் பள்ளிக்கு, கட்டிடங்கள் அமைத்துத் தந்தார். இப்போது பழ. பழனியப்பச் செட்டியார் தலைவராகப் பணி புரிகின்றார்.

### பண்டிதமணிக்குப் பின்

பண்டிதமணி அவர்களுக்குப் பிறகு சபையில் புலமை. உறுப்பினராக டாக்டர் வ. சுப. மாணிக்கனார் பொறுப் பேற்றார். அது சபை வளர்ச்சியின் திருப்பு முனையாக அமைந்தது. மாணிக்கனார் இவ்வூரினர். சபையில் கல்வி பயின்றவர். சபையை நிறுவிய குடும்பத்தினரின் பங்காளி உறவினர், பண்டிதமணியின் உளங்கலந்த மாணவர் தம் ஆசிரியரின் சபைப் பணி மேலும் சிறக்க மாணிக்கனார் அயராது உழைத்தார். சபை யின் வளர்ச்சி கருதி திரு. சிதம்பரம் செட்டியாருடன் சிங்கப்பூர் மலேயா முதலிய நாடுகள் சென்று பெரும்நிதி திரட்டி சபையின் வழி தமிழ்த்தொண்டுக்கு நல்ல அடிப்படை அமைத்தார். இந்தத் தமிழ்ச் சபைக்கு மலேயா வாழ் இந்திய இனத்தவர் மனம் உவந்து பெருங்கொடை நல்கினர். பண்டிதமணி அவர்களுக்கு பிறகும் மாணிக்கனாரின் அயராத உழைப்பால் சபை பலதுறைகளிலும் வலுவான அடிப்படை பெற்றுத் திகழ்கிறது.

### பண்டிதமணி நூற்றாண்டு விழா

பண்டிதமணி அவர்களின் நூற்றாண்டு விழாவினை (1981) சபை முதலில் கொண்டாடி பிற பகுதிகளிலும் அவ்விழா நடத்த துணைபுரிந்தது. நூற்றாண்டு நினைவாக பண்டிதமணியின் சுக்கிரநீதி மண்ணியல் சிறுதேர் திருவாசக உரைகள் ஆகிய அனைத்து நூல்களும் மறு பதிப்புகள் வெளியிடப் பெற்றுள்ளன. தமிழ் ஆர்வம் மிக்க நகரத்தார் பெருமக்கள் இதற்குப்பெரும் நிதி வழங்கித் துணைபுரிந்தனர்.

### பவள விழா

சபையை 1909இல் நிறுவிய வ.பழ.சா. குடும்பத்தாரின் தமிழ்த்தொண்டு நாட்டினரின் நன்றிக்கு உரியதாகும். எவ்வித ஆரவாரமும் விளம்பரமும் இன்றி மொழிப்பணி ஒன்றையே

குறிக் கோளாகக் கொண்டு இடைவிடாது சபை நடந்து வருகிறது. செட்டி நாட்டில் இன்று காணும் தமிழ் அறிவுப் பெருக்கத்திற்கு இச் சபையே விளை நிலம் எனலாம். பல சங்கங்களும் கழகங்களும் செட்டிநாடுமுழுவதும் தோன்றி,பணி செய்து வருவதற்கு இச் சபையே வழிகாட்டியாகும்.

நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் தமிழ் உணர்வுக்கு இச்சபை ஓர் எடுத்துக்காட்டாகும்.

'சைவமும் தமிழும் தழைத்து இனிது ஓங்குக' என்பது சபையின் குறிக்கோள் ஆகும்.

சபையின் 75ஆம் ஆண்டு நிறைவுவிழாவை 1984இறுதியில் கொண்டாடஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

## 14. கம்பன் பணி

ஓராயிரம் ஆண்டுகளுக்கு முன் கவிச்சக்கரவர்த்தி கம்பன் காலமானான். ஆனால் இப்போது தான் அவன் புகழ் பல மடங்கு ஓங்கி உயர்ந்திருக்கிறது.

### கம்பராமாயணக் கல்வியில் ஒரு புரட்சி

பக்தி நூலாக வைணவர் மட்டும் அதுவும் குறிப்பிட்ட நாட்களில் மட்டுமே ஒரு சடங்காகப் படித்து வந்த கம்ப ராமாயணம், பல மதத்தினர்க்கும் அறிமுகப் படுத்தப்பட்டு விட்டது. கம்பன் கழகங்கள் ஐம்பதுக்குமேல் இயங்குகின்றன. கம்பராமாயணத் தொடர்பான பட்டிமண்டபங்கள், வழக்காடு மன்றங்கள், கவியரங்குகள் பட்டி தொட்டியெல்லாம் நடை பெறுகின்றன. கம்பராமாயணத்தை எரிக்கவும் எதிர்க்கவும் பகுத்தறிவுப் பாசறையினர் 1939 அளவில் ஒரு பெருங் கிளர்ச்சியே நடத்திய தமிழ் நாட்டில் ஒரு புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டு இந்த அளவு பெருகியுள்ள கம்பன் பேரியக் கதிதுக்கு வித்திட்டது செட்டிநாடு. இந்த வரலாற்றை, இக் கட்டுரையில் ஒல்லும் வகையால் கூறுவோம்.

### செட்டிநாட்டுத் தொடர்பு

கம்பனுக்கும் செட்டிநாட்டுக்கும் மிகுதியான தொடர்பு உண்டு. கானாடு, கோனாடு ஆகிய பகுதிகளிலுள்ள 24 கோட்டத்து வேளாளர் தம் சமூகத்தைச் சிறப்பித்துக் கம்பன் பாடியுள்ள ஏரெழுபதைக் கேட்டனர் என்றும், உடனே அப் புலவர் பெருமானுக்குப் பரிசில்கள் வழங்கினர் என்றும் பொன்னமராவதி பொய் சொல்லாத்தேவன் அம்பலகாரரிட மிருந்து புதுக்கோட்டை அரசினர் பெற்ற ஒரு சுவடியிலிருந்து தெரிகிறது. கம்பர் தன் வாழ்நாளின் இறுதிக் காலத்தில் செட்டிநாட்டில்தான் இருந்தார். அவர் உயிர் நீத்ததும் நாட்டரசன் கோட்டையிலேயேயாகும்.

### கம்பன் சமாதி

கம்பன் நாட்டரசன் கோட்டைக் காட்டில் எருமை மேய்க்கும் சிறுவர் சிலரைக் கண்டு, 'மூடிக்கரைக்குநெறியாது?

என வினவ 'அடிக்கரை பிடித்தேகின் முடிக்கரை எய்தலர்கும்' என்று அவர்கள் மறுமொழி கூறக் கேட்டு, அதன் பொருள் தெரியாது திகைத்துப் பின்னர் தெளிந்து, பின் வருமாறு கம்பன் பாடினான் என்பர்.

''கருங்காலிக் கட்டைக்கு நாணாக் கோடாரி
யிருங்கதலித் தண்டுக்கு நாணு-மருங்காகக்
காட்டெருமை மேய்க்கின்றன காளையர்க்கே யாந்தோற்றோம்
நாட்டரசன் கோட்டை நகர்க்கு''

இப்பகுதியில் வாழ்ந்த சைவநெறி முத்து நாயகம் என்று திருப்பெயர் விளங்கிய முத்துநாயகப் புலவர்(முத்துக்குட்டிப் புலவர் என்றும் சொல்வர்) 1775-இல் இயற்றிய ''கண்ணுடையம்மை பள்ளு'' ப் பிரபந்தத்தில் கம்பரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அவர் பாடலொன்றையும் இங்கே தருவோம்.

''வாசமான தென்பாண்டி நன்னாடு
மதுரை நாட்டில் வளருமிந்நாடு
காசினிக்குட் கதிர்க்கின்ற நாடு
முன்கம்பர் வந்து துதிக்கின்ற நாடு
பூசுரர்க் கன்னதானஞ் செய் நாடு
புலவர் மேலபிமானஞ் செய்நாடு
ராசலட்சுமி கண்ணுடை யாளருள்
நல்கு நாட்டரசன் கோட்டை நாடே''

இப்புலவர் பாடிய பின்வரும் பாடலிலிருந்து நகர வளத்தை அறியலாம்.

''சொல்லினாலிசை கொண்ட நகரம்
சுகிர்த வாவிகள் கண்ட நகரம்
நெல்லினால் நிதி தேடும் நகரம்
நிதியினால் தர்மம் நீடு நகரம்
எல்லவர்க்கு முகந்த நகரம்
இளசை வாழ்வு மிகுந்த நகரம்
நல்ல நாட்டரசன் கோட்டை ஏழுர்
நகரமெங்கள் நகரங்கா ணாண்டே''

படித்து இன்புறத்தக்கவாறு நாட்டு வளம், நகர வளம் பள்ளன் வருதல் ஆகியவை இதில் காணப்படுகின்றன. இவ்வூர் நகரத்தார் இதை 1903-இல் வெளியிட்டுள்ளனர்.

பிற சான்றுகள்

கம்பர் சமாதியைத் தவிர நாட்டரசன் கோட்டையில் கம்பனைப் பற்றிய நடுகல், கம்பன் செய், கம்பன்குளம், கம்பன் ஊருணி ஆகிய சான்றுகளும் உள்ளன. சமாதியை அடுத்துள்ள இடங்களுக்குப் பட்டா வழங்கும் போது. 'கம்பன் செய்க்கழிவு' என்ற சொற்றொடர் சில நூற்றாண்டுகளுக்கு முன்னரே பயன்படுத்தப் பெற்றிருக்கிறது.

நாச்சியாபுரம் - மானகிரி சாலையில் உள்ள இளங்குடி அருகே கம்பனூர் என்ற ஊர் இருக்கிறது. திருமெய்யத்துக்கும் புதுக்கோட்டைக்கும் இடையே கம்பன் செட்டி சத்திரம் இருக்கிறது.

சடையன்

கம்பனை ஆதரித்த வள்ளல் சடையப்பன். சடையன், சடையப்பன் என்ற பெயர்கள் இன்றளவும் செட்டி நாட்டில் வழங்கி வருகின்றன. காரைக்குடிக்கும் தேவகோட்டைக்கும் இடையே சடையன் கண்மாய் என்று ஒரு கண்மாய் இருக்கிறது. ஆகையால் சடையப்பரும் செட்டி நாட்டவரே என ஆராய்ச்சியாளர் முடிவு கூறுவாராயின் யாம் வியப்படைவதற்கில்லை.

கம்பர் இராமநாதன் செட்டியார்

கம்பன் சமாதி அமைந்துள்ள தோட்டத்தின் உரிமையாளர் திருவாளர் ஆவி. அரு. இராமநாதன் செட்டியார்க்கு கம்பர் இராமநாதன் செட்டியார் என்றபெயர் வழங்கி வந்தது. இவர் 1925 - ஆம் ஆண்டில் கம்பன் சமாதியை 40,000 ரூபாய் செலவில் எழில் மிக்க சோலையும் கோவிலுமாக அமைத்தார். இப்போது, இங்கு மின்சார விளக்குகளும் போடப் பெற்றுள்ளன கம்பன் இங்கு சமாதி அடைந்ததை அறிந்து, கம்பர் இராமநாதன் செட்டியாரின் முன்னோர்கள் 200 ஆண்டுகளாக இங்கு ஆண்டு தொறும் பூசை நடத்தி வந்திருக்கின்றனர்.

கம்ப ராமாயண ஏடு படிக்கும் வழக்கம் செட்டி நாட்டில் நெடுங்காலமாக இருந்து வருகிறது. கம்பராமாயண வகுப்புகளும் பல இடங்களில் நடைபெற்றன.

டி. கே. சி.

கம்பராமாயணப் பதிப்பு என்றவுடன், ''டி கே. சி''யின் பெயர் தமிழன்பர் நினைவுக்கு வருவது இயற்கையே. டி. கே. சி செட்டிநாட்டால் தமிழ்நாட்டுக்கு அறிமுகமானவரென்று தங்கு தடையின்றிச் சொல்லலாம். அவர் நீதிக் கட்சியிலிருந்த போது, சொ. முருகப்பா அவர்கள் அரசியல் துறையில் டி கே. சி யுடன் நெருங்கிய நண்பராயினார். அதன்விளைவாக அ. லெ. நடராஜன் அவர்களுடைய நட்பும் டி.கே.சிக்கு ஏற்பட்டு, புதுமைப் பதிப்பகத்தார் டி.கே.சியின் இராமாயணத்தை வெளியிடுவராயினர்.

திருவாளர்கள் சொ. முருகப்பா, சா. கணேசன் ஆகிய பெருமக்களின் ஆதரவால் டி.கே.சி. யின் கம்பராமாயணச் சொற்பொழிவுகள் காரைக்குடியிலும் செட்டிநாட்டின் சிற்றூர்களிலும் நிகழ்ந்த வண்ணமாக இருந்தன. பின்னர், தமிழ் இசை இயக்கத்திலும் டி.கே.சி. முன்னணியில் நின்றார்.

டி.கே.சி.யின் இறுதி நாள் வரை செட்டி நாட்டன்பர்கள் அவருடன் நெருங்கிப் பழகினர். உயர்திருவாளர்கள் க.வீ.அழ, மு. இராமநாதச் செட்டியார், ப.வ. ராம. குழந்தையன் செட்டியார் ஆகிய இருவரும் டி கே.சி. இராமாயணத்தின் மறு பதிப்பு வெளிவரவும் அரங்கேற்று விழா நடைபெறவும் எல்லா வகையாலும் உதவினார்கள்.

டி.கே.சி. பிறந்தது தென்காசியில்; வழக்கறிஞராகத் தொழில் நடத்தியது நெல்லை வண்ணார்ப் பேட்டையில்: அற நிலையப்பணியாற்றியது சென்னையில்; அமைதியாக வாழ்ந்தது அவரது அந்திமாலையில், அருந்தமிழ் பரப்பியது திருக்குற்றாலத்தில்: ஆனால் அவருடைய கம்பராமாயணப் பிரசாரத்திற்கு ஆதரவு கிடைத்தது, செட்டிநாட்டில்தான். டி.கே.சி கம்பர் பாடல்களில் திளைத்தார்: அப்பாடல்களில் அமைந்துள்ள பாவத்தை உணர்ந்து போற்றினார். சில பாடல்களைப் பல முறை பாடிப்பாடி மகிழ்ந்தார். மற்றவர்களையும் பாடிமகிழச் செய்தார் கம்பர் போன்ற புலவர்கள் ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறையே தோன்றுவார்கள்' என்று புகழ்ந்தார். சென்னையிலும் குற்றாலத்திலும் மாறி மாறித் தங்கியிருந்து, 'இலக்கிய வட்டத்தைப் பெருக்கினார். அவர் வட்டத்தில் சேர்ந்த சிலர்

செட்டிநாட்டில் செல்வமும் செல்வாக்கும் படைத்தவர்களாக இருந்தனர். அவர்களுக்குக் கம்பரிடத்தில் பற்று உண்டாகி, அது தனிவேகம் பெற்றது. திரு. சா. கணேசன், ரசிகமணி டி.கே.சி. ஐயாவை தம் குருவாகக் கொண்டார்.

## இராம காதை

பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களின் கம்ப ராமாயணக் கட்டுரைகளைக் 'குமர'னில் வெளியிட்ட சொ. முருகப்பா அவர்கள் 1950 முதல் 1956 - இல் உயிர் நீத்த வரையில் கம்பராமாயணப் பதிப்பு வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். கம்பனுடைய காவியம் தெளிவான உருவம்பெற வேண்டும். மக்கள் யாவரும் அதன் பயனைப் பெற வேண்டுமென்பது முருகப்பா அவர்களுடைய குறிக்கோள். கதைக்கோவை விடாத படி ஏறத்தாழ 4000 பாடல்களைக் கொண்ட இராமகாதையை சொற்பொருள், பொழிப்புரை, பாநயம் இவற்றுடன் வெளி யிடும் வேலையில் முனைந்து, இரு பகுதிகளை நாட்டிற்கு அளித்துள்ளார்கள்.

## கம்பர் காவியம்

இராம காதைக்கு ஒரு முன்னுரை போல, முருகப்பா அவர்கள் கம்பர் காவியம் - அதன் நிலை விளக்கம் என்னும் நூலை இயற்றினார்கள். கம்பராமாயணச் சீரழிவை வெளிப் படுத்தும் அரிய ஆராய்ச்சியாக அது திகழ்கிறது.

முருகப்பாவின் இராம காதை வெளியீட்டு விழாவில் 1954 இல் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்கள் கம்ப னுக்கும் செட்டிநாட்டுக்கும் உள்ள உறவு பற்றிக்குறிப்பிட்டதை இக் கட்டுரையில் கூறுவோம்.

## செட்டிநாடும் கம்பனும்

"திருவழுந்தூரில் கம்பன் பிறந்ததாகக் கூறுகின்றனர். கம்பன் வாழ்ந்து வந்ததாகக் கூறும் வீட்டினையேனும் துலக்கித் தமிழ்மக்கள் அனைவருக்கும் உரிய புனித ஸ்தல மாகவும் காட்சி நிலையமாகவும் வைத்திருக்கிறார்களா? அதுவும் இல்லை. அவ்வூரில் உள்ளார் கம்பராமாயணப் பிரதிகளையேனும் தொகுத்து வைத்துப் பலரும் பார்வை யிடும்படி வைத்திருக்கிறார்களா? அதுகூட இல்லை.

எனக்குத் தெரிந்தவரை ஒரு பிரதியேனும் அவ்வூரிலிருந்து கிடைத்ததாகச் சொல்லமுடியாது. கம்பன் பிறப்பைப் பற்றியுள்ள இம்மலட்டு உண்மையினால் என்ன பயன்? இதற்குமாறாக நாட்டரசன் கோட்டையில் கம்பன் சமாதி அடைந்தான் என்ற கொள்கை மிக்க பயன் தருவதாக உள்ளது. அதனால் விளைந்துள்ள நன்மைகளும் பல.

"ஆண்டுதோறும் கம்பன் திருநாள் மிகச் சிறப்பாக இங்கே கொண்டாடப் பெற்று வருகிறது. அவனதுபெருங் காப்பியத்தை நன்கு கற்றுள்ள அறிஞர்கள் பல இடங்களிலிருந்தும்வந்து இங்கே கூடுகின்றனர். கம்பனைப் பற்றியுள்ள பல விஷயங்களையும் குறித்துச் சொற்பொழிவுகள் நிகழுகின்றன. பல ஆராய்ச்சிகளும் விவாதங்களும் நடைபெறுகின்றன. கம்பனது புகழ் பரவுவதற்கு வேண்டும் முயற்சிகள் பலவும் செய்யப்படுகின்றன. இவற்றோடுநிற்கவில்லை; தமிழ்க் கவிதைகளின் உண்மை இயல்புகள் பற்றிப் பல விமர்சனங்களும் இங்கே வெளிப்படுத்தப் படுகின்றன. இவற்றையெல்லாம் ஆண்டுதோறும் இங்குப் பங்குனி அத்தத்தில் காணலாம். குறிப்பிட்டகால வரையறையின்றி எப்பொழுதும் அடக்கமாக நிகழும் நிகழ்ச்சி ஒன்றும் உள்ளது. வாய்ப்புக் கிடைக்கும்பொழுதெல்லாம் கம்பராமாயணப் பிரதிகளை நோக்கிப் பாடங்களைத் துணிய வேண்டும் என்ற முயற்சி நடைபெற்று வருகிறது.

"இங்கிருந்து ஏட்டுப் பிரதிகள் ஒன்றிரண்டு நானும் பெற்றுள்ளேன். இவையெல்லாம்தற்காலநிகழ்ச்சிகள் வெகு காலத்திற்கு முன்னர் கம்பராமாயணம்பற்றி கம்பநாடார் என்ற மாத வெளியீடு மோ. வே. கோவிந்தராச ஐயங்கார் அவர்களை ஆசிரியராகக் கொண்டு இங்கே தோன்றி, தமிழ்நாடு முழுவதும் உலவிவந்தது, பலருக்கும் ஞாபகம் இருக்கலாம். இந்நாட்டிலுள்ள மக்களின் ஆதரவும் ஆர்வமும் ஊக்கி வந்ததனாலேயே இந்தப் பத்திரிகை தோன்றி மிகவும் பயனளித்து வந்தது.

"இராமாயணப் பதிப்பு ஒன்று சிறந்த முறையில்பாட பேதங்களுடன் வெளியிடப்பட வேண்டும் என்ற அவாவும் அப்போதைக்கப்போது இந்த நாட்டில் பிறந்துள்ளது. இதற்காகப் பல முறையும் பல அன்பர்களும் முயற்சி செய்ததும் உண்டு. மிகப் பல ஆண்டுகளுக்கு முன்னர், இந்நாட்

டிலுள்ள பெரியார் ஒருவர் செய்த முயற்சியை நான் குறிப்பிட வேண்டியது அவசியம். ராஜா அண்ணாமலைச் செட்டியார் அவர்களது மூத்த சகோதரர் திரு. இராமசுவாமி செட்டியார் அவர்கள் பல பிரதேசங்களிலுமிருந்து ஏட்டுச் சுவடிகளை வரவழைத்து ஸ்ரீ. பு. ஆர். கிருஷ்ணமாச்சாரியார் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு இராமாயணத்தை முற்றும் வெளியிட வேண்டுமென்று கருதிப்பெரு முயற்சி செய்தார்கள்.

"இரண்டு ஆண்டுகளுக்குமுன்னால், (1952-இல்) டாக்டர் ஆர். கே.ஷண்முகம்செட்டியார் அவர்கள் தலைமையின் கீழ் இங்கே கூடிய கம்பர் விழாக் கூட்டத்தில் இப்பதிப்பு வெளியீட்டு முயற்சியைப் பற்றிச்சில முக்கியமானதீர்மானங்கள் நிறைவேறியுள்ளதையும் நீங்கள் அறிவீர்கள். நன்மைக்கு வித்தாகிய இம்முயற்சிகள் அனைத்தும் தோன்றிய இந்நாடு எவ்வகையிலேனும் கம்பனோடு உறவு கொண்டாடுவது தமிழ்மக்களுக்கு மகிழ்ச்சி அளிக்கும் விஷயமல்லவா? இவ்வகையாகக் கம்பனுக்கும் இந்நாட்டிற்கும் அழியாத ஒரு தொடர்பு இன்று முருகப்பா அவர்களின் மூலம் பிரத்தியட்சத்திலேயே ஏற்பட்டுவிட்டது. இதுவும்பிறர் தூண்டுதலின்றி இந்நாட்டவர்கள் தமது அறிவு கொண்டே துணிந்து அமைத்துக் கொண்டதாகும். இக்காரணத்தால் செட்டிநாட்டின் புகழ் மற்றப் பிரதேசத்தின் புகழையெல்லாம் ஒளி மழுங்கச் செய்துவிட்டது".

## கோவிந்தராஜ அய்யங்கார்*

சேலம் மாவட்டம் மோகனூர் என்ற ஊரில் கோவிந்தராஜ ஐயங்கார் என்பவர் வடமொழியிலும்தமிழிலும் பெரும் புலமை பெற்றிருந்தார். அவர் வால்மீகியையும் படித்தார். கம்பனையும் பயின்றார். கம்பனுடைய கதையும், நடையும் கவிதையும் அவரைக்கவர்ந்தன. வால்மீகியையும், கம்பனையும் இணைத்துப் படித்துப்பார்த்த அவர் கம்பனுடைய ஆற்றல் பெரியது என்பதை உணர்ந்தார்.

கம்பனுடைய பெருமையைத் தமிழுலகுக்கு அறிவிக்க வேண்டுமென்ற உந்துதலினால் 'கம்பநாடார்' என்னும் திங்கள்

---

*இச் செய்திகள் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் வெளியிட்டுள்ள 1980-இல் தமிழ், 1981-இல் தமிழ் என்ற நூல்களில் உள்ள தகவல்களின் அடிப்படையில் எழுதப் பெற்றவை.

இதழைத் தொடங்க முயன்றார். ஆனால் மோகனூரில் அதற்கு வேண்டிய உதவியை அவர் பெற இயலவில்லை.

'கம்பநாடார்' வாயிலாகக் கம்பன் புகழ் பரவ வேண்டும் என்ற ஒன்றையே நோக்கமாகக் கொண்ட கோவிந்தராஜர் தம்மை ஏற்கக்கூடிய - தம் கருத்துக்கு ஆக்கம் தரக்கூடிய செல்வரை நாடிச் சென்றார். அவருடைய செலவு அவரைக் காரைக்குடியில் கொண்டு வந்து நிறுத்தியது.

காரைக்குடியில் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்திருந்த செல்வர் சிலர் கோவிந்தராஜருக்கு ஊக்கமளித்தனர். அவர்களுடைய ஊக்கத்தாலும் ஆக்கத்தாலும் 'கம்பநாடார்' என்னும் இதழ் சில ஆண்டுகள் வெளி வந்தது. கோவிந்தராஜர் ஒருவரே அதில் எழுதினார். எழுதியதெல்லாம் கம்பன் பெருமையே!

கோவிந்தராஜருக்குக் கம்பராமாயாணப் பாடல்கள் யாவும் மனப்பாடமாக இருந்தன. அவர் இராமாயணத்தை பத்து நாள், இருபது நாள் தொடர் சொற்பொழிவுகளாகச் செய்வார். அப்போது அவர் கையில் எந்த நூலும் இருக்காது. தொடர்ந்து மூன்று, நான்கு மணி நேரம் உரை நிகழ்த்துவார்.

கோவிந்தராஜருடைய அறிவும் ஆற்றலும் காரைக்குடியில் இளைஞர் பலரைக் கவர்ந்தன. பலர் அவரிடம் கம்பராமாயணம் பாடம் கேட்டனர். 'தமிழ்க்கடல்' ராய.சொ. அவர்களுடைய மாணவர்களில் ஒருவராவார். ''என்னுடைய ஆசிரியர்க்கு பன்னீராயிரம் பாடல்களும் மனப்பாடமாகவரும். ஆனால் எனக்கு நான்காயிரம் பாடல்களே மனப்பாடம் ஆயிற்று'' என்று சொல்லித் 'தமிழ்க்கடல்' ஐயா அவர்கள் வருந்துவதுண்டு. இவ்வாறாகக் கம்பராமாயணம் காரைக்குடியில் கால் கொண்டது. கோவிந்தராஜருக்குப் பின் அங்குப் பலர் கம்பரைப் படித்துத் தேர்ச்சி பெற்றனர். அந்நகரில் உள்ளவர்க்குக் கம்பனிடத்தில் ஆழ்ந்த பற்றும், இலக்கிய ஆர்வமும் மேலோங்கி வளர்கின்றன.

விடுதலை வேட்கை வீறிட்டெழுந்த நேரத்தில் பாரதியார்,

''யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்
வள்ளுவன் போல் இளங்கோவைப் போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை
உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை.''

என்றும்,

''கல்வி சிறந்த தமிழ்நாடு-புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு''

என்றும் பாடித் தமிழ் மக்களை கண் விழிக்கச் செய்தார்.

## வ. வே. சு. ஐயர்

இந்த நூற்றாண்டில் கம்பராமாயண மறுமலர்ச்சி ஏற்பட்டதற்கு தேசபக்தர் வ.வே.சு.அய்யர் மற்றொரு வகையில் தொண்டாற்றியுள்ளார். இப்பெருமகனார் பல திறப்பட்ட ஆற்றல் வாய்ந்தவராக இருந்தார். அவர் பல மொழிகளில் புலமை பெற்றிருந்தார். சிறையிலிருந்த போதெல்லாம் உடன் இருந்தவர்களுக்குக் கம்பராமாயணம் பாடம் சொல்லிக் கொடுத்திருக்கிறார். வ.வே.சு அய்யர் ஆங்கிலத்தில் எழுதிய கம்பராமாயண ஆராய்ச்சி நூல் ஆங்கிலம் கற்றவரை ஓரளவுக்கு விழிக்கச் செய்தது. வால்மீகி, காளிதாசன், ஷேக்ஸ்பியர் மில்டன் ஹோமர், கதே போன்ற உலகப் பெரும்புலவர்களோடு ஒப்பு நோக்கிக் கம்பருடைய பேராற்றலை அவர் விளக்குகிறார். 'கம்பர் ஓர் உலக மகாகவி' என்று முதன்முதலில் உணர்ந்து வெளியிட்டவர் வ. வே. சு. அய்யரே ஆவார். இவரைச் செட்டிநாட்டு தேசபக்தர்கள் அரசியல், இலக்கியத் துறைகளில் தங்கள் குருவாகக் கருதினர்.

## 'கலா நிலையம்' ஆசிரியர் டி என். சேஷாசலம் (1891—1938)

பெரும் புலவரான இவர் கம்பராமாயண அறிவைப் பரப்ப சென்னையிலிருந்து 1928 - இல் கலா நிலையம் என்ற சஞ்சிகையை வெளியிட்டார். கானாடுகாத்தான் சா. ராம. சித. ஐம்புலிங்கம் செட்டியார், கொப்பனாபட்டி கலைமகள் கல்லூரி மெய்யப்ப செட்டியார், கொத்தமங்கலம் (நீலாவதி) இராம. சுப்பிரமணியம் ஆகியோர் இவ்விதழுக்கு அளவுடன் உதவினர். துணை ஆசிரியர் திரு. இராஜகோபாலாச்சாரியார்

என்பார் 1929 - இல் பர்மாவுக்குச் சென்று சில நூறு நகரத்தார்களைச் சந்தாதாராகச் சேர்த்துவந்து, பத்திரிகை இடையறாது நடைபெற வழி வகுத்தார்.

திரு. சேஷாசலனார் வாரம் ஒரு முறை கானாடுகாத்தானுக்குச்சென்று கம்பராமாயண வகுப்புகள் நடத்திவந்தார்.

கலாநிலையம் இதழுக்கு நிதி திரட்ட காரைக்குடியிலும் பொன்னமராவதியிலும் அண்ணாமலை நகரிலும் திரு. சேஷாசலனார் நாடகங்கள் சிலவற்றை திரு. ஜம்புலிங்கம் செட்டியார் துணையுடன் நடத்தினார்.

தமிழகம் அவரை நன்கு அறிந்து கொள்ளுமுன் அவர் அகன்று விட்டார்.

## அடித்தளம்

திரு. சா. கணேசன் சிறு வயதில் வ.வே.சு. ஐயர் மோகனூர் கோவிந்தராஜு ஆகியோருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பைப்பெற்றார். பாரதியாரின் பாடல்கள் கணேசனாரை உணர்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தின. பிற்காலத்தில் ரசிகமணி தொடர்பும் அவருக்கு ஏற்பட்டது. இருபதாம் நூற்றாண்டில் கம்பன் பெருமைகளைப் பறை சாற்றிய பெருமக்கள் அனைவரிடமும் தொடர்புகொள்ளும் அரிய வாய்ப்பினைப் பெற்றார். திரு. கணேசன். கம்பனுக்கு இவர் ஆற்றியுள்ள மாபெருந் தொண்டிற்கு இந்தப் பெரு மக்களின் தொடர்பு, அடித்தளமாக அமைந்தது என்று கூறலாம்.

கம்பனுடைய இராமாயணம் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையில் ஒரு பக்தி நூலாகவே பாராட்டப் பெற்று வந்திருக்கிறது. பெரும் புலவர்கள் சிலர் அவ்வக் காலங்களில் கம்பனின் இலக்கிய நயங்களைப் போற்றியுள்ளனர். ஆயினும், இருபதாம் நூற்றாண்டுப் பொது மக்களே கம்பன் காவியத்தை ஒரு பேரிலக்கியமாகக் கண்டு போற்றும் சூழ்நிலையைத் திரு. கணேசன் உருவாக்கி வெற்றி கண்டார்.

கம்பன் காவிய நயத்தில் இதயம் களித்தவர் பல்லோராயினும் அக்காவியத்தை உணர்ந்து போற்றுவதை ஒரு மக்கள் இயக்கமாக வளர்த்து அப்புலவர் பெருமகனுக்காகக் கழகங்கள் கண்ட பெருமை திரு. கணேசனீ ஒருவரையே சார்ந்தது.

கம்பன் கழகம்

1939 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் நான்காம் நாளில் திரு. கணேசன் தம் சொந்த ஊராகிய காரைக்குடியில் 'கம்பன் கழகம்' என்ற அமைப்பை முதன் முதலில் தோற்றுவித்தார். அது முதல் ஆண்டு தோறும் பங்குனித் திங்களில் அக்கழகத்தின் சார்பில் அங்குக் கம்பன் விழா நடைபெற்று வருகிறது,

கம்பனுடைய பிறப்பு வளர்ப்பு வரலாறு ஆகிய செய்தி அறிய நமக்குச் சான்றுகள் எவையும் கிடைத்தில; ஆயினும் கி.பி 886 பெப்ரவரி 23 ஆம் நாள் - விசுவாவசு பங்குனி 4 ஆம் நாள் புதன் கிழமை அத்த நட்சத்திர நாளில் கம்பன் தம்முடைய இராமாவதாரத்தை அரங்கேற்றியதாக திரு. கணேசன் தம் ஆய்வின் முடிவாக உறுதியிட்டுக் கூறுகின்றார்.

எனவே, ஒவ்வொரு பங்குனித் திங்களிலும் மகம், பூரம், உத்திரம் ஆகிய மூன்று நாளில் காரைக் குடியிலும், அத்ததில் நாட்டரசன் கோட்டையில் கம்பனுடைய பள்ளிபடை எனக் கருதப்படும் திருக்கோயிலிலும் கம்பன் திருநாள் கொண்டாடுவதை வழக்கப்படுத்திக் கொண்டார்.

இந்துக்களின் கோவில்களிற் போலவே, இலக்கிய விழாக்களில் மூல விக்கிரகங்களும் உண்டு. உற்சவ விக்கிரகங்களும் உண்டு. சென்னைத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் நடத்திய தமிழ் விழா உற்சவ விக்கிரகம் போன்றது: அது ஓராண்டு மதுரையில் நிகழும். பின்னர்த் திருவாரூர், கோவை, சென்னை, டில்லி போன்ற இடங்களில் நடைபெறும். இடையே கடல் கடந்தும் செல்லும். உலகத் தமிழ் மாநாடுகளும் இத்தகையவை. ஆனால் கம்பன் திருநாளைத் தொடக்கத்திலிருந்து காரைக்குடியிலேயே நடத்திவருகின்றனர், கம்பன் கழகத்தார். எனவே, இவ்விழாவை ஒரு மூல விக்கிரகத்துக்கு ஒப்பிடலாம்.

இத்திருவிழாவின் மற்றொரு சிறப்பு. விழாவை நடத்துபவர் அல்லது விழாவில் கலந்து கொள்ளும் பெருமக்கள் ஆகியோருடைய திட்டங்களுக்கும், நலனுக்கும் ஏற்றபடி விழா நிகழ்ச்சிகள் மாற்றப்படுவதில்லை. உலகமே இரண்டாகப் பிளந்தாலும் சரி, வானிடிந்து வீழினும் சரி, கம்பன் திருநாள் ஆண்டுதோறும் (கம்பன் இராமாயணத்தை அரங்கேற்றிய) பங்குனித் திங்களில்

அத்த நட்சத்திரத்தன்று முடிவடைவதற்குப் பொருந்தும் வகை யில் அமைக்கப்படுகிறது.

காரைக்குடி கம்பன் திருநாளுக்கு வரும் புலவர்கட்கும், அன்பர்கட்கும் செய்யப்படும் விருந்துபசாரம் நாடறிந்த செய்தி இத்திருநாளை அன்பர் சா. கணேசன் தமது பிறவிப் பெருங் கடமையாகச் செய்து வந்தார்.

## ஆராய்ச்சிப் பதிப்புக்கள்

1950 ஏப்ரலில், கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பு ஒன்றை வெளியிடவும் கம்பன் கழகம் முயன்றது. இது பற்றிய விவரங் களை, பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்களின் 'கம்பன் காவியம்' (தமிழ்ப் புத்தகாலய வெளியீடு) என்னும் நூலில் காண்க.

1952-இல் டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியார் அவர் கள் கம்பன் திருநாளைத் தொடங்கி வைத்தார்கள். அந்தத் தொடர்பின் விளைவாகத்தான், கம்பராமாயணத்துக்குப் புதிய பதிப்பு ஒன்றை வெளியிடும் முயற்சியை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் மேற்கொண்டது.

## கம்பன் சுவைஞர் கூட்டம்

கம்பராமாயணத்தைப் படிப்பதிலும் அதன் சுவையை நுகர்வதிலும் ஈடுபாடு நிறைந்த ஓர் இலக்கியக்கூட்டத்தைக் காரைக்குடி கம்பன் கழகம் முதலில் காரைக்குடிப்பகுதியிலும் பின்னர் தமிழ்நாடெங்கிலும் உருவாக்கியிருக்கிறது. தமிழகத் தின் தனிப்பெரும் இலக்கிய விழாவாக காரைக்குடி கம்பன் திருநாள் அமைந்துவிட்டது. ஏனைய இலக்கிய அமைப்புக் களுக்கு எல்லா வகையிலும் வழிகாட்டியாகத் திகழ்கிறது.

## தமிழ்நாடெங்கும் கம்பன் கழகங்கள்

திரு. கணேசன் ஏற்றிவைத்த விளக்கு தமிழ்நாட்டிலும் வெளியிலும் பல ஊர்களில் புதிய விளக்குகளை ஏற்றி வைப்ப தற்கு உதவியது. அவருடைய அக்கறையினாலும் ஆர்வத்தினா லும் ஈடுபாட்டினாலும் ஈர்க்கப்பட்ட ஆயிரக்கணக்கான தமிழர்கள் கம்பன் காப்பியத்தைப் படித்து அதில் மூழ்கி மகிழ்ச்சியில் திளைத்து, அதனை மற்றவர்களோடு பகிர்ந்து

கொள்வதற்காக ஊர்தோறும் கம்பன் கழகங்கள் தொடங்கினார்கள், கம்பன் விழாக்கள் நடத்தினார்கள். இப்படியாக, கம்பனுடைய பெருமையில் மூழ்கிய திரு. கணேசனின் விடா முயற்சி, கம்பன் இயக்கமாக மலர்ந்தது. தமிழகத்துக்கப்பாலும் இன்று பரந்து ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. கம்பன் புகழ் பாடுபவர்கள் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஆயினர். திரு. கணேசனை அக்குடும்பத்தின் தலைவராக ஏற்றுக் கொண்டிருந்தார்கள்.

திரு. கணேசனின் கம்பன் பணி, வேறொரு வகையிலும் பலன் அளித்தது. அவர் நடத்திய கம்பன் விழாவின் கருத்தரங்கம், கவியரங்கம், பட்டி மண்டபம் முதலிய பல்வேறு நிகழ்ச்சிகளில் பங்கு கொள்வதற்குப் பலர் தேவைப்பட்டனர். ஆரம்பக் காலத்தில் கம்பனை முறையாகப் படித்திருந்த பண்டிதர்கள் பள்ளி ஆசிரியர்கள் பலர் இருந்தனர். ஆயினும் கம்பனுடைய காப்பியத்தின் அருமையைப் பொது மக்களுக்கு விளக்கக் கூடியவர்கள் மிக மிகச் சிலரே இருந்தனர். ஆகையால் கம்பனைப் படித்து இந்தக் கோணத்தில் கம்பனைப் பற்றி எழுதவும் பேசவும் திறமையுள்ளவர்களை அழைத்து, கம்பன் விழா நிகழ்ச்சிகளில் அவர்களுக்கு இடமளித்தார். அவர்களுக்கு ஊக்கமூட்டி உற்சாகப்படுத்தினார். இந்த வகையில் கம்பனைப் படிக்கவும், அவன் படைப்பைப் பற்றி எழுதவும், பேசவும் தகுதியும் திறமையும் பெற்ற ஒரு படையினரே நாற்பத்தினான்கு ஆண்டுகளாகத் தொடர்ந்து நடந்து வந்த கம்பன் விழாக்களின் விளைவாகத் தோன்றினர். அவர்கள் வேறு பலரையும் தோற்றுவித்தார்கள்.

## அணுகு முறையில் மாறுதல்

கம்பனுடைய படைப்பை ஒரு சமயக் காப்பியமாக அணுகும் போக்கைக் கைவிட்டு, சமய உணர்வுக்கு அப்பாற்பட்ட பொதுநோக்கில் கண்டு இலக்கியமாகச் சுவைப்பதற்குத் திரு. கணேசன் வழி வகுத்தார். இதன் பயனாக எல்லாச் சமயத்தினரும் மத பேதமின்றி, கம்பனின் தமிழை அதன் அழகை, அருமையை உணர, அனுபவிக்க, ஆராய முடிந்தது. கம்பராமாயணம் படிப்பது மோட்சத்திற்குப் போவதற்கு நுழைவுச் சீட்டு வாங்குவதற்கு ஒப்பான நிலையாக இருந்த வழக்கத்துக்கு இதனால் முற்றுப் புள்ளிவைக்கப்பட்டது.

## பகுத்தறிவு இயக்கத்தாரின் எதிர்ப்பு

கம்பராமாயணம், கம்பன் விழா என்றாலே எரி, எதிர்ப்புக் காட்டு என்ற தந்தை பெரியார் ஈவேரா-ஆணைப் படி, ஒரு பெரும்படை தமிழக மெங்கும் தன் கைவரிசையைக் காட்டிற்று. 1943 - 1944 இல் சென்னையில் தமிழன்பர் சிலர் கோகலே மன்றத்தில் நடத்திய கம்பர் விழாவின்போது ஒலிபெருக்கிகள் உடைந்தன. வானொலி நிலையத்தின் ஒலிப் பதிவுக் கருவி தூள் தூளாயிற்று. பண்டிதமணி, தம் தலைமை உரையை நிகழ்த்த விடாமல் தடுக்கப்பட்டார். மற்போர்க்கு அவரை இழுத்த (பிற்காலத்தில் தி. மு. க. அமைச்சராக இருந்த திராவிடர் கழகத்து) என். வி. நடராசனிடம், "நான் சொற்போருக்கு வந்தவன், மற் போருக்கு வந்தவனில்லை. என் உடல் அமைப்பு அதற்கு ஏற்றதன்று" என்று சொல்லித் தப்பிப் பிழைக்க நேர்ந்தது. இன்றைய நிலை அதனின்றும் அடியோடு மாறிவிட்டது. கம்பராமாயணத்தின் சில பகுதிகள் யுனெஸ்கோ நிறுவனத்தாராலும் பலமொழிகளில் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளது பகுத்தறிவாளரும் கம்பன் விழாக் களில் பங்கு கொள்கின்றனர்.

## கம்யூனிஸ்டுகள்

இலக்கிய விழாக்கள், உண்டு கொழுத்து வாழும் வர்க்கத்தின் (பூர்ஷீவாக்களின்) பொழுதுபோக்கு என்பது கம்யூனிச சித்தாந்தம். அக்கட்சியினரான திரு. ப. ஜீவானந்தம் போன்றோரையும் கம்பன் விழாக்களில் பங்கு பெறச் செய்தார் கம்பனடிப்பொடி.

## ஒப்பியல் ஆய்வு

ஆங்கில மொழியில் பெரும் கவிஞர்கள், இலக்கிய மேதைகள் ஆகியோர்க்கும் கம்பனுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைத் திரு. கணேசன் ஊன்றிப்படித்தார். அவற்றை முழுமையாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற வேட்கை அவருக்கு ஏற்பட்டது. அதனால் பேராசிரியர் அ. சீனிவாச ராகவன், நீதிபதி டாக்டர் எஸ். மகராஜன், டாக்டர் எஸ் இராமகிருஷ்ணன் போன்ற ஆங்கில மொழி மேதைகளைக் கம்பன் மேடையில் பங்கு பெறச்செய்தார். அவர்கள் கம்பனை ஆங்கில மொழியில் காவியம் படைத்தவர்களுடன் ஒப்பிட்டுக் காட்டினர்.

கம்பன் விழா நிகழ்ச்சிகளை வானொலியிலும் பின்னர் தொலைக்காட்சிகளிலும் ஒலி, ஒளி பரப்பவும் ஏற்பாடு செய்தார். இந்த வாய்ப்புக்கள் நெடுந்தொலைவிலுள்ள தமிழர் களை ஊக்குவித்தன.

## மர்ரே ராஜம்

தமிழ் இலக்கியத்தில் உண்மையான ஈடுபாடு கொண்டு ஆரவாரமில்லாமல் பணி செய்து வரும் மர்ரே கம்பெனி திரு. ராஜம் கம்பராமாயணத்தை மலிவுப் பதிப்பாக வெளியிட விரும்பினார். பாடல்களை நிர்ணயம் செய்வது, அச்சிடும் முறையை வகுப்பது போன்ற பொறுப்புக்களை ஏற்று பதிப்பாசிரியர் குழுவில் தலைசிறந்த பணியாற்றியவர் கம்பன் அடிப்பொடியே ஆவார். இப்பதிப்பு 1957 - இல் வெளிவந்தது.

பைபிள் போலே, கம்பன் காவியம் முழுவதையும் ஒரே நூலாகக் கையடக்கப் பதிப்பாக மெல்லிய காகிதத்தில் சூப்பர் டீலக்ஸ் பதிப்பாக வெளிவரவும் இவர் அரும்பாடு பட்டார்.

## நிகழ்ச்சிகளின் சிறப்புக் கூறுகள்

பொன்னாடை போர்த்தல், பட்டி மண்டபம், பேல் முறையீட்டுப் பட்டி மண்டபம், நற்றமிழ் முற்றம், இவர்கள் சந்தித்தால் போன்ற புதிய பாணிகளை தமிழ் இலக்கிய விழாக் களில் புகுத்தியவர் திரு. கணேசன் தான்.

## இசை, நாடக, நாட்டிய நிகழ்ச்சிகள்

கம்பன் கவிதையை அலசியவர் திரு. கணேசன். கலி விருத்தம் என்ற ஒரே வகைப்பாடலில் 40 விதமான சந்த அமைப்பைக் கவிச்சக்ரவர்த்தி கம்பன் பயன்படுத்தியுள்ளதைக் கண்டு கூறியவர் அவர்தாம்.

எத்துணை வகை இசை வேறுபாடுகள் கம்பன் கவிதையில் உள்ளன என்பதை ஆராய்ந்து பட்டியல் போட்டவரும் அவர் ஒருவரே ஆவார்.

கம்பன் பாடல்களை பட்டுமே பயன் படுத்தி, முழுநேர நாட்டியக் கச்சேரி ஏற்பாடு செய்து அரங்கேற்றியவர் அவரே!

மணி மண்டபம்

கம்பனுக்கு மணிமண்டபம் அமைக்கும் பெருமுயற்சியில் திரு. கணேசன், தம் மணிவிழாவிற்குப் பின்னர் முனைந்தார். செட்டிநாட்டில் தொடங்கி, தமிழ் நாடெங்குமுள்ள அன்பர்களின் பேராதரவுடனும் குறிப்பாக, கோவை தொழிலதிபரும் திரு. கணேசனின் உழுவலன்புமான திரு.ஜி.கே சுந்தரம் மற்றும் அவர் தம் நண்பர்களுடைய இடைவிடாத ஆதரவாலும் பெரும் பகுதி முடிந்த நிலையில் உள்ளது.

திரு.கணேசன் காலத்திற்குப் பிறகு, கம்பன் அறக் கட்டளைத் தலைமையைத் திரு ஜி.கே.சுந்தரம் ஏற்றுள்ளார்.

சுதந்திரப் போராட்ட இயக்கங்களில் பெரும் பங்கு கொண்டு, சிறையில் இருந்தபோதிலும் தலைமறைவாக இருந்த போதும் கம்பன் விழா தொடர்ந்து நடைபெற நம்பிக்கையானவர்களைக்கொண்டு தக்க முன்னேற்பாடு செய்திருந்தார்.

தொடங்கிய நாள்தொட்டு கம்பன் திருநாள் செலவின் பெரும் பகுதியைத் தாமே ஏற்றார். விலைவாசி ஏற ஏற இது இயலாமற்போகவே, விளம்பரங்கள் பெற மலர்வெளியிட்டார் அதிலும் தரமான ஆய்வுக்கட்டுரைகள் இடம் பெறச் செய்தார்.

கம்பனை, கடவுளுக்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றிப் புகழ்ந்துவந்த திரு கணேசன், தம் பெயரையே 'கம்பன் அடிப்பொடி' என்று மாற்றிக்கொண்டார்.

கம்பன் கழகம், நாட்டரசன்கோட்டை

1981-இல் ஏற்பட்ட இக்கழகம் திரு.இராம ஆவிச்சிசெட்டியாரைத் தலைவராகக்கொண்டு இயங்கிவருகிறது. ஆடித் திங்கள் இறுதி வெள்ளிக்கிழமையன்று கம்பன் அருட்கோயிலில் வழிபாடு நடக்கிறது. மேதிங்கள் இறுதி சனி ஞாயிறுகளில் கம்பன்விழா கொண்டாடுகிறது.

வைகாசித் திங்களில் கண்ணுடைய நாயகி விழாவின் போது இலக்கிய நிகழ்ச்சிகளை ஏற்பாடுசெய்கிறது.

புதன்கிழமை தோறும் கருத்தரங்கம், கவியரங்கம் அல்லது பட்டிமண்டபம் நடத்தப்படுகிறது.

கம்பனைப் பற்றிய நூல்கள்

இவ்வகை நூல்கள், ஆய்வுக்கட்டுரைகள்செட்டிநாட்டில் வெளிவந்தவண்ணமாக உள்ளன. முழுப்பட்டியலையும் தர இயலாது. இயன்றவரை தொட்டுக்காட்டுவோம்.

பாலகாண்டம் (மூலமும் உரையும்) திரு. மோ. வே. கோவிந்தராஜ ஐயங்கார், கம்பநாடார் இதழில் 22 பாடல்களுக்கு எழுதிய பதவுரையும் குறிப்புரையும்,

இராம காதை-பாலகாண்டம் கதைச்சுருக்கம், படல அட்டவணை, ஒவ்வொருபாடலுக்கும் தலைப்பு சிலஇடங்களில் புத்துரையுடன் திரு. சொ. முருகப்பா இயற்றியது. பக்கங்கள் 48ம் 386ம் 1953-ஆம் ஆண்டில் வெளிவந்தது.

கம்பர் கதை—(புலவர் நாக சண்முகம் 1966 எழுபத்தாறு பக்கங்கள்.)

ஸ்ரீராம தூதன் (கம்பன் கலை நாடகம்) கார்காலம் படலம் —திருவடி தொழுதபடலம் சுவாமி சுத்தானந்தபாரதியார் எழுதி 1942-இல் அன்பு நிலையம் வெளியிட்டது.

அறந்தரு சிந்தையோன் சிவகங்கை அன்னை நிலையத்து வெளியீடு 1964-ஆசிரியர் —பேராசிரியர் லெ. இராமநாதன்

(1) பரதன் (நாடகம்) (2)நாரணன் விளையாட்டு (3) மன்னர் மன்னன்(நாடகம்) கருமுத்து தி.மாணிக்கவாசகம்

கம்பனும் சிவனும் (ஆய்வுநூல்) தமிழ்க்கடல் ராயசொ (அழகப்பர் கல்லூரி வெளியீடு)1960

கம்பன் கண்ட அறநெறி—கவிஞர் அரு. சோமசுந்தரம் இயற்றிய கவிதைகள்.

கம்பராமாயணத்தில் நகைச்சுவை—ராயசொ.

கம்பன் கவிநலம் —சென்னையில் கொந்தளிப்புக்கிடையே 16-4-1944ல் நிகழ்ந்த கம்பர் மாநாட்டிற்குப் பண்டிதமணி எழுதிய தலைமை உரை.

நான்கு கவிமணிகள்—வி. ஆர். எம். செட்டியார் ஷேக்ஸ்பியரையும் கம்பரையும் ஒப்பிட்டது.

கம்பன் கவிதை (தொகுப்பு) நவயுகப் பிரசுராலயம் 1946

கம்பர் காவியம்—சொ. முருகப்பா 1953

கவியரங்கங்களில் முடியரசன்

கம்பன் (குழந்தைப் பாடல்கள்) நாக.முத்தையா

கம்பன் என் பகைவன்—நாக முத்தையா

கம்பர் —டாக்டர் வ. சுப. மாணிக்கம் நிகழ்த்திய அறக்கட்டளைச் சொற்பொழிவு.

கம்பன் வேண்டாமா? சொல்லமுதம்: குன்றக்குடி அடிகளார் 1966

கவியரங்கில் கம்பன்— அரு. நாகப்பன்.

இராமாயணத் தும்பைப் போர் -தே சொக்கலிங்கம் (இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற எட்டாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை, தொகுதி—1)

அவளோ இவள்— தமிழ்ச்சுவை (வலம்புரி அண்ணாமலை 1961)

பி. ஸ்ரீ.

கம்பராமாயணத்திற்கு இவர் ஆற்றியுள்ள தொண்டு பெரியது 95-ஆம் வயதில் இவர் வறுமையில் வாடினார். அதை அவர் இந்நூலாசிரியர்க்கு (சோமலெ) எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

கடிதத்தை நான் ஆனந்த விகடனுக்கு அனுப்பினேன். 18 6-1978 இதழில் பிரசுரமாயிற்று.

ஆனந்த விகடன் ஆசிரியர் திரு. பாலு, மாதந்தோறும் ஒரு தொகையை அனுப்ப ஏற்பாடு செய்தார்.

செய்தியைப் படித்த அன்பர்கள் நெஞ்சம் நெகிழ்ந்து காசோலையும் பணவோலையும் அனுப்பினர்.

நெல்லை மாவட்டக் கம்பன் கழகம் மாதந்தோறும் உதவித்தொகை வழங்கவும் மருத்துவச் செலவை ஏற்கவும் முன்வந்தது. 'கம்பராமாயண மேதை' என்ற பட்டத்தையும் அவருக்கு அளித்தது.

அவ்வமயம் பி. ஸ்ரீ அவர்கள் எழுதிய கடிதம் வருமாறு.

உ

ஸ்ரீராமஜயம்

பி. ஸ்ரீ. ''அன்பின் அல்லது ஓர் ஆக்கம் உண்டுமோ'' விட்டலபுரம், 29—8—78

அருமை நண்பர் சோமலெ அவர்களுக்கு

நமஸ்காரம். தாங்கள் காலத்தால் செய்த உதவி, பாயும் படுக்கையுமாக இருந்த என்னை, நிமிர்ந்து உட்காரச்செய்து நாளடைவில் புத்துயிரையும் புதியவசதிகளையும் நம்பிக்கைகளையும் அளித்திருக்கிறது. அதற்கும் மேலாக கம்பனுடைய அன்புபற்றிய ஒரு மகாவாக்கியத்திற்கு ஆழ்ந்த பொருளையும் அறிவித்துள்ளது. அந்த மகாவாக்கியம் வருமாறு

'அன்பெனபது ஒன்றின் தன்மை
அமரரும் அறிந்ததென்றால்''

மற்றொரு சந்தர்ப்பத்தில்

அன்பின் அல்லது ஓர்
ஆக்கம் உண்டாகுமோ?

என்றும்

அன்பிற் சிறந்தாயதோர்
பூசனை யார்க்கண் உண்டே?

என்றும் நம் கவிச்சக்ரவர்த்தி நாம் என்றும் மறந்துவிடாதபடி நம் மனதிதைவிட்டு அகலாதபடி வற்புறுத்தியுள்ளான். தங்களை என் மனக் கண்ணால் கண்டு முகமாய்ப் பேசுவது போல் எழுதப் பெற்றது இத்திருமுகம்.

அன்பன்
பி .ஸ்ரீ

# 15. பிற நிறுவனங்கள்

புகழ்மிக்க சன்மார்க்க சபையும் கம்பன் கழகமும் தவிர, செட்டிநாட்டில் தமிழ்ப்பணி புரிந்துவரும் ஏராளமான நிறுவனங்கள் உள்ளன. இவற்றுள் ஒரு சிலவற்றைப்பற்றி இங்கே கூறுவோம். இவற்றைப் பள்ளிக்கூடங்கள், மன்றங்கள் என்ற இரு பிரிவாகப் பிரிக்கலாம்.

## பள்ளிகளும், மன்றங்களும்

பள்ளிக்கூடங்களுள் குறிப்பிடத்தக்கவை கொப்பனாபட்டி கலைமகள் கல்லூரி, அமராவதிபுதூர் குருகுலம், அமராவதிபுதூர் மகளிர் இல்லம், ஆவனிப்பட்டி விவேகானந்தர் கல்விக்கழகம், இலக்குமிபுரம் சொக்கலிங்க வித்தியாசாலை, நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு வித்தியாசாலை, வலையபட்டி சித்திவிநாயகர் செந்தமிழ்க் கலாசாலை, வலம்புரி அலர்மேலு பெண் கல்லூரி, வலையபட்டி நாமகள் கல்லூரி ஆகியவை.

மன்றங்களுள் குறிப்பிடத்தக்கவை காரைக்குடி கம்பன் கழகம், காரைக்குடி திருக்குறள் கழகம், காரைக்குடி இந்து மதாபிமான சங்கம், காரைக்குடி சிவநேசர் திருக்கூட்டம் ஆகியவை. இவைதவிர சிற்றூர் தவறாது, ஒரு மன்றம் இருந்து வருகிறது.

## கலைமகள் கல்லூரி

கொப்பனாபட்டி கலைமகள் கல்லூரி 5. 9. 1935 இல் (காலஞ் சென்ற) அ. மெ. மெய்யப்பச்செட்டியார் அவர்களால் தம் பொருளுடன் நகரத்தார்களின் பெரும் பொருளுதவியும் பெற்று நிறுவப்பெற்றது. இப்பள்ளியின் தலைவராக, மெ.அவர்களின் மகன் அ. மெ. தியாகராசன் அவர்கள் இருந்து நடத்தி வருகிறார்கள்.

கலைமணி, கலைச்செல்வி என்ற பட்டங்கள் இக்கல்லூரியில் வழங்கப்படுகின்றன. எட்டாம் வகுப்பில் இலக்கண இலக்கியப்பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன கலைச்செல்வி வகுப்பில் தமிழ் இலக்கண இலக்கியப்பாடங்களுடன் தமிழ்ப்பா இயற்றும்

முறையையும் கற்பித்து வருகிறார்கள். பண்முறைப்படி தேவார திருவாசகங்கள் வாய்ப்பாட்டாகக்கற்பிக்கப்படுகின்றன. கலைச் செல்வி வகுப்பில் வெற்றி பெற்றவர்கள் புலவர் வகுப்பில் சேர்ந்து பயிலத் தகுதி உடையவரென அண்ணாமலைப் பல் கலைக்கழகத்தார் அறிவித்துள்ளனர்.

இங்கு பயிலும் மாணவிகள் கவிபாடும் திறம் பெற்றிருப் பதைக்கண்டு டாக்டர் உ. வே. சா. ஐயரவர்கள், விபுலானந்த அடிகள், திரு. வி. க. ஆகியோர் உவகையும் வியப்பும் அடைந் துள்ளனர்.

தொடக்கத்தில் தலைமைத் தமிழாசிரியராக இருந்து வந்த ரெ. இராமமூர்த்தி ஐயரவர்கள் நிறைந்த தமிழ்ப்புலமை உடையவர்கள்.

இக்கல்லூரி நிறுவிய மெய்யப்பச் செட்டியார் அவர்கள் பண்டிதமணி கதிரேசனாரின் நூல்ஒன்றை வெளியிட்டுள்ளனர். மெய்யப்பரின் வேண்டுகோளுக்கிணங்கவே விவேகானந்த சுவாமிகள் அருளிய சிகாகோ பிரசங்கங்கள், கர்மயோகம், ராஜயோகம் என்னும் நூல்களை விபுலானந்த அடிகள் தமிழில் மொழி பெயர்க்கச் செய்து பிறகு மெ. அவர்களுடைய பொருளுதவியால் வெளிவந்தன.

இப்பள்ளியில் கலைமகள் கோயிலும், சலவைக்கல்லால் ஆன கலைமகள் உருவமும் காணத்தக்கவை. அரிய நூல்கள் ஆயிரக்கணக்கில் உள்ள வேள் பாரிநூல் நிலையம் இருப்பதும் இப்பள்ளியின் சிறப்பு.

விவேகானந்தர் கல்விக்கழகம்

ஆவினிப்பட்டி விவேகானந்தர் கல்விக்கழகம் 1927 இல், அ. பழனியப்பச்செட்டியார் அவர்களால் தொடங்கப்பெற்றது. தக்க புலவர்கள் இருந்து 100 மாணவ மாணவியர்க்கு இங்கு முத்தமிழ்ச் சுவையை ஊட்டி வருகின்றனர்.

சுத்தானந்த பாரதியார் அவர்களுடைய நூல்கள் சில வற்றை இப்பள்ளியினர் வெளியிட்டுள்ளனர்.

திரு. பழநியப்பச் செட்டியார் அவர்களுக்கு உதவியாக அவர்களுடைய மகனார் (மதுரைத் தியாகராசர் கல்லூரி வணிகத்துறை விரிவுரையாளர்) பழ. விவேகானந்தன், பி.காம்

(ஆனர்சு) அவர்களும், சிறந்த சொற்பொழிவாளரான ஆவினிப் பட்டி திருவாளர் முரு. சேதுராமன் அவர்களும் பள்ளியின் மேற்பார்வையில் ஆர்வம் காட்டி வந்திருக்கின்றனர்.

## அமராவதிபுதூர் குருகுலம்

புரவலர் என்ற பகுதியில் இக்குருகுலத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளோம். தமிழில் பெரும் புலமை பெற்றவர்கள் இங்கு பணிபுரிந்திருக்கின்றனர். இந்தச் சூழலில் உருவானவரே கவிஞர் கண்ணதாசன்.

## மகளிர் இல்லம்

திரு. சொ. முருகப்பா, தம் வாழ்நாள் வரை நடத்தி வந்த மகளிர் இல்லம் சின்னஞ்சிறு வயதிலேயே அங்கு பயின்ற அனைவர்க்கும் தமிழ் உணர்ச்சியும் முறையான பயிற்சியும் ஊட்டி வந்தது. முருகப்பா இருக்கும் எந்த இடமும் ஒரு தமிழ்ச் சங்கமாகவே காட்சி தந்தது.

## பிற பள்ளிகள்

இக்கட்டுரையின் தொடக்கத்தில் குறிப்பிட்டுள்ள ஒவ்வொரு பள்ளியும் இவ்வாறே தேர்ந்தெடுத்த புலவர்களைக் கொண்டு இயங்கின. நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு வித்தியாசாலை, சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் கருத்துப்படி செயற்பட்டது.

## சங்கங்கள்

இன்று செட்டிநாட்டில் பட்டிதொட்டிதொறும் மன்றங்கள் உள்ளன. இவற்றுள் சன்மார்க்கசபைக்கு அடுத்தபடியாக அமைந்தது இந்துமதாபிமான சங்கம்.

## இந்து மதாபிமான சங்கம், காரைக்குடி

செட்டி நாட்டில் அரசியல் எழுச்சிக்குத் தாயகமாக இருந்தது இந்து மதாபிமான சங்கம். 1930-ஆம் ஆண்டுக்கு முன்னர், 'சங்கம்' என்ற சொல் செட்டிநாட்டில் இச் சங்கத்தையே குறித்தது எனலாம். சங்கத்தின் தந்தை சொ. முருகப்பா அவர்கள் ஆவார். அவர் சங்கத்தைத் தொடங்கிய நாள் 10-9-1917.

'கம்ப நாடார்' ஆசிரியரும், கம்பராமாயணப் பிரசாரக ரும் ஆகிய மோ. வே. கோவிந்தராச ஐயங்கார் அவர்கள் தலைமையில் சங்கம் வாரந்தோறும் திருக்குறள் வகுப்பு நடத்தி வந்தது.சுப்பிரமணிய சிவா பல ஆண்டுகள் காரைக்குடியிலேயே முனீசுவரன் கோவில் வீதியில் வாழ்ந்தார். பாரத ஆசிரமத்தை அந்நகரில் நடத்தி வந்தார். அவரைத் தவிர, திரு வி.க வ.உ. சிதம்பரம் பிள்ளை, வ. வே சு. ஐயர், சுப்பிரமணிய பாரதியார் போன்ற தேசியத் தொடர்புடைய தமிழறிஞர்களும், இடை யிடையே ஞானியார் அடிகள், விபுலானந்த அடிகள், வீர சுப்பைய சுவாமிகள், ந. மு. வேங்கடசாமி நாட்டார் போன்ற தமிழறிஞர் சிலரும், சங்கத்திற்கு வந்து தலைமை தாங்கியும் சொற்பொழிவாற்றியும் உள்ளர். இச்சங்கத்தில் சிறந்த நூல் நிலையம் ஒன்று இருந்து வருகிறது. சங்கத்தின் பொன்விழாவின் போது, 1967-இல் ஒரு மலர் வெளியிடப்பெற்றது.

### திருக்குறள் கழகம் காரைக்குடி

திருக்குறள் விழாக்கள் நடத்தியும், திருக்குறள் ஒப்பிப்ப தில் போட்டிகள் ஏற்பாடு செய்தும், காரைக்குடி திருக்குறள் கழகம் 1953முதல் இப்பகுதி இளைஞரிடையே ஓர் உணர்ச்சியை ஊட்டி வருகிறது. பொறியாளர் மு.தேனப்பன், பி.ஈ.( கெமிகல்) டாக்டர் தமிழண்ணல் இருவரும் செயலராக இருந்து இக்கழகத் தைத் தொடங்கினர்.

இக்கழகத்தினர் ஆண்டுதோறும் தொடக்கப்பள்ளி, நடு நிலைப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி, கல்லூரி இவற்றுக்குத் தனித் தனியே திருக்குறள் ஒப்புவித்தல், கவிதை, நாடகம் ஆகிய போட்டிகளை நடத்தி விழாவில் பரிசு வழங்கி வந்துள்ளனர். திருக்குறள் தொடர்புடைய ஓவியக் காட்சியையும் ஏற்பாடு செய்து வருகின்றனர். திருக்குறளை குவலயம் எங்கும் பரப்பும் சான்றோர்களைப் பாராட்டுகின்றனர்.

இக்கழகத்தின் வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்டவர் கள், சமதர்மம் இராம சுப்பையா அவர்கள் மற்றும் திருவாளர் கள் ரெங்க. லெட்சுமணன், குறள் லேனா, அரு. இலக்குமணன் பழ. கருப்பையா ஆகியோர்.

### இளங்கோ இலக்கியப் பேரவை

கவிஞர் அரு. நாகப்பனின் முயற்சியில் இயங்கி வருகிறது.

பாரதி தமிழ்ப் பேரவை

கம்பன் கழகத்தின் எதிரொலியாகப் பிற புலவர் பெரு மக்கள் பெயரால் தோன்றிப் பணி செய்து வரும் பல அமைப்புக்களுள் இதுவும் ஒன்று.

திருப்பத்தூர் இலக்கிய உலகு

1978- இல் தோன்றியது. ஒவ்வோர் ஆங்கில மாதத்து முதல் ஞாயிற்றுக்கிழமை காலை 10 .15க்கு மாதக் கூட்டமும் ஆகஸ்ட் மாதத்து முதல் ஞாயிறன்று ஆண்டுவிழாவும் நடைபெறு கின்றன. ஐம்பது உறுப்பினர் உள்ளனர்.

சிறந்த முறையில் இயங்கும் இந்த அமைப்புக்கு அச்சாணி களாக இருப்பவர்கள் திருவாளர்கள் த. சுவாமிநாதன், கு. மணி, க. பொன்னம்பலம். வீ. இரத்தினம்.

சிவகங்கைச் செந்தமிழ்க் கழகம்

''தமிழில் பழமறையைப் பாடுவோம் - என்றும்
தலைமைப் பெருமை புகழ் கூடுவோம்''

எனப் பேசுவான் மகாகவி பாரதி. இந்த வாக்கையே தங்கள் நோக்காகக் கொண்டு 1974 - இல் சிவகங்கையில் தமிழன்பர் சிலர் கூடிச் செந்தமிழ்க் கழகம் கண்டனர். தமிழ் நலம் பேணல், தமிழ்ப் பண்பாடு போற்றல் ஆகிய இரண்டையும் கழகத்தின் கண்களாகக் கொண்டனர். தனித் தமிழ்க் காப்பை கழகத்தின் உயிர் மூச்சாய் ஏற்றனர். தமிழ் மொழிக்குப் பெரும் புகழ் ஈட்டிய சான்றோர் பலரின் நினைவு விழாக்களைச் சிறப்பாகக் கொண்டாடி மகிழும் கழகம், வெள்ளிக் கிழமை களில் திருக்குறள் விரிவுரையை முறையாக நடத்தி வருகிறது. விரிவுரையைக் கழகத் தலைவர் வீ. முத்துச்சாமி ஆற்றி வருகிறார். திரு. சொ. பகீரதன், பேராசிரியர் இராமநாதன் வழக்கறிஞர் சுப. தமிழ் மகன் ஆகியோர் இந்தக் கழகத்தை வளர்த்து வருகின்றனர்.

கவிமணி மன்றம்

ஆவினிப்பட்டியில் இருபத்தைந்து ஆண்டுகளாக இந்த மன்றம் இயங்கி வருகிறது. கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களின் புகழைப் பரப்பிவருகிறது.

வள்ளுவர் மன்றம், மேலைச்சிவபுரி

புலவர் நாக. சண்முகத்தைத் தலைவராகக் கொண்டு 1957-இல் தொடங்கப் பெற்றது. 1974-இல் சொந்தக் கட்டிடம் கட்டப்பெற்றது. 1982-இல் வெள்ளிவிழா பெரிய தொரு இலக்கிய விழாவாக நடைபெற்றது.

திருவாளர் திரு. சுப்பையா முதலிய பலஅன்பர்களின் இடைவிடா முயற்சியால் இலக்கிய விழாக்கள் அடிக்கடி கொண்டாடப் பெறுகின்றன, தனித்தமிழ் ஆர்வம் போற்றப் பெறுகிறது.

தமிழ் மன்றம்

1956-இல் தொடங்கப்பெற்று, கீழச்சிவற்பட்டி, பி அழகாபுரி, விராமதி இளைஞர் 125 பேரின் ஆர்வத்துடனும் கவிஞர் கண்ணதாசனின் ஆதரவுடனும் செயற்பட்டு வளர்ச்சி பெற்றுள்ளது. தைத்திங்கள் 4, 5, 6 - ஆம் நாட்களில் தமிழர் திருநாள் முத்தமிழ் விழாவாகக் கொண்டாடப் பெறுகிறது.

நகர இளைஞர் குழு (1977)

பி. அழகாபுரியிலும் கீழச்சிவற் பட்டியிலும் நடைபெறும் திருமணங்களிலும் திருவிழாக்களிலும் இலக்கிய மணம் பரப்பி வருகிறது.

சிறப்புமிக்க சில அமைப்புக்கள்

இந்தியப் பல்தமிழ்க் கழகம், 1964-இல் தொடங்கி 1967 வரை சிறப்பாகச் செயலாற்றியது. இப்போது இதன் பணிகளுள் ஒரு சிலவற்றை இராமசாமி தமிழ்க் கல்லூரியும் வேறு சிலவற்றையும் காரைக்குடி தமிழ்ச் சங்கமும் செய்து வருகின்றன. விடுபட்ட பணிகளும் உள்ளன. எனவேவரலாற்றுக் கண்ணோட்டத்துடனும் இனிப் பணி செய்ய விழைவார்க்குப் பயன்படட்டும் என்ற கருத்திலும் இந்தியப் பல் தமிழ்க் கழகத்தின் குறிக்கோள்களை இங்கு அச்சிட்டுள்ளோம்.

கழகத்தின் குறிக்கோள்

இந்தியப் பல் தமிழ்க்கழகத்தின் குறிக்கோளாவது எல்லா வகையானும் எல்லாத்துறையானும் தமிழ்மொழியைப் பதினைந்து ஆண்டுக் காலத்தில் தன்னிறைவாக்க வேண்டும்;

அதன் தூய தனியியல்பும் மரபும் அடிப்படையிற் குன்றாவாறு போற்றியே எவ்வகை வளர்ச்சியும் செய்பவேண்டும்; உலக வரங்கில் ஒரு பெருமொழிக்கு என்னென்ன செல்வாக்குகள் ஆற்றல்கள் உண்டோ அவ்வனைத்தும் தமிழ் பெறச்செய்ய வேண்டும்; நல்ல பொருளாதார வளங்களும் பெருவேலை வாய்ப்புகளும் அறிவாற்றல்களும் தமிழால் எய்தலாம் எனவும் எய்துதற்குத் தமிழ் போதும் எனவும் எண்ணுகின்ற நல்னம்பிக்கையை மக்களுக்குஉண்டாக்கல் வேண்டும்; உண்டாக்குதற்கு உரியனவும் செய்தல்வேண்டும். சில சொல்லாற் கூறின், கழகத்தின் குறிக்கோளாவது அறிவும் ஆற்றலும் சான்ற அனைத்துலக வழக்கு மொழிகளுள் ஒன்றாகத் தமிழ்மொழியைத் தமிழர் தாமும் பிறரும் எண்ணி மதிக்குமாறு அதனைத் தன்னிறை வாக்கல் என்பதாகும்,

ஐந்து மூன்றாண்டு திட்டங்கள் கோலி, பதினைந்து ஆண்டுகளில் தன் அருங்குறிக்கோளைக் கழகம் நிறைவேற்றப் பாடுபடும். அறிவு வேகம் காற்றினும் கடிதாக இயலிப் பரவும் இற்றைவுலகில் இருபதாண்டு முப்பதாண்டு எனக் கைகடந்த நெடுந்திட்டம் கருதுவதே ஒரு பிற்போக்கன்றோ? அத்திட்டம் எங்கு உய்க்குமோ? அதற்குள் உலகம் எவ்வளவு முற்போக்காய் விடுமோ? ஆதலின் திட்டஆண்டுகள் சுருக்கமாகவும் செயல் வினைகள் பெருக்கமாகவும் இருக்கவேண்டும் என்று கழகம் தெளிந்தது. தமிழின் இயல்பான பேராற்றலையும் இடையறாப் பெருந்திறலையும் உணர்ந்து இவற்றை அறிவியல் தந்துள்ள நுண்ணியபெருங்கருவிகளையும் வாய்ப்பான சூழ்நிலைகளையும் பயன் படுத்திக் கொள்வோமாயின், வள்ளுவர் கூறியாங்கு, 'அரிய என்று ஆகாத இல்லை' என்பது கழகத் துணிபு.

சாதி சமயம் கட்சி என்றின்ன பிரிவுகளை மனத்தாலும் எண்ணாது எண்ணவும் இடங்கொடாது செயலாற்றும் பண்புடையது கழகம் என்பதை ஒருதலையாக நினையுங்கள் கழகத்தின் தாழத் தளராத் தனி முயற்சியாலும், தமிழ்மக்களின் ஒருமுகஒத்துழைப்பாலும். சான்றோர்களின் இகலற்ற நல்வாழ்த்தாலும் தமிழ்த்தாயின் இயற்கையன்பாலும் வேண்டுவோர்க்கு வேண்டுவதே ஈயும் இறைவன் இன்னருளாலும் தமிழ்வளர்ச்சிக் குறிக்கோள் வரும் தடையனைத்தும் கடந்து குறித்த காலத்தில் குறைவற நிறைவெய்தும் என்பது கழகத்தின் உறுதி.

## முதன் மூன்றாண்டுத் திட்டம்

### 1. தேர்வுகளும் பட்டங்களும்

கழகம் செய்யக் கருதியிருக்கும் கூறுகளையெல்லாம் இப்போதே விளம்புதல் இனியதன்று. முதல்மூன்றாண்டு அகவையில் ஆற்ற வகுத்துள்ள சில திட்டங்களை மட்டுமே இங்குக் குறிப்போம்.

இளமணி, பெருமணி, முதுமணி என்ற மூன்று தேர்வுப் பட்டங்களைக் கழகம் அமைத்துள்ளது. இவற்றுக்கு முறையான பாடத் திட்டங்களையும் வகுத்துள்ளது. பொருத்தமான வினாத்தாட்கள் தந்து கழகம் தேர்வுகளைச் செம்மையாகவும் பொறுப்பாகவும் ஆண்டுதோறும் நடத்தும். தாமேபடித்தோ தக்காரிடம் பாடங்கேட்டோ யாரும் இத் தேர்வுகளை எழுத லாம். எழுத முன்வருவார்க்கு வயது வரம்பு முதலான விதிகள் இல என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகின்றோம்.

அரசினரின் பல்வேறு அலுவலகங்களிலும் நகராண்மைக் கழகங்களிலும் பஞ்சாயத்துக்களிலும் தனியார் அலுவலகங் களிலும் பெருந் தொழில் நிலையங்களிலும் அச்சகங்களிலும் பதிப்பகங்களிலும் செய்தித்தாளகங்களிலும் வேலை பார்ப்பா ரெல்லாம் இத்தேர்வுகள் எழுதலாம். பள்ளிகளிலும் கல்லூரி களிலும் உள்ள பல்துறை ஆசிரியர்கள் எழுதலாம். கலைத்துறை களிலும் அரசியலிலும் சமயத்துறையிலும் உள்ளாரெல்லாம் எழுதலாம். தமிழ்ப்பற்றுக்கொண்டு ஆங்காங்கேபல நூல்களைப் படித்துவரும் ஆடவர் பெண்டிரெல்லாரும் கழகத்தின் பாடத் திட்டங்களை வரன்முறையாகப் படித்துப் பட்டம் பெறத்தேர்வு எழுதலாம். சுருங்கக்கூறின், தமிழ் கற்க விழையுங்கள்! முயலுங் கள்! கழகம் யாரையும் வரவேற்பதல்லது விலக்காது. தமிழருக்கு அடையா நெடுங்கதவும், தமிழுக்கு அஞ்சல் என்ற சொல்லும் உடையதுவே இந்தியப் பல் தமிழ்க் கழகம்.

நல்லமைப்புக் கொண்ட ஒரு பெருங்கழகம் நிரலான பாடத்திட்டம் வகுத்து நேர்மையான தேர்வுகள் நடத்திப் பெருமையான பட்டங்கள் வழங்குமாயின், ஆங்கிலம் கற்ற தமிழ்மக்களும் அறிவுநாடியலையும் தமிழ் இளைஞர்களும் ஓய்வு நேரத்தையெல்லாம் தமிழ் கற்கப்பயன்படுத்தி விருப்பரன்றோ

இத்தகைய வாய்ப்பு தமிழ் மக்களுக்கு இதுவரை இல்லாமை ஒருகுறையே. இக்குறைபாட்டை அறவே களைந்தெறியத் தோன்றியதுவே இக்கழகம். தமிழ் ஆட்சிமொழியாகவும்சட்ட மன்ற மொழியாகவும் இயங்கிவரும் இவ்வுரிமைக் காலத்து, பற்பல வினைஞரும் தொழிலரும் தனியாகத் தமிழ்படித்துப் பட்டம் பெறுதற்கு ஓர் எளியவழி வேண்டியது தானே! என்ன துறை பட்டம் இருந்தாலும், கூட ஒரு தமிழ்ப் பட்டம் இருப்பது குறைவாமோ? கோதிலா நிறைவன்றோ? தாய்மொழிப்பட்டம் தனிமகிழ்ச்சியைத் தருவது; தனிச் சிந்தனைக்குரியது;தளர்ச்சிக் காலத்துத் தாங்கவல்லது. உண்மை, இதுவெறும் புகழ்ச்சி யில்லை.

மேற்சொல்லிய தேர்வுகள் 1965மே திங்களில் நிகழும், தேர்வெழுதுவோர் 1965 சனவரித் திங்களுக்குள் விண்ணப்பம் அனுப்ப வேண்டும். உரிய விண்ணப்பத் தாள்கள் கழகத்தில் கிடைக்கும். ஆங்காங்கே பணியாற்றிவரும் தமிழ்க் கழகங்களும் தமிழாசிரியர்களும் பல்தமிழ்க் கழகத் தேர்வு எழுத விரும்பு வார்க்கு வகுப்புக்கள் நடத்தி ஒத்துழைக்க வேண்டுகின்றோம்.

## 2 ஆராய்ச்சிப் பட்டங்கள்

தனித்தமிழ்ப் பட்டம் கொண்ட யாருமே ஆராய்ச்சிப் பட்டம் பெறுதற்கு வழிதுறை யாதும் இல்லை. ஆங்கிலத் தமிழ்ப்பட்டம் உடைய பலர் நிலையும் இதுவே. எண்ணிறைந்த தமிழ்ப்புலவர்கள் மேலும் கற்று ஆய்ந்து வளரும் ஆர்வமும் சார்புமின்றிச் சோர்வுற்று வருகின்றனர். தமிழ் அகலமாக வளர்வதுமட்டும் போதாது. ஆழமாகவும் வளர வேண்டும், ஆதலின் கல்விமணி, அறிவுமணி என்று இருபெரும் ஆராய்ச்சிப் பட்டங்களைக் கழகம் நிறுவியுள்ளது. நுண்மாண் நுழைபுலம் மிக்க ஆராய்ச்சி நூற்கட்டுரைகள் எழுதி முறைப்படி கழகத் திற்குப் பணிக்க வேண்டும். அவற்றின் தகுதியை ஆராய்ச்சிச் சான்றோர் மதிப்பிடுவர். நன்மதிப்புப் பெற்ற கட்டுரைக்குப் பட்டம் அளிக்கப்படும், இலக்கியம் இலக்கணம் மொழியியல் திறனாய்வு கல்வெட்டு வரலாறு இசை மருத்துவம் என்றினைய தமிழின் பல் துறைகளிலும் ஆராய்ச்சி செய்யலாம். அரிய புதிய இவ்வாய்ப்பைத் தமிழ் கற்றவர்கள் பயன் கொண்டு பட்டம் பெற்றுத் தாமும் உயர்ந்து தமிழ் மொழியையும் உயர்த்துவர் ஆகுக.

## 3. ஆக்கப் பட்டங்கள்

அறிவுலகில் முற்றும் புதியதொரு வழியைக் கண்டு முதன் முதலாக இந்தியப் பல் தமிழ்க் கழகம் தொடங்குகின்றது. தம்

கூர்த்த மதியால் புதிய பெரும் படைப்புக்களை ஆக்குவார்க்குப் பட்டம் கொடுக்கும் அமைப்பு, நாம் அறிந்தவரை, இதுவரை எக்கல்விப் பெரு நிலையத்திலும் இல்லை. ஆராய்ச்சியளவிற்கே பட்டங்கள் அளிப்பது வழக்காறாக உள்ளது. ஒரு மொழிக்கு அகலமும் ஆழமும் அவற்றோடு அடிப்படையான ஆக்கமும் வேண்டுமன்றோ? ஆக்கம் பெருகப் பெருகவே அகலமும் உண்டாகும், ஆழமும் உண்டாகும். ஆதலின் தலைமணி, முதன்மணி என்ற இருபெரும் ஆக்கப்பட்டங்களைக் கழகம் நிறுவியுள்ளது. மொழிக்கும் மக்கட்கும் வழிவழிப் பயன்படும் நிலை சான்ற புத்தம் புதிய நூல்கள் இயற்றி முறைப்படி கழகத்திற்குப் பணிக்கவேண்டும். அறிஞர்கள் அவற்றின் தகுதியை மதிப்பிடுவர். நன்மதிப்பு உடைய நூல்களை இயற்றியவர்கட்கு ஆக்கப் பட்டம் வழங்கப்பெறும். இப்பட்டப் பேறு பெரும் புகழும் நற்பயனும் உடைய பேறன்றோ? முயற்சி யார்க்கும் பெருமை தரும்.

இளமணி பெருமணி முதுமணி என்ற மூன்று தேர்வுப் பட்டங்களும், கல்விமணி அறிவுமணி என்ற இரண்டு ஆராய்ச்சி பட்டங்களும், தலைமணி முதன்மணி என்ற இரண்டு ஆக்கப் பட்டங்களும் இந்தியப் பல்தமிழ்க் கழகம் கொண்டாடும் பட்டமளிப்பு விழாவில் தக்கவர் தலைமையில் வழங்கப்பெறும் என்பதனைக் குறிப்பிட விரும்புகின்றோம்.

### 4. நற்பயிற்சி வகுப்புச் சான்றிதழ்

இற்றைக் கல்வி நிலையங்களிலும் தமிழ் ஒலிப்பிழைகளும் எழுத்துப் பிழைகளும் சொற்பிழைகளும் மரபுப் பிழைகளும் பல்கி வருகின்றன. இவ்வவலம் மிக இரங்குதற்கு உரியது. ஒரு மொழிக்கு உயிரனைய ஒலிகள் சின்னஞ்சிறுவர் சிறுமிகளால் பிழைபட ஒலிக்கப் படுமாயின், கொலையனைய பெருந்தீமை அம்மொழிக்கு வேறு வேண்டியதில்லை. ஒலிப்பிழை ஒன்று போதும். இலக்கண இலக்கியங்களும் தமிழ்நெறி தழுவி வரன்முறையாகக் கற்பிக்கப் படவில்லை. ஆதலின் கழகம் நற்பயிற்சி வகுப்பினைத் தானே நடத்த முன் வருகின்றது. இவ்வகுப்பு சில நாள் நடைபெறும். தமிழ் மொழியியற் கொள்கைகளும் திறனாய்வு நெறிகளும் பிறவும் இவ்வகுப்பில் விளக்கப்படும். ஆசிரியத் துறையில் உள்ளவர்கள் சேர்ந்து பயிற்சி பெறுவது பெரும் பயனுடையதாகும். வகுப்பிற் கலந்து பயின்றார்க்குச் சான்றிதழ் அளிக்கப்படும். இவ்விதழ் அறிஞர்களின் மதிப்பைப்

பெறும் என்பது கழகத்தின் நம்பிக்கை. இப்பயிற்சி முறையால் தமிழ்நெறிகள் காக்கப்படும். அல் நெறிகள் தவிர்க்கப்படும் என்று எதிர்பார்க்கின்றோம்.

தேர்வுப் பட்டம் ஆராய்ச்சிப் பட்டம் ஆக்கப்பட்டம் சான்றிதழ் என்ற நால்வகைப் பாங்கினால் முதன் மூன்றாண்டுத் திட்ட காலத்தில் தமிழ்ப்பணி செய்ய இந்தியப்பல்தமிழ்க்கழகம் முற்படுகின்றது. நம் தமிழ்த் தாய்மொழியின் அடிப்படை இம் முயற்சியால் வலுவடையும். கழகத்தின் நெடும் பணிக்கும் வாய்ப்புக்கள் பெருகும்.

## தமிழ்ச்சங்கம், காரைக்குடி

### தோற்றமும் நோக்கமும்

தமிழ்ச்சங்கம் காரைக்குடியில் 9-11-1969இல் தொடங்கப் பெற்றது. 1972 இல் பதிவு செய்யப்பெற்றது. இச்சங்கம் காரைக்குடியில் நிறுவப்பெற்றதாயினும் இஃது ஒரு பொதுச் சங்கமாகும். எங்கும் வாழ்கின்ற தமிழ் மக்கள் அனைவர்க்கும் தமிழ்ப்பணி செய்யும்விரிந்த குறிக்கோள் உடையது. தமிழறிஞர் களோடு தொடர்பு கொள்வது மட்டுமன்றித் தமிழ்ப் பொது மக்களோடும் சிறப்பாக இளைஞரோடும் பல்கலைக்கழகம் கல்லூரி, பள்ளிகளிற் பயிலும் மாணவர்களோடும் தொடர்பு கொண்டு தமிழை வளர்ப்பது இதன் செயல் நோக்கமாகும், இலக்கிய வளர்ச்சியில் மட்டுமன்றிக் காலத்துக்கேற்ற அறிவியல் வளர்ச்சியிலும் தமிழை வளப்படுத்தும் முதல் நோக்கம் கொண்டது. இத்தமிழ்ச்சங்கம் பொதுவாகத் தமிழிலக்கியங்கள் எல்லாவற்றையும் பரப்பும் நோக்கத்தோடு தமிழுக்கு மூலமான சங்க விலக்கியத்தினைச் சிறப்பாகப்பரப்பும் ஆர்வமுடையது. பொது மக்கட்கு அறிவியல் நூல்களையும் இலக்கியநூல்களையும் மலிவான முறையில் கிடைக்கச் செய்தல், தக்க உதவிகள் வழங்கி இளம் எழுத்தாளர்களை ஊக்குதல், பழைய நூல்களைப் போற்றிக் காத்தல், எல்லாத் துறையிலும் போட்டி நடத்திப் பரிசு வழங்கல், பல்துறைச் செயலாக்கம் செய்து மக்களிடைப் பரப்புதல் என்றினையவும் தமிழ்ச் சங்கத்தின் நோக்கங்களாம்.

### செயல்கள்

சிறியநூலாயினும் முழுநூலாகப் படிப்பதே உரமும் வளமும் ஆகும். முழுநூற்படிப்பினைச் சிறுவர் சிறுமியரிடம் பரப்பவேண்டும். அதனால் காரைக்குடிப் பகுதியில் உள்ள

தொடக்கப்பள்ளி மாணவர்கட்கு ஆத்திசூடி, கொன்றைவேந்தன் வெற்றிவேற்கை, மூதுரை, உலகநீதி முதலிய நூல்களையும் உயர்நிலைப்பள்ளி மாணவர்கட்கு நல்வழி, நன்னெறி, நீதிநெறி விளக்கம் முதலான நூல்களையும் முழுமையாக வைத்து 1972 முதல் ஒப்பித்தற் போட்டிகள் நடத்திப் பரிசுகளும் சான்றிதழ் களும் வழங்கி வருகின்றது. இதனால் காரைக்குடி வட்டாரத்து 2000 இளைஞர்கள் முறையான தமிழறிவு பெற்றுள்ளனர். சிறந்த பள்ளிகட்குப் பரிசுப் பட்டயம் வழங்குவதுண்டு.

2. வளர்ந்து வரும் பெரிய இளைஞர்களிடைத் தமிழில் அறிவியலையும் அறிவியற் சொற்களையும் பரப்பவேண்டும். இதுவே தமிழுக்கு எதிர்கால உரமாகும். பயிரியல், விலங்கியல், நிலவியல், பூதவியல், வேதியியல், கட்டிடப்பொறியியல், கல்விப் பொறியியல், புவிபொறியியல், வேதிப்பொறியியல், வேளாண்மை யியல் என்ற பத்துத் துறைகளில் கல்லூரி, பல்கலைக்கழக மாணவர்களிடை 1972 முதல் போட்டிகள் நடத்திப் பெரும் பரிசுகளும் சான்றிதழ்களும் வழங்கி வருகின்றது. ஏறக்குறைய 150 அறிவியற் கட்டுரைகள் சங்கத்திடம் உள. இவற்றை அரசின் உதவியொடு நூல்வடிவில் வெளியிடவேண்டும்.

3. தமிழெனப்படுவது சங்கத்தமிழேயாதலின் சங்க விலக்கியக் கவிதைப் பொருள்களையும் கருத்துக்களையும் பரப் பும் நோக்கொடு, 1976 முதல் சங்கவிலக்கிய ஆய்வுக்கட்டுரைப் போட்டிகள் சங்கவிலக்கியத்துறைக் கவிதைப் போட்டிகள் இரண்டினையும் நடத்தி வருகின்றது. தக்க பெரும் பரிசுகளும் சான்றிதழ்களும் உண்டு.

4. சங்க இலக்கியம் என்ற பொருள் பற்றிப் பல்வேறு தலைப்புக்களில் 12 ஆய்வுப்பொழிவுகளையும், சீவகசிந்தாமணி என்ற அருங்காப்பியம் பற்றி 12 ஆய்வுப்பொழிவுகளையும் பேரறிஞர்கள் செய்தனர்.

5. 1974 ஆம் ஆண்டில் சங்கத் தமிழ்மலர் வெளியிடப் பெற்றது. பல சமய நெறிக்கட்டுரைகளும், இலக்கிய அறத் தொடர்களும் சிறந்த புலவர்களின் பொன்மொழிகளும் தமிழ் இலக்கிய வரலாற்றுக் கட்டுரையும் இம்மலரின் சிறப்புக் கூறு களாகும்.

6. முதலாவது சங்கப்புலவர் விழா 19-2-78 இல் கொண்டாடப்பெற்றது, முத்தமிழ்க்காவலர் கி. ஆ. பெ.

விசுவநாதம், குன்றக்குடி அடிகளார், நாவலர் நெடுஞ்செழியன் முதலியோர் கலந்து கொண்டனர். சங்கத்துறைகள் என்ற தலைப்பில் கவியரங்கமும் சங்கத்தனிப்புலவர்கள் என்ற தலைப்பில் பொழிவரங்கமும் நடைபெற்றது.

7. தமிழ் வாழ்வு என்பது அதனைக் கற்ற புலவர்வாழ்வு ஆதலின் தமிழகத்தில் தமிழ்ப் பட்டம் பெற்றும் வேலையின்றி வாழும் பல்நூற்றுக்கணக்கான இளந்தமிழர்களின் நலங்கருதி வேலைபெறாத் தமிழ்ப்பட்டதாரிகளின் துணை நிலையம் என்ற கிளை நிலையத்தினைச் சங்கம் ஓர் உறுப்பாக நிறுவியது. இப்பட்டதாரிகளைப் பற்றிய தகவல்கள் தொகுக்கப் பெற்றன. தமிழக அரசுக்கும் இத்தகவல்கள் கொடுக்கப்பட்டன.

சங்கப்புலவர் விழா இருமுறை கொண்டாடப்பெற்றது.

தமிழமுது என்ற மலரில் தேசியப் பெருங்கவி பாரதியாரைப்பற்றிய பல்பொருட்கட்டுரைகள் இடம்பெற்றுள

புறநானூறு, அகநானூறு, குறுந்தொகை என்ற நூல்கள் அன்பர்கட்குப் பாடம் நடத்தப்பெற்றன.

## சங்கத்தின் செயற்குழு

அண்ணாமலைப் பல்கலைக்கழக முன்னாள் துணை வேந்தர் தி. மு. நாராயணசாமி பிள்ளை இச்சங்கத்தின் பெரும் புரவலர் ஆவர். தலைவர் வ. சுப. மாணிக்கம், துணைத் தலைவர் டாக்டர், இரா. சாரங்கபாணி. செயலர், மா. அ. ஞானசேகரபாண்டியன் (உரிமையாளர் விசயதேனு விலாசு, பலபொருள் அங்காடி காரைக்குடி) பிறவுறுப்பினர்கள்; 1. திரு சி. செல்வத்தாண்டவன், *M O.L.* முதல்வர் கணேசர் செந்தமிழ்க் கல்லூரி 2. திரு. சு. பழனியப்பன் பி. இ. எம். எசு. பேராசிரியர் அழகப்பா பொறியியற் கல்லூரி, காரைக்குடி 3. புலவர் திருமதி ம. நீலாயதாட்சி, 4. திரு.லெ. அருணாசலஞ் செட்டியார்,

முகவரி; செயலர் திரு. மா, அ. ஞானசேகர பாண்டியன் தமிழ்ச்சங்கம், கல்லுக்கட்டி வடகரை, காரைக்குடி 623001

## தமிழ் வளர்ச்சி உயர் ஆராய்ச்சி மையம், காரைக்குடி

## Centre for Tamil Development and Advanced Research Karaikudi

இவ்வாய்வு மையம் 1977 சூன் திங்களில் பதிவு செய்யப் பெற்றது. இயக்குநர்: டாக்டர். வ. சுப. மாணிக்கம், செயலர். டாக்டர் அ. விசுவநாதன். செயற்குழுவினர்: டாக்டர் ச. அகத்தியலிங்கம், டாக்டர் இரா. சாரங்கபாணி, டாக்டர் வெ. தெ. மாணிக்கம், டாக்டர் ந. வெ. செயராமன், திரு. சி. செல்வத்தாண்டவன்.

### நோக்கம்

தமிழ்இலக்கண இலக்கிய மொழித் துறைகளையெல்லாம் வளர்த்தல். செய்யுளிலும் உரைநடையிலும் படைப்பிலக்கியங் களை ஊக்குவித்தல், தமிழியல் தொடர்பான உயர் ஆய்வு களுக்குத் திட்டமிடல், ஆய்வு மாணவர்களுக்கு வழிகாட்டல், மொழிபெயர்ப்புக்களை ஊக்குதல், நூல்கள் இதழ்கள் வெளி யிடல், கருத்தரங்கு மாநாடுகள் நடத்தல், பிற கல்வி நிறுவனங் களோடு இணைந்து ஆய்வுத் திட்டங்கள் மேற்கொள்ளல், நடு வணரசுக்கும் மாநில அரசுக்கும் பல்கலைக் கழக மானியக் குழுவிற்கும் பிற பொது நிறுவனங்கட்கும் தனிப்பட்ட புரவலர் கட்கும் ஆய்வுத்திட்டங்களைப் பணித்து நன்கொடை பெறல் என்றினையவை.

### செயல்

ஒப்பியல் நோக்கு, Collected Papers என்ற இரு வெளியீடுகள் வந்துள. விடுதலைப் பாரதம் என்ற படைப்புக் காப்பியம் இயற்றுவதற்கு நடுவணரசுக்கும் பல்கலைக்கழக மானியக்குழுவிற்கும் விண்ணப்பம் செய்யப்பெற்றது. படைப்பு நூலுக்கு நிதியுதவி செய்யும் விதியில்லை என்று மறுமொழி கிடைத்துளது. திராவிட ஒப்பியல் இலக்கியம் (Dravidian Comparative Literature) என்ற புதிய ஆய்வினை இம்மையம் தொடங்கியிருக்கின்றது. தமிழ்-இந்தி நீதியிலக்கியங்கள் என்ற ஓர் பேராய்வுத் திட்டத்தை நடுவணரசுக்குப் பணித்து நிதி பெறும் முயற்சியையும் இம்மையம் தொடங்கவிருக்கின்றது.

இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி

சேந்துணியார் வீட்டு இராமசாமி செட்டியார் என்னும் கல்விவள்ளல் பெயரால் அமைந்தது. அவர் வாழ்நாளிலேயே அவர்தம் மகனார் திரு. இராம. பெரியகருப்பன், (பி, 7-9-1930) இக்கல்லூரியை நிறுவியுள்ளார்.

திரு. பெரியகருப்பன், பழுத்த தமிழறிஞர் பலருடன் பழகியவர். தனித்தமிழ் ஆர்வலர். தமிழ் நூல்களுக்கிடையே அல்லது தமிழ்ப்புலவர்கள் சூழக் காட்சி தருபவர்.

தமிழ்ப் பற்றால் 26, 1. 1964ஆம் நாளில் இந்தியப் பல் தமிழ்க்கழகம் என்ற ஓர் அமைப்பைத் தம் இல்லத்தில் நிறுவி அதன் மூலம் தமிழைப் பரப்பி வளர்க்கப் பெரும்பொருள் செல விட்டார்கள். அதன் வளர்ச்சி நாளடைவில் தமிழ்க் கல்லூரியாக மலர்ந்து தற்போது தமிழ் மணம் பரப்பி வருகின்றது.

அவர்தம் இல்லமே தமிழ் இல்லந்தான். தமிழ்ப் பெரியார் களின் படங்களின்றிப்பிற படங்களை வீட்டில் காண இயலாது. திரு. வி. க. இல்லம், நீலாம்பிகை இல்லம், பாரதி நிலையம், விபுலானந்தர் இல்லம் என்பன அவர்தம் இல்லங்களின் பெயர் கள். மறைமலையடிகள் நூற்றாண்டு விழா நினைவாகப் பிள்ளைத்தமிழ்க் கவிதைப்போட்டி ஒன்றை ஏற்படுத்தி ரூ. 3,000/ (மூவாயிரம்) பரிசளித்த ஒரே மனிதர் தமிழுலகில் இவரேயாவார்.

தமிழ் மொழி வளர்ச்சியாகத் தமிழ்க் கல்லூரி நிறுவிய தோடு பல்கலைக் கழகங்கள் நடத்தும் அறக்கட்டளைத் தொடர்சொற்பொழிவுகளைப் போலத் தாமும் தம் தாயார் பெயரால் மீனாட்சி ஆச்சி நினைவுச் சொற்பொழிவை நிறுவி நடத்தி வருகிறார்கள். அச்சொற்பொழிவினை கேட்டோரே யன்றிப் பிறரும் பயனடைய வேண்டி அதைச் சிறந்த ஆராய்ச்சி நூலாகவும் நூலாக்கம் செய்து வெளியிட வேண்டியும் நல்ல பல நூல்கள் வெளியிட வேண்டியும் தம் மனைவியின் பெயரால் மெய்யம்மை பதிப்பகத்தை உருவாக்கித் தமிழ் நூல்களை வெளியிட்டு வருகிறார்கள்.

இசுப்பக்கிழச்சாலை

இராமசாமி தமிழ்க்கல்லூரி, பழைய கண்டனூர்ச் சாலையில் இயங்குகிறது. தோற்றம் 18-6-1967. செயலர்— திருமதி பெரி. மெய்யம்மை ஆச்சி.

தமிழ்ப்புலவர் (2டி) வகுப்புடன் தொடங்கப் பெற்ற இக் கல்லூரி மதுரை—காமராசர் பல்கலைக் கழகத்துடன் இணைவு பெற்றது. 1976-77ஆம் கல்வியாண்டு முதல் தமிழ்ப் புலவர் படிப்பிற்குப் பதிலாக இளம் இலக்கியவியல் எனும் பட்டவகுப்பு (பி. லிட். Bachelor of Literature) நடைபெற்று வருகிறது. மேனிலைப் பள்ளிக் கல்வி (2) வெற்றி பெற்றோர் பி. லிட். பயிலத் தகுதியுடையோராவர். இக்கல்லூரியில் மாணாக்கர்கள் தங்கிப் பயிலும் வண்ணம் உணவு விடுதி ஒன்று உள்ளது. பிற்பட்ட, மிகவும் பிற்பட்ட மாணாக்கர்களுக்கு — அரசாங்க உதவித்தொகைகள் கிடைக்கின்றன. இதுகாறும்இக்கல்லூரியில் பயின்று பட்டம் பெற்றோர் முந்நூற்றுப் பதினொருவர் ஆவர்.

இங்குள்ள பேராசிரியர்கள் நல்ல ஆய்வுத்திறன் கொண்டவர்கள். தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் உருவாக்கிய குறுகிய கால ஆய்வுத்திட்டத்தின்கீழ் பேராசிரியர் திருமதி நா. வள்ளி என்பவர் "சிற்பக்கலையின் சிறப்பும் சிற்பக்கலைக்கு முகவையின் பங்கும்" என்ற தலைப்பில் கள ஆய்வொன்றைச் செய்து ஆய்வேடு தந்துள்ளமை குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

மீனாட்சி ஆச்சி நினைவுச்சொற் பொழிவினை 1978 ஆம் ஆண்டில் ஏற்படுத்தியுள்ளார்கள். இச்சொற் பொழிவு ஆண்டுதோறும் பிப்ரவரித் திங்களில் 20,21,22 ஆகிய நாட்களில் இக்கல்லூரியில் நடைபெற்று வருகின்றது.

இக் கல்லூரியில் காரைக்குடி சர்வதேசக் குழந்தைகள் ஆண்டு விழாக் குழுவினரால் ஏற்படுத்திய குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா பரிசு அறக்கட்டளையின் மூலம் ஆண்டுதோறும் குழந்தைகள் தினவிழா சிறப்பாக நடைபெற்று வருகிறது.

12,000

நாலாயிரத்து இருநூறுக்கும் மேற்பட்ட நல்ல தமிழ் நூல்களைக் கொண்ட அழகப்பர் நூலகம் பல்லாற்றானும் பயன் நல்கி வருகிறது.

பல்கலைக்கழகத் தேர்வில் இக்கல்லூரி அளவில் முதல் மதிப்பெண் பெறுபவருக்கு மெய்யம்மை ஆச்சி பொற்பதக்கப் பரிசு வழங்கப்படுகிறது.

கல்லூரித் தந்தை கல்வி வள்ளல் ராம. வீர. இராம. இராமசாமிசெட்டியார் அவர்கள் குறிப்பிட்ட சில மாணவர் களுக்குத் தம் கல்வி அறக்கட்டளையின் மூலம் பொருள் உதவி செய்து வருகிறார்கள்.

இக்கல்லூரிக்கென, காரைக்குடி இரயில் நிலையத் திற்குத் தெற்குப் பக்கம் உள்ள இலுப்பக்குடி கிராமத்திற்குச் செல்லும் சாலையில் 19.11 ஏக்கர் நிலத்தைத் தமிழக அரசு 1983ஆம் ஆண்டு அன்புடன் வழங்கியுள்ளதை இக்கல்லூரியினர் நன்றியுடன் நினைக்கின்றனர்.

முகவரி: திருவாளர் இராம. பெரியகருப்பன், திரு. வி. க. இல்லம், 49, ஆறு. ஆ. இராம. வீதி, காரைக்குடி 623001.

## பறம்புமலை (பிரான்மலை) வள்ளல் பாரிவிழா

வள்ளல் பாரி வாழ்ந்திருந்தது பறம்புமலை. (பிரான் மலை). புலவர்களைப் போற்றிய வள்ளல் பாரியின் பெயரால் – பிரான்மலைத் திருக்கோயிலில் சித்திரைத் திருவிழா ஏழாம் திருநாளன்று இவ்விழா எடுக்கப் பெறுகிறது.

விழா நாளன்று காலையில் வள்ளல் பாரி, வேட்டைக்குச் செல்வதும், திரும்பி வரும்போது முல்லைக் கொடிக்குத் தேர் ஈதல் நிகழ்ச்சியும் அடுத்து குடிமக்களுக்குப் படியரிசி வழங்கும் நிகழ்ச்சியும் நடைபெறுகின்றன.

மேலும் உரையரங்கம், கருத்தரங்கம், கவியரங்கம் பட்டி மன்றம், பாராட்டுவிழா நிகழ்கின்றன.

பாராட்டு விழாவின் தலைவர், வள்ளல் பாரியாக வீற்றி ருப்பது வழக்கம். தமிழில் துறை போய புலவர்களுக்கு ஆண் பாலருக்கு "கபிலர் பதக்கமும்" பெண்பாலருக்கு "ஔவையார் பதக்கமும்" வழங்கிப் பட்டங்களும் தகுதிக் கேற்பதி தரப்பெறுகின்றன. "முதுபெரும்புலவர்" "நூலறிபுலவர்" "பெரும்புலவர்", "புலவரேறு", "கணக்காயர்", "செந்தமிழ் ஞாயிறு", "செந்தமிழ்க் காவலர்", "செந்தமிழ் விறலி", "கவிஞர் கோ", "கவியரசு", "அருங்கலைக் கோன்," "தலைக் கோலரிவை", "நற்கதைநம்பி", "சிறுகதை மன்னன்", "நடிகர் கோ", "எழுத்து வேந்தன்", "ஏழிசைச் செல்வர்", "இசை

வேள்'', ''கருணை மறவன்''. என்ற பட்டங்கள் அவரவர் தகுதிக் கேற்ப வழங்கப் பெற்றுள்ளன. இச் சிறப்புக்களை பெற்றவர்கள் பாரியின் அவைப் புலவர்களாகவும், கலைஞர் களாகவும் மதிக்கப் பெறுகின்றனர். பாரி விழாத் தலைவர் (பாரி) இப்பட்டங்கள் வழங்குவார். மேலும் விழாவுக்கு வரும் புலவர்களுக்குப் புத்தாடைகள் வழங்குவது வழக்கம்.

மேலும் சங்ககால நெறிப்படி ஆடுநர், பாடுநர்க்குக் காசுகள் அள்ளி வழங்கும் நிகழ்ச்சி உண்டு.

விழா கபிலர் அரங்கத்தில் நிகழும். அரங்கத்தின் முகப்புக்கு ''ஔவையார் நுழைவாயில்'' என்று பெயர்.

விழா நாளன்று மதியம் புலவர் விருந்துநிகழும். இவ்விழா வில் ''பறம்பு மலை உழவர் உழாதன நான்குபயன் உடைத்து'' என்று புறநானூற்றில் கூறப்பெறும் தேன், மூங்கிலரிசி, பலா வள்ளிக்கிழங்கு ஆகியன படைக்கப் பெறுதல் வழக்கம்.

இவ்விழாவில் இதுகாறும் புலவர்கள். கவிஞர்கள் அறிஞர்கள், எழுத்தாளர்கள், இசைக் கலைஞர்கள் என 50 பெருமக்கள் சிறப்புப் பெற்றுள்ளனர்.

## திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கம்

திருப்புத்தூரில் ''திருப்புத்தூர் தமிழ்ச் சங்கம்'' குன்றக் குடி ஆதீனத்தின் சார்பில் அமைந்துள்ளது.

திருத்தளி நாதர் திருக்கோயிலில் இதன் தலைமையகம் உள்ளது. இச்சங்கம் 1967 இல் தோற்றுவிக்கப் பெற்றது. இதன் தலைவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார். அறுபான் மும்மை நாயன்மார்களை நினைவிற் கொண்டு 63 புலவர்கள் இச்சங்க உறுப்பினர்களாக உள்ளனர். வைகாசி விசாகத்தினை யொட்டி நடைபெறும் தமிழ்ச் சங்கக் கூட்டங்களில் கலை, இலக்கியம், பண்பாடு, சமயம் முதலியன பற்றியும் காலம் அவாவி நிற்கும் பிற துறைகள் பற்றியும் ஆய்வு செய்து முடிவுகள் வெளியிடப் பெறும். இது ஓர் ஆய்வுக் கழகம் ஆகும். இதில் தமிழ் நாட்டின் பெரும்புலவர்கள் உறுப்பினர்களாக இருந்து தமிழ்ப்பணி செய்து வருகின்றனர். சங்கத்தின் ஆய்வு செய்யப் பெறும் செய்திகள் நூலாக வெளிவரும்.

திருப்பத்தூர்த் திருக்கோயில் வைகாசி விசாக விழா வினையொட்டி ஒவ்வொரு ஆண்டும் திருமுறை விழா நிகழும். விழாவில் திருமுறைகள் பற்றிய கருத்தரங்கம், கவியரங்கம் சிந்தனைமேடை, பட்டி மன்றம் முதலியன நிகழும். விழாவில் திருமுறைத் தமிழுக்கு மொழியாலும் செயலாலும் தொண்டு செய்த பெருமக்களுக்கு பட்டங்களும் பதக்கங்களும் அளித்துச் சிறப்புச் செய்யப் பெறுகிறது.

# 16. செட்டிநாடு ஆதரித்த புலவர்கள்

செட்டிநாடு ஆதரித்த தமிழ்ப்புலவர்கள் நூற்றுக் கணக் கானவர் ஆவர். அவர்களுக்கு இப்பகுதியிலிருந்த ஆதரவைப் பற்றி இந்நூலின் பல பகுதிகளில் குறிப்பிட்டிருக்கிறோம். இக் கட்டுரையில் 19, 20 ஆம் நூற்றாண்டுகளில் செட்டிநாடு சிறப்பாக ஆதரித்த புலவர் சிலரைப் பற்றிய செய்திகளை நமக்குத் தெரிந்த அளவில் தெரிவிப்போம்.

## திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை (1815 - 1876)

இப்புலவர் பெருமான் 1874 - இல் செட்டிநாட்டுக்கு வந்திருந்து பல பெருமக்களுடன் பழகினார்; கண்டனூரை யடுத்த சாக்கோட்டையிலுள்ள சிவன் கோவிலைப் பற்றி வீரவனப் புராணம் இயற்றியுள்ளார். இவருடைய புராணங் களில் இதுவே மிக அழகானது.

மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களை சூரக்குடிப் புராணம் பாடவேண்டுமென்று நகரத்தார் கேட்டுக் கொண் டனர். இதைப்பற்றி, சுவையான செய்தி ஒன்று உண்டு. கவி விருத்தத்தில் (4 சீர் உள்ள வரிகளில்) மகாவித்துவானுடைய பாடல்கள் அமைந்திருந்தன. அவர் 400 பாடல்களை பாட்டுக்கு ஒரு ரூபாய் வீதம் பாடிக்கொடுத்தார். பாடல்கள், இலக்கியச் சுவையின்றி இருந்தன. இதைப் படித்துப் பார்த்த ஒரு தமி ழறிஞர், "பாட்டுக்கு ஒரு ரூபாய் கொடுக்கும் போது நீளப் பாட்டாக (கழிநெடிலடி ஆசிரிய விருத்தமாக) பாடி வாங்கி யிருக்கக் கூடாதா?" என்று கேட்டாராம்.

பிள்ளை அவர்கள் சரித்திரம், இரண்டாம் பாகத்தில், டாக்டர் உ. வே சாமிநாத ஐயர் அவர்கள் பின்வருமாறு குறிப் பட்டிருக்கிறார்கள்.

"அப்பால் இவர் வன்றொண்டச் செட்டியார், சத் திரம் அருணாசலம் செட்டியார், வெளிமுத்தி வைரவ ஐயா என்பவர்களால் அழைக்கப்பட்டுத் தேவகோட்டைக்

குச் சென்று சில நாள் இருந்து அங்கேயுள்ள கனவான்களால் உபசரிக்கப் பெற்றார். பிறகு காரைக்குடி சென்று அங்கே அறுபத்துமூவர் குருபூசை மடத்தில் தங்கினார். மெ. பெரி. ராம. மெய்யப்ப செட்டியார் என்பவர் கேட்டுக்கொள்ளவே, குருபூசை மான்மியம் என்ற ஒரு நூல் இவரால் அளிக்கப் பெற்றது. அது பதினைந்து செய்யுட்களையுடையது. அச்சிடப் பெற்று வழங்குகின்றது. மெய்யப்ப செட்டியார் கேட்டுக்கொண்டதையும் உடனே யாதொரு தடையுமின்றி இவர் இயற்றியளித்ததையும் உடனிருந்து பார்த்தவராகிய காரைக்குடி சொக்கலிங்க ஐயா அடிக்கடி சொல்லிப் பாராட்டிக் கொண்டேயிருப்பார்.

— பக்கம் 197.

"பிள்ளை அவர்கள் காலமான செய்தியை அறிந்த பின்னர், ஆறுமுக நாவலர் நெடுநேரம் வரையில் வருத்தத்தோடு இருந்து பிள்ளை அவர்களுடைய அருமை பெருமைகளைப் பாராட்டி விட்டு, பின்புதான் பூசைக்குச் சென்றனரென்று அக்காலத்து அவருடனிருந்து வந்த காரைக்குடி சொக்கலிங்கையாவும் பிறரும் சொன்னதுண்டு."

பக்கம் 253-4

பிள்ளை அவர்களின் குடும்பத்துக்கு உதவுவதற்காக, பண்டிதமணி கதிரேசச் செட்டியார் அவர்கள் ஒரு வேண்டுகோள் அச்சிட்டு அனுப்பியதையும் மேலைச் சிவபுரி முதலிய ஊர்களிலுள்ள கனவான்களும் தனவைசியர்களும் பொருளுதவி செய்ததையும் டாக்டர் சாமிநாத ஐயர் அந்த நூலில் 262 - ஆம் பக்கத்தில் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

வ. வே. சு. அய்யர்

அய்யருடைய கம்பன் பணியில் காரைக்குடித் தொடர்புப் பற்றி முன்னொரு கட்டுரையில் கூறியிருக்கிறோம்.

கானாடுகாத்தான் வள்ளல் வயி. சு. சண்முகம் செட்டியார் கொடுத்த நன்கொடையாகக் கொண்டு வ. வே. சு. அய்யர் சேரன்மாதேவியில் நிலம் வாங்கினார்; குருகுலம் அமைப்பதற்குப் பொருள் சேர்க்க மலேயாவுக்குப் புறப்பட்டார். குமரன், ஊழியன் இதழ்களின் விளம்பரத்தால், அங்கு 35,000 வெள்ளி சேர்ந்தது.

குருகுலத்தில் தமிழரைச் சமத்துவமாக நடத்த மகாத்மா வுடன் பேசியும் ஒரு முடிவும் ஏற்பாடாமையால் மலேயா நாட்டில் திரட்டப்பட்ட பொருளை நன்கொடையாளரிடமே திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்று வயி சு. சண்முகம் செட்டியார், திரு. வி. க., டாக்டர் ப. வரதராசுலு நாயுடு, சொ.முருகப்பா, ராய. சொ. மற்றும் சுரேந்திரநாதி ஆர்யா, கே. எஸ். சுந்தரம் பிள்ளை முதலியோர் 24 - 3 - 1925 - இல் சென்னையில் கூடி முடிவு செய்தனர்.

திரு.வி.க.

தமிழ்த்தென்றல் திரு. வி. க. அவர்களுக்கும் செட்டி நாட்டுக்கும் மிகுதியான தொடர்பு உண்டு. துந்துபி ஆண்டு வைகாசித் திங்களில் குமரன் வெளிவரத் தொடங்கியது ஆசிரியர் பெயருக்கும் (சொ. முருகப்பா) பத்திரிகையின் பெய ருக்கும் உள்ள தொடர்பை நோக்கி 'முருகன்' என்னும் கட்டுரையை முதல் இதழில் திரு. வி. க எழுதினார். இதுவே. பிற்காலத்தில் "முருகன் அல்லது அழகு'' என்னும் சிறந்த நூலாக வெளிவந்தது.

திரு. வி. க. அவர்கள் இயற்றிய சைவசமயசாரம் நாயன்மார் என்னும் நூல்கள் காரைக்குடி,காரைச்சிவனடியார் திருக்கூட்டத்தால் குரோதன ஆண்டில் வெளியிடப் பெற்றன.

பர்மாவிலும், மலேயாவிலும் வாழ்ந்த செட்டிநாட்டு அன்பர்கள் திரு. வி. க. அவர்கள் தொடங்கிய இதழ்களுக்குப் பேருதவி செய்தனர். வெளிநாடுகளிலிருந்து தாயகம் திரும்பிய வர்கள் அன்பளிப்புக்களுடன் தம்மைக் காண வருவர் என்று திரு. வி.க, அவர்கள் தம் வாழ்க்கைக் குறிப்புகளில் கூறியிருப்பது செட்டி நாட்டு அன்பர்களையே ஆகும்,

திரு. வி. க. அவர்களுடைய மனைவி இறந்தபின்னர், அவருக்காகச் செட்டி நாட்டில் ஓர் ஆசிரமம் அமைக்க அன்பர் சிலர் முயன்றனர். உடையாலும் கோலத்தாலும் துறவியாக இருக்க திரு. வி. க. விரும்பவில்லை. எனவே அன்பர்கள் தம் முயற்சியைக் கைவிட்டனர். ஆனால் தமிழ்ப்பெரியார் திரு வி.க அவர்கள் உள்ளத்தாலும் செயலாலும் துறவியாகவே வாழ்ந்து வாழ்க்கையின் எஞ்சிய நாட்களைக் கழித்தார்கள்.

திரு. வி. க. அவர்களுக்கு ஓர் இல்லம் வாங்கிக் கொடுக்க வும் அவருக்குப் பொருளனுப்பியும் செட்டிநாட்டு அன்பர்கள்

உதவ முன்வந்ததை இவ்வாறே திரு. வி, க. அவர்கள் ஏற்றுக் கொள்ள மறுத்தார்கள். கலைத்தந்தை கருமுத்து தியாகராாசர் பலவாறு உதவ முன்வந்தும், அதைத் தொழிலாளர் தலைவர் திரு. வி. க. தம் முதுமைக் காலத்திலும் ஏற்றுக் கொள்ள வில்லை.

மகாவித்துவான் ரா. இராகவ ஐயங்கார்

இவருக்கு தேவகோட்டை சத்திரம் சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் ஆயிரக்கணக்கில் பொருளுதவி செய்து இருக்கிறார்கள். இவர் பாடிய 'பாரி வெண்பா' என்ற கவிதை நூலுக்கு இராசா சர். அண்ணாமலைச் செட்டியார் பரிசில் வழங்கிச் சிறப்பித்தார்.

மு. ரா. கந்தசாமிக் கவிராயர்

இப்புலவர் பெருமான் அரிமளம் தலபுராணம் பாடிய தற்கு அவ்வூர் நகரத்தார் தகுந்த பொருளுதவினர். இவ ருடைய 'வித்தியாபானு' என்னும் இதழ் கோனாபட்டிலிருந்து வெளிவந்து செட்டிநாட்டு அன்பர்களின் பொருளுதவியாலேயே நடைபெற்றது.

பாரதியார்

கவியரசர் சுப்பிரமணிய பாரதியாருக்கும் செட்டி நாட்டுக்கும் மிகு தியான தொடர்பு இருந்தது. அவர் புதுச்சேரி யிலிருந்தபோதே, அவருடன் கடிதப் போக்குவரவு வைத்திருந்த வர் கானாடுகாத்தான் வயி. சு சண்முகம் செட்டியார்.

திரு. வி, க. அவர்கள் கூறியிருப்பது போல "வயி. சு, சண்முகம் செட்டியார் பாரதி பித்தர். செட்டிநாட்டில் பாரதீயத்துக்குக் கால் கொண்டவர் அவரே." (திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள், பக்கம் 811)

வயி. சு, அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கிப் பாரதியார் இருமுறை—முதன்முறை 28-10-1919 முதல் 10-11-1919 வரையும், அடுத்த முறை 6-1-1920 முதல் 10-1-1920 வரையும் —செட்டி நாட்டுக்கு வந்திருந்தார்.

பாரதியாருக்கு மாதந்தோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை அன்பளிப்பாக அனுப்பி. வயி. சு. இரண்டு ஆண்டுகள் அவரை ஆதரித்து வந்தார். பாஞ்சாலி சபதம், கண்ணன் பாட்டு முதலியவை அச்சானதற்கு வயி. சு. அவர்களே காரண மாவரர்கள். இந்நூல்களின் கையெழுத்துப் பிரதி இவர்களிடம் இருந்ததை நான் (இந்நூலாசிரியர்) பார்த்திருக்கிறேன். பாரதியார் செட்டி நாட்டில் பட்டினி கிடக்கவில்லை என்பதையும் செட்டிநாட்டு அன்பர் சிலர் அவருக்கு விலையுயர்ந்த பொருள்களை அன்பளித்த செய்தியையும் தங்கம்மாள் பாரதியார் குறிப்பிட்டிருக்கிறார்.

கானாடுகாத்தானிலிருந்து கடையத்திற்குச் செல்லும் வழியில் 6—11—1919 இல் பாரதியார் காரைக்குடிக்கு வந்தார். அவர் அங்கே தங்குவதாகத் திட்டமில்லை. காரைக்குடியிலுள்ள சொ. முருகப்பா போன்ற தமிழன்பர்கள் பாரதியாரை இந்து மதாபிமான சங்கத்திற்கு அழைத்துச் சென்றனர். சங்கத்தை அடைந்தவுடனே, பாரதியார் புத்துணர்ச்சி பெற்றார். தமது பயணத் திட்டத்தை கைவிட்டார். அங்கேயே சில நாட்கள் தங்குவாராயினார். அரசியல் போராட்டம் மும்முரமாகநடந்து கொண்டிருந்த காலம் அது. தேச பக்தர்களின் படங்களை எவரும் வைத்திருக்க அஞ்சுவர். இத்தகைய சூழ்நிலையில், இந்து மதாபிமான சங்கத்தார் தேசிய இயக்கத்துக்கு ஆதரவாக இருப்பதறிந்து பாரதியார் இன்புற்றார். அங்கு வ. உ. சி. போன்ற பழுத்த ''ராஜதுவேஷிகளின்'' படங்கள் பலரறிய விளம்பரப்படுத்தி வைத்திருந்ததைப் பார்த்து, அவர் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார். அதன் விளைவாக இந்து மதாபிமான சங்கத்தின் மீது பல பாடல்கள் பாடினார். கடைசி இரு பாட்டுக்களை மட்டும் இங்கே தருவோம்.

''உண்மையே தாரகம் என்று உணர்த்திட்டார், அன்பு
ஒன்றே உறுதி என்பார்
வண்மையே குலதர்மம் எனக்கொண்டார், தொண்டு ஒன்றே
வழியாகக் கண்டார்
ஒண்மை உயர் கடவுளிடத்து அன்புஉடையார், அவ் வன்பின்
ஊற்றத்தாலே
திண்மை உறும் ''ஹிந்துமத அபிமான சங்கம்'' ஒன்று சேர்த்
திட்டாரே.

''பலநூல்கள் பதிப்பித்தும் பல பெரியோர் பிரசங்கம்
பண்ணுவித்தும்
நலமுடைய கலாசாலை புத்தகசாலை பலவும் நாட்டியும் தம்
குலம் உயர நகர் உயர நாடுயர உழைக்கின்றார்; கோடி
மேன்மை
நிலவுற இச்சங்கத்தார் பல் ஊழி வாழ்ந்தொளிர்க நிலத்தின்
மீதே.''

தமிழ் நாட்டில் இந்தச் சங்கம் ஒன்றுக்கே, பாரதியாரின் பாடலைப் பெற்ற பெருமை உண்டு. பாரதியாருடனிருந்து தங்கள் படத்தையும் எடுத்துக்கொண்ட சிறப்பு இந்தச் சங்கத்தினருக்கே உரியது. இச்சங்கத்தின் வாயிலாகவே தமிழ்நாட்டுக்குப் பாரதியாரின் படம் கிடைத்திருக்கிறது.

காரைக்குடியிலிருந்துவெளிவந்த ''குமரன்'', ''ஊழியன்'' இதழ்கள் பாரதியாரின் கட்டுரைகளையும் பாடல்களையும் அவர் காலத்திலேயே வெளியிட்டுள்ளன. ''தன வைசிய ஊழியன்'' 15 - 10 - 1920, 23 - 10 - 1920 இரு இதழ்களிலும் பாரதியாரின் கட்டுரைகள் வெளி வந்திருக்கின்றன.

பாரதியாருடைய வாழ்க்கை வரலாறு சரியானமுறையில் வெளிவர முயன்று, வ. ரா. அவர்கள் அதைஎழுத ஏற்பாடு செய்தவர் சக்தி வை. கோவிந்தன் அவர்கள். பாரதியார் சரித்திரம் பற்றிய நினைவுகளையும் பாரதியார் சொன்ன கதைகளையும் அவர் மக்கள் சகுந்தலா, தங்கம்மாள் ஆகியோர் துணையுடன் பாரதியாரின் மனைவி செல்லம்மாள் பாரதி எழுதிய கட்டுரைகளின் வாயிலாகத் தமிழகத்துக்கு வெளியிட்டது ''சக்தி'' என்னும் மாத இதழ். ''பாரதியும் கவிதையும்'' என்ற தங்கம்மாள் பாரதியின் நூலைக் காரைக்குடி புதுமைப் பதிப்பகத்தார் வெளியிட்டனர்.

வை. கோ., கொத்தமங்கலம் ராம. சு. ராம. ராமஞ் செட்டியார், ராயவரம், கு. ராம. மு. ராம. சேதுராமஞ்செட்டியார்ராயவரம் ஏ. கே. ராமஞ் செட்டியார் ஆகிய செட்டிநாட்டு அன்பர்கள் நடத்திய ஹிந்துஸ்தான் பத்திரிகை, சிறப்பு நிருபர்களைப் புதுச்சேரிக்கு அனுப்பி, பாரதியார் பற்றிய செய்திகளையும் படங்களையும் சேகரித்து 1938 முதல் 1941 வரை பல சிறப்பு மலர்களை வெளியிட்டது. இவை ரா. அ. பத்மநாதன் அவர்கள் சிறந்த முறையில் அமைத்து வரும் பாரதி கண்காட்சியிலும் அவர் சிறப்பாக வெளியிட்டுள்ள 'சித்திர பாரதி' என்ற நூலிலும்பயன்படுத்தப்பட்டுவருகின்றன.

முதியோர் கல்வி இயக்கத்திற்குப் பாரதியார் பாடல்கள் பேருதவியாக இருந்து வருகின்றன. இதற்கென, பாரதியாரின் பாடல்களிலிருந்து, ஈரடியில் அவருடைய கருத்துக்களைப் பாடல்களாகத் தொகுத்து, "பாரதியார் பாமணிகள்" என்ற நூலை திரு. முல்லை முத்தையா உருவாக்கியிருக்கிறார்.

1948 - இல் பாரதியார் பாடல்களை ஒரு குழுவினர் பிழையாக அச்சடித்துப் பதிப்பு முறையைப் பாழாக்கிவந்தனர். அப்போது, திரையுலக மேதை ஏவி. எம். அவர்கள் பாரதியாரின் பாடல்களை வெளியிட்டு ஒலி பரப்பு உரிமைகள் அனைத்தையும் விலைக்கு வாங்கியிருந்தார். அவர் உரிமையை வாங்கிய பிறகு "நாமிருவர்" என்ற படத்தில் ஒரு முரசுப் பாடலைப் பயன்படுத்தினார். அந்தப் பாடலை தக்கவர் பாடுவதற்கு ஏற்பாடு செய்திருந்ததால், பாடலின் முழு ஆற்றலும் வெளிப்பட்டு, மக்கள் உள்ளத்தை ஈர்த்தது. உடனே நாட்டுப்பற்று மிக்க அன்பர்கள், பாரதி பாடலைப் பொதுச் சொத்தாக்க விரும்பினர். தொழில் முறையில் விலை கொடுத்து வாங்கிய உரிமையை அன்பளிப்பாகக் கொடுத்த அன்பர் ஏவி.எம். அவர்களுக்குத் தமிழ் மக்களின் நன்றி உரியது.

எட்டையபுரத்தில் அமைக்கப் பெற்ற பாரதி மண்டபத்திற்குச் செட்டி நாட்டிலிருந்தும், கடல் கடந்தநாடுகளிலிருந்தும் செட்டி நாட்டினர் நன்கொடை கொடுத்துள்ளனர்.

பாரதியாருடைய வாழ்க்கை வரலாற்றை ஒரு டாக்குமெண்டரி படமாக எடுப்பதற்குத் தேவையான அனைத்துக் குறிப்புக்களையும் திரையுலக மேதை ஏ.வி. எம் அவர்கள் சேகரித்து வைத்திருக்கிறார்கள்.

பாரதியார்புகழையும் அவர்பாடல்களையும் பரப்பியதற்காக, பாரதி நூற்றாண்டு விழாவில் தமிழக அரசு ஏ. கே செட்டியாருக்குக் கேடயம் வழங்கிற்று. ஆனால் அவர் அதை ஏற்றுக்கொள்ளவும் விழாவில் கலந்து கொள்ளவும் மறுத்தார். அவர் சார்பில், கேடயத்தைப் பெற்றுக்கொண்ட தமிழக அரசின் செய்தி-விளம்பர தகவல் துறை இயக்குநர் திரு. சி. என் கிருஷ்ணபாரதி ஐ. ஏ. எஸ். கேடயத்தைப் பெற்றுக் கொண்டதற்கும் கண்டனம் தெரிவித்தார்.

இந்தக் கேடயம் இப்போது கோட்டையூர் முத்தையா அழகப்பா மேனிலைப் பள்ளியில் காட்சியில் வைக்கப் பெற்று இருக்கிறது.

கவிமணி

பாரதியாரின் புகழை அவர் வாழ்நாளிலேயே பரப்பிய "குமரன்" பின்னாளில் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களின் புலமையை அறிந்து அதைத் தமிழகத்துக்கு வெளிப் படுத்தியது என்று சொல்லலாம். கவிமணி அவர்களே சொல்லு கிறார்கள்:-

"என் பாடல்கள் முதலில் பத்திரிகையில் வெளிவந்தது சொ முருகப்பா அவர்களது பத்திரிகையான குமரனில் தான். ஆசிய ஜோதி நூலை வெளியிடத் தூண்டி, அதற்கான ஆங்கில முதனூலை எனக்கனுப்பி ஊக்குவித்தவர்களும் அவர்களே.

—முருகப்பனார் மணிவிழா மலர், பக்கம் 6

"கருணைக்கடல்" வெளியானதற்கும் முருகப்பா அவர் களே காரணமாவார்கள். இது சிறந்த கற்பனைகளும் தத்துவங் களும் நிறைந்த காவியம். "ஆடு கோழி வெட்டாதே" "உயிர்ப் பலி கொடாதே" என்ற இயக்கம் 1920 முதல் செட்டிநாடெங் கும் நடைபெற்று வந்தது. அப்போது ஜீவகாருண்யப் பிரசாரத் திற்காகக் கவிமணி அவர்கள் முருகப்பாவின் வேண்டுகோளுக் கிணங்கப் பல பாடல்களைப் பாடியிருக்கிறார்கள்.

பீஜித் தீவுகளைப் பற்றிக் கவிமணி அவர்கள் பாடியுள்ள பாடல்கள், உலகம் சுற்றிய தமிழர் ஏ. கே. செட்டியார் அவர் கள், பீஜிக்குச் சென்றிருந்த போது கவிமணி அவர்களை வேண்டிக் கொண்டதை ஒட்டியே பாடப்பெற்றன.

கவிமணி அவர்கள் 'சக்தி' யில் தான் முதலில் சிறுவர்க் காகப் பாடல்கள் எழுதினார்கள். இவற்றை "இளந்தென்றல்" என்ற பெயரில் (அப்போது சென்னையில் இருந்த காரைக்குடி) புதுமைப் பதிப்பகத்தார் நூலாக வெளியிட்டனர். அதன் பின்னர் கவிமணி அவர்கள் குழந்தைகளுக்காகப் பாடிய பாடல்களை 'குழந்தைச் செல்வம்' என்ற பெயரிலும் ஏனைய பாடல்களை "மலரும் மாலையும்" என்ற பெயரிலும் நூல்களாக உருவாக்கிய பெருமை இப்பதிப்பகத்திற்கு உரியது. இந்நூல்களின் மறு பதிப்புக்கள் இன்னும் சிறந்த முறையில் வெளிவர உதவியவர்

கள் அ. லெ. நடராசன் அவர்களும் வி. ஆர். எம். செட்டியார் அவர்களும் பாரி நிலையத்தின் உரிமையாளர் க. அ. செல்லப்பன் அவர்களும் ஆவர். 1955-இல் "மலரும் மாலையும்" புதிய பதிப்பு மிகப் பெரிய அளவில் வெளியாகியுள்ளது. இப்பதிப்பின் சிறப்புக்கு ஆலோசனை கூறி விடுபட்ட பாடல்களை எழுதியனுப்பி உதவியவர் தமிழன்பர் மெ. திருநாவுக்கரசு, எம். ஏ. ஆவார்கள்.

1943-ஆம் ஆண்டு மே திங்களில் கவிமணி அவர்கள் செட்டி நாட்டிற்கு வருகை புரிந்தார்கள். அதற்கு முன்னர் கவிமணி அவர்கள் தில்லை முதலிய இடங்களுக்குத் தலயாத்திரையாகச் சென்றதுண்டு. ஆனால் கவிஞர் என்ற முறையில் இலக்கிய யாத்திரையாக அவர்கள் திருவாங்கூர் எல்லைக்கப்பால் முதலில் வந்தது செட்டிநாட்டுக்குத்தான்.

கவிமணி அவர்களுக்குப் பொன்னாடை போர்த்தி அவர்களை முதலில் சிறப்பித்த பெருமையும் செட்டி நாட்டுக்கே உண்டு. அதற்குப் பின்னர் இருமுறை கவிமணி அவர்களுக்குப் பொன்னாடை போர்த்தப் பெற்றிருக்கிறது. திருவாவடுதுறை ஆதினத்துத் தலைவரால் ஒரு முறையும் தமிழ் நாட்டு அன்பர்களின் சார்பாக டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியார் அவர்களால் ஒரு முறையும் இச்சிறப்புச் செய்யப்பெற்றது. இந்த இரு நிகழ்ச்சிகளும் கவிமணியின் உடல் நிலை குன்றியதால் நாகர்கோவிலிலேயே நடைபெற்றன.

1943 மே 12-இல் ஆத்தன்குடி நா. அரு. மண்டபத்தில் நகரத்தாரின் பாராட்டுக் கூட்டம் நடை பெற்றது. பெருந்திரளான மக்கள் குழுமியிருந்தனர். இராசா சர் அண்ணாமலைச் செட்டியார், புராதன முறைப்படி அழகிய வேலைப்பாடுகளமைந்தபொன்னாடைஒன்றைப்போர்த்தினார்கள். அதோடு வெள்ளியில் நேர்த்தியான சித்திர வேலைப்பாட்டுடனே கீழ்க்கண்ட பாராட்டுரை பொறிக்கப்பட்டு, நாற்புறமும் தங்கம் பொதித்த உருவங்களையுடைய புகழ் மொழியிதழ் அமைந்த பேழையையும் அளித்து மாலையணிவித்தார்கள்.

"கவிஞர் சி. தேசிகவிநாயகம்பிள்ளை அவர்களுக்கு தமிழ் நாட்டிலே தமிழராய் பிறந்த காரணத்தால் உலகத்தில் எந்தத் தூர தேசத்துக்குப் போனாலும் தமிழையும் தமிழ்ப் பண்பாட்டையும் மறக்க இயல்வதில்லை.

ஆங்கிலம் முதல் சீனம் ஈறாகவுள்ள மொழிகள் எத்தனையோ எங்கள் காதில் விழலாம். விழுந்தாலும் தாய் மொழியாகிய தமிழ்மொழி ஒன்றே எங்கள் செவிக்கு இனிமை பயப்பது.

கவி என்றாலும் தமிழ்க்கவியே எங்கள் இதயத்தைக் கொள்ளை கொள்வது; இந்த மனப்பாங்கு கொண்டே தமிழ் உலகுக்குத் தாங்கள் அழியாச் செல்வமாக அளித்துள்ள தேனினும் இனிய பாடல்களைப் பாடி வருகிறோம்.

பாடப்பாட எங்களுக்கு இதயம் உருகுகிறது. உணர்ச்சி வெள்ளம் ததும்புகிறது. இவ்வாறு கவிஞர் அளிக்கும் உதவிக்குக் கைம்மாறும் உலகத்தில் உண்டோ?

இது எங்கள் அன்பையும் மகிழ்ச்சியையும் தெரிவிக்கும் ஓர் அறிகுறியாகும்.

சித்திரபானு, பங்குனி ௬ } தங்கள் அன்புள்ள
நாட்டுக்கோட்டை நகரத்தார்.

இப்பாராட்டிதழ் நாஞ்சில் நாட்டிலுள்ள தேரூரில் கவிமணி நிலையத்தில் காட்சியில் வைக்கப் பெற்றிருக்கிறது.

இப்பாராட்டு விழா ஜப்பானுடன் போர் நடைபெற்றுக் கொண்டிருந்தபோது நிகழ்ந்தது. எனவே, நூல் விலை ஏற்றமாக இருந்ததைக் குறிப்பிடும் வகையில் கவிமணி அவர்கள் மறுமொழியில் கூறியது சுவையாக இருந்தது;

"நூல்விலை அதிகத்துக்குப்பொன் என்றால் காகிதவிலை அதிகப் பட்டதற்காக வெள்ளியிதழ், பஞ்சமேற்பட்டால் தன வணிகர்களுக்கு நூல் பொன்னாகவும் தாள் வெள்ளியாகவும் மாறிவிடும் போலும்".

இராசர் சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் கவிமணியிடம் பேரன்புடையவர்களாக இருந்தார்கள். அன்புக் காணிக்கையாகக் கொடுத்த தொகையைக் கவிஞர் பெற்றுக் கொள்ளத் தயங்கியதால், அந்தத் தொகைக்கு வெள்ளிப் பாத்திரங்களை வாங்கி, தக்கார் வாயிலாக இராசா அவர்கள் அனுப்பி அதைக் கவிஞர் ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டினார்கள்.

வடசேரியிலுள்ள கவிமணி நிலையத்திற்குச் செட்டி நாட்டு அன்பர் பலர் பொருளுதவியுள்ளனர்; நூல்களும் அளித் துள்ளனர். இக்கட்டிடச் செலவுக்குப் பொருள் சேர்க்க,உதவிக் கச்சேரிகள் ஏற்பாடு செய்த குழுவின் செயலாளராகப் பணி யாற்றியவர் கோட்டையூர் சி. அ. சி. இலக்குமணச் செட்டியா ரவர்கள் ஆவர். செட்டிநாட்டிலிருந்து ஏராளமான அன்பர்கள் கவிமணியைக் காண புத்தேரிக்குச் சென்றதுண்டு.அவர்களோடு வெளிநாடுகளிலிருந்து கடிதத்தொடர்பு கொண்டிருந்த செட்டி நாட்டவர் பலர் ஆவர்.

**பாரதிதாசன்**

ஏனைய கவிஞர்களைப் போலவே, புரட்சிக் கவிஞர் பாரதிதாசனும் செட்டிநாட்டோடு நெருங்கிய தொடர்பு கொண்டவரே.

செட்டிநாட்டில் பாரதிதாசனின் இனிய நண்பர்களுள் வயி. சு. சண்முகம் செட்டியார் அவர்களே முதல்வர். சுய மரியாதை இயக்கத்தில் ஈடுபட்ட "வயி. சு" பாரதிதாசனுக்குப் பலஆண்டுகளாக மிகுந்த ஆதரவுகாட்டி வந்திருக்கின்றார். சம தர்மம் இராம. சுப்பையா அவர்களும் பாரதிதாசனின் நெருங்கிய நண்பருள் ஒருவர்.

1943 தொடக்கத்தில் ஆவினிப் பட்டி விவேகானந்தர் கல்விக் கழகத்தின் ஆண்டு விழாவுக்குப் பாரதிதாசன் வந்திருந் தார். அப்போது ஆத்தன்குடி அரு. பெரியண்ணன், கோனா பட்டு முருகு சுப்பிரமணியன் ஆகிய இளைஞர்க்கு இவருடன் தொடர்பு ஏற்பட்டது. அதன் பயனாக இவ் விருவரும் விவேகா னந்தர் கல்விக் கழகத்தின் தலைவர் அ.பழ. பழநியப்பச்செட்டி யாருடன் சேர்ந்து முத்தமிழ் நிலையத்தைத் தொடங்கினர். இந்த நிலையத்தின் வாயிலாகவே, பாரதிதாசனின் "இசையமுது", "இருண்டவீடு" முதலிய நூல்கள் வெளியாயின.

1943-ஆம் ஆண்டின் இறுதியில் முல்லை முத்தையா அவர் களுக்கும் பாரி நிலையத்தின் உரிமையாளர் க. அ. செல்லப்பன் அவர்களுக்கும் பாரதிதாசனை, திருப்பத்தூர் நண்பர் ப. நூர் முகமது அவர்கள் அறிமுகப்படுத்தினார். அப்பொழுது அழகின் சிரிப்பு என்னும் நூலை வெளியிடுமாறு கவிஞர், அவர்களிடம்

கொடுத்தார். அழகின் சிரிப்புக்கு உரிய பொருளை, செல்லப்பர் வயி. சு. அவர்களிடம் அளித்தார். அந்தத் தொகை, கவிஞரின் மூத்த மகளாரின் திருமணத்திற்குப் பயன்பட்டது. 1944—இல் பாரதிதாசனுடைய நூல்களை வெளியிடுவதற்காகவே முல்லை பதிப்பகத்தைத் தேவகோட்டைத் திருநாவுக்கரசு செட்டியார் அவர்களின் கூட்டுறவுடன் திரு. முல்லை முத்தையா சென்னையில் தொடங்கினார். புதுவையில் கவிஞர் பாரதிதாசன் வாழ்ந்த வீடு முல்லைப் பதிப்பகத்தார் வாயிலாக வாங்கப் பெற்றதே. "முல்லை" என்னும் இலக்கிய இதழை, பாவேந்தர் விரும்பியவாறு திரு. பி. எல். முத்தையா தொடங்கினார். அதைத் தொடர்ந்து பாவேந்தர் இவர் பெயரை முல்லை முத்தையா ஆக்கினார். முல்லை முத்தையா ஒவ்வொரு திங்களிலும் 'கவிஞர் வாழ்க்கையிலே' என்ற தலைப்பில் அவர் வாழ்வின் ஒரு நிகழ்ச்சியைச் சித்திரித்தார். "புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் வாழ்க்கையிலே" என்ற வரலாற்று நூல் ஒன்றையும் முல்லை முத்தையா ஆக்கியுள்ளார். பாவேந்தர் பாரதிதாசன் பெருமை, பார் புகழும் பாரதிதாசன் என்ற நூல்களையும் திரு. முல்லை முத்தையா இயற்றினார். பாரதிதாசன் வீட்டிலிருந்த பழந் தாள்கள் அனைத்தையும் பார்த்துப் பொறுக்கி, "காதல் நினைவுகள்" என்னும் நூலை, திரு. முல்லை முத்தையா வெளியிட்டிருக்கிறார்.

காந்தியடிகளின் 70-ஆவது பிறந்த நாள் விழாவில் டாக்டர் இராதாகிருஷ்ணன் பதிப்பித்து வெளியிட்ட நூலை முன்மாதிரியாகக் கொண்டு, அதுபோன்ற ஒரு நூலைப் பாரதிதாசனைப் பற்றித் திரு. முல்லை முத்தையா 1946-இல் உருவாக்கினார். அதன் விளைவாக மாறுபட்ட அரசியற் கொள்கையுடையவர்களிடமும் பாரதிதாசனைப் பற்றித் தெரிவிக்கும் வாய்ப்பும், பாரதிதாசனைப்பற்றி அவர்களுடைய கருத்துக்களைத் தமிழ் மக்களுக்கு அறிவிக்கும் பேறும் ஏற்பட்டன. சோமசுந்தர பாரதியார், மறைமலையடிகள், திரு. வி. க ஆகிய பேரறிஞர்களுடன் பாரதிதாசனுக்குத் தொடர்பு ஏற்படுத்தியவர் முல்லை முத்தையா தான்.

1946-இல் சென்னையில் சர்வ கட்சி மாநாடு ஒன்றைக் கூட்டி, பாரதிதாசனுக்கு நிதி கொடுக்க ஆக்கம் தேடியவரும் இவரே. அப்போது பாரதிதாசனுடைய நூல்களை அறிஞர் பலர்க்கு அனுப்பி நாடெங்கும் அவரை முல்லை முத்தையா

அறிமுகப்படுத்தினார். 18-2-1946-இல் அவர்களுக்குப் பேராசிரியர் நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் எழுதியது பின்வரும் கடிதம்.

பசுமலை
18-2-'46

தமிழ்வாணர் திரு. முத்தையா அவர்கட்கு,

முல்லைப் பதிப்பகம், சென்னை.

அன்புடையீர்,

நலம். தாமனுப்பிய கவி பாரதிதாசன் இயற்றிய செய்யுட் புத்தகங்கள் வந்தன; புத்துவகை தந்தன; "குடும்ப விளக்கு" முதற்பகுதி உதவுக. இதுவரை இவர் கவிகளைப் படித்து மகிழாமைக்கு மிகவும் வருந்துகிறேன். எல்லாம் நல்லனவாயினும், "அழகின் சிரிப்பு" என்னை அவருக்கு ஆளாக்கிவிட்டது.

மாடப் புறாவும் மடக்கிளையும் மானும் வானும்
ஏடவிழ்பூ யாறோ டிருமலையும் -ஆடலையும்
பாரதிரத் தம் கதையைப் பண்கனியப் பாடவிடும்
பாரதிதாசன் புலமைப் பண்பு.

அன்பன்
**ச. சோ. பாரதி**

பாவேந்தர் நூல்களை முதன் முதலில் அழகாகப் பதிப்பித்து வெளியிட்டதற்காக 1979-இல் தமிழக அரசு நடத்திய பாவேந்தர்விழாவில் கல்விஅமைச்சர் மாண்புமிகு அரங்கநாயகம் தமிழக அரசின் சார்பில் திரு. முல்லை முத்தையாவுக்குப் பட்டாடை அணிவித்து, ஆயிரம் வெண்பொற்காசுகளையும் விருதினையும் வழங்கினார்.

திராவிடக் கழகத்தார் நடத்திய பாரதிதாசன்விழாவில் 1981-இல் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி, பின்வருமாறு இவரைப் பாராட்டினார்.

"அவர் பேரறிஞர் அண்ணா அவர்களிடத்தும், பெரியார் அவர்களிடத்திலும், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களிடத்திலும் கொண்டிருந்த அன்பும், இன்னமும் கொண்

டிருக்கிற கொள்கைப்பிடிப்பும் என்னை வியப்பில் ஆழ்த்திக் கொண்டேயிருக்கிறது. அப்படிப்பட்ட நண்பரை 38 ஆண்டுகளுக்குப் பிறகு சந்தித்ததில் நான் பெருமகிழ்ச்சியடைகிறேன்.''

கோனாபட்டு முருகு சுப்பிரமணியம், ஆத்தன்குடி அரு. பெரியண்ணன் ஆகியோர் புதுக்கோட்டையிலிருந்து நடத்திய ''பொன்னி'' என்னும் இதழ் பாரதிதாசனுக்காகவே தோன்றியது என்று சொல்லலாம். ''பொன்னி'' பாரதிதாசனுடைய மணிவிழாவை ஒட்டி, ''மணிமலர்'' ஒன்றை வெளியிட்டதையும் தமிழன்பர்கள் அறிவார்கள். ''பொன்னி'' வாயிலாகப் பாரதிதாசன் பரம்பரை என்று சொல்லத்தக்க சில இளங்கவிஞர்கள் செட்டிநாட்டில் தோன்றினார்கள்; அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்,

1. மு. அண்ணாமலை
2. வே. அண்ணாமலை
3. சாமி. பழனியப்பன்
4. கதி. சுந்தரம்.
5. இராம. வே. சேதுராமன்
6. நாக. முத்தையா
7. நாரா. நாச்சியப்பன்
8. முடியரசன்
9. புதுவயல் பெரி. சிவனடியான்
10. அரிமளம் பெ. நாகப்பன்

பாரதிதாசனுடைய நூல்களை வெளியிடும் உரிமையை முல்லைப்பதிப்பகத்தாரிடமிருந்து இராமச் சந்திரபுரம் செந்தமிழ் நிலையத்தார் பெற்று, அப்பணியைச்சிறப்புறச் செய்து வருகின்றனர். பாரதிதாசன் நூல்களை வெளியிடுவதோடு, அவரை வேறு பல நூல்களை எழுதத் தூண்டியவர் சென்னை வள்ளுவர் பண்ணையின் உரிமையாளர் கொப்பனாபட்டி ந. பழனியப்பன் அவர்கள்.

நாமக்கல் கவிஞர்

செட்டிநாட்டுக்குக் கடமைப்பட்ட மற்றொரு கவிஞர் நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை அவர்கள்.

சித்திரம் வரைவதைத் தொழிலாகக் கொண்டிருந்த நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை சில ''ஆர்டர்கள்'' வாங்குவதற்காகக் கானாடுகாத்தானுக்கு வந்திருந்தார். அப்போது தான், கவியரசர் சுப்பிரமணிய பாரதியாரை அவர் சந்திக்க நேர்ந்தது. அதைப் பற்றி இராமலிங்கம் பிள்ளை அவர்களே சொல்லுவதாவது:

''ஊருக்கு அரைமைல்தூரத்தில் ஒரு கிராமதேவதையின் கோயில். அங்கே ஒரு மரத்தின் அடியில் பாரதியாரும் அவருடைய நண்பர்களும் உட்கார்ந்துகொண்டு களித்துச் சிரித்துக் கலகலப்பாகப் பேசிக்கொண்டிருந்தனர். கையெழுத்து மறைந்த நேரம். வெளிச்சம் குறைவான இடத்தில் உட்கார்ந்திருந்ததால் முகத்தை நன்றாகப் பார்க்க முடியவில்லை. ஆனாலும் பலமுறை கேள்விப்பட்டிருந்த எனக்கு பாரதியாருடைய படம் ஒன்று என் மனதில் பதிவாகியிருந்தது. முண்டாசுக்கட்டைக் கண்டவுடனேயே பாரதியாரை அறிந்து கொண்டேன். ...— வேங்கடகிருஷ்ணையர் தாம் காரைக்குடிக்கே வந்திருக்கும் வரலாற்றைச் சுருக்கமாகச்சொல்லிவிட்டு ''இவர் ராமலிங்கம் பிள்ளை. நல்ல ஆர்ட்டிஸ்ட், உங்களைப் பார்க்க வேண்டுமென்று' ..என்று முடிக்குமுன் பாரதியார், ''ஓ! ஓவியக் கலைஞரா? வருக! கலைஞரே! தமிழ்நாட்டின் அழகே கலையழகுதான். பிள்ளைவாள் நீர் நம்மை ஓவியத்தில் தீட்டும் நாம் உம்மைக் காவியத்தில் தீட்டுவோம்'' என்று சொல்லிவிட்டு கலகலவென்று சிரித்தார்.... ... பேசிக்கொண்டே அவர் தங்கியிருந்த ஜாகைக்குப் போனோம். அங்கே பாரதியாரைப் பார்க்கப் பலபேர் வந்திருந்தார்கள். அத்தனை பேருக்கும் அங்கே விருந்து நடந்தது. உணவுக்குப்பின்வெகுநேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு ......அங்கே படுத்துக்கொண்டோம். மறுநாள் விடியுமுன் புறப்பட்டு பாரதியாரவர்கள் திருமெய்யம் சென்று, அங்கிருந்து திருச்சிராப்பள்ளிக்கு மோட்டாரில் பிரயாணம் செய்து அங்கு இருந்து ரயிலில் சென்னைக்குச் செல்ல வேண்டியவர்.''

—"என் கதை'

இந்தச் சந்திப்பில் நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை ஒரு பாடலைப் பாரதியாரிடம் பாடிக் காட்டினார். ''பாண்டியா

நீ ஒரு புலவனடா'' என்று சொல்லிப் பாரதியார் பாராட்டினார். இந்நிகழ்ச்சியே நாமக்கல் கவிஞருக்குப் புத்துணர்ச்சி ஊட்டிற்று.

பிற்காலத்தில், இராமலிங்கம் பிள்ளைக்குத் தேவகோட்டை திருநாவுக்கரசு செட்டியார் அவர்கள் பொருளுதவி செய்த விவரங்களையும், கவிஞர் ''என் கதை''யில் குறிப்பிட்டுள்ளார். பள்ளத்தூர் மு. அ. குடும்பத்தாரும் கவிஞரோடு நெருங்கிய தொடர்பு கொண்டு, அவரைப் பெரிதும் ஆதரித்து வந்திருக்கிறார்கள்.

நாமக்கல் கவிஞரின் பாடல்களை உணர்ச்சியுடன் பல மேடைகளில் பாடி, அவருடைய புகழைத் தமிழகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் பரப்பிய சின்ன அண்ணாமலை அவர்களை மறந்து நாமக்கல் கவிஞரை நினைப்பதற்கில்லை. '(யார் எவர்?') என்ற பகுதியில் திரு சின்ன அண்ணாமலையைப் பற்றிய குறிப்பைக் காண்க.)

'கவிஞர் களஞ்சியம்' என்ற வெளியீட்டைத் திருவாளர் முல்லை முத்தையா பிரசுரித்திருக்கிறார். கவிஞரின் நூல்களைத் தமிழ்ப்பண்ணை, இன்ப நிலையம், பழநியப்பா பிரதர்ஸ், தமிழ்ப் புத்தகப்பண்ணை ஆகிய நிலையங்கள் வாயிலாகச் செட்டிநாட்டன்பர்கள் வெளியிட்டிருக்கின்றனர்.

நாமக்கல் கவிஞர் புகழை மேடைதொறும் பரப்பியவர் சின்ன அண்ணாமலை. இவருடைய நாவாற்றலே அவருக்கு வாய்த்த பெரும் பேறு எனலாம். கம்பீரமான குரல், வீரமான பேச்சு. நகைச்சுவைத்துணுக்குகளுடன் சிங்கநாதம் முழங்கியவர் சின்ன அண்ணாமலை. அவருக்கு என்று ஒரு பாணி இருந்தது.

**''கேட்குது''**

என்னும் சொல்லைக் கணீர் என்று ஒலிப்பார். பிறகு நிறுத்தி சுற்றிலும் பார்ப்பார். திரளான கூட்டத்தில் ஒரு''சஸ்பென்ஸ்'' என்ன கேட்குது, ஒன்றும் கேட்கவில்லையே? பிறகு.

**'சங்கநாதம் கேட்குது'**

என்பார் சின்ன அண்ணாமலை. மீண்டும் அமைதி.

சத்தியத்தில் சங்கநாதம் கேட்குது

பிறகு இரண்டு மணித்துளிகள் கழித்து,

சாந்தகாந்தி சத்தியத்தில் சங்கநாதம் கேட்குது

இவ்வாறு கூட்டத்தினரிடம் ஓர் உற்சாகத்தை உண்டாக்கிய சூழ்நிலையில் முழுப்பாடலையும் பாடிக் காண்பிப்பார்.

கு. மதுரை முதலியார்

இவர் சென்னை லயோலா கல்லூரியில் தமிழாசிரியராகவும், சிங்கப்பூரில் "முன்னேற்றம்" என்னும் இதழின் ஆசிரியராகவும் இருந்தவர். பல ஆண்டுகள் தமிழ்க்கலைக் களஞ்சிய அலுவலகத்தில் பணியாற்றியவர்.

இவர் மலேயாவிலும் சென்னையிலும் நகரத்தார் அன்பர் சிலர்க்குத் தமிழ் வகுப்புகள் நடத்திக்கொண்டிருந்தார். "வை. கோ." அவர்கள் இப்புலவரை இராயவரத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கு இவர் காந்தி பாடசாலையில் தமிழாசிரியராகப் பணியாற்றினார். இராயவரத்திலும் அரிமளத்திலும் இவர் பல ஆண்டுகள் தமிழ் வகுப்புகள் நடத்தினார். இவரிடம் கல்வி பயின்றவர்களுள் பழநியப்பா பிரதர்ஸ் உரிமையாளர் செ. மெ. பழநியப்பச் செட்டியார், பாரி நிலையத்தின் உரிமையாளர் க. அ. செல்லப்பன், ஈரோடு சர்வஜன உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் புலவர் கரு. காசி ஆகியோர் குறிப்பிடத்தக்கவர். இவரது தமிழ்ப்பணியைப் பாராட்டி அரிமளத்திலுள்ள அன்பர்கள் பணமுடிப்பு அளித்தனர்.

# 17. புலவர்கள்

கணியன் பூங்குன்றன் காலம் முதல் கண்ணதாசன் காலமாகிய இன்றுவரை செட்டிநாட்டில் வேளாண்மைப் பயிர் வாடினாலும் தமிழ்ப் பயிர் வாடாது, தண்ணீர் விட்டு அதை வளர்த்த புலவர்கள் வாழையடி வாழையாக வாழ்ந்து வந்திருக்கின்றனர்.

18,19,20 ஆம் நூற்றாண்டுகளில் இப்பகுதியில் சிறப்புடன் நிலவிய புலவர் சிலரைப் பற்றிய தகவல்களை இக் கட்டுரையில் இயம்புவோம்.

## சம்பந்த முனிவர்

கோட்டையூர் அழகாபுரி ஊரினர்; நகரத்தவர். 17- ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர். திருவாரூர்ப் புராணம் பாடியிருக்கின்றார்.

## வெண்பாப் புலிக் கவிராயர்

வெண்பாப் புலிக் கவிராயரும் 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரே. அவருடைய வழித்தோன்றல்கள், இன்றும் செவ்வூரிலும் மிதிலைப்பட்டியிலும் இருக்கின்றனர். இவர் வசைபாடுதலில் வல்லவர். கருத்தான்என்பவர் நண்டுக்கறியைத் தின்பதில் அவா மிக்குடையவராம். அவர் புலால் உண்பதை விட்டுவிட்டதாகக் கேள்விப்பட்டு வெண்பாப் புலிக் கவிராயர் பின்வருமாறு பாடினாராம்.

> "வண்டுவந்தாற் றெரியும் மலர்வாசம் வழிநடத்திக்
> கொண்டுவந்தாற் றெறியும் பரிவேகங் குணத்துடனே
> கண்டுவந்தாற் றெரியும் பிறர்வாஞ்சை கறிக்குதவு
> நண்டுவந்தாற் றெரியும் கருத்தானுடைய நாநயமே"

## வன்றொண்டர்

வன்றொண்டரின் இயற்பெயர் நாராயணன் செட்டியார் என்பது. சைவரான இவர் கண்ணில்லாமல் இருந்தும் இறைவன் உயர்கல்வி கொடுத்து இவரை ஆட்கொண்டதால், திருவாவடு

துறை ஆதீனத் தலைவர் சுப்பிரமணியதேசிகர் "வன்றொண்டர்" என்ற பட்டம் கொடுத்து இவரைச் சிறப்பித்தார். இவர் சிவஞான போத லகு வசனம் என்னும் நூலை எழுதியிருக்கிறார்.

வன்றொண்டரும் சுப்பிரமணியதேசிகரும் ஒன்றாக ஒரே ஆசிரியரிடத்தில் பாடங் கேட்டனராம். இடையில் வன்றொண்டர் தம் கல்வியை விட்டுவிட நேர்ந்தது. இதைக் குறிப்பிட்டு, "நான் குறையப் படித்திருந்தாலும் கூடப் படித்தவன்" என்று சிலேடை நயம்பட வன்றொண்டர் சொன்னாராம்.

வன்றொண்டரைப் பற்றி டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் "என் சரித்திரம்" என்னும் நூலில் 1950- ஆம் ஆண்டுப் பதிப்பில் 489-ஆம் பக்கத்தில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்.

"வன்றொண்டரென்பவர் தன வைசிய வகுப்பினர். கண்பார்வை யில்லாதவர். தீவிரமான சிவபக்தியும் கடினமான நியமானுஷ்டானங்களும் உடையவர். தமிழ் வித்துவான். சிறந்த ஞாபக சக்தியுள்ளவர். பிள்ளையவர்களிடத்திலும், ஆறுமுக நாவலரிடத்திலும் பாடம் கேட்டவர். எதையும் ஆழ்ந்து படித்துத் தெளிவாகத் தெரிந்து கொள்ளும் இயல்புடையவர். பிள்ளையவர்களிடத்தில் அவருக்குப் பெருமதிப்பு இருந்தது".

வேம்பத்தூர் பிச்சுவையர், சிலேடைப்புலி சதாவதானம் சுப்பிரமணிய ஐயர், சொக்கலிங்க ஐயா, சின்னையச் செட்டியார் ஆகியோர் வன்றொண்டரிடம் கல்வி கற்றவருள் சிலர் ஆவர்.

சொக்கலிங்க ஐயா 1855–1930)

இவர்கள் காரைக்குடியைச்சேர்ந்தவர்கள்.யாழ்ப்பாணத்தில் இவர்களுக்கு வியாபாரம் நடந்து வந்தது.எனவே இவர்கள் குடும்பத்துக்கு "யாழ்ப்பாணத்தார் வீடு" என்ற பெயர் வழங்கிவருகிறது. யாழ்ப்பாணத்தில் தமிழ்ப்புலவர்களாயிருந்த சுப்பையாபிள்ளை, சுவாமிநாத பண்டிதர் ஆகியவர்களிடத்திலும், தேவகோட்டையில் வன்றொண்டரிடமும் இவர் கல்வி கற்றார். இவர்சிறந்த கலைவாணர். சைவ நூல்களை நன்றாகப்

படித்து உணர்ந்தவர். இவருடைய முயற்சியால் 1923-இல் சிதம்பரத்தில் ஒரு தமிழ்க்கலாசாலை தொடங்கப் பெற்றது. இதுவே இப்போது மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலையாக இருந்து வருகிறது. இந்நிலையத்திற்குச் செட்டியார் அன்பர் பலர் பொருளுதவி செய்திருக்கின்றனர்.

பண்டிதமணி அவர்களுக்குச் சொக்கலிங்க ஐயாவிடம் பெருமதிப்பு இருந்தது. அவரிடம் தாம் பாடம் கேட்க விரும்புவதாகத் தெரிவித்தார். அதற்குச் சொக்கலிங்க ஐயா எழுதிய மறுமொழியில், 'என்பாலும் நூல் சில கேட்க எண்ணியது அன்பாலும் ஆதலால் அதை மறுத்திலேன்'' என்று குறிப்பிட்டிருந்தார்.

அந்தாதி, பிள்ளைத்தமிழ், மாலை, கோவை, உலாசம், நாமாவளிக்கண்ணி, சிலேடை என்னும் சிறு காப்பிய வகைகட்குரிய இலக்கியங்கள் பலவற்றை, சொக்கலிங்க ஐயா இயற்றியுள்ளார். இவர் புராண காவியங்கள் சிலவும் செய்யுள் நூல்கள் 49-ம் உரைநடை நூல்கள் 14-ம் ஆக்கியுள்ளார். கா. சுப்பிரமணியப்பிள்ளை அவர்கள், இலக்கியவரலாறு என்னும் நூலில் இவரைச் சிறப்பித்துள்ளார்.

## மகாவித்துவான் வயிநாகரம் அ. இராமநாதச் செட்டியார் (1885—1944)

மதுரைஅருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் முதலிய 14 கோயில்களின் திருப்பணியாளர்களான அமராவதி புதூரில்பரம்பரையாக புகழ் படைத்த வயிநாகரம் குடும்பத்தில் இவர் தோன்றினார். சைவநூல்களையும் தமிழ் இலக்கியஇலக்கணங்களையும் நன்கு பயின்றார். இவர் தருமபுர ஆதீன வித்துவசிரோமணி எனப் பாராட்டப்பெற்றார்.

இவர் இயற்றிய நூல்களாவன: மதுரை யமக அந்தாதி, மயூரகிரிக் கலம்பகம், நாட்டரசன் கோட்டைக் கண்ணுடையம்மன் பதிகம், கொன்னையூர் மாரியம்மன் பதிகம், அரியக்குடி வாகனக்கவி, திருப்பரங்கிரி மும்மணிக்கோவை.

இவர் பாடிய அருமையான தனிப்பாடல்கள் சிலவற்றை, சொ. முருகப்பா அவர்கள் ''கவிதை மலர்'' என்னும் பெயரில் தொகுத்து வெளியிட்டிருக்கிறார். இப்பாடல்கள் மகாவித்துவானது புலமைக்குச் சான்றாக மிளிர்கின்றன. பலவகை நீதி

நெறிகளை விளக்குவது, இப்பாடல்களின் பிறிதொரு சிறப்பாகும். இவர் விரும்பி முயன்று தொகுத்து வைத்திருந்த குறிப்புக் களைக் கொண்டே நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு வெளிவந்திருக்கிறது.

இந்த நூல்; 1953 - இல் திருத்தம் செய்யப் பெற்றுப் புதிய தகவல்களுடனும் பண்டிதமணி அவர்களின் விரிவான பதிப்புரையுடனும், மேயர் ஆர். இராமநாதன் செட்டியார் அவர்களால் வெளியிடப் பெற்றது.

இவருடைய பாடல்கள் சிலவற்றை இங்கே தரலாம். முதற்பாட்டு இவர் பண்டிதமணி அவர்களுடைய அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவுக்கு வர இயலாமை குறித்து அனுப்பிய தாகும்.

"வஞ்சமில்லை கோபமில்லை பொறாமையில்லை
வெறுப்புமில்லை வருவதற்காவல்
கொஞ்சமில்லை* மேகவா கனமுடையார்க்
கென்னையங்கு கூட்டிக்காட்டும்
நெஞ்சமில்லை சமீபமில்லை கால்நடக்க
முடியவில்லை நெடும்பாட்டுக்குப்
பஞ்சமில்லை யென்றாலும் மணியேமன்
னிப்பெனக்குப் பண்ணுவாயே."

தருமபுரம் மடாதிபதிக்கு இவர் எழுதிய சீட்டுக்கவியில் தம் குடும்பத்தாரின் அறச்செயல்களைப் பற்றிக் கூறியதும் குறிப்பிடத்தக்கது.

"துஞ்சாத புகழ்மதுரை மீனாட்சி
இறைசோம சுந்த ரேசர்க்கு
எஞ்சாத திருப்பணியைக் காற்கோடி
பொருட்செலவில் இயற்றி உள்ளோம்;

---

* மேக வாகனம்-மோட்டார்க் கார்

அஞ்சாத படியிருபத் தெட்டாண்டு
கமிட்டியினில் அரசு செய்தேன்;
*செஞ்சாலி வயல் அமரா வதிபுத்தூ
ரினிற் பிறந்து சிறந்துள் ளேனால்

பிறிதொரு பாட்டு சொ. முருகப்பா அவர்கள் தண்ணீர்க் கூசாவை மறந்துவிட்டுச் சென்றபோது பாடியது:

கூசாது பேரறங்கள் செழுந்தமிழில்
எடுத்துரைக்கும் குணத்தின் மிக்காய்
நீசாது போல்எழுந்து ஷென்னல்விடி
காலையிலே நீங்கிச் சென்றாய்!
பேசாது போவதுண்டோ? முருகப்ப
நன்மணியே பேச்சு வல்லாய்!
கூசாதுப் புரவாக விளக்கியிங்கே
வைத்துள்ளோம் கொடுப்போம் என்றே.

## வீ. ர. லெ. சின்னையச் செட்டியார் (1855—1900)

இவர் தேவகோட்டையைச் சேர்ந்தவர்; மேலவீட்டுச் சின்னைய செட்டியார் என்று அழைக்கப்பட்டவர் வித்துவசிகாமணி; சிறந்த தமிழ்ப்புலவர்; மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் தலைவராயிருந்த பாண்டித்துரைத் தேவரின் இனிய நண்பர், சொக்கலிங்க ஐயாவுடன் படித்தவர். வன்றொண்டர், யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் ஆகியோரின் மாணவர்.

சேது சமஸ்தான மகாவித்துவான் ரா. ராகவ ஐயங்கார் அவர்கள் 1906 முதல் 1911 வரை தேவகோட்டையில் பெரிய மைனர் அருணாசலம் செட்டியாருக்குத் தேவாரம் திருவாசகம் முதலியன சொல்லிக்கொடுத்துக் கொண்டிருந்தார்கள். அக்காலத்திலேயே பெரும் புகழ் பெற்றிருந்த சின்னையச் செட்டியார் அவர்கள் கொடுத்திருந்த சான்றிதழ் ஒன்றினாலேயே இராகவ ஐயங்கார் அவர்கள் தேவகோட்டையில் பணி

---

* செஞ்சாலி—சம்பாநெல்
நீ சாதுபோல்—சாதுவைப் போல நீ
கூசா— உன்னுடைய கூசாச் செம்பு
துப்புரவாக—சுத்தமாக

யாற்றும் வாய்ப்பு ஏற்பட்டது இராகவ ஐயங்கார் அவர்கள், சின்னையச் செட்டியார் அவர்கள் சான்றிதழையும், பூண்டி அரங்கநாத முதலியார் அவர்களுடைய சான்றிதழையும் தான் பெரிதும் மதித்துத் தம் இறுதிக் காலம் வரை பேணி வைத்திருந்தார்கள்.

சின்னையச் செட்டியார் எழுதிய தேவைத் திரிபந்தாதி என்னும் நூலை ரா. இராகவ ஐயங்கார் அவர்கள் பாடஞ் சொல்ல, திருவாங்கூர்ப் பல்கலைக்கழகத்துப் பேராசிரியரா யிருந்த மு. இராகவ ஐயங்கார் அவர்கள் பாடங்கேட்டிருக் கிறார்கள். என்றால், அதிலிருந்தே சின்னையச் செட்டியார் அவர்கள் எத்தகைய பெரும்புலவர் என்பதை ஓரளவு உணர லாம். அவர்கள் பிரபஞ்சபந்தகம் என்னும் பாடலையும் இயற்றி யுள்ளார். அவர்களுடைய பிரபந்தங்களில் பல, சங்ககால காப் பியங்களைப் போன்ற நயமுள்ளவை. கல்வெட்டுக்களையும் துளாவூர் மடத்துச் செப்பேடுகளையும் ஆதாரமாகக் கொண்டு இவர் நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் சரித்திரம் ஒன்றை எழுதியுள்ளார்.

இவர் இயற்றிய பிற நூல்கள் வருமாறு

1. குன்றக்குடிப் பிள்ளைத்தமிழ்.
2. திருவொற்றியூர்ப் புராணம்.
3. தேவைத் திரிபந்தாதி.
4. சிலம்பைப் பதிற்றுப் பத்தந்தாதி.
5. மயின்மலைப் பிள்ளைத்தமிழ்.
6. மதுரை மீனாட்சியம்மை பதிகம்.
7. காசியமக வந்தாதி
8. அருணைச் சிலேடை வெண்பாமாலை

பாண்டித்துரை அவர்கள் 'பன்னூற்றிரட்டு' என்னும் நூலை அச்சிட்டுள்ளார். இது, சொற்பொழிவாளர்களுக்குப் பயன்படும் தொகுப்புநூல். இதற்குச் சின்னையச் செட்டியார் அவர்கள் சாற்றுக் கவி கொடுத்திருக்கிறார்.

அருட்கவி சோம சுந்தரம் செட்டியார்

இவர் 1880 அளவில் கோட்டையூரில் வடக்கு வளவு பெ. அ. க. சிதம்பரம் செட்டியார் மகனாகத் தோன்றியவர்,

# 25. பயண இலக்கியம்

தமிழ் உரை நடை இருபதாம் நூற்றாண்டில் பல்கிப் பெருகியிருக்கிறது. இந்நூற்றாண்டின் பிற்பகுதியில் இது பல கிளைகளாகப் பிரிந்து ஒவ்வொரு கிளையும் தனித்த பெரிய ஆலமரமாக வளர்ச்சிபெற்று வருகின்றது. இவ்வகையில் குறிப்பிடத்தக்கது பயண இலக்கியம்.

பயண இலக்கிய வளர்ச்சியில் செட்டி நாட்டின் பங்கு பெரிது.

தமிழில் 19 ஆம் நூற்றாண்டிலேயே பயணக் கட்டுரைகள் வெளிவந்திருக்கின்றன, அவற்றையெல்லாம் உலகம் சுற்றிய தமிழர் ஏ.கே. செட்டியார் தொகுத்து நூலாக்கியுள்ளார். ஆனால் இவை பெரும்பாலும் பக்தி இலக்கியங்களே—அதாவது யாத்திரை நூல்களே. இவற்றை எழுதியவர்கள் நிறைந்த பொது அறிவோ மொழிப் புலமையோ பெற்றிருந்தனர் என்று சொல்ல இயலாது.

பயணக் கட்டுரை என்று இக்காலத்தவர் ஏற்றுக் கொள்ளக்கூடிய முதலாவது படைப்பைத் தமிழுக்குத் தந்தவர் முறையூர் அரு சொக்கலிங்கம் ஆவார். 'அரு சொ', 'முறைசை கிழார்' என்ற பெயர்களிலும் இவர் எழுதியிருக்கிறார். இவருடைய முதல் கட்டுரை 1930-ல் ஆனந்த விகடனில் வெளி வந்தது. இவர் எழுதிய முதலாவது பயணக் கட்டுரை "மலேயாவும் அதன் மக்களும்" என்பது. இது 1935-இல் இரங்கூனிலிருந்து ஏ.கே. செட்டியாரை ஆசிரியராகக் கொண்டு வெளியிடப்பட்ட "தனவணிகன்" இதழில் வெளியாயிற்று. இவர் 1934-இல் பர்மாவிலிருந்து மலேயாவுக்கு சென்று அந்த நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்தார். மலைப் பகுதிகளுக்குச் சென்று சக்காய் என்ற காட்டுச் சாதியாரைப் பற்றியும் ஆராய்ந்து எழுதினார். தாய்லாந்து, இந்தோசீனா, இந்தோனேசியா நாடுகளுக்குச் சென்று அவைபற்றியும் பிரயாணக் கட்டுரைகள் எழுதினார்.

### பயணக் கலைஞர்

பயண அனுபவங்களை நூலாக எழுதி, பயண இலக்கியம் என்ற புதிய துறைக்கு அடிகோலியவர், வழி

ஊனையூர்ப் பாரதியார்

சிவகங்கைக்கு அருகேயுள்ள ஊனையூரினர்; கீழச் சிவல்பட்டி பாடுவார் முத்தப்பச் செட்டியார், தாம் இயற்றிய செயங் கொண்டார் சதகத்தை அரங்கேற்றிய பொழுது உடனிருந்த இவர், 'என்ன செயங் கொண்டார் இவர்' என்ற வினா அமைத்து ஒரு வெண்பாப் பாடியிருக்கிறார்.

இராம்சாமிக் கவிராயர், அ (19 -ஆம் நூ)

மிதிலைப்பட்டி, அழகிய சிற்றம்பலக் கவிராயரின் மகன். நூல்: கருப்பண்ணசாமி சதகம். பூங்கொன்றை வேலங்குடிக் கருப்பண்ணசாமி மீது பாடப்பட்டது.

இராமசாமிப் பிள்ளை (19—ஆம் நூ)

கொத்தமங்கலம் ஊரினர். சென்னை இலக்கியச் சங்கத்தின் தலைவராகத் திகழ்ந்த தாண்டவராய முதலியார் ஆய்ந்த 'திவாகர நிகண்டு' என்ற நூலை1839-இல் பதிப்பித்தவர்.

இராமசாமிப் பிள்ளை எழுதிய நூல்கள்; நீதிசார வாக்கியம், உரைநடை (1871).

இராம. அண்ணாமலைச் செட்டியார்

இராமநாதபுர மாவட்டம் செம்பொன்மாரி ஊரினர் காலம் 19 ஆம் நூ. நெஞ்சமே என் கண்ணி, சிவமயக்கண்ணி' சதாசிவக்கண்ணி சின்மயக்கண்ணி. தலச்சிறப்பு என்னும் பகுதிகள் கொண்ட திருவருள் மாலை என்னும் நூலை இயற்றியுள்ளார். செம்பொன்மார் என்பது செம்பனூர்.

(சிவகங்கை) இராகவ முதலியார் (19-ஆம் நூ)

'காரைக்காலம்மையார் திவ்யசரித்திர கீர்த்தனை'யில் காரைக்காலம்மையாரின் வரலாறு (கலிவெண்பாவில்) கீர்த்தனங்கள், விருத்தங்கள், உரைநடை கலந்து எழுதியவர்.

அரங்கநாதச்செட்டியார்

இவர் இருபதாம் நூற்றாண்டினர். ஊர் அரியக்குடி. நூல்கள்; (1) வான்மீகி ராமாயணச் சருக்கார்த்த சங்கிரகம். (549 செய்யுட்கள்) (2)இராமாநுச தாசர்சரிதை (1000செய்யுட்கள்.

இராம அருணாசலம் செட்டியார்

காரைக்குடி ஊரினர். 20-ஆம் நூ.நூல்கள்: (1) வலைய மாநகர் மலையாண்டி விநாயகர் பதிகம். (2) திருவாரூர்த் தியாகேசர் பதிகம் (3) உய்யக்கொண்டான் சிறுவயல் பொன் னழகியம்மன் பதிகம். (4) காரைமாநகரம் கொப்புடையம்மன் பதிகம். (5) மீனாட்சியம்மன் பதிகம். (6) கொப்புடையம்மன் வருகைப் பதிகம். (7) குமரகுருபரன் பதிகம். (8) சந்தப்பாடல் கள்.

இராமசாமிஐயர்

கானாடுகாத்தா நகர் சௌந்தரநாயகி அம்மன் மும்மணி மாலையை 1918-இல் இயற்றியவர்.

இராம. உ. இராமசாமிச் செட்டியார் (1872—1938) காரைக்குடி

ஸ்ரீமத் சொக்கலிங்க ஐயா அவர்கள் சரித்திரம் எழுதி யுள்ளார்.

சிவநேசன் இராமசாமிச் செட்டியார், பலவான்குடி (1863—1953)

தஞ்சாவூருக்குச் சற்று வடக்கேயுள்ள திருத்தென்குடித் திட்டைத் திருக்கோயில் திருப்பணியாளர். திருவாசகத்தில் ஈடுபாடு கொண்டு, தம் ஊரான பலவான்குடியில் திருவாசக மடம் ஒன்றை அமைத்தவர். 'சிவநேசன்' என்னும் இதழ் ஆசிரியர். நகரத்தார் கோயில்களுள் ஒன்றாகிய வைரவன் கோயிற் புராணத்தை வசன நூலாக்கியவர். புலவர் பலர் இவர்மீது பா இயற்றி நன்கொடை பெற்றனர்.

சு. இராமசாமிநாயுடு(1907 — 1956)

சென்னை மாநகரத்து நாட்டாண்மைக்காரராக(ஷெரிப்) இருந்தவர். மேயர் பதவியேற்று, தமிழில் தொடக்கவுரை நிகழ்த்தித் தமிழை அரியாசனம் ஏற்றியவர். இனிய பேச்சாளர். சுவைமிக்க கடிதங்களை எழுதியவர்.

சென்னை மாநகரில் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கட்கு எழுப்பப்பெற்றுள்ள சிலை அமைப்புக் குழுவின் தலைவராக இருந்தவர்.

நூல்கள்; நான் கண்ட ஜப்பான், ஆஸ்திரேலியாவில் சில நாட்கள், தமிழிலக்கியம் (அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நிகழ்த்திய பொழிவு.)

இராமநாதன் செட்டியார், மு. காரைக்குடி

கந்தபுராணப் படலச் சிறப்புக் கவி பாடியவர்.

வேம்பத்தூர் பிச்சுவையர் என்ற ஏரப்பையர்

தனிப்பாடல்கள் பலவற்றைப் பாடியவர்.

நாட்டரசன்கோட்டை நா. கரு. ஐயாக்கருப்பன் செட்டியார்

நூல்கள்: குன்றக்குடி முருகக் கடவுள் பதிகம், திருப் பனசை (நாட்டரசன்கோட்டை) இராமானுச திரிதச வெண்பா

மு. இராகவ ஐயங்கார் (1878—1960)

முத்துசாமி ஐயங்கார் மகன்; அரியக்குடி ஊரினர். 1901-இல் மதுரைத் தமிழ்ச் சங்கத்துடன் நிறுவப்பெற்ற தமிழ்க் கல்லூரியில் ஆசிரியரானவர். 'செந்தமிழ்' இதழின் ஆசிரியராக வும் இருந்தார். 1912-இல் சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்ப்பேரகராதிப் பணியில் சேர்ந்தவர். 1938-இல் திருவனந்த புரத்தில் மஹாராஜா கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியப் பொறுப்பை ஏற்றார். நூல்: 'வேளிர் வரலாறு, தொல் காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி', 'சேரன் செங்குட்டுவன்' 'சாசனத்தமிழ்க்கவி சரிதம்,' 'கலிங்கத்து பரணி', 'ஆழ்வார் களின் காலநிலை'. பதிப்பிக்கப் பெற்றவை: நரிவிருத்தம் (அரும் பத உரையுடன்) (சிதம்பரப் பாட்டியல் உரையுடன்), திருக் கலம்பகம் (உரையுடன்), விக்கிரம சோழனுலா, சந்திரா லோகம், கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை.

பண்டித சித. நாராயண சாமிகள் 1902—1966

கல்லலுக்கு அடுத்த பூங்குடி என்னும் சிற்றூரில் பட்டத்தய்யா குடும்பத்தில் பிறந்தவர்கள். இளமையிலேயே துறவு பூண்டு கோனாபட்டு தமிழ்க்கலாசாலையிலும் மதுரைத் தமிழ்ச்சங்கத்திலும் பயின்று, 'பண்டிதம்' பட்டம்பெற்றவர்கள்

சிதம்பரம் பொன்னம்பலசாமிகள் மடத்தில் தலைவராக வீற்று இருந்த காரைக்குடி சிதம்பர சாமிகளிடம் வேதாந்த சாத்திரத்தைக் கற்றவர்கள். வடமொழி தருக்க நூலில் பயிற்சி பெற்றவர்கள்.

மாணாக்கர் பலரைத் தமிழ்ப் புலவர் ஆக்கியவர்கள். இலக்கண இலக்கிய ஆய்வுக்கட்டுரைகளை செந்தமிழ், தமிழ்ப் பொழில் ஏடுகளில் எழுதியவர்கள்.

உரை எழுதிய நூல்கள்; திருக்களர்ப்புராணம், திருச் சங்கிரக வினாவிடை

சுவாமிகள் 1945 முதல் திருவையாறு, அறுபத்து மூவர் மடத்தில் தலைவராக இருந்து, 1966-இல் வீடுபேறு பெற்றார்கள்.

## நூறாயிரம் பரிசு

தமிழ்ப் படைப்பிலக்கியத்துக்கு வழங்கப்பெறும் மிகப் பெரிய பரிசுகள்—பாரதீய ஞான பீடப்பரிசும் தமிழ்ப்பல்கலைக் கழகத்து இராஜராஜன் பரிசும், இவற்றை இதுவரை பெற்றிருப் பவர்கள் செட்டிநாட்டாரே.

அகிலத்து மொழிகள் பலவற்றிலும் தன்னுடைய படைப்புக்கள் வெளியிடப்பெறும் வாய்ப்புக் கிடைத்த திரு. அகிலன், பரிசுகள் பெறுவதற்கே பிறந்தவர். இவருக்குக் கிட்டாத விருதுகள் இல்லை எனலாம். பல பரிசுகளை முதன் முறையாகப் பெற்ற சிறப்புக்கும் உரியவர். ஆதலின் இந்நூலில் யார் எவர் வரிசையிலும் முதலிடம் பெறுகிறார்.

## கவியோகி சுவாமி சுத்தானந்த பாரதியார்

சிவகங்கையில் 1897-இல் பிறந்து, பல பள்ளிகளில் ஆசிரியராக இருந்து அரசியலிலும் பெரும்பங்கு கொண்ட மூதறிஞர். 1984-இல் தமிழ்ப்பல்கலைக் கழகம் இவருக்கு இராஜ ராஜன் பரிசாக ஒரு நூறாயிரம் ரூபாய் வழங்கிற்று. பரிசு பெற்ற நூல் பாரதசக்தி மகா காவியம்.

இவர் 12 ஆண்டுகள் புதுச்சேரி அரவிந்த ஆசிரமத்தில் தவம் இருந்தவர். அப்போது இவர் படைத்த மூல நூல்களும் பிரெஞ்சு முதலிய மொழிகளிலிருந்து மொழி பெயர்த்த நூல் களும் பலவாகும். இவருடைய அருமையையும் ஆற்றலையும் 1934 அளவிலேயே நகரத்தார் அனைவரும் அறிந்து இவரை எல்லாவகையாலும் ஊக்குவித்தனர்.

செட்டிநாடு இல்லாவிட்டால் இன்றைய சுத்தானந்த பாரதியார் தமிழுலகுக்கு அறிமுகமாகியிரார் என்று துணிந்து கூறலாம். அவருடைய நூல்களை வெளியிடுவதற்காகவே அன்பு நிலையம் நிறுவப் பெற்றது. விவரங்களை நூல் வெளியீடு என்னும் பகுதியில் காண்க.

சுவாமி சுத்தானந்தர், ஏழை படும்பாடு என்னும் நூலின் பதிப்புரையில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்.

> "இந்நூலின் சில பகுதிகள் இரங்கூன் தனவணிகனில் வந்தன. அவற்றைப் படித்ததும் ஆவேசத்துடன், நான் இந்த அரிய நூலை வெளியிடுகிறேன் என்று முன்வந்தார் இராயவரம் தமிழ்மணி திரு. வை. கோவிந்தன் அவர்கள் பெருஞ்செலவில் இந்நூலை வெளியிட்டுத் தமிழருக்கு உதவியிருக்கிறார். அன்பு இராமு (வை. கோ) தமிழ்நாட்டு வீர இளைஞரில் ஒருவர். சிறந்த தமிழபிமானி; தேசத் தொண்டர். சீர்திருத்தப்பிரியர். புதிய இலக்கியங்களை வெளியிடுவதில் பேரார்வங் கொண்டவர்."

சுத்தானந்த பாரதியார் புதுச்சேரி அரவிந்த ஆசிரமத்தில் பண்டிதமணி அவர்களிடம் எழுதிக் கொடுத்த சீட்டுக்களில் இரண்டை இங்கே தரலாம்.

"எல்லாம் தங்கள் செட்டி நாட்டு உதவியே"

"இது இங்கிருப்பது அமைதியான தமிழ்ப் பணிக்கே. பணி முடிந்ததும் செட்டி நாட்டிற்கு நேராக வந்து அரிய காரியங்கள் நடத்தவேண்டும். அதற்கேற்ற அருள் இரங்கி வருகிறது."

கவிதை, நாடகம் முதலிய எல்லாவகை நூல்களையும் படைத்துள்ளார்கள்.

இவருடைய நூல்கள் பாரதசக்தி மகா காவியம், சிவகங்கை வேலு நாச்சியார் திருக்குறளின்பம், யோகசித்தி, காலத்தேர், கீர்த்தனாஞ்சலி புதுயுகப்பாட்டு முதலிய 300. இவருடைய நூல் ஒன்றை இந் நூலாசிரியர் (சோமலெ) 1942-இல் வெளியிட்டார்.

சுவாமிகள் இப்போது செட்டிநாட்டில் சோழபுரத்துக்கு அருகே ஆசிரமம் நிறுவி வாழ்ந்து வருகிறார்கள். இங்கு பள்ளியும் ஆசிரமம் நடைபெற நகரத்தார் சிலர் 40 ஏக்கர் நிலத்தை அன்பளித்துள்ளனர்.

சொ. பனையப்ப செட்டியார்

1907-ஆம் ஆண்டு அளவில் நெற்குப்பையில் பிறந்து மேலைச்சிவபுரியில் ஒரு குடும்பத்துக்குச் சுவீகாரமாகச் சென்று அவ்வூரில் ஏற்பட்ட சன்மார்க்க சபைச் சூழ்நிலையில் தமிழில் பல வகை நூல்களை எழுதும் ஆற்றல் கைவரப் பெற்றவர்.

செட்டி நாட்டின் பழம் பெரும் எழுத்தாளருள் ஒருவர். சந்திரோதயம், காந்திமதி முதலிய இவருடைய நாவல்கள் 1930 அளவில் எழுதப்பெற்றன. அன்றைய தேசியக் கண்ணோட்டத்தை உயிர் நாடியாகக் கொண்டன. இந்த நூல்களைப்பற்றியும் வெளிவந்த திறனாய்வு இந்நூலில் பிறிதோர் இடத்தில் மீண்டும் அச்சிடப்பெற்றிருக்கிறது.

1940 அளவில் சென்னையிலிருந்து சந்திரோதயம், கற்பகம், காமதேனு இதழ்களை நடத்தினார். இவற்றின் விலை முறையே ஒரு அணா (6 காசு), அரையணா (3 காசு), காலணா (ஒன்றரைக்காசு), வ. ரா., சாவி ஆகியோர் இவ்விதழில் துணை ஆசிரியராகப் பணியாற்றியவர்கள்.

லெ. ப. கரு. இராமநாதஞ் செட்டியார்

பேரா சிரியர் இராமநா தஞ்செட்டி
யார் என்றால் யார்என்று கேட்பார் யார்?–பாரினிலே
பூவென்றாள் தாமரைதான் பொன்னென்றால் தங்கந்தான்
யாவர் லெ. ப. கரு. என் னார்.

—புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்

''இன்பத் தமிழுக்கு இராமநா தர்போல் ஓர்
அன்பர் இருப்பின் அது போதும்''

என்றும் மற்றொரு முறை பாவேந்தர் இவரைப் பாடியுள்ளார்.

இவர் 6-11-1915 இல் நெற்குப்பையில் பிறந்தவர். திருநெல்வேலி மாவட்டத்து மலையடிக் குறிச்சியைச் சேர்ந்தவரும் பெரும் புலவருமான கருணாலய பாண்டியர் அவர்களை இவர் தந்தையார் கருப்பஞ் செட்டியார் அவர்கள் கொழும்புக்கு அழைத்துச் சென்று அவர்களிடம் தம் மகனைப் பயிலச் செய்தார்.

இவர் 'பண்டித' பட்டமும் 1943-இல் வித்துவான் பட்டமும் அத்தேர்வில் முதன்மையாகத் தேர்ச்சி பெற்றதற்காக திருப்பனந்தாள் காசி மடத்துப் பரிசிலும் பெற்றார்.

இவர் 1937-இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்த் துறையின் அடித்தளத்தில் சேர்ந்து 1953-இல் தமிழ்ப் புலமைத்துறைத் தலைவர், பேராசிரியர், கீழ்த்திசைக் கல்விப் புலத்தலைவர் என்னும் பதவிகளைப் பத்தாண்டுக் காலத்திற்கு மேல் வகித்தார். பலமுறை, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் நிகழ்நிலைத் துணைவேந்தராகவும் இருந்திருக்கிறார்.

முப்பதாண்டுகளுக்கும் மேலாகத் தேவாரப் பண் ஆராய்ச்சிக் குழுவின் செயலராக இருந்து வருகிறார்.

சங்க இலக்கியத்தில் குறிக்கப்பெறும் பல்வகை மலர்களை தொகுத்து அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பாதுகாத்து வைத்துள்ளார்.

நூல்கள்: கட்டுரைக்கோவை, அண்ணாமலை அரசர். சங்ககாலத் தமிழர் வாழ்வு.

ஆராய்ச்சிக் கட்டுரை: பரிபாடல்

இவருடைய முன்னேற்றத்திற்கு இராசா சர் முத்தையா செட்டியார் அவர்கள் காட்டிய ஆதரவு, அனைவரும் அறிந்ததே.

வித்துவான் விசு. திருநாவுக்கரசு

கோலனப்பட்டு தமிழ்ப்புரவலர் விசுவநாதன் செட்டியார் மகனாக இவர் 27-9-1919 இல் தோன்றியவர். திருவையாற்று அரசர் கல்லூரியில் கரந்தைக் கவியரசு அவர்களிடம் கல்வி பயின்று வித்துவான் பட்டம் பெற்றவர்.

இளங்கோவடிகள் உருவத்தை, நூலிலிருந்து கிடைக்கும் சான்றுகள் கொண்டு கற்பனை செய்து, வனப்புற எழுதுவித்த சிறப்பு இவர்க்கு உரியது.

1943 முதல் 1945 வரை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் அதன் பிறகு பல உயர்நிலைப்பள்ளிகளிலும் தமிழாசிரியராக இருந்து இவர் 1967-இல் ஓய்வு பெற்றார்.

நூல்கள்: பண்டிதமணி (வாழ்க்கைச் சித்திரம்), பூச் சூட்டல் (கவிதை விமர்சனம்), சிலப்பதிகாரக் காட்சிகள், நடந்த பாதை.

## முடிவுரை

எங்கள் முன்னோர்கள் பொருளீட்டுவதிலும் வீடுகட்டு வதிலும் பெண்மக்களுக்குத் திருமணம் முடிப்பதிலும் தனிக் கவனம் செலுத்தினார்கள் என்பது ஊரறிந்த செய்தி. ஆயினும் இந்தப் பொறுப்புகளுக்கிடையே, ஒரு நொடிப் பொழுதும் அவர்கள் நினைவை விட்டு அகலாதிருந்தவை இரண்டு.

1. சைவ சமயம்
2. தமிழ் மொழி

இந்த நூல் முழுவதையும் படித்த பிறகே சின்னஞ்சிறு செட்டிநாட்டில் கவிஞர்கள், புலவர்கள், எழுத்தாளர்கள் இத் துணை பேரா என்ற வியப்பும் மலைப்பும் வாசகர்கட்கு ஏற்படும்.

வாசகர்கட்கு ஏன்? எனக்கே இந்த வியப்பு உண்டாயிற்று.

முக்கால் வாசிப்பேர், முறையாகத் தமிழ்படிக்கவுமில்லை. அந்த முக்கால் வாசியில் இந்நூலாசிரியரும் ஒருவர்.

இதைப்பற்றி ஆராய்ந்தபோது, பல உண்மைகள் தெரிய வந்தன. என் தந்தையாரும் பாட்டனாரும் எழுத்தாளர்களே; ஆனால் அவர்கள் எழுத்துக்கள் தாளிலும் ஏட்டுச் சுவடியிலும் உள்ளன.

திரு அ. லெ. நடராசனின் முன்னோர்கள், சிறந்த தமிழ் அறிவு பெற்றவர்கள்.

திரு. முல்லை முத்தையாவின் தந்தை வழியில் பாட்டனாரும் தாய்வழிப் பாட்டனாரும் கவிஞர்கள். அவர் களுடைய பாடல்களைச் சேகரித்து அவற்றைத் தொகுக்கும் பணியில் ஈடுபட்டுள்ளார்.

செட்டிநாட்டில் இன்று புகழ்பெற்றுள்ள ஏராளமான எழுத்தாளர்களில் பூர்வீகத்தைப் பற்றித் தொல்பொருள் ஆய்வு நடத்தினால் இத்தகைய செய்திகள் உறுதிப்படும்.

## 18. இலட்சியவாதிகள் மூவர்

காரைக்குடியைக் களமாகக் கொண்டு தமிழகமெங்கும் இருபதாம் நூற்றாண்டில் முத்தமிழ் மணம் பரப்பிய மூவர், தமிழ் மொழி வரலாற்றில் தனிச்சிறப்புக்கு உரியவர் ஆவர். இலட்சங்களை மட்டுமே மதித்த சமூகத்தில் இலட்சியங் களுக்காக வாழ்ந்த முருகப்பா—ராய சொ—சா. கணேசன் என்ற மும்மணிகளின் பெயர்களைச் சொல்லும்போது, இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே!

இம்மூவரும் நகரத்தார் பெரும்பாலோருடைய இயல்பி னின்றும் விலகி, புதுத்தடம் கண்டவர்கள். முன்னோர் ஈட்டிய பொருளை, பொதுப் பணிக்குச் செலவிட்டவர்கள். சமுதாயத் திலிருந்து களைகளைப் பிடுங்கி எறியத்தொடங்கி, பின்னர் அரசியலிலும் ஆன்மீகத்திலும் ஆர்வம்காட்டியவர்கள். எனினும் கம்பனுக்கும் கன்னித்தமிழுக்கும் இவர்கள் ஆற்றிய பணியே தலையாயது. பட்டக் கல்வியின் மோகம் பெருகியிருந்த காலத்தில் பள்ளிப்படிப்பு மட்டுமே படித்து, மாமேதைகளாகத் திகழ்ந்தனர்.

முருகப்பா, சமுதாய சீர்திருத்தத் தந்தை. தென்னாட்டு இராஜாராம் மோகன் ராய் என்று புகழ்பெற்றவர். இந்து மதாபிமான சங்கம் கண்டவர். பாரதியாரோடு பழகியவர். குமரன் இதழை நடத்தியவர். கம்பனில் மூழ்கியவர்.

ராயசொ காந்தியடிகளைத் தம் விருந்தாகப்பெறும் பேறு பெற்றவர். செட்டிநாட்டில் சிறைசென்ற முதல் தேசபக்தர் காந்தி பிள்ளைத்தமிழ் பாடியவர். ஊழியன் இதழை, பெருஞ் சிறப்போடு வீறு நடையில் வெளியிட்ட தமிழ்க்கடல், கம்பன் கழகத் தலைவர்.

கணேசன், கம்பனிலும் காந்தியடிகளிடமும் தம்மைப்பறி கொடுத்தவர். அவர் பெற்ற கல்வியெல்லாம் கவிச்சக்கரவர்த்தி கம்பனிடத்தில் கற்றவையே எனலாம். கம்பனிடம் அவர் இலக் கியத்தைச் சுவைத்ததோடு நின்றுவிடவில்லை; அரசியல் படித் தார்; பொருளியல் பயின்றார்; கலையியல் தெளிந்தார்; அறி வியலை உணர்ந்தார்; அருளியலை அறிந்தார்; வாழ்வியலையும்

வரன்முறையாகவும் கசடறவும் கற்று அதற்குத்தக ஒழுகினார். கலங்கவைக்கும் சிறைச்சாலை. திரு கணேசன் அங்கே கைதியாக இருந்ததால் கம்பன் கல்லூரியாக மாறியது. சிறைச்சாலைக்கு வந்திருந்த தமிழர் அனைவர்க்கும் கம்பனைக் கற்பித்தார். பிற மொழியினரான அரசியல் கைதிகளுக்குத் தமிழின் பெருமையை உணர்த்தினார்.

## சொ.முருகப்பா (1893-1956)

தமிழ் இதழ்கள் நடத்தியும், தமிழ் இசை இயக்கத்தின் தளபதியாக இருந்தும், கம்பராமாயணத்தின் சில பகுதிகளுக்கு உரை எழுதியும் இவர் ஆற்றியுள்ள தமிழ்த்தொண்டு மிகப் பெரியது. அதனை, இந்நூலின் பல பகுதிகளில் உரியஇடங்களில் விரிவாகக் குறிப்பிட்டுள்ளேன். இது தவிர இளைஞர் பலர்க்குத் தமிழார்வம் ஊட்டியதும், தமிழறிஞர் பலரின் தொடர்பைச் செட்டிநாட்டுக்கு ஏற்படுத்திக்கொடுத்ததும் இவருடையசிறந்த பணிகள் எனலாம். அண்ணாமலை அரசரின் தமிழ்ப் பணிகளுக்கெல்லாம் இவர் உறுதுணையாக இருந்து வந்தார்.

இந்நூலில் இவரைப் பற்றிக் கூறப்பெற்றிருக்கும் செய்திகள் யாவும் இவரால் 1954-ல் சரிபார்க்கப்பெற்றவை. இந்நூலில் தெரிவிக்கப் பெற்றுள்ள பழமையான விவரங்கள் சிலவற்றை ஓரளவு எனக்குத் தெரிவித்தவரும் இவரே ஆவார்.

## 'ராய சொ'— (1898-1974)

காரைக்குடி ஊரினர். சிறந்த தமிழறிஞர். பல்லாயிரக்கணக்கான பாடல்களை மனப்பாடம் செய்து நினைவாற்றலால் பல இலக்கியங்களுடனும் ஒப்புநோக்கி மேடைகளில் முழங்கிய நிகரற்ற பேச்சாளர். சிற்றிலக்கியம் முதல் பேரிலக்கியம்வரை பதிப்பித்தவர். எந்த நூலில் எத்தொடர் வந்தாலும் அத்தொடர்க்கு இயைபான தொடர் வேறு எந்த நூலில் வந்திருப்பின் அதனை வெளிப்படுத்தும் ஆற்றலும், பொருத்தமான சொற்களை வேறுபாடு தோன்றாவாறு புகுத்தி எளிய விளக்கங்கள் கொடுக்கும் திறமையும் இவர்க்கு கைவந்தன.

''சொக்கலிங்கனார் கல்வி கேள்வியுடையவர்; ஆராய்ச்சியாளர்; காய்தல் உவத்தலின்றி எதையுஞ் சிந்தித்து முடிவு காண்பவர். சொக்கலிங்கனார் காங்கிரஸ் தொண்டாற்றிச் சிறை புகுந்தவர்;காரைக்குடி நகரசபைத் தலைவராயிருந்தவர்.

இப்போது பாட்டிலும் ஓவியத்திலும் மூழ்குகிறார் கலையில் மூழ்குகிறார்; தமிழ் வகுப்பு நடத்துகிறார் அவர் வாயிலாகச் செட்டி நாடு தமிழ்க் கலையில் எழுச்சி பெறுமென்னும் உறுதி எனக்கு ஏற்பட்டது" என்று தமிழ்த் தென்றல் திரு.வி.க, தம் வாழ்க்கைக் குறிப்புக்களில் எழுதியிருக்கிறார்.

தமிழ்க்கடல், சிவம்பெருக்கும் சீலர், சிவமணி என்ற பட்டங்களைப் பெற்றவர், சென்னையில் தமிழ் எழுத்தாளர் சங்கத்தாரால் கேடயம் வழங்கிச் சிறப்பிக்கப் பெற்றவர்.

செட்டிநாட்டில் சிறை சென்ற தேசபக்தருள் இவர் முதல்வர்; முன்னோடி. காந்தியத்தைப் பரப்பியவர். காந்தியடிகளைத் தம் விருந்தினராகப் பெரும் பேறு பெற்றவர், செட்டி நாடும் தேசியமும் என்று ஒரு நூலையும் விரிவாக எழுத யான் இளமையில் திட்டமிட்டிருந்தேன். டாக்டர் பட்டத்துக்கு யாராவது இந்தத் தலைப்பில் ஆய்வு மேற்கொண்டால், 'ராய சொ' —வுக்கு, அதில் சிறப்பிடம் நல்குவர். இந்நூலின் தலைப்புக்கு, அரசியல் அப்பாற்பட்டது. தமிழ் என்ற வரம்புக்கு உட்பட்ட செய்திகள் மட்டுமே இந்நூலில் இடம்பெறும். இது, பலருடைய வாழ்க்கை வரலாற்றுத் தொகுப்பு அன்று.

காந்தியடிகளைப் பற்றி இவர் பல நூல்கள் படைத்துள்ளார். காரைக்குடிக்கு காந்தியடிகள் வருகைதந்தபோது கூறிய அறிவுரைகளைத் தொகுத்துக் காட்டுகையில் தமிழ்நாட்டின் சீரையும் சிறப்பையும் செல்வத்தையும் செம்மையையும் செப்புகின்ற ஒரு செய்யுள் சிறுபறைப் பருவத்தில் வருகிறது. கற்றோர் காமுறும் கவிகளைக் காணிக்கையாக்கிய ராயசொ உணர்ச்சிமிக்கவராகவும் ஓரளவு படித்தவர்களையும் கவர்வனவாயும் உள்ள பாடல்களையும் படைத்துள்ளார். சான்று ஊழியனில் அவர் வெளியிட்டுள்ள பாடல்கள்.

விருத்தம் வெண்பா கலிப்பா அகவற்பா கண்ணிப்பா தாண்டகம் போன்ற பல்வகைப் பாக்களையும் பரக்குறக் கையாண்டு, தாய் நாட்டுப்பற்றையும் தாய்மொழிப் பற்றையும் போற்றிப் பரப்பிய 'ராயசொ'-வின் படைப்புக்கள் இலக்கியச் சுவை நனி சொட்டுவன.

காந்தி நூற்றாண்டு விழாவினை ஒட்டி, காந்தியடிகள் மீது ராயசொ தாம் முன்னர் பாடிய 901 பாடல்களையும் தொகுத்து 'காந்திகவிதை' என்ற தலைப்பில் 2-10-1969 அன்று சென்னையில் வெளியிட்டு மகிழ்ந்தார்.

அரசியல் மேடைகளில் தித்திக்கும் தமிழைப் பரவச் செய்த பெருமை, தமிழ்த்தென்றல் திரு.வி.க. அவர்களுக்கு அடுத்தபடியாக தமிழ்க்கடல் ராய சொ.வுக்கு உரியது.

செட்டி நாட்டுச் செல்வர் பலரைத் தம் மாணாக்கர் ஆக்கி, தமிழ்ப் புரவலராக அவர்களை மாற்றிய சிறப்பும் ராயசொ-வைச் சேரும்.

இந்துமதாபிமான சங்கத்தில் பல்லாண்டுகள் சனி-ஞாயிற்றுக் கிழமைகளில் பெரிய புராணம், திருவிளையாடற் புராணம் வில்லி பாரத விளக்க உரைகள் வழங்கினார்.

காரைக்குடி நகரச் சிவன்கோவில், தமிழோடு இசை பாடல் மறந்தறியாச் சிவத்தளியாக விளங்கச் செய்தார். சேக்கிழார்க்குக் காரைக்குடியில் விழா எடுத்தார்.

தேவாரத் தலங்களுக்கும் ஆழ்வார் பாசுரங்கள் பெற்ற திருப்பதிகளுக்கும் சென்று வணங்கி, திருத்தலப்பயணம் என்னும் அறிய விரிவான நூலை வெளியிட்டார்.

ராயசொ தம்வாழ்நாள் முழுவதும் சேகரித்த நூல்களை, அழகப்பர் கல்லூரிக்கு கொடையாக வழங்கினார். கிடைத்தற்கரிய பதிப்புகளும், திங்கள் இதழ்களும், அகரநூல்களும் கொண்டது. ராயசொ நூலகம். திருக்குறள், இராமாயணம் இவற்றின் பல பதிப்புகள் இந்நூலகத்து உள. இலக்கண இலக்கிய சமய அரசியல் நூல்கள், பல்வேறு உரை நூல்கள், பல் பொருள் பற்றிய உரைநடை நூல்கள் ஏராளமாக இருக்கின்றன. ஆனந்த போதினி, செந்தமிழ்ச்செல்வி, செந்தமிழ், குமரன், நவசக்தி, ஊழியன் ஆகியவற்றின் இதழ்த் தொகுதிகளும் இந்நூலகத்தில் இடம்பெற்றுள.

தமிழ்ப் பெருநூல்களின் பாடல்கள் எண்ணிறந்தவை. அதோடு அவை அச்சிட்டுள்ள முறை சந்தி - சீர் பிரியாது க்யூ வரிசை போல் அமைந்திருப்பது, புணர்ச்சி, மயக்கம் இவை காரணமாகத் தமிழ் இலக்கிய - பக்திப் பனுவல்கள் படிப்போருக்கு இடர்தருகிறது என்றும் அவற்றைச் சிறிய தொகுப்பு நூல்களாகப் பாமரனும் படிக்கும் வண்ணம் வெளியிடவேண்டும் என்ற கொள்கையில் அழுத்தமான நம்பிக்கை கொண்டவர் ராய. சொ. அந்த முறையில், நயம் சான்ற செய்யுட்களைத் தொகுத்து, நிரல் படுத்தித் தக்க குறிப்பும் எழுதி இவர் பதிப்பித்தார்.

இவர் தலைவராக இருந்த இந்து மதாபிமான சங்கத்திற்கு எதிரில்இவருடைய திருவுருவச்சிலைநிறுவப்பெற்றுள்ளது

இவருடைய நூல்கள் வருமாறு :

தொகுப்பு :

1 காதற்பாட்டு
2 தேனும் அமுதும்
3 திருவாசகத் தேன்
4 தேவாரமணி
5 ஆழ்வார் அமுது
6 பாவைப் பாட்டு
7 பிள்ளைப் பாட்டு
8 திருமணப் பாட்டு
9 தெய்வப் பாமாலை
10 முருகன் பாமாலை
11 அங்கங்களின் பயன்
12 திருமுறைத் தீங்கனி
13 வணக்கப் பாமாலை
14 மாதவ மாலை
15 அண்ணாமலை மாலை
16 தில்லைத் திருநடம்
17 நால்வர் வணக்கமாலை
18 பெரிய புராணப் பேரமுதம்
19 பூசைப் பாமாலை
20 திருக்கானப்பேர் பாமாலை
21 திருவேங்கடப் பாமாலை
22 தெய்வப் பாடல்
23 திருப்பல்லாண்டு
24 சிவபுராணம்
25 இராகவன் இசை மாலை
26 மீனாட்சி திருமணம்
27 பன்னிரு திருமுறைத் திரட்டு

இவை தெய்வீகப் பனுவல்களிலிருந்து தொகுக்கப் பெற்ற இறைவணக்கப் பாடல்கள். அன்பர்கள் அச்சிட்டு அன்பளிப்பாக வழங்கியவை.

### உரைநடைப்படைப்பு

1 காவேரி
2 குற்றால வளம்
3 நாம் ஆர்க்கும் குடி அல்லோம்
4 காதற் கடிதங்கள்
5 இன்பம் எது?

### கவிதை நூல்கள்

1 காந்தி பிள்ளைத்தமிழ்
2 காந்தி பதினெண்பா
3 காந்தி கலித்துறை அந்தாதி
4 காந்தி நாண்மணி மாலை
5 காந்தியும் வள்ளுவரும்
6 தாலாட்டும் கும்மியும்
7 புதுமைப் பாக்கள்
8 பெண் நிலைக் கண்டனச் செய்யுட்கள்

### ஆராய்ச்சி நூல்கள்

அழகப்பர் கல்லூரியில் தமிழ் ஆராய்ச்சித் துறையின் கௌரவத் தலைமைப் பொறுப்பாளராக இருந்த போது வெளியிட்டவை:

கம்பனும் சிவனும்
வில்லியும் சிவனும்

### இலக்கிய வெளியீடுகள்

1 சேதுபதி விறலிவிடு தூது
2 கூளப்ப நாயக்கன் விறலி விடுதூது
3 வருண குலாதித்தன் பாடல்
4 வள்ளுவர் தந்த இன்பம்

### திருக்கோயில் வெளியீடுகள்

(தமிழ் அர்ச்சனைக்காக) 108 போற்றி

அருணாசல புராணம்
திருவிளையாடற் புராணம்
} ஆராய்ச்சிமுன்னுரையுடன் சீர் பிரித்துச் செய்யுள் தலைப்புடன்பதிப்பித்தவை

## கம்பன் அடிப்பொடி (1908—1982)

காரைக்குடி ஊரினர். இளமையில் பர்மாவில் தொழில் செய்தார். தாயகம் திரும்பியதும், தாய்த் திருநாட்டின் அரசியல் போராட்டத்தில் முழு மூச்சுடன் ஈடுபட்டார். சொ முருகப்பா - ராயசொ ஆகியோருடன் சேர்ந்தும் பல பொதுப் பணிகளில் கலந்து கொண்டார். எந்தச் செயலிலும் முன் நின்றார்.

சாமிநாதன் செட்டியார் மகனாகப் பிறந்தார். கணேசன் என்பது பெற்றோர் இட்ட பெயர். 1977 அளவில் இவர் தம் பெயரையே கம்பன் அடிப்பொடி ஆக்கிக் கொண்டார். "அது புனைபெயரீ அன்று; அது தான் என் பெயர். அவ்வாறே நான் குறிப்பிடப்பட விரும்புகிறேன்" என்று அறிவித்தார்.

தமிழ்ப் பணிகள், ஆராய்ச்சிகள் எங்கு நடைபெற்றாலும் அவற்றில் ஆர்வமுடன் பங்கு பெற்றார். கம்பன் காவியம் மட்டுமன்றி அனைத்துத் தமிழ் நூல்களையும் அழுத்தமாகப் பயின்றார்.

கம்பனிடத்தில் ஏற்பட்ட அளவுகடந்த காதலால், கம்பன் கழகம் கண்டார். உறுப்பினரிடம் எவ்விதக்கட்டணமும் வசூலிக்காமலே அதை நடத்தினார். இவருடைய சலியா உழைப்பும் தளரா முயற்சியும் கம்பனுக்கும் தமிழுக்கும் பெரும் புகழைத் தந்தன.

கம்பனுக்காக இவர், ஓர் இயக்கத்தையே நடத்தினார். கம்பன் புகழ் பரப்புவதற்காகப் பிறப்பெடுத்தார் என்றும் சொல்லுவது பொருந்தும்.

எங்கெல்லாம் கம்பன் புகழ் பேசப்படுகிறதோ அங்கெல்லாம் கம்பன் அடிப்பொடி நினைக்கப் பெறுவார்.

கம்பனுடைய படைப்பை அவர் பல நூறு தடவை படித்தார்; நுணுக்கமாக ஆராய்ந்தார். ஒவ்வொரு முறை படிக்கும் போதும் புதிய கண்ணோட்டத்தில் ஒரு புதிய துறையில் கம்பனை வல்லுனராகக் கண்டார். அவருடைய நூலில், பக்கக் குறிப்புக்களாக A. B. (Architectural Beauty - கட்டிடக் கலை அறிவு) என்று சுருக்கமாக எழுதி வைத்திருப்பார். கம்பராமாயணம், கட்டிடக்கலை பற்றிய கருவூலமாக உள்ளது

என்ற பொருள்பட ஆராய்ந்து அவர் கைப்பட எழுதி வைத்துள்ள குறிப்புகள் கோவை கம்பன் கழகத்தில் உள்ளன.

கம்பன் பாடல்கள் இசையோடு பாடப் பெற வேண்டும் என்று கம்பன் அடிப்பொடி விரும்பினார். திருச்சி வானொலி நிலையத்தில் சில நாட்கள் தங்கி 200 பாடல்கள் இன்ன ராகத்தில் பாடப் பெற வேண்டும் என்று வரையறை செய்து அவ்வாறு அவற்றைப் பாடவும் ஒலிபரப்பவும் ஏற்பாடு செய்தார்.

இலக்கிய விழாக்கள் எவ்வாறு நடத்தப் பெற வேண்டும் என்பதற்கு ஒரு வழிகாட்டியாக, முன் மாதிரியாக, எடுத்துக் காட்டாக, காரைக்குடி கம்பன் கழகத்தை இவர் நடத்திக் காட்டினார். இவர் வகுத்த பாதையை, கையாண்ட முறைகளைப் பின்பற்றி, ஏனையபுலவர்கள் பெயரால் தமிழ்நாட்டில் பல ஊர்களில் மன்றங்கள், கழகங்கள் தொடங்கப் பெற்று இயங்கி வருகின்றன. "பழந்தமிழர் மரபுக்கு ஒரு புது வடிவம்" கொடுத்து, தமிழகமெங்கும் ஒரு மறுமலர்ச்சி ஏற்பட இவர் காரணமாக இருந்திருக்கிறார்.

1941 - இல் காரைக்குடியில் தமிழ் இசைச்சங்கம் தொடங்கினார். பாரதி மண்டபத்திற்கு நிதி சேர்த்து உதவும் பணியில் பெரும் பங்குகொண்டார். நவயுகப்பிரசுராலயத்தைத் தொடங்கியவருள் இவர் ஒருவர். ரசிகமணி டி. கே. சி. யையும் பிற்காலத்தில் பன்மொழிப் புலவர் தெ. பொ. மீ. யையும் தம் குருவாகக் கொண்டார்.

வீட்டில் பட்டகசாலை (பட்டாபிஷேக நிகழ்ச்சி நடத்துவதற்கான ஒரு பகுதி) அமைத்து, சுண்டல் பிரசாதம், பாயசத்துடன் வசனம் என்றோ பாட்டு என்றோ சொல்ல முடியாத ஒரு நடையில் எழுதப்பட்டிருந்த இராமாயண ஏடுகளைப் புரட்டாசித் திங்களில் யாரையாவது படிக்கச் சொல்லும் செட்டிநாட்டுப் பழக்கத்தை, கம்பன் இயக்கமாக, இலக்கிய இயக்கமாக மாற்றியவர், கம்பன் அடிப்பொடியே ஆவார்.

### கவிஞர்

திரு. கணேசன் சிறந்தகவிஞராகவும் விளங்கினார். முப்பது பாடல்கள் கொண்ட "தமிழ்த் தொண்டர் தொகை" என்னும் சிறுநூலை இயற்றினார். அதிலிருந்து இரு பாடல்கள்:

''வழுத்துமென்தாய் உயர்நாச்சி யம்மையார்க்கு மடியேன்
மதித்தந்தை திருசாமி நாதற்கு மடியேன்
எழுத்தறிவு நல்கரங்க வாத்தியார்க்கு மடியேன்
இலக்கியஞ்சொல் சிதம்பரப்பேர் ஏந்தலுக்கு மடியேன்
பழுத்ததமிழ் நிறைசேதுப் பிள்ளைக்கு மடியேன்
பலவழியில் ஊக்குவித்த ராஜாஜிக் கடியேன்
முழுத்தகுதிக் 'குருதேவர்' தெ. பொ. மீக் கடியேன்
மும்மைவளர் செந்தமிழ்த்தாய் முளரித்தாள் சரணே''

''தொன்றுதொட்டு தமிழ்மரபைக் காப்பார்கட் கடியேன்
துயர்அகலத் தமிழமுதம் ஊட்டுவார்கட் கடியேன்
என்றுமுள தென்தமிழ்த்தாய்க் கெழில்முடியைச் சூட்டும்
எந்தைபிரான் கம்பன்தன் அடியார்க்கும் அடியேன்
நின்றுவளர் கம்பன்அற நிலைகாப்பார்க் கடியேன்
நெடியதமிழ்த் தாய்கோயில் புரப்பார்கட் கடியேன்
முன்றுளிர்க்கும் இடுக்கணவை முரிப்பார்கட் கடியேன்
மும்மைவளர் செந்தமிழ்த்தாய் முளரித்தாள் சரணே.''

கம்பனுக்குக் கணேசனார் 'மலர் வழிபாட்டுப் போற்றிப் பதிகம்' படைத்திருக்கிறார். இது கம்பன் காவியத்தைச் சாறு பிழிந்து நிரப்பிய பொற்கிண்ணம் ஆகும்.

பிள்ளையார்பட்டியில் கோயில் கொண்டிருக்கும் கற்பக விநாயகர்பால் கனிவான பாடல்களையும் திரு. கணேசன் இயற்றியிருக்கிறார்.

## நூலாசிரியர்-பதிப்பாசிரியர்

'நூற்பவர்க்கு', 'பிள்ளையார்பட்டிக்கோவில் வரலாறு' 'இராஜராஜன்' என்னும் நூல்களை இயற்றியிருக்கிறார்.

மாணிக்கவாசகப் பெருமான் அருளியுள்ள சிவ புராணத்தைக் குறிப்புரையுடன் வெளியிட்டுள்ளார். ஏராள மான தனிப் பாடல்களையும் இவர் தொகுத்துள்ளார். காந்தியடிகளின் பிரார்த்தனையில் இடம் பெறும் வேத உப நிடதப் பாடல்களை தமிழ்ப் பாடல்களாக ஆக்கியுள்ளார். செட்டிநாட்டுப் பழமொழிகளைத் தொகுத்திருக்கிறார்.

கலைக்களஞ்சியத்தில் சில கட்டுரைகளை எழுதியிருக்கிறார்.

கலைச் சொல்லாக்க முயற்சிகளிலும் இவர் தனிக்கவனம் செலுத்தி வந்தார்.

அமைதியாக அருந்தொண்டு செய்து, தக்கவர்களைக் கொண்டு தமிழ் இலக்கியங்களைச் செம்மையாகப் பதிப்பிக்கும் தமிழ்ப் புரவலர் மர்ரே ராஜம் அவர்களுடைய வெளியீடுகள் ஒழுங்காகவும் பிழையின்றியும் வெளிவரச் செய்ததில் கம்பன் அடிப்பொடியின் பங்கு பெரிது.

சிறந்த மேடைப் பேச்சாளராகவும் இவர் விளங்கினார். ஒலிபெருக்கியின்றிப் பேசக்கூடிய கணீர் என்ற குரல்வளம் பெற்றிருந்தார். அரசியல் இலக்கிய உரைகளை ஆயிரக்கணக்கில் நிகழ்த்தியுள்ளார். மகாத்மா காந்தியைப் பற்றிய திரைப் படத்திற்கு விளக்கஉரை எழுதித் தாமே குரல் கொடுத்தார்.

## உலகத் தமிழ் மாநாடு-சென்னை

1968-இல் முதலமைச்சர் அண்ணா அவர்களின் வேண்டுகோளின்படி, கலைக்காட்சிக்குழுவின் தலைமைப் பொறுப்பை திரு. கணேசன் ஏற்றார்.

பல்லோரும் பாராட்டத் தமிழர் நாகரிசப் பண்பாடு, கலை, இலக்கியம், சமயம், பண்டைக்கால அணிகலன், இசைக் கருவிகள், ஆபரணங்கள், கோயில் வாகனங்கள், தேர், விலை மதிக்க இயலாத அரிய நகைகள், தங்கம் மற்றும் வெள்ளியில் செய்யப்பெற்ற கலைச் சிறப்பு மிக்க ஊர்திகள் ஆகியவற்றை அல்லும் பகலுமாக அலைந்து பல இடங்களிலிருந்தும் தக்க பாதுகாப்போடு கொண்டுவந்து சென்னையில்சேர்த்துக்காட்சிப் பொருளாக வைத்தார்.

அம்மட்டோ? இரவல் வாங்கிவந்த பொருள்களைப் பாதுகாப்போடு திரும்பக் கொண்டுபோய் உரிய இடங்களில் சேர்த்து நற்பெயர் எடுத்தார்.

அந்த மாநாட்டுக்காக, திரு கணேசன் செய்த மற்றொரு பணி-கையேடு வெளியிடும் பொறுப்பு.

தமிழ் இலக்கியம், தமிழர் வரலாறு, கலைகள், நாகரிகம், பண்பாடு ஆகியவை பற்றிய சான்றுகள் அனைத்தையும் திரட்டி, நிரல்பட அமைத்து, தேவையான விளக்கப் படங்களையும் தொகுத்து அந்தக் கையேட்டை உருவாக்கினார்.

மலர் அளவில் 316 பக்கங்கள் கொண்டது அந்தக் கையேடு. அறிஞர் பலரின் கட்டுரைகள் அதில் இடம் பெற்றன. எனினும், திரு. கணேசனே பல துறைகள் பற்றிய கட்டுரைகளைப் பெயர் போட்டும் போடாமலும் எழுதிக் குவித்தார்.

## வானொலி வாயிலாக

வானொலி உரைகள் வாயிலாகக் கம்பனடிப்பொடி ஆற்றிய அருந்தமிழ்ப்பணி பெரிது. இவற்றை யாரேனும் தொகுத்து வெளியிட உதவியாக இவ்விவரங்கள் இங்கு தரப்படுகின்றன.

1 காரைக்குடி கம்பன் விழா நிகழ்ச்சிகளை ஆண்டுதோறும் ஒலிபரப்பச் செய்தது. மாவட்டக் கழக விழாக்களையும் ஒலிபரப்பச் செய்தது.

2 அறவுரை, அறநெறி, அருள்வாக்கு நிகழ்ச்சிகளில் வாழ்வியல் நெறிகளை எடுத்துரைத்தது.

3 1978 ஆகஸ்டில் 'கல்லும் சொல்லாதோ கவி' என்னும் கல்வெட்டாய்வு நிகழ்ச்சியினை திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்திலிருந்து அமைத்து வழங்கியது.

இதில் கல்வெட்டாய்வாளர்கள் செ. இராசு, குடந்தை N. சேதுராமன் போன்றோரை ஈடுபடுத்தி நிகழ்ச்சியைச் சிறப்பித்தது. தாமே அந்நிகழ்ச்சியை இணைத்து அளித்தது.

4 1975-1976 ஓராண்டுக்கால அளவில் வானொலியின் வாயிலாக கம்பன் இசையமுதம் பருக தமிழ் அன்பர்களுக்குப் பணியாற்றியது. கம்பனின் விருத்தப்பாக்களை இசைமுறைப்படி எடுப்பு, தொடுப்பு, முடிப்பு என அமைத்து, குறிப்புக்கள் தந்து, விளக்கவுரை வழங்கி திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்தினின்றும் ஒலிபரப்ப ஏற்பாடு செய்தது.

5. திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்திற்குப் பதிவுக்கு வரும் பேசதெல்லாம் நிலையத்தின் தமிழ் அன்பர்களிடையே

உரையாற்றியது. தமிழ் வட்டெழுத்து, கல்வெட்டுக்கள், சாசனங்கள் கம்பன் இணையபொருள் பற்றி உரையாற்றியது.

6 வானொலி கவியரங்கத் தலைமை

7 கருத்தரங்க நிகழ்ச்சிகள்; சிறப்பாகக் குறிப்பிடக் கூடியது, சமயகுரவர்கள் பற்றியவை

8 இலக்கியச் சோலை—எனும் நிகழ்ச்சித் தொடரில் 'கம்பராமாயணம்' பற்றி நான்கு உரைகள்.

9 தனி உரைகள்—இலக்கியப் பேருரை

10 'வள்ளுவர் உலகம்' நிகழ்ச்சியில் உரை. மதுரை பாரதி புத்தக நிலையம் வெளியீடு 1968 அல்லது 1969

11 வள்ளுவர் ஈராயிரம் ஆண்டு விழாவில் மதுரைமீனாட்சி திருக்கோயிலில் உரையாற்றியது. 1969

மரணப்படுக்கையில் கோவைமருத்துவமனையில் இருக்கும் போதும் இவர் கம்பனைப் பலமுறை படித்ததும் குறிப்புகள் எடுத்ததுமாக இருந்தார். கம்பராமாயண நூலின் பக்கப் பகுதிகளில் (Marginal Notings) குறித்து வைத்திருந்தார்.

## தமிழ்த் தாய்க் கோயில்

தமிழ் அன்னைக்குச் சரியான திருவுருவம் ஒன்றைச் சமைக்கவும் திருக்கோயில் எழுப்பவும் திரு. கணேசன் நீண்ட நெடுங்காலமாக விரும்பினார். தமிழக அரசின் தாராளமான நிதியுதவியுடன் இப்பணி, கம்பன் மண்டப வளாகத்தை யொட்டிய இடத்தில் தொடங்கப்பெற்று முடிவு பெறா நிலையில் உள்ளது.

## சகல கலா வல்லவர்

தமிழ்நாட்டு வரலாறு, ஆகம நூல்கள், சிற்பக்கலை கட்டடக்கலை ஆகியவற்றிலும் திரு. கணேசன் நுட்பமான புலமை படைத்தவராக பல்கலைவல்லுநராக நடமாடும் கலைக்களஞ்சியமாக விளங்கினார்.

மாமல்லபுரத்தில் புகழுடன் விளங்கும் கோயிற் கட்டடக் கலைக் கல்லூரி முதல்வர் திரு. கணபதி ஸ்தபதியுடன் இணைந்து இவர் ஆக்கிய சிற்பக்கலை என்னும் அரிய நூல் தமிழனின் சிறப்பை உலகுக்கு உணர்த்தும் கலைப்பெட்டக மாகும்.

பூம்புகாரில் திரு. இராசசேகரன் நிறுவியுள்ள பத்தினிக் கோட்டம் அமைய வழிகாட்டிய தலைமைச் சிற்பி திரு. கணேசன் தாம்.

பண்பாடு, சிற்பம், இலக்கியம், வரலாறு, கல்வெட்டுச் செய்திகள் ஆகிய யாவற்றையும் இணைத்துப் பொருத்திக் காட்டும் கட்டுரைகள் பலவற்றை 'கல் சொல்லும் கதை' என்ற தலைப்பில் இவர் 1956-இல் 'கலைமகள்' இதழில் தொடர்ந்து எழுதிவந்தார்.

1966-இல் கோலாலம்பூரில் நடைபெற்ற முதலாவது உலகத்தமிழ்மாநாட்டில் தமிழக அரசின் பேராளராகக் கலந்து கொண்டார். சிற்பக்கலை குறித்து இவர் நிகழ்த்திய ஆய்வுரை செவிமடுத்த அனைத்து நாட்டறிஞரையும் ஈர்த்தது.

எப்பொருளிலும் பொதிந்து கிடக்கின்ற உண்மை நிலையினை ஆய்ந்தறியும் வேட்கை இவருக்கு இருந்தது. இந்த வேட்கையால் கல்வெட்டுத்துறையிலும் தமிழ் வரி வடிவத்தின் வரலாற்றிலும் தணியாத ஆர்வம் கொண்டு இலங்கினார். வரலாற்று அடிப்படையில், இலக்கியச் செய்திகளை ஆய்ந்து தெளிந்தார். தொல்பொருள் ஆய்வு, இந்திய அரசின் தனி யுரிமைத் துறையாக இருந்ததை,மாநிலங்களின் அளவில் முதன் முதலாகத் தொல்பொருள் ஆய்வுத்துறை, தமிழ்நாட்டில் தமிழக அரசின் துறையாக அமையச் செய்தவர் கம்பன் அடிப் பொடி.

தஞ்சைப் பெருவுடையசர் கோயிலில் இராஜராஜன் நினைவாகச் சதயவிழாக் கொண்டாடும் திட்டத்தை வகுத்துக் கொடுத்தார். தமிழக அரசு அந்த யோசனையை ஏற்று, அரசு விழாவாகக் கொண்டாட ஒரு குழு நியமித்து, குழுவின் செய லாளராக இவரை ஆக்கிற்று.சதய விழா மலரும் உருவாயிற்று.

1958-இல் இளையாற்றக்குடியில் காஞ்சி காமகோடி பீடத்தார் நடத்திய 'வித்வ சதஸ்' என்னும் ஆகமக்கலை

விழாவை தமிழ்நாட்டுக்கு உரிய நாட்டுப்புறக் கலைவிழாவாக மிகச் சிறப்பாக நடத்திக் கொடுத்தார். காஞ்சிப் பெரியவர்கள் ‘தொண்டர் குல சேகரன்’ என்ற பட்டம் நல்கி இவரைச் சிறப்பித்தார்கள்.

### பாராட்டுக்கள்

நெல்லை மாவட்டக் கம்பன் கழகத்தார் 1978-இல் இவருக்கு ‘கம்பராமாயணக் காவலன்’ என்ற பட்டம் சூட்டினர்.

1981-இல் மதுரையில் சீருடனும் சிறப்புடனும் நடைபெற்ற ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டின் நிறைவுநாள் விழாவில் தமிழக அரசு பாராட்டிய மூதறிஞர் பதின்மருள் இவர் ஒருவர். இந்தியத் தலைமை அமைச்சர் திருமதி இந்திரா காந்தி கம்பனடிப்பொடிக்குத் தமிழக அரசின் சார்பாகப் பாராட்டிதழும் தஞ்சாவூர்த் தாம்பாளமும் வழங்கினார்.

### நனவாகாத கனவுகள்

கம்பன் அடிப்பொடி 1979-இல் பின்வரும் அறிவிப்பைச் சில இதழ்களில் வெளியிட்டார்.

“கம்பன் தமிழாய்வு நிறுவனம், கம்பன் மணி மண்டபத்தில் விரைவில் தொடங்கப் பெற இருக்கிறது. தமிழ்ப் பண்பாடு கட்டடக்கலை, தமிழ்க்கணக்கு, வரலாறு, வானியல், சோதிட இயல், தொல்பொருள் இயல் போன்ற பல துறைகளில் உயர் மட்ட ஆய்வுகள் இம்மன்றத்தின் சார்பில் நடைபெறும். தமிழ், சமஸ்கிருதம், வரலாறு ஆகிய பாடங்களில் எம். ஏ. பட்டம் பெற்ற 24 பேர் இதில் சேர்த்துக் கொள்ளப்பெறுவர். மூன்று ஆண்டுகள் ஆய்வுப்பணியில் அவர்கள் ஈடுபடும்போது உண்டியும் உறையுளும் காசின்றிப் பெறுவர்,”

1974-இல் ‘தீபம்’ இதழுக்கு இவர் கொடுத்த பேட்டியில் இவ்விவரங்களைத் தெரிவித்திருக்கிறார். பேட்டியின் சில பகுதிகள் வருமாறு:

காரைக்குடி கம்பன் கழகம் எவ்வளவு ஆண்டுகளாகச் சிறப்பான பணி ஆற்றிவருகிறது? எதிர்காலத் திட்டங்களைக் கூறுவீர்களா?

காரைக்குடியில் கம்பன் கழகம் 1938 ஆம் ஆண்டு தொடங்கப்பெற்றது. முப்பத்து மூன்று ஆண்டுகளாக கவிச்

சக்கரவர்த்தி கம்பன் சிறப்பையும் இராமாயணத்தின் ஏற்றத்தையும், தமிழ் உலகிற்கு எடுத்துரைக்கும் பணியில் கம்பன் கழகம் முழுமையாக ஈடுபட்டிருக்கிறது. தமிழகத்தில் உள்ள பெரும்பேராசிரியர்கள் பலரும் ஆண்டுதோறும் கம்பன் விழாவில் பங்குபெற்றுக் கம்பனுடைய பெருமைகளையும், அவனுடைய காவியநீதிகளையும் எடுத்துரைத்து,நெறிதிறம்பா நேரிய வாழ்க்கைமுறைகளின் சிறப்பினை மக்களுக்கு உணர்த்து கின்றார்கள். ஆண்டுதோறும் விழாவெடுத்து கம்பன் புகழை யும், கன்னித்தமிழையும் வாழ்த்துவதோடு மட்டுமே கம்பன் கழகம் தன்பணியில் நிறைவுகாண விரும்பவில்லை. கம்பன் கழகத்தின் சார்பில் புதிதாகக் கட்டப்பட்டுவருகின்ற கம்பன் மணிமண்டபத்தில் கம்பன் பெயரால் கல்லூரி தொடங்கப்பட இருக்கிறது, மறைந்துவருகின்ற தமிழ்க்கலாச்சாரங்களையும் பண்பாட்டுச் சிறப்புக்களையும், உலகிற்கு எடுத்துரைக்கும் பணியில் 'கம்பன் கழகம்' ஈடுபடும்.

உலகின் தலைசிறந்த தத்துவங்கள் எனப் போற்றப் படுபவை கீழைநாட்டுத் தத்துவங்கள். கீழைநாட்டுத்தத்துவங் களை ஆராய்ந்த பிரெஞ்சுப் பேராசிரியர் ஒருவர் அத்தத்துவங் களின் மூலமனைத்தும் இந்தியாவைச் சார்ந்தது என்று குறிப் பிட்டு எழுதினார். அதை 'இந்தியத்துவம்' (*INDOLOGY*) என அழைத்தார். பிரெஞ்சுப் பேராசிரியர் குறிப்பிட்டுள்ள 'இந்தியத்து' வத்தை ஆராய்ந்து பார்த்ததில் நூற்றுக்குத் தொண்ணூறு விழுக்காடு தமிழ்த் தத்துவங்களாக இருக் கின்றன. தமிழ்த்தத்துவங்களை வெளிநாட்டினர் உணரத் தவறி, அதை 'இந்தியத்துவம்' என்றழைக் கின்றனர். ஆகவே கம்பன் கழகம் தொடங்க இருக்கும் 'கம்பன் கல்லூரியில் தமிழ்த்தத்துவங்கள்' (*TAMILOLOGY*) என்ற பிரிவு தொடங்கப்பட இருக்கிறது. அக்கல்லூரியில் தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய மும்மொழி இலக்கியங்களும், இந்தியக்கலையும் கட்டிடக்கலையும், இந்தியத் தத்துவமுறை கள், புதைபொருளாராய்ச்சி, கல்வெட்டாராய்ச்சி, நாணயங் களைப் பற்றிய ஆராய்ச்சி, சிற்பக்கலை விக்கிரகங்களைப் பற்றிய அடிப்படையை விவரிக்கும் கலை, பழங்காலச் சின்னங் களைப் பாதுகாக்கும் முறை, பழங்காலக் கணிதமுறை, கோள் நிலைகளை ஆராய்ந்து கையாளும் முறை, சமூக நாகரிக வரலாறு, இசை, நடனம்,வண்ணக்கலை,மொழிகளின் வரலாறு மதங்கள், நிர்வாக முறைகள் ஆகியவைகளும் பாடப்பிரிவு களாக அமைய இருக்கின்றன.

'கம்பன் மணிமண்டபம்' இன்னும் ஓராண்டிற்குள் முற்று பெறும் என எண்ணுகிறேன்.

கம்பன் விழாத் தொடர்பாக தங்களுக்கு ஏற்பட்ட சுவையான அநுபவங்களை 'தீபம்' வாசகர்களுக்கு கூறலாமா?

கம்பன் கழகம் தொடங்கப்பெற்று 33 ஆண்டுகளாகின்றன. கம்பனது பெருமையையும், இராமாயணத்தின் உயர்வையும் உலகிற்கு எடுத்துக் கூறுவதையே கடமையாகக் கொண்டுள்ளது. இக்கழகம் 33 ஆண்டுகளில் கம்பனை எதிர்த்தவர்கள், கம்பன் காவியத்தை எரித்தவர்கள், அவனுடைய கருத்துக்களைத் தகர்த்தவர்கள் போன்ற பலரையும் சந்தித்திருக்கிறது. இன்றுவரை நான் எவருடைய கருத்தையும் மறுத்துரைத்ததில்லை. கம்பனுடைய பெருமையை, சிறப்பை மக்களிடத்தில் சொல்வதை மட்டுமே என் கடமையாகக் கொண்டேன். பொறுமையுடன் அவன் புகழ்போற்றி நின்றதன் பயன், இன்று கம்பனை எதிர்த்தவர்கள் பாராட்டுகிறார்கள், எரித்தவர்கள் ஏற்றித் துதிக்கிறார்கள். இது கம்பனுக்கும் அவன் காவியத்திற்கும் கிடைத்துள்ள மகத்தான வெற்றியாகும் கம்பன் விழாவைச் செட்டிநாட்டு மக்கள் தெய்வீக விழாவாக மதிக்கின்றனர். பல்வேறு சூழ்நிலைகளின் பாதிப்புக்களிருந்த வேளையிலும் செட்டிநாட்டு மக்கள் எப்போதும்போல் கம்பன் விழா சிறப்போடு நடைபெறத் துணை நிற்கின்றனர்:

'கம்பன் விழா'வில் தங்களுக்கு உறு துணையாக விளங்குபவர்களைக் குறிப்பிடலாமா?

'கம்பன் கழகம்' தொடங்கப் பெற்ற காலத்தில் திரு சொ. முருகப்பா அவர்கள் உற்ற துணையாகத் திகழ்ந்தார். இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் திரு. எம். என். எஸ். டி. சிதம்பரம் அவர்களும், அதன் பின்னர் திருவாளர்கள் இராம சிதம்பரம், எம். மூத்துராமன். ஏ. எல். அழகப்பன், என் மெய்யப்பன் ஆகிய நண்பர்களும் துணைநின்று செயலாற்றுகின்றனர்.

'கம்பன் விழா' வைப்பற்றிச் சொன்னாலே பொதுமக்களுக்குப் பட்டி மண்டப நினைவு வருகின்றதே; பட்டி மண்டபங்கள் மக்களை அதிகம் கவர்கின்றனவா? கவியரங்கங்கள் கவர்கின்றனவா?

தற்காலத்தில் பட்டி மண்டபங்களில் வாதிடும் பழக்கத்தை ஏற்படுத்திய பெருமை கம்பன் கழகத்திற்கு

உண்டு. பட்டிமண்டபங்களும் கவியரங்கங்களும் மக்களைக் கவர்ந்துள்ளன என்றாலும், பட்டி மண்டப வாதங்களே மக்களைப் பெரிதும் கவர்ந்துள்ளன. கவியரங்கங்களில் பொருளும் சுவையும் நிறைந்த கவிதைகள் இடம் பெற்றவரை மக்கள் விரும்பி நின்றனர். தற்பொழுது கவியரங்கங்களில் சுவையும் பொருளும் நிறைந்த கவிதைகள் அருகி வருகின்றன. கவிபாடும் திறன் மிக்கவர்களை இலக்கிய அமைப்புக்கள் முறையாகப் பயன்படுத்திக் கவியரங்கங்கள் சிறக்க இனி வழி செய்ய வேண்டும்.

முடிவுரை :

கம்பன் பாடல்களைப் பிறர் பாட அல்லது கேட்டுக் கொண்டோ இருக்க அவர் விரும்பினார். பிறர் படிக்கத் தாம் அவற்றைக் கேட்ட நிலையிலேயே அவர் உயிர்பிரிந்தது சாலப் பொருத்தமே ஆகும். கம்பன் வாழ்க! கன்னித் தமிழ் வாழ்க! கம்பன் அடிப்பொடி வாழ்க!

# 19 மிதிலைப்பட்டிக் கவிராயர்கள்*

## பரம்பரைப் புலமை

செட்டி நாட்டில் தமிழ் வளர்த்த பெருமை ஏனையோரினும் பன்மடங்கு மிகுதியாக மிதிலைப் பட்டிக் கவிராயர் குடும்பத்தினருக்கு உண்டு. இவர்கள் பரம்பரையாகத் தமிழ்ப் புலமை வாய்ந்தவர்கள்.

## முன்னோர் வரலாறு

இவர்களுடைய முன்னோர்கள் மல்லை என்னும் ஊரில் வாழ்ந்தனர். இந்த மல்லை எது என்பது பற்றி வேறுபட்ட கருத்துக்கள் வெளியிடப் பெற்றிருக்கின்றன. சிதம்பரத்திற்கு மேற்கே 13மைல் தொலைவிலுள்ள சொல்லி மல்லை என்று இப்பொழுது வழங்கப் பெறும் ஊரே இந்த மல்லை என்று உறுதியாகக் கூறலாம். "தில்லைக்குச் சேர் தில்லை நாயகன் தந்த சிற்றம்பலவன் மல்லைக் கவிச் சிங்கம்" என்று ஆதி சிற்றம்பலப் பண்டாரத்தைப் பழந்தமிழ்ப் புலவர் ஒருவர் குறிப்பிடுவதாலும், கொல்லிமல்லையில் இப்போது வாழும் தேசிக மரபினரின் வாய் மொழியாலும் இது உறுதிப்படுகிறது. மேலும், இப் பாடலால், சிற்றம்பலப் பண்டாரத்தின் தந்தையின் பெயர் தில்லை நாயகப் பண்டாரம் என்பதும் தெரிகிறது.

இவர்கள் பண்டாரம் என்னும் வகுப்பினரென்றும் மிதிலைப் பட்டிக்கு வந்த பின்னரே "கவிராயர்" என்று

---

* இக்கட்டுரையில் கூறப்பெற்ற செய்திகளைத் தெரிவித்தும் சரிபார்த்தும் உதவியவர்கள்:- அழகிய சிற்றம்பலக் கவிராயரின் மகன் சிங்காரவேலுக் கவிராயர். அழகிய சிற்றம்பலக் கவிராயரின் பேரப் பிள்ளைகளான இராசாக் கவிராயர், சாமிநாதக் கவிராயர், மீ. இராமநாதக் கவிராயர், புலவர் சின்னைய சாத்திரிகள் நெற்குப்பை திருவாளர் இராம. விசுவநாதன் ஆகியோர். இச் செய்திகளைச் சேகரிப்பதற்காக இவர்களில் சிலர் மதுரை, புதுக்கோட்டை மிதிலைப் பட்டி, கொல்லிமல்லை ஆகிய இடங்களுக்கு இந்நூலாசிரியருக்காக 1954 இல் சென்றனர்.

கூறப்பட்டனரென்றும் பட்டயங்களால் தெரிய வருகின்றன. கவிராயர் குடும்பத்தினர் தில்லை நடராசரிடம் மிகுந்த ஈடுபாடுடைய வர்களாக இருந்தனர். இது ''மல்லைச் சிற்றம் பலம் தில்லைக் கடியான்'' என்னும் பழைய பாடற் பகுதியால் புலனாகும்.

## செட்டிநாட்டுத் தொடர்பு

சிந்தை நகர் என்னும் சிறு கூடற்பட்டியில் சிற்றரசராக விளங்கிய வேங்களப்ப நாயக்கரின் அமைச்சரும் சேனைத் தலைவருமான தீத்தாரப்ப முதலியார் தில்லை நடராசரின் உச்சிக்காலக் கட்டளையை நடத்தி வைக்கும் பொறுப்பைச் சிற்றம்பலப் பண்டாரத்தாரிடம் ஒப்படைத்து, அதற்கென மிதிலையை அடுத்த சிறுவாலவயல் என்ற கிராமத்தையும் கொடுத்ததாக மிதிலைச் சிவன் கோவில் அம்மன் சந்நிதி வெளிவாயிலிலுள்ள கல்வெட்டுக்களால் தெரிகிறது.

கவிராயர் குடும்பத்தினர் 16-ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் மிதிலையில் குடிபுகுந்தனர். இக்காலந் தொட்டு, செட்டிநாட்டுத் தொடர்பு இவர்களுக்குஏற்பட்டது.

## ஆதி சிற்றம்பலம்

கவிராயர் குடும்பத்தின், தலைவராகவிளங்கியவர் சிற்றம் பலம் என்னும் புலவர். இவருக்குப் பின்னர் இவர் பரம்பரை யினர் சிலருக்குச் சிற்றம்பலம் என்னும் பெயர் வழங்கி வந்திருப் பதால், குடும்ப முதல்வராகிய இவரைக் குறிப்பிடும் போது ''ஆதி சிற்றம்பலம்'' எனக் கவிராயர் குடும்பத்தாரும் ஏனை யோரும் குறித்து வந்தனர்.

ஆதி சிற்றம்பலம் குறவஞ்சி முதலிய பல பாடல்களை இயற்றியுள்ளார். கருத்துச் செறிவு, கவிதை நயம், பொருட் சுவை முதலிய யாவும் இவர் பாடல்களில் மலிந்துள்ளன. இவற்றின் சிறப்பை உணர்ந்த வேங்களப்ப நாயக்கர் இவரைக் காண விரும்பினார். சிற்றம்பலர், அவர் பேரில் குறவஞ்சிப் பிரபந்தமொன்று பாடிச் சென்று, சாலிவாகன சகாப்தம் 1571 (கி. பி 1648) சர்வதாரி ஆண்டு, வைகாசித் திங்கள். ஆறாம் நாளில் மிதிலைப் பட்டிக் கிராமம் முழுவதையும் தான சாசனமாகப் பெற்றார். இதனை,

''மழைக்கன்ன தாரைக் கடாயானை சிந்தையின் மன்னன் கைம்மா
அழைக்கு முன்னே வந்த வேங்கள பூபன் சிற்றம்பலம் பால்
உழைக்கன்ன லாறு பெருக மிதிலை நல் லூரிற் செல்வம்
தழைக்க வெந் நாளும் மிதிலா புரியெனத் தந்தனனே''

என்ற பாடல் கவிராயர் வீட்டின் முன்னுள்ள கல்லில் பொறிக்கப் பட்டிருப்பதிலிருந்து அறியலாம். இதனைக் கூறும் செப்புப் பட்டயங்களும் உள. அந்நாளிலிருந்து மிதிலைப் பட்டிக் கிராமம் சிற்றம்பலப் பண்டாரத்தார்க்குச் சொந்த ஊராகி விட்டது. இவ் வூரிலேயே இவரும் இவர் குடும்பத்தாரும் வாழ்ந்து வரலாயினர்.

''முத்தமிழ் மன்னர் முறைசெய் துயர்ந்த
இத்தரை போற்றும் இன்தமிழ் நாட்டுள்
சீர் பெறு கலைமகள் செந்தமிழ் வளர்க்கப்
பேர் பெறு கவிஞரைப் பேணிய பேரூர்
உற்றநற் றமிழுக்கு உரையாணி என்னும்
சிற்றம் பலவன் தேடிய மிதிலை''

என்னும் பாடலில், மிதிலைப் பட்டிக் கிராமம் ஆதிசிற்றம்பலப் பண்டாரம் சம்பாதித்தது என்றுஅழகிய சிற்றம்பலக் கவிராயர் அவர்கள் பேரர் இராமநாதன் கூறுகிறார்.

ஆதி சிற்றம்பலவர் பாடிய நூல்கள் அளவில, இவர் தம் காலத்துச் சிற்றரசர் பலராலும் பெரிதும் ஆதரிக்கப் பெற்றுப் பல கிராமங்களும் வரிசைகளும் பெற்றிருக்கின்றார். அரசர் களிடம் யானை முதலிய பலபரிசுகளையும் இவர்பெற்ற செய்தி பழம் பாடல்களாலும் இவர் வீட்டு வாயிலிற் காணப்படும் யானைகட்டும் கற்களாலும் தெரியவருகிறது. தமக்கு கிடைத்த பரிசில்களைப் பிற புலவர்களுக்கும் கொடுத்து, அவர் களாலும் பாராட்டப் பெற்ற பெருமை இக்குடும்பத்தினருக்கு உண்டு. இதனை,

''அடுத்துக் கவி சொல்லி வந்தோர்க்குச் செம்பொன்னை அள்ளி அள்ளி
கொடுத்துப் புகழணி மல்லைச் சிற்றம்பலக்கொற்ற வன்றான்
தொடுத்துக் கவி சொல இந்தா இந் தாவென்று சொற்களைத்தாம்
எடுத்துக்கை நீட்டுவள் வெண்டா மரையில் இருப்பவளே''

என்ற பாடல் உணர்த்தும்.

தங்களுக்குப் பல்வேறுவகையான ஊழியங்கள் செய்வதற்கும் பல்லக்கு தூக்குவதற்கும் ஆட்கள் நியமித்து, அவர்கட்கு மானியங்கள் விட்டுக் கொடுத்து கவிராயர்கள் சிற்றரசர்கள் போல வாழ்ந்து வந்தனர்.

ஆதி சிற்றம்பலவர் ரகுநாத சேதுபதி பேரில் பாடிய தளசிங்கமாலையையும், ஆதி சிற்றம்பலவரைக்குறித்துஏனைய புலவர்கள் பாடிய தனிப்பாடல்களையும் தொகுத்து புலவர் மு. சின்னையா சாத்திரியார் அவர்கள் நூலாக்கியிருக்கிறார்கள். ஆதி சிற்றம்பலவர், ரகுநாத சேதுபதியிடமிருந்து செவ்வூர் என்னும் சிற்றூரைப் பரிசலாகப் பெற்றனர் என்றும் அதைத் தம் மகளுக்கு வழங்கினார் என்றும் கூறுவர்.

## குழந்தைக் கவிராயர்

ஆதி சிற்றம்பலவருக்குப் பின் கவிராயர் மரபில் புகழ் பெற்றிருந்தவர் மிதிலைப்பட்டிக் குழந்தைக் கவிராயர் என்பவர். இவர் 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதி இடைப்பகுதிகளிலும் வாழ்ந்தவர். இவர் இயற்றியமான்விடுதூதுஎன்னும்நூலை, குறிப்புரையுடன் டாக்டர் உ.வே. சாமிநாத அய்யர் அவர்கள் 1936 இல் பதிப்பித்துள்ளார்கள். இந்நூல் மானின் பெருமையைப்பல படியாக எடுத்துக்கூறுகிறது. ஆசிரியருடைய நூலறிவும்புலமைத்திறமும் இதன் வாயிலாக வெளிப்படுகின்றன. 301 கண்ணிகளாகிய இந்நூலில் சொல் நயம், பொருள்நயம் இரண்டும் செறிந்துள்ளன.

இக்கவிராயர் பாடிய தனிப் பாடல்கள் சிலவற்றைக் கேட்டு, சிவகங்கைக் குறுநிலமன்னரின் அமைச்சராக இருந்த தாண்டவராயப் பிள்ளை இவருக்கு ஓராயிரம் கலம் நெல் வழங்கினாரென்பர்.

மான் விடுதூதில் பாட்டுடைத் தலைவராகிய தாண்டவராயப் பிள்ளை முல்லை யென்னும் ஊரினர்; கார்காத்த வேளாளர்; கல்வியிற் சிறந்தவர்: இசைப்பயிற்சியுடையவர்: தமிழ் புலவரை ஆதரித்தவர்; இவரை 'நாவலர் தரு; வாணர் புரவலன்' என்று குழந்தைக் கவிராயர் போற்றியிருக்கிறார்.

குழந்தைக் கவிராயருக்குப் பிறகு இக்குடும்பத்தில் பெரும் புலவராக விளங்கியவர் அழகிய சிற்றம்பலக் கவிராயர், இவர் கீரணிப்பட்டி அம்மன் மீது சிலபாடல்களும் விறலிவிடு தூது முதலிய நூல்களும் பல தனிப் பாடல்களும் பாடியிருக்கிறார், இவர் நாள்தோறும் உணவு உட்கொள்ளுதற்கு முன்பு தினகவி என்ற வகையில் ஒவ்வொரு பாட்டு முருகன் மேல் பாடுதல் வழக்கம். அப்பாடல்களின் தொகுதி ஓலைச்சுவடி வடிவில் இன்று அடையாறு நூல்நிலையத்தில் உள்ளது.

மான் விடு தூது பாடிய குழந்தைக் கவிராயர் மகள் செவ்வந்திப்பூ அம்மாள் என்பவர் மிதிலைப்பட்டி சண்முகக் கவிராயர் பாடி 1912-ஆம் ஆண்டில் இராங்கியம் மெ. மு. மெ. மெய்யப்ப செட்டியாரவர்களால் அச்சிட்டு வெளியிடப்பட்ட அரிச்சந்திரன் அம்மானைக்குச் சாற்றுக் கவி கொடுத்துள்ளார். இதனால் கவிராயர் குடும்பத்தில் பெண்களும் நல்ல கல்வி கேள்வியறிவுயுடையவர்களாய் இருந்திருக்கிறார்கள் என்பது தெரிகிறது.

குழந்தைக் கவிராயர் தந்தையாராகிய மங்கைபாகக் கவிராயர் நத்தம் ஜமீன்தார் மகனாராகிய சொக்கலிங்கநாயகர் மீது வருகைக் கோவை என்னும் நூலைப்பாடி *பூசாரிப்பட்டி என்னும் ஊரைப் பரிசிலாகப் பெற்றார்.

குழந்தைக்கவிராயர் சிவகங்கை சமஸ்தானப் பிரதானி யான தாண்டவராயப் பிள்ளை தமையனாராகிய இராம கிருஷ்ணப்பிள்ளையையும் நத்தம் ஜமீன்தார் ஒருவரையும் புதுக்கோட்டை அரசர் திருமலைத் தொண்டைமான் என்ப வரையும் தனிப்பாடல்களால் பாடியிருக்கிறார்.

சரசுவதி மகால்

கவிராயர் வீட்டில் 'சரசுவதி மகால்' என்றொரு பகுதி இருக்கிறது. அங்கே புலவர்கள் கூடிப் பல பொருள்களையும் பற்றி உரையாடி இன்புறுவது வழக்கம். கவிராயரது பங்காளி வீடுகள் இம் மகாலைச் சுற்றியுள்ளன. வீம கவி. முத்தப்பஐயா முதலிய பெரும்புலவர்கள் இங்குப்பலநாட்கள் தங்கிக் கவிமழை

* இச் செய்திகள் கலைக் களஞ்சியம், 4 ஆம் தொகுதி 88–89 ஆம் பக்கங்களில் உள்ளன.

பொழிந்து, கலைப் பயிரை வளர்த்திருக்கிறார்கள். சரசுவதி மகாலிலேயே ஏட்டுப் பிரதிகள் பலவற்றைப் பல பெட்டிகளில் இக்கவிராயர் குடும்பத்தினர்வைத்துப் பாதுகாத்து வந்தனர்.

மணிமேகலை*

மேற்கண்ட செய்தி அறிந்த டாக்டர் சாமிநாத ஐயரவர்கள் அங்குச் சென்று, பல நாட்கள் தங்கியிருந்து சுவடி ஆராய்ந்தார்கள். அங்கு மணிமேகலை முழுவதும் ஓலைச் சுவடி வடிவில் கிடைத்தது. ஒரு கணம் நினைத்துப் பாருங்கள்! கவிராயர் பரம்பரை மணிமேகலைச் சுவடியைக் காப்பாற்றத் தவறி இருந்தால் இன்று நாம் அந்த இலக்கியத்தை எப்படிப் பெற்றிருக்க முடியும்? மணிமேகலை முகவுரையில் டாக்டர் சாமிநாத ஐயர் அவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்.

> "......இவற்றுள் (எனக்குக் கிடைத்த மணிமேகலைப் பிரதிகள் 10-ல்) மிகப் பழைமையானதும், பரிசோதனைக்கு இன்றியமையாததாய் இருந்ததும் மற்றைப் பிரதிகளில் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் போகிய பாகங்களை எல்லாம் ஒழுங்குபடச் செய்தும், கோப்புச் சிதைந்து, அழகு கெட்டு, மாசு பொதிந்து கிடந்த செந்தமிழ்ச் செல்வியின் மணிமேகலையை அவள் அணிந்து கொள்ளும் வண்ணம் செப்பஞ்செய்து கொடுத்தது மிதிலைப்பட்டிப் பிரதியே".

அழகிய சிற்றம்பலக் கவிராயர் (1853—1910)

இவரே டாக்டர் சாமிநாத ஐயர் அவர்கட்குக் கணக்கற்ற தமிழ் ஏடுகளை வழங்கியவர். இக்கவிராயர் தம் முன்னோரைப் போலப் பாடிப் பரிசு பெற்று வாழ்ந்தவரல்லர். சேதுசமஸ்தான மகாவித்துவான் ரா. இராகவ ஐயங்காரவர்கள் ஒரு முறை மிதிலைப் பட்டிக்கு ஏடுகள் பார்க்க வந்திருந்த போது இவர் அவரை வரவேற்று வேண்டிய உதவிகளைச்செய்தார். ஐயங்கார் அவர்கள் இராமநாதபுரம் சேர்ந்தபின், சில மாதங்கள் சென்று அழகிய சிற்றம்பலக் கவிராயரை அங்கு வரும்படியும், வந்தால் சேது மன்னரிடம் சொல்லி அவர் பெருமைக்குத் தக்கவாறு சன்மானம் வாங்கித் தருவதாகவும் கடிதம் எழுதி இருந்தும் பரிசு பெறக் கவிராயர் விரும்பவில்லை.

---

* சிலப்பதிகாரச் சுவடி மிதிலைப்பட்டியில் கிடைத்த செய்தியை இந்நூலின் 41 ஆம் பக்கத்தில் காண்க.

புலவர் சின்னைய சாத்திரியார்

அழகிய சிற்றம்பலக் கவிராயருக்குப் பின்னர் இக்குடும்பத்தில் தமிழ்ப் புலமை குன்றியது. ஆங்கில ஆட்சியின் பயனாக ஆங்கில மொழி அறிவு பெற்றவர்களுக்குப் பெருமதிப்பு நிலவியதையறிந்து, அவருடைய பேரப்பிள்ளைகளும் ஆங்கிலக் கல்வி பயில்வாராயினர். கவிராயர் குடும்பம் தமிழ்த்தொடர்பு அற்றதாகி விட்டது. இந்நிலையில் மீண்டும் அக்குடும்பத்தாரிடையே தமிழார்வத்திற்கு வித்திட்ட பெருமை, யாழ்ப்பாணம் பருத்தித்துறை தும்பை நகர்ப் புலவர் மு. சின்னைய சாத்திரியாரவர்கட்கே உரியது. இவர்கள் சிறந்ததமிழறிஞர்; 1925முதல் கவிராயர் குடும்பத்துடன் நெருங்கிய தொடர்புகொண்டு அழகிய சிற்றம்பலக் கவிராயரின் மகன் வழிப்பேரனான மீ. இராமநாதன் அவர்கட்குத் தமிழ்க்கல்வி புகட்டிய அறிஞர் இவரே. மீ. இராமநாதன் அவர்கள் 1948 முதல் பல பாடல்களையும் கட்டுரைகளையும் பல இதழ்களில் வெளியிட்டு வருகிறார். இவர் தம் ஆசிரியர் சின்னையசாத்திரியார் 3-3-49இல் இலங்கை சென்ற போது அவருக்குப் படித்துக் கொடுத்த பிரிவு உபசாரப் பத்திரத்தில் பின்வருமாறு கூறுகிறார்:

செந்தமிழ் சேர் நிலத்திலற மினிதெழுந்து
நடம்புரிந்து சீர்மிக் கோங்க
வந்தவனாம் வள்ளுவனின் திருக்குறளை
மருவறவே மனத்துட் கொண்டு
சிந்தைகளித் திடஎனது பகுத்தறிவு
விருத்தியுறச் செப்புஞ்சில!
இந்தநிலம் அண்மையில் மீண் டெல்லவர்க்கு
மினியதமிழ் இயம்புவாயே!
செந்தமிழா சிரியர்களிடம் திலகமொத்த
சின்னைய னென்னும் வேளே!
மந்தமதியி னர்க்கரிய சித்தாந்த
நூல்தேர்ந்த மனத்து யோயே!

செந்தமிழிற் றேர்ச்சி பெற்ற கவிராயர்
வாழ்மிதிலை சிறக்க வந்தோய்
வந்தின்னும் மிதிலையூர் மகிழ்சிறக்கப்
பிரசங்க மழைபெய்வாயே!

இப்பாடல்களிலிருந்து புலவர் சின்னைய சாத்திரியார் அவர்களிடம் கவிராயர் குடும்பத்தினர் எத்தகைய ஈடுபாடு உடையவர்களாக இருக்கின்றனர் என்பது தெரிகிறது. புலவர் புகட்டிய தமிழார்வமும் ஒருவாறு புலனாகிறதன்றோ?

ஆதிசிற்றம்பலக் கவிராயர் இயற்றிய கொடுங்குன்ற புராணமென்ற நூலைப் பதிப்பித்து வெளியிடும் முயற்சியில் புலவர் சின்னைய சாத்திரியார் ஈடுபட்டிருந்தார்.

## ஐயா வீடு

கவிராயர்கள் மிதிலைப்பட்டி மக்களுடன் நெருங்கிப் பழகி வருகின்றனர். நகரத்தார்களும் கவிராயர் குடும்பத்தாரும் அண்ணன் தம்பி மாமன் மைத்துனன் என்று உறவு முறை கொண்டு வாழ்ந்து வருகின்றனர். கவிராயர்களைக் கலந்து முடிவு செய்யாமல் நகரத்தார்கள் எச்செயலையும் செய்வதில்லை. கவிராயர் குடும்பத்தினரும் அவ்வாறே. இன்றும் கவிராயர் இல்லத்தை "ஐயா வீடு" என்று அழைத்து அவ்வூர் மக்கள் பெருமைப்படுத்தி வருகின்றனர்.

கவிராயர் பரம்பரையினர் முருகன்மேல் இடையறாத அன்பு பூண்டவர்கள். ஆண்குழந்தை பிறந்தால் பழனிக்குச் சென்று முடி இறக்கிக் காது குத்துதலும், பெண் குழந்தை பிறந்தால் குன்றக்குடி போதலும் அவர்கள் குடும்பத்தில் வழக்கமாக இருந்து வருகிறது. மிதிலைப்பட்டிக் கிராமத்திலிருந்து கிடைக்கும் வருவாயைக் கொண்டு, சிதம்பரம் தில்லைக்கூத்தனுக்கு இன்றும் உச்சிக்காலக் கட்டளை செய்து வருகின்றனர். மிதிலைப்பட்டிக் கோயில்களில் ஆதிசிற்றம்பலக் கவிராயர் காலந்தொட்டு இன்றுவரை முதற்காளாஞ்சி முதலிய மரியாதைகள் கவிராயர் குடும்பத்திற்குத்தான் நடந்து வருகின்றன. உற்சவ காலங்களிலும் முதல் மண்டகப்படி இவர்களுடையதே. இவையெல்லாம் தமிழ்ப்புலமை தந்த தலைமையன்றோ!

## ஏடுகள்

மிதிலைப்பட்டியிலும், செவ்வூர், சிறுவயல், புதுப்பட்டி, வயிரவன்பட்டி, குன்றக்குடி ஆகிய ஊர்களிலும் இருந்த தமிழ் ஏடுகளைப் பெறுவதற்காக டாக்டர் உ. வே. சாமினாத

ஐயர் அவர்கள் 1920ஆம் ஆண்டு செப்டம்பர் திங்களில் மீண்டும் செட்டி நாட்டில் சுற்றுப் பயணம் செய்தார்கள். அந்தப் பயணத்தின் இறுதியில் திருவாவடுதுறையிலிருந்து 22—9—1920இல் பண்டிதமணி அவர்களுக்கு டாக்டர் சாமிநாத ஐயர் அவர்கள் எழுதிய கடிதத்தின் ஒரு பகுதி வருமாறு :

> ''நகரப் பிரதேசங்களுள், இதுவரையில் நான் பாராத இடங்களையெல்லாம் பார்த்தமை பெரும் பேறாகக் கருதப்படுகின்றது. நம்மவர் ஏற்பாடுகளெல்லாம் மிக வியக்கற்பாலனவாக உள்ளன. நல்லவிஷயத்தில் இங்ஙனம் ஒழுங்குபட்டிருப்போரை வேறு எவ்வகை யாரிலும் கண்டிலேன்.''

ஏடுகளை வழங்கியதோடு அமையாது, அவற்றைப் பதிப்பிப்பதற்காகப் பொருளுதவி செய்த சிறப்பும் செட்டி நாட்டுக்கு உண்டு. இவ்வகையில் உதவி செய்தவர்களுள் வயிநாகரம் இராமநாதன் செட்டியார், தீ. நா. முத்தையா செட்டியார், சிறுவயல் குறுநில மன்னர் முத்துராமலிங்கத் தேவர் போன்ற பலரை டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்பிட்டிருக்கிறார்.

டாக்டர் சாமிநாத ஐயர் அவர்கள் ஏடுகளை மிதிலைப்பட்டியிலிருந்து பெற்ற செய்தி வெளியானதும், அங்கு வந்து எஞ்சிய ஏடுகளையும் பெறுவதற்கு முயன்றவர் பலர். தமிழ்ச்சுவடிகளை வெளியிட்ட பதிப்பாசிரியராகிய யாழ்ப்பாணம் தாமோதரம் பிள்ளை அவர்களும்தாம் புதுக்கோட்டையில் நீதிபதியாக இருந்தபோது, செட்டிநாட்டிலுள்ள சில ஊர்களில் ஏடுகளைப் பெற்றார். சில இடங்களிலிருந்த ஏடுகள் டாக்டர் சாமிநாத ஐயர் அவர்களுக்குக் கிடைக்கவும் அவரே காரணமாக இருந்தார். மிதிலைப்பட்டியில் வந்து ஏடுகளைப் பெற்று, பின்னர் அவற்றில் ''பற்றுவரவு'' செய்த பெருமக்களும் பலர். கவிராயர் குடும்பத்தினர் ஏடுகளை அன்பளிப்பாக வழங்குவதையே தமது இயல்பாகக் கொண்டவர்கள். அந்த ஏடுகளின் வாயிலாகத் தமிழ் நூல்கள் வெளிவர வேண்டுமென்பதே அவர்களுடைய விருப்பம். அவற்றைக் கொண்டு பொருள் சேர்த்துவிட வேண்டுமென்ற கருத்து அணுவளவும் அவர்களுக்கு இல்லை. மிதிலைப்பட்டியிலிருந்து கடைசியாக ஏடுகள் பெற்றவர்கள் சென்னை அரசியலாரின் ஓலைச்சுவடி நூல் நிலையத்தார். இந்நிலையத்தின் காப்பாளர்

1953-இல் அங்குச் சென்று 255 ஏடுகளை எடுத்துக் கொண்டு வந்திருக்கிறார். கவிராயர் குடும்பத்தின் கணக்குகள் ஓலைச் சுவடிகளிலேயே எழுதப் பெற்றிருந்தனவாம். அவற்றைக் கூட அவர் விட்டுச் செல்லவில்லை. ஓராண்டுக்குப் பின்னர் அவற்றைத் திருப்பியனுப்புவதாக அவர் சிங்காரவேலுக் கவிராயர் அவர்களுக்கு எழுதியிருந்தார். கொடுத்ததைத் திருப்பி வாங்கிக் கொள்ளும் வழக்கம் கவிராயர் வீட்டில் இல்லையே!

மிதிலைப்பட்டியிலிருந்து 15 கி. மீ. தொலைவிலுள்ள பொன்னமராவதி புதுப்பட்டியில் 1952 ஏப்பிரலில் பத்துப் பாட்டைப் பற்றிய சில ஏடுகளும் எட்டுத் தொகையில் நற்றிணைப் பகுதி அடங்கிய ஏடுகளும் தூது, மடல் சம்பந்த மான சிலஏடுகளும், புரவலர் கருமுத்து தி.சுந்தரம், புலவர் கதி. சுந்தரம் ஆகியோர் துணையோடு பேராசிரியர் ஔவை துரை சாமிப்பிள்ளை அவர்கள் பெற்று வந்தார்கள். அங்கிருந்து வேறுபல சுவடிகளைச் சென்னை அரசியலாரின் ஓலைச்சுவடி நூல்நிலையத்தார் 1954-இல் பெற்றுள்ளனர். அம்மானை, நாடக நூல்கள், தனிப்பாடல்கள் ஆகியவை அடங்கிய ஏடுகள் பல வற்றைப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்களுக்கு இந்நூலாசிரியர் (சோமலெ) 1953-இல் அனுப்பி வைத்தார்.

# 20. பாடுவார் முத்தப்பர்

திருமதுரைச் சிவல்பட்டி என்னும் கீழைச்சிவற்பட்டி ஊரினர் முத்தப்பர். தோன்றும் போதே கவியாய்த் தோன்றியவர். கவிபாடும் திறமையை இயல்பாகப் பெற்றவர். பின்னர் நிகழவிருக்கும் நிகழ்ச்சிகளை முன் கூட்டித் தெரிவிக்கும் பேராற்றல் நிறைந்திருந்தவர்.

## காலம்

இவர் பிரமோதூத ஆண்டில் பிறந்தார். சர்வசித்து ஆண்டில் காலமானார் என்று சிலரும் சுபானு ஆண்டில் தான் இறந்தார் என்று வேறு சிலரும் கூறுவர். எந்தப் பிரமோதூத எந்தச் சர்வசித்து, எந்தச் சுபானு என்று உறுதியாகச் சொல்லுவதற்கில்லை. இவை அறுபது ஆண்டுகளுக்கு ஒருமுறை மீண்டும் மீண்டும் வருவன. 19 - ஆம் நூற்றாண்டின் தொடக்கதில் வாழ்ந்தவர் என்று பொதுப்படையாகக் கொள்ளலாம்.

பாடுவசர் என்பது இவருக்கு வழங்கப் பெற்ற பட்டப் பெயர் ஆகும். பாடுவார் என்பது ஓதுவார் என்னும் சொல்லைப் போல வினையாலணையும் பெயர். இந்தப் பட்டப் பெயர், இவருடைய புலமை, எக்காலத்தும் பாடும் இயல்பு ஆகியவற்றுக்குச் சான்று பகரும்.

அழகப்பர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. தே. சொக்கலிங்கம் எழுதியிருக்கும் கட்டுரைகள், தேவகோட்டை உ. ராம. மெ. சு. சேவு, மெய்யப்ப செட்டியார் – உமையாள் ஆச்சி மணிவிழாமலர் ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்டு பின்வரும் பகுதியை எழுதியிருக்கிறோம்.

## நூல்கள்

சீரிய பதிப்புக்களாகப் பின்வரும் நூல்கள் வெளி வந்துள்ளன.

| | |
|---|---|
| செயங்கொண்டார் சதகம் | சென்னை ஓரியண்டல் மானுஸ் கிரிப்ட்டு லைப்ரெரி வெளியீடு |

| | |
|---|---|
| 2. செயங்கொண்டார்சதகம் | பதிப்பு : கி. பி. 1893, பதிப்பித்த வர்கள் கீழச்சிவல்பட்டி. ஆ. பெ அரு. பழநியப்ப செட்டியார் அரு. அ. சி. மு. சின்னமுத்தப்ப செட்டியார் |
| 3. திருமுகவிலாசம் | பதிப்பு : 1905: பதிப்பாசிரியர் தஞ்சை சதாவதானம் சுப்பிர மணிய ஐயர் |
| 4. செயங்கொண்டார்சதகமும் திருமுகவிலாசமும் | பதிப்பு 1925. மதுரை விதீவான் நா கிருஷ்ணசாமி நாயுடவர்கள் பதிப்பித்தது. |
| 5. முத்தப்பர் நூல்களும் தனிப்பாடல்களும் | பதிப்பு 1954 : பதிப்பித்தவர் பி. அழகாபுரி ராம. மு. க. மு. நாராயணன் செட்டியரர் |
| 6. செயங்கொண்டார் வழக்கம் | பதிப்பு 1959 திருப்பனந்தாள் வெளியீடு |
| 7. நகர வாழ்த்து | பதிப்பு 1951 பதிப்பாசிரியர்கள் நா. நடராசன். ராம. நாகப்பன் |

முத்தப்பர் படைத்த திருமுக விலாசம், செயங்கொண் டார் சதகம், பஞ்சாட்சர வருக்க பூஷணம் என்னும் நூல்களைப் பதிப்பித்த தமிழ் வித்துவான் மதுரை திரு நா. கிருஷ்ணசாமி நாயுடு, முத்தப்பர் பின்வரும் நூல்களையும் பாடியதாகக் குறித்திருக்கிறார்.

1. செயங்கொண்ட சோழீசர் பிள்ளைத் தமிழ்
2. செயங் கொண்ட சோழீசர் பதிற்றுப் பத்தாந்தாதி
3. செயங்கொண்ட சோழீசர் கலிதிதுறையந்தாதி
4. செயங்கொண்ட சோழீசர் ஊசல் திருநாமம்
5. நேமநகர்க்கலம்பகம்.

இக்காலத்தெழுந்த ''சதகங்களின் சிறப்பு'' என்னும் நூலால் ''செட்டிமார் வரலாறு'' என்பதும் இவர் பாடியதென அறிகின்றோம்.

ஏராளமான தனிப்பாடல்களையும் இவர் பாடியிருக்கிறார். கீழ்க்கண்ட நூல்களும் முத்தப்பர் இயற்றியதாகக் கருதப்படுகிறது.

1. மருதம் பிள்ளையார் பதிகம்
2. கீரணிப்பட்டி முத்துமாரியம்மன் பதிகம்
3. பழநியாண்டவர் பதிகம்
4. குன்றக்குடி முருகன் பதிகம்
5. நகர வாழ்த்து
6. உச்சினி மாகாளியம்மன் கும்மி
7. இராங்கியம் கருப்பர் குளுவ நாடகம்
8. குதிரையடி விருத்தம்

''காடுவெட்டிப் போட்டுக் கடிய நிலந்திருத்தி
வீடுகட்டிக் கொண்டிருக்கும் வேள்வணிகர் - வீடுகட்கு
அன்றைக்கு வந்திட்ட அம்மா இலக்குமி நீ
என்றைக்கும் நீங்கா திரு''

என்னும் பாடல், முத்தப்பர் பாடியவற்றுள் பெரிதும் பரவிப் புகழ் பெற்றது.

இவர் கல்வி கேள்விகளில் வல்லுனராகி, கவிபாடும் திறம் பெற்றிருந்தது பின்வரும் தனிப்பாடலால் தெரிகிறது.

''திருமதுரைச் சீர்பட் டிளையாற்றங் குடிச்செட்டி
சீமா னென்று
முருமத னழகப்ப னுதவியமுத் தையனெனு
மொப்பில் சிங்க
மருமறைசாத் திரங்களோ டாகமங்கள் புராணங்க
ளனைத்துந் தேர்ந்து
பெருகுபழ மொழிநூறுங் கதைநூறுஞ் சதகமென்ப
பேசிற் றாமால்.''

இவரது 'செயங்கொண்டார் விளக்கம்' பழமொழிகளை ஈற்றடியாக வைத்து, பழங்கால இதிகாச புராணக்கதை மேற்கோள்களுடன் குருவிருத்தப் பாடல்களாக அமைந்தது.

*சில பாடல்கள்*

ஆங்கிலேயர் ஆட்சி தொடங்கியவரை நகரத்தார் முத்து பவளம், மற்றும் உப்பு வாணிகத்தை உள் நாட்டிலும் வெளி நாடுகளிலும் செய்து வந்தனர். உப்பு வாணிகம் செய்த காலத்தில், திருமணத்திற்கு முந்தின நாள் சம்பந்தி வீட்டிற்கு ஒரு மூட்டை உப்பு அனுப்பும் பழக்கம் நிலவியது. இன்றும் இது தொடர்ந்து கடைப் பிடிக்கப்படுகிறது. முத்தப்பர் கீழைச்சிவற் பட்டிச் சந்தையில் உப்பு வாங்கி, சுற்றுப்புறச் சிற்றூர்களில் விற்று வந்தார்.

இளைஞர் முத்தப்பர், தன் தாயாரிடம் ஒரு பணம்* பெற்று, சந்தைக்குச் சென்றார் உப்பு வாங்க.

பணத்தைக் கொடுத்து, பத்துப்படி உப்பை அளந்து கட்டி மூட்டையாகத் தூக்கிக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டார். சந்தை வாயிலை அடைந்தார். ஆயக் கட்டணம் கேட்டான், ஆயக்காரச் சிவராமன். முத்தப்பரிடம் அவன் கேட்ட மூன்று காசு இல்லை. வீட்டுக்குப் போய், காசு வாங்கிக் கொண்டுவந்து கொடுத்து விட்டு உப்பு மூட்டையைத் தூக்கிச் செல்லுவதாகச் சொன்னார், அவன் இசைந்தானில்லை.

மனம் நைந்த முத்தப்பரின் ஆத்திரம் பாட்டாகப் பிறந்தது.

''தாயைக் கேட்டோர் பணம் வாங்கிச் சந்தைதேடி உப்பளந்து
மேயப்போகும் பசுவைப் போல் மேற்கேநாடிப் போகுங்கால்
தோயப் போட்டு வழிமறித்தான் தோசிமுகத்து வெள்ளாளன்
ஆயக்காரன் சிவராமன்வீடு அடியோடெரிந் தழிந்திடவே''

என்பது இப்பாட்டு. பாட்டெழுந்தது. ஆயக்காரன் வீடு எரியுண்டது. அன்று தான் கவிஞர் சொல் திறனை ஊரறிந்தது. இதுபோல் எண்ணற்ற நிகழ்ச்சிகள் முத்தப்பரின் வாழ்வில்நிகழ்ந்திருக்கின்றன. வாழ்த்திப் பாடியவையும் எண்ணற்றவை. அரியக்குடி, கோட்டையூர் செவ்வூர் முதலிய பல ஊர்களையும் பாடியுள்ளார். வெண்பாப் புலிக்கவிராயர் என்னும் புலவர் இவருடன் போட்டியிட்டுத் தோல்வியுறுகின்றார். அவ்வமயம் ஆட்டுத் தலையை அதனுடலுடன் ஒட்டப் பாடினார். செட்டிநாடு மழை

---

* பணம் = இன்றைய 12 காசு. எட்டுப் பணம் ஒரு ரூபாய்க்குச் சமமானது.

யின்றி வாடியபோதெல்லாம் பாடல் பாடி மழை பெய்யச் செய்திருக்கின்றார்.

தம் மக்கள் அறுவரைப் பற்றியும் ஒரு பாட்டுப் பாடினாராம்.

சர்க்கரைக் கருப்பஞ் செட்டி
சவ்வாது அழகஞ் செட்டி
சீனி மெய்யஞ் செட்டி
செவத்த ராமஞ் செட்டி
துடுக்கான முருகஞ் செட்டி
எங்கும் பராபரம் ஏகப்ப செட்டி

முத்தப்பர் தம்மகனுக்குத் திருமணம் ஏற்பாடு செய்திருந்தார். திருமணத்திற்கு முதல்நாள் அவர்வீடு தீப்பற்றிற்று. கல்லாப் பேட்டைக் குறுநில மன்னருக்கு ஒரு சீட்டுக்கவி எழுதியனுப்பினார்.

பொன்னை நம்பி அழகிருக்கும்
பூவைநம்பி மணமிருக்கும் புகழுமேகம்
தன்னை நம்பி பயிரிருக்கும்;
தமிழைநம்பி உரையிருக்கும் தகைமையன்றே!
முன்னையநாள் ராம னுக்கு
வீடணன்வந் துதவியின முடித்தாற்போல
உன்னை நம்பி நானிருப்பேன்
நீஎனக்கு இவ்வேளை உதவுவாயே!

என்ற பாடலைப் படித்துப் பார்த்தார், குறுநில மன்னர் முத்துப் பாலுத்தேவர். கல்லாப்பேட்டை முதலிய எட்டு ஊர்களிலும் முரசு முழங்கிற்று. "அரைஞாண் கட்டிய பிள்ளை முதற்கொண்டு அத்தனை ஆண் மக்களும் தவறாமல் ஆளுக்கு ஓர் ஓலை, ஒரு நார், ஒரு வரிச்சு (வேய்ங்கம்பு) ஆகியவற்றோடு பாடுவார் முத்தப்ப ஐயா வீட்டுக்குப் போய் பொழுது விடிவதற்குள் வீட்டைப் புதுப்பித்து மண்பூசி, கூரை வேய்ந்து கொடுத்துவிட்டு அரண்மனைக்கு வந்து சேர வேண்டும்" என்று கட்டளை பிறந்தது. முரசு கேட்ட மக்கள் கடலலைபோலத் திரண்டெழுந்தனர். பொழுது புலருவதற்குள் முத்தப்பர் வீடு புது மனையாகப் பொலிவு பெற்றது.

அடைக்கலக் காப்பு!

ஒருமுறை முத்தப்பர் தமது துப்பாக்கியை ஓர்உழவனிடம் கொடுத்து வைத்திருந்தார். அவ்வுழவனிடமிருந்து துப்பாக்கி யாது காரணத்தாலோ முத்துப்பாலாண்டி என்பவரின் ஆட்களால் எடுத்துச் செல்லப்பட்டது. துப்பாக்கியை இழந்த உழவன் முத்தப்பரிடம்வந்துமுறையிட்டான். உடனேமுத்தப்பர் பின்வரும் பாடலை ஓர் ஓலையில் எழுதி அந்த உழவன் மூலமாய் முத்துப்பாலாண்டிக்கு அனுப்பினார்.

''அடைக்கலத்தைத் தேவர்கள் ஆதரிப்ப தல்லாது
எடுக்கத் துணிந்தபேர் இல்லை - திடப்புயனாம்
முப்பால் புகழவரும் முத்துப்பா லாண்டிமன்னா!
துப்பாக்கி கியைத்தரச் சொல்!''

வெற்றிலையால் வந்த வினை!

ஒரு சமயம் முத்தப்பர் ஓர் அன்பரிடம் வேண்டியவரையில் வெற்றிலை கேட்டும், அவர் கொடுக்காமையால் மனம் நொந்து பின்வரும் பாடலைப் பாடினார்.

''மாத்தானாம் பட்டி வடகிழக்கு மூலையிலே
பூத்தானாம் மால்கொடிக்கால் போட்டானாம் -
சாத்தாகேள்
இட்டபயிர் தீய்ந்தே இலைகாய்ந்து மேகருகி
வெட்டவெளி ஆக்கி விடு.''

பாடுவாரின் மரபுவழிப்பேரனான அழகாபுரிஇளங்கோவன் முத்தப்பர் வரலாறு முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார்.

# 21 பண்டிதமணி

ஏழு மாதங்கள்கூடப் பள்ளிக்கூடத்தில் படிக்காமல் ஈராறு ஆண்டுகள் பல்கலைக்கழகத்தில் ஆசிரியராக இருந்தவர் மகாமகோபாத்தியாய சைவசித்தாந்த வித்தகர் முதுபெரும் புலவர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் (1881-1953). இவர் பூங்குன்ற நாட்டுச் சிற்றூரான மகிபாலன்பட்டியில் பிறந்தவர். இந்த நூற்றாண்டில் தமிழுக்கும் ஒப்பியல் இலக்கியத் திறனாய்வுக்கும் சைவத்துக்கும் உரைநடைக்கும் ஒப்புவமையில்லாத தொண்டு செய்தவர். சொற்பொழிவுகளாலும் தலைமைப்பொழிவுகளாலும் தமிழ்நாட்டிலும் ஈழநாட்டிலும் தமிழ் வளம் பெருக்கியவர். வடமொழியில் பெரும் புலமை பெற்று அந்தப் புலமையால் தமிழுக்கு ஆக்கஞ் செய்தவர். தலை மாணாக்கர் பலரைத் தமிழ்த் தாய்க்கு உருவாக்கிய பேராசிரியர்.

அரசஞ்சண்முகனாரிடம் தமிழ் நூல்களில் தமக்கு ஏற்பட்ட ஐயப்பாடுகளுக்கு விளக்கம் பெற்றார். தருவை நாராயணசாத்திரியாரிடம் வடமொழி பயின்றார். காரைக்குடி சொக்கலிங்க ஐயரவிடம் சமய அறிவு பெற்றார்.

பண்டிதமணியின் நூல்கள்

மொழி பெயர்ப்பு

உதயணசரிதம்
சுலோசனை
மண்ணியல் சிறுதேர்
சுக்கிர நீதி
பொருள் நூல்
மாலதி மாதவம் (கைப்படி)

கதிர்மணி விளக்கம்

திருச்சதகம்
நீத்தல் விண்ணப்பம்
திருவெம்பாவை

கட்டுரை

உரைநடைக்கோவை I சமயம்

உரைநடைக் கோவை II இலக்கியம்

இலக்கிய நயம்

நாட்டுக்கோட்டை நகரத்தார் சீர்திருத்தம்

நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு

செய்யுள்

பதிற்றுப் பத்தந்தாதி

பண்டிதமணி பாடல்கள் } கைப்படிகள்

பண்டிதமணி கடிதங்கள் }

"பள்ளியில் பயிலாமல், பல்கலைக் கழகத்தில் பட்டம் பெறாமல் தொழில் துறைகளில் தேர்ச்சி பெற்றுக் குபேரச் செல்வம் திரட்டியவர்கள் உண்டு. பட்டம் பெறாமல் பதவியின் சிகரத்தையும் எட்டிப்பிடித்தவர்கள் இருக்கிறார்கள். ஆனால், கல்விச் சாலையிலோ கலாசாலையிலோ தேர்ச்சி பெறாமல், புலவர் திலகமாகவும் பேராசிரியராகவும் விளங்கிய பெருமை மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் ஒருவருக்கே உரியது."

என்று கல்கி ஆசிரியர் திரு கிருஷ்ணமூர்த்தி 1-11-1953 கல்கி இதழில் எழுதியிருந்தது முற்றிலும் உண்மையே.

புலமை

பண்டிதமணியின் வடமொழிப் புலமை, தமிழ் இலக்கியத்தை வளப்படுத்தத் துணையாக இருந்தது. சிறந்த நாடக நூலான மிருச்ச கடிகத்தை, "மண்ணியல் சிறுதேர்" என்ற பெயரில் பண்டிதமணி தமிழாக்கினார்கள். இரு மொழிகளையும் ஆய்ந்து, சாகுந்தலத்திலும் சிலப்பதிகாரமே மிகச் சிறந்தது என்றும், வால்மீகியினும் கம்பனே புலமை மிக்கவன் என்றும் ஆதாரங்களுடன் விளக்கி, தமிழின் உயர்வைப் பண்டிதமணி நிலைநாட்டினார்.

பண்டிதமணியின் தமிழ்ப்பணி, சன்மார்க்கசபையைத் தொடங்கியது, நூல்களை இயற்றியது, திருவாசக உரை எழுதியது, மாணவர்க்குப் பாடஞ் சொல்லியது என்பவற்றோடு மட்டும் அமையவில்லை. தில்லைத் தமிழ்க் கழகத்தை அவர் தொடங்கிவைத்து, ஞாயிறு தோறும் சிலப்பதிகார வகுப்பு

நடத்தினார். அண்ணாமலை நகரில் பல்கலைக் கழகத்து ஆசிரியர்களுக்காக மணிவாசக மன்றத்தை நிறுவி, வியாழன் தோறும் திருவாசகச் சொற்பொழிவு ஆற்றினார். தொல் காப்பியப் பாயிர விருத்த ஆசிரியரான சோழவந்தான் அரசஞ் சண்முகனாரின் புகழை 50 ஆண்டுகள் தமிழ்நாடெங்கும் பரப்பிய சிறப்பும் பண்டிதமணிக்கு உண்டு. மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை குடும்பத்தாருக்கு நிதி சேர்த்த பெருமையும் இவரைச் சேரும். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கட்கு ஏடுகள் தேடிக்கொடுத்தும், அவருடைய நூல்கள் சில வெளிவருவதற்குப் பொருளுதவி செய்வதற்குச் செட்டிநாட்டுச் செல்வர் சிலர்க்குச் சிபார்சு செய்தும் பண்டிதமணி அன்னாருக்கு ஆதரவு காட்டினார்.

## தனித் தமிழ்ப் புலவர் வகுப்பு

"சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆரியம் முதலிய மொழிகளில் சிரோமணி ஆகிய பட்டங்கள் வகுத்திருப்பது போல, தமிழ் மொழிப் புலமை மேம்படுமாறு தமிழ் மொழியைப் பல துறைகளாக வகுத்துத் தனித் தமிழ்ப் புலமைக்குப் பட்டங்கள் அமைக்க வேண்டும்." என்ற கருத்தை பண்டிதமணி அவர்கள் தான் முதல் முதலாக வெளியிட்டார் கள். அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்க 30. 12. 1923 இல் தூத்துக் குடியில் அவர்கள் தலைமையில் நடைபெற்ற சைவ சித்தாந்த சபை ஆண்டு விழாவில் ஒரு தீர்மானம் நிறை வேற்றப் பெற்றது. அதன் பின்னரே, தமிழ் வித்துவான் படிப்பு, சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஏற்படுத்தப் பெற்றது.

## அன்றும் இன்றும்

செட்டிநாட்டுக்கு அப்பாற்பட்ட பகுதிகளிலிருந்து தமிழாசிரியர் செட்டிநாட்டுக்கு வந்து கற்பித்தனர். இது 1947 வரை இருந்த நிலை, பண்டிதமணி அவர்கள் 1934 முதல் 1946 வரை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழாசிரியராக இருந்தமையாலும் மேலைச்சிவபுரியில் தமிழ் கல்லூரி தொடங்கியதாலும் இந்த நிலை முற்றிலும் மாறிவிட்டது.

செட்டிநாட்டு இளைஞர் இரு பாலாரும் தமிழ்க் கல்வியை முறையாகக் கற்றுப் பெரும்புலமை பெற்றுள்ளனர். சிலர்

கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் தமிழ்ப் பேராசிரியராகச் சிறந்து விளங்கி உலகெங்கும் தமிழ் இலக்கண இலக்கியங்களையும் தமிழ் மொழியின் சிறப்பையும் தமிழ்ப் பண்பாட்டையும் தமிழ்க் கலைகளையும் பரப்பி வருகின்றனர்.

இந்த மாபெரும் மாறுதலுக்கு வித்திட்டவர் பண்டிதமணி.

இவருடைய விரிவான வரலாற்றை இந்நூலாசிரியர் இயற்றிய 'பண்டிதமணி' என்னும் நூலில் காண்க.

## 22 ஆராய்ச்சியாளர்கள்

பல்கலைக் கழகங்களின் தமிழ்த் துறைகளில் முறையாகப் பயின்று, பெரும் பட்டங்கள் பெற்று தமிழ்மொழி, இலக்கியம் ஆகியவை தொடர்பான செம்மையான ஆராய்ச்சிகளில் செட்டிநாட்டார் பலர் ஈடுபட்டுச் சிறந்துள்ளனர்.

முனைவர் பட்டம் பெற்றவர்கள் ஏராளமாக உள்ளனர்.

எம்.லிட்., எம்.ஓ.எல்., எம்ஃபில் ஆகிய பட்டங்களைப் பெற்றவர்களுக்கும் குறைவில்லை.

பல்கலைக் கழகங்கள் இன்ன பிற நிறுவனங்கள் ஆகியவற்றின் வாயிலாக, மேன்மேலும் ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு வருபவர் பலர் ஆவார்.

எமக்குத் தெரிந்தவரையில் இவர்களைப் பற்றிய விவரங்களை இங்கே கொடுத்திருக்கிறேன்.

### முனைவர் (டாக்டர்) பட்டம் பெற்றவர்கள்

டாக்டர் வ. சுப. மாணிக்கம்

(மேலைச்சிவபுரி 17-4-1917)

பிஎச். டி. 1957 சென்னைப் பல்கலைக்கழகம், சங்க இலக்கியத்தில் அகத்திணை அல்லது 'தமிழ்க் காதல்'.

நுண்ணறிவும், பாடஞ் சொல்லிக் கொடுப்பதில் ஆர்வமும் ஆராய்ச்சியில் ஈடுபாடும் உடையவர். மொழிக்கலவை வேண்டாதவர்.

இவர் கையாளும் தமிழ் நடை தனித்தன்மையானது. "உரை நடையில் புதுத்தடம் காட்டுபவர். உவமை நடையும், சுருக்க நடையும் பல்வேறு முடிவு நடையும் இவருடைய தமிழ் நடையை வளஞ் செய்து தனி நடையாளராகக் காட்டுகின்றன" என்று மணிவாசகர் பதிப்பகவெளியீடு ஒன்றில் கூறப் பெற்றிருப்பது சாலப் பொருந்தும். எக் கலையையும் தமிழ்ப் படுத்தலாம் என்னும் அழுத்தமான கொள்கையர்.

36 ஆண்டுகள் ஆசிரியப் பணி செய்து இலக்கியம், இலக்கணம், தென்னிந்திய வரலாறு, திறனாய்வு, மொழியியல், சைவசித்தாந்தம் ஆகிய பாடங்களைக் கற்பித்திருக்கிறார்.

காரைக்குடி அழகப்பா கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர், முதல்வர் பதவிகளையும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் புலத்தலைமைப் பதவியையும் வகித்தவர். 1979 முதல் 1982 வரை, மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தராக இருந்தார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பொன்விழாவில் 6-12-1979அன்று இலக்கிய டாக்டர் பட்டம் வழங்கிச் சிறப்பிக்கப் பெற்றார் Degree Of Doctor Of Letters Honoris Causa.

தமிழ் இலக்கணப் புலவருள் முனனோடியான தொல்காப்பியனாரைப் பெருமைப் படுத்தும் வகையில் அவருடைய ஈடு இணையில்லாத நூலை முழுமையாகவும் விரிவாகவும் பல் துறைகளும் வழுவியதாகவும் ஆயும் பணியை தமிழ்ப் பல்கலைக் கழகம் திட்டமிட்டது. இதற்கென ஒரு தகைமை (ஃபெல்லோஷிப்) நிறுவவும் அப்பொறுப்பை ஏற்கும் மூதறிஞர் அவர் இருக்கும் இடத்திலிருந்தே இப்பணியைச் செய்யலாம் என்றும் தமிழ்ப் பல்கலைக் கழகம் முடிவு செய்தது. மதிப்புறு ஊதியமாகத் திங்கள் தோறும் ரூ 2,500/- வீதம் ஈராண்டுகளுக்கு வழங்கப் பெறுகிறது. ஏனைய செலவுகளுக்கு ஆண்டொன்றுக்கு ரூ10,000 கொடுக்கப்பெறும்.

தகைமை, இவருக்கு வழங்கப் பெற்றது 16-9-83 இப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். இதற்கென நடத்தப்பெற்ற ஒரு விழாவில் தொல்காப்பியத்தகைஞர் என்ற பதவியளித்துப் பதக்கம் வழங்கப்பெற்றது. அவ்வமயம் துணைவேந்தர் டாக்டர் வ. அய். சுப்பிரமணியம் கூறியதாவது:

"நுணுகிய புலமையும் பழமையிற் புதுமை காணும் ஆய்வாளருமான வ. சுப. மாணிக்கனார், வரும் தலைமுறைக்கு எடுத்துக்காட்டாக ஆய்வுப் பணி செய்து தமிழுக்கும் தமிழ்ப் பல்கலைக் கழகத்துக்கும்புகழ் சேர்க்குமாறு வாழ்த்துகிறேன்"

இந்த ஆய்வுப் பணியும் முறையும்: அரை நூற்றாண்டாகத் தொல்காப்பிய ஆய்வும் எழுத்தும் பெருகி வருகின்றன, பல்வேறு கருத்துக்கள் பல நூற்பாக்கட்குப் புதுமையாகவும் வந்துள. இக் கருத்துக் குவியல்களைப் பழுதறப் பகுத்தாய்ந்து

உரையென்னும் கரையொழுங்கிற்குள் கொண்டு வரவேண்டும். அப்போதுதான் தொல்காப்பியத்தின்பொருள் சிதறுபடாமலும் திரிவுபடாமலும் குழப்பமின்றியும் வழிவழி விளங்கும். இப்பெரு நோக்கோடு, கல்லூரி பல்கலைக்கழக மாணவர்கட்கும் ஆய் வாளர்க்கும் தமிழ் ஆர்வளர்கட்கும் பயன்படும் முறையில் 'தொல்காப்பிய நேருரை' என்று எழுதப்படும்.

இக்கால மக்கட்கும் விளங்குமாறு எடுத்துக் காட்டுக்கள் இன்றைய பேச்சு வழக்கிலிருந்தும் இன்றைய இலக்கிய எழுத்துக்களிலிருந்தும் பொருந்துமளவு காட்டப்படும்.

உலகளாவிய மொழியியல் நெறியில் உரையின் போக்கு அமையும்.

அயலகத் தமிழர் வழக்கிலிருந்தும் தமிழ் பற்றி எழுதிய அயலறிஞர் கருத்துக்களிலிருந்தும் எற்ற பெற்றி தழுவப்படும்

தெளிவு காண முடியாத நூற்பாக்கள் இருப்பின்,தெரிந்த அளவு உரையெழுதி இவை மேலும் சிந்தனைக்குரியவை என்று சுட்டப்படும்.

தமிழ்மொழி தொன்மைக் காலந் தொட்டு நல் வழக்குடையதாக இருத்தலின், அங்ஙனம் நிலைபேற்றுக்குரிய மொழிக்கூறுகள் செம்மையாக வலியுறுத்தப்படும்.

உரை சுமை தோன்றாமலும் மிகை படாமலும் சுவை நடையில் அமையும்.

தொல்காப்பியப் பொருளதிகாரம் பாலியல், சமூகவியல் அரசியல், போரியல், இனவியல், உளவியல் என்று பல்வேறு கலைத்துறை உடைத்ததாதலின், அக் கலைத்திறம் உரையில் புலப்படுத்தப்படும்.

*பிற சிறப்புக்கள்*

திராவிட மொழியியல் குறித்த பன்னாட்டுப் பள்ளியில் முதிய தகைஞராகவும் இவர் பணிபுரிந்துள்ளார்.

சென்னை, மதுரை, அண்ணாமலை, திருச்சி பாரதி தாசன், திருப்பதி வெங்கடேசுவரா பல்கலைக் கழகங்களில் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார்.

மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தில் இவர் மேற்கொண்ட தமிழ்ப் பணிகள் பலவாம். குறிப்பிடத்தக்கவை வருமாறு:

பாரதி நூற்றாண்டு தொடர்பாக, தமிழில் அறிவியல் கட்டுரைகள் உருவாக்கப் பெற்று அச்சிடப் பெறுகின்றன.

சங்க இலக்கியம் முழுவதையும்ஆங்கிலத்தில் பெயர்க்கும் பணி தொடங்கப் பெற்றுள்ளது.

தெலுங்கு—தமிழ்; கன்னடம்—தமிழ்; மலையாளம்—தமிழ் அகராதிகள் உருவாக்கும் பணிக்கு அடிகோலினார்.

கல்விக்குழு, பேரவைநிகழ்ச்சிகள் தமிழில்வெளியிட்டார்.

பட்டச்சான்றுகளில் தமிழும் இடம் பெறச் செய்தார்.

மாணவர் விடுதிகளுக்குத் தமிழ்ப் புலவர்கள் பெயர்களும் தமிழ்நாட்டின் பகுதிகள் பெயர்களும் இட்டார்.

பண்டிதமணி அரங்கு கட்டப்பெற்றது.

தெ. பொ. மீ. அவர்கள் பெயர் நூலகத்துக்குச் சூட்டப் பெற்றது. அவரது திருவுருவச் சிலை திறக்க முடிவு செய்யப் பெற்றது.

முத்தமிழ்க்காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் மதிப்புறு டி. லிட். பட்டம் வழங்கிச் சிறப்பிக்கப் பெற்றார்.

உலகத் தமிழ் மாநாடு, (கருத்தரங்குகள்) பல்கலை நகரில் நடைபெற்றன.

லண்டனில் உள்ள பாரதிய வித்யா பவனுக்குத் தமிழ் நூல்களை அன்பளிப்பாக வழங்கப்பெற்றன. அறிஞர் அறுவருக்குத் தமிழ்ப் பேரவைச் செம்மல் பட்டம் நல்கினார்.

உலகத் தமிழ்ப் பணியியல் என்ற துறையைத் தொடங்கினார். வெளிநாடுகளில் வாழும் தமிழர்களின் வழித்தோன்றல்களும், ஏனைய மொழியினரும் தமிழில் பேச, எழுத, தமிழ் நூல்களைப் படிக்க அவர்களை ஆற்றுப்படுத்துவதற்கான முயற்சிகளில் இத்துறையினர் ஈடுபட்டுள்ளனர். எட்டு ஒலிச் சுருள்கள் வெளியிடத் திட்டமிட்டு,குழந்தைத்தமிழ், நீதித்தமிழ் என்பன வெளிவந்துள்ளன. வாழ்க்கைத்தமிழ், மேடைத்தமிழ், கதைத்தமிழ், காப்பியத்தமிழ், உரையாடல்தமிழ் என்ற வகையில் இனிவரும் சுருள்கள் அமையக்கூடும்.

ஆய்வுத்துறைப் பயில்வு:

அ) ஆய்வு மாணவன் அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
பொருள்: தமிழ் இலக்கண வரலாறு

ஆ) எம். ஓ. எல் பட்டம் சென்னைப் பல்கலைக்கழகம்
பொருள்: தமிழ் வினைச்சொற்கள் (ஆங்கிலத்தில்)

இ) பிஎச். டி. பட்டம் சென்னைப் பல்கலைக் கழகம்
பொருள்: சங்க இலக்கியத்தில் அகத்திணை (ஆங்கிலத்தில்)

ஈ) ஆய்வு மேற்பார்வை எம். லிட். பிஎச். டி. பட்டங்கட்கு 30 ஆய்வு மாணவர்களுக்கு மேலாக

நூல்கள்

மனைவியின் உரிமை (நாடகங்கள்)
நெல்லிக்கனி ,,
உப்பங்கழி ,,
ஒருநொடியில் ,,
கொடைவிளக்கு (வள்ளல் அழகப்பர் புகழ்ப் பாடல்கள்)
தலைவர்களுக்கு (கடிதங்கள்)
கம்பர் (சொற்பொழிவுகள்)
வள்ளுவம் (ஆய்வுக் கட்டுரைகள்)
தொல்காப்பியப் புதுமை (கட்டுரை)
தமிழ்க்காதல் (ஆய்வுக் கட்டுரை)
எந்தச் சிலம்பு (கட்டுரை)
இலக்கிய விளக்கம் (கட்டுரை)
சிந்தனைக் களங்கள் (கட்டுரை)
ஒப்பியல் நோக்கு
உரைநடைத் திருக்குறள்
இரட்டைக் காப்பியங்கள் (பதிப்பு)
நகரத்தார் பட்டயங்கள் (பதிப்பு)
தமிழ்ப் புலவர்கள் வரலாறு (பதிப்பு)
*The Tamil concept of Love (Research in English)*
*A Study of Tamil Verbs (in English)*

*A Glimpse of Tamiology (edited)*
Collected papers.

இவர் இயற்றிய 'தமிழ்சூடி' ஆத்திசூடி போலஅமைந்தது. "ஐ நா. நன்று", "மே நாள் அயர்" என்ற உலகப் பார்வையும், "இந்தியனாய் இரு" என்ற தேசியப் பார்வையும், "அகத்தமிழ் படி", "தமிழ் இசை பரப்பு", "தொல்காப்பியம் படி", "முதி தமிழ் பரப்பு" என்ற தமிழ்பார்வையும், "தப்பினை ஒப்பு", "கையூட்டு மறு" என்ற ஒழுக்கப்பார்வையும், "நொடியில் முடி" என்ற நடைமுறை பார்வையும் 'தமிழ் சூடி'யில் காணலாம்.

காரைக்குடியில் (1) தமிழ்ச் சங்கம் (2) இந்தியப் பல் தமிழ்க் கழகம், (3) தமிழ் வளர்ச்சி உயர் ஆராய்ச்சி மன்றம் ஆகியவற்றை இவர் நிறுவி அவற்றின் தலைவராக உள்ளார்.

புலவர் குழு, தொடங்கிய நாளிலிருந்து அதில் பெரும் பங்கு பெற்று வருகிறார். சன்மார்க்க சபையின் கல்விக் குழுத்தலைவராக இருந்து வருகிறார்.

பலதுறைப் பயில்வு:

அ) கோலாலம்பூர் உலகத் தமிழ் மாநாட்டிற் கலந்து கொண்டமை.

ஆ) சைவசித்தாந்தக் கழகத்தின் 4 ஆவது சிற்றிலக்கிய மாநாட்டுத்தலைமை

இ) அனைத்திந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்குகளில் தலைமை

ஈ) அனைத்திந்தியத் திருக்குறட் கருத்தரங்கின் தலைமை

உ) அனைத்திந்தியக் கீழைக் கலைத்துறையினர் புனாவில் நடத்திய கருத்தரங்கின் திராவிடக்கல்வி அமர்வின் தலைமை.

இவருடைய பெரு முயற்சியால் பண்டிதமணி நூற்றாண்டு விழா 1981 முதல் 1983 வரை தமிழகஅரசாலும், ஏராளமான அமைப்புக் களாலும் தமிழ் நாடெங்கும் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. பல்கலைக்கழகங்கள் பலவற்றில்

அறக்கட்டளைகள் அமைக்கப் பெற்றுள்ளன. பண்டிதமணி இயற்றிய நூல்கள் பலவும் மீண்டும் அச்சிடப்பெற்றுள்ளன. மூன்று திறனாய்வு நூல்களும் உருவாகியுள்ளன. பண்டிதமணி யின் வாழ்க்கை செய்யுட் காப்பியமாக வெளியிடப் பெற்றிருக்கிறது. பண்டிதமணி பிள்ளைத் தமிழும் வெளிவந் திருக்கிறது.

டாக்டர் மெ. சுந்தரம் (வேந்தன்பட்டி 21-11-1925)

எம். லிட். (அண்ணாமலை) 1957—கல்லாடம்

பிஎச். டி. (சென்னை) 1961-சங்க இலக்கியத்தில் வரலாறு

சென்னை மாநிலக் கல்லூரியில் தலைமைத் தமிழ்ப் பேராசிரியராகப் பல ஆண்டுகள் பணிபுரிந்த பின் 1984—இல் ஓய்வுபெற்றார்.

தமிழ்ப்பாவை, செட்டிநாடு இதழ்களின் ஆசிரியராக இருந்திருக்கிறார். குமரன், தமிழ்நாடு இதழ்களில் பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார். 1960, 1984—ஆம் ஆண்டுகளில் மலேசியா, சிங்கப்பூர் நாடுகளில் தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியிருக்கிறார்.

இவர் வழிகாட்டியாக இருந்து பண்டாரகர், மற்றும் ஏனைய ஆராய்ச்சிப் பட்டங்கள் பெற பலருக்கு உறுதுணை யாக இருந்திருக்கிறார்.

தமிழகப் புலவர் குழு உறுப்பினர், நாட்டுப்பாடல் என்னும் பெரு நூலை இயற்றியிருக்கிறார்.

ஏனைய நூல்கள்; சங்க காலத் தமிழரின் கடற்செலவு, கட்டுரை மாலை, கலைஞரின் கவிதைச் சிற்பம்.

டாக்டர் 'தமிழண்ணல்' இராம. பெரியகருப்பன்

நெற்குப்பை 12. 8. 1928

பிஎச். டி. சென்னைப் பல்கலைக்கழகம் 1969 "சங்க இலக்கிய மரபு" பற்றிய ஆய்வு.

ஈரோடு மகாசன உயர்நிலைப்பள்ளியில் 1948 – 49 ஓராண்டும் காரைக்குடி மீ. சு. உயர்நிலைப்பள்ளியில் 1949 தொடங்கி 12 ஆண்டுகளும் மதுரை தியாகராசர் கல்லூரியில

10 ஆண்டுகளும் பணியாற்றினார். பின்னர் மதுரைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையிலும் அஞ்சல் வழிக்கல்வித் துறையிலும் பணிபுரிந்தார். 1976 இல் பேராசிரியரானார். 1980 இல் (மதுரை காமராசர்) பல்கலைக் கழகத்தில் இந்திய மொழிப் புலம், தமிழ்த்துறை ஆகியவற்றின் தலைவர் ஆனார். தமிழ் மொழிக்குத் தேசியப் பேராசிரியர் என்ற மதிப்பிற்குரிய பதவியை இந்தியப் பல்கலைக்கழக பண உதவிக் கழகம் இவருக்கு 1981-இல் வழங்கியுள்ளது. இவர் 1983 முதல் சாகித்திய அகாதெமியின் செயற்குழு உறுப்பினராகவும் இருந்து வருகிறார்.

இவர் சிறந்த கவிஞரும் ஆவார். இளமை முதல் ஆற்றொழுக்காகக் கவிதைகளை எழுதி வருகிறார். 1971 - ஆம் ஆண்டில் குடியரசு நாளை ஒட்டி, இந்திய வானொலி நிலையத்தார் புதுடில்லியில் 14 மொழிகளிலும் ஒரு கவியரங்கத்தை தேசியக் கவிஞர் பேரவை வாயிலாக ஏற்பாடு செய்தனர். அப்போது 'செல்வம்' என்ற இவருடைய கவிதை அனைத்து தேசிய மொழிகளிலும் ஒலிபரப்பாயிற்று.

தமிழக அரசில்அறநிலையத்துறையின்சார்புடன் மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலார் நடத்திய கவிதைப் போட்டியில் 'மீனாட்சி' என்ற பெயரில் இவர் படைத்த கவிதை 1973 இல் பொற்கிழிப் பரிசு பெற்றது.

காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரியினர் நடத்திய படைப்பிலக்கியப் போட்டியில், இவர் எழுதிய 'மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ்' 1975 இல் பரிசு பெற்றது.

பல்லாண்டுகளாகத் தமிழகப் புலவர் குழுவில் உறுப்பினராக உள்ளார்.

1982 இல், தமிழக அரசு வழங்கும் சிறந்த நூல்கட்கான பரிசு இவருடைய இரண்டு நூல்களுக்குக் கிடைத்தது. '*Tradition and Talent in Cankam Poetry*' என்ற நூலுக்கு முதற்பரிசும் 'நச்சு வளையம்' என்ற நாவலுக்கு இரண்டாம் பரிசும் கிடைத்தன.

1983 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் ஜப்பானில் டோக்கியோவிலும் கியோட்டோவிலும் ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் மானுட அறிவியல் குறித்த 31-ஆவது பன்னாட்டு

மாநாடும் கருத்தரங்கமும் நடைபெற்றன. அதில் கலந்து கொள்ளும்படி, மாநாட்டு அழைப்பாளர்களின் சிறப்பு விருந்தினராக இவர் அழைக்கப்பெற்றார். சங்க இலக்கியத்தைப் பற்றி இவர் படித்த ஆய்வுக்கட்டுரை பெரிதும் பாராட்டப் பெற்றது.

மதுரையில் 1981 - இல் நடைபெற்ற உலகத்தமிழ் மாநாட்டை முன்னிட்டு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம் உருவாக்கிய பல வெளியீடுகளுக்கு இவர் பதிப்பாசிரியராக இருந்தார். இவருடைய வழிகாட்டுதலின் கீழ், பல நாடுகளைச் சேர்ந்த மாணவர்கள் உயர் ஆராய்ச்சிப் பட்டங்களுக்கு ஆய்வு செய்துவருகின்றனர். இவர் இதுகாறும் இவரிடம் நேர்முகமாக ஆய்வு செய்து பி எச். டி. பட்டம் பெற்றவர்கள் பதின்மூவர். மூதறிஞர் குழுவில் அமைந்து இவரிடம் பயின்று டாக்டர் பட்டம் பெற்றவர்கள் நால்வர். இப்போது இவரிடம் மேற் கண்ட பட்டத்திற்காக ஆராய்ச்சி செய்துவருபவர் பன்னிருவர். இவர்கள் தவிர இவரிடம் பயின்று எம். பில். பட்டம் பெற்றோரும் உளர். இவர் 'வையை' ஏட்டின் பதிப்பா சிரியரும் ஆவார். இவர் தம் நூல்கள் வருமாறு:

| | |
|---|---|
| நாட்டுப்பாடல்: | 1. தாலாட்டு (இலங்கை நாட்டுப்பாடல்களும் இடம் பெற்ற அரிய தொகுப்பு) |
| | 2. காதல்வாழ்வு |
| | 3. பிறைதொழும்பெண்கள் |
| திறனாய்வு: | 4. இலக்கியத்தில் இன்பச் சுவை |
| | 5. குறிஞ்சிப்பாட்டுத் திறனாய்வு |
| | 6. பரிசில் வாழ்க்கை |
| | 7. செயகாந்தனின் முன்னுரை இலக்கியம் |
| ஒப்பிலக்கியம்: | 8. ஒப்பிலக்கியஅறிமுகம் |
| | 9. சங்க இலக்கிய ஒப்பீடு – இலக்கியக் கொள்கைகள் |
| | 10. சங்கஇலக்கியஒப்பீடு- இலக்கியவகைகள் |
| ஆய்வுமுறை: | 11. ஆய்வியல்அறிமுகம் |
| | 12. ஆய்வியல்வழிகாட்டி |
| சிந்தனை | 13. மொழிவழிச் சிந்தனைகள் |
| நாவல் | 14. வாழ்வரசி |
| | 15. நச்சுவளையம் |
| பிற | 16. குழந்தை இலக்கியம் |

17. புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு

வழிச்செலவு — 18. சப்பான் பயணம் பற்றிய கட்டுரைகள் (இதழ்களில்)

ஆங்கிலத்தில் — 19. *Tradition and Talent in Cankam Poetry* (Ph. D. Dissertation)

தொகுப்பாசிரியர் —கவிஞர் முடியரசன் கவிதைகள்

பதிப்பாசிரியர் —வையை பொதிகை போன்ற பல மலர்கள்

முகவரி: —'ஏரகம்', சதாசிவநகர் வண்டியூர் வழி மதுரை—625 020.

டாக்டர் சுப. அண்ணாமலை

(தேவகோட்டை 10-10-1929)

இலக்கியம், மொழியியல், சமயம், தத்துவம் ஆகிய துறைகளில் புலமை பெற்றும் பட்டிமன்றங்களில் பெரும் பங்கு கொண்டும் புகழ் பெற்றவர்,

திருவையாறு அரசர் கல்லூரியில் தமிழ் புலமைக் கல்வியைத் தொடங்கினார். சென்னை பச்சையப்பன் கல்லூரியில் தமிழைச் சிறப்புப் பாடமாகப் பயின்று மு. வ.வின் மாணவராக, முதுகலைப் பட்டம் பெற்றார்.

1953-ல் மதுரை, தியாகராசர் கல்லூரியில் ஆசிரியராகச் சேர்ந்து, இலக்கணம் மற்றும் கடினமான இலக்கியப் பாடங்களையும் கற்பிக்கத்தொடங்கினார். குற்றாலக்குறவஞ்சி போன்ற பாடங்களை இசையுடன் பாடி நடத்தினார்.

''பழங்காலத்தில் நுண்கலைகளும் அறிவியலும்'' என்ற தலைப்பில் 1962-இலும் ''திருவருட்பாவின் பாடங்கள், உரை நடைகள், விளக்கங்கள்'' பற்றி 1968-இலும் வழங்கிய ஆய்வுக்கட்டுரைகளுக்கு எம். லிட், பி. எச்டி பட்டங்களைச் சென்னைப் பல்கலைக்கழகம் இவருக்கு நல்கியது.

வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் வாழ்வும் நூல்களும் குறித்து இவர் ஆங்கிலத்தில் எழுதியிருக்கும் நூலை, பம்பாய் பாரதிய வித்யா பவன் வெளியிட்டிருக்கிறது. இந்த நூல் மலையாளத்திலும் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளது.

மதுரை கம்பர் கழகத்தின் துணைத்தலைவராக உள்ளார். அங்கு வாரந்தொறும் கம்ப ராமாயண வகுப்பு நடத்தி வருகிறார்.

மேற்கு ஜெர்மனியிலிருந்தும், அண்ணாமலை, மற்றும் தமிழ்ப் பல்கலைக்கழகத்திலிருந்தும் இவருக்குப் பதவிகள் வழங்கப் பெற்றன. ஆனால் இவர் தொடர்ந்து தியாகராசர் கல்லூரியிலேயே பணியாற்றி வருகிறார். 1977- இலிருந்து முதல்வராக உள்ளார்.

நூல்கள்; ''உருவும் உணர்வும்'' ''பண் சுமந்த பாடல்'' ''பனிரண்டாந் திருமுறை'' புனைபெயர் – குருத்து.

முகவரி: ''கயல்'' 98 அறிஞர் அண்ணா நகர், மதுரை-20

டாக்டர் வெ. தெ. மாணிக்கம்

(வேந்தன்பட்டி 14-10-1933)

50 தரும நாராயணன் செட்டியார் தெரு, காரைக்குடி-1

புனைபெயர்—''நவமணி''. எம். ஏ. தேர்வில் தங்கப் பதக்கம் பெற்றார். தமிழ் இலக்கியத்தில் மருதத் திணை என்னும் ஆய்வுக்காக பிஎச். டி. பட்டம் (சென்னை—1968)

பல ஆண்டுகள் காஞ்சிபுரம் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராக இருந்த பிறகு, இப்போது சென்னை பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து வருகிறார்.

டாக்டர் பட்டம் பெற 10 ஆராய்ச்சியாளர்களை இவர் நெறிப் படுத்தியுள்ளார். உலகத் தமிழ் மாநாடுகளில் ஆய்வுக் கட்டுரைகள் படித்திருக்கிறார். 'நன்றி' என்னும் கையெழுத்துப் படி இதழாசிரியர்.

இவர் தம்மகளுக்கு வழங்கிய திருமணச் சீர் வரிசையில் தமிழ் நூல் தொகுதிகளும் இடம் பெற்றன. இவ்வகையில் இவர் ஒரு வழிகாட்டி, முன்னோடி.

நூல்கள் (1) ஊடல் (2) வாழ்வும் வழிபாடும் (3) *A Study of Maruta - T - Tinai in Tamil Literature* 4) *Harlots in Ancient Tamil Literature*

முகவரி: 141, *AI*, சாந்தி குடியிருப்புச் சாலை, அண்ணா நகர், சென்னை—40

டாக்டர் இராம. சுந்தரம்

(அலவாக்கோட்டை 1-4-1939) எம். ஏ. (தமிழ்) அண்ணாமலை, மொழியியல் பிஎச்.டி, (கேரளம்), மலையாள மொழியில் பட்டயம், மொழியியல் பட்டயம் (புனா—1960)

கேரளப் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சி உதவியாளர் விரிவுரையாளர் (1958–67). தியாகராசர் கல்லூரி, மதுரை (1967–69), அண்ணாமலைப் பல்கலைக்கழகம் (1971–72) மீண்டும் 1979–81 துணைப்பேராசிரியர்.

1972முதல் 1979வரை ஏழு ஆண்டுகள் இவர் போலந்து நாட்டிலுள்ள வார்சா பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகவும் இந்திய இயல் துறைத் தலைவராகவும் திகழ்ந்தார். போலிஷ் மொழியில் திருக்குறள் வெளிவர இவர் பெரிதும் துணையாக இருந்தார்.

1981 முதல் தஞ்சாவூரில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் 'திட்டமும் தமிழ் வளர்ச்சியும்' என்ற துறையின் இயக்குனராக உள்ளார். (Director of Planning and Development) தமிழில் பொறியியல், மருத்துவம் ஆகிய பாடங்களைக் கற்பிப்பதற்குத் தேவையான நூல்கள் எழுத, தக்கவர்களைத் தேர்ந்தெடுப்பது இவருடைய பொறுப்பாகும்.

தமிழ் ஆராய்ச்சி உலகில் உணர்ச்சிப்போக்குகள் குறைந்து அறிவியல் தன்மை மிக வேண்டும் என்ற நோக்கில் ''சொல் புதிது, சுவை புதிது'' என்ற நூலில் தெய்வச் சிலையார் உரைத் திறன், வையாபுரிப் பிள்ளையின் ஆய்வுமுறை, சிலம்பின்காலம் இறையனார் களவியல் பற்றிய கட்டுரைகள் எழுதியுள்ளார்.

'தமிழ் வாசகம்'—என்ற நூலை வார்சா பல்கலைக்கழகம் வெளியிட்டிருக்கிறது.

'தொல்காப்பியம்— பொருளதிகாரத்தின் காலம்'' என்ற நூலை எழுதி முடித்திருக்கிறார். இது இன்னும் வெளிவர வில்லை.

முகவரி: தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

டாக்டர் அர.சிங்காரவடிவேலன்
(கண்டனூர் 23-10-1937)

எம். ஏ. (தமிழ்) 1960, பி. ட்டி 1961, பி. எச், டி, 1978 மதுரைப் பல்கலைக்கழகம்

தமிழகம் முழுவதும் கவியரங்கங்கள் பட்டிமன்றங்கள், கருத்தரங்குகளில் கலந்துகொண்டிருக்கிறார். வானொலிக் கவியரங்கங்களிலும் பங்கு பெற்றுள்ளார்.

நூல்கள் (1) தமிழாசிரியர் கருத்தரங்கக் கருத்துக்கள் (2) திருந்திய பேச்சு (3) கட்டுரை மாலை. கவிதை நூல்கள் பலவற்றையும் ஆக்கியுள்ளார்.

தேவகோட்டை ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராக இருந்து வருகிறார்.

முகவரி: 65 தியாகிகள் சாலை, தேவகோட்டை–623302

டாக்டர் ந. மாணிக்கம் (வேந்தன்பட்டி 8-5-1942)

எம்.லிட் (1969, மதுரை) சங்கப்பாலைத் திணைப் பாடல்களின் திறனாய்வு

பிஎச். டி. (1978, மதுரை) குமரகுருபர அடிகள் பாடல்கள் —ஓர் ஆய்வு

1963–இல் மதுரை தியாகராசர் கல்லூரித் தமிழ்த்துறையில் சேர்ந்தார். 1980 முதல் பேராசிரியராக உள்ளார். தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி தொகுக்கும் குழுவில் உறுப்பினராக இருக்கிறார்.

எம். ஃபில், பி. எச். டி பட்டங்களுக்கு இவருடைய மேற்பார்வையில் 16 பேர் பதிவு செய்து கொண்டிருக்கின்றனர்.

சிறப்புப் பயிற்சி; தமிழ் இலக்கணம், சைவ சித்தாந்தம், சங்க இலக்கியம்.

''முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள்'' என்ற ஆராய்ச்சிக் கட்டுரை குறிப்பிடத்தக்கது.

இந்நூலில் 12 ஆம் கட்டுரையின் இறுதியில் நாம் குறிப்பிட்டுள்ள புரவலர் வேந்தன்பட்டி திரு. நடராசன் செட்டியார் அவர்களின் மகனார் ஆவார்.

முகவரி: 16 A சாமி ஆசாரி சந்து,
சின்னக் கடைத் தெரு, தெற்கு வாசல்,
மதுரை—625001.

டாக்டர் ஆறு. அழகப்பன். பி. 1937 ஆத்தங்குடி.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் எம். ஏ. பட்டம் பெற்று அங்கேயே 1960 முதல் தமிழ்த் துறையில் பணிபுரிந்து வருகிறார். இடையில் ஓராண்டுக்காலம் சென்னையிலுள்ள தமிழ், சமஸ்கிருதம், மற்றும் இந்திய மொழிகள் ஆராய்ச்சிக் கூடத்தின் இயக்குனராக இருந்தார்.

நாட்டுப்பாடல்களைப் பற்றியும் தமிழ் நாடகங்களைப் பற்றியும் திறனாய்வு செய்து எம். லிட். பி.எச். டி. ஆராய்ச்சிப் பட்டங்களை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பெற்றார்.

தாலாட்டில் தொடங்கி, பல வகையான நாட்டுப்பாடல்களை ஏராளமாகத் தொகுத்துள்ளார்.

நாடகத்துறையில் இவர்க்கு ஈடுபாடுமிகுதி. தம் தாய் வழிப் பாட்டியாரின் ஊரான உ.சிறுவயல் என்னும் சிற்றூரை மையமாக வைத்து கறிவேப்பிலை என்னும் நாடகத்தை எழுதினார். இதுவே இவருடைய முதல் நாடகம் ஆகும். எள்ளல் நாடகங்கள் மேடை நாடகங்கள் திருமலை நாயக்கர் முதலிய 13நாடக நூல்களையும் வாழ்க்கை வரலாற்று நூல்கள் சில வற்றையும் இவர் படைத்திருக்கிறார்.

'நாடகக் கலை' என்னும் திங்கள் இதழை 1971 முதல் ஈராண்டுக் காலம் நடத்தியது இவருடைய குறிப்பிடத்தக்க பணியாகும்.

பல நாடுகளுக்குச் சென்றுள்ளார். அங்குள்ள தமிழ் அமைப்புகளால் பட்டங்கள்வழங்கிச் சிறப்பிக்கப்பெற்றுள்ளார். தமிழக அரசின் இயல் இசை நாடக மன்றம் இவருக்குக் 'கலை மாமணி' பட்டத்தை வழங்கியிருக்கிறது.

தமிழ்த் தாயின் ஓவியத்தை உருவாக்குவதில் இவர் முன்னின்று அதற்கு ஒரு வடிவம் கொடுத்திருக்கிறார்.

1984—ஆம் ஆண்டில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்த் துறைத் தலைவராக இவர் நியமனம் செய்யப் பெற்றார்.

'அர்த்த சாத்திரமும் தமிழ் அறநெறிகளும்' என்ற தலைப்பில் ஆய்வுப் பணியில் ஈடுபட்டிருக்கிறார்.

சிறந்த முறையில் புதிய தலைப்புக்களில் கருத்தரங்குகள் ஏற்பாடு செய்யும் இயல்பு இவரிடம் காணப் பெறுகிறது.

டாக்டர் கரு. முத்தய்யா (காரைக்குடி 23—10—1944)

பிஎச். டி. (மதுரை-1979) ஜெயகாந்தன் நாவல்களில் பாத்திரப் படைப்பு இந்த ஆய்வேடு நூலாக அச்சிடப் பெற்றுள்ளது.

1972 முதல் தேவகோட்டை ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரியில் தமிழ்த் துறையில் பணியாற்றிவருகிறார்.

டாக்டர் சுப. திண்ணப்பன் (தேவகோட்டை 19—6—1935)

பி. எச். டி. (அண்ணாமலை, 1978) சிந்தாமணியின்மொழி யமைப்பு

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து, மொழியியல் உயர் ஆய்வு மன்றத்தில் பல்லாண்டுகள் இணைப் பேராசிரியர், மலேசியாவில் கோலாலம்பூரில், மலாயாப் பல்கலைக்கழகத்தில் சில ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளர், பின்னர் இணைப் பேராசிரியர். 1983-முதல் சிங்கப்பூரில் சீரிய பணியாற்றி வருகிறார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து நகரத்தார் ஆய்வுத் திட்டத்தின் செயலராக இருந்தார்.

தமிழ் இலக்கணம், இலக்கியம், சமயம், நகரத்தார் தொடர்பான ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார்.

முகவரி: *Department of Asian Language Studies, INSTITUTE OF EDUCATION, BUKIT TAMAH ROAD SINGAPORE 1025*

டாக்டர் இரா. சேது (சிங்கம்புணரி 21—4—1937)

எம். ஏ. பச்சையப்பன் கல்லூரி, சென்னை 1962 பி. எச். டி (சென்னை) 1979—ஆய்வுப்பொருள்: இருபதாம் நூற்றாண்டுச் சமுதாய மறுமலர்ச்சிக்கு அண்ணாவின் கதைகளின் கொடை. இந்த ஆய்வு 'அண்ணாவின் கதை இலக்கியம்' என்ற பெயரில் நூலாக வெளிவந்துள்ளது.

சங்க இலக்கியம், குறள் மாண்பு, கம்பன் பாத்திரப் படைப்பு, பாரதிதாசன் கவிதைத் திறன் என்ற ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதியிருக்கிறார்.

முகவரி: பேராசிரியர், தமிழ்த் துறை, விவேகானந்தா கல்லூரி, சென்னை—4

டாக்டர் சரசுவதி ராமநாதன்
(தேவகோட்டை 19—11—1939)

தமிழ்த்துறைத் தலைவர், சீதாலட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரி பள்ளத்தூர் 623107.

பிஎச். டி. (மதுரை 1980) கம்பராமாயணத்திலும் கந்தபுராணத்திலும் அவல வீரர்கள்.

1970 முதல் நூற்றுக்கணக்கான பட்டிமன்றங்கள் வழக்காடு மன்றங்களில் கலந்து கொண்டிருக்கிறார். இசைச் சொற்பொழிவுகளையும் தொடர் சொற்பொழிவுகளையும் இந்தியாவிலும் இலங்கை மலேசியா சிங்கப்பூரிலும் ஏராளமாக நிகழ்த்தி வருகிறார்.

நூல்கள்: திருவெம்பாவை எளிய உரை, நாடுபோற்றும் நங்கைநல்லாள், கம்பன் கலைக் கோவிலுக்கோர் கைவிளக்கு கம்பன் அன்றும் இன்றும்என்றும், புகழொடும் ஓங்கி நிற்பான், கம்பனின் வண்ணங்கள்.

புனைபெயர் — "வாணி"

டாக்டர் சபா அருணாசலம்

36 தொண்டியார் தெரு, தேவகோட்டை பி. (9-7-1946)

1982-இல்மதுரைப் பல்கலைக் கழகத்தில் பிஎச் டி.பட்டம் பெற்றார். கட்டுரை சிறுகதைப் போட்டிகளில் பரிசு பெற்றிருக்கிறார். கவியரங்கங்களில் பங்கு பெற்று வருகிறார்.

நூல்கள்: (1) தமிழ் நாவல்களில் காந்தியத் தாக்கம். இது தமிழ் வளர்ச்சி இயக்ககப் பரிசு பெற்றது. (2) வாழ்க்கையும் செய்தியும்.

தேவகோட்டை ஸ்ரீ சேவுகன் அண்ணாமலைகல்லூரி யில் தமிழ்ப் பேராசிரியராக உள்ளார்.

டாக்டர் வெ. சு. அழகப்பன்

8, ப. அ. லெ. தெரு காரைக்குடி

அண்ணாமலைப் பல்கலைக் கழக எம். லிட் (புற நானூற்றில் காணப்படும் அரசியல் சமுதாய வாழ்வு) மதுரைப் பல்கலைக் கழக பிஎச்.டி. (பதினொராந் திருமுறைத் திறன்) இவை அச்சிடப் பெறும் நிலையில் உள.

மேலைச்சிவபுரி சன்மார்க்க சபையின் கணேசர் செந் தமிழ்க் கல்லூரியில் 9 ஆண்டுகள் முதல்வராக இருந்தார். காரைக்குடி அழகப்பா கல்லூரியில் 1971 முதல் பேராசிரிய ராக இருந்து வருகிறார்.

வெளிவந்த நூல்கள்

(1) சமயக் கட்டுரை மாலை. (2) சிலம்பின் முதல் ஒலி.

டாக்டர் இராம சுப்பையா

மலேசியா -என்ற பகுதியைப்பார்க்க.

டாக்டர் வெ. பழனியப்பன்

10, சிவபுரி குடியிருப்பு, அண்ணாமலைநகர். (கும. வெ. இல்லம்,மகிபாலன்பட்டி 9-7-1932) அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தில் எம். ஏ.எம். லிட் பிஎச். டி பட்டங்கள் பெற்றவர். 1984-85 ஆம் ஆண்டுக்கான குறுகியகால ஆய்வு-இரட்டைக் காப்பியங்களில் பாடவேறுபாடுகள்,

நூல்கள்: (1) தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம் தொகுதிகள் 1, 2, 3, 4 இல் ஏனைய ஆசிரியர்களுடன் இணைந்து கூட்டுஆசிரியர்.

(2) நம்பி அகப் பொருள்-உரை விளக்கம் ஆராய்ச்சி முன்னுரையுடன் கூடிய பதிப்பு.

(3) புகழேந்தியும் நளவெண்பாவும் (எம். லிட் ஆய்வு)

(4) தமிழ் இலக்கிய இலக்கண நூல்களில் பாட வேறுபாடுகள் (பிஎச். டி. ஆய்வு)

கருத்தரங்குகளில் இலக்கிய இலக்கண ஆய்வுக் கட்டுரை பலவற்றை வழங்கியுள்ளார்.

சிறப்புத்துறை: இலக்கண ஒப்பீட்டாய்வு. இவர் 1960முதல் 1964 வரை தமிழ்நாடு நாளிதழில் துணைஆசிரியராகஇருந்தார். அதன் பிறகு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்த் துறையில் பணிபுரிந்து வருகிறார்.

டாக்டர் பழ முத்துவீரப்பன்

பி.மேலைச்சிவபுரி 2-1-1953 நிலையான முகவரி 69. சு. ராம வீதி காரைக்குடி-1

1976முதல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் விரிவுரையாளர் இப்போது அங்குள்ள அஞ்சல் வழிக் கல்விப் பிரிவில் தமிழ்ப் பேராசிரியராக உள்ளார். புனைபெயர்-'பொன்னரசி'

நூல்: மௌனச் சிறகுகள் (கவிதைத் தொகுப்பு)

டாக்டர் பட்டம் 1984 ஆய்வு தி. ஜானகிராமன் எழுதிய சிறுகதைகள்—ஒருதிறனாய்வு. 1984-85 இல் குறுகிய கால ஆய்வு—இருபதுகளில் கவிதை நாடகங்கள்.

டாக்டர் ச சவகர்லால் பி. சேதுரெகுநாத பட்டணம் 16-11-1936 தமிழ்ப் பேராசிரியர் ஆறுமுகம்பிள்ளை சீதையம்மாள் கல்லூரி திருப்புத்தூர்-623211 நூல்: எண்ணச் சிறகுகள் கவிதைத் தொகுப்பு 300-க்கு மேற்பட்ட கவியரங்குகள் வழக்காடு மன்றம், பட்டிமன்றம் ஆகியவற்றில் பங்கேற்றிருக்கிறார். டாக்டர் பட்டம் 1982. ஆய்வுப்பொருள்-தேவாரத்தில் தொன்மைக் கூறுகள்

ஏராளமான தொடர்கட்டுரைகள், கதைகள் கவிதைகள் எழுதிப் பல் பரிசுகள் பெற்றுள்ளார்.

## ஏனைய பட்டங்கள் பெற்றவர்கள்

திரு. வ. தேனப்பன் எம்.ஏ.

(1/92 பி. அழகாபுரி, கீழச்சிவற்பட்டி 28-10-1950) துணைப்பேராசிரியர், ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி தேவகோட்டை. புனைபெயர்—சித்தாந்தன்,

நூல்கள்

சிறுகதை—அயல் மகரந்தங்கள், சிரிப்புக்குப் படமெடுப்போம் தவளைத் திருமணம் முதலிய சிறுகதைகள் 360

கவிதை —கனவு அன்னங்கள், வாழ்த்து மலர்கள்

நகைச்சுவை—அத்தைக்கு மீசை முளைக்கிறது.

குறுநாவல்—சிறகை உதிர்க்கும் பறவைகள் முதலிய 5

நாவல் —அமுதசுரபிகள், சந்தன மணங்கள் முதலிய 6

நாடகம் —துப்பறியும் சிங்காரம் (குழந்தை எழுத்தாளர் சங்கத்தில் ஏவிஎம் தங்கப் பதக்கம் பெற்றது) முதலிய 3

வானொலி நாடகம்— கிழக்கு வெளுக்கிறது.

பயணக்கட்டுரைகள்— பணம் காய்க்கும் மரங்கள், சிதம்பர ரகசியம்.

திறனாய்வுக் கட்டுரைகள் — புதுமைப்பித்தன் ஜெயகாந்தன் சிறுகதைகளை ஒப்பாய்வு செய்திருக்கிறார். தமிழ் மலையாளச் சிறுகதைகளின் ஒற்றுமை வேற்றுமை இயல்புகளையும் ஆராய்ந்திருக்கிறார்.

கவியரங்கம் பட்டிமன்றம் முதலியவற்றில் கலந்து கொள்கிறார்.

டாக்டர் பட்டத்திற்கான ஆய்வு—ஒன்பது நகரக் கோயில்கள் குறுகிய கால ஆய்வேடு—நகரத்தார் வளர்த்த சிற்பக்கலை (தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984)

திரு. பழ. முத்தப்பன் எம். ஏ. (புதுவயல் 17-5-1945)

துணைப் பேராசிரியர், சிவஞான பாலைய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி மயிலம் 604304. புனைபெயர்- முத்து.

படைப்புக்கள் தெய்வப்பாமாலை, நாச்சாத்தாள் உலகமாயாள் தாலாட்டு, திருவருட் பயனில் முப்பொருள்இயல்பு, அம்மையின் அருளமுது, சிந்து இலக்கியம் ஆய்வுக்கட்டுரைகள் — 16

பட்டங்கள் பட்டிமன்ற மாமணி, பைந்தமிழ்க் காவலர்.

டாக்டர் பட்டத்திற்கான ஆய்வு-அருள் நந்தி சிவாச்சாரியாரின் நூல்கள் (1984)

சிறப்பு ஈடுபாடு-சித்தாந்தம்.

திரு. கதி. கணேசன், எம். ஏ , எம்ஃபில்
(நெற்குப்பை 14-7-1946)

பேராசிரியர், அழகப்பா கல்லூரி, காரைக்குடி 2 (தாயகம், 1, வைரவன் அம்பலகாரர் தெரு, ஐந்து விளக்கு, காரைக்குடி—1)

நூல்கள்: அறிவுக்கொடை வள்ளல் அழகப்பர் (குழந்தை எழுத்தாளர் சங்கத்து வெள்ளிப் பதக்கம் பெற்றது) குழந்தை இலக்கியத்தில் வள்ளியப்பா ஒருவழிகாட்டி.

பிற சிறப்புக்கள்: வள்ளியப்பாவின் குழந்தைப் பாடல்கள் (எம்.ஃபில் ஆய்வு)

எம்.ஜி.ஆர், தங்கப் பதக்கம் பெற்ற நடிகர், பரிசு பல பெற்ற பேச்சாளர், திருமண வாழ்த்துக் கவிஞர்.

டாக்டர் பட்ட ஆய்வு – தமிழகத்தில் நாதசுரக்கலை

திரு. ச. மெய்யப்பன் எம். ஏ. (இராமச்சந்திரபுரம் 1933)

1957 முதல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றி வரும் தமிழ்ப் பேராசிரியர். மணிவாசகர் பதிப்பகத்தின் வெளியீடுகளுக்குப் பதிப்பாசிரியர்,பதிப்புச் செம்மல். தேனீ போன்ற உழைப்பாளி. தவச் செல்வர் வடலூர் குங்கிலியம் சண்முகனார் மகன்.

நூல்கள்: தாகூர், அறிவியல் சூடி, மும்மணிகள், கபிலர்.

ஆய்வுத்தலைப்பு பதிப்புக் கலை. (டாக்டர் பட்டத்திற்கு)

இவர் படிக்காத தமிழ் நூல் இல்லை, கலந்துகொள்ளாத இலக்கிய விழாக் கிடையாது. சந்தித்து உரையாடாத தமிழ் அறிஞர் எவருமிலர்.

உடன் பணிசெய்யும் ஆசிரியர்களையும் தம்முடன் படித்தவர்களையும் ஏனையோரையும் புதிய துறைகளில் நூல்கள் எழுத ஊக்குவித்து, தேவையான மூல நூல்களையும் பிற சான்றுகளையும் அவர்களுக்குச் சேகரித்துக் கொடுத்து அந்த நூல்களைத் தாமே அச்சிட்டு, சோம்பிக்கிடந்த திறமைகளை வெளிக் கொணர்ந்திருக்கிறார்.

மங்கல விழாக்களிலும் மாறுபட்ட நிகழ்ச்சிகளிலும், அருந்தமிழ்த் தொண்டு புரிந்தவர்களுக்கு தம் காணிக்கையாக பாராட்டிதழ்கள் அல்லது நினைவுக் குறிப்பு வெளியிட்டிருப்பது இவருடைய உள்ளக் கிடக்கையை உணர்த்தும்.

தமிழ் வளர்ச்சி கருதி, தகுந்த முதலீடுடன் அற நிறுவனம் (டிரஸ்டு) அமைத்துள்ளார்.

இவர் 1957 வரை அண்ணாமலையில் படித்து எம். ஏ. பட்டம் பெற்றார். அங்கே பயின்ற காலையிலேயே 'முத்தமிழ், என்ற கையெழுத்து இதழைத் தொடங்கித் தம் பதிப்பகப் பணிக்கு அடித்தளம் கொண்டார். இவர் பிறந்த ஊரான இராமச்சந்திரபுரத்தில் 'அன்பு நிலையம்' முதலிய பதிப்பகங் களும் கவிஞர் கண்ணதாசனை ஆசிரியராகக் கொண்ட ஓர் இதழும் வெளியான சூழலும் இவருடைய ஈடுபாடுகளை இளமையிலேயே அடையாளம் காட்டின.

மூலைகளில் உள்ள சிற்றூர்களில் முடங்கிக் கிடந்த முதறிஞரான ஏ. வி. சுப்பிரமணிய ஐயர், மார்க்கபந்து சர்மா போன்றோரைத் தேடிச் சென்று அவர்தம் படைப்புக்களை வெளியிட்ட பெருமை இவர்க்கு உரியது.

1984-85க்கு இவர் மேற்கொண்டுள்ள குறுகிய கால ஆய்வின் தலைப்பு- திறனாய்வில் கலைச் சொற்கள்

புலவர் சோம இளவரசு எம். ஏ. எம். லிட். (கீழச்சிவற்பட்டி)

தமிழ்த்துறை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம். சிறந்த எழுத்தாளர், பேச்சாளர்.

இலக்கணத்தைக் கசப்பு மருந்தாகப் பலரும் எண்ணும் காலத்தில் அதனை உண்டு இனிப்பு மருந்தாக வழங்கி வருபவர். இலக்கண வரலாறும், இக்காலக் கொள் வகை அறிந்து நன்னூலுக்கு இவர் எழுதிய உரையும் இவரின் இலக்கணப் புலமை காட்டும். சிங்கப்பூர், மலேசியா முதலிய வெளிநாடு களுக்கும்சென்று தமிழ் மணம் பரப்பிய இவர், நூல்கள் பலவற்றின் ஆசிரியர். மணிவாசகர் நூலகப் பதிப்பாசிரியர் குழுவில் ஒருவர்.

கவிஞர் கண்ணதாசனிடம் பற்றுக் கொண்ட இவர் கவிதை எழுதும் ஆற்றல் பெற்றவர். இவர் இயற்றியுள்ள, நீதிசூடியில் புதுமை வேகமும், போர் முழக்கமும் காணலாம், கேட்கலாம்,

நூல்கள்-- (1) இலக்கிய வரலாறு (2) இலக்கண வரலாறு (3) இருபது நூற்றாண்டுகளில் தமிழ். (4) பரணி இலக்கியம். (5) திருவருணைக் கலம்பகம்.

டாக்டர் பட்டத்திற்கு ஆய்வுத் தலைப்பு-சேனாவரையர் உரைத் திறன்.

1984-85 குறுகிய கால ஆய்வு—அணியிலக்கணம்: ஓர் ஒப்பீடு.

திரு. சுப. இராமநாதன், எம். ஏ., எம். லிட்
6/10 நடுவீதி, நாட்டரசன்கோட்டை 30—11—1922

சிவகங்கை அரசர் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரிய ராக இருந்தார். 1957 முதல் 1982 வரை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பணி புரிந்து ஓய்வு பெற்றார்.

இலக்கியக் கட்டுரைகளை மலர்களுக்கும், பல்கலைக் கழகக் கருத்தரங்குகளுக்கும் எழுதியிருக்கிறார். ஐங்குறுநூறு மாநாட்டில் குறிஞ்சித்திணை பற்றிச் சொற்பொழிவாற்றி யிருக்கின்றார்.

மலேசியநாட்டுப் பினாங்கு வெலஸ்லி மாகாண சட்ட சபையில் உறுப்பினராக இருந்திருக்கிறார்.

"முத்தமிழ்மணி" கதி. சுந்தரம் வலையபட்டி 9-11-1927

1954 முதல் மதுரை தியாகராசர் கல்லூரியில் தமிழாசிரி யராக இருந்துவருகிறார். பொற்கிழிப் பரிசு பெற்ற கவிஞர்.

பட்டிமன்றப் பேச்சாளர். இசை மரபு மாறாமல் பாடும் ஆற்றல் கைவரப்பெற்றவர். நாடகங்களில் நடித்துள்ளார் புலவர் குழுவின் முன்னாள் உறுப்பினர்.

நூல்கள்: பொன்னித்துறைவன், கோடை நாற்பது (கவிதை) கலிங்கத்துக் கைதி (நாடகம்).

திரு சு. குழந்தை நாதன் எம். ஏ.

கோனாபட்டு 17-12-1930. 'பெத்லகேம்', ஹார்துநகர் கோ. புதூர். மதுரை 17.

புனைபெயர்—சுகுநா. காரைக்குடி அழகப்பர் கல்லூரியில் பணியாற்றியவர். மதுரை கருமாத்தூர் அருள் ஆனந்தர் கல்லூரியில் பேராசிரியராக இருந்தவர். மொழிபெயர்ப்பாளர்.

நூல்கள் கோடி கொடுத்த கொடைஞன் (அழகப்பர் வரலாறு)
கலைத்தந்தை கருமுத்து தியாகராசர்
பல்கலைக்கழக ஆட்சிச் சொல் அகராதி
ஏழைகளின் கல்வித்தொண்டர்-தெலசால் வரலாறு.
தாகூரின் சொற்பொழிவுகள், இந்தியப்பொருளா தாரம் முதலிய 20

பதிப்பாசிரியர்: உலகத்தமிழ் (மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்துக்காக)

இதழ்கள் கத்தோலிக்க சேவை, நம் வாழ்வு இதழ்களின் துணை ஆசிரியர்.

திரு. இராம சிவசுப்பிரமணியன், எம் ஏ., பி. ட்டி.

நாட்டரசன்கோட்டை 10-11-1934

புனைபெயர்- வடிவேல்

தேவகோட்டை சேவுகன் அண்ணாமலை கல்லூரியில் தமிழ்த் துறையில் துணைப் பேராசிரியராக இருந்து வருகிறார்.

திரு. லெ. இராமநாதன் எம்.ஏ.

அரண்மனை சிறுவயல் 5-2-1937

நூல்கள் அறந்தொரு சிந்தையோன், தொண்டின் செல்வர், இளையான்குடி மாறனார், நந்தா ஒளிதந்த நமிநந்தியடிகள்.

சிவகங்கை அரசர் கல்லூரியில் பல ஆண்டுகள் தமிழ்ப் பேராசிரியராக இருந்தார். 1983 முதல் இராமநாதபுரத்தில் சேதுபதி அரசுகல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராகவும் பேராசிரியராகவும் இருந்து வருகிறார்.

திரு மீ இராசேந்திரன், எம். ஏ.(மீரா)
16. சிவன்கோவில் வடக்குத்தெரு சிவகங்கை. 10-10--1938

தமிழ்ப்பேராசிரியர், மன்னர் துரைசிங்கம் நினைவுக் கல்லூரி, சிவகங்கை.

சிறந்த கவிஞர். அன்னம் அகரம் வெளியீடுகள் வாயிலாக பதிப்புத்துறையிலும்அச்சுத்துறையிலும்புரட்சி செய்திருப்பவர். சில மலர்களின் பதிப்பாசிரியர் மதுரைப் பல்கலைக்கழக ஆசிரியர் மன்ற(*MUTA*) இதழாசிரியர்.

பேரறிஞர் அண்ணாவால் பலமுறை குறிப்பிட்டுச் சொல்லப்பட்ட பெருமைக்கு உரியவர்.

நூல்கள்: இராசேந்திரன் கவிதைகள் (மீரா கவிதைகள்) மூன்றும்ஆறும் (கவியரங்கக் கவிதைகள்) கனவுகள் + கற்பனை கள் = காகிதங்கள் ஊசிகள் மண்ணியல் சிறுதேர்—ஒரு மதிப்பீடு

மகாவித்துவான் ரா. இராகவ ஐயங்கார் மகனாரான இராமாநுச அய்யங்கார், டாக்டர் இலக்குவனார், டாக்டர் அவ்வை நடராசன் ஆகியோரிடம் கல்வி பயின்று தமிழார்வம் பெற்றவர். 1961 முதல் ஆசிரியப் பணி செய்பவர்.

அன்னம் வெளியீடுகள் வாயிலாகப் புது எழுத்தாளர் பலரை ஊக்குவிப்பவர். இலக்கிய வளர்ச்சியில் புதுத்தடம் போட்டிருப்பவர்.

கணக்கற்ற கவியரங்குகளில் கலந்து கொள்பவர். பாரதி மன்றத்தின் அச்சாணி. பாரதி நூற்றாண்டு விழாவைப் பெருஞ் சிறப்புடன் கொண்டாடியவர். பாரதி மண்டலம் காண விழைபவர். பாரதியம் என்ற பெயரில் பாரதியைப் பற்றிய கட்டுரைகள் கவிதைகளைத் திறம்படத் தொகுத்துள்ளார். அழகிய மலர்களை உருவாக்குவதில் வல்லவர். புதுக் கவிதை களை ஊக்குவிப்பவர்.

திரு மீ மனோகரன் (சிவகங்கை 28—5—1932)

மானிடவியல், வரலாறு, இலக்கியத்திறனாய்வுக் கட்டுரைகளை ஏராளமான தமிழ், ஆங்கில ஏடுகளில் எழுதி வருகிறார்.

நூல்கள்: கிழவன் சேதுபதி (வரலாறு) தென்அமெரிக்காவில் சோழர்கள் (தமிழ்ப் பண்பாடு பற்றிய ஆராய்ச்சி)

கவிஞர் மீரா, இவர் தம்பி.

திரு. தே. சொக்கலிங்கம் எம். ஏ

பி. அழகாபுரி ஊரினர். பல்லாண்டுகளாக காரைக்குடி அழகப்பர் கல்லூரித் தமிழ்த்துறையில் துணைப் பேராசிரியராக இருப்பவர். நெடுங்காலமாக, பாடுவார் முத்தப்பர் பற்றிய ஆய்வுக்கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

பேராசிரியர் மாணிக்கவாசகம்

(காரைக்குடி—முத்துப்பட்டினம்)

திருவாசகத்தைப்பெரிதும் பரப்பியவரும் காரைக்குடியில் வருமானவரி ஆலோசகராக இருந்திருந்தவருமாகிய செ. நாராயணன் செட்டியார் (1904--1978) மகனார் ஆவார்.

இவர் உதகையில் அரசினர் கலைக் கல்லூரியில் பல்லாண்டுகளாகத் தமிழ்த்துறையில் துணைப் பேராசிரியராக உள்ளார். டாக்டர் பட்டத்திற்குப் பதிவு செய்துகொண்டிருக்கிறார். ஆய்வுத் தலைப்பு—திருவாசகம்.

உதிகைக் கம்பன் கழகத்தில் செயலர். நீலகிரி மாவட்டத்துத் தமிழ்ப் பணிகள் பலவற்றிலும் பங்கு கொண்டு வருகிறார்.

இவருடைய அண்ணன் திரு. சிங்காரவேலன் திருவாசகம் அருட்பா ஆகியவைப்பற்றி இடையே சொற்பொழிவுகள் ஆற்றி வருகிறார். மற்றொரு சகோதரர் திரு. ஞானசம்பந்தனுடன் சேர்ந்து இவர்கள் அனைவரும் தங்கள் தந்தையார் 25 ஆண்டுகள் நடத்திய திருவாசக விழா தொடர்ந்து நிகழ்வதற்காக அறக்கட்டளைகளை ஏற்படுத்தியிருக்கின்றனர்.

திரு. நா. சுந்தரமூர்த்தி

சேவு. லெ. ராம. நா. இல்லம், 3, குப்பான் செட்டியார் சந்து, காந்திரோடு, தேவகோட்டை 28-7-1944

பயிற்றுநர், தமிழ்த்துறை ஸ்ரீசேவுகன் அண்ணாமலை கல்லூரி, தேவகோட்டை

இவர், காந்தி நாராயணன் செட்டியார் மகன்.

முதியோர் கல்வித்திட்டத்திற்கு 'கிராமவங்கி' என்ற நூல் எழுதி 1979-இல் இந்திய அரசின் பரிசு பெற்றவர்.

புனைபெயர்-மூ

திருமதி நா. வள்ளி (கணவர் - திரு. கி சொக்கலிங்கம் காரைக்குடி) கானாடுகாத்தான் 10—11 —1950

முகவரி: கிருஷ்ணன்செட்டியார் வீடு, 13 கோவிலூரார் வீதி, காரைக்குடி 623001

எம். ஏ., பி. எட். பட்டங்களும் கல்வெட்டுத் துறையில் பட்டமேற்படிப்புச் சான்றிதழும் பெற்றவர் காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரியில் உதவிப் பேராசிரியராக உள்ளார்.

டாக்டர் பட்டத்திற்குப் பதிவு செய்துகொண்டிருக்கிறார். ஆய்வுத்தலைப்பு — நகரத்தார் அறங்கள்.

தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் குறுகியகால ஆய்வுத் திட்டத்தின்கீழ் "சிற்பக் கலையின் சிறப்பும் சிற்பக் கலைக்கு முகவையின் பங்கும்" என்ற ஆய்வை முடித்துள்ளார்.

நூல்: 'திருப்பத்தூர்' (தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு)

திரு. சுப. கதிரேசன்
பி. கல்லுப்பட்டி 12. 8. 1945

பிள்ளை சென்ற ஊர்: பனங்குடி B. A. தமிழ் : 1967 அழகப்பாகல்லூரி. M. A. தமிழ் 1969 தியாகராசர் கல்லூரி. 1969 முதல் அரசினர் கல்லூரிகள் பலவற்றில் தமிழ்த்துணைப்

பேராசிரியர் பணி. 1982 முதல் தமிழ்ப் பேராசிரியர். கவியரசு கண்ணதாசன் கவிதைகள் பற்றி டாக்டர் பட்டத்திற்கு ஆய்வு நடத்தி வருகிறார்.

''இளங்கோவடிகள் சமயம்'' என்ற ஆய்வுக் கட்டுரையை எழுதியிருக்கிறார். கவியரங்கம், வழக்காடு மன்றம் பட்டிமன்றம் வானொலி நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு வருகிறார்.

முகவரி; தமிழ்ப்பேராசிரியர், மன்னர் கல்லூரி, புதுக்கோட்டை 622001

திரு. க. தியாகராசன் (மகிபாலன்பட்டி)

பண்டிதமணி மகன். அண்ணாமலையில் எம். ஏ பட்டம் பெற்று, தொடர்ந்து பல்லாண்டுகளாக அங்கேயே பணியாற்றி வருகிறார். 1984 – 85 ஆம் ஆண்டுக்கான குறுகிய கால ஆய்வு— திருவெம்பாவை உரை வேறுபாடுகள். டாக்டர் பட்டம் பெற இவர் மேற்கொண்டுள்ள ஆய்வின் தலைப்பு பண்டிதமணியின் நூல்கள்.

திரு அழ. பழநியப்பன்

ஆத்திக்காடு தெற்கூர் ஊரினர். பல்லாண்டுகளாக அண்ணாமலைப் பல்கலைத் தமிழ்த் துறையில் பணிபுரிபவர் 1984-85ஆம் ஆண்டுக்கான குறுகியகால ஆய்வு தேம்பாவணி: ஒரு திறனாய்வு. டாக்டர் பட்டம் பெற இவர் மேற்கொண் டிருக்கும் ஆய்வு—காப்பியத் தலைவியர்கள்.

# 23 கண்ணதாசன்

தமிழ்க் கவிஞர்கள் வரிசையில் தேசியக் கவிஞர் சுப்பிரமணிய பாரதியாருக்குப் பிறகு நிகரில்லாப் புகழ் பெற்றவர், மக்கள் நெஞ்சங்களில் நிலைத்து நிற்பவர் கண்ணதாசன்.

வானொலியிலும் திரைப்படங்களிலும் இவருடைய பாடல்கள் ஒலித்தவண்ணமாக இருக்கின்றன. பாடும் ஆற்றல் உடையவர்கள், திரும்பத் திரும்ப கண்ணதாசன் இயற்றிய பாடல்களைப் பாடி மகிழ்கின்றனர்.

கவிஞர் பல வகையான கவிதைகளைப் புனைந்துள்ளார். அவற்றைப் படித்தும் கேட்டும் சுவைப்பவர்கள் எல்லாத் துறைகளையும் சேர்ந்தவர்கள் எல்லாக் கட்சியினரும் ஆவர். அறிஞர்கள் ஆட்சியாளர்கள் இலக்கியத் திறனாய்வாளர்கள், பக்தர்கள் பண்டிதர்கள் பாமரர்- இவ்வாறு அனைவரையும் ஈர்த்த இன்னும் ஈர்த்துவருகின்ற பாடல்களை இயற்றிய தனிப் பெருங் கவிஞர் கண்ணதாசன் என்பதை மறுக்க இயலாது.

புதிய பொருள்கள்- ஏற்கெனவே அவருக்கு அணுவளவும் அறிமுகம் இல்லாத துறைகள் குறித்துத் தக்கவரிடம் கேட்ட மாத்திரத்தில் முழுமையாக உணர்ந்து பிறர்க்குப் புரியும்வகையிலும் அவர்கள் மனத்தில் ஆழமாக வேரூன்றும் வண்ணமும் பாடியவர் கவிஞர். இனிய சொற்களில்சில நொடிகளில் சுவைபட இவர் படைத்த பாடல்கள் ஆயிரக்கணக்கானவை. எண்ணிக்கை மிகுதி மட்டுமல்ல, இலக்கியத் தரத்தாலும் ஈடு இணையில்லாதன.

சிறுகூடல்பட்டி என்னும் செட்டிநாட்டுச் சிற்றூரில் 24-6-1927-இல் பிறந்தார். பெற்றோர் சாத்தப்ப செட்டியார்- விசாலாட்சிஆச்சி இவர்கள் இட்டபெயர் முத்தையா. கவிஞரின் உடன்பிறப்பாளரில் புகழ்பெற்றவர் திரைப்படத் தயாரிப்பாளர் ஏ. எல். எஸ்-என்ற சீனிவாசன்.

முத்தையா, காரைக்குடியில் நகரத்தார் குடும்பம் ஒன்றுக்குச் சுவீகாரம் செய்யப்பெற்று, "நாராயணன்" ஆனார். இருபெயர்களும் மறைந்து, கண்ணதாசன் என்று இவரேசூட்டிக் கொண்ட புனைபெயரே நிலைத்தது.

கவியரசர் இரவீந்திரநாத் தாகூரைப்போல, கண்ணதாசனும் தம் பெற்றோருக்கு எட்டாவது குழந்தையாகப் பிறந்தார்.

எட்டாவது படித்தபோதே எழுத்தார்வம் மிகுந்து படிப்பை நிறுத்தி, பத்திரிகை ஆசிரியர் ஆனார்.

திருமெய்யத்திற்கு அருகேயுள்ள இராமச்சந்திரபுரத்தில் 'திருமகள்' என்னும் இதழ் வெளிவந்து கொண்டிருந்தது. சிறுகூடற்பட்டி முத்தையா அந்த இதழின் ஆசிரியப் பொறுப்பை 1944-இல் ஏற்று, கண்ணதாசன் என்ற புனை பெயரில் தமிழ் கூறும் நல்லுலகுக்கு அறிமுகமானார்.

திருமகள் இதழில் தொடங்கி, கண்ணதாசன் ஆசிரியராய்த் தொடர்பு கொண்டிருந்த இதழ்கள் வருமாறு:

| | |
|---|---|
| திரை ஒலி | நாளிதழ்கள் |
| மேதாவி | |
| சண்டமாருதம் | |
| *தென்றல்திரை | |
| *முல்லை | தென்றல் |
| *கடிதம் | தென்றல்திரை |
| *தென்றல் | கடிதம் |
| *கண்ணதாசன் | நவசக்தி |

நட்சத்திரக் குறியுள்ள ஏடுகளைக் கவிஞரே சொந்த மூலதனம் போட்டு நடத்தினார். 'கண்ணதாசன்', தரமான இலக்கிய ஏடாக திங்கள் தோறும் வெளியிடப்பெறும் திட்டத்தில் தொடங்கப் பெற்றது. மாறி மாறி இது வெளிவந்தும், நிறுத்தப்பட்டும் வெளிவந்துகொண்டும் இருந்தது. நாளிதழ்கள் சிலவற்றையும் கவிஞர் சில காலம் நடத்தினார். தொடர்ந்து சிலநாட்களுக்கு வெளிவராவிட்டாலும் இந்த நாளிதழ்களை வாசகர்கள் ஆவலுடன் வரவேற்றனர். கவிஞருடைய இதழ்களில் தாங்கள் எழுதிய பிறகு பிரபலமானவர்கள்.

தமிழ்ப்பித்தன்
புவியரசு-கோவை
நா. காமராசன் (பாரதிதாசன் விருது பெற்றவர்)
முகவை சிதம்பரம் (பரமக்குடி)
வேழவேந்தன் (தி.மு.க. அரசில் அமைச்சராக இருந்தவர்)

''சண்டமாருதம்'' இதழை நடத்திவந்த சேலம் மாடர்ன் தியேட்டர்ஸ் நிறுவனத்தார் அந்த இதழை 1948-இல் நிறுத்த நேர்ந்தது. அதன் விளைவாக அந்த இதழின் ஆசிரியராக இருந்த கண்ணதாசனை, தங்களுடைய கதைத்துறையில் பணியாற்றும் படி கேட்டுக்கொண்டனர்.

கண்ணதாசன் இயற்றிய முதல் கவிதை 'அவள்'. எழுதிய ஆண்டு 1944. அது வெளிவந்த இதழ் 'திருமகள்'. அப்போது கவிஞருக்கு வயது ''ஈரெட்டு''(16)

இவர் யாத்த முதற்காவியம்—'மாங்கனி'.

ஜுபிடர் பிக்சர்சாரின் 'கன்னியின் காதலி' படத்திற்கு முதன்முறையாகத் திரைப்பாடல் எழுதினார், அப்பாடலின் பல்லவி:

கலங்காதிரு மனமே—உன்
கனவெல்லாம் நனவாகும் ஒரு தினமே!

கவிஞருடைய கவிதைகள் ஏழு தொகுதிகளாக வெளிவந்திருக்கின்றன.

இவர் படைத்த காவியங்கள்: (1) மாங்கனி(2) ஆட்டனத்தி ஆதிமந்தி (3)தைப்பாவை. தமிழக முதல்வர் திரு. எம். ஜி. ஆர். அவர்கள் விரும்பியவாறு தமிழ்நாட்டு வரலாற்றைஒரு காவியமாகப் படைக்க, கவிஞர் இசைந்திருந்தார். ஆனால் அந்த முயற்சி தொடங்குவதற்கு முன்னரே, காலன் முந்திக் கொண்டான்.

இவர் 1954-இல் தொடங்கிய 'தென்றல்' என்ற இலக்கிய வார ஏட்டில் வெண்பாப் போட்டி நடத்தி இலக்கியப் பித்தர்களைக் கவர்ந்தார். அந்தப் போட்டியில்கலந்துகொண்டு பயிற்சி பெற்ற பலர், இன்று புகழ்பெற்ற கவிஞர்களாக விளங்கிவருகின்றனர்.

கல்லக்குடி (டால்மியாபுரம்) போராட்டத்தில் ஈடுபட்டு கவிஞர் தி. மு. க. வில் சேர்ந்திருந்தார். எனினும் இவர் நடத்திய இலக்கிய ஏடு எல்லாக் கட்சியினரிடமும் இவருக்கு ஆதரவாளர்களை உருவாக்கிற்று. வசையும் இசைபட,இனிய தமிழில் இலக்கிய மணங்கமழத் திட்டியதால், தனிப்பட்ட முறையில் தாக்கப்பட்டவர்களும் கவிஞருடைய கரத்தில் விளையாடிய, தவழ்ந்த தமிழைச் சுவைத்தனர், வியந்தனர்.

20-க்கு மேற்பட்ட நவீனங்களையும் 25 கட்டுரை நூல்களையும் எழுதியுள்ளார்.

'வனவாசம்' இவருடைய சுயசரிதை, ஒழிவுமறைவு தற்புகழ்ச்சி ஆகியவை இன்றி, உள்ளதை உள்ளவாறு எழுதியிருக்கிறார். பெரும்பாலோர் அச்சில் படைக்கக் கூச்சப்படும் அல்லது தயங்கும் செய்திகளைக் கவர்ச்சியாகவும் விரிவாகவும் கூறியிருக்கும் விதமும் அந்த முயற்சியில் மரபுச் சொற்கள் அடைமொழிகள் எதுகை மோனைகள் பழமொழிகள் ஆகிய யாவும் தாமாக வந்து அவரிடம்சரண் அடைந்திருக்கின்ற நடை நயமும் இந்த நூலின் தனித்தன்மைகளாக உள்ளன.

காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் போன்ற ஆன்மிகத் தலைவர்களும் மீண்டும்மீண்டும் பாராட்டிப் பரப்பும் பெருமை உடைத்து, இவர் எழுதிய 'அர்த்தமுள்ள இந்து மதம்' (பத்து பாகங்கள்), பல்லாயிரம் வாசகர்கள் வரவேற்ற நூல்இது. 45 மணித்துளிகளுக்கு ஒடுகின்ற அளவுக்கு இசைத்தட்டாகவும் இந்நூலின் சில பகுதிகளை இவரே பேசியுள்ளார்.

'மருத மலை மாமணியே முருகையா' என்ற கவிஞரின் பாடல் தமிழகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் முருகனடியார்களால் முழங்கப் பெறுகிறது.

ஆதிசங்கரர் இயற்றிய கனகதாரா தோத்திரத்தை, வடமொழியிலிருந்து கவிதைவடிவில் தமிழில் 'பொன் மழை' யாகக் கொட்டியிருக்கிறார்.

'அம்பிகை அழகு தரிசனம்' என்பது ஒரே நாளில் கவிஞர் பாடி முடித்த நூறு பாடல்களின் தொகுப்பு.

கவிஞர் இறுதியாகப் படைத்த பெருநூல் 'இயேசு காவியம்'. இயேசுசபை அருளாளர்கள் மீண்டும் மீண்டும் வேண்டிக்கொண்டதை மறுக்க இயலாதவராய், அவர்கள் கூறிய நற்செய்திகளைக் குறுகிய காலத்தில் குற்றாலத்தில் கவிதை அருவியாகப் பொழிந்தார். இதில் இலக்கிய உத்திகள் பல வற்றையும் கையாண்டு தன்னுடைய புலமைக்கும் திறமைக்கும் முத்தாப்பு வைத்திருக்கிறார். கவிஞருடைய முத்திரைக்கு முழுமையான சான்று இந்த நூல்.

வணங்காமுடி, காரைமுத்துப் புலவர் என்பவை கவிஞரின் புனை பெயர்களில் சில.

கம்பனின் காவியத்திலும், பாரதியாரின் பாடல்களிலும் ஈடுபாடு கொண்ட கவிஞர், அன்னார் இருவரையும் தம்முடைய மானசிகக் குருநாதர்களாகக் கொண்டிருந்தார்.

நாவலைப் பொறுத்தவரை, வங்க இலக்கிய மேதை சரத்சந்திரருக்குக் கவிஞர் உள்ளத்தில் தனி இடம் இருந்தது. அதனால், சரத் பாபுவின் ''சந்திர நாத்'' என்னும் நவீனத்தை 'மாலையிட்ட மங்கை' என்ற பெயரில் கவிஞரே சொந்த மாகத் திரைப்படமாக்கி, வசனம் பாடல்கள் ஆகியவற்றையும் தாமே அமைத்தார்.

'அழகி' என்ற இவருடைய கவிதை பதினான்கு மொழி களில் பெயர்க்கப்பட்டுள்ளது.

'பாடாய் தும்பீ! மணவறைப் பாட்டு' என்னும் இவருடைய கவிதையை 1958-இல் சாகித்திய அகடமி பல மொழிகளில் மொழிபெயர்த்து வெளியிட்டது.

சில கவிதைகள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு *AU REVOIR* என்னும் தலைப்பில் ஒருநூல் வெளிவந்துள்ளது.

ஒரு சில கருத்துக்களைக் கதை வடிவில் சொன்னால்தான் மக்கள் மனத்தில் அவை நிலை பெறுகின்றன என்பதை உணர்ந் தார். எனவே 'குட்டிக் கதைகள்' எழுதினார். இவை கன்னடத் திலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

இவர் எழுதிய 'புஷ்ப மாலிகா' என்னும் நூல் ஆங்கிலத் திலும் மலையாளத்திலும் வெளிவந்திருக்கிறது.

'விளக்கு மட்டுமா சிவப்பு?' என்னும் நவீனம் மலையாள மொழியில் ஆயிரமாயிரம் வாசகர்களால் படித்துப் பாராட்டப் பெற்றது.

மேடைப் பேச்சாளராகவும் கவிஞர் புகழ் பெற்றார். குட்டிக் கதைகள், உவமைகள், நகைச் சுவைத் துணுக்குகள் நிறைந்திருந்ததால், தாமதமாக இவர் வந்தாலும் பொறுமை யாகக் காத்திருந்து கேட்டு இன்புற்று மக்கள் மனநிறைவு அடைந்தனர்.

25 திரைப் படங்களுக்கு உரையாடல் எழுதியிருக்கிறார் இவற்றின் சிறப்பாலும் இவர் பெருமை அடைந்தார்.

4,000க்கு மேற்பட்ட கவிதைகளையும் ஏறத்தாழ ஐயாயிரம் திரைப் பாடல்களையும் இவர் ஆக்கியுள்ளார்.

திரைப் பாடல்களுக்குப் பல்லவியை மாற்றிப் பாட்டெழுதித் தர வேண்டும் என்று படத் தயாரிப்பாளர்கள் கவிஞரைக் கேட்பது வழக்கம். அதற்குள்ளாக இவர் நெடுந்தொலைவுக்குச் சென்று விடுவார். அரிதின் முயன்று, தொலைபேசியில் தொடர்பு கொண்டு தங்களுடைய இடரை விளக்கி வேறு ஒரு பாட்டு வேண்டுவர். அந்தத் தொலை பேசியிலேயே சொல்லி விடுவார், 'எழுதிக்கொள்' என்று. நான்கு மாற்றுப் பாடல்களை 'டிக்டேட்' செய்வார். தேவையானதைப் பயன் படுத்திக்கொள் என்பார்.

கவிஞர் பயணம் செய்து கொண்டிருந்த போது, ஒரு விபத்துநேர்ந்தது. கார் பழுது பார்க்கப் பட்டநேரத்தில் கவிஞர் இயற்றிது தான் 'பூ முடிப்பாள் பூங்கொடியாள்' என்ற புகழ் பெற்ற திரைப்பாடல். திரும்பிய திக்கெல்லாம் ஒலிக்கும் பாடல் இது.

இந்தியாவிலேயே சிறந்த திரைப் படப் பாடலாசிரியர் என்னும் விருதினை இந்திய அரசு இவருக்கு 1970-ல்வழங்கிற்று. தமிழ்நாடு அரசு வழங்கும் சிறந்த திரைப்படப் பாடலாசிரியர் விருதும் அந்த ஆண்டில் இவரை அடைந்தது.

கவிஞருக்கு வரையாது வழங்கி அவரை வாழவைத்தவர் பலர். அவர்களுள் எம். எம். ஏ. சின்னப்பத் தேவர், முதலிடம் வகிப்பவர்.

கவிஞர் என்று இவருக்குப் பட்டம்வழங்கி இவர் புகழைப் பரப்பியவர் கலைஞர் டாக்டர் மு. கருணாநிதி. கவிஞரை மேலும் உற்சாகப் படுத்தியவர்கள் தமிழ்வாணன், சின்ன அண்ணாமலை, வலம்புரி சோமநாதன் போன்றோர்.

இவருடைய நூல்களைச் சுணங்காமல் அச்சிட்டு அழகாக வெளியிட்டு மிகுதியாக விற்பனைசெய்து புது நூல்கள் எழுத தூண்டுகோலாக இருந்தவர் வானதி திருநாவுக்கரசு.

'சேரன்மான் காதலி' என்னும் நூலுக்குச் சாகித்திய அகடமி அளித்த பரிசும், அரசவைக் கவிஞர் என்ற பெருஞ் சிறப்பை உரிய காலத்தில் செய்த தமிழக முதல்வர், புரட்சித் தலைவர் டாக்டர் எம். ஜி. ஆரின் பரிவும், 'குமுதம்' இதழில் இவர் எழுதி வந்த 'இந்த வாரம் சந்தித்தேன்' என்ற கட்டுரைகளைப் படித்த இலட்சக்கணக்கான வாசகர்களின் பாசமும் நீடித்த நோய்களால் அல்லும் பகலும் அல்லற் பட்டிருந்த கவிஞருக்கு அருமருந்தாக அமைந்து ஆறுதல் அளித்துப் புத்துயிரூட்டின.

அரசியல் மாச்சரியங்களால் உணர்ச்சி வசப்பட்டு கடுமை யான சொற்களைப் பிரயோகித்து முதல்வர் எம். ஜி. ஆரை விமர்சித்து, கவிஞர் புயலெனச் சீறிக் கவிதைகள் புனைந் திருந்த போதிலும் அதை அடியோடு மறந்து, அவருடைய தமிழை மட்டுமே மதித்து, அவருக்கு அரசவைக் கவிஞர் பதவியை மாண்புமிகு எம். ஜி. ஆர். மனமுவந்து நல்கினார். அதனால் கவிஞர் மட்டுமின்றி தமிழ் ஆர்வலர் அனைவரும் மகிழ்ச்சியில் ஆழ்ந்தனர்.

தமிழ்நாட்டிலுள்ள எந்தப் பல்கலைக் கழகமும் டாக்டர் பட்டம் கொடுக்கவோ கௌரவப் பேராசிரியர் என்று பதவி வழங்கிச் சிறப்பிக்கவோ முன்வரவில்லை என்பது அவர் காலத்துப் பல்கலைக் கழகங்களின் அவல நிலைக்கு ஒரு படப் பிடிப்பாகும்.

அமெரிக்காவிலுள்ள தமிழ்ச் சங்கங்களின் ஓயாத வற்புறுத்தலுக்கு இணங்க கவிஞர் 1981—இல் அந்த நாட்டில் விரிவான இலக்கியச் செலவு மேற்கொண்டார். அங்குள்ள தமிழரை மகிழ்வித்தார். ஏனைய மொழி அறிஞர் பலருக்கு அறிமுகமானார். சில திங்கள்கள் மருத்துவமனையில் கவிஞர் இருக்க நேர்ந்தது. அப்போது டாக்டர் ஆறுமுகம் தலைமையில் அமெரிக்காவிலுள்ள நூற்றுக் கணக்கான கண்ணதாசன் விசிறிகள் எல்லா வகையிலும் உதவி அவருடைய உயிரைக் காக்க அரும்பாடு பட்டனர்.

உலகெங்கும் தமிழர் வாழும் இடங்களிலெல்லாம் இரண்டு திங்கள்களுக்கு இருள் சூழ்ந்திருந்தது. கவிஞரைப் பற்றிய கடைசிச் செய்திகளை அறிவதற்காகவே கவலைப்பட்ட மக்கள் நாளிதழ்களை நடுங்கிய கரங்களுடன் புரட்டிப் பார்த்தனர். சாதி, மத பேதமின்றி கோடிக் கணக்கான தமிழர் உள்ளங்களில் உறுதியான இடத்தைக் கவிஞர் பெற்றிருந்தது அப்போது உள்ளங்கை நெல்லிக்கனி போலப் புலனாயிற்று.

1981 அக்டோபர் 17...இல் சிக்காகோ மருத்துவ மனையில் கவிஞர் உயிர் பிரிந்தது.

சென்னையில் நடைபெற்ற உடல் அடக்க நிகழ்ச்சிகளில் தமிழக முதல்வரும் எல்லா அரசியல் கட்சியினரும் அவருக்கு மரியாதை செலுத்தினர். கவிஞருக்குக் காரைக்குடியில் மணி மண்டபம் அமைக்கப் பெறும் என்று அரசின் சார்பாகப் புரட்சித் தலைவர் டாக்டர் எம். ஜி. ஆர். அறிவித்தார்.

தனக்குத்தானே இரங்கற்பா பாடிக்கொண்ட ஒரே கவிஞர், இவர்.

## தகுதி உரை

திரு கண்ணதாசன் அவர்கள் இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந்த திருப்பத்தூர் வட்டத்தில் சிறுகூடற்பட்டி என்னும் சிற்றூரில் 24-6-1927-இல் பிறந்தார். இயற்பெயர் முத்தையா. தந்தையார் திரு. சாத்தப்பர். தாயார் திருமதி விசாலாட்சி.

இளமை முதலே தமிழ் இலக்கியங்களை நன்கு கற்ற புலமை வாய்ந்த திரு. கண்ணதாசன், கவிதை படைப்பதில் ஆற்றல் வாய்ந்தவராய்த் திகழ்ந்தார். பழைய மரபைப் போற்றியும், புதிய எழுச்சிக்கு வழி காட்டியும் தமிழ்க் கவிதை உலகிற்கு வளம் ஊட்டினார். புலவர்கள், பொதுமக்கள் என்ற இரு சாராரின் உள்ளங்களையும் தன் கவிதைத்திறனால் கவர்ந்து வருகிறார்.

கலை, இலக்கியம், பண்பாடு, அரசியல், தெய்விகம், வரலாறு ஆகிய துறைகளில் எல்லாம் கவியரசரின் தமிழ் எண்ணங்கள் வண்ணங்களாகி வனப்பூட்டுகின்றன. உரை நடைக்குக் கவிதையின் ஒளிவீச்சைக் காட்டியும் கவிதைக்கு எளிமையின் இனிமையைக் கூட்டியும் கவியரசர் கண்ணதாசன் தமிழ் இலக்கியத்திற்கு ஏற்றம் தந்திருக்கிறார்.

இவரது தமிழ் இலக்கியத் தொண்டினையும், சிறப்பாகக் கவிதைத் தொண்டினையும் பாராட்டி, தமிழக அரசு கவியரசர் கண்ணதாசனை 1-4-1978 முதல் வாழ்நாள் முழுவதும் அரசவைக் கவிஞராக்கிச் சிறப்பிக்கின்றது.

தலைமைச் செயலகம்.
சென்னை - 600 009.
9—7—1978

எம் ஜி. இராமச்சந்திரன்,
முதலமைச்சர்.

## கண்ணதாசனின் கவிக்கடலில் எடுத்த சில முத்துக்கள்

*கவிஞரின் கொள்கை:*

போற்றுபவர் போற்றட்டும் புழுதி வாரித்
  தூற்றுபவர் தூற்றட்டும் தொடர்ந்து செல்வேன்!
ஏற்றதொரு கருத்தைஎன துள்ளம் என்றால்
  எடுத்துரைப்பேன் எவர்வரினும் நில்லேன் அஞ்சேன்!

*இலக்கிய இன்பம் குறித்துக் கவிஞர்*

சதுராடும் மங்கையரின் பாதத்தோடு
  சரியாகச் சேர்ந்தாடும் சிலம்பின் ஓசை
கதகதப்பை வாலிபரின் உளத்தி லேற்றிக்
  கலக்குதல்போல் இலக்கியமும் கலக்கும் நெஞ்சை!

*திருப்பாவை ... .. திருவெம்பாவைபோல் ...*

காளை மணியோசை களத்துமணி நெல்லோசை
வாழை இலையோசை வஞ்சியர்கை வளையோசை
தாழை மடலோசை தாயர்தயிர் மத்தோசை
கோழிக் குரலோசை குழவியர்வாய்த் தேனோசை
ஆழி யலையோசை அத்தனையும் மங்கலமாய்
வாழிய பண்பாடும் மாயமொழி கேட்டிலையோ!
தோழியர் கைதாங்கத் தூக்கியபொன் னடிநோக
மேழியர்தம் இல்லத்து மேலெழுவாய் தைப்பாவாய்!

*அண்ணா பற்றிக் கவிஞர்*

மங்கையர் சிரிப்பி னுள்ளே
வாலிபக் கவர்ச்சி தேங்கும்
வாணிகர் சிரிப்பி னூடே
வாணிபத் திறமை தேங்கும்
பொங்குமென் அருமை அண்ணாப்
புலவனின் சிரிப்பி னுள்ளே
சங்கமுத் தமிழும் நாட்டுச்
சனத்திரள் யாவும் தேங்கும்!

*இதனால்...... இது......*

இசையறிவோன் குழலெடுத்தால் இசைபிறக்கும்
இயலறிவோன் தமிழ்படித்தால் நடைபி றக்கும்
திசையறிவோன் படகெடுத்தால் தேசந் தோன்றும்
திடமுடையோன் முயற்சிசெயின் செயல்பி றக்கும்

*அம்பிகை அழகு தரிசனம்*

பட்டாடை கட்டிஉனைப் பார்க்கின்ற வேளையில்
பத்தினியை நான்பார்க் கிறேன்
பல்லாக்கில் ஏறிநீ ஊர்முழுதும் செல்கையில்
பைரவியை நான்பார்க் கிறேன்
எட்டாத தேர்நடுவில் ஏற்றிஉனை வைக்கையில்
இன்தமிழை நான்காண் கிறேன்
எங்கெங்கு போயினும் எதனைநான் காண்கினும்
அங்கெல்லாம் உனைக்காண் கிறேன்
தொட்டார்க்குத் தாயாகத் தொடர்வார்க்குச் சேயாக
தோகைநீ ஆன தென்ன
சோழகுலம் பலகாலம் ஆளும்வரை நீஅங்கு
துணையாய் இருந்த தென்ன
கொட்டாத மேளங்கள் கொட்டுகிற கூத்தாடி
கோலநட ராசன் துணையே
கொடிவளரும் தில்லைநகர் நடுவிலொரு திருக்கோவில்
கொண்டசிவ காமி உவமையே!

*நகரத்தாரைப் பற்றி*

காசி விசாலாட்சி கவிமதுரைமீனாட்சி கட்டியுள்ள ஆடைகளும்
கழுத்திலுள்ள பொன்நகையும் சுற்றியுள்ள மண்டபமும்—
தூக்கிவரும்
வாகனமும் மற்றும் அழியாத மொட்டைக் கோபுரத்தழ கும்
அண்ணாமலையில் அமர்ந்திருக்கும் பேரழகும் ஆக்கிக்
கொடுத்தவர்கள்
அங்கிருந்து காத்தவர்கள் நாட்டுக்கோட்டை வளர்த்த
நகரத்தா ரல்லவோ

# 24. நூலகர் மூவர்

செட்டிநாட்டில் வீடுதொறும் நூல்நிலையம் இருந்தது. இந்த நூல் நிலையங்களில் இருந்தவை: சைவசமய நூல்கள் அறுபது வருஷப் பஞ்சாங்கம், ஆங்கில ஆசான் முதலியன. பர்மா மலேசியா இலங்கை இந்தோனேசியா தாய்லாந்து நாடுகளிலுள்ள ஊர்களின் தமிழ்ப் பெயர்களைப் பார்த்து, அவற்றுக்கு எதிரே ஆங்கிலத்தில் அச்சிடப்பட்ட பெயர்களை எழுத்து எழுத்தாகப் பார்த்து எழுத உதவும் ஒரு நூலும் நகரத்தார்களுக்காக உருவாக்கப்பெற்று வீடு தவறாமல் இருந்தது. தபால் தந்தி மித்திரன், பர்மாபாஷை, சுலப ஹிந்துஸ்தானி, வட்டிக் கணக்கு நூல்கள் தவிர கீழ்வாய் இலக்கம் முதலியவற்றைக் கொண்ட ஓலைச் சுவடிகளும் கம்பராமாயண ஏடுகளும் இருந்தன.

தாங்கள் தொழில் செய்த வெளிநாடுகளில் நகரத்தார்களில் ஒரு பகுதியினர், பல வகை நூல்களும், இதழ்களும் வெளியிட்டார்கள். நூல் ஆசிரியர்களுக்கு நன்கொடை வழங்க நேர்ந்தகாரணத்தால், நூல்களும் இதழ்களும் குவிந்தது ஒருபுறம். காந்தியடிகளின் அரசியல் பிரவேசத்தால் ஆர்வம் ஏற்பட்டு அரசியல் நூல்களை ஆவலுடன் படிக்க நேர்ந்த சூழ்நிலையும் மற்றொரு புறம் உண்டாயிற்று.

சமய நூல்களும் அரசியல் நூல்களும் இடம் பெற்றிருந்த நகரத்தார் இல்லங்களில் மேலைச் சிவபுரி சன்மார்க்க சபையின் வளர்ச்சிக்குப் பிறகு, தமிழ் இலக்கிய நூல்களும் பெரும் பங்கு பெற்றன.

இவ்வாறாக வெளிநாடுகளில் சேகரிக்கப்பட்ட நூல் நிலையங்கள் போர்க்காலத்தில்சிதறிப்பயன்படாமற்போனதும் உண்டு. அந்தந்த நாடுகளில் முறையாக ஓரிடத்தில் சேர்த்துத் தொகுத்துப் பேணப்பட்டிருந்தால் அவை பெரிய நூலகமாக அமைந்திருக்கும். இந்த நூல் நிலையங்களை இந்தியாவுக்குக் கொண்டு வந்தவர்களும் உண்டு. அவர்களில் சிலர், அவற்றைப் பல நிலையங்களுக்கு அன்பளித்தனர். வேறு சிலர், இரண்டாம் உலகப் போரால் பாதிக்கப்பட்டு தாம் வாழ்ந்த இல்லங்களையே இடித்துச்சன்னலாகவும் கதவு நிலையாகவும் இரும்பாகவும் சிற்பமாகவும் விற்றது போல, தாம் பெரிதும் முயன்று சேகரித்த அரிய நூல்களையும் விற்றனர்.

பயனுள்ள வகையில் நூல்களைத் திரட்டியவர்களில் குறிப்பிடத்தக்கவர் முப்பது பேர் உள்ளனர். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறை மட்டும் பதம் பார்ப்பது போல, எடுத்துக்காட்டாக மூவரைப் பற்றி மட்டும் சில தகவல்களைத் தெரிவிக்கிறோம். பாதங்கள் இவை எனின் படிவங்கள் எவ்வாறிருக்கும் என்பதை வாசகர்கள் கற்பனை செய்து கொள்ள வேண்டுகிறேன்.

## 1. முறையூர் அரு. சொ.

இவர் தம் 16-ஆவது வயதில் 1921-இல் பர்மாவுக்குச் சென்றார். 1940வரை அந்த நாட்டில் பெரிய தொழில் நிறுவனங்களில் பணியாற்றினார். பிறகு 1975வரை கல்கத்தாவிலும் பம்பாயிலும் தொழில்களில் ஈடுபட்டுப் பின்னர் ஓய்வு பெற்று முறையூரில் வாழ்ந்து வருகிறார்.

அனைத்துத் துறைகளைப் பற்றியும் கற்று உணர வேண்டும் என்ற குறிக்கோள் இவருக்கு உண்டு. அல்லும் பகலும் படிப்பதைப் பழக்கமாகக் கொண்டிருக்கிறார். உண்ணும்போதும் படிப்பார். கையில் புத்தகமும் தலையணைக்குக் கீழ் 'தினமணி' நாளிதழும் இருந்தால்தான் இவர்க்கு உறக்கம் வரும். இரயில் பயணத்தையும், நோய் வாய்ப்பட்டு மருத்துவ மனையில் தங்கியிருப்பதையும், படிப்பதற்குக் கிடைக்கும் அரிய வாய்ப்புகளாக கருதுகிறார்.

சொந்தமாகவே நூல்களை வாங்கிப் படிக்கவேண்டும் என்பது இவருடைய நோக்கம். 2500 நூல்களை வாங்கி, வீட்டு நூலகமாக வைத்திருந்தார். பழமையான இனத்தவரைப் பற்றிய நூல்கள், சித்திரக்கலை நூல்கள், மறுபதிப்பு வராத அரிய நூல்கள், பதிப்பாளருக்கும் எழுத்தாளருக்கும் தேவையான ஆதார நூல்கள் பல வகையான அகராதிகள் கலைக் களஞ்சியங்கள், வரலாற்றுச் சான்றுகள் நிறைந்த நூல்கள் உலக அறிஞர்களின் வாழ்க்கை வரலாறுகள் நிறைந்தது. இவருடைய நூலகம். முதுமை காரணமாக, நூலகத்தின் ஒரு பகுதியை 1980-ஆம் ஆண்டில் தமிழக அரசின் தமிழ்ப் பண்பாட்டுத் துறைக்கு விற்றுவிட்டார். இன்னும் ஏராளமான நூல்கள் இவரிடம் உள்ளன.

மனித இன வரலாறு பற்றிய சேகரிப்புகள் இவர் நூலகத்தில் இருக்கின்றன. பல கண்டங்களில் உள்ள மலைச்

சாதியினர், காட்டுமிராண்டிகள், நாடோடிகள் பற்றிய பல கட்டுரைகளை இவர் (திரு. அரு. சொ) எழுதியிருக்கிறார். அதைத் தொடர்ந்து தமிழ்நாட்டில் வந்து நிலை கொண்ட வணிக வகுப்பினரான சிரேஷ்டிகள் என்ற செட்டியார்களின் தொன்மை, பூர்வீகம் முதலியவை பற்றிய ஆராய்ச்சியில் 10 ஆண்டுகள் செலவிட்டார். இதற்காக, சிலநூறுசிற்றூர் களுக்குச் சென்று தகவல்களைச் சேகரித்தார்.

ஒன்றரைக் கோடிமக்கள் தொகை கொண்ட செட்டியார் கள் ஒரிசாவிலிருந்து, ஆந்திரா, கர்நாடகம் முதலிய மாநிலங்களைத் தாண்டி காஞ்சிபுரத்திலும் காவிரிப்பூம் பட்டினத்திலும் சில நூற்றாண்டுகள் தங்கியிருந்தனர் என்பதும் பிறகு 42 பிரிவுகளாகப் பிரிந்து, பலபகுதிகளுக்கும் சென்றனர் என்பதும் இவருடைய முடிவு.

பர்மா நாடு முழுவதும் சுற்றுப் பயணம் செய்து பர்மியரையும் அந்த நாட்டுச் சிறு பான்மையோரான கரீன், ஷான், கச்சின், சினி, ஷான் தய்யோவ், படாவுங் முதலியமலைச் சாதிகளைப்பற்றிய வரலாறுகளை ஆராய்ந்துள்ளார். 1933-இல் சைனா எல்லையைத் தாண்டி யூனான் மாநிலத்துக்குள் கழுதை மீது ஏறிப் பயணம் செய்தார்.

## 2. பாகனேரி வித்துவான் காசிவிசுவநாதன் செட்டியார்

தமிழ்நாட்டிலுள்ள தனியார் நூலகங்களுள் குறிப்பிடத் தக்க ஒரு நூலகம் சிவகங்கை அருகேயுள்ள பாகனேரி என்னும் ஊரில் 1921 முதல் 1974வரை இயங்கிவந்தது. இந் நிலையத்தின் பணிகளை, நூலக இயக்கத்தந்தை டாக்டர் எஸ். ஆர் ரெங்கநாதன் அவர்கள் பெரிதும் பாராட்டியிருக் கிறார்கள்.

இந்நூலகத்தில் இப்போது ஏறத்தாழப் பத்தாயிரம் நூல் கள் உள்ளன. இவற்றை ஒழுங்காகப் போய்ப் படிப்பதற்குக் குறிப்பிட்ட நேரமோ, முறையான ஏற்பாடுகளோ கிடையாது. சம்பள ஊழியர் நியமிக்கப்படவில்லை. எனவே, இராமநாதபுர மாவட்ட நூலக ஆணைக்குழுவின் ஆதரவில் இதை ஏற்று நடத்த நன்கொடையாளர் பேரன்புடன் இசைந்தார்.

இந்நூலகம் உருவானதற்குக் காரணமானவர் திருவாளர் மு. காசிவிசுவநாதன் செட்டியார் ஆவார். இந்தத் தமிழ்ப்

பெரியார் 1898 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 15 ஆம் நாள் இவ்வூரில் பிறந்தார். ஏழு வயது முதல் அதாவது 1905 முதல், நூல்களைப் படிப்பதிலும் வாங்குவதிலும் ஆர்வம் காட்டி வருகிறார். இந்த ஆர்வம் ஆயிரம் பிறை கண்ட பின்னரும் சிறிதும் குறையவில்லை. ஆனால் இவருடைய வாங்கும் சக்தி தான் குறைந்துவிட்டது. நூல்களைத் தம் உயிரினும் மேலாக மதிக்கும் இயல்பு இவரிடம் குடிகொண்டிருக்கிறது.

1913-இல் "வித்வான் காவன்னா" பர்மிய நாட்டின் தலைநகரான இரங்கூனுக்குத் தம் சொத்துக்களைப் பேணவும், தொழில்களைக் கவனிக்கவும் சென்றார். ஆனால் அந்த நாட்டில் அவர் வாழ்ந்த பல்லாண்டுக் காலமும் அவர் செய்தது நூல்களைப் படிப்பதும் வாங்குவதும் ஆகிய இரு வகைப் பணிகளே.

1920-இல் பாகனேரியில் இவர் ஒரு படிப்பகம் தொடங்கினார். அப்போது 1500 நூல்களை நன்கொடையாக வழங்கினார். அவை யாவும் பெரிய நூல்கள்; சிறந்த நூல்கள்; கிடைத்தற்கரிய நூல்கள். பிறகு ஒவ்வோர் ஆண்டும் புதிது புதிதாகப் பல நூறு நூல்களை வாங்கி வழங்கியவண்ணம் இருந்தார். 1934-இல் திருவள்ளுவர் நூல் நிலையம் தொடங்கி, அதையும் இந்த வாசகசாலையுடன் இணைத்தார்.

நூல்களைப் படிப்பதில் இவர்க்கு ஏற்பட்ட ஆர்வம், சென்னையில் இப்போது சிறப்புடன் விளங்கித் தமிழ் நூல் வெளியீட்டுத் துறையில் பெரும் புகழ் பெற்றுள்ள தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்துடன் அதன் தொடக்க காலத்திலிருந்தே தொடர்பு கொள்ளச் செய்தது. இக்கழகத்தின் வளர்ச்சியில் இவர்க்குப் பெரும் பங்கு உண்டு. நாற்பதாண்டுகளுக்கு மேலாக இவர் இக்கழகத்தில் இயக்குநராக இருந்தார். 1975-ஆம் ஆண்டுவரை, திரு. காசிவிசுவநாதன் செட்டியார் இக்கழகத்தின் ஆட்சிக் குழுத் தலைவராக இருந்து வந்தார். இவர் தாமரைச் செல்வர் (பத்மஸ்ரீ) சுப்பையா பிள்ளையின் இணைபிரியா நண்பராக விளங்கினார். காசிவிசுவநாதன் செட்டியாருடைய தமிழார்வம், சங்க நூல்களுக்கு உரை வெளி வர உதவியது இவர் செய்த பொருளுதவியால் பல உரைகளைத் தமிழ் மக்கள் பெற்றார்கள்.

இவர்சேகரித்துள்ள நூல்கள் தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மொழிகளில் உள்ளன. இலக்கியம், நாட்டு வரலாறு முதலிய பல துறை நூல்களும் இங்கே இருக்கின்றன. குறிப்பாக, மேற்கோள்நூல்களும்பழங்காலத்துச்சஞ்சிகைகளும் ஏராளமாக இருக்கின்றன.

இந்நூலகத்துக்கு வழங்கியதுபோக ஏராளமான நூல்கள் வித்துவான் காவன்னாவின் 'வீட்டு நூலகத்தில் உள்ளன.

## 3. கோட்டையூர் ரோஜா முத்தையா

இவரைப்பற்றி 1983-இல் ஆனந்தவிகடன் ''புத்தகங்களே என் உயிர்'' என்ற கவர்ஸ்டோரியை வெளியிட்டது. இந்த அட்டைப்படச் சிறப்புக்கட்டுரையை இந்த நூலில் மறு அச்சிட ஆனந்தவிகடன் ஆசிரியர் 23-4-1984-இல் எழுத்துமூலம் மகிழ்ச்சி யுடன் அனுமதி அளித்திருக்கிறார். ''நன்றி ஆனந்தவிகடன்''

அரிய பெரிய முயற்சிகளுக்கு அற்பமான விஷயங்களே சில நேரங்களில் அஸ்திவாரமாக அமைந்து விடுகின்றன. ஓர் உதாரணம் வேண்டுமா?

சுமார் முப்பது வருடங்களுக்கு முன்பு, ராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த கோட்டையூரிலிருந்து ஓர் இளைஞர் தொழில் காரணமாக சென்னை வந்தார். அந்த இளைஞருக்கு ஓவியக் கலையில் நிறைய ஆர்வமும் பயிற்சியும் உண்டு. எனவே, சென்னையில் ஓர் இடத்தைப் பிடித்து 'ஸைன்-போர்டு'கள் எழுதித்தரும் பணியில் இறங்கினார். சிறிய பெட்டிக்கடைகள் முதல் பெரிய வியாபார நிறுவனங்கள் வரையில் அவரது திறமையைப் பயன்படுத்திக் கொண்டன; தொழில் செழித்தது.

அந்த இளைஞர் தமது ஓய்வு நேரத்தில் எதையாவது படித்துக் கொண்டே இருப்பார். அதற்காகவே நிறைய தமிழ்ப் புத்தகங்களைச் சேகரித்து வைத்திருந்தார். ஒரு முறை ஏதோ வேலையாகச் சொந்த ஊருக்குச் சென்றுவிட்டு சென்னை திரும்பிய அவருக்கு ஓர் அதிர்ச்சி காத்திருந்தது. அவர் சேகரித்து வைத்திருந்த புத்தகங்கள் தொலைந்து போய் விட்டிருந்தன!.

இளைஞர் சற்றே துவண்டாலும் சமாளித்துக் கொண் டார். படித்த புத்தகங்களின் பெயர் நினைவில் இருந்ததால்,

அலைந்து திரிந்து மீண்டும் அவற்றைப் புதிதாக வாங்கி அலமாரியில் அடுக்கினார்.

ஆறுமாத காலத்துக்குப் பிறகு மீண்டும் ஒரு முறை கோட்டையூர் செல்ல வேண்டி நேர்ந்தது. தமது நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒருவரிடம் புத்தகங்களை ஒப்படைத்துவிட்டு ஊருக்குச் சென்றார். சில நாட்கள் கழித்து சென்னை திரும்பியதும் நண்பர் கை விரித்து விட்டார்— மீண்டும் புத்தகங்கள் காணாமற் போய் விட்டன என்று! அந்த இளைஞருக்கு நெருங்கிய சிலர், ''புத்தகங்களுக்கும் உங்களுக்கும் ராசியில்லை போலிருக்கிறது!'' என்று கேலி கூடப் பேசினார்கள்.

அந்த இளைஞருக்கு அன்று ஏற்பட்ட வருத்தத்தை அளவிட முடியாது. அந்த வருத்தத்துக்கிடையில் அவர் ஒரு முடிவுக்கு வந்தார்: 'இனி ஆயுளுக்கும் புத்தகங்களைச் சேகரிப்பதும் அவற்றைப் பாதுகாப்பதும் தான் நமக்கு வேலை!'

அந்த முடிவுதான் இன்று அவரை ஓர் அசாதாரண மனிதராக உருமாற்றியிருக்கிறது. அச்சில் வெளிவந்த பழம்பெரும் நூல்களையும் பத்திரிகைகளையும் தேடிப்பிடித்து, தமது சொந்த முயற்சியால் மாபெரும் நூலகம் ஒன்றை உருவாக்கியிருக்கிறார் அவர். முப்பதாண்டு கால உழைப்பும், முதலீடும் புத்தகம் சேகரிக்கும் அவரது ஆர்வத்துக்குச் சாட்சியம் கூறுகின்றன.

அவர்தான் திரு. ரோஜா முத்தையா அவர்கள். (சென்னையில் தொழில் நடத்தியபோது தமது நிறுவனத்துக்கு 'ரோஜா ஆர்ட்ஸ்' என்று பெயர் வைத்திருந்தார், அந்த 'ரோஜா' தான் இப்போதும் அவர் பெயரோடு ஒட்டிக் கொண்டிருக்கிறது!)

கோட்டையூரில் அவரது இல்லத்தில்எங்குதிரும்பினாலும் புத்தகங்களும் பத்திரிகைகளும் தான் நம் கண்ணில் படுகின்றன. அவற்றைப் பார்த்துப்பிரமிக்கும்போதே இரண்டு தெருக்களுக்கு அப்பாலுள்ள ஓரிடத்துக்கு அழைத்துச் செல்கிறார் திரு. முத்தையா. அங்கே இரண்டு கார் 'ஷெட்'கள் நிறைய புத்தகங்களை அடுக்கி வைத்திருக்கிறார். அதுவும் போதாதென்று இன்னொரு பழங்கால வீட்டின் அறுபதடிக்கு இருபதடி கொண்ட ஹாலிலும் ஏகப்பட்ட புத்தகங்களை வாங்கிக் குவித்திருக்கிறார்.

என்னென்ன அரிய புத்தகங்கள் இவரிடம் இருக்கின்றன...?

1857-ம் ஆண்டில் ஜி. யு. போப் அவர்களால் பதிப்பிக்கப் பட்ட இலக்கண நூல்.

தென்னிந்தியா தேசமதில்– வெகு சிங்காரமாக விளங்கும் நல்ல உன்னதஞ்சேர் கீர்த்தி தங்கும் கவர்னருடன் கேப்டன் தான் வசிக்கும் என்று தொடங்கும் 'சென்னப் பட்டணம் புகைவண்டி ஏலப்பாட்டு' (பிரசுரமான வருடம்: 1869.)

மணவை மகாலிங்கய்யர் என்பவர் வெளியிட்ட அருணாசல புராணம். (வெளியான வருஷம் 1840.) இந்த நூலின் ஒரு சிறப்பு என்னவென்றால், கையினால் தீட்டப்பட்ட ஓவியங்கள் தான் புத்தகத்தை அணிசெய்கின்றன. பிளாக் செய்து அச்சடிக்கும் முறை அப்போது தமிழகத்தில் தெரிந்திராததால் இந்த ஏற்பாடு!

ஜி. பரமேசுவரம் பிள்ளை என்பவர் எழுதிய 'லண்டன் பாரீஸ் நகரங்களின் விநோத சரித்திரம்' (வெளியான ஆண்டு 1879.)

தமிழ்த்தாத்தா உ. வே. சாமிநாத அய்யர் முதன் முதலாகப் பதிப்பித்த ஸ்ரீ மத்தியார்ச்சுன மான்மியம் ஸ்ரீ ஏக நாயகருசல் (ஆண்டு: 1885.)

—இவை சில எடுத்துக்காட்டுக்கள் மட்டுமே.

அரிய புத்தகங்கள் எங்கிருந்தாலும் தேடிச் சென்று, என்ன விலை கொடுத்தாவது அவற்றை வாங்கி வந்து, தமது கலெக்ஷனில் சேர்த்து விடுவதுதான் திரு. முத்தையா அவர்களின் வேலை. பொழுதுபோக்கு எல்லாமே! தமிழகத்தின் வெவ்வேறு பகுதிகளுக்கும் அவ்வப்போது சென்று புத்தகக் கட்டுகளுடன் ஊர் திரும்புவார், கட்டுகளைப் பிரித்து, நூல்களின் தொன்மைக்கு ஏற்றபடி தரம் பிரித்து அடுக்கிய பிறகே அவருக்குத் தூக்கம் வரும்!

இலக்கியம், இலக்கணம், மருத்துவம், ஜோதிடம் என்று பலதரப்பட்ட 'சப்ஜெக்ட்'டுகளில் ஏராளமான நூல்களைத் திரட்டி வைத்திருக்கிறார்!

நூல்கள் சேகரிப்பு மட்டும்தான் என்பதில்லை; பத்திரிகை களையும் இதே போல அக்கறையுடன் சேகரித்துப் பத்திரமாக வைத்திருக்கிறார். தமிழில் வெளியாகும் பத்திரிகைகள் எல்லாமே—வெளிவந்து நின்று போனவை உட்பட—அவரிடம் இருக்கின்றன. ரங்கூனில் வெளியான 'தனவணிகன்' பத்திரிகை வேண்டுமா...? எடுத்துப் போடுகிறார். தமிழில் முதல் முதலாக 'ரீடர்ஸ் டைஜஸ்ட்' பாணியில் கனமும் கௌரவமும் மிகுந்த கட்டுரைகளைத் தாங்கி வெளிவந்த'சக்தி' இதழ்களா...; "இதோ"! என்று உற்சாகத்துடன் எடுத்துத் தருகிறார். நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் இந்திய சுதந்திரப் போராட்டத் தின் போது கோலாலம்பூரிலிருந்து வெளியிட்ட 'பாரதம்' தமிழ்ப் பத்திரிகையைப் பார்க்க வேண்டுமா...? எடுத்துக் காட்டுகிறார்!

புத்தகங்களையும், பத்திரிகைகளையும் சேகரித்துப் பத்திரப்படுத்தி வைப்பவர்கள் பலரும் செய்யாத வேறொரு மகத்தான பணியையும் திரு. முத்தையா செய்திருக்கிறார் அதாவது தலைப்பு வாரியாக 'இண்டெக்ஸ்' செய்வது.

உதாரணத்துக்கு...'பாம்பு' பற்றித் தெரிந்துகொள்ள உங்களுக்கு ஆசை என்று வைத்துக் கொள்ளுங்கள்.

'பாம்பு என்ற தலைப்பில் ஒரு பெரிய நோட்டுப் புத்தகம் வைத்திருக்கிறார் இவர். அதை எடுத்துப் புரட்டினால்போதும். பாம்பு பற்றிப் பிரசுரமாகியுள்ள அத்தனை விஷயங்களையும் பற்றிய பட்டியல் அந்த நோட்டுப் புத்தகத்தில் இருக்கிறது!

பாம்பு வணக்கம், பாம்புப் பண்ணைகள், பாம்பு வளர்ப் பவர் விவரம், பாம்பு விஷத்தின் பயன், கீரியும் பாம்பும், இசை யும் நாகமும், பாம்பு மந்திரம், மலைப் பாம்புகள், பாம்பின் வாழ்க்கை, பாம்புக் கடியினால் மாண்டவர்கள், பாம்பினால் ஏற்படும் நன்மைகள், பாம்பு வசியம், சிற்பத்தில் பாம்பு, இலக் கியத்தில் பாம்பு, பாம்பும் கருடனும், பாம்பும் மயிலும், பாம்பின் வெவ்வேறு பெயர்கள், பாம்புபற்றிய கட்டுக்கதைகள், பாம்பு பற்றிய நவீன கதைகள், கார்ட்டூனில் பாம்பு...

—இப்படி வெவ்வேறு தலைப்புகளில் விவரங்களைத் தொகுத்து வைத்திருக்கிறார். அவற்றுக்கு எதிரே எந்தெந்த பத்திரிகையின் எந்த இதழின், எந்தப் பக்கத்தில் குறிப்பிட்ட அத்தகவல் வெளியாகியிருக்கிறது என்ற குறிப்பு காணப் படுகிறது!

போதாததற்கு 'பாம்பு' என்ற தலைப்பில் பிரம்மாண்டமான உறைகள் வேறு. அவற்றின் உள்ளே பலவிதமான பாம்பு படங்கள்! (1906-ல் பிரிட்டிஷ் இந்திய அரசு வெளியிட்ட தபால் கார்டுகளில் மகாவிஷ்ணு கருடாரூடராகக் காட்சி தருகிறார். கருடனின் காலில் ஒரு பாம்பு சிக்கியிருக்கிறது... அந்த கார்டும் கவரில் இருக்கிறது!)

தம்மிடம் உள்ள நூல்களிலும் பத்திரிகைகளிலும் காணப்படும் பல்வேறு விஷயங்களையும் இதே போல 'இண்டெக்ஸ்' செய்துவைத்திருக்கிறார். திரு-முத்தையா. அணில் ஆட்டுப்பால் இல்லறம்—என்று பல 'சப்ஜெக்ட்'டுகளுக்கும் தனித் தனி நோட்டுப் புத்தகங்கள், 'இண்டெக்ஸ்'கள், தகவல் அடங்கிய கவர்கள்!

இதுமட்டுமா? தமிழ்ப் பத்திரிகைகளில் பிரபல ஆசிரியர்கள் எழுதியுள்ள சிறுகதைகளுக்கும் தனியாக ஒரு 'இண்டெக்ஸ்' வைத்திருக்கிறார்!

இவரது 'கலெக்ஷன்' இவ்வளவுதானா? ...இல்லை, இன்னும் இருக்கிறது!

கடந்த 150 வருடங்களில் வெளிவந்த திருமணப் பத்திரிகைகள், நாடக நோட்டீஸ்கள், சினிமா விளம்பரங்கள், மருந்து விளம்பரங்கள், கார் விளம்பரங்கள், வர்த்தமான பத்திரங்கள் செக்குகள் ஸ்டாம்பு பேப்பர்கள், உண்டியல்கள் ஆகியவற்றையும் சேகரித்து வைத்திருக்கிறார். (1906ல் தஞ்சாவூர் அரண்மனையைச்சேர்ந்த மாதோஸ்திரி உமாம்பா பாய் சாயப்பு என்பவர் தமது சந்திரஹாரம் சிகப்பு வைரம் இழைத்த திருகுப்பூ, மகரகண்டி முதலியவற்றைவிற்பதற்காக வெளியிட்ட விளம்பரமும்; சுதேசமித்திரனில் மகாகவி பாரதியார் தமது மூன்று புத்தகங்கள் பற்றிக்கொடுத்த விளம்பரமும் 1912-ல் சென்னை தோட்டக் கலைச் சங்கத்தினர் நடத்திய மலர்க் கண்காட்சி விளம்பரமும் நமது கவனத்தை ஈர்க்கின்றன.) இவற்றையெல்லாம் தனித்தனியே அட்டையில் ஒட்டி கண்ணாடித் தாள் முகப்பிட்டு வைத்திருக்கிறார்.

திரு.முத்தையா அவர்களின் முயற்சியினால், பல அரிய தமிழ் நூல்கள் இன்று வெளிநாடுகளிலுள்ள பெரிய பெரிய மியூசியங்களிலும் பல்கலைக் கழக நூல் நிலையங்களிலும் இடம் பெற்றுள்ளன. தாம் சேகரித்த சில நூல்களை இவர் அங்கெல்லாம் அனுப்பி உதவியிருக்கிறார்.

இத்தனை அரும்பெரும் செயல்களைச் செய்திருக்கும் திரு. முத்தையா தமது சில எண்ணங்களைத் தெளிவாகக் கூறுகிறார்:

"புத்தகங்கள் சேகரிப்பது கஷ்டமே அல்ல. சேகரித்த புத்தகங்களைப் பத்திரமாக வைத்துக் கொள்வது, ஒழுங்கு படுத்துவது, அவற்றை நல்லவிதமாக உபயோகிப்பது இவையே முக்கியம். புத்தகங்களைப் பாதுகாப்பது ஒரு பெரிய விஷயம். ஆயிரம், இரண்டாயிரம் புத்தகங்கள் வரை யாரும்வைத்திருந்து காப்பாற்றிவிட முடியும். ஆனால் என்போல் பதினாயிரக் கணக்கான புத்தகங்களும் பத்திரிகைகளும் இருந்தால் பிரச்னைதான். அவை பூச்சிகளாலும் கரையான்களாலும் எலிகளாலும் சேதப்படாமல் காப்பாற்றியாக வேண்டும்...ஒரு நல்ல புத்தகம் காப்பாற்றப்படவில்லையானால் அது ஒரு தேசிய நஷ்டம் என்பதில் கருத்து வேறுபாடே இருக்க முடியாது.

"லைப்ரரி- கலெக்ஷன் என்பதில் புத்தகங்களுக்கு எவ்வளவு முக்கியத்துவம் உண்டோ அதைவிட அதிகமான முக்கியத்துவம் சஞ்சிகைகளுக்கு உண்டு. புத்தகங்களை சப்ஜெக்ட் வாரியாக அழகாக அடுக்கி வைத்தே ஓரளவு உபயோகப்படுத்தி விடலாம் ஆனால்சஞ்சிகைகளை உபயோகப் படுத்த வேண்டுமானால் அதிக உழைப்பு வேண்டும். ஒவ்வொரு சஞ்சிகையிலும் இன்னின்ன கட்டுரைகள் உள்ளன, இன்னின்னார் எழுதியிருக்கிறார்கள் என்பது தெரிந்தால்தான் பயன் படுத்திக் கொள்வது சுலபமாக இருக்கும். இந்த முறையில் என்னிடம் உள்ள சஞ்சிகைகள் அனைத்துக்கும் அந்தந்த சப்ஜெக்ட் வாரியாக இண்டெக்ஸ் உண்டு அகத்திக்கீரையைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமானால் சுமார் 30,000 சஞ்சிகைகளில் எதெதில் எப்போது வந்திருக்கிறது என்பதை ஒரு பத்து நிமிடத்தில் தெரிந்து கொண்டுவிட முடியும்...

"புத்தக மதிப்புத் தெரிந்தவர்கள் வெளிநாட்டினர்தாம். இதில் சந்தேகமே இல்லை. ஒருநல்லபுத்தகத்திற்கு இரண்டாயிர ரூபாய் கூட விலை கொடுத்து வாங்குவார்கள். பின்னர் அதைக் கண்போல் பாதுகாத்தும் வைப்பார்கள்...

"நமது தமிழகத்தில் சாதாரண நபர் முதல் பெரிய பெரிய நூலக கலெக்ஷன்கள் உள்ள பல்கலைக் கழகங்கள்வரை யாருக்குமே புத்தகங்களின் மதிப்பு தெரிவதில்லை. புத்தகங்கள் மானாவாரியாக வீணடிக்கப்பட்டு விடுகின்றன."

டாக்டர் பட்டம் பெறுவதற்கு ஆராய்ச்சி செய்பவர்கள் பலரும் திரு. முத்தையா அவர்கள் சேகரித்து வைத்துள்ள நூல்களையும் சஞ்சிகைகளையும் பார்வையிட்டு, தேவையான தகவல்கள் சேகரித்திருக்கிறார்கள். "ஆனால் என் வருத்தம் என்னவென்றால், ஒரு 150 பக்க அளவுக்கு ஆய்வுக் கட்டுரை எழுதுவதற்குப் போதுமான விவரங்கள் கிடைத்ததும், அத்துடன் அவர்கள் நிறுத்திக் கொண்டு விடுகிறார்கள் எதையும் ஆழமாகவும் நுணுக்கமாகவும், முழுமையாகவும் செய்யும் ஆர்வம் பலரிடம் காணப்படுவதில்லை!" என்று வருத்தப்பட்டுக் கொள்கிறார் திரு. முத்தையா.

பேச்சினிடையே பல ஆண்டுகளாகப் பூச்சித்தொல்லைகளைத் தவிர்க்க ஒரு குறிப்பிட்ட பூச்சிக் கொல்லி மருந்தை உபயோகப்படுத்தியதன் விளைவாக தமது ஆரோக்யம் சற்றே பாதிக்கப்பட்டதாகத் தெரிவித்தார்.

என்னிடம்சுமார் 35,000 புத்தகங்களும், 60,000 பத்திரிகைகளும் உள்ளன. இவற்றையெல்லாம் மாதம் ஒரு முறையாவது தூசிதட்டி அடுக்கிவைத்தால்தான் சரியாகக் காப்பாற்றமுடியும் தனி மனிதனால் சாத்தியமாகக் கூடிய செயலா இது...? இருந்தாலும் என்னால் இயன்றவரை இவற்றைப் பாதுகாத்து வருகிறேன்..."

54 வயது நிரம்பியுள்ள இவர் இன்னமும் புத்தகக் காதல் கொண்டு அவற்றைத் திரட்டும் பணியில், முனைந்திருக்கிறார். அத்துடன் இப்போது 50000 பொன்மொழிகளைத் திரட்டித் தொகுக்கும் மாபெரும் பணியையும் மேற்கொண்டிருக்கிறார்.

— ஆனந்த விகடன்.

# 25. பயண இலக்கியம்

தமிழ் உரை நடை இருபதாம் நூற்றாண்டில் பல்கிப் பெருகியிருக்கிறது. இந்நூற்றாண்டின் பிற்பகுதியில் இது பல கிளைகளாகப் பிரிந்து ஒவ்வொரு கிளையும் தனித்த பெரிய ஆலமரமாக வளர்ச்சிபெற்று வருகின்றது. இவ்வகையில் குறிப்பிடத்தக்கது பயண இலக்கியம்.

பயண இலக்கிய வளர்ச்சியில் செட்டி நாட்டின் பங்கு பெரிது.

தமிழில் 19 ஆம் நூற்றாண்டிலேயே பயணக் கட்டுரைகள் வெளிவந்திருக்கின்றன, அவற்றையெல்லாம் உலகம் சுற்றிய தமிழர் ஏ.கே. செட்டியார் தொகுத்து நூலாக்கியுள்ளார். ஆனால் இவை பெரும்பாலும் பக்தி இலக்கியங்களே—அதாவது யாத்திரை நூல்களே. இவற்றை எழுதியவர்கள் நிறைந்த பொது அறிவோ மொழிப் புலமையோ பெற்றிருந் தனர் என்று சொல்ல இயலாது.

பயணக் கட்டுரை என்று இக்காலத்தவர் ஏற்றுக் கொள்ளக்கூடிய முதலாவது படைப்பைத் தமிழுக்குத் தந்தவர் முறையூர் அரு சொக்கலிங்கம் ஆவார். 'அரு சொ', 'முறைசை கிழார்' என்ற பெயர்களிலும் இவர் எழுதியிருக்கிறார். இவருடைய முதல் கட்டுரை 1930-ல் ஆனந்த விகடனில் வெளி வந்தது. இவர் எழுதிய முதலாவது பயணக் கட்டுரை "மலேயாவும் அதன் மக்களும்" என்பது. இது 1935-இல் இரங் கூனிலிருந்து ஏ.கே. செட்டியாரை ஆசிரியராகக் கொண்டு வெளியிடப்பட்ட "தனவணிகன்" இதழில் வெளியாயிற்று. இவர் 1934-இல் பர்மாவிலிருந்து மலேயாவுக்கு சென்று அந்த நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்தார். மலைப் பகுதிகளுக்குச் சென்று சக்காய் என்ற காட்டுச் சாதியாரைப் பற்றியும் ஆராய்ந்து எழுதினார். தாய்லாந்து, இந்தோசீனா, இந்தோனேசியா நாடுகளுக்குச் சென்று அவைபற்றியும் பிரயாணக் கட்டுரைகள் எழுதினார்.

### பயணக் கலைஞர்

பயண அனுபவங்களை நூலாக எழுதி, பயண இலக்கியம் என்ற புதிய துறைக்கு அடிகோலியவர், வழி

வகுத்தவர், தமிழ்நாட்டு வாசகரிடையே பயண நூல் பசியை உண்டாக்கியவர் ஏ.கே. செட்டியார்.

இவர்க்குமுன் பலர், பல நாடுகளுக்கும் சென்றிருக்கிறார்கள். அவர்களுக்கும் ஏ.கே. க்கும் ஒரு முக்கியமான வேறுபாடு உண்டு ஏ. கே. செட்டியார் தமிழன் என்ற கண்ணோட்டத்துடன் பல நாடுகளையும் பார்த்தார்.

நகைச் சுவை நிறைந்த குறிப்புக்களுடனும் தெளிவாகவும் சுருக்கமாகவும் படிப்பவர் மனத்தில் பதியும் படியும் எழுதியவர் ஏ கே. தேவையில்லாத புள்ளி விவரங்களைக் கூறமாட்டார். ஏதோ ஒரு நூலில் ஏற்கெனவே எழுதப்பட்டது என்ற எண்ணம் மற்றவர்களுடைய பயண நூல்களைப் படிக்கும்போது உண்டாவதுபோல ஏ. கே. "வின் நூல்களைப் படிக்கும்போது தோன்றாது. அலுப்போ சலிப்போ வாசகரிக்குத் தட்டாதபடி எழுதும் ஆற்றல் ஏ.கே. செட்டியாருக்கு இயல்பாக அமைந்தது.

குடகு (கர்நாடக மாநிலத்து மாவட்டம்) பற்றியும் சுவையாக எழுதினார். நேப்பாளத்தைப் பற்றி நிகரில்லாத நடையிலும், திக்கெல்லாம் புகழ் பரவுமாறு தாம் இளமையில் படித்த திருவண்ணாமலை குறித்தும், மனத்தில் நிலைத்து நிற்கும் வண்ணம் மலைக் கோட்டையைப் பற்றியும் தமிழர் அனைவரும் வியக்கும் வகையில் தரங்கம்பாடியை விவரித்தும் கவர்ச்சியாகவும் படித்தவர்கள் எந்நாளும் மறக்க இயலாத முறையிலும் எழுதியவர் ஏ.கே. செட்டியார். எளிய நடையாலும் சொற் சிக்கனத்தாலும் அவருடைய எழுத்து தனிச் சிறப்புப் பெற்றது.

கவியரசர் சுப்பிரமணிய பாரதியார் எழுதிய பயணக் கட்டுரைகளைத் தொகுத்து ஏ.கே. ஒரு நூலாக்கி வேதாரண்யம் கஸ்தூர்பா கன்யா குருகுலத்தாரை வெளியிடச் செய்தார். தனக்குப் போட்டியாக யாராவது எழுதிவிடக் கூடாதே என்று ஏ.கே. நினைத்ததில்லை. வெளிநாடுகளுக்குச் சென்ற தமிழர் பலரை அவர்கள் இருக்குமிடங்களில் சந்தித்து இரண்டு மணி நேரம் உரையாடுவார். இப்போது நீங்கள் என்னிடம் சொன்னதை குமரிமலருக்கு ஒரு கட்டுரையாக எழுதிக் கொடுங்கள் என்று வற்புறுத்தி புதிய எழுத்தாளர்களை உருவாக்கியவர் ஏ. கே. செட்டியார்.

இந்நூலாசிரியரைப் பயணக் கட்டுரைகள் எழுதச் சொல்லி வற்புறுத்தி எழுதிவாங்கி "குமரி மலர்" இதழ்களில் வெளியிட்டு இந்தத் துறையில் ஈடுபடுத்தி உற்சாகமும் ஊக்கமும் ஊட்டியவர் ஏ. கே.

பயண இலக்கியத்துக்கு இவர் ஆற்றிய பணிகளைப் பாராட்ட தமிழ் எழுத்தாளர் சங்கமும் பிற அமைப்புகளும் பலமுறை முன்வந்தன. இவர் அந்த முயற்சிகளுக்கு முற்றுப் புள்ளிவைத்தார்.

'உலகம் சுற்றிய தமிழன்' என்றும் தமிழில் பயண இலக்கிய முன்னோடி என்றும் அனைவராலும் புகழப்பெற்ற ஏ. கே. கோட்டையூரில் பிறந்தார். திருவண்ணாமலையில் பள்ளிப் படிப்புப் படித்தார். இவர் பிறந்த நாள் 3-11-1911 இறந்த நாள்10-9-1983 இவருடைய இயற்பெயர் அ. கருப்பன் செட்டியார்.

மூவகைப் பெருமைகள் இவரைச் சேரும். முதலாவது காந்தியத்துடன் ஒன்றியது; இரண்டாவது, இதழ்த் தொடர்பு; மூன்றாவது பயண இலக்கியப் பணி.

1935-36இல் ஓராண்டுக்காலம் ஜப்பானில் தங்கி போட்டோக் கலையில் பயிற்சி பெற்றார். ஆயினும் இவர் தம் போட்டோவை எடுத்துக் கொள்ளவில்லை. பிறர் எடுக்கவும் இசைவு வழங்கியதில்லை மகாத்மாவைப்பற்றி ஒரு டாக்கு மெண்டரி படம் எடுப்பதற்கு மட்டுமே தம்முடைய அறிவைப் பயன்படுத்தினார்.

காந்தி மகானுடைய வாழ்க்கையை அவர்காலத்திலேயே அதுவும் ஆங்கிலேயர் ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்த நாளிலேயே, ஏ. கே. திரைப்படமாக எடுத்தார். அரசாங்க உதவி எதுவுமின்றி அந்தப் படம் உருவாயிற்று இந்த வகையில் இவர் ஒரு முன்னோடியாகத் திகழ்ந்தார்.

இந்தப் படம் எடுப்பதற்காக The Documentary Films Ltd. என்ற பெயரில் ஒரு கூட்டு நிறுவனம் அமைக்கப் பெற்றது இந்த நிறுவனத்திற்குத் தேவையான பெரும் பணத்தை முதலீடு செய்தவர்களில் கோட்டையூர் மு. அழ. அழகப்பச்செட்டியார் அவர்களும் கொத்தமங்கலம் லெ. நடேசன் செட்டியார் அவர்களும் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

இந்தப் படத்தை எடுப்பதற்குத் தேவையான ஆதாரங் களைத் திரட்ட 1937 முதல் 1939 இறுதிவரை இங்கிலாந்து மற்றும் ஐரோப்பிய நாடுகள் தென்ஆப்பிரிக்கா அமெரிக்கா ஆகிய நாடுகளுக்குச் சென்று வரலாற்று முக்கியத்துவம் உள்ள படங்களைத் சேகரித்தார். காந்தியடிகளுடைய வாழ்க்கையில் அவருடன் தொடர்பு கொண்டிருந்த நூற்றுக்கும் மேற்பட்ட அறிஞர்களைப் பல நாடுகளிலும் சந்தித்தார்.

1940ஆகஸ்டு 24-ம் நாளில் இப்படம் தமிழிலும் தெலுங்கிலும் தமிழ்நாட்டிலும் ஆந்திர மாவட்டங்களிலும் திரையிடப்பட்டது.

தொழில் முறையில், படம் வெற்றியடையவில்லை. இந்த படத்தின் படி, இந்திய அரசிடம் உள்ளது அதுவும் அன்பளிப் பாக வழங்கப் பெற்றதே.

அன்றாட வாழ்க்கையிலும் காந்திய வாதியாக விளங்கியது ஏ. கே. யின் சிறப்பு. 1978 ஏப்ரல் முதல் 1979 ஏப்ரல் வரை குமரி மலரில் இவர் எழுதிய அண்ணல் அடிச் சுவட்டில் என்ற கட்டுரைத் தொடர் இவருடைய மன நிலை யின் படப் பிடிப்பு.

இவர் பதிப்பித்த 'புண்ணியவான் காந்தி' (மூன்று தொகுதிகளில் முதல் தொகுதி மட்டுமே வெளிவந்திருக்கிறது) என்னும் நூலும் காந்திநெறியின் விளக்கமாகும்.

கவியரசர் சுப்பிரமணிய பாரதியார் பாடிய பாடல்களைப் பரப்ப ஏ. கே. உதவினார். எனவே தமிழக அரசு, பாரதியார் நூற்றாண்டு விழாவை 1981இல் கொண்டாடிய போது, இவரைச் சிறப்பிக்க முன்வந்தது. இவர் ஏற்றுக் கொள்ளாத கேடயம் இவர் தொடர்பு கொண்டிருந்த கோட்டையூர் முத்தையா அழகப்பா உயர் நிலைப் பள்ளியில் இப்போது காட்சியில் வைக்கப் பெற்றிருக்கிறது.

ஏ. கே. யின் பணிகளில் அடுத்துக் குறிப்பிடத் தக்கது, அவருடைய இதழ் இலக்கியத் தொண்டு.

இளமையிலேயே—அதாவது 16 அல்லது 17 வயதிலேயே-தமிழில் கதை, கட்டுரை எழுதுவதில் ஏ. கே ஆர்வம் மிக்கவ ராக இருந்தார்.

1930-இல் பூதலூர் வைத்யநாத அய்யர் என்பவர் ''ஆனந்த விகடன்'' என்ற பெயரில் ஒரு நகைச்சுவை இதழைத் தொடங்கியபோது, சந்தாதார் பலரைச் சேகரித்துக்கொடுத்தும், பயன்படக் கூடிய சிலரிடம் அறிமுகப் படுத்தியும் அவரை ஊக்குவித்தவர் ஏ. கே.

1934-இல் பர்மா நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கத்தின் வேண்டுகோளுக்கிணங்க அங்கே சென்று, சங்க இதழான 'தனவணிகன்' ஏட்டின் ஆசிரியப் பொறுப்பை ஏற்றார். அந்த இதழில் பலவகைச் செய்திகளையும் கட்டுரைகளையும் வெளியிட்டு பர்மா வாழ் தமிழரிடையே ஒரு மறுமலர்ச்சியை உண்டாக்கினார்.

ஏ. கே. ஓரளவு தொடர்பு கொண்டிருந்த அடுத்த இதழ் வை. கோவிந்தன் நடத்திய''சக்தி''.முதல் இதழிலிருந்தே இவர் பல கட்டுரைகளை எழுதினார்.இந்தப் படைப்புகளே ''உலகம் சுற்றும் தமிழன்''என்ற பெயரில் நூலாக வெளிவந்தன.

1943-இல் ஏ. கே. 'குமரி மலர்' என்ற பெயரில் ஒரு திங்கள் இதழைத் தொடங்க விரும்பினார். அப்போது இரண்டாம் உலகப்போர் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அதனால் புதிய பத்திரிகைகள் வெளிவருவதை அரசினர் தடை செய்திருந்தனர். எனவே *Penguin New Writing* என்ற ஆங்கில வெளியீட்டைப் பின்பற்றி மாதம் ஒரு புத்தகம் என்று விளம்பரம் செய்து குமரி மலரை, மாதந்தொறும் கொண்டு வந்தார்.

பாரதியார் எழுதிய அரிய கட்டுரைகள்-யார் கண்ணிலும் படாதவற்றை -தேடிப் பிடித்து குமரி மலரில் வெளியிட்டசர். இவ்வாறே கப்பலோட்டிய தமிழன் வ. உ. சி , வ. வே. சு.ஐயர், சுப்பிரமணிய சிவா, மு. வீரராகவாச்சாரியார், தமிழ்த் தென்றல் திரு. வி. க. போன்ற அறிஞர் பலரின் கட்டுரைகளையும் குமரி மலரில் வெளியிட்டார். வாயாடி என்ற புனை பெயரில் ஏ. கே. செட்டியாரின் கட்டுரைகள் சிலவும், காகன் என்ற புனைபெயரில் கம்பனடிப்பொடி சா கணேசனின் கட்டுரைகளும் குமரி மலரில் வெளி வந்தன-

புகழ்பெற்ற பத்திரிகையாளர் ஜி. சுப்பிரமணிய அய்யர் நினைவாக ஒரு சிறப்பிதழ் வெளியிட்ட பெருமையும் குமரி மலர்க்கு உரியது.

தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் பேரகராதிப் பணியில் தலைமைப் பதிப்பாசிரியராக இருக்கும் திரு. மு .அருணாசலம், அவருடைய இலக்கிய வாழ்வை குமரிமலரில் தொடங்கினார் என்று கூறுவது பொருந்தும். ஆறு ஆண்டுக்காலம் அவர் உதவி ஆசிரியராகப் பணியாற்றினார்.

1944 இல் குமரிமலர், ஆண்டுமலர் வெளியிட்டு தமிழில் முதன்முறையாக போட்டோ ஆப் செட்டில் படங்களை அச்சிட்டது.

1943 முதல் 1983 ஆகஸ்டு வரை ஏ கே குமரி மலரை வெளியிட்டார். அதன் பிறகு, அந்த இதழை ஏ. கே. யின் நினைவாக, அவருடைய இனியநண்பர் திரு. எஸ் கோபாலன் வெளியிட்டு வருகிறார். முகவரி: 66 லஸ் சர்ச்சு சாலை, மயிலாப்பூர் சென்னை-4

ஏ. கே. செட்டியார் பின்வரும் நூல்களை எழுதியிருக்கிறார்.

(1) ஜப்பான் (1936)
(2) உலகம் சுற்றும் தமிழன்
(3) பிரயாண நினைவுகள்
(4) திரையும் வாழ்வும்
(5) அண்டை நாடுகள்
(6) இட்ட பணி
(7) மலேயா முதல் கானடா வரை
(8) அமெரிக்க நாட்டில்
(9) கரிபியன் கடலும் கயானாவும்
(10) ஐரோப்பா வழியாக
(11) குடகு

ஏ. கே. பதிப்பித்த நூல்கள்

(1) ஔவையார். மூதறிஞர் இராஜாஜி ஔவையார் பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்ததை ஏ. கே. பதிப்பித்தார்,
(2) உணவு
(3) பண்பு

(4) தமிழ்நாடு பயணக் கட்டுரைகள்

(5) புண்ணியவான் காந்தி

(6) கொய்த மலர்கள்

இந்த நூல்கள் ஆறும் 'சுதேசமித்திரன்' முதலிய இதழ்களிலும், குறிப்பிடத்தக்க நூல்களிலும் 50 ஆண்டுகாலமாக ஏ.கே. படித்துச் சுவைத்தவற்றின் தொகுப்பு: சிறந்த மேற்கோள்களை, வரிசைப்படுத்திப் பதிப்பித்தார்.

இந்த ஆறு வெளியீடுகளையும் டி. வி. எஸ் நிறுவனத்தார் அச்சிட்டு ஆயிரக்கணக்கான பள்ளிகளுக்கு அன்பளிப்பாக வழங்கியிருக்கிறார்கள்.

மறைமலையடிகள் நூல் நிலையத்தின் வளர்ச்சியில் ஏ. கே. பெரிதும் அக்கறை காட்டினார்.

## ஏ. கே. பாதையில்

ஏ. கே. காட்டிய வழியைப் பின்பற்றி, செட்டி நாட்டு அன்பர் பலர் பயண நூல்கள் எழுதியுள்ளனர். குறிப்பிடத்தக்கவர்கள் - மேயர் சு. இராமசாமி நாயுடு, கருமுத்து. தி. மாணிக்கவாசகம், எம். எஸ்பி. சண்முகம், கலையன்பன், சுப. இராமன், காசிஸ்ரீ அரு சோமசுந்தரம் ஆகிய பலர் ஆவர். முழுப் பட்டியல் கொடுக்க இயலவில்லை.

ஐக்கியநாடுகள் அவையில் பெரும்பொறுப்பு வகித்து இப்போது ஓய்வு பெற்றுள்ள 'ஆல்ஜி' என்ற டாக்டர் அழகப்பன் 'குமுதம்' இதழில் பல கட்டுரைகள் எழுதியுள்ளார்

பொறியியல் பேராசிரியர் மதகுபட்டி டாக்டர் சோம இலக்குமணன், இருவர் உரையாடும் பாணியில் லண்டனில் லக்கி என்னும் பயண நூலை மிகச்சுவைபட எழுதியிருக்கிறார். கோடைக்கானலைப் பற்றிக் கவிதை வடிவிலேயே பயண நூல் படைத்திருக்கிறார், முத்தமிழ்மணி கதி சுந்தரம்.

இந்நூலாசிரியர் இயற்றியுள்ள பயண நூல்கள்—10.

# 26. குழந்தை இலக்கியம்

சிறுவர்க்காக வெளிவரும் தமிழ் நூல்களைக் குழந்தைகள் விரும்பி வரவேற்கின்றனர். பெற்றோர்கள் புகழ்கின்றனர். பள்ளி ஆசிரியர்கள் சிபார்சு செய்கின்றனர். நூல் விற்பனையாளர்கள் ஆர்வமுடன் விற்க முன் வருகின்றனர்.

இன்று நாம் காணும் இந்த நிலைக்கு வித்திட்டது செட்டி நாடு.

புகழ் பெற்ற எழுத்தாளராகவும் இதழ் ஆசிரியராகவும் பதிப்பாளராகவும் தமிழ் இலக்கிய வரலாற்றில் இடம் பெற்றிருக்கும் செட்டிநாட்டார் பலர் குழந்தைகளுக்காக எழுதுபவராகவே தங்கள் இலக்கிய வாழ்க்கையில் அடியெடுத்து வைத்தனர்.

நேமத்தான்பட்டி முத்து நாராயணன் என்பவர் 'பாப்பா மலர்' என்ற பெயரில் 1942-இல் ஓர் இதழைத்தொடங்கினார். இது இராயவரத்திலிருந்து வெளிவந்தது. விலை காலணா, காலணா என்பது ஒரு ரூபாயில் 64-இல் ஒரு பங்கு மதிப்புடையது;1960 வரை புழக்கத்தில் இருந்த நாணயம்.

'பாப்பாமலர்' தான் குழந்தைகளுக்கென்று தமிழில் அச்சிடப் பெற்ற முதல் இதழ். இந்த இதழுக்குப் பெரும் பொருள் உதவியவர் இராயவரம் அ. கு. அரு. அருணாசலம் செட்டியரர்.

'பாப்பாமலர்'-க்குப் பிறகு 'பாலர் மலர்'- புதுக்கோட்டையிலிருந்து அழ வள்ளியப்பா மேற்பார்வையில் வெளி வந்தது. இந்த இதழை வெளியிட்ட தமிழ் நிலையத்தார் டமாரம்,சங்கு என்ற இதழ்களையும் குழந்தைகளுக்கான பல நூல்களையும் வெளியிட்டனர்.

பாப்பா என்னும் இதழை சக்தி வை. கோ. வின் தம்பி ராம தியாகராசன் ஒன்பது நிறங்களில் அச்சிட்டு 10,000 படிகள்வரை விற்றார்.

சக்தி காரியாலயத்தார் குழந்தைகளுக்காக முப்பது சிறு நூல்களை வெளியிட்டனர்.

இவ்வாறு குழந்தை இலக்கியத்துக்கு ஆக்கம்தந்தது செட்டிநாடு.

செட்டிநாட்டு அன்பர்கள் அடுத்தடுத்துப் பல இதழ்கள், தொடங்கினர். சிட்டு, பூஞ்சோலை, அணில், கல்கண்டு சாக்லட் முதலியன. தமிழ்வாணன், (இப்போது பேராசிரியர் டாக்டர்) தமிழண்ணல் போன்றோர் குழந்தைகளுக்காக எழுதத் தொடங்கினர்.

## குழந்தைக் கவிஞர்

குழந்தைகளுக்காக எழுதிவரும் எழுத்தாளர்களுக் கெல்லாம் தலைவராகவும் வழிகாட்டியாகவும் அவர்களை ஊக்குவிப்பவராகவும் இருந்து வருபவர் குழந்தைக்கவிஞர் அழ. வள்ளியப்பா.

வள்ளியப்பா 7-11-1922 இல் இராயவரத்தில் பிறந்தார் 13 ஆவது வயதில் கவிதை எழுதத் தொடங்கினார். பின்னர் கு. மதுரை முதலியாரிடமும் இளவழகனாரிடமும் சிலகாலம் தமிழ் பயின்றார். 1940-இல் 'சக்தி' அலுவலகத்தில் காசாளராகச் சேர்ந்து வை. கோ. -வுடன் பழகினார். 'சக்தி' ஆசிரியர் தி. ஜ. ர. ஆதரவால் 'சக்தி'-யில் எழுதி, எழுத்தாளரானார்

1941-இல் இந்தியன் வங்கியில் சேர்ந்து 1982-இல் பணியிலிருந்து ஓய்வுபெற்றார். எனினும் கவிதையும் கட்டுரையும் எழுதத் தொடங்கிய நாளிலிருந்து அந்தப் பணியிலிருந்து ஓய்வு பெறவில்லை.

நூல்கள்: குழந்தைகளுக்காக 50 நூல்கள். புதிதாகக் கல்வி கற்பவர்களுக்காக பாமர மக்களின் பரம்பரைப் பாடல்கள் (யுனெஸ்கோ வெளியீடு) வாழ்க்கை விநோதம் (பெரியவர்களுக் காக எழுதிய நகைச் சுவைக் கட்டுரைகளின் தொகுப்பு) இவர் எழுதிய 'மலரும் உள்ளம்', 'பாட்டிலே காந்திகதை' என்ற நூல்கள் இந்திய அரசின் பரிசு பெற்றவை. இந்த நூல்களும் இவர் எழுதிய கதைகளும் வாழ்க்கை வரலாறுகளும் தமிழக அரசின் பரிசு பெற்றுள்ளன.

குழந்தை இலக்கிய இதழ்கள்: (கௌரவ ஆசிரியர்)

| | | |
|---|---|---|
| 1944—1951 | பாலர் மலர்<br>டமாரம்<br>சங்கு | புதுக்கோட்டை |

1951—1954 பூஞ்சோலை சென்னை
1983 முதல் கோகுலம் ” (கல்கி அலுவலக வெளியீடு)

குழந்தை எழுத்தாளர் சங்கம்

தமிழில் குழந்தை இலக்கியம் தழைக்கவும் குழந்தைகளுக்காக எழுதுபவர் எண்ணிக்கை பெருகவும் குழந்தை எழுத்தாளர்களை ஒன்று திரட்டி 1950-இல் ஒரு சங்கம் நிறுவினார். தொடர்ந்து அச்சங்கத்தைக் காத்துவருகிறார்.

1966இல் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவராகவும் 1962இல் தமிழக அரசு நடத்திய பாரதியார் 81 ஆவது-ஆண்டுவிழாவையொட்டி பாரதி கண்காட்சி நடத்துனராகவும் இவர் செய்த பணிகள் பாராட்டுக்குரியன.

'வளர்ந்துவரும் குழந்தை இலக்கியம்' என்ற தலைப்பில் இவர் 1979-ல் சென்னைப் பல்கலைக் கழகத்தில் கல்கி அறக்கட்டளைச் சொற்பொழிவு ஆற்றினார். இதே தலைப்பில் 1981-ல் ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டில் ஆய்வுக்கட்டுரை படித்தார்.

தென்மொழிப் புத்தக டிரஸ்ட் என்ற நிறுவனத்தை ஃபோர்டு ஃபவுண்டேசன் சென்னையில் தொடங்கியபோது 1957 முதல் 1962வரை அதில் இவர் பணியாற்றினார். தமிழிலும் ஏனைய திராவிட மொழிகளிலும் குழந்தைகளுக்கான தரமான நூல்கள் வெளிவர இவர் காரணமாக இருந்தார்.

ஏராளமான பரிசுகளும் பாராட்டுகளும் பட்டங்களும் இவர்க்கு வழங்கப்பெற்றுள்ளன. அவைபற்றிய விவரங்களை திரு. பூவண்ணன் எழுதிய 'வள்ளியப்பா வாழ்க்கை வரலாறு' என்னும் நூலில் காணலாம்.

வாழ் நாள் முழுவதும் குழந்தை இலக்கிய வளர்ச்சி ஒன்றையே குறிக்கோளாய்க்கொண்டு பல நூல்கள் படைத்தும் பல வழிகளில் தொண்டாற்றியும் வருகின்ற முன்னோடி என மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம் 9-1-1982இல் பாராட்டிச் சிறப்புவிழா எடுத்தது. 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்ற பட்டமும் ரூ5,000 மதிப்புள்ள பொற்பதக்கமும் பொன்னாடையும் வழங்கிற்று.

அவ்வமயம், தமிழக அமைச்சர் டாக்டர் காளிமுத்து பின்வருமாறு கூறினார்.

''பாவகையிலே பல உண்டு. வெண்பா, விருத்தப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்றெல்லாம் சொல்கிறோம். ஆனால் குழந்தைப் பாவைப் பொறுத்தவரை, அவையாவும் வள்ளியப்பாதான்''

'யார்-எவர்?' தொகுப்பு :

தமிழ் எழுத்தாளர்களைப் பற்றிய விவரத்தொகுப்பு நூல்கள் இவரது பெருமுயற்சியால் வெளிவந்தன.

படிக்கும் பழக்கம் — ஆராய்ச்சி

யுனெஸ்கோவிற்காக, தமிழில் குழந்தைகள் படிக்கும் பழக்கம் பற்றி ஆராய்ந்து, இவர் தயாரித்த அறிக்கை நூலாக வெளிவந்தது.

மொழி பெயர்ப்பு

''நம் நதிகள்' என்னும் தென்னாட்டு ஆறுகள் பற்றிய இவரது நூலை தேசிய புத்தக டிரஸ்ட் 14 இந்திய மொழிகளில் வெளியிட்டுள்ளது. தெலுங்கில் இவரது பாடல் தொகுப்பு ஒன்றும், பல பாடல்கள் ஆங்கிலத்திலும், சில நூல்கள் தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய தென் மொழிகளிலும் வெளிவந்துள்ளன.

பாடநூல்கள், வானொலி, தொலைக்காட்சி

900க்கு மேற்பட்ட குழந்தைப் பாடல்கள் இயற்றியிருக்கிறார். தமிழ்நாட்டுப் பாடநூல்களில் மட்டுமன்றி, கேரளம், கர்நாடகம், இலங்கை, தென் ஆப்பிரிக்கா, மலேசியா சிங்கப்பூர், மொரீஷியஸ் போன்ற நாடுகளில் வெளியான நூல்களிலும் இவரதுபாடல்கள்இடம் பெற்றுள்ளன. சென்னை இலங்கை, சிங்கப்பூர் வானொலிகளிலும், சென்னை தொலைக் காட்சியிலும் இவரது பாடல்களும் நாடகங்களும் அடிக்கடி இடம் பெறுகின்றன.

இவருடைய படைப்புகளைப் பற்றி ஆராய்ந்து எம்ஃபில் பி.எச்.டி. பட்டங்களைச் சென்னை, மதுரை, கேரளப் பல்கலைக் கழகத்து ஆராய்ச்சியாளர் பெற்றுள்ளனர்.

குழந்தைக் கவிஞர் பரம்பரையை உருவாக்கியிருப்பது இவருடைய சாதனை,

தமிழ் மொழி ஒலிக்கும் இடங்களிலெல்லாம் வள்ளியப்பா வின் பெயரும் பாடல்களும் அறிமுகமாக உள்ளன,

வள்ளியப்பாவின் பாமாலை —அது
வளரும் தமிழுக்குப் பூமாலை
அள்ளிக்குடிக்கும் நீரோடை—அது
அழகுத் தமிழுக்குப் பொன்னாடை
—கொத்தமங்கலம் சுப்பு

குழந்தை கவிஞர் அவர்களின் இளையமகள் தெய்வானை எம்.ஏ. இப்போது (கண்டனூர் திருமதி தெய்வானைதேவி நாச்சியப்பன்) பல தேசத்து குட்டிக்கதைகள் என்னும் நூலைத் தொகுத்துள்ளார். சென்னை அண்ணாநகரில் இயங்கிவரும் கவிமணி குழந்தைகள் சங்கத்தின் அமைப்பாளராகவும் இருக்கிறார்.

## ஏனையோர்

குழந்தைக் கவிஞர் அரவணைப்பாலும் அவர் காட்டிய வழியைப் பின்பற்றியும் சண்முகநாதபுரம் நாக. முத்தையா உய்யக் கொண்டான் சிறுவயல் அழ. அழகப்பன் என்ற இரத்தினம் இராயவரம் நா. வயிரவன், ஆ. தெக்கூர் மு. சொக்கலிங்கம், அரிமளம்—கண்டனூர் செல்ல கணபதி போன்ற ஏராளமான செட்டிநாட்டு அன்பர்கள் தங்கள் இளமைப்பருவத்தில்குழந்தை இலக்கியங்களைப் படைத்தனர்.

## இதழ்கள்

தமிழில் இளைஞர்களுக்காக வெளிவரும் இதழ்களில் மிகுதியாக விற்பனையாவது 'கல்கண்டு'. இந்த இதழ்தான் தமிழில் பக்கத்துக்குப் பக்கம் பல துணுக்குகளை வெளியிட்டு வழிகாட்டிற்று. இந்த முறையைப் பல இதழ்கள் இப்போது பின்பற்றி வருகின்றன.

பதிப்பாளர்கள் :

பதிப்பாளராகப் புகழ் பெற்றுள்ள சிலரின் குழந்தை இலக்கியப் பணி சிறப்பானது.

பழனியப்பா பிரதர்ஸ் திரு எஸ். எம். பழனியப்ப செட்டியார் சென்னையில் குழந்தைப் பதிப்பகம் என்ற முத்திரையில் மாதம் ஒரு சிறு நூல் வெளியிட்டு வந்தார். தி. ஜ. ர எழுதிய 'பாப்பாவுக்கு காந்தி' என்ற நூல் 20, 000 படிகள் விற்பனையாகச் செய்தார்.

அருணோதயம் திரு. அருணனும் தொடக்கத்தில் குழந்தைகளுக்காக இதழ்கள் நடத்தியவரே.

திரு. வானதி திருநாவுக்கரசு சிறுவர்க்காக நடத்திய இதழ்கள் — ஜில் ஜில், மிட்டாய், வெண்ணிலா.

# 27. தமிழ் இசை

இசைக் கலைக்கு எப்போதுமே செட்டி நாட்டில் ஆதரவு மிகுதியாக இருந்து வந்திருக்கிறது. இசைவாணருக்கு மிகு பொருள் வழங்கிச் சிறப்பித்த பகுதி தமிழ்நாட்டில் வேறில்லை எனலாம்.

## கல்வெட்டுக்கள்

நார்த்தாமலை என வழங்கும் நகரத்தார் மலையிலும் குடுமியான் மலையிலும் உள்ள கல்வெட்டுக்களிலும் இசை பற்றிய குறிப்புக்கள் உள்ளன. நார்த்தாமலைக் கல்வெட்டு இசையில்பழையமுறை, புதுமுறை இரண்டுக்கும் பொதுவாக எழுதப் பெற்றது. குடுமியான் மலையிலுள்ள இசைக் கல்வெட்டுக்கள் மகேந்திரவர்மன் காலத்தில் அதாவது 7-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டவை. இதைப்பற்றிய விவரம் யாழ் நூலில் குறிப்பிடப் பெற்றிருக்கிறது.

## இசைக்கல்லூரி

இசையையும் தமிழையும் ஆதரித்த நகரத்தார் இசை தமிழில் அமைய வேண்டுமென்று விரும்பியது இயற்கையே. இவ் விருப்பத்தாலேயே, அண்ணாமலை அரசர் 1932-இலேயே இசைக் கல்லூரியைத் தொடங்கினார். நகரத்தார் நடத்திய தேவாரப் பள்ளிகளெல்லாம் தமிழிசைப் பள்ளிகளே, நகரத்தார் எல்லோரும் — அரசியல் கருத்துக்களில் அண்ணாமலை அரசரை எதிர்த்தவர்களும்—தமிழ் இசை இயக் கத்திற்குப் பேராதரவு காட்டினர். தமிழ் இசை வாணரையே ஆதரிப்பதென முடிவு செய்தனர். இது தமிழ் இசை இயக்கம் வெற்றி பெற உதவியது.

## இசையரங்குகளில் தமிழ்.

செட்டிநாட்டு ஊர்களுள் ஒன்று அரியக்குடி; அவ்வாறி ருந்தும், அவ்வூராரான இசைப்புலவர் இராமானுஜ ஐயங் காரைச் செட்டி நாட்டில் யாரும் அழைப்பாரில்லை என்ற நிலை ஏற்பட்டது. தமிழில் பாட அவர் மறுத்ததே அதற்குக்காரணம்.

செம்மங்குடி, முசிரி கச்சேரிகளையுங் கேட்பாரில்லை. தமிழில் பாட முன்வராதவர்களுக்குச் செட்டிநாட்டு நிகழ்ச்சிகளில் அழைப்பு இல்லை.

தமிழ் இசை இயக்கத்தின் மறுமலர்ச்சி செட்டிநாட்டின் சிற்றூர்களிலெல்லாம் துளிர்விட்டது. அண்ணாமலை அரசரின் மணிவிழா நிகழ்ச்சிகளிலும், வள்ளல் அழகப்பரின்மகள் திருமண விழாவிலும் தமிழிசையே முழங்கிற்று. சிற்றூர்களிலெல்லாம் தமிழிசை அரங்குகள் நிகழ்ந்தன; தமிழிசைப் பிரசாரம் நடை பெற்றது.

## வானொலி கேட்போர் கழகம்

வானொலிப் பெட்டி வைத்திருக்கும் செட்டிநாட்டார் அனைவரும் திருச்சி, சென்னை நிலையங்களில் மிகுதியான தமிழ்ப் பாடல்கள் பாடப்பட வேண்டுமென்று அந்நிலைய அலுவலர்களுக்குக் கடிதங்கள் அனுப்பிய வண்ணமாக இருந் தனர். இதையொரு கிளர்ச்சியாக நடத்துவதற்காக வயி. சு., மஞ்சுளாபாய் அம்மையார் ஆகியோர் ராஜா அவர்களின் விருப்பத்திற்கிணங்க வானொலி கேட்போர் கழகம் ஒன்றைக் கானாடுகாத்தானில் அமைத்தனர்.

## வெளியீடுகள்

தமிழ் இசையை ஆதரித்து ராஜாஜி டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியார், பாரதிதாசன் அறிஞர் அண்ணா ஆகியோர் வெளியிட்ட கருத்துக்களை "எது இசை?" என்னும் பெயரில் தொகுத்து ஒரு நூலாக முல்லை முத்தையா வெளியிட் டார். அதற்கு முன்னர் நண்பர்க்கும் உறவினர்க்கும் கடிதங்கள் மட்டுமே எழுதிய என் போன்ற* இளைஞர் பலர், தமிழ் இசை இயக்கத்தால். கட்டுரைகள் கூட எழுதினோம்.

இம் மறுமலர்ச்சியின் விளைவாக ராயவரம் சு. ப இராமநாதன் செட்டியார், முத்துமாரி அம்பிகை மீது பக்திரசக் கீர்த்தனைகளைச் செந்தமிழில் பாடினார். இவர் தமிழிசைக் கீர்த்தனங்கள் சிலவற்றையும் இயற்றியுள்ளார்; வானொலி இசைச் செல்வம் என்ற பகுதிக்கும் பாடல்கள் அனுப்பினார்.

---

* இந்நூலாசிரியர் (சோமலெ)

இவர் பாடிய வேறு சில பாடல்கள் அண்ணாமலைப்பல்கலைக் கழக இசைவெளியீடுகளில் சேர்க்கப் பெற்றுள்ளன. இப்பாடல்களே இவரது நினைவுச் சின்னமாக விளங்குகின்றன.

"குமரன்", "செட்டிநாடு" முதலிய பல இதழ்கள் தமிழ் இசை மலர்களை வெளியிட்டன. பாலகவி இராமநாதச் செட்டியார் தமிழ் இசைப் பாடல்கள் பலவற்றை இயற்றினார். இவை நூலாக வெளியிடப்பெற்றன.

## இசைப் புலவர்

இசைப்புலமை இருந்தும் வாணிகத்தில் மட்டுமே அக்கறை காட்டி வந்த பனையப்பட்டி வினைதீர்த்தான் செட்டியார் போன்ற அன்பர்கள்மொழிப்பற்றின் காரணமாகத் தம் வணிக அலுவல்களைச் சில காலத்துக்கு ஒதுக்கி வைத்துவிட்டு, தமிழிசைக் கச்சேரிகள் செய்தனர். இவர்களில் சிலரைப் பற்றிய விவரங்களை "யார் எவர்?" என்னும்பகுதியில் காண்க.

காளையார் கோயில் சிவன் கோயிலில் தேவகோட்டை குறுநிலமன்னராகிய அழ. அரு குடும்பத்தார் இசை நிகழ்ச்சிகளை அடிக்கடி அமைத்தனர். அக்கோவிலில் சுயம்பாகியாக* அலுவல் பார்த்த ஒருவர்,இந்நிகழ்ச்சிகளைக் கேட்கும் வாய்ப்பு பெற்று, இசையில் ஈடுபட்டு, இசைப் புலவரானார். இவரே பிற்காலத்து ஜலதரங்கம் சுப்பையா என்ற மகா வித்துவான். இப்பகுதியைச் சேர்ந்த ஏனைய இசைப்புலவர்கள்—காரைக்குடி சாம்பசிவ ஐயர், காரைக்குடி வீணை சுப்பராம ஐயர், அஷ்டாவதானம் பாலு ஐயர், சதாவதானம் சுந்தரம் ஐயர், மழவராயனேந்தல் சுப்பாராம பாகவதர் சிலேடைப்புலி சாமிநாத ஐயர் ஆகியோர்.

ஏனையோருள் ஆத்திக்காடு சுப்பிரமணியன் செட்டியார் (இ. 1930) குறிப்பிடத்தக்கவர் இவர் தாள ஞானம் உடையவராகவும் தவில், மிருதங்கம், நாதசுரம் மூன்றும் வாசிக்கும் ஆற்றல் படைத்தவராகவும் விளங்கினார்,

தேவகோட்டைச் சின்னைய செட்டியாரின் இசைப் புலமை, இசைவாணர் பலரின் மதிப்பைப் பெற்றது. இசைவாணர் அச்சப்படும்படி, அவர்கள் வாசிப்பதிலுள்ள குறைகளைச் சுட்டிக் காட்டும் திறமும் அவரிடம் இருந்தது. பிடிலும் வீணையும் நன்றாக வாசித்தவருள் அவர் ஒருவர்.

கீழைச்சிவற்பட்டி காசிச்செட்டியார், புல்லாங்குழலில் தனிக்கச்சேரியாக நடத்திப் புகழ் பெற்றவர். இத்தகைய இசை வாணர் பலர் இருந்தனர், இருக்கின்றனர்.

## தேவகோட்டை மாநாடு

தமிழ் இசையின் வரலாற்றில் பொன் எழுத்துக்களில் பொறிக்கத்தக்கது திரு. சின்ன அண்ணாமலை நடத்திய தேவ கோட்டைத் தமிழ் இசை மாநாடு. இதைப்பற்றி, கல்கியில் 1-11-1941-இல் ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் எழுதியதை இங்கே குறிப்பிட விரும்புகிறோம்.

> "சென்ற வாரத்தில் தமிழ்நாட்டாரின் கண்களும் கவனமும் இரண்டு கோட்டைகள் மேலிருந்தன. ஒன்று மாஸ்கோ கோட்டை; இன்னொன்று தேவகோட்டை. தேவகோட்டை மகாநாட்டின் நோக்கம் நிறைவேறி விட்டது.
>
> ...... 24 ஆம்தேதி சாயங்காலம் ஸ்ரீமதிஎம்.எஸ். சுப்புலக்ஷ்மியின் சங்கீதக் கச்சேரி மூன்றரை மணி நேரம் நடந்தது...எல்லாம் தமிழ்ப்பாட்டுக்கள்தான். செட்டிமார் நாட்டின் எல்லா ஊர்களிலிருந்தும் முக்கியமானபிரமுகர்க ளெல்லாம் இந்தக் கச்சேரிக்கு வந்திருந்தனர். அவர்கள் எத்தனையோ கச்சேரிகளைக் கேட்டு அனுபவித்தவர்கள் சிலர் ரொம்பவும்உயர்ந்த சங்கித ஞானமுள்ள ரஸிகர்கள். மொத்தத்தில் தேவகோட்டை மகாநாடு மிகவும் பிரயோஜனமாகவும் பூரண வெற்றியுடனும் நடந்திருக் கிறது. இதைஇவ்வளவுஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் நடத்திய செட்டிநாட்டின் தேசிய இளைஞர்களை எவ்வளவு பாராட்டினாலும் போதாது என்று தான் சொல்ல வேண்டும்.

## தமிழிசைப் பள்ளி

இம்மாநாட்டின் விளைவாக, 1942 இல் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களுடைய ஆதரவில் தேவகோட்டையில் தமிழிசைப்பள்ளி தோற்றுவிக்கப் பெற்றது மலேயாவிலும் தாய் நாட்டிலும் உள்ள செட்டியார்களின் உதவியால் ஏறத்தாழ ஐம்பதினாயிரம் ரூபாய் வசூலிக்கப் பெற்று சொந்தக்கட்டிடத்தில் 150 மாணவ மாணவிகள் வாய்ப் பாட்டு, வாத்திய இசை, நடனம் ஆகிய துறைகளில் பயிற்சி

பெற்று வருகின்றனர். தமிழ் நாட்டில் சிறந்து விளங்கும் இந்த இசைப் பள்ளியின் கிளை 1953—இல் காரைக்குடியில் தொடங்கப் பெற்றது. கர்நாடக சுத்தமான (தமிழ்) நடன முறைகளுக்குப் பெரிய அளவில் குழந்தைகளைத் தயாரிக்கும் பள்ளிக் கூடம்இதுவே. இங்கு நடனத்தின்மூலமாகநாடகத்தை— அதாவது பேச்சின்றி, ஊமையாக,பின்னணியில் பாடல்களை பாடகர் பாட—நடித்துக் காட்டி வருகின்றனர்.

## இசை விழாக்கள்

1944- இல் வலம்புரியில் தமிழிசை மாநாடு ஒன்று சிறப்பாக நடைபெற்றது. ஆத்தங்குடி போன்ற சில ஊர்களில் தொடர்ந்து பல தமிழிசை அரங்குகள் நிகழ்ந்தன. 1946- இல் காரைக்குடியில் முத்துத் தாண்டவர் விழா கொண்டாடப் பெற்றது.

## இசைப் புலவரைப் புரந்த வள்ளல்

பழம் பெருமை வாய்ந்த நமது இசைக் கலையைப் பற்றி ஆராய்ந்தறிந்த விபுலானந்த அடிகளாரைப் பற்றிக் குறிப்பிடாமல், தமிழ் இசையைப் பற்றி எழுதுவது இயலாது. அடிகள் அடக்கமான முறையில் இலங்கையில் இராம கிருஷ்ண மடத்தின் வாயிலாகக் கல்விப் பணி செய்து கொண்டிருந்தார் கள். அப்போது 'குமரன்' அவருடைய கட்டுரைகளை வெளியிட்டு அவர் புகழை இந்தியாவில் பரப்பிற்று. பண்டித மயில் வாகனம், பிரபோதசைதன்யர், விபுலானந்தர் என்ற மூன்று பெயர்களிலும் அடிகள் குமரனில் எழுதியிருக்கிறார். குமரன் ஆசிரியர் முருகப்பா வாயிலாக, அடிகளின் புலமையைப் பற்றிக் கேள்வியுற்ற தமிழிசைத் தந்தையான அண்ணாமலை அரசர் விபுலானந்த அடிகளை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக நியமித்த வரலாறு இந் நூலில் பிறிதோரிடத்தில் கூறப்பெற்றுள்ளது.

## தமிழ் இசைச் சங்கம்

பொருள் விளங்காத பாடல்களைக் கேட்பது தவறு என்ற உணர்ச்சி ராஜா. சர். அண்ணாமலைச் செட்டியாருக்கு ஏற் பட்டது. இசை அரங்குகளில் தமிழ்ப் பாடல்களைக் கேட்பதே அரிது. இந்த இழி நிலையை எண்ணிக் கொண்டிருந்த ராஜா அவர்கள் துக்கடா கேட்க நேர்ந்த போது, தமிழ்ப் பாடல்களில்

ஆர்வம் ஏற்பட்டது. அவர் உள்ளத்தில் தமிழ் இசை என்ற எண்ணம் தோன்றியது. மறக்கப்பட்டிருந்த தமிழிசைக்கு ஒரு நல்ல காலம் பிறந்தது. தமிழரெல்லாம் ஒன்று கூடினர். மூல தனமின்றி நன் முயற்சி எதையும் சிறப்புறச் செய்ய இய லாதே! ஆகையால், தொடங்கிய செயலைச் செம்மையாக நிறைவேற்றும் ராஜா அவர்கள் தமிழ் இசை இயக்கத்திற்குப் பொருள் தேடினார்; ஆங்காங்கு மாநாடுகள் நடத்தினார்; பள்ளிகள் நிறுவினார்.

ஓர் இயக்கம் சிறப்பாக நடைபெற, நிலை பெற, இவை மட்டும் போதா. எனவே, சென்னையில் தமிழ் இசைச் சங்கத்தைத் தொடங்கினார்கள். 1942 முதல் ஆண்டு தோறும் இசை விழாவை — பெரிய திருவிழாவாக தமிழ் இசைச் சங்கத்தார் கொண்டாடி, இனிய தமிழில் பாடி இசைக் கலையை வளர்த்து வருகின்றனர். தேவாரப்பண் ஆராய்ச்சியும் சிறப்பாக நடைபெறுகிறது.

ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் பல்கலைக் கழகத்தையும் தமிழ் இசைச் சங்கத்தையும் தம் இரு கண் களாகப் போற்றி வந்தார்.

மதுரையில் ராஜா சர் முத்தைய செட்டியாரின் பெரு முயற்சியால் தமிழ் இசை மன்றம் கட்டி முடிக்கப் பெற்று தமிழ் இசைச் சங்கமும் இயங்கி வருகிறது.

### தமிழிசை மலர்கள்

தமிழ் இசை மலர்கள் ஆண்டு தோறும் நடைபெறும் நிகழ்ச்சிகளைப் பற்றிய விவரங்களோடு அமையாது தமிழ் இசைப் புரவலர், புலவர், கவிஞர், சாகித்திய கர்த்தா ஆகி யோரைப் பற்றிய குறிப்புக்களையும்தாங்கிச் சிறப்பாக வெளி வருகின்றன.

### அண்ணாமலை மன்றம்

சென்னை தமிழ் இசைச் சங்கத்தார் சென்னையில் நிறுவியுள்ள மண்டபத்திற்கு நிதி உதவிய பெருமை பெரும் பாலும் கடல் கடந்த நாடுகளிலுள்ள செட்டியார்களையே சேரும். இக் கட்டிடம் திராவிடக் கட்டிடக் கலைக்கு எடுத்துக் காட்டாக இருப்பதும், இதற்கு ''மன்றம்'' என்ற தூய தமிழ்ச் சொல் பயன்படுத்தப் பெற்றிருப்பதும் பாராட்டுக்குரிய செயல்களாகும்.

### பாட்டுப் பாடுதல்

தமிழ் இசை என்பது செட்டி நாட்டு மக்களின் இரத்தத்திலேயே ஊறி விட்டது எனலாம் 'பாட்டுப் பாடுதல்' என்ற சொற்றொடர் செட்டி நாட்டில் வழங்குவதில்லை. "பாட்டைப் படிப்பது" என்பதே இங்குள்ள வழக்கு. மொழி தெரியாமல் எப்படிப் பாட்டை படிக்க இயலும்? எனவே, செட்டி நாட்டை பொறுத்தவரையில் பாட்டு என்பது தமிழ்ப் பாட்டேயாகும்.

### அண்ணாமலை அரசர் குடும்பத்தினர்

அரசர் குடும்பத்தார் அனைவரும் தமிழ் இசையில் ஈடுபாடு உடையவர்களாக இருப்பது மகிழ்ச்சிக்கு உரியது.

திரு. மு. அ. சிதம்பரம் அவர்களுடைய மகள் திருமதி சீதா சிதம்பரம் மருமகள் திருமதி தேவகி ஏ. சி. முத்தையா இருவரும் திருப்புகழ், திருவாசகம், கம்பன் இசைமாலை முதலியவற்றை முறையாகப் பயின்று இசையுடன் பாடிப் பல நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளுகின்றனர்.

### பொள்ளாச்சி தமிழ் இசைச் சங்கம்

திருப்பணிச்செல்வர் காந்தியவள்ளல் அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களுடைய பேராதரவுடன் பொள்ளாச்சி தமிழ்இசைச் சங்கத்தை 1970 இல் தோற்றுவித்த பெருமைதேவகோட்டை திரு. இராமவெள்ளையப்பன் பி,டெக் அவர்களைச் சேரும் இவருடைய இடைவிடாத முயற்சிகளால் இப்போது இச்சங்கம் 1600 உறுப்பினர்களைக் கொண்டுள்ளது 1971 முதல் தொடர்ந்து ஆண்டுதொறும் திரு. வெள்ளையப்பன் ஆண்டுவிழா மலர்களை வெளியிட்டு வருகிறார். டாக்டர் மகாலிங்கம் அவர்கள் அமைத்துக் கொடுத்திருக்கும் காந்தி மண்டபத்தில் மாதந்தொறும் இசை, நாடக, நாட்டிய நிகழ்ச்சிகளும் சொற்பொழிவுகளும் நடத்தப்பெறுகின்றன. சங்கத்தின் ஆதரவில் தமிழ் இசைப்பள்ளி சிறப்பாக நடைபெற்றுவருகிறது.

தொடக்கநாள் முதல் செயலராக இருந்து வரும் திரு வெள்ளையப்பனின் பணிகளைப் பாராட்டி, சங்கத்தலைவர் திரு கிருஷ்ண வாணவராயர் அவர்கள் தலைமையில் பெரியதொரு பாராட்டுவிழா 1981—இல் நிகழ்ந்தது.

கோவை கலாமந்திர் கோவை தமிழ் இசைச்சங்கம், திருப்பூர் தமிழ் இசைச்சங்கம், உடுமலை பைன் ஆர்ட்ஸ் சொசைட்டி, கொழிஞ்சம்பாறை தமிழ்மன்றம் ஆகிய அமைப்புக்கள் திரு. வெள்ளையப்பனின் தூண்டுதலால் அமையப் பெற்று, அவருடைய ஆலோசனையில் சிறப்பாக இயங்கி வருகின்றன.

தலைமுறை தலைமுறையாக இசைஒலிக்கும் செட்டி நாட்டு மண்ணில் குன்றக்குடியும் வலையபட்டியும் தோன்றியதில் வியப்பு ஒன்றுமில்லை.

# 28 சிற்பக் கலை

இசைக் கலைக்குச் செட்டி நாடு ஆதரவு தந்ததை இதுவரை தெரிவித்தோம். கட்டிடக் கலை சிற்பக் கலை நாடகக் கலை போன்ற ஏனைய கலைகளுக்கும் செட்டிநாடு ஆதரவு தந்திருப்பதை இனி தெரிவிப்போம்.

## கட்டிடக் கலை

ஆயிரக் கணக்கான திருப்பணிகளைச் செய்து மூவேந்தர்க்குப் பிறகு தமிழரின் கட்டிடக் கலை, ஓவியக்கலை, சிற்பக் கலை, ஆகிய கலைகளை வளர்த்தது செட்டியார் சமூகமே.

வீடுகளை மாட மாளிகைகளாக அமைத்துக் கட்டிடக் கலையைச் செட்டியார்கள் வளர்த்துள்ளனர். திண்ணை, திருமண மண்டபம் முதலியன அமைப்பது இச் சமூகத்தாரின் சிறப்பான வழக்கம். கடல் கடந்த நாடுகளிலும் தமிழரின் கட்டிடக் கலையைப் பரப்பிய பெருமை இவர்களுக்கு உரியது. சென்னை இராசபவனத்தில் அமைக்கப்பட்டுள்ள காந்தி நினைவு மண்டபம் செட்டிநாட்டுக் கட்டிடக் கலைஞர்களா லேயே திட்டமிடப்பெற்றது. செட்டிநாட்டில் நூற்றுக்கும் மேற்பட்ட ஸ்தபதிகள் உள்ளனர்.

தேவகோட்டை அருகேயுள்ள எழுவங்கோட்டை ஏராள மான ஸ்தபதிகளை வழங்கியுள்ள பெருமை உடைத்து, இவர் களுள் ஒருவரான திரு. வை. கணபதி ஸ்தபதி மாமல்லபுரத் திலுள்ள தமிழ்நாட்டுக் கட்டட - சிற்பக் கலைக் கல்லூரி முதல்வர். மிகப் பல விருதுகள் பெற்றவர்.

தஞ்சைப் பெரிய கோயிலை உருவாக்கிய இராசராசப் பெருந்தச்சன் வழியில் தோன்றிய சிற்ப கலா சாகரம் ம. வைத்திய நாத ஸ்தபதியாரின் மகன்.

திரு. வை. கணபதி ஸ்தபதி முறையாகத் தமிழும் வட மொழியும் ஆங்கிலமும் கணிதமும் கற்றவர். தந்தையாரிடமும் சிற்பகலாசாகரம் ம. செல்லக்கண்ணு ஸ்தபதியாரிடமும் சிற்பக் கலைகள் பயின்றவர். சிற்ப நூல்கள் பலவற்றை ஆய்ந்து

கற்று, இருபத்தைந்தாண்டுகள் இத்துறையில் ஆசிரியராக இருப்பவர்; பல்வேறு கலைப் படைப்புக்களை ஆக்கிய செயல் திறனும் அனுபவமும் நிரம்பியவர். வெளிநாடுகளில்ஏராளமான கோயில்களைக் கட்டியவர்.

தமிழக அரசு மேற்கொண்ட பூம்புகார் கலைக் கூடத்தையும் வள்ளுவர் கோட்டத்தையும் வடித்தவர்.

சிற்பச் செந்நூல் என்ற அரிய பெரிய நூலைச் செந் தமிழில் படைத்தவர். அதற்காக, அண்ணாமலை அரசர் பரிசு (எம். ஏ. சி. அறக்கட்டளை) பெற்றவர்.

ஆந்திர மாநில அரசின் இந்து சமய அறநிலையத் துறையின் தலைமை ஸ்தபதியாக 1967 முதல் இருந்து வரும் திரு எஸ். எம். கணபதி ஸ்தபதியும், எழுவன்கோட்டைஊரினர் தான். இவருடைய வரைபடங்களின் படியும் நேர் மேற் பார்வையிலுமே அமெரிக்காவில் நியூயார்க் ஹூஸ்டன், டெட்ராயிட் போன்ற பல நகரங்களிலும் 1970 - களில் பல கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. திராவிடக் கட்டிடக்கலை இவை வழியாக கான்கிரீட் அடுக்குமாடிக் கட்டிடங்கள் மிகுந்த அமெரிக்காவுக்கும் பரவியிருக்கிறது.

இந்திய நாடு அரசியல் விடுதலை அடைந்த பிறகு இந்த 35 ஆண்டுகளில் கட்டிடக் கலைத் துறையிலும் ஆன்மிகத் துறையிலும் பெரிய சாதனை என்று பாராட்டப் பெறுவது முக்கடலும் கூடி முழங்கும் கன்னியாகுமரி அருகே கடல் சூழ்ந்த விவேகானந்தர் பாறைமீது கட்டப் பெற்றிருக்கும் விவேகானந்தர் நினைவு மண்டபம். இதைக் கட்டிய சிறப்பும் செட்டிநாட்டுச் சிற்பிகளுக்கே உரியது. செட்டிநாட்டுச் சிற்பி களின் அருமையையும் பெருமையையும் இந்த மாமண்டபத் தைப் பற்றி, அதிகார பூர்வமாக ஆங்கிலத்தில் பெரிய வடிவத் தில் விரிவாக வெளியிடப் பெற்றுள்ள ஆதார நூலில் பலபடப் பாராட்டி இயம்புகிறது.

சிற்பக் கலையைப் பற்றி டி. கே. சி. ஒரு முறை கூறியதை இங்கே தெரிவிக்கலாம்.

"சிற்பக் கலையில் தமிழ் நாடு சிறந்திருப்பது போல், உலகத்தில் வேறு எந்த நாடுமே இல்லை.சிற்ப நூலின் நயந் தெரிந்த மேல் நாட்டாரும் இந்தியருமே இந்த உண்மையை

ஒப்புக் கொண்டு பாராட்டிப் புகழ்ந்து எழுதியிருக்கிறார்கள், தமிழ் நாட்டில் இது ஆதியாக உள்ள கலை. சிற்பிகள் இன்றைக்கும் அருமையான கலை ஒன்றை மறவாது வளர்த்து வந்திருக்கிறார்கள் என்றால், அதற்குக் காரணபூதமாய் இருப்பது கோடி கோடியாகப் பணம் செல வழித்துத் திருப்பணி செய்து வருகிற தன வணிக குலமே ஒழிய வேறில்லை''

பிள்ளையார் பட்டியிலுள்ள விநாயகர் பெருமானின் உருவத்தின் சிற்ப அமைதி சிற்பக் கலையில் ஆர்வமுடையார் அனைவரும் காண வேண்டியது.

கோவிலூர்க் கோவில் 1900ஆம் ஆண்டளவில் விரிவாகக் கட்டப்பெற்றது. அவ்வாறிருந்தும் மிகப் பழமையான கோவில்களிலிருப்பது போன்ற சிறப்புக்களை அங்கே காணலாம். ஏனையோர் ஆங்கில நாகரிகத்தின் வயப்பட்டிருந்த காலத்தில் செட்டியார்கள் வெளிநாடுகளுக்குச் சென்று, பொருளீட்டி, அதை நம் நாட்டுக்குக் கொண்டு வந்து தமிழ்க் கலைகளை ஆதரித்தமைக்குக் கோவில்கள் சான்றாக விளங்குகின்றன.

### ஓவியக் கலை

இக் காலத்தைப் போல் படம் எடுக்கும் முறை (Photography) பரவாத காலத்தில், தங்கள் குடும்பத் தலைவர்களின் படங்களை எழுதச் செய்வது வழக்கமாக இருந்தது ஓவியக்கலை தமிழகத்தில் அழியாதிருப்பதற்கு இது துணை செய்தது என்பது நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை கருத்து.

### நூல்களும் கலைஞர்களும்

கடவுட் பற்றும் பழமையில் ஈடுபாடும் இருந்தமையால் செட்டியார்கள் தமிழரின் சிற்பச் செல்வத்தையும் கட்டிடக் கலையையும் அழியாமல் பாதுகாத்து வந்திருக்கின்றனர். மானசாரம், விசுவகர்மியம், காசியபம், ஸ்ரீ தத்துவ நிதி முதலிய நூல்கள் - கிரந்தலிபியிலுள்ள ஓலைச்சுவடிகளாக- செட்டி நாட்டில் இன்றும் கிடைக்கின்றன.

### நாடகக் கலை

சென்னை ரசிக ரஞ்சன சபையார் நாடகங்களை நடத்திய காலத்தில், அச்சபையில் ஆயுள் உறுப்பினராகச்

சேர்ந்து நன்கொடை கொடுத்து ஆதரித்தவர் திவான் பகதூர் தி.நா. முத்தையா செட்டியார் ஆவார். சென்னைச் செக்ரடேரியட் பார்டியார், இராம கிருஷ்ண மடத்துப் பள்ளிக் கூடங்களுக்குப் பொருள் சேர்க்க நாடகங்கள் நடத்திய போது அவர்களுக்குச் செட்டி நாட்டிலும் மலேயாவிலும் பெருத்த ஆதரவு கிடைத்தது.

நாடகப் புரவலராக விளங்கிய பள்ளத்தூர் வயிரம் அருணாசலம் செட்டியார் அவர்களையும் இங்கு குறிப்பிட வேண்டும். இவர்கள் 100 நடிகர்கள் வரை சேர்த்து, ஸ்ரீ ராமபால கான விநோத சபை ஏற்படுத்திச் சமூக நாடகங் களையும் வரலாற்று நாடகங்களையும் பல ஊர்களில் நடத்தினார்கள். நாடகக்கலை வளர்ச்சிக்காக இவர் அந்தக் காலத்து மதிப்பில் சில இலட்சங்களைச் செலவிட்டவர் இவருடைய நாடகப் பணி, ஒரு விரிவான வரலாறாக வெளி வந்திருக்க வேண்டும். சின்னஞ்சிறு கட்டுரைகூட இவரைப் பற்றி வராதது ஒரு பெருங்குறையே.

சென்னையில் சிறுகூடற்பட்டி ஏ. எல். எஸ் சீனிவாசன் மற்றும் கண்டமாணிக்கம் லெ. மாணிக்கம், டாக்டர் நாச்சியப்பன் ஆகியோர் ஸ்ரீநடராசா அமெச்சூர்ஸ் என்ற நாடகக் கழகத்தின் மூலம் பல நாடகங்களை நடத்தினர், 1943-இல் சென்னை செந்தோமிலும், கோவையிலும் முத்தமிழ் நிலையத்தார் (இதைப்பற்றிப்பாரதிதாசன் என்னும் கட்டுரை யில் காண்க) இயல் இசை நாடக நிகழ்ச்சிகளை ஒரே மேடை யில் அமைத்தனர், தேவகோட்டை, காரைக்குடி, புதுவயல், கண்ட மாணிக்கம், வேந்தன்பட்டி, கொப்பனாபட்டி ஆகிய ஊர்களில் நாடக கழகங்கள் நடை பெற்று வந்திருக்கின்றன.

ராஜராஜ சோழன் என்ற நாடகம் டிகேஎஸ் குழுவினரின் பரிசு பெற்று, அவர்களால் நூற்றுக்கும் மேற்பட்ட அரங்குகளில் இந்தியாவெங்கும் நடிக்கப்பெற்றுப் புகழடைந்தது. பின்னர் இது எழுபது எம். எம். வண்ணப்படமாகவும் எடுக்கப்பெற்றது. இந்த நாடகத்தை எழுதிய கண்டனூர் அரு. இராமநாதன், ஆராய்ச்சி அறிவும் வரலாறு — நாடகம் — தமிழ் இலக்கியம் ஆகியவற்றில் அளவுகடந்த ஈடுபாடும் கொண்டிருந்த திரு. இராமநாதன் இந்த நாடகத்தின் வாயிலாகத் தமிழ் நாடக உலகில் ஒரு திருப்பத்தை உண்டாக்கினார்.

பாண்டிய வரலாற்றுத் தொடர்புடைய ஒரு திரைப் படத்தையும் இவர் உருவாக்கினார்.

திருமலை நாயக்கர் வரலாற்றை, நாடகம் எழுதிப் பரப்பியும் நாடகத்திற்கு என இதழ் நடத்தியும் உள்ள டாக்டர் ஆறு. அழகப்பனையும் தமிழ்நாடு நன்கு அறியும்.

திரைப் படக் கலை

இசை நாடக நடனக் கலைகள் செழிக்கப் பேருதவியாக இருப்பது திரைப்பட உலகம். இவ்வுலகில் தமிழகம் சிறந்து விளங்குவதற்கு ஒரு முக்கிய காரணம், செட்டி நாட்டு அன்பர் பலர் இத்துறையில் புகுந்தது என்பது எல்லோரும் அறிந்ததே.

திரைக் கதை, பாடல், விமர்சனம் ஆகியவை எழுதும் செட்டி நாட்டன்பர் பலர் உள்ளனர். அவர்களைப் பற்றி யார் எவர் என்னும் பகுதியில் குறிப்பிட்டுள்ளோம்.

# 29 பதிப்புத்துறை முன்னோடிகள் மூவர்

செட்டிநாட்டு அன்பர் பலர் இந்நாளில் நூல் வெளியீட்டுத் துறையில் உள்ளனர். இவர்கள் இதை ஒரு தொழிலாக இப்போது நடத்துகின்றனர் என்பது உண்மையே. இத்துறையில் இவர்கள் நுழைந்த பின்னணியைக் கூறுவோம். தமிழ்ப் பற்றின் காரணமாகவும் வணிக நோக்கமின்றியும் கொள்கைகளால் உந்தப்பட்டு தங்கள் சின்னஞ்சிறு வயதில், அதாவது இருபது வயது அடையுமுன் இந்தத் துறைக்கு வந்து சேர்ந்தவர்களே பலர்.

தங்களுக்கு யாரிடம் ஈடுபாடு ஏற்பட்டதோ அந்த அறிஞர்களை அளவுகடந்து ஆதரிப்பதும் அவர்களுடைய நூல்களை அச்சிட்டுப் பரப்புவதும் வழிவழியாகச் செட்டிநாட்டு இயல்பு.

கவியரசர் சுப்பிரமணிய பாரதியாரின் பாடல்கள் சிறு பிரசுரங்களாகவே வெளிவந்திருந்தன. நூலாக அவை உருவம் பெற்றது 1919-இல்தான். அதனால் புதிய தெம்பையும் உற்சாகத்தையும் கொண்ட பாரதியார் தமது நண்பர் கானாடு காத்தான் வயி. சு. சண்முகம் செட்டியாருடைய ஒத்துழைப்புடன் தம் நூல்கள் அனைத்தையும் வெளியிட எண்ணங்கொண்டார். முதலில் பகவத்கீதை, பாஞ்சாலி சபதம் – ஆகிய இரு நூல்களை வெளியிட ஆசை கொண்டார். இதன் தொடர்பாக 1919 நவம்பர் 15ந் தேதி சண்முகம் செட்டியாருக்கு பாரதியார் எழுதிய கடிதம் இது தான்:*

“ஸ்ரீமான் வயி. சு. சண்முகம் செட்டியாருக்கு, ஆசீர்வாதம். பகவத்கீதையை அச்சுக்கு விரைவில் கொடுங்கள். தங்களுக்கு இஷ்டமானால் அதற்கு நீண்ட விளக்கம் எழுதியனுப்புகிறேன். நீண்ட முகவுரையும் எழுதுகிறேன்.

கீதைக்கு—புஸ்தக விலை ரூ. 1க்குக் குறைந்து வைக்க வேண்டாம். தடித்த காயிதம்; நேர்த்தியான அச்சு; பெரிய எழுத்து; இடவிஸ்தாரம்—இவை கீதைக்கு மட்டுமேயன்றி

---

*ஆதாரம்; குமரிமலர் 1973 அக்டோபர் இதழ்.

நாம் அச்சிடப் போகும் புஸ்தகங்கள் எல்லாவற்றுக்கும் அவசியம்,

ஆங்கிலக் கவிகள், ஆசிரியரின் காவியங்களும் கதைகளும் இங்கிலாந்தில் எப்படி அச்சிடப்படுகின்றனவோ, அப்படியே நம் நூல்களை இங்கு அச்சிட முயல வேண்டும். அங்ஙனம் அச்சிட ஒரு ரூபாய் போதாதென்று அச்சுக்கூடத்தார் அபிப் பிராயங் கொடுக்கும் பக்ஷத்தில் புஸ்தக விலையை உயர்த்து வதில் எனக்கு யாதோர் ஆக்ஷேபமுமில்லை.

பாஞ்சாலி சபதத்துக்கு முகவுரை (இரண்டாம் பதிப் புக்கு) இன்னும் சில நாட்களில் அனுப்புகிறேன்.

தம்பி, இந்தப் "பாஞ்சாலி சபதம்" இரண்டாம் பாகம் கையெழுத்துப் பிரதியை நான் அனுப்பியிருப் பதைச் சோம்பலின்றி தயவு செய்து ஒருமுறை முற்றிலும் படித்துப் பாருங்கள். பிறகு அதை மிகவும் ஆச்சரியமாகவும் அழகாகவும் அச்சிடுதல் அவசியமென்பது தங்களுக்கே விசதமாகும்.

புதுச்சேரியில் (பாடிய) பாட்டுக்கள் அனைத்தையும் இங்கு குழந்தை தங்கம்மா தன்னுடைய நோட் புக்குகளில் எழுதி வைத்திருக்கக் கண்டு, அதைப்புதையல்போல்எடுத்து வைத்திருக்கிறேன்."

தமிழ் நூல்களின் அச்சும் பதிப்பும் அழகாக இருக்க வேண்டும் என்ற பாரதியாரின் கனவை நனவாக்கிய மூவரைப் பற்றியது இக்கட்டுரை.

மீண்டும் சொல்லுகிறோம் தமிழ் நூல்கள் இன்று பல துறைகளிலும் வெளிவருகின்றன. கவர்ச்சியாகவும் அழகாகவும் அவை அச்சிடப் பெறுகின்றன. இந்த நிலையை உருவாக்கியவர் கள் மூவர்—வை. கோ , சின்ன அண்ணாமலை, முல்லை முத்தையா. இவர்களுக்கு முன் தமிழ் நூல்கள் எவ்வாறு அச்சிடப்பட்டன என்பதைச் சொல்லுவதை விடச் சொல்லாமல் இருப்பதே நன்று.

வை.கோ.

1934க்கு முன் வெளிவந்த தமிழ் நூல்களைச் சற்றுப் புரட்டிப் பார்ப்போம்.

அவை பாடநூல், சங்க இலக்கியத்துக்கு உரை, புராணம், சமய இலக்கிய வெளியீடு... இத்தகையன. தப்பித் தவறி, தேசிய இயக்கம் பற்றிய நூல்கள். ஓரிரு வாழ்க்கை வரலாறுகள். இவ்வளவே தான் தமிழ்!

அந்த நூல்கள் கூட அவ்வளவாக விற்கவில்லை. மிகுதி யாக விற்பனையானவை பஞ்சாங்கமும் தென் இந்திய இரயில்வே அச்சிட்ட கால அட்டவணையும் மட்டுமே என்ற நிலை இருந்தது.

மேலே நாம்குறிப்பிட்ட தலைப்புக்கள் மட்டுமில்லாமல் சமூகம் — அரசியல், பொருளாதாரம், — நாட்டுப்புறஇயல் — பிற நாடுகள் — பிற நாட்டு இலக்கியங்கள் — வேளாண்மை பற்றிய நூல்களையெல்லாம் தமிழில் வெளியிட்டவர் — கவர்ச்சியான அட்டையுடனும் படங்களுடனும் நல்ல தாளிலும் அச்சிட்டவர் வை. கோ.

வை. கோவிந்தன் தம் வாழ்நாளை யெல்லாம் தமிழ் வளர்ச்சிக்காகச் செலவிட்டார், அவருடைய மூச்சிலும் பேச்சிலும் தமிழ் மணம் கமழ்ந்திருந்தது. அவருடைய சொல்லுக்கும் செயலுக்கும் எவ்விதமான வேறுபாடும் இருந்ததில்லை.

இராயவரம் என்ற ஊரில் 26-6-1912-இல் வை. கோ. பிறந்தார். இவருடைய தந்தையார் இராமநாதன் செட்டியார் இலக்கிய ஆர்வலராக இருந்தார், பெரியதொரு நூல்நிலையம் வைத்திருந்தார். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் போன்றவர் களை வரவழைத்து அவர் பாராட்டினார். அதன் விளைவாக சிறுவன் வை. கோ. வுக்கு தமிழில் ஈடுபாடு ஏற்பட்டது. விளையும் பயிர் முளையிலே!

வை. கோ. வின் உடன் பிறப்புக்களும் புகழ் பெற்றவராவர். திரு. இராம சீனிவாசன் அரசியலிலும் காந்திய நெறி வழி ஆக்கப் பணிகளிலும் ஈடுபட்டவர். திரு. ரெங்கநாதன் செட்டியார் தம் வாழ்நாளெல்லாம் பர்மாவில் செலவிட்டு, பர்மாவாழ் இந்தியர் — குறிப்பாகத் தமிழர் நலங்களைக் காத்தவர். பாப்பா என்ற பெயரில் சிறுவர் இதழ் டத்திக் குழந்தை இலக்கியம் வளர்த்தவர் தியாகராசன்.

ஒரு செல்வக் குடும்பத்திற்கு வை. கோவிந்தன் அவர்கள் வளர்ப்புப் பிள்ளையாகச் சென்றார். அங்கே நெடுங்காலமாகத் தேக்கி வைக்கப்பட்டிருந்த ரொக்கப் பணம் முழுவதும் தமிழ்ப் பணிக்குப் பயன்படுத்த வை. கோ.வுக்கு வாய்ப்பு ஏற்பட்டது. சுவீகாரத் தந்தையின் தொழிலைக் கவனிக்க, வை.கோ இரங்கூனுக்குச் சென்றார். அப்போது அங்கிருந்து வெளிவந்து கொண்டிருந்த தன வணிகன் என்ற வார இதழ் சுவாமி சுத்தானந்த பாரதியார் எழுதிய ''ஏழைபடும் பாடு'' என்ற நூலின் பகுதிகளை ஒவ்வொரு வாரமும் வெளியிட்டது. அவற்றை வை. கோ படித்தார். அந்தக் கட்டுரைகளை ஒரு நூலாக வெளியிடவும் ஏற்பாடு செய்தார். நண்பர்களுடன் சேர்ந்து அன்புநிலையம் என்ற வெளியீட்டு நிறுவனத்தைத் தொடங்கி சுவாமி சுத்தானந்த பாரதியார் எழுதிய நூல்கள் அனைத்தையும் வெளிவரச் செய்தார். டால்ஸ்டாயின் நூல்களை மொழி பெயர்க்கவும் வை. கோவிந்தன் ஏற்பாடு செய்தார்.

சுத்தானந்த பாரதியார், 'ஏழைபடும்பாடு' முன்னுரையில் எழுதியுள்ளதை இந்நூலின் 201 — ஆம் பக்கத்தில் காண்க.

ஏழை படும் பாடு என்ற நூலில் தொடங்கி, வை. கோ, சக்தி காரியாலயத்தின் வாயிலாக ஏறத்தாழ 250 நூல்கள் வெளியிட்டார்· பெங்குவின் பெலிக்கன் வெளியீடுகளைப் பின் பற்றிச் சிறந்த அமைப்பு, எடுப்பான தோற்றம், கண்ணைக் கவரும் கட்டுக் கோப்பு இவற்றோடு புதிய கருத்துக்களை வழங்கி அறிவுக்கு விருந்து நல்கிய பெருமையை வை. கோ. தேடிக் கொண்டார்.

போர்க்காலத்தில் ரஷ்யாவைப் பற்றியும் அரசியல் பிரச்சினைகளைக் குறித்தும் துணிந்து பல நூல்களை வெளியிட்டார். டால்ஸ்டாயின் நூல்கள் பலவற்றையும் தமிழாக்கி அச்சிட்டார். வீர சவர்க்காரின் எரிமலையைத் தமிழில் பிரசுரித்தார். க. சந்தானம், கே. எம். முன்ஷி ஆகிய அறிஞர்களுடைய நூல்களையும் தமிழா, இவற்றையும் படி என்று தமிழர்க்குப் படைத்தார்.

தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் தமிழ்ப் பேரகராதித் திட்டத்தின் தலைமைப் பதிப்பாசிரியரும் தமிழ் இலக்கிய வரலாற்றை நூற்றாண்டு வாரியாக அரிதின் முயன்று செம்மை

யாக எழுதியிருப்பவருமாகிய திரு. மு. அருணாசலம் 1945-இல் புதிய துறைகளில் நூல் எழுதினார். உலோகங்கள், காய்கறி பயிரிடுதல் போன்ற நூல்களைப் பெரும் பொருட் செலவில் வெளியிட அக்காலத்தில் வை. கோ. தவிர வேறு யார் முன் வந்திருப்பார்கள்?

ஓர் எழுத்தாளர் தம் நடையிலேயே எழுதவேண்டும். சுருக்கமாகவும் தெளிவாகவும் எழுத வேண்டும். தம் கருத்தைப் பிறர்க்குத் தெரிவிக்க வேண்டும் என்ற நோக்கத்துடனேயே எழுதவேண்டும், என்று வை கோ. வற்புறுத்தினார். அதைத் திருத்தி இன்னொருவர் பதிப்பிப்பது இலக்கணத்துக்கும் பல நூற்றாண்டுகளுக்கு முன் வழங்கிய 'பண்டித' நடைக்கும் இன்றைய எழுத்தாளர் அடிமைப் படக்கூடாது என்று வை. கோ. கருதினார். இக்கருத்தைப் பிறர்மனம் புண்படாத படி சொல்லுவதை ஒரு பொழுதுபோக்காகக் கொண்டிருந்தார்.

வை. கோ. நிறையப் படித்தார். தமிழர் ஒவ்வொருவர் இல்லத்திலும் ஒரு நூல் நிலையம் இருக்கவேண்டும் என்ற குறிக்கோளை நிறைவேற்ற (புக் இண்டஸ்ட்ரி கவுன்சில் ஆப் சதர்ன் இந்தியா) தென் இந்தியப் புத்தகத் தொழில் கழகத்தின் பொருளாளராகவும், தலைவராகவும் இருந்த காலங்களில் வை. கோ. பெரிதும் முயன்றார்.

தமிழிலுள்ள எல்லா நூல்களும் கேட்ட அளவில் உடனே கிடைக்கக்கூடிய புத்தகக்கடை இருக்கவேண்டும் என்று வை. கோ. கனவு கண்டார். அந்தக் கனவை நனவாக்கவே சக்தி காரியாலயத்தை வெளியீட்டு நிறுவனமாக மட்டுமன்றி விற்பனைக் கடையாகவும் ஆக்கினார். ஆனால் அவர் அத் துறையில் வெற்றி பெற ஜப்பான் போர் இடையூறாக இருந்தது.

குழந்தை எழுத்தாளர் சங்கத்திற்கு முதல் தலைவராகவும், தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் துணைத் தலைவர்களில் ஒருவராகவும் வை. கோ. இருந்துவந்தார். அவருடைய அலுவலகத்தில் —இன்றைய மியூசிக் அகடமி கட்டப்பட்டுள்ள இடத்தில்—தமிழ் எழுத்தாளர் சங்கக் கூட்டங்கள் நடந்தன.

இலட்சிய வேகத்தால் உந்தப்பட்டு கைப்பொருள் இழந்தாலும் அயராது தமிழ் மக்களுக்கு மலிவு விலையில் தன் வெளியீடுகள் மூலம் தமிழ்ப்பணி செய்த சான்றோர் சக்தி. வை.கோ. மலிவுப்பதிப்பு வரிசையை மணக்கச் செய்த பெருமை அவர் ஒருவரையே சேரும். அவர் மிகத் துணிச்சலாக 'பாரதியார் கவிதைகள்'' முழுவதையும் 500 பக்கங்களில் அச்சிட்டு ஒன்றரை ரூபாய் விலைக்குக் கொடுத்தார். 550 பக்கங்கள் கொண்ட திருக்குறள் பரிமேலழகர் உரையை ரூபாய் ஒன்றரை விலைக்கு வழங்கினார். அப்பொழுது கம்பராமாயணம் எல்லாக் காண்டங்களையும் வாங்க வேண்டுமானால் ரூபாய் 150/–ஆகும். இதை மலிவு விலையில் காண்டம் காண்டமாகக் கொண்டு வரும் திட்டத்தை வை. கோ. ஆரம்பித்தார். அதில் இரண்டு காண்டங்களை ஒவ்வொன்றும் இரண்டு ரூபாய் விலைக்குச் செய்யுட்களை மட்டும் அச்சிட்டுக் கொண்டு வந்தார். அவர் முக்கால் ரூபாய் விலைக்குக்கூட புதிய புதினங்களை மலிவுப் பதிப்புக்களாகக் வெளியிட்டார். அவர் இதற்கென்றே ஸ்வர்ணா பிரசுரம் என்ற பிரசுரத்தை தொடங்கி அதன் மூலம் மலிவு விலை நாவல்களை வெளியிட்டார். அதில் பிரபல எழுத்தாளர்களான லட்சுமி, ரகுநாதன், கு. அழகிரிசாமி போன்றோரின் நாவல்களையெல்லாம் 75 காசு விலைக்கு வந்துள்ளன. மக்கள் மிகவும் விரும்பிப் படித்தனர்.

தமிழர் நலனுக்கும் தமிழ் மொழி வளர்ச்சிக்கும் தமிழ் எழுத்தாளரை ஊக்குவிக்கவும் உதவி தன்னை அணைத்துக் கொண்ட ஒரு மெழுகுதிரி வை. கோ.

திரு வை. கோ. வைப்பற்றி தமிழ்ப் பதிப்பாளர் சங்கத் தலைவராக இருந்த திரு. கண. முத்தையா எழுதியிருக்கும் கட்டுரை, வரலாற்றுப் பயன் உடையது. அதன் பகுதிகள் வருமாறு:

தமிழில் மறுமலர்ச்சிக் காலத்தைக் குறிப்பிடும்போது 'மணிக்கொடி' காலம் என்று ஒருகாலத்தைக் குறிப்பிடுவார்கள். தமிழில் புதிய இலக்கிய வடிவங்கள், புதியசோதனைகள்தோன்றுவதற்கு 'மணிக்கொடி' உதவியதைப் போல தமிழில் புதியபுதிய நூல்கள், புத்தம் புதிய கருத்துக்கள் வெளி வருவதற்குப் பெரிதும் உதவியவை நவயுகப் பிரசுராலயமும் சக்தி காரியாலயமும் ஆகும். இரண்டும் ஏறக்குறைய சம காலத்தவையாயினும்

நவயுகப் பிரசுராலயம் புத்தம் புதிய கருத்துக்களை, புதிய இலக்கியவடிவங்களைத் தமிழில் நூல்களாக வெளியிட வேண்டு மென்ற திட்டத்துடன், பல அறிஞர்களின் கூட்டு முயற்சியால் தோன்றியது.

சக்தி காரியாலயம் அவ்வாறு திட்டமிட்டு ஆரம்பிக்கப் பெற்ற நிறுவனம் அல்ல. அதன் உரிமையாளர் திரு. வை. கோ. அவர்கள் தமது முன்னோர்கள் பர்மாவில் நடத்தி வந்த லேவா தேவித் தொழிலில் விருப்பமில்லாதவராயும், இந்தியாவிலே ஏதேனும் தொழில் செய்யவேண்டுமென்ற ஆவலுள்ளவராயும் இருந்ததாலும், அவருக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் உபதேசங்களில் உள்ள பற்றுதலினாலும், அப்போது புதுச்சேரி யிலிருந்த சுத்தானந்த பாரதியாருக்கும், திரு. வை. கோ. அவர்களுக்கும் இருந்த நெருங்கிய தொடர்பினாலும் தோன்றி யதே சக்தி காரியாலயம்.

1940-ஆம் ஆண்டு அளவில் சுத்தானந்த பாரதியாரவர் களின் யோசனைப்படி "சக்தி" என்ற பத்திரிகையை சென்னை அரண்மனைக்காரன் தெருவில் தொடங்கினார் திரு. வை. கோவிந்தன். அந்தப் பத்திரிகைக்காக ஒரு அச்சகத்தையும் ஆரம்பித்தார். அதைத் தொடர்ந்து நல்ல நூல்களை வெளி யிடும் சக்தி காரியாலயமும் தோன்றியது, இப்படி ஒரு திட்ட மில்லாமல் சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கு ஏற்பத் தோன்றிய தென்றாலும் "சக்தி காரியாலயத்"தின் சேவை தமிழ் நூல் வளர்ச்சியில் மகத்தானது.

திரு. வை. கோ. அவர்களின் நல்ல உள்ளமும் நல்ல காரியங்களையெல்லாம் உடனே செய்ய வேண்டுமென்ற ஆசை யும் தமிழ் மொழிக்குப் புத்தம் புதிய கருத்துக்கள் நிறைந்த சிறந்த நூல்கள் பலவற்றைத் தேடித்தந்தன. இன்று புத்தகத் தொழிலிலே ஏற்பட்டுள்ள மகத்தான வளர்ச்சிகளுக்கெல்லாம் முன்னோடியாக விளங்கியவர் திரு. வை. கோவிந்தன். பழந் தமிழ் இலக்கியங்களையும், இலக்கிய ஆராய்ச்சி, சமய நூல் களையும் தவிர மற்ற புதிய நூல்களை வெளியிடும் வாய்ப்பே யில்லாதிருந்த அந்தக் காலத்தில் மேற்கே மெத்த வளர்ந்த புத்தம்புதிய கலைகளையெல்லாம் துணிவோடு தமிழில் வெளி யிட்டவர் திரு. வை. கோ அவர்கள். அச்சுத் தொழிலிலும் அவர் பல சோதனைகளை நடத்தித் தமிழ்உலகிற்கு வழிகாட்டி யுள்ளார். அவர் வெளியிட்ட "சோவியத் ருஷ்யா"

''பிளேட்டோவின் அரசியல்'' போன்ற நூல்கள் அச்சு பைண்டிங் இரண்டிலும் இன்றுவரை இணையற்று விளங்கு கின்றன.

தமக்குச் சரியென்று தோன்றுவதை உடனுக்குடன் செய்யும் உள்ளம் படைத்த கோவிந்தனவர்கள் எதையுமே திட்டமிட்டு ஒழுங்காகச் செய்வதில்லை. அவ்வப்போது உள்ள சூழ்நிலைக்கேற்ப தமக்கு நல்லதென்று தோன்றுவதை உடனே செய்யத் தொடங்கிவிடுவார். அவருடைய காரியங்கள் ஒன்றுக் கொன்று தொடர்பற்றவையாகவே இருக்கும். இந்த மனப் பான்மையினால், சிறந்த நோக்கங்கள் கொண்டவராயிருந்தும் அவருடைய நல்ல செயல்கள் எல்லாம் 'ஆரம்பித்து வைத்தவர்' என்ற பெருமையை மட்டும் நல்கிவிட்டுமறைந்துவிட்டன. எந்த ஒரு காரியமும் வெற்றிபெற்று நிலைக்கவில்லை.

திரு. வை. கோ. அவர்கள் உயர்ந்த உள்ளம் படைத்தவர் நல்ல காரியங்களை உடனே செய்ய வேண்டுமென்ற ஆர்வம் உள்ளவர்: ஆனால் ஒழுங்கான திட்டமிட்ட செயல்முறை இல்லாதவர். இந்தக் குணத்தினால், அவர் தொழிலும் அவரு டைய உயர்ந்த லட்சியமும் கூடப் பலமுறை பாதிக்கப் பெற்றுள்ளன.

*சின்ன அண்ணாமலை*

வை.கோ.வுக்குப் பிறகு தமிழ் நூல்வெளியீட்டுத் துறையில் பலபுதுமைகளைப் புகுத்தித்தரமான நூல்கள் தமிழிலும் வெளிவர வழி வகுத்தவர் சி.அ.

இவருடைய அரசியல் வாழ்க்கை இந்த நூலுக்குப் புறம் பானது எனினும் இவர் இலக்கியத்துறைக்கு வந்து சேர்ந்த பின்னணியைப் புரிந்துகொள்வதற்குத் தேவையான அளவு மட்டும் சில இன்றியமையாத விவரங்களைக் கூறுவோம்.

இவர் காரைக்குடிக்கு அருகேயுள்ள உய்யக் கொண்டான் சிறுவயல் என்னும் சிற்றூரில் நாச்சியப்ப செட்டியார் —மீனாட்சி ஆச்சி மகனாக 18-[illegible]-1920இல் பிறந்தார். பெற்றோர் இட்ட பெயர் நாகப்பன் இவர் தம் அறுபதாம் ஆண்டு நிறைவுமங்கல விழா நிகழ்ந்து கொண்டிருந்த மேடை யிலேயே உயிர் நீத்தார். இந்த அறுபதாண்டுகளில் 38 ஆண்டுக் காலம் தமிழ்ப்பணியில் செலவிட்டரர்.

ஒன்பதாவது வயதிலேயே காந்தியடிகளிடம் இவருக்கு ஈடுபாடு உண்டாயிற்று.

தாய்மாமன் திருவாளர் லெட்சுமணன் செட்டியார் ஆதரவில் மலேசியாவுக்குச் சென்று, டெலுகாண்சனில் படித்து விட்டு நாகப்பன் உ. சிறுவயலுக்குத் திரும்பினான். பெற்றோர் அவனைத் தேவகோட்டைக்குச் சுவீகாரமாக அனுப்பினர். பிள்ளை வந்த இடத்தில் அண்ணாமலை என்ற பெயர் இடப் பட்டது. பிற்காலத்தில் இவர்புகழ்பெற்றபோது அண்ணாமலை அரசர், திருவண்ணாமலை அண்ணாமலைப்பிள்ளைஆகியோரிட மிருந்து வேறு படுத்திக்காட்ட, ராஜாஜி இவரைச் சின்ன அண்ணாமலை என்று ஒருமேடையில் குறிப்பிட்டார். அந்தப் பெயரே நிலைத்தது.

14 வயதிலேயே மேடைப் பேச்சாளர் ஆனார் அண்ணாமலை. ஒலிபெருக்கியில்லாத காலம் எனவே கழுத்தில் தமுக்கை கட்டித் தெருத்தெருவாக தமுக்கு அடித்துக் கொண்டு "இன்று மாலை ஜவகர் மைதானத்தில் மாபெரும் காங்கிரஸ் பொதுகூட்டம் நடைபெறும். அப்பொழுது நானே பேசுவேன் திரளாக அனைவரும் வருக" என்று உரக்க முழங்கி விளம்பரம் செய்து கூட்டம் நடத்துவான்.

நகைச்சுவை, அண்ணாமலையின் பேச்சில் இழை யோடியது. அதைச் சுவைத்த பேரறிஞர் அண்ணா, தாம் முதலமைச்சராக இருந்தபோது, அரசாங்க சட்ட நடை முறைகள்—விதிகளைப் புறக்கணித்து, இரயில் பயணத்தில் அண்ணாமலையும் தம் பெட்டியிலேயே பயணம் செய்ய இடமளித்தார்.

1942 ஆகஸ்ட் 8ஆம் தேதி காந்தியடிகள் கைது செய்யப் பட்டார், "வெள்ளையனே வெளியேறு" என்று தெருவெலாம் முழக்கம் செய்தனர், மக்கள். தேவகோட்டையிலும் சுற்றுப் புறங்களிலும் 144 தடையுத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டன. அவற்றை மக்கள் முன்னிலையில் அண்ணாமலை கிழித்தெறிந் தார். சிங்கமெனச் சீறி எழுந்தார். போலீஸ்காரர்களை மக்கள் விரட்டி விரட்டி அடித்தனர். அதன்பலன் இரவோடு இரவாக அண்ணாமலை கைதாகி திருவாடானைச் சிறையில் வைக்கப் பெற்றார்.

மக்கள் கொதித்தெழுந்து திருவாடானைச் சிறைச் சாலையை உடைத்துத் தகர்த்து அண்ணாமலையை விடுவித்து தோள்களில் தூக்கிக் கொண்டு ஆரவாரப் படுத்தியது வரலாற்றுச் சிறப்பு மிக்க நிகழ்ச்சியாகும்.

அண்ணாமலையை உயிருடனோ அல்லது, பிணமாகவோ கொண்டு வருபவருக்கு ரூபாய் பத்தாயிரம் வழங்குவதாகப் போலீசார் பறை சாற்றினர்.

தலைமறைவான அண்ணாமலை திருச்சிவந்து அங்கிருந்து சென்னை சேர்ந்தார். அங்கிருப்பதும் ஆபத்து என்று சா. கணேசன் அவரைக் காசிக்கு அனுப்பிவைத்தார்கள். வழி அனுப்ப திருவாளர்கள் ஏ என் சிவராமன், ஏ. கே. செட்டியார் கோயங்கா முதலியவர்கள் சென்றிருந்தனர். பல இன்னல் களைத் தாண்டி காசி சேர்ந்தார்.

காசியிலும் நிம்மதியில்லை. ஊரில் தன் உறவினர்களைப் போலீஸார் மிக மிகக் கொடுமைப்படுத்துவதை அறிந்து மனம் தாளாமல் தேவகோட்டைக்கு வந்து போலீசில் சரணடைந்து மீண்டும் கைதானார்.

அண்ணாமலை விடுதலையாவதற்கு சமயோசிதமாகச் சட்ட நுணுக்கங்களை மூதறிஞர் இராஜாஜி காட்டச்செய்து உதவினார். விடுதலையான பிறகும் தொல்லைகள் அவரை வாட்டின.

“காலணா சம்பாதிக்க யோக்கியதை இல்லை என்ன அரசியல் வேண்டிக்கிடக்கு” என்று தந்தையார் சொன்னதைக் கேட்டு ஆத்திரமடைந்து அண்ணாமலை சென்னை வந்தார். ஏ. கே. செட்டியார், வை. கோவிந்தன், சதிதுருக்கனன் ஆகிய வர்கள் துணை நின்றனர். தமிழ்ப் பண்ணை உதயமாயிற்று. ராஜாஜி தொடங்கி வைத்தார். நாமக்கல் கவிஞர் விளக்கேற்றி வைத்தார். சக்தி ‘வை கோ’ புதுக் கணக்கு எழுதினார்.

முதல் நூலாக “தமிழன் இதயம்” கண்கவர் வனப்புடன் வெளிவந்தது.

ராஜாஜி, கல்கி, ரஸிகமணி டி.கே.ஸி, வ.ரா, டி.எஸ். சொக்கலிங்கம், பொ. திரிகூடசுந்தரம், நாடோடி, தி.ஜ.ர. ம.பொ.சி ஆகியோரின் எழுத்தோவியங்கள் நூல்களாக வடிவம் பெற்றன.

தமிழ்ப் பண்ணை எழுத்தாளர்களுக்கும் தேசபக்தர் களுக்கும் நிழல்கொடுத்து கம்பீரமாக நின்றது.

மகாத்மாஜி கடைசியாகச் சென்னைக்கு வந்திருந்த பொழுது ராஜாஜி அவர்கள் அண்ணாமலையை அறிமுகம் செய்து "ஹரிஜன்" பத்திரிகையைத் தமிழில் வெளியிட காந்தி யடிகளே நேரில் இசைவும் வழங்கி தொடங்கியும் வைத்து வாழ்த்தினார்கள்.

திரு.வி.க.மணிவிழாவை, தமிழ்ப்பண்ணை மிகச்சிறப்பாக நடத்திற்று.

தமிழகத்தின் வடஎல்லை, தென் எல்லை ஆகியவற்றை மீட்க நடந்த போராட்டங்களிலும் சின்ன அண்ணாமலை தீவிரமாகப் பங்கேற்றார்.

திரைக் கதை வசனம் எழுதும் ஆற்றலும் அவரிடம் இயற்கையாக வளர்ந்தது, "தங்கமலை இரகசியம்" அவருக்கு ஒரு வெற்றிப்படம். வீரபாண்டியக் கட்டபொம்மன் கப்பலோட்டிய தமிழன் ஆகிய படங்களுக்கு அடித்தளம் அமைத்தவர் சின்ன அண்ணாமலை

கவியரசர் கண்ணதாசனுக்கு முதல் முதலில் பிறந்தநாள் விழா 1978ல் மிகக் கோலாகலமாக நடத்தினார். சுவரொட்டி களில் "அன்று கம்பன்–இன்று கண்ணதாசன்" என்று புரட்சிகர மாக விளம்பரம் செய்தார்- மக்களை வியப்பில் ஆழ்த்தினார்.

## நூல்வெளியீடு

அட்டை போடுவது, நூலுக்குள் படங்கள் அமைப்பது, கவர்ச்சியாக வெளியிடுவது, சுவடி கட்டுதலில் (பைண்டிங்கு) தனிக்கவனம் செலுத்துவது ஆகியவற்றில் சின்ன அண்ணாமலை நிகரற்று விளங்கினார். அவை அவருக்குக் கை வந்த கலை களாக இருந்தன. அந்தக் கலைகளில் சின்ன அண்ணாமலை ஒரு மன்னராக, மேதையாகத் திகழ்ந்தார்.

நூலாசிரியருக்கு "ராயல்டி" கொடுக்கும் வழக்கத்தைத் தமிழ் நூல் வெளியீட்டுத் துறையில் பரப்பியவர் சின்ன அண்ணாமலை.

நூல்கள் வாங்குபவர்களில் பெண்கள் பலர் இருப்பதை உணர்ந்தார். எனவே பெண் வாசகர்களை மிகுதியாக்க, அவர் புல உத்திகளைக் கையாண்டு வெற்றி கண்டார்.

படிக்கும் பழக்கத்தைத் தமிழ் நாட்டுச் சிறுவர்களிடம் ஊக்குவித்தார். தமிழ்ப்பண்ணையின் முன்பாக, ஒரு கரும்பலகையில் தொடர் கதை எழுதிவைப்பார், 'தொடர்ச்சி...நாளை' என்று ஒவ்வொரு நாளும் தொடர்ந்து அந்தக் கதையை எழுதி வந்தார். இவற்றை நாள் தோறும் படித்துவந்த இராமகிருஷ்ணர் உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் பலாப் பழத்தை மொய்க்கும் ஈக்கள் போல, தமிழ்ப் பண்ணையில் நிரம்பியிருந்தனர்.

நூல்களிலுள்ள பொன் மொழிகளை அட்டையில் எழுதிப் போட்டு அந்த நூல்களுக்கு விளம்பரம் செய்தார்.

விஷயத்தை நிறைய எழுதிக் குவித்து எழுத்தாளர்கள் கையெழுத்துப் பட்டியைக் கொண்டுவருவார்கள்.

சின்ன அண்ணாமலை அவற்றைப் படித்துப் பார்ப்பார் அலுப்புத் தட்டுகிற இடத்தில் சில பகுதிகளை அடித்து விடுவார். சுவையான சிறு பகுதிகளைத் தாமே எழுதி, இடையில் புகுத்துவார். நூலாசிரியர் சொல்ல விட்டுப்போனவற்றையும் எழுதிச் சேர்த்து விடுவார். இந்த உத்திகளை, கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்களிடம் கற்றுக்கொண்டார். கல்கி தம் வார இதழில் செய்ததை, நூல் பதிப்புத் துறையில் சின்ன அண்ணாமலை பின்பற்றினார்.

நாமக்கல்லாரின் சங்கொலி

டிகேசி எழுதிய இலக்கிய இன்பம்

டிகேசி பதிப்பித்த முத்தொள்ளாயிரம்

ஆகிய நூல்களை உள்பக்கங்களில் அழகான படங்களுடன் அச்சிட்டார்.

சின்ன அண்ணாமலையின் மேடைப்பேச்சில் மூதறிஞர் இராஜாஜி மயங்கிவிடுவார். சொக்கிப் போவார். மூதறிஞருடைய கட்டுரைகளையெல்லாம் கவனமாகத் தேடிப்பிடித்து, வரிசைப்படுத்தி, அழகாகத் தொகுத்து, மாலையாகக் கோத்து கவர்ச்சியான தலைப்புக் கொடுத்து நூலாக்கி அவருடைய பாராட்டைப் பெற்றார். அதனால், மேன்மேலும் எழுத வேண்டும் என்ற துடிப்பு இராஜாஜிக்கு ஏற்பட்டது.

கல்கி எழுதிய முதல் நூலை அ. லெ. நடராசனைக் கொண்டு புதுமைப் பதிப்பகத்தில் வெளியிடச் செய்தவர் சி.அ.

எழுத்தாளர் சாவியுடன் சேர்ந்து 'வெள்ளிமணி' இதழை இவர் நடத்திய விவரம் இந்நூலில் பிறிதோரிடத்தில் இடம் பெற்றுள்ளது. மாலதி, தமிழ் ஹரிஜன், சங்கப்பலகை ஆகிய இதழ்களையும் நடத்தினார்.

## புதிய எழுத்தாளர்

ஆங்கிலத்தில் மட்டுமே எழுதிவந்த பலரைப் பல முறை சந்தித்து, அவர்களுடன் நகைச் சுவையாகப் பேசி, வற்புறுத்திக் கூறி அவர்களைத் தமிழில் எழுதவைத்தவர் சி. அ.

இவ்வகையில் குறிப்பிடத்தக்க சிலர்: நகைச்சுவை எழுத்தாளர் எஸ். வி. வி. தாகூர்ப் பேராசிரியரும் வழக்கறிஞரு மான கி. சந்திரசேகரன் திருப்புகழ்மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயர்.

இன்று 'அமுத சுரபி' திங்கள் இதழின் ஆசிரியராகவும் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராகவும் பாரெல்லாம் புகழ் பெற்றுள்ள டாக்டர் விக்கிரமன், ஸ்பென்சர் அங்காடியில் எழுத்தராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். அன்றைய வேம்புவை, முதலில் வெள்ளி மணி இதழிலும் பின்னர் தமிழ்ப் பண்ணை வெளியீட்டு நிறுவனத்திலும் பணிபுரிய அழைத்து இலக்கிய உலகுக்கு இவரை இழுத்தவர் சின்ன அண்ணாமலை.

## புதிய பதிப்பாளர்

புதிய எழுத்தாளரைத் தந்தது போல, பதிப்பாளரையும் புதிது புதிதாகத் தந்தவர் அண்ணாமலை. இவருடைய உறவு நட்பு,தொடர்பு அல்லது வழிகாட்டலால் பதிப்பாளரானவர் பலர். எடுத்துக் காட்டாகச் சிலரைக் கூறுவோம். இன்ப நிலையம் சோம. சுவாமிநாதன் அருணோதயம் அருணன் வானதி திருநாவுக்கரசு காரைக்குடி செல்வி பதிப்பகம்,சிவ ராமன்.

தமிழ்ப் பண்ணை நூல் நிலையம் ஒன்றையும் சின்ன அண்ணாமலை நடத்தி வந்தார்.

## விற்பனைக்கலை

தமிழ்ப் பண்ணையில் நூல்களை அடுக்கி வைப்பதில் கூட சின்ன அண்ணாமலை புதிய முறைகளைக் கடைப்பிடித்தார்.

காந்தியடிகளின் சிலையை வைத்து அதைச் சுற்றிலும் நூல்களைக் காட்சியாக வைத்திருந்தார். கோவில்களில் வழிபாடு செய்வதுபோல, வாசகர்கள் தமிழ்ப் பண்ணை வெளியீடுகளை வலமாகப் பிரகாரம் சுற்றி வரச் செய்தார்.

புகழ் வாய்ந்த எழுத்தாளர்களின் படங்களைச் சேகரித்து அவற்றைக் கண்ணாடி போட்டுவைத்து அவர்கள் தோற்றங்களையும் பொது மக்களுக்கு அறிமுகப்படுத்தினார்.

'இன்றைய பிரச்சினை'

இந்தத் தலைப்பில் சின்ன அண்ணாமலை, மாதம் ஒரு நூல் அச்சிட்டார்.

1) பூட்டை உடையுங்கள் (1942)

இந்த நூலை வெளியிட்டதற்காக சின்ன அண்ணாமலை 6 மாதம் சிறைத் தண்டனை அனுபவித்தார்.

2) ஜப்பானைப் பார்!

3) வங்கப் பஞ்சம்

இந்த நூலை எழுதியதற்காக சாவிக்கும் வெளியிட்டதற்காகச் சின்ன அண்ணாமலைக்கும் தண்டனை வழங்கப் பெற்றது.

இன்றைய பிரச்சினை ஒவ்வொன்றும் ஐயாயிரம் முதல் ஆறாயிரம் படிகள் வரை விற்பனையாயின. விலை ஒரு ரூபாய்

பிற நூல்கள்

'தமிழ்ப் பெரியவர்கள்' என்ற ஒரு நூலையும் சின்ன அண்ணாமலை வெளியிட்டார். இதில் சிலரைப் பற்றி எதிர் எதிர்ப் பக்கங்களில் மாறுபட்ட கருத்துக்கள் இடம் பெற்றன. இது சர்ச்சைக்குரிய நூலாக, மக்களைக் கவர்ந்தது.

பல்துறை அறிஞர் பெ. திரிகூடசுந்தரம் பிள்ளை அவர்களின் நூல்களை முதலில் வெளியிட்டவர் இவரே. சின்ன அண்ணாமலை வெளியிட்ட நூல்களின் எண்ணிக்கை 300.

பிற சிறப்புக்கள்

1940முதல் நாமக்கல் கவிஞருடன் இவர் பழகினார். பெங்களூரிலும் சென்னையிலும் அவருக்குப் பொன்னாடை போர்த்தினார். அதற்கு முன்னர், காஷ்மீரச் சால்வையைப்

போர்த்தி, பொன்னாடை என்று விளம்பரம் செய்துவந்தனர் உண்மையான ஒரு பொன்னாடையைத் தமிழ்நாட்டில் போர்த்தியவர் திரு. சின்ன அண்ணாமலை தான்.

பாரதியார் சங்கத்தைத் தொடங்கியவர்களுள் இவர் ஒருவர்.

நூல்கள்

கல்கி இதழில் இவர் இரு நூறுக்கும் மேற்பட்ட கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

இவர் எழுதிய நூல்கள்—கண்டறியாதன கண்டேன், சீனத்துச் சிங்காரி.

சி. அ. வுக்குப்பிறகு

சின்ன அண்ணாமலையின் சுவீகாரத் தந்தையின் பாட்டனார், கோவிலூர் மடத்தில் 1849 முதல் 1865 வரையில் அருளாட்சி செய்தவர்; மூன்றாவது மடாதிபதியான சிதம்பர தேசிகர் என்ற கருணாநிதி சுவாமிகள் (1812—1865). இவர் நினைவாகச் சின்ன அண்ணாமலை தம் மூத்த மகனுக்கு கருணாநிதி என்று பெயரிட்டார்.

தமிழ்ப் பண்ணையை கருணாநிதியும், கல்கி அவர்கள் தொடங்கி வைத்த சங்கப் பலகையை இரண்டாவது மகன் இராமையாவும் நடத்தி வருகின்றனர். மக்கள் இருவரும் தந்தை வழியில் நல்ல நூல்களை வெளியிட்டு வருகின்றனர்.

முல்லை முத்தையா

இவருடைய இயற் பெயர் முத்தையா. முல்லை முத்தையா என்பது பாரதிதாசன் வைத்த பெயர். இவர் 7-6-1920 இல் தேவகோட்டையில் பிறந்தவர். பர்மாவுக்குச் சென்று, நடைபாதையில் இந்தியாவுக்கு வந்து 1942-இல் 'சக்தி' ஆசிரியர் குழுவில் ஒருவராகச் சேர்ந்து தமிழ் இலக்கிய உலகில் புகுந்தவர். முல்லை, நகரசபை இதழ்களை நடத்தியவர். வாரச் செய்தியுடனும் தொடர்பு கொண்டிருந்தவர்.

கமலா பிரசுராலயம், முல்லைப் பதிப்பகம், தமிழகம் ஆகிய நிறுவனங்களின் வாயிலாக தமிழ் நூல் வெளியீட்டுத் துறைக்குப் பெருமை சேர்த்தவர். பலருக்கு வழிகாட்டியவர் முன்னோடி. இவர் ஆற்றிய பணிகள் வருமாறு:

இராஜாஜியின் நூல்கள் வெளியிடப்படாத காலம்-1943 'Prohibition' என ஆங்கிலத்திலும், ''கள் ஒழிக'' என தமிழிலும் பல விளக்கப் படங்களுடன் வெளியிட்டார்.

'தினமணி' ஆசிரியர் டி. எஸ். சொக்கலிங்கம் 1943-இல் நிர்வாகத்தினருடன் வேறுபாடு காரணமாக விலக நேர்ந்ததை விவரித்து அவரை எழுதச் செய்து ''எனது ராஜினாமா'' என்ற பெயரில் வெளியிட்டார்.

துப்பறியும் கதாசிரியர் சிரஞ்சீவி எழுதிய முதல் நூல் ''மின்னும் நக்ஷத்திரம்'' 1943-ல் அதை வெளியிட்டார்.

சோவியத் ருஷ்யாவைப் பற்றி தமிழ்நாட்டில் அதிகமாகத் தெரியாத 1943-ல் 'தினமணி' துணை ஆசிரியர் ஏ. ஜி. வெங்கடாச்சாரியைக் கொண்டு எழுதச்செய்து ''சோவியத் யூனியன்'' என்ற நூலை வெளியிட்டார்.

பாவேந்தர் நூல்களை அழகுற 1944-ல் வெளியிட்டதை அனைவரும் அறிவர். ''புரட்சிக்கவிஞர்'' என்ற தலைப்பில், பாவேந்தரைப்பற்றி பலரிடம் கட்டுரை, கவிதை, கருத்துரை கேட்டுப் பெற்று 1946-ல் தொகுத்து வெளியிட்டார்.

பாவேந்தரைப்பற்றியும், தமிழில் தொகுப்பு நூலும் அதுவே முதல் நூல்! கருத்து மாறுபாடு உள்ளவர்களும் அதில் எழுதியிருந்தனர். மேற்படி நூலின் நான்காம் பதிப்பு இப்பொழுது சை. சி. நூ. கழகத்தில் வெளிவந்துள்ளது.

அறிஞர் அண்ணாவின் 'தமிழின் மறுமலர்ச்சி' என்ற கட்டுரையோடு, ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார், சர். ஆர் கே. சண்முகம் செட்டியார், இராஜாஜி, சர். சி.பி. இராமசாமி ஐயர், பாரதிதாசன் ஆகியோருடைய கருத்துக்களைத் தொகுத்து 1946ல் ''எது இசை?" என்ற பெயரில் வெளியிட்டார்.

பேராசிரியர் க. அன்பழகனின் முதல் நூல் ''கலையும் வாழ்வும்'' 1946-ல் அதை வெளியிட்டார்.

பாவேந்தர் நூல்களை 1944-ல் முல்லைப் பதிப்பகம் வெளியிட்டது. 1946-ல் மேற்படி நூல்களின் 'விற்பனை உரிமை' பாரிநிலையத்துக்கு அளிக்கப்பட்டது. பாரி நிலையத்தின் தொடக்கம் அதுவே! ''விற்பனை உரிமை'' என்ற சொல்லையும், முறையையும் ஏற்படுத்தியவர் இவரே!

கதர் நிபுணர் கோவை அய்யாமுத்துவின் முதல் நூல் "தேய்ந்தலாடம்" என்னும் கவிதைத்தொகுதி. 1947-ல் அதை வெளியிட்டார்.

இஸ்லாமிய இலக்கிய நூல்கள் பலவற்றை எழுதியவர் *R. P. M.* கனி. அவருடைய முதல் நூல் "அல்லாமா இகபால்" அதை வெளியிட்டு, உதவி புரிந்தார்.

பஞ்சாயத்து நிர்வாகம் பற்றி தனித்தனியாக ஒன்பது நூல்களை எழுதி 1953-ல் முதன்முதலில் வெளியிட்டார். அரசு பரிந்துரையும், அமைச்சர்கள் பாராட்டும் பெற்றன. இம்முயற்சியில் இந்த அளவு வேறு எவருமே ஈடுபட்டதில்லை.

பிரபல வழக்கறிஞர் வி. பி. இராமனின் தந்தை ஏ. வி. இராமனின் "தமிழை வளர்ப்பது எப்படி?" என்ற நூலை 1957ல் வெளியிட்டார்.

மதுரைநகராட்சி ஆணையர் காப்டன் ஞானஒளி எழுதிய கட்டுரைகளைத் தொகுத்து "நகர சபையும் பொதுமக்களும்" என்ற பெயரில் வெளியிட்டார். நகராட்சி பற்றிய முதல் நூல் அது.

உலகப் புகழ் பெற்ற அன்னாகரினினா, அம்மா, மேடம்பவாரி, நாநா, குற்றமும் தண்டனை, முதலான பத்து நூல்களை தாமே சுருக்கி, புது முறையில் வெளியிட்டார்.

முதல் முயற்சியாக - புது முயற்சியாக "பாரதியார் பாமணிகள்" என்ற நூலை பேராசிரியர் வ.ரா.வின் சிறப்புரையோடு வெளியிட்டார்.

"இராஜாஜி பொன்மொழிகள்"- "உவமைகளை" தொகுத்து வைத்து அதற்கு இராஜாஜியிடம் அனுமதி கேட்டார். "அதைப் பெற்று, நூலாக வெளியிடும்படி", சின்ன அண்ணாமலைக்கு இராஜாஜி கட்டளையிட்டார். அவரும்அதை வெளியிட்டார்.

'விக்கிரமாதித்தன்கதை' பழங்காலநடையில்அமைந்தது. அதை முதன் முதலில் திருத்தி எழுதி 1957-ல் மலிவுப் பதிப்பாக வெளியிட்டார். இன்றும் வானதியின் மூலம் பலபதிப்புகள் வந்து கொண்டிருக்கின்றன.

"பாரதியார் கதைகள்", பாரதியார் தமிழாக்கிய "பகவத்கீதை", "காதம்பரி", "1001 இரவுகள்", ஆகியவற்றை மலிவுப் பதிப்புகளாக வெளியிட்டார்.

ஆனந்தவிகடனின் ஸ்ரீஹரி எழுதிய "வீட்டு வைத்தியம்" என்ற கட்டுரைகளைத் தொகுத்து மலிவுப் பதிப்பாக வெளியிட்டார்.

"ஷேக்ஸ்பியர் கதைகள்", "பாலர் கதைக் களஞ்சியம்", "டால்ஸ்டாய் கதைகள்", "நீதி நூல்கள்", "காம சூத்திரம்" முதலானவற்றை மலிவுப் பதிப்புகளாக ஆயிரக்கணக்கான பிரதிகள் வெளியிட்டார்.

பி. ஸ்ரீயின் மனோன்மணியம் கட்டுரைகளுடன் மனோன்மணியம் மூலத்தையும் சேர்த்து, மலிவுப்பதிப்பாக பலபதிப்புகள் வெளியிட்டார்.

"*Law for Layman*" என்னும் ஆங்கிலநூலை(இப்பொழுது சட்டப்பேரவைத் தலைவர்) க. இராஜாராம் *B.A.* தமிழாக்கித் தரச் செய்து, "பொதுமக்களும் சட்டங்களும்" என்ற பெயரில் வெளியிட்டார்.

1 முதல் 5 வகுப்பு வரையிலுள்ள பாடத்திட்ட அட்டவணையை "புதிய பாடத்திட்டம்" என்ற பெயரில் இருபதினாயிரம் பிரதிகள் வெளியிட்டார்.

இப்பொழுது அமெரிக்காவில் புகழுடன் வாழும் டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தியை தூண்டி எழுதச்செய்து 1961-ல் அவருடைய நூல்களை வெளியிட்டார்.

அவர் குறிப்பிடுகிறார்,

"அன்பினால், ஆர்வத்தினால், தாம் எழுதிய சுவை மிகு கடிதங்களால், என்னை ஊக்கி, இத்துறையில் பல சிறு நூல்களை எழுதத்தூண்டியவர் திரு. முல்லை முத்தையா அவர்களுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்."

அறிஞர் பெருமக்களின் கட்டுரை, கருத்துரைகளைத் தொகுத்து "பாரதியார் பெருமை" என்ற நூலை 1953-ல் வெளியிட்டார்.

முருகனைப் பற்றியபாடல்கள் அனைத்தையும் சேகரித்து. தொகுத்து, ''முருகன் அருள் செல்வம்'' என்ற பெயரில் 600பக்க அளவில் வெளியிட்டார். மேற்படி நூலை, பழநி அருள்மிகு தண்டாயுதபாணி திருக்கோயிலார் இரண்டாம் பதிப்பாக இப் பொழுது வெளியிட ஏற்பாடு செய்துவருகின்றனர்.

வழக்கறிஞர் நடராஜனைத் தூண்டி முதல் முயற்சியாக 1970ல் *(I. P. C)* 'இந்தியக் குற்ற இயல் சட்டத்தை' தமிழில் எழுதச் செய்து வெளியிட்டார்.

சிறுவர் - சிறுமியர்க்கான ''ஆங்கிலம்-தமிழ் அகராதி'' பொது அறிவுக்களஞ்சியம்'' படங்களுடன் புது முயற்சியாக முதல் முறையாக 1972ல் தாமே தொகுத்து வெளியிட்டார்,

டாக்டர் *U* இராமராவ் *M, B, B.S, D. C. H.* அவர்களைத் தூண்டி ஆங்கிலத்தில் 'நீரிழிவு', 'இரத்த அழுத்தம்', 'இதயத் துடிப்பு', 'குழந்தையும் தாயும்' ஆகிய நூல்களை எழுதச் செய்து வெளியிட ஏற்பாடு செய்தார்.

''தமிழ்ச்சான்றோர் கடிதங்கள்'', ''கொஞ்சமோ நினைவு வெள்ளம்'' ஆகிய இரு நூல்களை பெரிய அளவில் தொகுத்துக் கொண்டிருக்கிறார்.

முடிவுரை

இம்மூவரைப் போலச் செட்டிநாட்டுப் பதிப்பாளர் பலரைப்பற்றி விவரங்கள் தொகுக்க இயலும்.

பதிப்புத்துறைக்கு வந்தவர்கள் செல்வக் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் அல்லர். மொழிப்பற்றால், தொண்டாக நினைத்து வந்தவரே பலர். மனைவியின் நகையை விற்றுப்பதிப் பாளராகும் அளவுக்கு உந்தப்பட்டவர்களும் உள்ளனர்.

கொட்டிக் கிடக்கிற செங்கல்லும் சாந்தும் கட்டிடமாக வடிவம் பெற்றால்தான் அவற்றுக்கும் பயனும் பெருமையும் உண்டு.

இவ்வாறே எழுத்தாளர்களின் படைப்புக்கள் எவ்வளவு சிறப்பாக இருப்பினும், நூல் உருவம் பெறாவிட்டால் அவை வீணாகிவிடும்.

நூல் வடிவம் கொடுத்து உதவிய பதிப்பாளர்களின் பட்டியலைப் பிற்சேர்க்கையில் தருவோம்.

# 30 இதழ்கள்

இந்திய மொழிகள் பலவற்றிலும் பார்க்க, தமிழ் மொழியில் இதழ்களின் வளர்ச்சியும் செல்வாக்கும் மிகுதியாக இருப்பது கண்கூடு. இந்த ஏற்றத்திற்கு, செட்டிநாடு துணை புரிந்திருக்கிறது.

நாள் இதழ், வார இதழ், ஏனைய பருவ இதழ்கள் என்று எந்த வகையிலிருந்து தமிழ் இதழ்களின் வரலாற்றை ஆராய்ந்தாலும் புள்ளி விவரக் கணக்கை எடுத்தாலும் செட்டிநாட்டின் பங்கு கணிசமானது என்பது தெள்ளத் தெளியத் தெரிய வரும்.

## நாள் இதழ்கள்

தமிழில் தோன்றிய முதல் நாளிதழ் சுதேசமித்திரன், இந்த இதழுக்கு ஊக்கமும் ஆக்கமும் தந்தவர்கள் பங்குதாரர்களாகச் சேர்ந்த செட்டி நாட்டு அன்பர்கள். பங்குப் பணம் கொடுக்க விரும்பாத 500 பேர் ஆயுள் சந்தாதார் ஆயினர். கொத்தமங்கலம் சி. அ. அரு. காசிநாதன் செட்டியார், பல்லாண்டுகள் சுதேசமித்திரன் லிமிடெட்டில் இயக்குநராக இருந்து வந்தார்.

### சண்டமாருதம்

மாவட்டத் தலைநகர் தொறும் நாளிதழ் வெளிவருவது இன்றைய நடைமுறை. 50 ஆண்டுகளுக்கு முன் சென்னை மாநகர் தவிர வேறு எந்த நகரிலிருந்தும் நாளிதழை வெளியிட இயலாது என்ற கருத்து முடிந்த முடிபாக நிலவியது. அந்த எண்ணத்தைத் தகர்த்தவர் திரு. சொ. முருகப்பா.

சண்டமாருதம் என்ற பெயரில் ஒரு நாளிதழை, 1932-இல் திருச்சியிலிருந்து வெளியிட்டுச் சாதனை புரிந்தவர் திரு. முருகப்பா.

### தமிழ்நாடு

10-10-1951 முதல் இருபது ஆண்டுகள் இந்த இதழ் மதுரையிலிருந்து வெளிவந்தது.

கலைத்தந்தை ஆலை அரசர் கருமுத்து தியாகராசர் நடத்திய இந்த இதழின் தமிழ்த்தொண்டு, தமிழ்மொழி வரலாற்றில் இடம் பெறத்தக்கது. தமிழ்மொழி, கலை, பண்பாடு பற்றிய செய்திகளும் கட்டுரைகளும் தாங்கி, தூய தமிழில் வெளிவந்தது. தமிழ்நாட்டு மக்கள் இதைப் போற்றி வரவேற்கத் தவறிவிட்டனர். எனினும் 'தமிழ்நாடு' இதழின் தாக்கம், தமிழ் இதழ்களில் காணப் பெறுகிறது.

## பகுத்தறிவு இயக்க ஏடுகள்

'குடியரசு' இதழின் ஆசிரியராக மேலைச்சிவபுரி புலவர் நா. மு. மாணிக்கம் அவர்களும் 'விடுதலை' இதழின் துணை ஆசிரியராக வேந்தன்பட்டிப் புலவர் அறிவழகன் அவர்களும் இருந்திருக்கின்றனர்.

'நம் நாடு' இதழின் வளர்ச்சியில் பெரும்பங்கு கொண்டு இருந்தவர் காரைக்குடி சமதர்மம் இராம சுப்பையா (எம். எல். சி) அவர்கள்.

பாரத தேவி இதழுக்குக் கைகொடுத்தவர் கானாடு காத்தான் ட்ரோஜன் சா. ராம. சித. அண்ணாமலைச் செட்டியார்.

திரு. வி. க. அவர்கள் நடத்திவந்த இதழ்களுக்குச் செட்டி நாட்டன்பர்கள் கொடுத்த பேராதரவைப்பற்றி தமிழ்த் தென்றல் அவர்களே பல நூல்களில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

சுத்தானந்த பாரதியார், வ. ரா., சாமிநாத சர்மா எம். எஸ். சுப்பிரமணிய ஐயர் போன்ற பலரும் நாள் இதழ்கள் நடத்தியபோது, செட்டிநாட்டு அன்பர்கள் உள்நாட்டி லிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் பொருள் அனுப்பி உதவினர்,

## வார இதழ்கள்

1940 வரை ஒருவார இதழினை நடத்துவதற்குப் பெரும் பணம் தேவைப்படவில்லை. ஆயினும் அவற்றை நடத்தியவர்கள் பட்ட பாடு சொல்லுந் தரமன்று. படித்தவர் எண்ணிக்கை குறைவாக இருந்ததால் விலை கொடுத்து வாங்குபவர் அரிதாக

இருந்தனர். விளம்பரங்கள் கொடுப்பாரோ கேட்பாரோ அக்காலத்தில் இலர்.

தாள் விலை, அச்சுக்கூலி,தொழிலாளர் சம்பளம், அஞ்சற் கட்டணம் ஆகியவை மிகவும் குறைவாக இருந்த போதிலும், நாணயத்திற்கு இருந்த பெருமதிப்பாலும் அது ஒரு சிலரிடம் மட்டுமே குவிந்திருந்ததாலும் அந்த அளவு பணத்தைப் புரட்டுவதும் எளிதாக இல்லை.

இதழ்களை நடத்தியவர்களின் குடும்பச் சூழ்நிலையும் இலக்கிய ஆர்வமும் ஒன்றையொன்று தாக்கி, அவர்களை வறுமைக்கு ஆளாக்கின.

## புகழ் பெற்ற சில இதழ்கள்

இந்தப் பின்னணியில் நகரத்தார்களின் ஆதரவாலேயே ஏராளமான இதழ்கள் வெளிவந்தன. முக்கியமான சிலவற்றை மட்டும் குறிப்பிடுவோம்.

நாகப்பட்டினம்— நாகை நீல லோசனி; ஆசிரியர் ஜி. சதாசிவம்பிள்ளை. தமிழ் இலக்கிய ஆராய்ச்சி ஏடு புரவலர்— வள்ளல் தீ. நா. முத்தைய செட்டியார்.

மறைமலையடிகள் நடத்திய ஞானசாரம் இதழ் கடல் கடந்த நாடுகளில் வாழ்ந்த நகரத்தார் ஆதரவைப் பெரிய அளவில் பெற்றுத் திகழ்ந்தது.

மதுரை கந்தசாமிக் கவிராயரை ஆசிரியராகக்கொண்டு வெளியாகும் "வித்யா பாநு" என்ற இதழைக் கோனாபட்டு அரு. ராம. சுப்பிரமணியன் செட்டியார் பல ஆண்டுகள் நடத்தினார்.

பரலி. சு. நெல்லையப்பர் நடத்திய "லோகோபகாரி" புகழ் பெற்ற வார இதழ்: இதனை அறியாதவர் இரார். இந்த இதழுக்குச் செட்டி நாட்டில் எத்தகைய ஆதரவு இருந்தது என்பது. லோகோபகாரியின் பழைய இதழ்களைப் புரட்டிப் பார்த்தால்தெரியும். அமராவதிபுதூர் பிச்சப்பா சுப்பிரமணியம் தேவகோட்டை லெ. பழனியப்ப செட்டியார், சண்முகநாத

புரம் நாகப்ப செட்டியார் ஆகியோர்இந்த இதழின்வளர்ச்சிக்கு புத்துயிரளிக்க, முன் வந்ததைப் பாராட்டி நகரத்தார் 'நன் முயற்சிகள்' என்ற தலைப்பில் ருத்ரோத்காரி ஆடி 18 இதழில் ஆசிரியர் தலைப்புக் கட்டுரை எழுதியிருக்கிறார்.

## நகரத்தார் நடத்திய இதழ்கள்

ஏனையோர் நடத்திய இதழ்களுக்கு ஆதரவு வழங்கி, இதழ் துறையறிவு பெற்ற நகரத்தார்கள் தாங்களே இத்துறையில் நேரடியாக ஈடுபடலாயினர்.

## வைசியமித்திரன்

இவ்வாறு தொடங்கப் பெற்ற முதல் இதழ் வைசிய மித்திரன் என்பது. தேவகோட்டையிருந்து இராமநாதன் செட்டியார் என்பார் இதை 1915-இல் தொடங்கினார். குமரன்இதழ்புகழேணியில் கால்வைத்த பிறகு,வைசியமித்திரன் செல்வாக்கு இழந்தது.

வைசியமித்திரன் இராமநாதன் செட்டியார், மறைமலையடிகளுக்கு ஈழநாட்டுத் தொடர்பு ஏற்படச் செய்தார்.

## ஊழியன்

காரைக்குடியில் அமைந்த தனவைசிய ஊழியர் சங்கத்தார் 8-9-1920 இல் தனவைசிய ஊழியன் என்ற வார இதழை திரு. சொ. முரு. வை ஆசிரியராகக்கொண்டு தொடங்கினர் பதின்மூன்று திங்கள் பணியாற்றிய பிறகு, சொ. முருவுக்குப்பதிலாக, ராய. சொ ஆசிரியரானார்.

சில ஆண்டுகளுக்குப்பின் தனவைசிய ஊழியன், சாதிப் பெயரை இழந்து, ஊழியன் ஆயிற்று. புதிய பெயரில் அதனுடைய கொள்கை விரிவடைந்தது. தேசிய இயக்கத்தின் குரலாயிற்று. ராய சொ, ஊழியனைக் காரைக்குடியிலிருந்து பலஆண்டுகளும் பின்னர்ச்சென்னையிலிருந்தும் வெளியிட்டார்.

பிற்காலத்தில் தமிழ் இதழ் உலகில் முன்னணி வகித்த பலர் 'ஊழியன்' இதழில் உதவி ஆசிரியர்களாக இருந்தனர். வ.ரா., தி ஜ. ர., புதுமைப்பித்தன், கொத்தமங்கலம் சுப்பு......இவ்வாறு பலர்.

ஊழியன் இதழுக்குச் சென்னையில் விளம்பரங்கள் சேகரித்துக் கொடுக்கும் முகவராக (ஆனந்த விகடன்) எஸ். எஸ். வாசன் பணி புரிந்து வந்தார்.

தமிழ் இலக்கியக் கட்டுரைகள் ஊழியனில் அடிக்கடி வெளி வந்தன. கட்டுரைகளின் தலைப்புக்களும் நடையும் உணர்ச்சி ஊட்ட வல்லவையாகவும் படிப்பவர் உள்ளங்களை ஈர்ப்பனவாயும் இருந்தன.

'நல்ல தமிழுக்கு நவசக்தியும் ஊழியனும்' என்று 1930ஆம் ஆண்டில் தமிழறிஞர்கள் கூறிவந்தனர்.

## குமரன்

குமரன் வார இதழைத் தமிழ் மக்களுக்கு அறிமுகப் படுத்த வேண்டுவதில்லை.

"திரு. சொ. முருகப்பா திறமையாக நடத்தி வந்த குமரன் பத்திரிகையில் உதவி ஆசிரியராக வேலை பார்க்கத் தொடங்கினேன். அந்தப் பழக்கம்தான் என் தமிழ் நடை ஒரு திட்டமான உருவம் பெறுவதற்கு உதவியது" என்கிறார் பி.ஸ்ரீ (முருகப்பனார் மணிவிழா மலர் பக்கம் 11)

திரைப்பட இயக்குநராகவும் கதை வசனம் எழுதுபவ ராகவும் இப்போது புகழ் பெற்றிருக்கும் திருவாளர் ப. நீலகண்டனும், குமரனில் பணியாற்றியவரே.

சுப்பிரமணிய பாரதியார், சாமி சிதம்பரனார், பேராசிரியர் ரா. பி. சேதுபிள்ளை, தி. நா. சுப்பிரமணியம் டி. கே. சி., ஆகியோரின் கட்டுரைகளை மிகுதியாக வெளியிட்டு அவர்களைத் தமிழ் கூறும் நல்லுலகுக்கு அறிமுகப்படுத்தியது— இல்லை விளம்பரப்படுத்தியது—குமரனே. குமரன் வெளியிட்ட இசைமலர் பற்றி 'தமிழ் இசை' என்னும் கட்டுரையிலும், குமரனுக்கும் கவிமணிக்கும் உள்ள தொடர்பு பற்றி "செட்டி நாடு ஆதரித்த புலவர்கள்" என்னும் கட்டுரையிலும் குறிப்பிட் டிருக்கிறோம்.

குமரன் இவ்வளவு சிறப்பாக நடை பெற்றதற்குக் காரணம், "குமரன்தான் முருகப்பா, முருகப்பாதான் குமரன்" என்று நினைக்கும்படி ஆசிரியர் தம் இதழுடன் இரண்டறக்

கலந்து விட்டதேயாம். இதன் விளைவாகச் சில சமயங்களில் குமரன் பத்திராதிபர் முருகப்பாவுக்கு என்ற விலாசங்கூட முருகன் பத்திராதிபர் குமரப்பாவுக்கு என்று மாறிவருவதும் உண்டு!

ஈற்றடியைக் கொடுத்து, அதற்கேற்ப வெண்பாப்பாடும் போட்டி ஒன்றைக் குமரன் நடத்திற்று. உணவு விடுதிகளில் இட்டலி போடுவதைத் தடுத்து 1944 இல் அரசியலார் ஆணை பிறப்பித்தபோது "இட்டலிக்கு வந்தது இடர்" என்ற ஈற்றடியுடன் நூற்றுக்கணக்கான சிறந்த வெண்பாக்கள் குமரனில் வெளிவந்தன. பாடல் இயற்றும் ஆற்றலுடையவர் செட்டி நாட்டில் மிகப்பலர் உள்ளனர் என்பது அந்தப் போட்டியின் வாயிலாகத் தெரிந்தது.

குமரன் மாதப்பதிப்பு ஒன்றும் சிலகாலம் வெளிவந்தது. தமிழ்ப் பத்திரிகை உலகில் முதலில் ஆண்டு மலர் வெளியிட்டது குமரனே. சென்னைக்கு வெளியே இருந்து 25 ஆண்டுகள் தொடர்ந்து வெளிவந்த வார இதழும் குமரனே.

## செட்டிநாடு

செட்டிநாட்டு நிகழ்ச்சிகளை வெளியிட, தஞ்சை நகராண்மைக் கழகத் தலைவராக இருந்த காரைக்குடி ஊரினரான (தஞ்சாவூர்) இராமநாதன் செட்டியார் 1910 இல் இதைத் தஞ்சையில் தொடங்கினார். பின்னர், இது காரைக்குடியிலிருந்து திரு. சேஷாத்திரி சர்மாவை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்தது. திரு. சர்மா விலகிக்கொண்ட பிறகு, பாலகவி இராமநாதன் செட்டியாரை ஆசிரியராகக்கொண்டு சில ஆண்டுகள் நடைபெற்றது.

## வாரச்செய்தி

காரைக்குடியிலிருந்து 1952 முதல் 1958 வரை வெளிவந்தது. ஆசிரியர் — திரு. தி. நாராயணன். துணைஆசிரியர் — கவிஞர் சாமி. பழனியப்பன்.

## சக்தி

இது ஒரு மாத இதழாக 1939 முதல் சென்னை அரண்மனைக்காரத் தெருவிலிருந்து வெளிவந்தது. அப்போது இப்பத்திரிகை 1க்கு4 சைசில் அச்சிடப் பெற்றது. 1945- க்குப் பிறகு டிம்மி 1க்கு 8 அளவில் வெளிவந்தது. தொடக்கத்தில் அது

அமெரிக்க டைம் பத்திரிகை போன்று கவர்ச்சியான அமைப்பில் பல வண்ண அட்டையில் அச்சாகி, தமிழில் ஒரு புதிய முயற்சியாக அமைந்தது-இதற்குமுன் இவ்வளவு அழகாக எந்த இதழும் வெளிவரவில்லை. இனி வெளிவரும் என்பதும் சந்தேகமே என்று எண்ணத் தோன்றும்படி சக்தி சிறப்பாக வெளிவந்தது. படங்களை பல வண்ணங்களிலும், கலை அழகுடனும் அடிக்கடியும் வெளியிட்டு தமிழ்ப் பத்திரிகைகளுக்கு முன் மாதிரியாக விளங்கியது சக்திதான். சக்தியை அச்சிடுவதற்காகவே, திரு. வை. கோ ஓர் அழகிய, பெரிய அச்சகத்தை நிறுவினார்.

''சக்தி'' தரமான படங்களை வெளியிட்டது. தரமான தாளில் அச்சிடப்பட்டது அச்சும் எழுத்தின் அமைப்பும் மிகச் சிறந்த முறையில் திகழ்ந்தன, கட்டுரைகளும் தரமாக விவரமாக இருந்தன. கதைகளிலும் எவ்விதமான விரசமும் இல்லை. எப்படிப் போட்டால் விற்பனையாகும் என்பதைப் பற்றிக் கவலைப்படாமல் நாட்டு நலமும் வாசகர் நலமும் மட்டுமே கருத்தில்கொண்டு சக்தி வெளியிடப்பட்டது. எனவே எந்தவிதமான தயவு தாட்சண்யமும் இல்லாமல் கட்டுரை கதைகள் ஆகியவற்றை தரத்தின் அடிப்படையில் யார் எழுதினாலும் சக்தி வெளியிட்டது.

எழுதுபவருக்குச் சன்மானம் கொடுக்க சக்திக்கு சக்தி இல்லை என்பது அன்றைய எழுத்தாளர் எல்லோருக்கும் தெரியும். சக்தியில் எழுதுவது தாங்கள் பெற்ற பேறு என்று ஒவ்வொரு எழுத்தாளரும் எழுதினாரே தவிர வருமானத்தை எதிர்பார்த்து எழுதவில்லை. மேலும் அக்காலத்தில் எழுதுவது ஒரு தொழிலாக உருவாகவில்லை.

இப்போது வெளிவரும் மஞ்சரி போன்ற டைஜஸ்டு பத்திரிகைகளுக்கு வழிகாட்டியாக விளங்கியது சக்தி பத்திரிகை தான். மஞ்சரி மாத இதழில் ஆசிரியராகப் பல்லாண்டுகள் பணியாற்றிய தி. ஜ.ர. அவர்கள் சக்திஆசிரியராக ஐந்தாண்டுக் காலம் அனுபவம் பெற்றவர்களே. இவ்வாறே மலேசியாவில் புகழ் பெற்ற எழுத்தாளராகவும் சமுதாயத் தலைவராகவும் விளங்கிய காலஞ்சென்ற திரு. சுப. நாராயணன் அவர்களும் சக்தி ஆசிரியராக இருந்தவரே ஆவார்.

சக்தி வாயிலாகப் பல்லாயிரக்கணக்கான தமிழர்கள் தங்களுடைய பொது அறிவை வளர்த்துக் கொண்டார்கள். இலக்கியம், கல்வெட்டு, அரசியல், பூகோளம், அறிவியல்

திரைப்படம் என்னும் பல பொருள்களைப் பற்றிய கட்டுரைகளும் சக்தியில் வெளிவந்தன. உலகநாடுகளையும் பிறமொழி இலக்கியங்களையும் தமிழர்களுக்கு அறிமுகப்படுத்தியது சக்தி பத்திரிகைதான் என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லலாம்.

சக்தி பத்திரிகை அலுவலகம் எப்போதும் ஒரு சங்கப் பலகையாக இருந்தது. அல்லும் பகலும் எழுத்தாளர் பலர் அங்கு கூடி அனைத்துப் பொருள்களைப் பற்றியும் அப்பட்டமாகத் திறனாய்வு செய்து வந்தார்கள். அவர்களுடைய சர்ச்சையில் அகப்படாத பொருள் ஒன்றுமே இல்லை. யாருடைய விருப்பு, வெறுப்பைப் பற்றிக் கவலைப்படாமல் அவர்கள் அலசி ஆராய்ந்து வந்தார்கள்.

இடையிடையே சக்தியில் எழுதி வந்த எழுத்தாளரில் தென்காசி சண்முகசுந்தரம் ...கல்வெட்டு அறிஞர் தி. நா. சுப்பிரமணியன், பிற்காலத்தில் சாகித்திய அகடமி பரிசு பெற்ற கு. அழகிரிசாமி, சிதம்பர ரகுநாதன் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

ஒவ்வோர் இதழிலும் ஏராளமான குட்டிகதைகளும் இரண்டு அல்லது மூன்று சிறுகதைகளும், ஓரிரு நாடகங்களும் மற்றும் ஏறத்தாழ பதினேழு வகையான தொகுப்புகளும் இருந்தன.

ஒவ்வொரு கட்டுரை அல்லது கதையைப் பற்றியும் தடித்த எழுத்தில் ஐந்தாறு வரிகளில் ஒரு சிறு குறிப்புஇருந்தது. அந்தக்குறிப்பைப்படித்தவுடனே அந்தக் கட்டுரை கதை அல்லது நாடகத்தைப் புறக்கணித்து விடக் கூடாது என்ற கருத்து வாசகர்களுக்கு ஏற்பட்டு விடும்.

இதழ் முழுவதையும் படித்தபிறகு இது பேணி வைத்துப் பாதுகாக்கப் படவேண்டியது என்ற முடிவும் ஒவ்வொரு வாசகருக்கும் உண்டாகும்.

சக்தியின் நோக்கம் உலகக் கண்ணோட்டமும் அரசியல் விழிப்பும் ஏற்படச் செய்வதுதான். எனவே கையாண்ட சொற்களுக்கு சக்திமுக்கியத்துவம்கொடுக்கவில்லை.குறிப்பிட்ட கருத்துக்கள் படிப்பவர்களுக்கு உடனே புரிய வேண்டும் என்பது தான் அவர்களுடைய நோக்கமாக இருந்தது. ஆங்கிலச் சஞ்சிகளில் வெளிவந்த கட்டுரைகளைச் சுருக்கமாக வெளியிடும்

பழக்கத்தையும் சக்தி கடைபிடித்தது. 1949-ஆம் ஆண்டு நவம்பர் மாத சக்தியின் பொருளடக்கத்தை இப்போது பார்ப்போம்.

ஆசிரியர் குறிப்பு

| | |
|---|---|
| மாரியம்மன் ... ... ... ... ... ... | கலைவாணன் |
| ஏரி, குளங்கள் ... ... ... ... ... | ஓமந்தூர் பி. ராமசாமி ரெட்டியார். |
| தேவையற்ற விவரங்கள் ... | ஜி. சி. |
| குட்டிக்கதைகள் ... ... ... ... | ஜி. சி. |
| நியூயார்க் ... ... ... ... ... ... ... | சோமலெ |
| பெண்மலடும் காரணங்களும் .. | ரகுநாதன் |
| கலிங்கத்துப் பரணி ... ... ... | ல. சண்முகசுந்தரம் |
| தேவரடியாள் ... ... ... ... ... | தி. நா. சுப்பிரமணியன் |
| யுத்தத்தின் காரணங்கள் ... ... | ஜவஹர்லால் நேரு எழுதியது. |
| புகழ் ஏணி ... ... ... ... ... ... | "மாயா" |
| ஆயிரம் நாள் போதை ...... - | ஸௌஷஞ்ச்சகி |
| சமாதனப் பாதையில் ... ... .... | தாமஸ் மாண் |
| புகையிலையும் இலக்கியமும் ... | கு. அ. |
| காந்தி மகான் கதை ... ... ... | கொத்தமங்கலம் சுப்பு |
| குடியரசு ஸ்தாபிதம் ......... | மா. சே.துங். எழுதியது |
| இந்தோ சீனா ... ... ... ... ... ... | மா. சே துங் எழுதியது |
| லியோ டால்ஸ்டாய் ... ... ... | மாக்சிம்கார்க்கி எழுதியது |
| எக்ஸ்-ரே ... ... .... ... ... .... ... | ஜே. பி. எஸ். ஹால்டேன் |
| டைபாய்டு ... ... ... ... ... ... | எம். காவண்டிஷ் |
| புத்தக உலகம்... ... ... ... ... ... | கு. அ. |

மங்கை

அடுத்தபடியாக நாம் குறிப்பிட விரும்புவது மங்கை என்னும் மாத இதழ். தமிழில் பெண்களுக்கு என்று தனியாக வெளியிடப் பெற்ற முதல் இதழ்இதுவே. இன்று பெண்களுக்காக தமிழில் ஏராளமான சிறந்த இதழ்கள் வெளிவருகின்றன. அவற்றுள் சில இதழ்கள் பிறமொழிகளில் வெளிவரும் இத்தகைய இதழ்களுடன் இணைந்தவை.

இவ்வகை இதழ்களுக்கெல்லாம் முன்னோடியாக இருந்தது மங்கை. மங்கை வெளிவந்த போது, புதிய இதழ்கள் அச்சிடுவதற்கு தடையிருந்தது. எனவே மாதம் ஒரு புத்தகம் என்ற பெயரில் திரு. வை. கோவிந்தன் இதை வெளியிட்டார். சக்தியைப் போலவே மங்கையும் சிறந்த முறையில் தரமாக வெளிவந்தது. பெண்களுக்குப் பயன்படும் கதைகளும் கட்டுரைகளும் புகழ் பெற்ற பெண்களின் வரலாறும் உடை, தையல், சமையல் பற்றிய குறிப்புகளும் அடங்கியிருந்தன. 25,000 படிகள் வரை இது விற்பனை ஆயிற்று. அந்தக் காலத்தில் 25000 என்பது மிகப் பெரிய விற்பனை.

அணில்

இனி அணில் என்ற பத்திரிகையை குறிப்பிட வேண்டும். திரு. வை. கோவிந்தனுக்கு குழந்தை இலக்கியத்தில் மிக்க ஆர்வம் இருந்தது. சக்தி காரியாலயம் மூலமாக அவர் 30 க்கும் மேற்பட்ட சிறுநூல்களை குழந்தைகளுக்காக வெளியிட்டார். குழந்தை எழுத்தாளர்களை ஊக்குவித்தார்.

இவர் பிறந்த இராயவரம் என்ற ஊரில் தான் தமிழில் குழந்தைகளுக்கான இதழ்கள் முதல் தடவையாக வெளிவந்தன. பாப்பாமலர், பாலர் மலர், டமாரம், சங்கு என்ற இதழ்களிலும் இவர் தம்பி இராம. தியாகராசன் வெளியிட்ட பாப்பா என்னும் இதழிலும் மங்களம் என்ற புனை பெயரில் திரு. வை. கோவிந்தன் எழுதினார். இறுதியாக இவரே 1944 ஆம் ஆண்டில் அணில் என்ற பெயரில் மாதம் இருமுறை பத்திரிகையாக ஆரம்பித்தார். பின்னர் இதை வார இதழ் ஆக்கினார். இதழின் அடக்கச் செலவு மிகுதியான போது விலையைக் கூட்டாமல் வண்ண அட்டையை நீக்கினார்.

சிறுகதைகளும் வேடிக்கைப் படங்களும் கொண்ட இதழாக இருந்த போதிலும் குழந்தைகளுக்கான இந்த இதழை பெரியோர்களும் விரும்பிப் படித்தனர்.

இந்த இதழ் 20,000 படிகள் வரை விற்பனையாகிற்று.

கதைக் கடல்

கதைக் கடல் என்ற இதழை இப்போது குறிப்பிடுவோம். இதுவும் அரசாங்க சட்டத்தை அனுசரித்து மாதம் ஒரு புத்தகம்

என்ற பெயரில் சக்தி திரு. வை. கோவிந்தன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு திரு. தி. நா. சுப்பிரமணியம் அவர்கள் பொறுப்பில் வெளிவந்தது. ஹிந்தி, மராத்தி, வங்காளி மற்றும் ஐரோப்பிய மொழிகளிலிருந்து மொழி பெயர்க்கப் பெற்ற கதைகள் கதைக் கடலில் வெளி வந்தன. தமிழிலேயே எழுதப் பெற்ற மூலக் கதைகளுக்கும் கதைக் கடல் ஆதரவு கொடுத்தது.

காந்தி வழி

காந்தியடிகளின் கருத்துக்களை, குறிப்பாக அவருடைய நிர்மாணத் திட்டம், கொள்கைகள் பற்றிய விளக்கங்களைப் பரப்புவதற்காக காந்தி வழி என்ற இதழை வை. கோ. சில ஆண்டுகள் நடத்தினார்.

தென்றல்

இது 1954-முதல் சில ஆண்டுகள் வெளிவந்தது. கவிஞர் கண்ணதாசன்அவர்களை ஆசிரியராகக் கொண்டது. வெண்பாப் போட்டிகள் நடத்தி, இளைஞர் உலகில் ஒரு கவிஞர் பரம்பரையை உண்டாக்கியிருப்பது தென்றலின் ஆக்க வேலை எனலாம். நாடகம், நாவல் ஆகிய துறைகளிலும், ஆற்றல்பெற்ற இளைஞர்களை இவ்விதழ் தமிழகத்திற்கு அறிமுகம் செய்து வைத்திருக்கிறது. இலக்கியத் துறையில் புரட்சிகரமான விமர் சனங்கள் செய்து இந்தஇதழ் வாலிபர் உள்ளங்களைக் கவர்ந்தது.

பொருள்

மேயர்ஆர்.இராமநாதன்செட்டியார் போன்றஅன்பர்பல ருடையஆதரவில் இந்தச் சிறந்தஇதழை இரா. பத்மனாபராஜீ அவர்கள் 1959 முதல் 1963வரை வெளியிட்டு வந்தார்.

பொன்னி

ஆசிரியர் முருகு சுப்பிரமணியன். தொடங்கியோர்:முருகு சுப்பிரமணியனும் அரு. பெரியண்ணனும்.

இது 1947-இல் புதுக்கோட்டையில் மாத இதழாகத் தொடங்கி, பின்னர் மாதம் இருமுறையாக சென்னையிலிருந்து வெளிவந்தது. புதிய எழுத்தாளர் பலரைத் தமிழகத்துக்கும் தந்திருப்பது 'பொன்னி'.

கவிதை எது? என்பது பற்றியும் தமிழ் அன்பர்களிடையே ஒரு விழிப்புணர்ச்சியை உண்டாக்கியது பொன்னி. 'எழுத்தாளர் பேட்டி'—களை வெளியிட்டு வழிகாட்டியது பொன்னி. பொன்னி வெளியிட்ட பொங்கல் மலர்கள் தனித்தமிழ் இயக்கம் வேரூன்ற உதவின.

பொன்னி ஆசிரியர் கோனாபட்டு திரு. முருகு சுப்பிரமணியத்தைப் பற்றி மலேசியா என்ற பகுதியில் இந்நூலில் விரிவாகக் குறிப்பிட்டுள்ளோம்.

முருகுவின் நெருங்கிய உறவினர், ஆத்தங்குடி அன்பர் அரு. பெரியண்ணன், இப்போது சில ஆண்டுகளாக 'முரசொலி' நாளிதழின் மேலாளராக உள்ளார். 1950க்குப் பிறகு சென்னை பொன்னி'—யில் நிருவாகியாக இருந்தவர், பாகனேரி அன்பர் மு. நாராயணன் செட்டியார் ஆவார். இவர் புகழ்பெற்ற பெரி. அழ. மு. குடும்பத்தினர் 1957—முதல் சென்னை பிராட்வேயில் பாரி அச்சகம் என்ற பெயரில் சொந்தமாக அச்சகம் நடத்தி வருகிறார். நூல்களைப் பிழையின்றிப் பதிப்பதில் பேரார்வமுடையவர். சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தில் ஓர் இயக்குநராகப் பல்லாண்டுகள் இருந்தவர். புலவர்களிடத்திலும் சான்றோர் பலரிடமும் இனிய தொடர்பு கொண்டிருப்பவர்.

'பொன்னி'—இதழுடன் உறவுகொண்டிருந்த அனைவரும் இலட்சியங்களுக்காக இலட்சங்களை இழந்தவர்கள். இந்தச் சொற்றொடர், இதழ்கள் — நூல்கள் வெளியிடும் முயற்சிகளில் 1955 க்கு முன் முனைந்த செட்டிநாட்டு அன்பர்கள் பலர்க்கும் பொருந்தும்.

**காதல்**

1947 - இல் திருச்சியில் தொடங்கப் பெற்றது. ஆசிரியர் கண்டனூர் அன்பர் அரு. இராமநாதன்.

பிறகு, இவர் சென்னை - கோடம்பாக்கத்தைத் தம் வாழ்க்கைக்கு மையமாக்கிக் கொண்டார்.

வரலாறு, இலக்கியப் பின்னணி உள்ள நாவல்கள் ஆகியவற்றையும் இந்த இதழ் வெளியிட்டது. இதே அலுவலகத்திலிருந்து கலைமணி, மர்மக்கதை என்ற இதழ்களும் வெளிவந்தன.

மாதர் மறுமணம்

மாதர் மறுமண இயக்க ஏடு. அமராவதிபுதூரிலிருந்து வெளிவந்தது. ஆசிரியர் - முருகப்பா மரகதவல்லி.

அனல்

தனித்தமிழ் இலக்கிய இதழாக இதை நடத்தியவர் செவ்வூர் அன்பர் கரு. சிதம்பரம் (பி. 15 - 4 - 1953) இவர் சனதா கட்சிக்காக விழி என்ற பெயரில் ஒரு திங்கள் இதழையும் நடத்தினார். பைந்தமிழ்ப்பாசறை, தமிழர்ச்சனைஇயக்கம்ஆகிய வற்றின் செயலர். உரிமையாளர், வலம்புரி அச்சகம், 25, சுப்பிரமணியபுரம் 1 - ஆவது தெரு, மதுரை - 11

சிவநேசன்

1927இல் பலவான்குடி ராம. கு. ராம. இராமசாமிச் செட்டியார்என்றதிருப்பணிச் செல்வரால்காரைக்குடிசிவநேசர் திருக்கூட்டத்தின்ஆதரவில் பலவான்குடிசிவநேசன் அச்சுக்கூடத் திலிருந்து வெளியிடப் பெற்றது. சைவமும் தமிழும் வளர்த்தது. தமிழ்நாட்டிலுள்ள சைவ சித்தாந்திகள் பலரும் இந்த வார இதழில் கட்டுரைகள் எழுதி வந்தனர். பிறகு இது திங்கள் வெளி யீடாகச் சில காலம் இயங்கி மறைந்தது.

நவமணி

இந்த இதழ் பள்ளத்தூரிலிருந்து 1930இல் வெளிவந்தது. சி. ராம இராமநாதன் செட்டியார் என்பார் இதை ஒரு திங்கள் இதழாக நடத்தினார். குறிக்கோள்கள் : நாட்டுப் பற்றினை வளர்ப்பது, பெண்கள் முன்னேற்றத்துக்குப் பாடுபடுவது.

சுதர்மம்

ஆ. சத்திவேற் பிள்ளை என்ற அறிஞரை ஆசிரியராகக் கொண்டு 1933 - இல் கண்டனூரிலிருந்து கடவுள் கொள்கையை வளர்க்கும் காலணா நாளிதழாக, நகரத்தார் நண்பர் பலரின் கூட்டு முயற்சியாக வெளிவந்தது.

ஜெமினி சினிமா

திரைப்படத்துறை பற்றிய ஏடு. இதை 1981 முதல் ஜெமினி அதிபர் வேந்தன்பட்டி திரு. பழனியப்பன் ராமசாமி சிறப்பாக நடத்தி வருகிறார்.

கண்ணதாசன்

இந்த மாத இதழை நடத்தும் பொறுப்பைச் சில ஆண்டுகள் ஏற்றுப் பெரும் பொருள் இழந்தவர் கீழைச் சிவற்பட்டி அன்பர் R. ராஜேந்திரன் (1924- 1978)

இனமுழக்கம்

இந்த இதழை நடத்தியவர் கல்லல் செல்வர் கண்ணப்பா வள்ளியப்பா.

கவியரசர் கண்ணதாசனின் கவிதை நூலை முதலில் அச்சேற்றியவர் இவரே ஆவார். தமிழ் மணங் கமழ அரசியல் கூட்டங்களில் பேசுபவர்.

நற்பண்பு

தேவகோட்டை திரு எல்லார் (லெ .ராமையா) இந்த இதழை மதுரையிலிருந்து நடத்திவருகிறார். இவர் பல்லாண்டுகள் தமிழ் நாளிதழ்களில் பணியாற்றிப் பயிற்சி பெற்றவர். சோமு புத்தக நிலையத்தின் உரிமையாளர். இவர் எழுதிய நூல்கள்—நற்பண்பு, தியாகம், நற்பண்புக்கதைகள், அணையா விளக்கு, அறிவியல் கதம்பம் முதலியன. முகவரி 9A, செட்டி குருநாதன் கோவில் தெரு, தெற்கு மாசி வீதி மதுரை-1

நகரத்தார்

புலவர் நாக. சண்முகத்தை ஆசிரியராகக் கொண்டு சென்னையிலிருந்து சில ஆண்டுகள் சிறப்பாக வெளிவந்தது.

நகர மலர்

ஆசிரியர்—திரு இளங்கோவன். மதுரையிலிருந்து 1979 முதல் சமூக இதழாகச் சிறப்பாக இன்றளவும் வெளிவந்து கொண்டிருக்கிறது.

இந்தஇதழ் வாயிலாக ஏராளமானபுதியஎழுத்தாளர்கள் உருவாகியிருக்கின்றனர் டாக்டர் தமிழண்ணல் போன்ற முதிய எழுத்தாளர்களும் தொடர்ச்சியாக எழுதிவரும் கட்டுரைகள் குறிப்பிடத்தக்கன.

ஆச்சி

சென்னையிலிருந்து தேவகோட்டை திரு. பஞ்சநாதம் முயற்சியால் 1983 முதல் வெளிவருகிறது. சிறப்பாசிரியர் — பள்ளத்தூர் திரு. பழ அண்ணாமலை.

நகரத்தார் சமூக இதழ்கள் சில மன்னார்குடியிலிருந்தும் சேலத்திலிருந்தும் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

நகரத்தார் குரல்

இந்த இதழ் 1982 முதல் மதுரை நகர விடுதிக் கட்டிடத்திலிருந்து வெளி வருகிறது. இவ்விதழின் ஆலோசகர்—கௌரவ ஆசிரியர் திரு. வீ. என் சிதம்பரம் (இராங்கியம் 14—1—1935)

'வீஎன்சிடி' — தமிழ் ஆர்வலர். நகைச்சுவை மிளிரப் பேசுபவர். இவர் பேசாத மேடையில்லை. மதுரைத் திருவள்ளுவர் கழகம் முதலியவற்றுக்குப் பேராதரவு கொடுத்து வருபவர். சபரிமலை ஐயப்பன், புண்ணிய பூமியில் புனித யாத்திரை, அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில் தல வரலாறுபோன்ற நூல்களின் ஆசிரியர். கவிஞர் கண்ணதாசனிடம் ஈடுபாடு கொண்டிருந்தவர். அருள்மிகு மீனாட்சி அம்மன் கோயிலின் தக்கார்.

மதுரைத் திருக்கோயிலில் தமிழ் அர்ச்சனைத் திட்டத்தை அமல் செய்தவர். இதன் விளைவாக, உயர்நீதி மன்றத்தில் தமிழ் அர்ச்சனையை விரும்பாதவர்கள் இவர்மீது வழக்குத் தொகுத்துள்ளனர்.

சங்கத் தமிழின் தலைமைப் புலவராக வீற்றிருந்து மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் தமிழாராய்ந்தவர், சோமசுந்தரப் பெருமான். தமிழுக்குப்பொற்கிழி தர, கொங்குதேர் வாழ்க்கை என்றபாடலையும் பாணபத்திரனுக்காக 'மதிமலி புரிசை' என்ற பாடலையும் பாடிச் சங்கப் புலவராகவும் திருமுறைச் செல்வராகவும் திகழ்ந்தவர், மதுரை ஆலவாயின் அவிர்சடைக்கடவுள். இறையனார் முதலிய 49 புலவர்கள் சங்கத்தில் வீற்றிருந்த

நினைவைப் போற்றும் பொருட்டு மீனாட்சியம்மனின் தங்கத் தேர் உருவாக வழிவகை செய்து நிறைவேற்றிய பிறகு மகாவித்துவான் டாக்டர் ச. தண்டபாணி தேசிகர் முதலிய 49 புலவர்கள் வடம்இழுக்க ஏற்பாடுசெய்தவர் வி என் சிடி. ஆண்டு தோறும் சித்திரை முதல் நாளும் தை முதல் நாளும் புலவர்கள் தங்கத் தேரை இழுக்க ஏற்பாடு செய்துள்ளார். (முகவரி—நாகப்பா இல்லம், 21 கமலா தெரு –2, சின்னச் சொக்கிகுளம், மதுரை - 2)

## ஏனைய இதழ்கள்

சிலகாலம் வெளியான பிறகு நின்று விட்ட இதழ்கள் செட்டிநாட்டு அன்பர்கள் நடத்தியவை, ஒரு நூறுக்கு மேல் இருக்கலாம் தெரிந்தவரை அவற்றின் பட்டியலைத் தருவோம்.

கடிதம் — நாளிதழ் — கண்ணதாசன் நடத்தியது.

ஹநுமான்

ஹிந்துஸ்தான்

தமிழ் ஹரிஜன் — திரு. சின்ன அண்ணாமலை

வெள்ளி மணி — „ „

சங்கப் பலகை — „ „

சந்திரோதயம் — சொ. பனையப்ப செட்டியார்.

முல்லை<br>நகரசபை } — திரு. முல்லை முத்தையா,

தமிழன் குரல் — ம. பொ. சி அவர்களுக்காக இன்ப நிலையம் சோம சுவாமிநாதன்.

எழில் — கவிஞர் முடியரசன் — தமிழண்ணல்

நண்பன் — பாரி நிலையம் க. அ. செல்லப்பன்

இலக்கிய உலகம் — திரு. ரத்தினம், (பழனியப்பா பிரதர்ஸ் வெளியீடு)

நவயுவன்

திருமகள்

கதம்பம்

அணிகலம்

இன்பம்
மகிழ்ச்சி
பாப்பா
இந்திரா — செட்டிநாடு இரயில் நிலையத்திலிருந்து திரு. ப. நீலகண்டன் வெளியிட்டது.
ஜனமித்திரன், புதுக்கோட்டை
மந்திரி
அருணன் } திரு. அருணன்

குமுதம்

காரைக்குடியில் புகழ்மிக்க ஏரோப்பிளேன். அண்ணாமலை செட்டியார் குடும்பம் வழிவழிச் செல்வச் சிறப்புடையது. இந்தக் குடும்பத்தினரான சா. அ. பெ. அண்ணாமலை அவர்கள் எம். ஏ., பி. எல்., பட்டம் பெற்ற போதிலும் வழக்கு உரைஞர் தொழில் செய்யாமல் புதிய தடம் கண்டார்.

குமுதம் இதழைத் தொடங்கி, குமுதம் இல்லாத வீடு தமிழனுடைய வீடு இல்லை என்ற நிலையை உலகெங்கும் உண்டாக்கியிருக்கிறார்.

பல புதிய உத்திகளைக் கையாண்டு தமிழ் மொழிக்கும் தமிழனுக்கும் தமிழ்நாட்டுக்கும் பெருமை தேடித்தந்தவர் எஸ். ஏ. பி.

இவருடைய உறுதிப்பாடு மிகவும் பாராட்டுக்கு உரியது. தொடங்கி ஈராண்டுகட்கு வாரந்தொறும் அச்சிட்ட 5,000 படிகளில் விற்பனையாகாமல் 3,000 படிகள் திரும்பி வந்தும் இவர் மனம் தளரவில்லை.

கல்கண்டு

இது குமுதம் அலுவலகத்து வெளியீடு. தொடக்கத்தில் தமிழ்வாணன் செல்வாக்கால் கல்கண்டும் கல்கண்டு வாயிலாகக் குமுதமும் வளர்ந்தன.

தமிழ்நாட்டு இளைஞர் உள்ளங்களையெல்லாம் ஈர்த்த தமிழ்வாணன் (5—5—1926—10—11—1977) ஜில்ஜில் பதிப்பகம் நடத்தி, அணில் ஆசிரியராக இருந்த பிறகு 1948 - இல் கல்கண்டு இதழ் ஆசிரியர் ஆனார்.

1946-இல் குமுதம் ஆசிரியர் எஸ். ஏ.பி. தமிழ்வாணனைச் சந்தித்தார். "மாதிரிப் புத்தகம்" ஒன்றைத் தயாரித்துத் தருமாறு அவர் தமிழ்வாணனைக் கேட்டுக் கொண்டார். உருவான அந்த "மாடல் புக்"கைப் பார்த்து, எஸ் ஏ பி.மிகவும் வியப்படைந்தார். "நீங்களே ஓர் இதழை எங்களுக்காக நடத்துங்கள்" என்று வேண்டி அனைத்துச் சுதந்திரங்களையும் அவருக்கு வழங்கினார்.

1948-இல் கல்கண்டு பிறந்தது 1950 இலேயே அதனுடைய விற்பனை 40,000-ஐத் தாண்டிற்று. தமிழ்நாடெங்கும் தமிழ்வாணனுக்கு என்று ஒரு ரசிகர் கூட்டம் ஒவ்வொரு ஊரிலும்உண்டாயிற்று, துணுக்குகளை ஏராளமாக வெளியிட்டு 'தமிழ்வாணன் பாணி' தமிழ் இதழ் உலகில் 'பரவிற்று.

பொது அறிவுப் புதிர் என்ற வினாவிடைப் பகுதியையும் தமிழ் இளைஞர்களைக் கவரும் வண்ணம் தமிழ்வாணன் புகுத்தினார்.

1978-இல் தமிழ்வாணன் காலமானார். அதுவரை முப்ப தாண்டுகளுக்கு அவரே கல்கண்டு ஆசிரியராக இருந்து வந்தார். தொடக்க இதழைப் படித்தவர்கள்கூட, தொடர்ந்து'கல்கண்டு' படிக்கும் அளவுக்கு, சிறுவர்களுக்காக தொடங்கப்பெற்ற இந்த இதழ் வயது வந்தவர்களையும் ஈர்த்த கவர்ச்சி வெளியீடாக அமைந்து கால மாற்றங்களுக்கு ஈடு கொடுத்தது. தலைமுறைகளுக்கிடையே இடைவெளி என்பது கல்கண்டு வாசகரிடம் கிடையாது.

சிறுவயது முதற்கொண்டே துணிவே துணை என்ற தம் கோட்பாட்டை துணிந்துகடைப்பிடித்து வாழ்க்கையில் வெற்றி கண்டவர் தமிழ்வாணன்.

சங்கரலால் என்ற கற்பனைப் பாத்திரத்தை உருவாக்கி அவரை உயிருள்ள ஒருவராகவே அனைவர் உள்ளங்களிலும் நடமாட விட்டார். தொடர்ந்து துப்பறியும் கதைகளை ஏராளமாக எழுதினார்.

இவருடைய ஊர் தேவகோட்டை. பெற்றோர் லெட்சுமணன் செட்டியார் - பிச்சம்மை ஆச்சி. இட்டபெயர் இராமநாதன் தமிழுக்காகவே வாழ்பவர் என்ற பொருள்பட

இவருக்கு 'தமிழ்வாணன்' என்னும் பெயரை வழங்கியவர் தமிழ்த்தென்றல் திரு. வி. க.

சமயம், தத்தவம், மருத்துவம், விளையாட்டு, அறிவியல் கலை போன்ற வேறுபட்ட துறைகளில் 500க்கும் மேற்பட்ட நூல்களைத் தமிழ்வாணன் எழுதியுள்ளார். எந்தத்துறையைப் பற்றி எழுதினாலும் படிப்பவர்க்கு விளங்குமாறு சுருக்கமாகவும் விளக்கமாகவும் சுவையாகவும் எழுதும் ஆற்றலைப் பெற்றிருந் தார். இதனால் *Master of All Subjects* என்ற பட்டத்தை அருள்மொழி அரசு கிரிதாரி பிரசாத், இவர்க்கு வழங்கினார்.

இவர் இறக்கும் போது, கல்கண்டு ஒன்றரை லட்சம் படிகள் விற்பனையாயிற்று.

தமிழ்வாணன் காலமான பிறகு, அவர் மகன் ராமலெட்சுமணன் எம். ஏ. (தமிழ்) டிப்ளமா-இன்-ஜர்னலிசம் கல்கண்டு ஆசிரியராகப் பொறுப்பேற்றார். லேனா தமிழ்வாணன் என்ற பெயரில் எழுதி வருகிறார். தந்தைக்கு மகன் சளைத்தவ ரில்லை என்பதை மெய்ப்பித்துக் காட்டியிருக்கிறார், லேனா தமிழ்வாணன். இவரைப் பற்றிப் பிறிதோரிடத்தில் கூறுவோம்,

# 31. வெளி மாநிலங்களில்

தொழில், வியாபாரம் அல்லது வேறு வேலையாக, தமிழ் நாட்டுக்கு வெளியே வாழும் செட்டிநாட்டு அன்பர் பலர் ஆங்காங்கே தமிழ் மொழியைப் பரப்பும் பணியிலும் கண்ணும் கருத்துமாக உள்ளனர். தெரிந்தவரை, சில விவரங்களை இங்கே கூறுவோம்.

## கேரளம்

கொச்சியில் தமிழ்ச் சங்கமும் முத்தமிழ் மன்றமும் இணைந்து பெரிய அமைப்பாக கொச்சி முத்தமிழ் மன்றம் என்ற பெயரில் 1981 முதல் சிறப்பாகப் பணியாற்றி வருகிறது. இந்த அமைப்பின் அச்சாணியாக—ஏற்கெனவே ஈராண்டுகள் செயலராக இருந்தபின் இப்போது துணைத் தலைவராக—இருப்பவர் மேலைச்சிவபுரி திரு. அ. சொ. சிவப்பிரகாசம் (பி. 16-4-1944) இவர் ஸ்ரீ ராம் ஏஜென்சீஸ் என்ற காகித மொத்த வியாபார நிறுவனத்தின் நிர்வாகப் பொறுப்பாளர். மேலைச்சிவபுரி வள்ளுவர் மன்றத்தின் ஆயுள் உறுப்பினர். 1976 முதல் எர்ணாகுளம் தமிழ்ச் சங்கத்துடன் தொடர்பு கொண்டு 1980-இல் அதன் தலைவராகி 1981 இல் சங்கத்திற்கு நூலகம் அமைத்துக் கொடுத்தவர்.

அகில கேரள தமிழ்ச் சங்கங்களின் இணைப்பு (அ. கே. த. ச. இ) உருவாகப் பாடுபட்டவர். எர்ணா குளத்தி லுள்ள அரசு பொது நூலகத்தில் தமிழ்ப்பகுதி தொடங்க அதன் ஆட்சிக்குழுவின் தீர்மானம் நிறைவேறக்காரணமாக இருந்தவர்.

முகவரி *Aiyswarya 36/227A. T.D. Road, Ernakulam 682011. Phone Office 31838 Res 30807.*

இச்சங்கத்தின் வளர்ச்சியில் பங்குபெற்றுள்ள மற்றொரு அன்பர், சவுத் இந்தியா கார்ப்பரேசனின் போக்குவரத்துப் பகுதி மேலாளர், அரிமளம் திரு. நா. லெட்சுமணன் செட்டியார் ஆவார்.

பெரும்பாவூர்

திருவாங்கூர் ரயான் தொழிற்சாலையில் பணி புரிந்து வரும் தேவகோட்டை அன்பர் அரு. இராமநாதன் (பி. 12-8-1937) தோத்திரப் பாடல்கள் பலவற்றைத் தொகுத்துள்ளார். 1975 முதல் பெரும்பாவூர் கணேசர் கலைக் கழகச் சார்பில் தமிழ்ப் பள்ளி ஒன்றை நடத்தி வருகிறார்.

முகவரி *XVI* 18 *Jacob's Colony Munnar Road, Perambavoor* 683542

கோட்டயம்

கோட்டயம் தமிழ்ச் சங்கம் நன்றாக இயங்கிவர அயராது பாடுபட்டு வருபவர் திரு. சிதம்பரம்

முகவரி *C/o Ennackal House Vellapally Lane Kottayam* 686001

திருவனந்தபுரம்

கோட்டயம் தமிழ்ச்சங்கத்தின் ஏற்றத்திற்குக் காரண மாக இருக்கும் மற்றொரு அன்பர் கீழைச்சிவற்பட்டி திரு. எம் அழகப்பன். இவர் முன்னாள் தலைவர். இப்போது திருவனந்த புரத்தில் தேசிய பஞ்சாலை வாரியத்தின் பொது மேலாளராக இருப்பதால் திருவனந்தபுரம் தமிழ்ச் சங்கத்தை வளர்த்து வருகிறார்.

முகவரி 92145 *Elankon Gardens 3rd A Street Vellayambalam Trivandrum-10 Phone* 66308 61083.

கள்ளிக்கோட்டை

இந்த நகரில் தமிழ்ச் சங்கத் தலைவராக இருப்பவர் திரு. பஞ்சநதம் (தேவகோட்டை), செயலர் திரு. இராம சோலையன் (பள்ளத்தூர்) பொருளாளர் திரு. திருநாவுக்கரசு (வலையபட்டி)

அகில கேரள தமிழ்ச் சங்கங்களின் இணைப்பை உருவாக்கி யிருப்பவர்களும் செட்டிநாட்டு அன்பர்களே ஆவர்.

## கர்நாடகம்

ஆசனிலும் மைசூரிலும் தமிழ்ச் சங்கங்கள் தொடங்கியவர்கள் நகரத்தார் அன்பர்களே ஆவர். கர்நாடகத்தின் பிற நகர்களில் இயங்கும் தமிழ்ச் சங்கங்களில் செட்டிநாட்டாரின் பங்கு பற்றிச் சரியான விவரங்கள் கிடைக்கவில்லை.

ஆசன் தமிழ்ச் சங்கம் சிறந்த தமிழ் எழுத்தாளரான கலை அன்பன் என்ற சுப. இராமன் (இராமச்சந்திரபுரம்) அவர்களின் முயற்சியால் உருவாகி, ஏராளமான விழாக்களை ஆண்டு தோறும் நடத்தி வருகிறது.

மற்றும் இச்சங்கத்தில் பொறுப்பான பங்கு கொண்டிருப்பவர்கள் திருவாளர்கள் அரு.காசி, பெரி சிங்காரம் செட்டியார் எல். ஆர். எம் நடராசன், குழ. இலட்சுமணன் முதலிய பலர் ஆவர். செயலர் அரிமழம் அன்பர் செ. ராம. திருநாவுக்கரசு.

## மஹாராஷ்டிரம்

ஏறத்தாழ ஐம்பதாண்டுக் காலமாகச் சிறப்பாக நடைபெற்று வரும் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் வளர்ச்சியிலும் பம்பாயில் இயங்கிவரும் ஏனைய தமிழ் அமைப்புகளின் நிகழ்ச்சிகளிலும் 1972க்குப் பிறகு செட்டிநாட்டன்பர் பலர் குறிப்பிடத்தக்க பங்கு பெற்றுள்ளனர். இவ்வகையில் இங்கே இடம் பெறத்தக்கவர்கள் —மூறையூர் அரு சொ அவர்கள், ஒரு சக்கரை ஆலையின்இயக்குனராக இருந்துவரும் வேகுப்பட்டிதமிழறிஞர் ஆ. வ. இராமநாதன் அவர்கள், வெஸ்டர்ன் பேப்பர் அண்டு யார்ன் நிறுவனத்தின் பொறுப்பாளர் இராமச் சந்திரபுரம் விசுவநாதபுரம் திரு. கே. எம். வேங்கடாசலம் ஆகியோர். திரு வேங்கடாசலம் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் அறங்காவலர்களில் ஒருவர் ஆவார்.

## குஜராத்

பரோடா தமிழ்ச் சங்கத்தின் வளர்ச்சியில் கண்ணும் கருத்துமாக இருந்தவர்கள் தேவகோட்டை திரு. சேவுகன் செட்டி, ராங்கியம் திரு. பெரியகருப்பன், பதவிமாற்றத்தால் இவர்கள் சென்னைக்கு வந்துவிட்டனர். குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்கள் மகன் திரு. அழகப்பன் இப்போது இச்சங்கத்தில் ஓரளவு கவனம் செலுத்தி வருகிறார்.

சூரத் தமிழ்ச் சங்கத்தின் தொண்டுகளுக்கு அந்த நகரத்து வங்கிகளில் பணி செய்யும் செட்டி நாட்டன்பர்கள் உறுதுணை யாக உள்ளனர்.

## இராஜஸ்தான்

ஜெயப்பூர் தமிழ்ச் சங்கத்தில் ஈடுபாடு காட்டிவரும் காரைக்குடி திரு. எஸ். எம். இராமசாமி, இந்தியப் புவியியல் ஆய்வாளர்; பி எச். டி. பட்டம் பெற்றவர், தமிழில் கவிதை, நாடகங்கள் யாத்திருப்பவர்.

## தில்லி

இந்தியத் தலைநகரில் இயங்கிவரும் தில்லித் தமிழ்ச்சங்கத் தின் செயல்களில் குறிப்பாக அதனுடைய மலர்கள் வெளியீடு களை உருவாக்குவதில் 25 ஆண்டுகளாக கொத்தமங்கலம் திரு. எம். எஸ். பி. சண்முகம் பெரிதும் உதவியாக இருந்திருக்கிறார்.

தலை நகருக்கு வருகை புரியும் வெளிநாட்டினர்க்கு தமிழ் நாட்டுக் கலைஞர்கள், மொழியில் அறிஞர், நுண்கலைவல்லுனர் ஆகியோரை அறிமுகப் படுத்தியுள்ளார். தமிழ் எழுத்தாளர் கலைஞர் இசைவாணர் ஆகியோர் கருத்தரங்குகள், மாநாடுகள், ஆகியவற்றில் கலந்து கொள்ளத் தலைநகருக்கு வரும் போது அவர்களுடைய பணிகளுக்கு உதவி வந்திருக்கிறார்.

தமிழ் மொழித் தொடர்பாக, தில்லியில் நடைபெறும் பல் வேறு பணிகளில் ஆர்வத்துடன் கலந்து கொள்பவர்கள் என்று திரு. சண்முகத்தையும் இந்திய அரசின் சிறு தொழில் துறை அலுவலர் குளிபிறை திரு. எஸ். பி. சிங்காரம் அவர்களை யும் குறிப்பிடலாம்.

## உத்தரப் பிரதேசம்

காசி விசுவநாதர் கோயிலில் நகரத்தார்களுடைய மேற் பார்வையில் பூசைகள் நடைபெற்றுவருகின்றன. 170 ஆண்டு களாக சரயரட்சையில் தேவாரம் ஒலிக்கிறது. விசாலாட்சி கோயிலில் தமிழ் சிறப்பிடம் பெற்றுள்ளது.

## மேற்கு வங்காளம்

கல்கத்தாவில் பதினேழாம் நூற்றாண்டு முதல் நகரத்தார் பலர் ஏற்றுமதி இறக்குமதி வணிகத்தில் ஈடுபட்டு வந்திருக்கின்றனர்.

வெறும் பொருள் ஈட்டுவதை மட்டும் குறிக்கோளாகக் கொள்ளாமல் தமிழ்மொழி, தமிழரின் தொன்மையான சமயக் கொள்கைகள், பண்பாடு ஆகியவற்றை வங்க மண்ணில் பரப்புவதையும் குறிக்கோளாகக் கொண்டு செயல் பட்டனர். காளிகட்டம், தாரகேசுவரம் போன்ற பல இடங்களில் சத்திரங் களை உருவாக்கினார்கள். கோயில்களை அமைத்தனர். இவற்றில் கல்கத்தாவில் ஸ்டிராண்டு சாலையில் உள்ள சிவாலயம் முக்கிய மானது. அந்தக் காலத்தில் மார்கழி மாதத்தில் இந்த கோவிலில் தேவார திருவாசக இசை தொடர்ந்து நடைபெறும். திரு வாசகத்தை இசையுடன் ஓதிக் கொண்டே வீதி வருவார் கள். ஓதுவார்கள். இந்தஇசையில் ஈடுபட்ட ஒரு வங்கச் சிறுவன் தினமும் இந்த ஊர்வலத்துடன் வருவது வழக்கம். "திருப் பெருந் துறை உறை சிவபெருமானே" என்ற அழகான சொற்றொடர் அந்தச் சிறுவனின் பிஞ்சு உள்ளத்தில் பசுமரத்தாணி போல் பதிந்து விட்டது. அந்தப் பிராயம் முதலே "தமிழைக் கற்க வேண்டும் திருவாசகத்தை மூலத்தில் படித்து அனுபவிக்க வேண்டும்" என்ற ஆசை அவன் உள்ளத்தில் துளிர் விட்டு வளரத் தொடங்கியது.

பின்னர் அச்சிறுவன் வளர்ந்து கல்லூரியில் மொழி ஆராய்ச்சியில் ஈடுபட்டபோது தமிழைக் கற்றான்–திருவாசகத் தைப் படித்து ஆய்ந்து பல அரிய செய்திகளை வெளியிட்டான். அந்த இளைஞன்தான் மிகச்சிறந்த பன்மொழிப் புலவனாகப் பரிணமித்து, தேசியப் பேராசிரியராக விளங்கிய அறிஞர் டாக்டர் சுநீதகுமார் சாட்டர்ஜி. நன்னெறி முருகன் என்ற தமிழ்ப்பெயரைச் சூட்டிக் கொண்ட இந்தத் தமிழ் அறிஞரை உருவாக்கக் கருவியாக அமைந்தது நகரத்தார் கட்டிய இந்தச் சிவாலயம்.

வங்க மொழி பேசுபவர்களுள் தமிழை ஆராய்ந்து நன்கு கற்ற பன்மொழிப்புலவர் சுநீத குமார் சாட்டர்ஜியைப் பின் பற்றி இருபதுக்கும் மேற்பட்ட வங்க அறிஞர்கள், எழுத்தாளர் கள் ஓரளவு தமிழ் பயின்றுள்ளனர். இரண்டு மொழிகளுக்கும் இடையே கலைப்பாலம் அமைய, இந்த உறவு பயன்பட்டு வரு கிறது.

இப்போது பெரும்புகழ் பெற்றுள்ள கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தின் தலைவராக 1982-ஆம் ஆண்டில் தேவ கோட்டை திரு. வெங்கடாசலம் இருந்ததும் சிறப்பான செய்தி யாகும்.

கவிஞர் கா. சு. மணி

இந்நாளில் கல்கத்தாவில் தமிழ்ப்பணியில் தலைசிறந்து விளங்குபவர் திரு. மணி.

செட்டிநாட்டில் கா. சுப்பிரமணியமாக இருந்தவர் கல்கத்தாவுக்குப் போனதும் கா. சு, மணி ஆனார். இந்த இளைஞர் (பிறந்த தேதி 13-10-1950) பற்றி ஆனந்த விகடன் பின்வருமாறு எழுதியுள்ளது.

"கவிஞர் கா சு. மணியனைக் கல்கத்தாவில் அறியாதவர் யாரும் இருக்கமுடியாது எனலாம். எந்த நிகழ்ச்சியிலும் தமிழ் அமைப்புகளிலும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு தொண்டு செய்யும் அற்புதமான தமிழ் அன்பர்.

"இனிய சிரிப்பு, அமைதியான தோற்றம், ஆர்வமிக்க தொண்டுள்ளம், அலைகடலெனக் கவித்திறம் இவைதான் காசு. மணியன்.

"இவரின் சொந்த ஊர் செட்டிநாட்டு ஆத்தங்குடி. 1970 இல் கங்கைக் கரைக்கு வந்து ஒதுங்கிய இவரைக் கவிதை விட வில்லை. கவிதையையும் இவர் கைவிடவில்லை. தொடர்ந்து எழுதி வருகிறார். இவரின் கவிதைத் தொகுப்பு 'காசு. மணியன் கவிதைகள்' என்ற தலைப்பில் வெளியாகியிருக்கிறது. மேலும், கல்கத்தா தமிழ் மன்றத்திற்கு இன்றியமையாத தொண்ட ராக விளங்குகிறார். கல்கத்தாவில் ஒரு வீதியைப் பாரதியின் பெயராக மாற்றியதற்கும், கல்கத்தா லேக் ரோடை 'கவிபாரதி சாரணியாக மாற்றியதற்கும் இவர் பெரும் அளவு காரணம் ஆவார்."

கோனாபட்டு உயர்நிலைப்பள்ளியில் படித்தபோது இவர் இலக்கிய மன்றத்தின் செயலாளராக இருந்தார். தமிழ் நூல் களில் ஏற்பட்ட பொதுப்படையான ஆர்வம் கண்ணதாசன் நூல்களை-குறிப்பாக அவருடைய கவிதைகளை - ஆழமாகப் படிக்கத் தூண்டிற்று. 'நானாகவேகவிதைகள்எழுதும் ஆற்றலும் தைரியமும் பெற்றேன். தமிழ்த் தாயைப் பற்றி எழுதினேன்,

பலரும் அதைப் பாராட்டினார்கள்'' என்கிறார், இலக்கிய உலகில் இப்போது பிரகாசிக்கும் இந்த நட்சத்திரம்.

கல்கத்தாவில் எழுத்தாளர் வட்டம் ஒன்றை உருவாக்கியிருக்கிறார். மலர்கள் பலவற்றை அழகாகப் பதிப்பித்திருக்கிறார். குங்குமம் வார ஏடு கல்கத்தாவைப் பற்றி வெளியிட்ட ஐந்து இதழ்களும் வடிவம் பெறப் பலவகையில் துணை புரிந்தார். புகழ் பெற்ற தமிழ்த் தொண்டர் 'பரதி'யின் பொதுப் பணிகளுக்கெல்லாம் வலக்கரமாக விளங்குபவர் கா. சு. மணி.

திரு. மணியின் அண்ணன் தம்பிகள் நால்வரும் கவிதை புனையும் ஆற்றல் பெற்றவர்கள்.

சௌத் இந்தியா கார்ப்பரேசன் ஏஜென்சீஸ் என்னும் நிறுவனத்தில் பணி புரிந்து வரும் கவிஞர்க்கு மூச்சும் பேச்சும் தமிழே என்று கூறலாம்.

கவியரசு கண்ணதாசனோடு நம் கவிஞர் சுமார் 12 ஆண்டுகள் நெருங்கிய பழக்கம் கொண்டிருந்தார். ''குமுதம்'' இதழில் 'இந்த வாரம் சந்தித்தேன்' பகுதியில் கவியரசர் இவரை 'அற்புதமான மரபுக் கவிஞர்' என்றும் 'சுறுசுறுப்புத் தேனீ' என்றும் பாராட்டி எழுதியிருக்கிறார்.

கல்கத்தா தமிழ் மன்றத்தின் தலைவராகவும் கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பொதுச் செயலாளராகவும் இவர் இருந்து வருகிறார்.

கவிஞர் காசு. மணியன் தென் கல்கத்தாவில் 'Lake Road' (தமிழர்கள் அதிகமாக வாழும் பகுதி) என்று இருந்ததை 'கவிபாரதி சாலை' எனப் பெயர் மாற்ற தீவிர முயற்சி மேற்கொண்டார். இவரது இந்த முயற்சிக்கு மூவாயிரம் பேர் எதிர்ப்புத் தெரிவித்து மனுக் கொடுத்த போது இவர் அஞ்சாமல் ஒன்பதாயிரம் பேர்களிடம் கையெழுத்து வாங்கி எதிர் மனு தாக்கல் செய்து வெற்றி கண்டார்.

கடிதப் போக்குவரத்து மூலம் மேற்கு வங்க அரசையும் தமிழக அரசையும் அணுகி தென் கல்கத்தாவில் பாரதி சாலையில் உள்ள விவேகானந்தர் பூங்காவில் கவியரசர்

பாரதியின் முழு உருவச் சிலையை அமைக்க முழு முயற்சி மேற்கொண்டு அதை நிறைவேற்றிய பெருமை நம் கவிஞருக்கு உண்டு.

இவர்இதுவரை 100 கவியரங்கங்களில் கலந்துகொண்டிருக்கிறார். இவர் பங்கு பெற்ற முதல் கவியரங்கம் 1971- இல் சென்னை வாணிமகாலில் கவியரசு கண்ணதாசன் தலைமையில் நிகழ்ந்தது.

# 32 ஈழம்

ஈழத்தின் தலைநகராகிய கொழும்புக்கும் வேறு நகரங்களுக்கும் சென்று அரிசி வியாபாரம், தேயிலை பயிரிடுதல், தென்னந்தோட்டம் வளர்த்தல் போன்ற பலவகைத் தொழில்களில் ஈடுபட்ட நகரத்தார்கள், இடையிடையே தமிழ்ப் பணிகளையும் செய்திருக்கின்றனர். இந்தப் பணிகளை சிறு தலைப்புகளில் (இந்நூலாசிரியரே இலங்கையில் இருந்தபோதே விரிவாக எழுததி தவறிவிட்டதால்) சுருக்கமாகக் கூறுவோம்.

## தமிழ் நாட்டுப் புலவர்கட்கு ஆதரவு

நிதி திரட்டித் தங்களுடைய வறுமையைப் போக்கிக் கொள்ள தமிழ்ப் புலவர்கள் சிலர் தாங்களாகவே இலங்கைக்குச் சென்றது உண்டு. நகரத்தார்களே சிலரை அழைத்துச் சென்றதும் உண்டு. இரு பாலார்க்கும் வேண்டுவன செய்தும் செய்வித்தும் தாயகத்துக்கு அனுப்பியுள்ளனர்.

தங்களுடைய புலமையை ஈழநாட்டிலும் பரப்ப வேண்டுமென்று விரும்பிய புலவர்களும் இருந்தனர். இவ்வகையினர்க்கும் தேவையான ஒழுங்குகளையும் வசதிகளையும் நகரத்தார் பலர் செய்தனர். இந்நூலாசிரியர் 1952-இல் கொழும்பில் இருந்தபோது, தவத்திரு குன்றக்குடி அடிகளார், பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன், உரை வேந்தர் அவ்வை துரைசாமிப் பிள்ளை போன்ற தமிழறிஞர்களை வரவழைத்து இலங்கை முழுவதும் விரிவாகச் சுற்றுப்பயணம் செய்யச் செய்தார். அரசாங்கமரியாதையுடன் அவர்கள் வரவேற்கப்படவும் வானொலி வாயிலாகவும் நாளிதழ்கள் மூலமாகவும் அவர்களுக்குச் சிறந்த பெருமை ஏற்படவும் ஆவனசெய்தார். ஒரு சிலநாள் வார இதழ்கள் சிறப்பு மலர்களும் வெளியிட்டன.

திருநெல்வேலி மாவட்டம் மலையடிக் குறிச்சியைச் சேர்ந்த கருணாலய பாண்டியர் என்னும் பெரும்புலவர் 1974 வரை 50 ஆண்டுகள் கொழும்பு மாநகரில் சிறப்புடன் வாழ்ந்து பிறகு இந்தியாவிற்கு வந்தார். யாழ்ப்பாணத்துப்பெருமக்களும் இலங்கை அரசின் உயர் அலுவலர் பலரும் இவரிடம் தமிழ்க் கல்வி பயின்றனர். இப்புலவரை ஈழ நாட்டுக்கு அழைத்துச்

சென்று ஆதரித்தவர் நெற்குப்பை லெ. ப. கரு. கருப்பஞ் செட்டியார் ஆவார்.

கருணாலய பாண்டியருடைய புலமையை மெச்சி, அண்ணாமலை அரசர் 1932-இல் கொழும்புக்கு சென்றிருந்த போது பத்துப் பவுன் பரிசிலாக வழங்கினார்.

கருணாலய பாண்டியருடைய நூல்களை வெளியிட்டு தக்கவர் பலருக்கும் அன்பளிப்பாக வழங்கியவர்கள் : நற் சாந்துபட்டி பெ. ராம. ராம சிதம்பரம் செட்டியார், நெற்குப்பை மு. பனையப்பன் பி. காம். (ஹானர்ஸ்) —இப் போது சென்னையில் கணக்குத் தணிக்கையாளராக இருப்பவர்.

## இதழ்கள்

ஆவினிப்பட்டி ஊரினரும் பெருஞ் செல்வாக்குப் பெற்றி ருந்தவரும் அஞ்சா நெஞ்சரும் பேச்சாளருமான வீரகேசரி சுப்பிரமணியன் செட்டியார் ''வீரகேசரி'' என்ற பெயரில் 1930-இல் ஒரு நாளிதழைக்கொழும்பு மாநகரில்தொடங்கினார் தமிழர்களால் நடத்தப்பட்டுக் கொழும்பிலிருந்து வெளிவரும் நாளிதழ் இது ஒன்றேயாகும். 1960-இல் இவர் தாயகத்துக்குத் திரும்ப நேர்ந்தபோது அந்த இதழை இலங்கைத் தமிழர் களுக்கு விற்பனை செய்தார்.

தமிழ்நாட்டிலிருந்து இதழ் அனுபவம் பெற்றவர்களை வரவழைத்தும், புலவர்கள்— அறிஞர்கள்— எழுத்தாளர் ஆகி யோரிடமிருந்து கவிதை கட்டுரைகள், கதைகள் எழுதிவாங்கி யும் தமிழ்—தமிழர் தொடர்பான சிறு செய்திகளையும் பக்கம் பக்கமாகப் போட்டும், ஊர்க்குருவி என்ற பகுதியில் சுவையான செய்திகளைச் சுடச்சுட வெளியிட்டும் வீரகேசரி திரு. சுப்பிரமணியன் செட்டியார் ஈழத்தில் தமிழ் உணர்ச்சி பரவ உறுதுணையாக இருந்தார். இந்திய — இலங்கைத் தமிழ் அறிஞர்களை இணைக்கும்பாலமாக ஈழகேசரி விளங்கிற்று.

பெரி.மீ. சுந்தரம், சி. சே. பழனியப்பன் என்ற நகரத் தார் இளைஞர் இருவர் கொழும்பிலிருந்து சிறுவர் உலகம் என்ற திங்கள் இதழை. 1952 முதல் ஈழத் தமிழ்க் குழந்தைகளுக் காக நடத்தினார்கள். இலங்கையில் அப்போது சிறுவர்க்காக வெளிவந்த இதழ் இது ஒன்றே.

விபுலானந்த அடிகளார்

இவரைப் பற்றி இந்நூலில் 79, 109, 307-ஆம் பக்கங்களில் குறிப்பிட்டிருக்கின்றோம்.

புலவர்களுக்கு ஆதரவு

நகரத்தார்கள் ஈழநாட்டுக்கு வணிகர்களாகச் சென்ற போதிலும் அங்கும் தமிழ்ப் புலவர்களுக்கு ஆதரவு நல்கினர். வித்வ சிரோன்மணி சி. கணேச ஐயர் அவர்கள் இயற்றி 'ஈழ கேசரி' நா. பொன்னையா அவர்கள் 1939-இல் வெளியிட்ட 'ஈழநாட்டுத் தமிழ்ப்புலவர் சரிதம்'' என்னும் நூலில் பின் வரும் தகவல்கள் உள்ளன.

1 வித்வ சிரோன்மணி ச. பொன்னம்பலம்பிள்ளை

ஆறுமுகநாவலரின் தமக்கையார் மகன். இவரிடம் காரைக்குடி கொக்கலிங்கையா பாடம் கேட்டுள்ளார். தேவ கோட்டையில் சில காலம் வசித்தார்.

2 வேல் மயில்வாகனப். புலவர்

இவர் தேவகோட்டை தனவைசியர்கள் வேண்டுகோள் படி அங்குச் சென்று 7 வருஷகாலம் வரையில் பல மாணவர் களுக்குக் கல்வி கற்பித்தும் சைவப்பிரசங்கங்கள் செய்தும் வந்தார்.

3 காசிவாசி செந்தில்நாதையர்

இவர் 1901-ஆம் ஆண்டு பாண்டி நாட்டிலுள்ள சிவ ஸ்தலங்களையும் குகஸ்தலங்களையும் தரிசித்துக் கொண்டு அமராவதிபுதூரின் கண்ணே வசித்து வரும் மதுரை மீனாட்சி யம்மை கோயிலின் தேவஸ்தான சபை அங்கத்தவருள் ஒருவரு மாகிய திருவாளர் வயி. நாக. ராம. ராமனாதன் செட்டியார் என்பவர் விரும்பிய பிரகாரம் மதுரையம்மன் குருபூஜா மடத்திலே வசித்து வந்தார்.

1906-ஆம் ஆண்டில் இவர் தேவகோட்டைச் சைவ சீலராகிய திருவாளர்கள் அரு. சோம. சோமசுந்தரச்செட்டியார் மெ. அரு நா. இராமனாதச் செட்டியார் ஆகிய இருவருடைய

பொருளுதவியைப் பெற்று "செந்தி நாதைய சுவாமி யந்திர சாலை" என்னும் பெயரால் ஓர் அச்சுயந்திரசாலையை நிறுவித் தாமெழுதிய நீலகண்ட பாஷ்யத் தமிழ் மொழி பெயர்ப்பு. ஸ்ரீ சீகாழிப் பெருவாழ்வின் ஜீவகாருண்யமாட்சி.வைதிக சுத்தாத்து வித் சைவ சித்தாந்த தத்துவப்பட வினா விடை, விவிலிய குற்சிதக் குறிப்பு முதலிய நூல்களை அச்சிட்டு வெளியிட்டார்.

இவர் எழுதிய "தத்துவ விளக்கம் மூலமும் உரையும்" காரைக்குடி ஆ. வி. பழ. சிதம்பரம் செட்டியாராலும் "சைவ வேதாந்தம்" என்னும் நூல் மேற்படியூர் முத்த. வெள்ளையப்ப செட்டியாராலும் அச்சிடப் பெற்று வெளிவந்தன.

## 4 அம்பலவாண நாவலர்

அந்நாளில் யாழ்ப்பாணத்திலே வாணிக நோக்கமாக வந்திருந்த நாட்டுக்கோட்டைத் தனவைசியர்களுள்ளே வித்துவான்களாய் விளங்கிய பெரிய சொக்கலிங்கச்செட்டியார் சின்னச் சொக்கலிங்கச் செட்டியார் என்னும் இருவரும் இவருடைய பிரசங்க வன்மையும் கல்வி வன்மையுமறிந்து இவ ரிடத்திலே பேரபிமானங்கொண்டு பிரசங்கங்கள் செய்விக்கும் படி இவரை இந்தியாவிலுள்ள திருநெல்வேலி என்னுமூருக்கு அழைத்துச் சென்று அங்கு சௌகரியமாக வசித்தேற்கேற்ற ஒரு இல்லத்தில் இவரை அமரச் செய்தனர். திருநெல்வேலி ஸ்ரீ நெல்லையப்பர் காந்திமதி தேவஸ்தானத்திலே இவர் பிரசங்கங் கள் செய்யவேண்டிய ஏற்பாடுகளைச் செய்தனர். முதல் நாள் பிரசங்க முடிவிலே ரூ ஆயிரம் (1,000) சன்மானம் செய்யப் பட்டது. இவர் ஓராண்டு அங்கு தங்கி இருக்க எல்லா ஏற்பாடு களையும் தனவைசியப் பிரபுக்கள் செய்தனர். இவர் திருநெல் வேலியிலே திருஞான சம்பந்த ஸ்வாமிகள் பேரினாலே ஒரு மடம் ஸ்தாபித்து ஆண்டுதோறும் குருபூசை செய்யவேண்டும் என அவா கொண்டார். அவர் விருப்பத்தை ஆங்குள்ள தன வைசியப் பிரபுக்கள் நிறைவேற்றிவைத்தார்கள். அம்மடம் இன்றளவும் நன்கு நடைபெறுகிறது. அதற்காக மேற்படியூரில் கீழை வீதியில் ஐந்து வீடுகளும் கல்லூர் கோடகநல்லூர் என்னும் கிராமத்திலே நூற்று மூன்று குறுணி கொண்ட நெல் விளையத்தக்க வயல்களும் வாங்கி விடப்பட்டன.

இவர் கண்டனூர், காரைக்குடி, தேவகோட்டை முதலிய ஊர்களில் உள்ள தனவைசியர்களால் பெரிதும் சன்மானிக்கப் பெற்றார்.

இவர் பெரிய புராணத்தில் அதிகம் பயிற்சியுடையவர். தேவகோட்டையிலுள்ள தனவைசியப் பிரபுக்களின் வேண்டு கோட்படி அங்கே இரண்டு வருடகாலம் பெரியபுராணப் பிரசங்கஞ் செய்தார். பிரசங்கமுடிவில் அங்குள்ள தனவைசியப் பிரபுக்களும் பிறரும் இவரை யானைமீதேற்றி வாத்தியகோஷத் தோடும் சகல வரிசைகளோடும் ஊர்வலஞ் செய்வித்து அன்று பன்னீராயிரம் (12000) ரூபா சன்மானமாகக் கொடுத்தனர். இப்பிரசங்க சம்பவத்தின் விரிவு 'பெரியபுராணப் பிரசங்க வைபவம்' என்னும் நூலிலே பரக்கக் கூறப்பட்டுள்ளது.

5 சுவாமிநாத பண்டிதர்

இவர் இலங்கை காலி நகர் நாட்டுக்கோட்டை நகரப் பிரபுக்களால் நன்கு கௌரவிக்கப்பட்டவர். தேவகோட்டை முதலிய நகரத்தார் ஊர்களில் பலகாலம் புராணபடனாதிகள் செய்து அங்குபலகாலம் தனவைசியர்களால் நன்கு மதிப்பெற்று தமிழ்த்தொண்டு செய்தார்.

சுவாமிநாத பண்டிதர் 1878-1948

இவர் யாழ்ப்பாணம் ஆறுமுகநாவலர் பரம்பரையினர். வண்ணை நகரினர். அமராவதிபுதூருக்கு வந்து வயிநாகரம் இராமநாதன் செட்டியார், வேங்கடாசலம் செட்டியார் ஆகியோருக்கு ஆசிரியராக இருந்தார். பிறகு கொத்த மங்கலத்திலும் ஆசிரியராக இருந்தார். பின்னர் தருமபுர ஆதீனத்தில் செல்வாக்குப்பெற்றுத் தில்லையில் உயிர்நீத்தார்.

இவர் 1911இல் "தேவாரத் திருமுறை" யைப் பிழையற அச்சிட்டார். இந்நூல் பண்டிதர் பதிப்பு எனப்பெயர் பெற்றுக் கற்றறிந்தோரால் பெரிதும்மதிக்கப்படுகிறது. நூலின் முகவுரை யில்6-ஆம்பக்கத்தில் யாழ்ப்பாணத்து வண்ணைநகர் சுவாமிநாத பண்டிதர் பின்வருமாறு கூறுகிறார்:—

இதனை அச்சிடுவதற்கு வேண்டும் பொருளைப் பற்றி யான் சிறிதும் தளர்ச்சியடையா வண்ணம் என்னை ஊக்கஞ் செய்து வந்தவர்கள் எனது மாணாக்கர்களாகிய வயிநாகரம் அ வேங்கடாசலச் செட்டியார், நா. நா. ராம. நாராயணச் செட்டியார் என்னுமிருவருமே,

யாழ்ப்பாணத்து நல்லூர் மகாவித்துவான் அரசகேசரி

இவர் இயற்றிய இரகுவம்மிசம் 1887-இல் நல்லூர் வித்துவ சிரோமணி சா. பொன்னம்பலம் பிள்ளையால் சரி பார்த்து அச்சிடப்பெற்றது. இந்நூலில் பதிப்பாசிரியர் பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

"கல்வியறிவொழுக்கங்களினும் சிவபக்தி அடியார் பத்தி களினும் சிறப்புற்றவரும் இந்நூலின் அருமை பெருமைகளை நன்குணர்ந்தவரும் ஆகிய சிங்கப்பூர் மெய்யப்ப செட்டியார் என்றழைக்கப்படும் காரைக்குடி மெய்யப்ப செட்டியாரவர்கள் உபகரித்த பொருள் கொண்டு இந்நூலைப் பிழையறப் பரிசோதித்து அச்சிற் பதிப்பித்தேன்"

தமிழ் அமைப்புக்கள், விழாக்கள்

கொழும்புத் தமிழ்ச் சங்கத்திலும் ஏனைய தமிழ்ச் சங்கங்களிலும் செட்டி நாட்டவர் பலர் உறுப்பினராக இருந்திருக்கின்றனர். ஈழத்தின் பல்வேறு பகுதிகளான மட்டக்களப்புத் தமிழகம், திருக்கோணமலை ஆகியவற்றிலும் மலைநாட்டிலும் தமிழ் விழா, திருக்குறள்விழா முதலியன நடைபெற இவர்கள் காரணமாக இருந்தார்கள். தமிழ்நாட்டி லிருந்து தமிழ்ப் பேராசிரியர்கள், அறிஞர்கள், மடாதிபதிகள் ஆகியோரை ஈழத்திற்கு அழைத்துச் சொற்பொழிவு ஆற்று வதற்கான விரிவான ஏற்பாடுகளையும் செய்தனர்.

சென்னையில் ஔவை நூலகம் நடத்திய என். எஸ், நாராயணன் என்னும் இளைஞர், அதற்கு முன்னர் ஈழத்துத் திருக்குறள் மன்றம் நடத்தியவர் ஆவார். இலங்கையில் நடை பெற்ற தமிழ்முயற்சிகள் அனைத்துக்கும் புரவலராகஇருந்தவர் களில் குறிப்பிடத்தக்கவர்கள் மூவர்.

1) இலங்கை இந்திய காங்கிரஸின் முதலாவது தலைவர் வலையபட்டி (வலம்புரி) வ. ராம. லெட்சுமணன் செட்டியார் எம். எல். சி.

2) சொக்கநாதபுரம் செ. ராம. வள்ளியப்பசெட்டியார் ஜெனரல் மானேஜர், செட்டிநாடு கார்ப்பரேஷன்.

3) இப்போது இலங்கையில் அமைச்சராக உள்ள திரு. சௌமிய நாராயண தொண்டைமான். இவர் தேயிலைத் தோட்ட முதலாளி; பத்து இலட்சம் இந்திய தொழிலாளரின் தலைவர்; செட்டிநாட்டுப் பட்டமங்கலத்தை அடுத்த எம். புதூர் ஊரினர்.

# 33 பர்மா

பர்மாவில் நகரத்தார் செய்த தமிழ்ப் பணிகள் நால்வகைப் படும்.

### பள்ளி

முதலாவதாகக் குறிப்பிடத்தக்கது, கல்விக்கூடம். பர்மா வாழ் தமிழர்களின் குழந்தைகள் தமிழ்க் கல்வி பயிலுவதற்கென இரங்கூனுக்கு அருகே கம்பை என்னும் சிற்றூரில் 1930-இல் கம்பை தனவைசியர் கல்விக் கழகம் தொடங்கினர். இப்பள்ளியை, ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் 1930-இல் தொடங்கி வைத்தார். பள்ளிக்கு வருகை புரிந்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர் மகாத்மா காந்தி.

1941 வரை இப்பள்ளி நடைபெற்று வந்தது.

ஆங்கிலம், பர்மிய மொழிகள் மட்டுமே கற்பிக்க, பர்மாவில் கல்விச்சட்டம் வகை செய்தது. அந்த நிலையை மாற்றி, பர்மாவில் பல இடங்களில் தமிழ்ப் பள்ளிக் கூடங்கள் ஏற்படுவதற்கு பர்மிய அரசினரின் இசைவு பெற்றுத் தந்தவர்கள் நகரத்தாரே ஆவர்.

### இதழ்கள்

பர்மா நகரத்தார் சங்கத்தின் ஏடாக 'தனவணிகன்' வெளிவந்தது. இது வார இதழ். இந்த இதழின் ஆசிரியராகச் சில ஆண்டுகள் ஏ. கே. செட்டியார் இருந்து வந்தார். அப்போது தான் அவருடைய 'ஜப்பான்' என்ற முதல் பயண நூல் இரங்கூனில் வெளியிடப் பெற்றது.

'தனவணிகன்' இதழின் துணை ஆசிரியராக இருந்த வெ. சாமிநாத சர்மா 1937 ஆகஸ்டு மாதத்தில் 'ஜோதி' என்ற இதழைத் தொடங்கி, ஆசிரியராகவும் உரிமையாளராகவும் இருந்து வந்தார். ஜப்பானியர் இரங்கூனில் குண்டு போட்டதும் 'ஜோதி' அணைந்து விட்டது. 'ஜோதி' இதழுக்கும் அறிஞர்

சாமிநாத சர்மாவுக்கும் பெரிதும் ஆதரவு கொடுத்தவர்கள் செட்டிநாட்டு அன்பர்கள். இந்தத் தொடர்புதான் 1942-இல் திரு. சர்மா சென்னைக்கு வந்ததும் நூல்கள் எழுதி உடனுக்குடன் வெளியிட உதவியாக இருந்தது. இவர்க்கும் முறையூர் அரு. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கட்கும் இடையே ஏற்பட்ட வாழ்நாள் தொடர்புக்கு இரங்கூன் மண்ணில் 1937-இல் வித்திடப்பெற்றது.

தனவணிகன் வெளியிட்ட சங்க மலர்கள் போற்றிப் பாதுகாத்து வைக்கத் தக்க சிறப்பு உடையன. மகா மகோ பாத்தியாய டாக்டர் உ. வே சாமிநாத ஐயர் அவர்களும் பிறரும் அவற்றில் கட்டுரைகள் எழுதினர். கணக்குப் பரிசோதனை, இன்சூரன்ஸ் ஆகிய வணிகத் துறைகள் பற்றி 1936-இலேயே கட்டுரைகள் வெளியிட்ட ஒரே தமிழ் இதழ் தனிவணிகன்.

நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் அமைத்த சுதந்திர இந்திய அரசாங்கத்திற்காக தமிழ் நாளிதழாக "ஜெய்ஹிந்த்" வெளிவந்தது. இதன் ஆசிரியராக இருந்தவர் திரு. சக்திமோகன் என்ற இராகவன். இவர் நற்சாந்து பட்டி ஊரினர். பர்மா விலிருந்து திரும்பி வந்த பிறகு மதுரையில் வாழ்ந்தார். சில ஆண்டுகள் மதுரை 'தமிழ் நாடு' இதழில் துணை ஆசிரியராகவும் தமிழக மேலவை உறுப்பினராகவும் இருந்தார்.

## நூலகங்கள்

மூன்றாவது பணி, ஏறத்தாழ 40 ஊர்களில் தமிழ்நாட்டு இதழ்களையும் தமிழ்நாட்டில் வெளியான தமிழ் நூல்களையும் வரவழைத்து, படிப்பகமும் நூலகமும் நடத்தியதாகும். இந்த அமைப்புகளின் விழாக்களுக்குத் தமிழ்நாட்டிலிருந்து அறிஞர் கள் வரவழைக்கப் பெற்றனர். பர்மாவாழ் தமிழரிடையே தமிழ் மொழி, சைவசமய மற்றும் இந்திய தேசிய இன உணர்ச்சிகளை வளர்க்க இந்த அமைப்புக்கள் உறுதுணையாக இருந்தன.

## நூல் வெளியீடு

இன்றைய தமிழ்ப் பதிப்பாளர்களில் குறிப்பிடத் தக்க வர்களான திரு. கண. முத்தையா, திரு. க. அ. செல்லப்பன் போன்றவர்களும் எழுத்தாளர் சிலரும் அதற்கேற்ற பக்குவம் அடைந்தது பர்மாவில் என்று தங்குதடையின்றிக் கூறலாம்.

திரு சக்தி மோகன் (1919-1982) பர்மாவில் இருந்தபோது ஆசியாவின் வெற்றி, யுத்தக் குத்தகை, உலகம் உருப்படுமா? என்ற நூல்களை எழுதினார். நேத்தாஜி இயற்றிய ஒரு நூலை நெஞ்சோட்டம் என்ற பெயரில் தமிழில் பெயர்த்தார்.

சைவ சமயத் தொடர்பான பல நூல்கள் பர்மாவில் நகரத்தார் உதவியுடன் வெளிவந்தன. காஞ்சிபுரம் குமர கோட்டம் சோணாசலபாரதி என்ற புலவரை இரங்கூனுக்கு வரவழைத்து ''கம்பைச் சந்நிதிமுறை'' என்ற நூலை 1903-இல் வெளியிடச் செய்தார்கள்.

## பர்மிய மொழியில் திருக்குறள்

இரங்கூனில் உள்ள கம்பை தனவைசியர் கல்விக் கழகத்தாரின் பெரு முயற்சியால் திருக்குறள், பர்மிய மொழியில் வெளிவந்திருக்கிறது

வெளியீட்டு விழா இரங்கூன் நகரில் ஸ்ரீ ராமகிருஷ்ணாமிஷன் மண்டபத்தில் 14-11-1964 இல் நிகழ்ந்தது. விழாவிற்கு கழகத் தலைவர் திரு. தே. சுப்பிரமணியன் செட்டியார் தலைமை வகித்தார்.

விழாவிற்கு இந்திய பர்மியப் பெரியார்களும் பத்திரிகை யாளர்களும், ஆசிரியர்களும், கவிஞர்களும், எழுத்தாளர் களும், அரசாங்க அதிகாரிகளுமாக மண்டபம் முழுமையும் குழுமி இருந்தார்கள்.

திருக்குறளில் இருந்து கடவுள் வாழ்த்துப் பாட விழாத் தொடங்கியது.

அனைவரையும் வரவேற்று கழகத்தலைவர் தமது உரையில் ''தற்போது வெளியிடும் திருக்குறள் 2000 ஆண்டுகளுக்கு முன்னர் திருவள்ளுவர் என்னும் மாமேதையால் இயற்றப்பட்ட அறிவுக்களஞ்சியமாகும். அகில உலகிலும் சுமார் 30 மொழிகளில் திருக்குறளை மொழி பெயர்த்திருக்கிறார்கள். பாரதத்தின் தென் பகுதி மக்களாகிய தமிழ் மக்களின் வேதநூலாகத் திகழ்கின்றது. 2000 ஆண்டுகளாக பல சூழ்நிலைகளை உலகம் கடந்திருப்பினும் தமிழ்மறையானது இந்தநாகரிககாலத்திற்கும் ஏற்றதாக அமைந்துள்ளதென அறிஞர் பெரு மக்களால் கருதப் படுகிறது. இந்த கம்பைதனவைசியர் கல்விக்கழகம் தோன்றிய 36 ஆண்டுகளில் அது ஆற்றிய பணிகள் பல. தற்போது வெளி

யீடும் இப்பர்மிய மொழிபெயர்ப்பு திருக்குறள் மிகவும்பெருமைக் குரிய தொண்டாகும். பர்மிய மொழிபெயர்ப்பு வெளி வருவதன் மூலம் இந்நாட்டு பர்மிய மக்கள் தமிழர்களின் பண்பு, கலை, கலாச்சாரம் முதலியவற்றை வெகுவாகப் புரிந்துகொள்ள இயலு வதோடு இந்திய பர்மிய உறவு வலுவடையவும் வளர்ச்சியடை யவும் வேண்டுமென பிரார்த்திக்கின்றேன்'' எனக் கூறினார்.

இலங்கையில் முன்னாள் பர்மியத் தூதுவராக அங்கம் வகித்த பர்மியப் பெரியார் ஊ பாலுவின் தமிழ் மறை தந்த திருவள்ளுவ நாயனார் அவர்களின் திருவுருவப் படத்தை திறந்துவைத்து இந்திய மக்களின் கலை, கலாச்சாரம், தமிழர் தம் பழக்க வழக்கங்களையும் வெகுவாக விளக்கிக் கூறினார்.

இந்திய தூதுவர் கனம் வைஸ்அட்மிரல் ஆர். டி. கட்டாரி அவர்கள் ஊ மியோத் தாண்ட் என்பவரால் மொழி பெயர்க்கப் பெற்ற பர்மியத் திருக்குறள் நூலின் முதல் பிரதியை தலைமைப் புத்த பிட்சுவுக்கு வழங்கிப் பேசுகையில்,

''நான் இங்கு வந்த பின்னர் கலந்துகொண்ட வைபவங் களிலே இந்த வைபவம் தான் எனக்கு பெரும் மகிழ்ச்சியைத் தருகிறது ஏனெனில் இந்த வைபவத்திலே இந்தியர்களையும் பர்மியர்களையும் சரிசமமாக சகோதரர்கள் போன்று வீற்றிருக் கக் காணுகிறேன். இதைக்காண நான் பெருமை அடைகிறேன். இந்தியர் பர்மியர்களிடையே நிலவிவந்த நேச உறவை மேலும் வலுவடையச் செய்வதே எனது இலட்சியம். இந்த இலட்சியத் திற்குஉற்சாகம் ஊட்டுவதாக இருக்கின்றது நாட்டுக்கோட்டை செட்டியார்களின் கல்விக் கழகம் நடத்தி வைக்கும் இந்த நிகழ்ச்சி. இந்திய பர்மிய நேசஉறவை வளர்ப்பதற்கு உறுதுணை யாக இருக்கும் இந்த திருக்குறள் பர்மிய மொழிபெயர்ப்பு நூலை வெளியிடும் இக்கல்விக் கழகத்தினருக்கு எனது நன்றியையும் பாராட்டுதலையும் இந்திய நாட்டின் பிரதிநிதி என்ற ரீதியில் தெரிவித்துக் கொள்ளுகிறேன்'' எனக்குறிப்பிட்டு திருக்குறளின் பெருமையை ஆங்கிலத்தில் விளக்கிக்காட்டினார்.

பர்மிய மொழிபெயர்ப்பாளர் ஊ மியோத் தானை சபை யோருக்கு கழகத் தலைவர் அறிமுகப்படுத்தி பொன்னாடை போர்த்தி கௌரவித்தார்.

மொழிபெயர்ப்பாளர் ஊ மியோத் தாண்ட் தமது உரை யில் கூறியதாவது :

''ஒரு மொழியிலிருந்து பிறிதொருமொழியில் பெயர்ப்புச் செய்வது சிரமமானபணி என்றும், அதிலும் திருக்குறள் போன்ற உயரிய நீதி நூல்களை மூலத்தின் சுவை குன்றாமல் மொழி பெயர்ப்பது மிகமிகச் சிரமம் என்றும் ஆனால் நான் என்னால் முடிந்தவரை மூலம் தமிழில் இருப்பினும் ஆங்கில மொழி பெயர்ப்புக்களிலிருந்து பெயர்த்திருப்பதாயும், இம்மொழி பெயர்ப்பு மக்கள் ஆதரவை வெகுவாகப் பெறுமென்று தாம் நம்புவதாகவும் குறைகள் ஏதும் இருப்பின் பொறுத்தருளுமாறும் கேட்டுக் கொண்டார்.

அதன்பின் பர்மியப் பத்திரிகையாளர் சங்கத் தலைவரும் பிரபல பர்மியத் தினசரியான அந்தாவடியின் ஆசிரியருமான ஊ. பா. பே. யும், கவியரசர் ரவீந்திரநாத் தாகூரின் கவிதை களை பர்மிய மொழியில் மொழி பெயர்த்த டாக்டர் மவுங்பியூ வும் திருக்குறள் பர்மிய மொழி பெயர்ப்பிலிருந்து சிலவற்றை விளக்கி பர்மிய நீதி நூல்களுடன் ஒப்பிட்டுக்காட்டி சிறப்பு இயல்புகளை விளக்கிக் கூறினார்கள். அகில பர்மா தமிழர் சங்கத்தின் முன்னாள் தலைவர் திரு. லெட்சுமணன் திருக்குறள் உலகுக்கு மத, இன வேறுபாடின்றி சென்ற 2000 ஆண்டுகளுக்கு முன் தமிழில் உதயமாகிய அறிவுக் களஞ்சியமென்றும், அது தற் சமயம் பர்மியமொழியில் வெளிவந்திருப்பது பெருமைக்குரிய தென்றும், குறளடிகள் சிலவற்றை எடுத்து விரிவாகப் பேசினார்.

மொழிபெயர்ப்புக் குழுவினர்களில் ஒருவராகிய திரு. காந்தி அண்ணாமலை கூட்டச் செயலாளராகப் பொறுப் பேற்றிருந்தார்.

கூட்டத்திற்கு வருகை தந்திருந்த பர்மிய மக்களுக்கு திருக்குறள் பர்மிய மொழி பெயர்ப்பு நூல் அன்பளிப்பாக வழங்கப்பெற்றது.

இப்பர்மியத் திருக்குறள் நூல் 250 பக்கங்களைக் கொண் டது. 1330 அருங்குறட் பாக்களுக்கும் விரிவான முறையில் அனை வரும் புரிந்து கொள்ளும் நடையில் மொழிபெயர்க்கப்பெற்றுள் ளது. திருக்குறள், திருவள்ளுவர், தமிழ், தமிழ்நாடு, தமிழர் பண்பாடு ஆகியவற்றை பற்றி குறிப்புரையும் சேர்க்கப்பெற் றுள்ளன. குறிப்பும் விளக்கமும் இறுதியில் கொடுத்து யாவரும் எளிதில் புரிந்து கொள்ளும்படி அமைந்துள்ளது. நூலின் முகப்பு கண்கவர் வண்ணக்கலரில் குத்துவிளக்கு, ஓலைச்சுவடி யுடன் அழகாக அமைந்துள்ளது.

திரு காந்தி அண்ணாமலை

பி. பள்ளத்தூர் 1918. தந்தையார்—அருணாசலம் செட்டியார்.

இரங்கூனிலிருந்து வெளிவந்த தனவணிகன் இதழின் அலுவலகப் பொறுப்பாளராக 1939-இல் பர்மாவுக்குப் போய்ச் சேர்ந்தார். தொடர்ந்து அந்த நாட்டிலேயே இருந்து வருகிறார். இடையே 1940-இல் காந்தியடிகளைச் சந்திக்க சேவா கிராமத்துக்குச் சென்று அந்த நாள் முதல் தம் பெயரை 'காந்தி அண்ணாமலை' ஆக மாற்றிக் கொண்டார்.

தொடர்ந்து பர்மாவில் இருந்து வருகிற போதிலும் தமிழ் நாட்டு அறிஞர்களுடன் இவரளவுக்குத் தொடர்பு உடையவர் என்று வேறு எவரையும் சுட்டிக்காட்ட இயலாது. தமிழ் நாட்டில் இருப்பவர்கட்கு ஓய்வு ஒழிவு இன்றிக் கடிதங்களும் தமிழ் இதழ்கள் பலவற்றுக்கும் கட்டுரைகளும் படங்களும் அனுப்பிய வண்ணமாக இருந்து வருகிறார்.

இவர் எழுதிய நூல்கள்—நேத்தாஜி வரலாறு, தாகூர் வரலாறு, முருகன் அர்ச்சனை 1008, பராசக்தி அர்ச்சனை 1008

இவர் நடத்திய பதிப்பகம் சிதம்பரநாதன் அண் கோ, இரங்கூன்.

இவருடைய தூண்டுதலால் வெளிவந்தது—பர்மிய மொழியில் திருக்குறள்.

பர்மாவில் இவர் கலந்து கொள்ளாத தமிழ் விழா ஒன்றேனும் இல்லை.

இரங்கூனில் உள்ள இந்தியத் தூதர் அலுவலகத்தில் தமிழ் நூல்களும் இடம் பெற வேண்டும் என்பது இவருடைய அவா.

இந்திய வானொலியில் தமிழ் மாதமும் தேதியும் ஒவ்வொரு நாளும் அறிவிக்கப்பட வேண்டும் என்று இவர் பல முறை, இந்திய அரசினர்க்கு வேண்டுகோள் விடுத்துள்ளார். வேண்டுகோள்களின் படிகளைத் தமிழ் நாட்டுத் தலைவர்கள் பலர்க்கும் அனுப்பியிருக்கிறார்.

முகவரி 116 *Shwebontha Street Rangoon, Burma*

இவருடைய பணிகளுக்கு உறுதுணையாக இருக்கும் மற்றொரு எழுத்தாளர் மேலைச்சிவபுரி திரு.மு அண்ணாமலை

முகவரி *M. A. Chettiar*
*57, 41st Street Rangoon*

## கவிராயர் பெரி. இலக்குமணச் செட்டியார் (1901-1973)

வேகுப்பட்டி ஊரினர். 13 வயதிலேயே இசை நாடகப் புலமை பெற்றுச் சிறந்து விளங்கினார். ஒழுகிய ஓசையாலும் விழுமிய சொற்களாலும் சங்க இலக்கியங்களைத் தழுவிய கருத்துக்களைக் கவிதையாக வடித்து, நண்பர்களால் கவிராயர் என்று அழைக்கப் பெற்றார். புலவர்கட்கு இயல்பாக நேரிடும் வறுமை இவரை வாட்டியதால், பொருளீட்ட பர்மாவுக்குச் சென்று அங்கு நெடுங்காலம் வாழ்ந்தார்.

இவர் இறுதிக்காலத்தில் ஆக்கியது பூம்புகார் ஆற்றுப் படை. ஆற்றொழுக்கான இந்தப் படைப்பை வெளியிட்டு உதவியவர் மகிபாலன்பட்டி சித்தாந்தமணிமொழிச் செல்வர் சி.ராம.



இவர் இயற்றிய நூல்கள்

| எண் | நூலின் பெயர் | நூல் தோன்றிய ஆண்டு | யாப்பின் வகை |
|---|---|---|---|
| 1 | ஸ்ரீதையனாயகி அம்மன் பதிகங்கள் | 1924 | விருத்தப் பாக்கள் |
| 2 | வன்னியுங்கிணறும் இலிங்கமும் அழைத்த சரித்திரம் | 1926 | இசைப்பாடல்கள் |
| 3 | மக்கள் தாலாட்டு | 1927 | இசைப்பாடல் |
| 4 | திருநீலகண்டநாயனார் சரித்திரம் (பண்டிதமணி அவர்களின் முன்னுரையுடன்) | 1934 | இசைப் பாடல்கள் |
| 5 | ஸ்ரீதையனாயகி அம்மன் தோத்திரப் பாக்கள் | 1934 | நேரிசைவெண்பா |
| 6 | ஸ்ரீ அழகியமெய்யர் சுவாமிபதிகம் | 1934 | ஆசிரிய விருத்தம் |

| | | | |
|---|---|---|---|
| 7 | வலம்புரி ஸ்ரீ மலையாண்டிசுவாமி பதிகம் | 1934 | விருத்தப் பாக்கள் |
| 8 | மோல்மேன்(பர்மா) ஸ்ரீ தெண்டாயுத பாணிபதிகம் | 1948 | அறுசீர் விருத்தம் |
| 9 | தட்டோன்(பர்மா)பீலாயின் தெண்டாயுதபாணி பதிகம் | 1948 | அறுசீர் விருத்தம் |
| 10 | மோல்மேன் சிவஸ்தலம்(பர்மா) ஸ்ரீ முருகக்கடவுள் பதிகம் | 1951 | எண்சீர் விருத்தம் |
| 11 | மக்கள் தாலாட்டு சிலமாற்றங்களுடன் இரண்டாம் பதிப்பு | 1965 | இசைப் பாடல் |
| 12 | தேனிமலை முருகக்கடவுள் தேவாரப் பண்ணிசைப் பதிகம் | 1965 | தேவார இசைப்பாடல் |
| 13 | மழைவேண்டுங்கலி வெண்பா | 1966 | கலிவெண்பா |
| 14 | திருமால் தசாவதாரப்பதிகம் | 1966 | நேரிசை வெண்பா |
| 15 | கண்ணன் துதிப்பாடல் | 1966 | இசைப் பாடல் |
| 16 | ஆறுபடை வீடுடைய அருள்முருகன் அகவற்பா | 1966 | ஆசிரியப்பா |
| 17 | குயில் நீகூவாய்(தேசநலன்பேணுஞ் செந்தமிழ்க் கவிதை) | 1967 | எண்சீர் விருத்தம் |
| 18 | காடப்பிள்ளை ஐயனார்பதிகம் | 1967 | எண்சீர் விருத்தம் |
| 19 | மலையாண்டிசுவாமிபதிகம் (சில மாற்றத்துடன் 2-ஆம் பதிப்பு) | 1967 | எழுசீர் விருத்தம் |
| 20 | வேவுமாநகர் ஸ்ரீ ஏனமாரிஅம்மன் துதி இசைப்பாடல்கள் | 1967 | இசைப் பாடல்கள் |
| 21 | ஸ்ரீ அழகியமெய்யர்சுவாமிபதிகம் ஏற்கெனவே உள்ள நூலில்பெரும் பான்மைமாறுதல்களுடன் புதிதாய் அமைக்கப் பெற்றது | 1967 | விருத்தப்பா |
| 22 | திருக்குறள் நூற்சிறப்பு | 1968 | நேரிசைவெண்பா |
| 23 | ஸ்ரீ முத்துக்கருப்பவினாயகர்பதிகம் | 1968 | கட்டளைக் கலித்துறை |
| 24 | பத்திரகாளிஅம்மன் துதிபாடல்கள் | 1968 | சந்த விருத்தம் |
| 25 | குடும்பக் கட்டுப்பாடு | 1968 | எண்சீர் விருத்தம் |

# 34 மலேசியா

சென்னையில் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்

தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக்கழகம்

மதுரையில் உலகத் தமிழ்ச் சங்கம்

ஆகியவை உருவாகியுள்ளன. இவற்றுக்கு வித்திட்டவை உலகத் தமிழ் மாநாடுகள். இத்தகைய உலகம் தழுவிய பெரு விழாக்களைத் தமிழ் மொழிக்கு எடுக்கவேண்டும் என்ற எண்ணம் உருவான இடம் கோலாலம்பூரில் உள்ள மலேயாப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை. இந்தத் துறையை உருவாக்கியதிலும் மலேசியாவெங்கும் தமிழ் உணர்ச்சி பெருகச் செய்ததிலும் செட்டிநாட்டு அன்பர்களின் பங்கு பெரிது, மிகப் பெரிது மிக மிகப்பெரிது. அதைச் சுட்டிக் காட்டுவோம்.

## மலேயாத் தமிழ்ப் பண்ணை

மலேசியாவில் தமிழ் உணர்ச்சியை ஊட்டியவர்களுள் முதன்மையானவர் தமிழறம் பேணும் தகைமையாளர் உ. அரு அருணாசலம் செட்டியார் ஆவார் (1901-1951) செட்டிநாட்டில் இராமச்சந்திரபுரம் ஊரினர் மலாக்காவில் வாழ்ந்து வந்தார்.

"மலேயாத் தமிழ்ப் பண்ணை" என்ற அமைப்பை ஆரம்பித்த பெரியார் இவரே. இந்த நாட்டில் வாழும் தமிழர் தங்கள் தாய்மொழியைப் படிக்க வசதி செய்யப்பட வேண்டும் என்ற எண்ணத்தால் 1948-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் அருணாசலம் செட்டியார் தலைமையில் மலேயாத் தமிழ்ப் பண்ணை உருவாயிற்று.

இந்தப் பண்ணையின் ஆதரவில் பல ஊர்களில் தமிழ் ஆசிரியர்களுக்கும் ஏனையோர்க்கும் தமிழ் வகுப்பு தொடங்கப் பெற்று. தமிழ்ச் சொற்பொழிவுகள் ஏற்பாடு செய்யப்பெற்றன.

கோலாலம்பூரில் சிரம்பானிலும் தமிழ்க் கலை மாநாடுகள் பெருஞ் சிறப்புடன் நடத்தப் பெற்றன. சொற்பொழிவுகள், பேச்சுப் போட்டிகள், நாடகங்கள், இசை நிகழ்ச்சிகள் ஆகியன அதில் இடம் பெற்றன. இத்தகைய ஒரு விழா மலாய் நாட்டில் அதற்கு முன் நடந்ததில்லை.

தமிழ்நாட்டிலிருந்து அவ்வப்போது வந்த சொற்பொழி-வாளர்கள் தமிழ்ப் படிப்பிற்கு ஊக்கம் கொடுத்தனர்.

தமிழ்ப்பண்ணையின் கிளைகள் மலேயா (அன்றைய பெயர் அதுவே) வின் பல பகுதிகளிலும் ஏற்பட்டன. அதன் விளைவாகப் பலர் தமிழ் கற்கலாயினர். சிலர் தமிழில் சொற் பொழிவாற்றவும் பயிற்சி பெற்றனர்.

## திருக்குறள் மொழிபெயர்ப்பு

அருணாசலம் செட்டியாரின் மற்றொரு சாதனை, அவர் முயற்சியால் மலாய் மொழியில் திருக்குறள் மொழி பெயர்ப் புக்கு ஏற்பாடு செய்யப்பட்டதாகும்.

பல மொழிகளில் திருக்குறள் மொழி பெயர்க்கப் பட்டிருந்தாலும் அப்போது (1948-இல்) மலாய் மொழியில் மொழிபெயர்ப்பு வரவில்லை.

குறள் 1330-ஐயும் மலாயில் பெயர்ப்பதற்குத் தேவை யான அளவுமலாய் மொழிப் புலமை பெற்ற தமிழரோ தமிழ றிந்த மலாய்க்காரரோ அந்நாளில் எவரும் இல்லை. இந்த இடர்ப்பாடுகளைக் கருத்தில் கொண்டு, பல அதிகாரங்களிலி ருந்துப் பொறுக்கி எடுத்த நூறு குறள்களுக்கு மட்டும் மலாய் மொழிபெயர்ப்பும் ஓரளவு விளக்கமும் கொண்ட சிறு நூல் வெளியிடப் பெற்றது.

## பிற பணிகள்

அருணாசலம் செட்டியாரின் மற்றொரு பணி தமிழ்க் கொடி என்னும் திங்கள் இதழை மலாக்காவிலிருந்து பல்லாண்டு கள் நடத்தி வந்ததாகும்.

மலாக்காவில் திருவள்ளுவர் நூல் நிலையத்தை அவர் நிறுவினார். சிறந்த சொற்பொழிவாளராக விளங்கினார். மலேயாவில் பல நகர்களில் தமிழ் மாநாடுகளை நடத்தினார்— நடத்திக் காட்டினார் என்று சொல்லலாம் திருக்குறள் வகுப்பு, தமிழ் இலக்கிய வகுப்பு முதலியவற்றை யெல்லாம் நடத்திய முன்னோடி, வழிகாட்டி அருணாசலம் செட்டியார். மலேயா வாழ் தமிழர்களின் தாய் மொழி ஆர்வத்தைத் தூண்டிவிட்ட பெரியவர் இவரே ஆவார்.

முத்துப் பழனியப்ப செட்டியார்

மலேயாவில்நெடுங்காலம் வாழ்ந்துபுகழ்பெற்றமற்றொரு தமிழறிஞர் ஆத்தங்குடி பெ. நா. மூத்துப் பழனியப்ப செட்டியார் ஜெ. பி. இந்த நாட்டைப் பற்றித் தமிழில் முதலாவதாக ஒரு நூல்—பெரியதொரு நூல்— எழுதியவர் இவரே ஆவார். நூலின் பெயர்—மலேயாவின் தோற்றம்.

கா. இராமநாதன்

இவர் பள்ளத்தூர் ஊரினர். சென்னையில் பல்லாண்டுகள் வழக்கறிஞராக இருந்தவர். சைவ சித்தாந்த சமாஜத்தின் தலைவராக விளங்கியவர்.

1945 ஆம் ஆண்டு அளவில் இவர் கோலாலம்பூருக்கு வழக்குரைஞர்—கணக்கு ஆய்வாளராகச் சென்றார். 1965 ஆம் ஆண்டு அளவில் அங்கேயே உயிர் நீத்தார். இந்த இருபதாண்டுக் காலத்தில் மலேயாவாழ் தமிழரின் தலைவரானார். மலேயா இந்தியர் காங்கிரஸ் போன்ற ஏராளமான நிறுவனங்களின் பொறுப்பு இவரிடம் ஒப்படைக்கப்பெற்றது.

திருக்குறளைப் பயில வேண்டும் என்ற ஆர்வத்தை மலேயாவாழ் தமிழரிடையே எழுப்பியவர் இவரே ஆவார். பல ஊர்களில் இவருடைய முயற்சியால் திருக்குறள் வகுப்புகள் தொடங்கப் பெற்றன.

இவர் எழுதிய நூல்கள் டால்ஸ்டாயின் கட்டுரைகள் (மொழிபெயர்ப்பு), ஏன் பிறந்தோம்?, வாழ்க்கையும் சமயமும் பிரார்த்தனைப் பாமாலை முதலிய பல.

இவர் கோலாலம்பூரிலிருந்து நடத்திய இதழ்— சோலை

சென்னை வானொலியில் "மலேயாவில் தமிழ்" என்ற தலைப்பில் இவர் பேசிய உரை, அந்தப் பொருள் பற்றி ஆராய்வார்க்கு அரிச்சுவடி போன்றது.

மலேயாத் தமிழ்பண்ணையின் தூணாக, அரணாக இவர் விளங்கினார்.

மலேயாப் பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பாடத் திட்டக் குழுவிலும் மலேயாப் பல்கலைக் கழகத்து தமிழ்ப் பகுதி நிதி வசூல்குழுவிலும் இவர் உறுப்பினராக இருந்திருக்கிறார்.

டத்தோ ஆதி நாகப்பன் பார்—அட்—லா (இ 1976)

இவர் செட்டிநாட்டில் (சருகணிக்கு அருகேயுள்ள) சொக்கநாதபுரம் ஊரினர். ஆதினமிளாகி செட்டியார் மகனார்.

1945-இல் பினாங்கிலிருந்து வெளிவந்த சேவிகா என்ற தமிழ் நாளேட்டின் ஆசிரியராக இருந்து, பிறகு ஜெய்ஹிந்த் என்ற வார இதழைத் தாமே பினாங்கிலிருந்து நடத்தினார்.

1947முதல் 1952வரை 'தமிழ் நேசன்' நாளிதழின் ஆசிரியராகப் பணிபுரிந்தார். அப்போது இவர் ஏராளமான கதைகளும் கட்டுரைகளும் படைத்தார் மொழிபெயர்ப்பாளராகவும் சிறந்து விளங்கினார். இந்நூலாசிரியர் உட்பட, தமிழ் நாட்டிலிருந்து சென்றவர்கள் பலரை வானொலியில் விரிவாகப் பேட்டி கண்டார்.

1955-இல் லண்டன் தமிழ்ச் சங்கத்தின் தலைவராக இருந்தார்.

மலேசிய அரசின் சட்ட அமைச்சராகவும் திகழ்ந்தார். 1968 இல் சென்னையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டுக்கு வருகை புரிந்த மலேசியப் பேராளர்களின் தலைவராக மலேசிய அரசால் நியமிக்கப் பெற்றார்.

தமிழ் நேசன்

1924-ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்று இடைவிடாது வெளிவரும் கோலாலம்பூர் தமிழ் நாளிதழ் தமிழ் நேசன் தலைசிறந்த பதிப்பு, தரமான ஏடு.

இந்த இதழை, 1946-ஆம் ஆண்டு அளவிலிருந்து வலையபட்டி திரு. மலையாண்டி செட்டியார் குடும்பத்தார் நடத்தி வருகின்றனர் திரு. மலையாண்டி செட்டியார் காலமான பிறகு அவர் மகன் திரு நாகப்பன் இந்தப் பொறுப்பை இனிது நிறைவேற்றி வருகிறார்.

எல்லா வகையிலும் தமிழுக்கு இந்த இதழ் ஏற்றம் கொடுத்து வருவதை அனைவரும் ஒருமுகமாகப் பாராட்டி வருகின்றனர்.

காரைக்குடி சா லெ. செட்டியப்ப செட்டியார்

பெருந் தொழிலதிபராக—தோட்ட உரிமையாளராக—விளங்கிய இச்செல்வர் 1930-ஆம் ஆண்டில் ஈப்போவில் திருவள்ளுவர் செந்தமிழ்க் கலாசாலை நிறுவினார். அந்தக் காலத்தில் இவர் சிறந்த உபந்யாசகராகத் திகழ்ந்தார் என்பர்.

தமிழ் எங்கள் உயிர்—இயக்கம்

1952–ஆம் ஆண்டு அளவில் சிங்கப்பூரும் மலேசியாவும் சேர்ந்த மலேயா கூட்டு அரசு அந்த நாட்டுக்கு ஒரு பல்கலைக் கழகம் தொடங்க முடிவு செய்தது. உருவாக விருக்கும் அந்தப் பெருங் கல்விக் கூடத்தில் இந்திய இயல் என்ற புலம் தொடங்கவும் முடிவு செய்தது.

இந்திய இயல் என்ற புலம் எவ்வாறு அமைய வேண்டும் என்று கருத்துக் கூற, அறிக்கை வழங்க, இந்திய அரசு பரிந்துரைத்த பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியாரை, மலேயா அரசு வரவழைத்தது. இந்திய இயல் புலம் என்பது சமஸ்கிருதத் துறையாக இருக்க வேண்டும் என்று நீலகண்ட சாஸ்திரியார் தம் அறிக்கையில் தெரிவித்திருந்தார்.

இதை அறிந்த சிங்கப்பூர்—மலேயா தமிழர்கள் கொதித்தெழுந்தனர்.

சிங்கப்பூர் 'தமிழ் முரசு' ஆசிரியர் தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்களைத் தலைவராகக் கொண்டு தமிழ் எங்கள் உயிர் என்ற இயக்கம் தொடங்கப் பெற்றது.

(1) நீலகண்ட சாஸ்திரியாரின் அறிக்கை குப்பைத் தொட்டியில் போடப்பட வேண்டும்

(2) புதிய பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறை தொடங்கப் பெற வேண்டும்.

(3) தமிழ்த்துறைக்குத் தேவையான நிதியைத்தமிழர்கள் திரட்டி வழங்குவர்.

என்ற மூன்று குறிக்கோளுடன் ஆறுமாதக் காலத்திற்கு ஒரு பெரும் போராட்டம் நடைபெற்றது. தமிழர் அனைவரும் ஒன்று திரண்டு தங்கள் நோக்கங்களை நிறைவேற்றினர்.

இந்த இயக்கத்தில் பெரும் பங்கு வகித்தும் நிதி வசூலில் மிகுதியான பொறுப்பு ஏற்றும் புகழ் ஈட்டிக் கொண்டவர்கள் சிங்கப்பூர் ஜே.பி. நாச்சியாபுரம் வயி சண்முகம் செட்டியார், திரு. கா. இராமநாதன் செட்டியார், வள்ளல் திருப்பத்தூர் ரெங்கசாமி பிள்ளை போன்ற ஏராளமான செட்டி நாட்டு அன்பர்கள்.

நகரத்தார்கள் தனியே திரட்டிய நிதி பற்றி வேறொரு இடத்தில் கூறுவோம்.

## வள்ளல்கள்

அவ்வப்போது மலேசியாவில் நடைபெறும் தமிழ் விழாக்களுக்கும் ஏனைய முயற்சிகளுக்கும் உலகத் தமிழ் மாநாட்டுக்கும் பேரன்புடன் நன்கொடை வழங்கிவரும் செட்டி நாட்டு வள்ளல்கள் பலர் அந்த நாட்டில் உள்ளனர்.

கோட்டையூர் க. வீ. அழ, மு. இராமநாதன்செட்டியார் மகிபாலன் பட்டி சி. ராம. திருப்பத்தூர் வள்ளல்கள் ஆறுமுகம் பிள்ளை, ரெங்கசாமி பிள்ளை, காரைக்குடி சா. நா. அ. சொ. அண்ணாமலைச் செட்டியார் மற்றும் கண்டமாணிக்கம் அன்பர் கோட்டபாடு தொழிலதிபர் டத்தோ நாச்சியப்பன் PMK, AMN, JP போன்ற செல்வர்கள் குறிப்பிடத் தக்கவர் ஆவர்,

## திருப்பத்தூர் ஆறுமுகம் பிள்ளை

பினாங்கு நகரில் வாழும் இந்த வள்ளல் தமிழ்க் கல்விக்கும் தமிழர் முன்னேற்றத்துக்கும் பெரும் பொருள் வழங்கியிருக்கிறார். தமிழ்மலர் என்ற நாளிதழைச் சில ஆண்டுகள் நடத்தினார். இப்போது தினமணி என்ற நாளிதழை நடத்தி வருகின்றார். இலக்கிய, சமய விழாக்கள் பலவற்றிலும் கலந்து கொள்கிறார்.

## திருப்பத்தூர் ரெங்கசாமி பிள்ளை

இவரும் பினாங்கில் வாழும் வள்ளல். சொந்த உழைப்பால், உயர்ந்தவர். சிங்கப்பூர் தமிழவேள் சாரங்கபாணி அவர்களின் தமிழ் முயற்சிகளுக்கெல்லாம் கைகொடுத்தவர். தமிழ் எங்கள் உயிர் நிதிக்காகத் தாராளமாக நன்கொடை

வழங்கியவர். மலேயாப் பல்கலைக் கழகத்தில் தமிழை அரியணை ஏற்றிய குழுவின் துணைத்தலைவர்.

தைப் பொங்கல் நாளில் சிறப்பாக நடைபெறும் தமிழர் திருநாள் குழுவின் தலைவர்.

டாக்டர் இராம சுப்பையா வேகுப்பட்டி (1932-1969)

கோலக் கஞ்சார் என்னும் சிற்றூரில் எளிய நிலையில் பள்ளி ஆசிரியராகச் சேர்ந்து, சொந்த முயற்சியால் பி. ஏ பட்டம் பெற்றார். பின்னர் எம். ஏ. ஆனார்.

பேச்சுத் தமிழ் பற்றிய இவருடைய ஆய்வுக்காக லண்டன் பல்கலைக்கழகம் இவருக்கு டாக்டர் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது.

லண்டனிலிருந்து திரும்பியதும் மலாயாப் பல்கலைக் கழகத்தில் தமிழ் விரிவுரையாளராக நியமிக்கப் பெற்றார்.

'கீழ்ப் பேராவில் தமிழ்மொழி வழக்கு' குறித்த இவருடைய ஆய்வு, திசை மொழிகள் வரலாற்றில் குறிப்பிடத் தக்கது.

*Tamil Malaysiana* என்ற தொகுப்பு நூல் மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் வெளியான தமிழ் நூல்கள், இதழ்கள் ஆகிய அனைத்து வெளியீடுகளின் அட்டவணையாகும்.

கோலாலம்பூரில் 1966-இல் நடைபெற்ற முதலாவது உலகத் தமிழ் மாநாட்டில் இவருடைய பங்கு சிறப்பானது. மொழிபெயர்ப்புச் செயலராயும் கண்காட்சிப் பகுதித் தலைவராகவும் விளங்கினார். மொழியியல் பற்றிய ஆய்வுக்கட்டுரைகள் நான்கினைப் படித்தார். மாநாட்டு ஆய்வுக் கட்டுரைகள் —இரண்டாம் தொகுதியின் பதிப்பாசிரியராகத் திகழ்ந்தார்.

தொல்காப்பியத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார். அப்பணி முடிவடையுமுன், இவர் உயிர் நீத்தார்.

பாரதியாரின் குயில் பாட்டை, இவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார். இது மலாயாப் பல்கலைக் கழக வெளியீடான தமிழ் ஒளி-யில் (1966-67) அச்சிடப் பெற்றிருக்கிறது. பக்கங்கள் 158—184

குறுந்தொகையில் நூறு பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார்.

பத்துப் பாட்டில் இவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ள பகுதியை அமெரிக்காவிலுள்ள "ஏஷியா சொசைட்டி" வெளியிட முன்வந்திருக்கிறது.

இக் காயட் ஸ்ரீ ராமா என்பது இராமனின் வரலாறு. இதை மலாய் மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார்.

மலாக்கா மன்னர்களின் வரலாற்றை, மலாய் மொழியிலிருந்து தமிழாக்கியிருக்கிறார்.

*Poetry Singapore* என்ற ஆங்கில ஏட்டின் கூட்டாசிரியர்களுள் ஒருவராக இருந்தார். மலேசியக் கவிஞர்களின் பாடல்களை இவர் அதில் மொழி பெயர்த்து வந்தார்.

கம்ப்யூட்டர் வாயிலாகத் தமிழ் இலக்கண இலக்கியங்களை ஆராயும் முயற்சிகளிலும் இவர் ஈடுபட்டிருந்தார்.

'மலாய் மொழி இலக்கணத்துக்கு ஓர் அறிமுகம்' என்ற இவருடைய நூல் நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கம் வழங்கிய நிதியுதவியுடன் அச்சிடப் பெற்றது.

தனிநாயக அடிகள் விலகிக் கொண்ட பிறகு, அவர் வகித்த மலாயாப் பல்கலைக் கழகத்து இந்திய இயல் தலைவர் பதவிக்கு இவர் நியமனம் செய்யப் பெற்றார்.

அமெரிக்காவில் பல பல்கலைக் கழகங்களுக்கும் இவர் சென்று வந்திருந்தார்.

மிச்சிகன் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறை தொடங்குவதற்கான திட்டங்களை வகுத்துக் கொடுக்க அமெரிக்காவுக்கு வருமாறு இவரை அப்பல்கலைக்கழகம் அழைத்திருந்தது. அதையொட்டிய பாராட்டு வழியனுப்பு விருந்து முடிந்து, வீடு திரும்பும்போது கார் விபத்தில் 37-ஆம் அகவையில் 25-11-1969 இல் இவர் உயிர் பிரிந்தது.

முருகு சுப்பிரமணியம் (மறைவு 10—4—1982)

பொன்னி இலக்கிய வட்டம் படைத்த முருகு, ஏராள மான புதிய எழுத்தாளர்களை உருவாக்கியவர். பல இதழ் களில் பணியாற்றியபோதும் தாமே சில இதழ்களை நடத்திய காலத்திலும், இதழ் உலகில் புதுமைகள் செய்து காட்டியவர். புரட்சியான மாறுதல்களை உண்டாக்கியவர்.

இவர் கோனாபட்டு ஊரினர். இவருடைய வாழ்க்கை 1952 வரை தமிழ்நாட்டிலும் 1953 முதல் 1982 வரை மலேசியா விலுமாக அமைந்தது. இங்கு ஆற்றிய தமிழ்ப்பணி மிகுதியா? மலைநாட்டில் இவர் செய்த தொண்டு பெரிதா? என்பதைப் பட்டிமன்றம் வைத்து விவாதித்தாலும் முடிவு செய்ய இயலாது. ஆயினும் மலை நாட்டில் அவர் ஆற்றிய செயல்களுக்கு அடிப் படை, ஏற்கெனவே இவர் தமிழ் நாட்டில் பெற்றிருந்த அனுப வமும் பயிற்சியும் ஆகும்,

இவர் 1944 முதல் 1946 வரை குமரன் இதழில் பணியாற்றி னார். 1947 முதல் 1952 வரை புதுக்கோட்டையிலிருந்தும் சென்னையிலிருந்தும் 'பொன்னி'யை நடத்தினார்.

1953 - இல் கோலாலம்பூர் தமிழ்நேசனிலும் 1954 முதல் 1962 வரை. சிங்கப்பூர் தமிழ்முரசு நாளிதழிலும் 1962 முதல் 1976 வரை மீண்டும் தமிழ் நேசனுக்கு வந்து அதன் ஆசிரியராகவும் பணியாற்றினார்.

1977 - இல் கோலாலம்பூரிலிருந்து புதிய சமுதாயம் என்ற தரமான திங்கள் இதழை வெளியிட்டார். இவர் மறை யும் வரை இவரே ஆசிரியராக இருந்து வந்தார்.

"தமிழில் மறுமலர்ச்சி இலக்கியத்திற்கு அடித்தளமிட்டு வளர்த்த இவரது 'பொன்னி' எனும் மகத்தான இலக்கிய இதழை நாடு அறியும். தீபாவளி மலர்கள் மட்டுமே வெளி யிட்டுக் கொண்டிருந்த தமிழகத்து ஏடுகளில் அக்காலத்தில் பொங்கல் மலராக மலர்ந்த பெருமை அந்தப்பொன்னிக்குண்டு. தமிழ் மணம் கமழும் அந்த இலக்கிய ஏடு இன்றைக்குள்ள தலை யாய எழுத்தரசர்கள் எல்லாம் பிறந்து வளர்ந்த தொட்டில் எனில் மிகையன்று. தமிழகத்தின் துர திட்டம் பொன்னி இடையடிபட்டுவிட்டது. முருகு கடல்கடந்து சென்றார்" என்று ஒரு திறனாய்வாளர் மதிப்பீடு செய்திருக்கிறார்.

முருகுவை இந்தியாவில் (என்னை விட நன்றாக) அறியும் வாய்ப்பைப் பெற்ற கவிஞர் நாரா நாச்சியப்பன் "எதிரொலி" இதழில் 15 - 4 - 1982 இல் எழுதிய கட்டுரையின் சிலபகுதிகளை இங்கே தருவது சாலப் பொருந்தும்.

'பொன்னி' இதழ் தமிழகத்திலே தமிழ் இலக்கிய உலகத்திலே ஒரு கால முத்திரையைப் பதித்து விட்டுப் போயிருக்கிறது என்று தான் சொல்லவேண்டும். பொன்னி இதழை உருவாக்கிப் படைத்தவர்கள் இரண்டு பேர். ஒருவர் திரு அரு பெரியண்ணன் இன்னொருவர் முருகு சுப்பிரமணியன் பொன்னியின் உடலைப் படைத்தவர் பெரியண்ணன் என்று சொன்னால் அதற்கு உயிர் ஊட்டியவர் முருகு.

பள்ளி இறுதிப் படிப்புடன் படிப்பை நிறுத்தி கொண்டார் முருகு

தம் வீட்டில் இருந்து கொண்டே 'இளந்தமிழன்' என்ற கையெழுத்து ஏடு ஒன்றை நடத்தினார். அக்கையெழுத்து ஏடு பல இளைஞர்களை இலட்சியவாதிகளாக உருவாக்கும் கரு மூலமாக விளங்கியது.

தன்மானக் கொள்கையும், தனித்தமிழ் நடையும் அவ் வேட்டின் சிறப்புக் கூறுகளாகும். பூப்பந்தாட்டம் முதலிய விளையாட்டுகளுக்குப் பயன்படுத்தும் ஆங்கிலச் சொற்களை அறவே நீக்கி, நல்ல தமிழ் சொற்களைக் கண்டு பிடித்து இளந் தமிழன் வாயிலாகப் பரப்பி வந்தார் முருகு சுப்பிரமணியன்.

தமிழ் மொழிப்பற்றும் தமிழர் இனப்பற்றும் தமிழ்நாட்டுப் பற்றும் உடையவர்களால் நடத்தப் பெற்ற ஏடாக — முழு நிலவாக — தமிழ் இலக்கிய வானில் பொன்னி உலா வந்தது.

பொன்னி உருவாக்கிய எழுத்துலகம் — எழுத்தாளர் உலகம்—இன்றும் பெருமைக்குரிய ஒரு வட்டமாகத் திகழ்கின்றது.

பொன்னியில் தொடர்ந்து எழுதியவர்களில் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், கலைஞர் மு கருணாநிதி, திருக்குறள் முனுசாமி, டி. கே சினிவாசன். நா. பாண்டு ரெங்கன், தில்லை. வில்லாளன், இளமைப்பித்தன், வழிப்போக்கன், நக்கீரன் கண்ணதாசன், கவிஞர் சுரதா, நாச்சியப்பன், நாகமுத்தையா மு அண்ணாமலை, கோவை இளஞ்சேரன் போன்ற பலர்சிறந்த இலக்கிய ஒளி விளக்குகளாகத் திகழ்கின்றனர்.

பொன்னி வெளியிட்ட பொங்கல் மலர்கள் 'அவாளுக்கு இவாள் சவால்' என்று அந்நாளையத் தன்மான இயக்கத் தோழர்களால் மனமுவந்து பாராட்டும் வகையில் மிகச்சிறந்த இலக்கிய மலர்களாகத் திகழ்ந்தன.

முதன் முதலில் முற்றும் ஆர்ட் தாளில் தன்மான இயக்கத்தின் முப்பெரும் தலைவர்களாகிய பெரியார், தளபதி புரட்சிக் கவிஞர் ஆகியோரின் முழு வண்ணப்படங்களுடன், பல இலக்கியப் பேரறிஞர்களின் கட்டுரை கதை, கவிதைகளோடு மணம் கமழும் மலராக வெளிவந்தது.

மிகச்சிறிய அச்சகத்தை வைத்துக்கொண்டு, மிகப்பெரிய சாதனைகளைப் புரிந்த பெரியண்ணனும், முருகு. சுப்பிரமணியனும் பொன்னியின் வளர்ச்சிகளுக்கு ஏற்பட்ட நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு, அதை மிகப் பெரிய அளவில் நடத்தத் திட்டமிட்டுச் சென்னைக்கு கொண்டு வந்தனர்.

"பொருளாதாரக் குறைவாலும், கூட்டுச்சேர்ந்தவர்களின் ஒத்துழையாமையாலும் பல்வேறு சிக்கல்கள் உருவாகி சென்னைக்கு வந்த பொன்னி தொடர்ந்து வெளிவராமல் நின்று விட்டது."

'தென் கிழக்காசியாவில் தமிழ் மணம் கமழ்கிறது' என்ற நூலில் சேலம், 'சங்கொலி' ஆசிரியர் திரு. சோலை இருசன் 1975-இல் தாம் கண்ட மலேசியத் தமிழ் எழுத்தாளர்களைப் பற்றி விரிவாக எழுதியுள்ளார். அவர் எழுதியிருப்பதாவது.

"மலேசியாவில் இன்று 'தமிழ்நேசன்' நாளிதழின் ஆசிரியராகப் பணியாற்றும் இவர் இலக்கிய வளமும், சமூக சிந்தனையும், தமிழார்வமும், தேசியக் கடமையும் நிரம்பப் பெற்றவர். இவர் நாள்தோறும் தீட்டும் தலையங்கங்கள் தமிழ்ச் சமுதாயத்திற்கு கலங்கரை விளக்காக ஒளி சிந்து கின்றன.

எந்த நிலையிலும், தமிழ், தமிழர் பிரச்சனைகள் இவர் எழுத்து வலிமையால் தீர்ந்திருக்கின்றன. தமிழர் பிரச்சினைகள் எல்லாவற்றிலும் திரு. முருகுவின் முத்திரை பளிச்சிடுவதை மலை நாட்டில் காணமுடியும். ஏனெனில் இவர் ஒரு இதழ் ஆசிரியராக மட்டுமல்லாமல் சமூகத் தலைவராகவும் விளங்குகிறார். திரு. முருகு இல்லாத கலை இலக்கிய சமுதாய நிகழ்ச்சிகள் மிகக் குறைவே!

ஒரு இதழாசிரியர் என்ற முறையில் திரு. முருகு, பிரிட்டன், சுவிட்சர்லாந்து, இத்தாலி, ஜப்பான், கம்போடியா, வியட்னாம், இந்தோனேசியா, அல்ஜீரியா ஐக்கிய அரபுக் குடியரசு, எகிப்து முதலிய பல்வேறு நாடுகளில் பயணம் செய்திருக்கிறார். அரிய கருத்துச் செல்வங்களைக் கொணர்ந்து தமிழர்க்கு அளித்துள்ளார்.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராக இருந்து இலக்கிய வளர்ச்சிக்கு எழுத்தாளர்களிடையே நல்ல பல திட்டங்களை வைத்துச் செயல் படுத்தியுள்ளார்.

'தமிழ் நேசன்' எழுத்தாளர்களின் படைப்புகளுக்கு அன்பளிப்பு தருவது மட்டுமல்ல, மேலும் ஊக்கமூட்ட கதைகளுக்கும், 'பவுன் பரிசு' அளிக்கும் திட்டத்தையும் செயல் படுத்தி வருகிறார். இன்று இலக்கியப் படைப்புகள் பற்றி திங்கள்தோறும் திறனாய்வுக்கூட்டங்கள், கவியரங்குகள் கருத்தரங்குகள் சிறந்த படைப்புக்கு உயரிய பரிசளித்து பாராட்டுதல் முதலிய சிறப்புகள் தமிழ் எழுத்தாளர் களிடையே நடப்பதற்குத் திரு.முருகுவின் திட்டங்களே காரணம்.

பாவேந்தர் பாரதிதாசன் மீது மிகுந்த பற்றுக் கொண்டவர். அவருடன் பல திங்கள் தங்கியிருந்து கலந்து பழகியவர். அவரிடம் பெற்ற தமிழுணர்வையும், எழுத்தாற்றலையும் மலைநாட்டு மக்களுக்கு சுவையாக வழங்கு கிறார் இவர்.

திரு. முருகு அவர்களின் மற்றொரு திட்டப்படி 'பவுன் பரிசுக் கதைகள்' என்ற அருமையான தொகுப்புநூல் ஒன்று அண்மையில் வெளிவந்துள்ளது.''

முருகுவின் மகன் திரு செல்வம், கே. எல் தொலைக் காட்சியில் செய்தி வாசிப்பாளராகவும் மற்றொரு மகன் திரு. பாண்டியன், தொலைக்காட்சிக்குச் செய்திகள் திரட்டுபவரா கவும் உள்ளனர்.

திரு அ.சிதம்பரம் (தில்லை)

முருகு தொடங்கிய 'புதிய சமுதாயத்தின்' ஆசிரியராக இருந்து வருகிறார்.

இவர் செட்டி நாட்டிலுள்ள ஆத்தங்குடி முத்துப் பட்டினத்தில் 1934-இல் பிறந்தவர். மேடை நாடகங்கள் பல வற்றைப் படைத்தவர் 'தமிழ்நேசன் 'தமிழ்மலர்' இதழ்களில் சில ஆண்டுகள் துணை ஆசிரியராகப் பணியாற்றியவர். மேற்கு ஜெர்மனியிலும் ஜப்பானிலும் பத்திரிகைத் துறையில் பயிற்சி பெற்றவர்.

தாமரையாள் தவிப்பு என்னும் கதையை 'தமிழ் முரசு' இதழில் படைத்து எழுத்துலகில் அடியெடுத்துவைத்தவர்.

புனைபெயர்— இல்லை.

## திரு. எஸ் .பி ·இராமநாதன்

ஆத்தன்குடியில் பிறந்து நாட்டரசன் கோட்டைக்குச் சுவீகாரம் சென்று மலாய்நாட்டில் வாழ்பவர். பத்திரிகையாளர் என்ற முறையில் பல நாடுகளுக்குச் சென்றவர். பலகட்டுரை எழுதியிருக்கிறார். நல்ல தமிழ் ஆர்வலர். முருகுவின் சம்பந்தி.

## திரு முத்து விசுவநாதன் (கோனாபட்டு, பி1926)

இளமையில் முருகு, அரு பெரியண்ணன் ஆகியோரோடு கூடி, இனிய தமிழ்ப் பணிகளை ஏற்று ஊக்கமுடன் செயலாற்றி யவர். 'தமிழன்னை' என்னும் கையெழுத்து ஏட்டினை 16-ஆம் அகவையிலேயே வண்ணப்படங்களுடன் வெளியிட்டவர். அந்த ஏட்டிற்குக் கவிமணியும் பாரதிதாசனும் கவிதை படைக்கச் செய்தார்.

முருகுவின் ஆலோசனைக்கு இணங்கி தமிழன்னை நிலையம் தொடங்கி காலணா, அரையணா வெளியீடுகள் அச்சிட்டு சுற்றுவட்டாரமெங்கும் தமிழ் முரசு கொட்டியவர். இவ்வெளியீடுகளின் பெயர்கள் — தமிழர்க்கு, அன்னை அருங் குறள், தமிழ்வாழ்க என்பன. இவை பெரும்பாலும் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையாரின் சொற் பொழிவுகளின் தொகுப்புகளாக அமைந்தன.

திரு· முருகு சுப்பிரமணியம் நடத்திய 'இளந் தமிழன்' 'எழுச்சி மலர்' ஆகிய இதழ்களில் இவர் கட்டுரைகள் படைத் துள்ளார்.

இவர் கோனாபட்டு இளைஞர் ஒற்றுமைக் கழகத்தின் செயலாளராக இருந்தபோது தான் சிலப்பதிகாரம் தந்த இளங்கோவடிகள் வண்ணப்படம் வெளியிடப்பட்டது· 1953-இல் இவர் மலேசியாவிற்குப் போய்ச் சேர்ந்தார்.

1963- முதல் 'தமிழ் நேசன்' இதழில் அலுவலாற்றும் திரு. விசுவநாதன் பயணக் கட்டுரைகள், தமிழாக்கக் கட்டுரைகள், விமர்சனங்கள் படைத்துள்ளார். 1983–இல் 'மாஸ்' விமான நிறுவனத்தின் அழைப்பின் பேரில் இவர் பிலிப்பைன்ஸ் நாட்டுக்குச் சென்றுவந்து தமிழில் நல்லதொரு பயணச் சித்திரம் வழங்கியுள்ளார். பெரும் தமிழார்வலர்.

திரு. எஸ். ஆர். எம். பழனியப்பன்
வேகுப்பட்டி (பி. 31-3-1935)

*Program Supervisor RADIO/TV MALAYSIA*

டாக்டர் இராம. சுப்பையாவின் அளவல். அழுத்தமான புலமையுடன் கூடிய சைவ சமயப் பற்று மிக்கவர்.

எழுதியவை—மலை நாட்டுத் திருத்தலங்கள் (கட்டுரைத் தொடர்), வானொலி இலக்கிய நாடகங்கள், சிறுகதைகள், சமயக் கட்டுரைகள், இவை புதிய சமுதாயத்திலும் வேறு இதழ்களிலும் வெளிவந்திருக்கின்றன·

வானொலியில் விதியின் கரங்கள் (பொழிபெயர்ப்பு) என்ற நாடகத் தொடரும் தொலைக்காட்சியில் 'உடன் பிறப்பு' என்ற நாடகத் தொடரும் ஒலி—ஒளி பரப்பாகி இருக்கின்றன.

புனை பெயர்கள்— ஐங்கரனடிமை, அப்பர் அடிப்பொடி

புலவர் மு. சேதுராமன் (மேலைச்சிவபுரி பி. 22-10-1927)

புனை பெயர்—இளநாகன்

பள்ளி மாணவராக இருந்த போதே இன்பம் என்ற கையெழுத்து ஏடு உருவாக்கியவர்.

1952-1974- கோலாலம்பூர் 'தமிழ் நாளிதழ் நிர்வாகி 1974 முதல்—'தமிழ் நேசன்' நிர்வாக இயக்குநர். முகவரி; 37, ஜாலான் அம்பாங், கோலாலம்பூர் மலேசியா, நூல்கள்: முருகன் பாமாலை'' ...கவிதைத் தொகுப்பு எழுத்து: தமிழ் நேசனில் சைவ சமய வினா/விடை விளக்கங்கள்.

பல இலக்கியக் கட்டுரைகள் — கவிதைகள். மலேசிய வானொலியில் இலக்கிய நாடகங்கள் ரீடிப்யூசனில் இலக்கியத் தொடர் உரைகள் பேச்சு: சமய—இலக்கிய விரிவுரைகள். பிற பணிகள்; மலாயாப் பல்கலைக்கழக இந்தியப்பிரிவில் 1959-1969 இல் பகுதி நேர விரிவுரையாளர். முதல் உலகத் தமிழ் மாநாட்டில் நிர்வாகக் குழுஉறுப்பினர். விவேகானந்தா தமிழ்ப் பள்ளி நிர்வாகக் குழு ஆசிரியப்பிரிவில் உறுப்பினர். மலேசியத் தமிழ்ப் பள்ளி மாணவர் உதவி நிதி வாரியத்தில் இயக்குனர் பட்டங்கள்: சித்தாந்தச் செம்மல், தமிழ்க் காவலர்.

திரு. வி. எஸ். முத்தையா (ஆத்தங்குடி 7—7—1920)

1938 முதல் எழுதி வருகிறார். மலேசியா—சிங்கை—தமிழ்நாட்டு ஏடுகள் யாவும் இவருடைய படைப்புக்களை வெளியிட்டுள்ளன. வானொலிக்கு நாடகம், சிறு கதை முதலியன எழுதியுள்ளார்.

புனைபெயர்கள்—வில்லன், பூரட்டாதி

நடத்திய இதழ்—மலைமகள் (ஈப்போ) நான்காண்டுக் காலம் இயங்கியது.

மலேசியாவிலுள்ள செட்டியார் கலாசாலை என்னும் தமிழ்ப்பள்ளியில் 12ஆண்டுகள் மேலாளராக இருந்திருக்கிறார்.

1968 முதல் தமிழ் நேசனில் துணையாசிரியர்; அதன் ஞாயிறு மலரின் பொறுப்பாசிரியர்.

நூல்கள்: வெற்றி அழைக்கிறது (கட்டுரைகள்)
ஆகஸ்டு 26 (சிறு கதைத் தொகுப்பு)
தேடிவந்த லெட்சுமி (குட்டிக் கதைகள்)
எண்கள் என்ன செய்யும்?
செவ்வாய் தோஷம்

மலேசிய, சிங்கை, தமிழ்நாட்டுத் தமிழ் எழுத்தாளர்களால் பாராட்டப் பெற்றவர். மலேசிய மாமன்னரிடமிருந்து AMN என்னும் உயர் விருது பெற்றவர்.

கலைமாமணி முத்தமிழ்ச் செல்வர் ரெ. இராமசாமி
12. பிக்கான் சினா, அலோர் ஸ்டார், கிட்டா.

மலேசியாவில் தலைசிறந்த தமிழ் எழுத்தாளருள் ஒருவர். இவர் 10-8-1920-இல் கானாடுகாத்தான் இராமசாமிச்

செட்டியார் மகனாகப் பிறந்து பின்னர் கண்டனூர் அரங்கநாதன் செட்டியாரின் வளர்ப்புப் பிள்ளை ஆனார்.

தந்தையார் தொடங்கிய தொழிலைக் கவனிக்க 1954-இல் அலோர் ஸ்டாருக்குச் சென்றார். பொருளீட்டுவதோடு பொதுப் பணிகளிலும் ஆர்வம் காட்டினார். தமிழ்த் தொடர்பானவற்றை மட்டும் இங்கே கூறுவோம்.

இளமையில் தமிழ்நாட்டு இதழ்களான இந்திரா, சில்பஸ்ரீ இந்துஸ்தான் போன்ற ஏடுகளில் இவருடைய படைப்புக்கள் வெளிவந்தன. எனினும் இவை மிகுதியாக வெளிவந்தது மலேசிய ஏடுகளில்தான். சோலை, மலைமகள், தமிழ் நேசன் தமிழ் முரசு தமிழ் மலர்.

புனை பெயர்கள்—தாசரதி, அரங்கச் செல்வன்.

'தொண்டு செய் தமிழா!' என்ற முதல் கவிதையையும் 'பெண்ணுலகம்' என்ற முதற் கட்டுரையையும் எழுதி எழுத்துலகில் காலடி எடுத்து வைத்த இராமசாமி தான் மிகவும் போற்றிவரும் மகாகவி பாரதியாரைப்பற்றி அவரது மறைவு நாள் நினைவாகப் பல ஆண்டுகள் பல கட்டுரைகள் எழுதியுள்ளார். திருக்குறள், பெரிய புராணக் கட்டுரைகளோடு மகாகவி கம்பருக்கு அஞ்சலி செய்யும் வகையில் பல ஆண்டுகள் அந்த நாளில் வெளிவரும் வண்ணம் கம்ப ராமாயணக் கட்டுரைகள் பல வரைந்துள்ளார். அத்துடன் கம்பரும் திருவள்ளுவரும் காதற் சுவையை எப்படி எழிலாகக் கூறியுள்ளனர் என்பதை ஒப்பிட்டு ஒன்பது ஒப்பாய்வுக் கட்டுரைகள் எழுதியுள்ளார். இன்னும் இலக்கியத்தில் தூது, கவிமணியின் கவியமுதம், குறவஞ்சி கூறும் கதிரவன், தன்னேர் இல்லாத தமிழ் போன்ற பல இலக்கியக் கட்டுரைகள் அவரது கட்டுரைப் படைப்பில் அடங்கும்.

தான் ஓர் எழுத்தாளர் மட்டுமல்ல கவிஞரும்கூட என்பதை மெய்ப்பிக்கும் வகையில் இவர் சில்லறையாகப்பற்பல தலைப்புகளில் பல்வகைக் கவிதைகளைப் படைத்துள்ளார். எழுத்தாளரும் கவிஞருமான இராமசாமி இலக்கிய நாடகங்கள் எழுதுவதில் புலமை மிக்கவர் ஆவார். அதற்கு எடுத்துக் காட்டாக அமரகவி, இரணியச் செல்வன், மேகநாதன், காமவல்லியாம் கன்னி, நகர் நீங்கிய நாயகன், கும்பகர்ணன் கவிஞனும் கண்ணனும், கண்ணனும் கண்ணம்மாவும் போன்ற

பல அரைமணி நேர நாடகங்களாகவும், குற்றாலக் குறவஞ்சி, முக்கூடற்பள்ளு போன்ற ஒரு மணி நேர இசை நாடகங் களாகவும், 'கருத்தும் கவியும்' என்ற தலைப்பில் கம்ப ராமாயணம் முழுதும் 51 தொடர் நாடகங்களாகவும் எழுதி, மலேசியத் தமிழ் மக்கள் மகிழும்வண்ணம் மலேசிய வானொலி யில்அவை ஒலி பரப்பாகியுள்ளன. இவை யாவும் மலேசிய வானொலியின் முன்னாள் இந்தியப்பகுதித் தலைவரும், இன்றைய வானொலி தொலைக்காட்சிப் பயிற்சி நிலைய இயக்குனருமான திரு. இரா. பாலகிருஷ்ணன் அவர்களது ஊக்குவிப்பால் எழுத நேர்ந்தவை என்றால் அது மிகையில்லை என்கிறார் இராமசாமி.

கோலாலம்பூரில் நிகழ்ந்த முதல் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டில் பார்வையாளராகவும் சென்னையிலும் மதுரை யிலும் நடைபெற்ற உலகத்தமிழ் மாநாடுகளில் மலேசியப் பேராளராகவும் கலந்து கொண்டவர். பல பரிசுகளும் விருது களும் பெற்றவர்.

இவர் எழுதிய நூல்கள்

1 எம்பாவை எழில்
திருவெம்பாவைக்கு இனிய உரை விளக்கம்

2 பாரதியின் காதலி
பாரதி பாடல்கள் சிலவற்றுக்கு விளக்கக் கட்டுரைகள்

3 திருவிளக்கு வழிபாடு
உரையிடையிட்ட கவிதை நூல்

4 சுவாமி சிவானந்த சரஸ்வதி மலர் வழிபாடு

5 சிவச் செல்வர் பாமாலை

6 இலக்கிய நாயகி சீதை

7 கம்பரின் காவிய ஓவியம்

8 அலோர் ஸ்டார் அருள்மிகு தண்டபாணி இருபா இருபது அந்தாதி

9 'க—தி' தரும் காதற்சுவை

10 பதினாறு பேறும் பாவிப்பாய்
சிங்கப்பூர் திருக்குட நீராட்டு விழா நினைவாக இயற்றிய கவிதைக் குறுஞ்சுவடி.

நாடகங்கள்

மலேசிய வானொலியில் இவருடைய நாடகங்களை ஏராளமாக அரங்கேற்றியுள்ளார்.

"சாத்தனார் சாதனை" எனும் நாடகம் மேடை நாடகமாக எழுதி நடிக்கப் பெற்றது.

கவிதை:

தொண்டு செய் தமிழா, தேவிதுதி, கவிஞரும் கவியும், கம்பநாடன் வாழ்க, அடைந்த விடுதலை, புத்தாண்டாசி. பொங்கல் வருகை, தீபத்திருநாள், சக்திக் குழவி, சேய்க்குப் பகரும் சீருரை, யாத்திரை, நவராத்திரி மகிமை, தொண்டு, செல்விதாலாட்டு, ஆறுபடைவீடு, கூட்டுறவு,. போன்ற பல கவிதைகள்.

தொகுப்பு:

தெ வா சங்க ஆண்டுவிழா மலர்.

தேவி பாடல்கள்.

சிங்கம்புணரி டாக்டர் எஸ் ஜெயபாரதி எம் பி பி எஸ்.,

தொழிலால் மருத்துவர் ஆயினும் மலேசிய நாட்டிலும் தொடர்ந்து தமிழ் மீது தமக்கு உள்ள நீங்காத பற்றிணை வெளிப்படுத்தி வருபவர்.

தொல்பொருள் ஆய்வு, சித்தர் பாடல்கள் தாவர ஆய்வு ஆகியவற்றிலும் ஈடுபாடு மிக்கவர். பிரான்மலை வரலாறு என்ற நூலின் ஆசிரியர்.

திரு. பி. எல். சிங்காரம்

(3/49, பி. அழகாபுரி, கீழைச்சிவற்பட்டி 623205

பி. 9-1-1939)

தமிழ் நேசன் நாளிதழின் பினாங்குப் பிரதிநிதியாக இருந்து வருகிறார். சமயம், சமூக சீர்திருத்தம் பற்றிக் கட்டுரைகளும் பாமாலைகளும் எழுதியுள்ளார். இவருடைய பணிகளைப் பலரும் பாராட்டி இவருக்குச்சிறப்புச்செய்துள்ளனர்

முகவரி *Tamil Nesan (M) SDN BHD*
*18 Lorong CHE EM*
*off Beach Street, Penang*

திரு. பெரி முத்தையா (கீழைச்சிவற்பட்டி 1924)

குழந்தைக் கவிஞர் வள்ளியப்பா நடத்திய இதழ்களில் சிறுகதை எழுதி, பிறகு பல கதைகளும் நாடகங்களும் படைத்தார்.

1951-இல் மலேசியாவிற்கு வந்து சமயப் பிரசாரகரா கவும் சொற்பொழிவாளராகவும் தமிழ் மணக்கும் மலர்களை உருவாக்குபவராகவும் புகழ்பெற்றார். இவருடைய பணிகளுக்குக் களமாக அமைந்த நகரம் தைப்பிங்.

இவருடைய கதை, கட்டுரை, நாடகங்களுக்குப் பல பரிசு கள் வழங்கப் பெற்றுள்ளன.

திரு. சித. இராமசாமி (கோனாபட்டு பி.1930)
260, *Burma Road Penang*

மேடை நாடகங்கள் எழுதியும் நடித்தும் உள்ளார் 'தமிழ் எங்கள் உயிர் நிதி' முதலியவற்றுக்காக எழுச்சிமிக்க நாடகங் களைப் படைத்தும் அவற்றில் நடித்தும் உள்ளார்.

குமண வள்ளல், புலவர் புகழேந்தி, சந்திரனும் தாமரை யும் என்ற நாடகங்கள் மலேசியா மற்றும் டெல்லி வானொலி யில் ஒலிபரப்பப் பெற்று மக்களின் பாராட்டைப் பெற்றவை.

நடத்திய இதழ்—மக்கள் தொண்டன் (கையெழுத்து ஏடு, பினாங்கு)

நடத்தி வரும் அமைப்பு-வள்ளுவர் சொற்பயிற்சி மன்றம்
அமைப்பாளர், இளைஞர் பணி மன்றம்

உறுப்பினர், மலேசிய தமிழ் இலக்கியக் கழகம்.

பேராளர், இரண்டாவது உலகத்தமிழ் மாநாடு சென்னை 1968

திரு. சுப. சிதம்பரம் காரைக்குடி

துணை ஆசிரியர், தமிழ் நேசன். ஞாயிறு பதிப்பின் ஆசிரியர். வானொலி தொலைக் காட்சியில் பகுதிநேர மொழி பெயர்ப்பாளர். ஏராளமான மொழிகளில் பேசக்கூடியவர்.

இவர் நடத்திய இதழ்கள்-திரைக்கடல், மழலைமோகினி, ஆசை விகடன், கோல்டன் ஃபெல், பொன்மணி.

நூல்கள்—கதைகள், கட்டுரைகள், ஆங்கிலத்தின் வழி யாகத் தமிழ் பயில உதவும் சிறு நூல்கள்.

சித்தாந்த வித்தகர் முரு பழ இரத்தினம் செட்டியார்

(விரையாச்சிலை 18-8-1921) மூவாரிலும் பத்துப்பகாட் என்னும் வத்துப்பாரிலும் வாழ்ந்து வருகிறார்.

இவருடைய தந்தைவழிப் பாட்டனார் முருகப்பச் செட்டியார் என்ற சபாபதிசெட்டியார் சிவன் கோவிலில் விளக்கிடுதல், தூபம் இடுதல் போன்ற சரியைத் தொண்டுகள் புரிந்தவர். அடங்கல் முறையைப் பலமுறை படனம் செய்தவர்.

திரு. இரத்தினம் செட்டியார் மதுரைத் தமிழ்ச் சங்கத் தேர்வுக்குப் படித்துத் தெளிந்த இலக்கண இலக்கிய நூலறிவும் அவற்றை நுணுகி ஆராயும் வன்மையும் பெற்றவர், சித்தாந்த சாத்திரங்களைப் பழுதறக் கற்றவர்.

'சித்தாந்தம்' இதழில் ஏராளமான கட்டுரைகள் வரைந்தவர்.

நூல்கள்: கடவுளால் முடியாத செயல்கள், தடைகளும் விடைகளும், வாலிவர்தம் சரியா?

வழங்கப்பெற்ற பட்டங்கள்; அருள்நெறிச்செல்வர், புலவர் மணி, சித்தாந்தவித்தகர், வித்யாரத்னா, செந்தமிழ்ச்செம்மல்.

உவமைக்கதை ஓராயிரம் சொல்லி, பன்னிரு திருமுறைகளையும் சித்தாந்தக் கருத்துக்களையும் எளிதில் விளக்கிக் காட்டிவிடுவது இவருடைய தனிச்சிறப்பு. கம்பன் கவியும் வள்ளுவர் குறளும் சிலம்பின் ஒலியும் ஆழ்வார் அமுதும் நயங் காட்டி, தமிழ்நாட்டிலும் மலேசியாவிலும் பல நூறு மேடைகளில் பொழிந்துள்ளார்.

தருமை ஆதீனத்தில் 1984-இல் நடைபெற்ற உலகச்சைவ சமய மாநாட்டில் ஆய்வுக்கட்டுரை வழங்கியிருக்கிறார். சமாஜ மாநாட்டில் தலைமையேற்றிருக்கிறார்.

ஜோதி மகராஜ் சங்கீத பூஷணம் திரு உடையப்பா
(கோட்டையூர் அழகாபுரி)

இசை ஆசிரியர். தமிழ்நேசனில் சோதிடக்கேள்விகளுக்குப் பதில் எழுதுகிறார். ரேஸ்டிப்ஸ் அதிர்ஷ்டஎண்கள் என்ற நூலை எழுதியிருக்கிறார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து இசைக் கல்லூரியில் பயின்று பட்டம் பெற்று, கோலாலம்பூரில் இசை ஆசிரியராக இருக்கிறார்.

திரு. சுப. நாராயணன் கல்லுப்பட்டி (1915–1983)

புகழ் பெற்ற எழுத்தாளர் தி. ஜ. ர அவர்களைத் தம் குருவாகக் கொண்டு தமிழ் எழுதத் தொடங்கியவர்.

திரு நாராயணன் கூர்மையும் முற்போக்குத் துடிப்பும் நிறைந்தவர். தமிழ்மீது அளவிலாக் காதல் கொண்டவர். இலக்கிய வரலாற்றில் புதுத் தடம் கண்டவர்.

வை. கோ. நடத்திய 'சக்தி' இதழின் ஆசிரியராகச் சில ஆண்டுகள் சென்னையில் பணி புரிந்த பின், 1950-இல் மலேசியா வுக்குச் சென்றார்.

தமிழ்நேசன் நாளிதழின் ஞாயிறு பதிப்பில் கந்தசாமி வாத்தியார் என்ற புனைபெயரில் இவர் 1950 முதல் 'தமிழ் வகுப்பு' நடத்தினார். இந்தப் பாடங்களை ஞாயிறு தொறும் படித்த மலேசியத் தமிழ் இளைஞர் பலர் கதை, கவிதை, உரை நடை, நாடகம் ஆகியவற்றை எழுத முன் வந்தனர். மலேசியாவில் தமிழ் எழுத்தாளர் பரம்பரையை உருவாக்கியதில் இவருக்குப் பங்கு உண்டு.

இவ்வாறே தமிழ்முரசு நாளிதழில் ரசனை வகுப்பை இவர் தொடங்கினார். இந்தத் திறனாய்வுக் கட்டுரைகளின் பயனாக மலைநாட்டு வானொலி நிகழ்ச்சிகளின் தரம் பன்மடங்கு உயர்ந்தது.

தமிழ்நாட்டில் ஏற்பட்ட அரசியல் விழிப்பால் தாக்கப் பட்ட இலக்கியச் சூழலை, ரசனை வகுப்பு மலேசியத் தமிழர் களுக்குப் புரியும் வண்ணம் அக்கு வேறு ஆணி வேறாக அலசி ஆராய்ந்தது.

இந்தியாவில் சுப. நாராயணனாக விளங்கிய இவர் மலை நாட்டில் வாழ்ந்த 33 ஆண்டுக் காலமும் "குவாலலும்பூர்ச் சு. நாராயணன்" ஆகப்பெயர் பெற்றிருந்தார்.

பாமரர்களுக்காகப் பாமரன் எழுதிய தொடக்க இலக்கணமாக நன்னூல் குறிப்புரையை "எண்ணமும் எழுத்தும்" என்ற பெயரில் எழுதினார். இலக்கணத்தை ஒரு நுண்ணூலாக ஆக்கி நயங்கண்டார்.

செவிக்க எழுதி, ஒலிபரவிய இவருடைய பேச்சுக்கள் மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் நடையைப் பின்பற்றி தூயதமிழில் எழுத்து வடிவம் பெற்றுள்ளன.

இவர் தம்பி திரு சுப. சிதம்பரம் 1953 முதல்மலேசியாவிலும் மற்றொரு தம்பி கவிஞர் சுப. இளங்கோவன் சென்னையிலும் தமிழ் எழுத்தாளர்களாகத் திகழ்ந்துவருகின்றனர்.

## திரு. கா. அண்ணாமலை (ராயவரம்)

வீட்டமைப்புக் கூட்டுறவுக்கழகத்தின் நிர்வாகி. அரசியல் கட்டுரைகள் பலவற்றை எழுதி வருகிறார்.

## திரு பழ. மனோகரன்

கவிஞர். மாணிக்கக் கற்கள் என்ற பெயரில் இவருடைய கவிதைத் தொப்பு வெளிவந்திருக்கிறது. பிறந்த ஊர்— பனையப்பட்டி. கிள்ளானில் தனியார் நிறுவனம் ஒன்றில் பணி புரிந்து வருகிறார்.

## திரு சுப சிதம்பரம் (கல்லுப்பட்டி)

இவர் திரு. சுப. நாராயணனின் தம்பி. தமிழ் நேசனில் துணை ஆசிரியராக இருக்கிறார். பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார். இந்துத் தமிழர் சங்கத்தை நிறுவியிருக்கிறார்.

## பாவலர் சி. அன்பானந்தம் (பி சிங்கம்புணரி 28-3-1932)

பினாங்கில் வணிகராக இருக்கும் இவர் காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரியினர் நடத்திய மறைமலையடிகள் பிள்ளைத் தமிழ்ப் போட்டியில் முதல் பரிசு பெற்றவர்.

'நந்தா விளக்கு' எனும் தொடர் காவியத்தையும், 'கண்ணதாசனின் காவியக் கனிகள்' எனும் தொடர் கட்டுரையையும் தமிழ் நேசன் இதழிலும் கனிமொழி எனும் தொடர் காவியத்தை 'தமிழ் முரசு' இதழிலும் படைத்து தமிழ் மக்களிடையே பெரும் பாராட்டுகளைப் பெற்றவர் கவிஞர் சி. அன்பானந்தம்.

மலேசியா வானொலியில் கவிதை நாடகங்கள், இலக்கிய நாடகங்கள், சமூக நாடகங்கள், நாட்டுப்பற்றுப் பாடல்கள். இலக்கியப்பாடல்கள் எனப்பல துறைகளில் தமிழுக்குமணமூட்டி வருகிற இவர் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் நடத்திய பல கவியரங்குகளில் பங்கு பெற்றிருக்கிறார்.

ஆறுமுகன் அந்தாதி, ஆனைமுகன் அந்தாதி என்ற இரு பக்திச்சுவை சொட்டும் தெய்வீகப் பாடல் நூல்கள் படைத்துள்ளார். இவற்றில் ஆறுமுகன் அந்தாதி மலாய் மொழியில் (Cepu pahala) 'புண்ணியக் கிண்ணம்' என்ற பெயரில் நூலாக வெளிவந்துள்ளது.

புலவர் சுப, அருணாசலம் (மேலைச்சிவபுரி)

கவிதைகள் பலவற்றைப் படைத்துள்ளார்.

டாக்டர் வி. எம். பழனியப்பன்

தாவர இயல் பேராசிரியர். அறிவியல் கட்டுரைகளைத் தமிழில் எழுதியுள்ளார். வானொலியில் சிறுவர்க்கான நிகழ்ச்சிகளில் பங்கு கொள்கிறார். கூந்தல் பாதுகாப்பு பற்றிய ஆங்கில நூலின் ஆசிரியர்.

வைத்தியர் சுப்பையா (காரைக்குடி)

ஹோமியோபதி வைத்தியம் பயின்று, மருத்துவக் கட்டுரைகள் எழுதி வருகிறார்.

முரு சொ. நாச்சியப்பன்

தினமணி பத்திரிகையின் ஆசிரியர்

திரு. பி எல். கே. ராஜன்

தினமணி இதழில் பணியாற்றி வருகிறார்.

ஏனையோர்

டத்தோ சுப்பையா, ஆடிட்டர் நாராயணன் போன்ற ஏராளமான செட்டிநாட்டன்பர்கள் மலேசியாவில் தமிழுக்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்து வருகின்றனர். அனைவருடைய பணியும் இங்கே குறிக்கப்படவில்லை. பதச்சோறு போல, தொட்டுக் காட்டியிருக்கிறோம். இயன்றது இவ்வளவே.

தமிழ்ப் பண்ணை

தமிழ் உணர்ச்சியை மலைநாட்டில் ஊட்டிய பெரிய இயக்கம் தமிழ்ப் பண்ணை. இதன் வரலாறு பற்றிய ஆதார மான செய்திகள் அடங்கிய ஆங்கிலக் கட்டுரையை அடுத்த சில பக்கங்களில் கொடுத்திருக்கிறோம்.

# RE-PRINTED FROM TAMIL OLI

(1966-67 issue pages 148 to 157)
a publication of the
TAMIL LANGUAGE SOCIETY OF THE
UNIVERSITY OF MALAYA

# The Malayan Tamil Pannai and its Role in the Tamil Cultural Revival in Malaya (1948 - 1956)

M. PALANIAPPAN, B. A. (Hons)
Research Scholar,
Department of Indian Studies
KULA LUMPUR.

*The Tamil Pannai[1] was a brainchild of two persons who loved the Tamil language. One of them was a Malayan Arunachalam and the other a post-war immigrant, Ramanathan. Though the association itself had only a short existence, the tradition it set afoot continues to exist to this day. Holding language and literary classes in Tamil, which catered for school going children as well as adults, was their initial contribution. Secondly, the*

1. Pannai means a farm or a nursery.

credit of bringing together of literary talks, music recitals and classical dance performance as items of single evenings programme, goes to the leaders of Pannai. The initial enthusiasm declined as Tamils began to take deeper root in Malayan way of life. They became conscious of the fact that it was impossible to re-enact in the Malayan environment the situation prevailing in the State of Madras in South India.

It has become almost a practice for most newly independent countries to revive some aspects of the golden period in their history, no doubt to build up the pride among the subjected people by making them conscious of their cultural heritage. The emerging India adopted the "Lion Capital" and the "Wheel of Asoka" as national symbols.[2] In the case of South Indian Tamils, the love for their language and literature was fostered from the beginning of the present century. National conferences were later organised in India to study and publicise the Epic of the Anklet, the Kural, Thevaram and so on.[3]

The Indian immigrant, mentioned above, grew up and practised law in an environment where the revivalist activity was most intense. In the city of Madras "there would be no less than 20 speeches at least in a day" writes Ramanathan in his book.[4] He expressed disappointment when he could not find even a single Tamil reading library here. There was a complete dearth of literary talks But what might have shocked him most was the the apparent apathy shown towards the study of Tamil language.

The situation he saw in Malaya in 1948 was completely different from the feverish activity in Madras. Of

---

2. D. P. Singhal "The Indian Contribution to Human Civilization Hemisphere, January 1964, Vol. 8 No 1
3 Tamil Nesan, Kuala Lumpur 21—3—51
4. K Ramanathan: The Malaya that I saw, Pari Nilayam, Madras, 1964, pg 50

course, there was valid explanation. The Malayan Tamil community was making a slow recovery after the devastation of the Japanese war. Some were trying frantically to make a quick trip to their homeland The study of Indian national language (Hindi) received all the attention and effort. In that particular enviornment there was no place for regionalism. It was only later that the policies and ideals of Dravida Munetra Kazhagam[5] and the Tamil regionalism steped into the social life of the Malayan Tamils.

Arunachalam Chettiar of Malacca worked hard to popularise Tamil even at the expense and detriment of his livelihood. The Tamil literary weekly that he started in 1939 had only a limited success.[6] It continued to appear intermittently even during the Japanese occupation. Though Hindustani had better reception than Tamil, he did not fail to organise Valluvar commemoration days in Malacca during the war.[7] The arrival of Ramanathan was a god-send for his pet project in life - i. e. the propogation of the study of Tamil and Tamil literature. The enthusiasm was boundless when the two men heard that steps were being taken to make Tamil as the official language in Madras State.

The inaugural meeting of the Tamil Pannai was scheduled to be held on 1st February 1948.[8] The Chief aim of the Pannai was to foster the growth and study of Tamil Arts and Culture. It was found necessary to write in the constitution the parity of treatment it would mete out to all Tamils, irrespective of religion, social group or faction that they might belong.

---

5. A political party in South India (Expresses extreme Tamil views)

6. Tamil Nesan, Kuala Lumpur 28—10—51

7. A well known poet of Ethics in Tamil. He is claimed to have lived in 2nd century. A. D.

8. Tamil Nesan, 28—1—48

*The unexpected and shocking assassination of the great Indian leader Mahatma Gandhi on 30th January 1948 necessitated the postponement of the inaugural meeting This delay benefited the association in another way, At that juncture an unofficial trade mission from South India was on a visit to this country, The members consisted of proprietors of South Indian firms here. The leader of the mission was none other than the well-known Social Worker and follower of Gandhi, Saw Ganesan, It was an honour to have him as the chairman of the inaugural meet. The blessings of the other notable members of the mission were also no less significant.*

*It is worthwhile to remember at the outset that the effort shown by these pioneers was emulated by others and the enthusiasm which came forth snow-balled into tremendous proportions. This in turn fostered the musnrooming of societies catering for every kind of social need. The tendency of the Tamils motivated the Malayalees, Andhras and Sikhs to found their own associations. There was a certain amount of reluctance for this move in the initial stages, because of the emphasis placed on Indian national unity under Subhas Chandra Bose. The unity was again stressed by Pandit Nehru when he visited Malaya after the war in 1946, There was very little effort to co-ordinate the various activities organised by the different linguistic groups.*

*As a start, the Pannai organised week-end classes, giving instruction in Tamil classical literature and grammar The leaders, utilising their personal contact with publishers in India, took on the responsibility of importing necessary textbooks. The books were sold at concession rates to the people who enrolled in the classes. Adults and youngsters of varying ages formed the student population. Most of the working people claimed that they had no opportunity to study Tamil before. Tamil school teachers as a group benefited most from these classes. Some of those who learnt prosody in those classes won valuable prizes in the competitions organised later.*

K. Ramanathan, Swami Satyananda and P. Periasami consented to teach Tamil literature and grammar. The first class was officially opened by the India Agent,[9] who was also the President of Tamil pannai.[10] At the end of that year 22 students sat for the final examination. The Director of Education, Mr. Holgate gave away the certificates at the ceremony organised for the award of these documents The syllabus for the follow-up course was also finalised[11] The Tamil press helped this venture by printing the weekly grammar lessons in full. It obtained by request good literary articles by well known authors in India and published them regularly. This gesture benefited the enthusiastic students as well as the general reading public.

The success of the Kuala Lumpur centre paved the way for the starting of week-end Tamil classes in the main urban areas in Western Malaya. This response necessitated the use of common content syllabus and conducting standard examinations. It was proposed to hold three year courses covering the syllabus used for Bala Pandithar in South India. This appears to be the turning point. The problem appears to be too big in order to ensure continuity. Only a standing body could have guaranteed smooth running of the classes. The safer way would have been to seek the assistance of the Malayan Education Department. If there was a sponsor, for example a South Indian University, the Education Department would have co-operated. The Hindi and Punjabi language examinations are conducted for the Punjab University[12] in various parts of Malaya to this day. Similar steps could have been taken by the Pannai as well. This uncertainly led to the dwindling of the number of classes

---

9. At this stage there was no difference between the domiciled and the transitory migrant Indians.
10 Tamil Nesan 10—7—48
11. Tamil Nesan. 28—12—48
12. The Sikhs Kalasa Diwan still maintains this link

as well as students, The only centre which continued to function was the first class started by Pannai in Kuala Lumpur. A fresh effort was made in July 1953, [13] but there was no response from the Tamil public.

The failure of the classes did not affect the importance of Pannai in any way. This is clearly reflected in the remarks made by Professor Nilakanda Sastri, who was invited by the Malayan Government to advise on the establishment of the Department of Indian Studies in the University of Malaya. Pannai demanded that only Tamil should be taught in the proposed Department. Sastri felt this was due to their narrow mindedness He proposed that the department should have a broader base and should include the teaching of Sanskrit. [14]

When public support was being built among the the Indians in Malaya, the Tamil school inspectors pointed out that a degree from the proposed department would not have equal economic value as degrees from the other departments. It was Pannai which came to the fore and showed the shortage of personnel, with such qualifications in Journalism, Secondary Education. Information Services, etc. [15].

From the time of formation, organising of talks formed one of its main functions. As a start it was feet it would be better to invite someone well versed in the literary field from India Invitations were sent to many leading lecturers in South Indian Universities. Some of them responded. The Selection Committee favoured A. M. Paramasivanandam of Pachaiyappa College in Madras. A Malaya wide tour was organised for him. The trip was sponsored by Pannai, with the help of

---

13. Tamil Nesan, 1—7—53
14. Tamil Nesan, 24—5—53
15. Tamil Nesan 1.5.54

*generous donations from the Chettiar community. He spent one whole week in Kuala Lumpur, whereas in other centres he was able to stay only for a day or two in the month long tour. He lectured in all the important cultural centres in Kuala Lumpur[16]. This initiative set by the Pannai was followed by other Associations and many others connected with different aspects of Tamil cultural field were invited in the following years.*

*The Malayan Tamils had the privilege of hearing the speeches of another lecturer from Pachaiyappan College in 1956. By this time the influence of the Pannai had already declined. The Malayan Government introduced strict immigration restrictions in 1952. The flow of immigrants diminished as a result of this measure. Fresh immigrants were more active supporters of Tamil and infused more interest even in indifferent organisers.*

*The local elections were held from 1952 onwards The first Federal - wide elections were held in 1955. Only Federal citizens were eligible to vote. The Indians who gave very little thought for permanency, were forced to take the decision by political developments. It did not take long for them to realise the efforts wasted over a language which had least economic value.*

*Secondly there was a bid by the The Tamils to take over the leadership of Malayan Indian Congress. This move created factions, which persisted even when the take over was a success. The leaders were groping for events other than politics to unify the members. The visit of a scholar from India provided such an opportunity. We see the Educational Section of the Malayan Indian Congress sponsoring the trip of A. S. Gnanasambantan. He specialised in literary and religious fields. Most of the*

---

*16. Tamil Kodi, August 15 1948. Tamil Nesan, 31. 4. 48*

voluntary Associations took the opportunity to arrange speeches for the benefit of their respective members [17] As more and more associations volunteered to sponsor trips of this nature it was only necessary to request the speakers when they were already here for a suitable date and make the necessary arrangements. Pulavar Hj. Abdul Kadir of Madura Tamil Sangam in South India gave series of talks on Tamil unity in 1952.[18]

One of the main figures responsible for cultural revivalism in the 1920's in South India was the poet Subramaniya Bharathi His songs, claim the nationalists, contributed tremendously to wards the boosting of morale of the masses and made them conscious of their cultural heritage. The ideas put forward by him and the ideals set were constantly repeated at the birthday celebrations organised to honour this poet. From the year of formation of Pannai till its disappearance, this used to be the second important item organised

Pannai did not initiate this celebration. When there was no definite association to organise the event regularly, Pannai came to fulfil this role. In 1946 a group of enthusiastic youths organised two rallys-one in Sentul and the other in Bungsar. In the following year the Malayan Indian Congress organised the event. The programme was a little more elaborate In the third year, the first for Pannai, the tradition of bringing literary talks, music, recitals and dance performances on a common stage set in motion. In all three items, Bharathi's songs formed the central linking theme The national, devotional and mystic aspects of the poems were analysed, and separate speeches were delivered. The singers used Bharathi's songs for singing well known ragas, the dancers used the songs for Bharatha Natya. The three hour programmes used to draw record crowds, wherever the venue might be

17 Tamil Nesan, 17-4-54

18 Tamil Nesan, 3-1-52

*When the organisation slackened its pace, the M I. C.'s educational section took over the organising of the birthday celebration in 1955 and 1956.[19] A note of discord at this time was the rival celebrations in two or three centres organised by the dissidents of M. I. C.*

*Thirukural, a book of well-known maxims is being translated into various languages. The nature of the Kura is such that it is possible for every religious group to claim it as its own. The impartial opinion is that it belongs to all; Pannai was an association which did not entertain any religious or social division. Pannai organised Valluvar Vizha by popular request.[20] The speeches were on the three main aspects (Aram, Porul, Inpam).[21] The Kurals were set to music and sung on the occasion. The members of the Sangeetha Abiviruthi Sabha (Society for the development of Music) performed this function. The organisation of this commemoration day was regular but not so elaborate as Bharathi's Birthday celebrations. Another association known as the Kural Iyakkam was started in 1950, with the blessings of Tamil Pannai. Its chief aim was to teach and propagate the Kural. This society conducted various competitions and awarded prizes on the commemoration day which it organised for its members. On both of these celebrations K. Ramanathan Swami Satyananda, K. Alagirisamy and Pulavar Sethuraman used to be the main speakers.[22]*

*The leaders of Pannai felt that running of week-end classes and the providing of lecturers was not enough for cultural revivalism. Something more tangible was necessary. So it devised ways to high-light other aspects of Tamil culture in popular assemblies. "Fine Arts Festivals" were held annually in the name of the Pannai, starting from 1949.*

---

*19 Tamil Nesan, 19-8-55, 27-8-56*

*20 Tamil Nesan. 13—6—49*

*21 Dharma, Artha, Kama*

*22. Tamil Nesan, 25—5—53 and 9—6—55*

*The first three festivals were well received and had a measure of success. The fourth and fifth were organised when the influence of Pannai itself was declining.*

*The first Arts Festival was organised for three days at the end of July in 1949 The pattern of the programme was identical with that of Fine Arts. Festivals held in Madras[23] There were dance performances and music recitals during the first two nights. The artistes who participated came from all over Malaya. Till then there was no opportunity for persons who received training in these arts to perform at public functions, unless special programmes were arranged by parents or the dance schools. The Mummorthi[24] Vizha came to be organised only around 1954.*

*The speeches were mainly delivered on the Second day which would invariably be a holiday. The topics ranged from the discussion of the different aspects of kalai or arts to the necessity of learning the mother-tongue. The women would have a meeting of their own on the second day.*

*The second festival in the series was held in Seremban in the following year. The arrangements made were more elaborate and the festival on the whole was more successful than the first one. The youths and the women were given the opportunity of holding conferences of their own. The festival, as usual, lasted three days[25] The third festival was held in Klang in December 1951. Though the programme was similar to the ones of the previous years, the absence of enthusiasm was clearly seen.[26]*

---

23. *Tamil Nesan, 24—6—49*
24. *This is a commemoration day of three well known composers of music from South India. The festival is organised by Sangeetha Abiviruthi Sabha*
25 *Tamil Nesan, 23—3—50 and Malay Mail, 27—4—50*
26. *Tamil Nesan, 30—12—51*

*The decline of enthusiastic support of the Arts Festival should not be interpreted as lack of support for the main objective which was cultural revival of the Pannai. There was a marked increase in the number of music and dance teachers in Kuala Lumpur. And there was a proportional increase in the number of pupils who enrolled in the classes. The success of the first two festivals helped to influence some parents to make the decision to allow their children to go to these classes The readily available participants ensured success of the Mummoorthi Vizha which were organised later. When the Pannai did not show any intention of organising further Arts Festivals, the Tamil Kala Manram which was founded in 1952, came forward to take over the task. They gave opportunity for the display of handwork and folk dances in addition of the usual items.*

*When the idea of having a festival for all Tamil speaking people was mooted in 1948,[27] Pannai gave its support. When it was held in Kuala Lumpur in 1953,[28] Pannai was one of its sponsors. Similarly it supported ventures of other associations by cosponsoring the visit of musicians from India.[29]*

*The Tamil Kodi edited by Aurunachalam Chettiar of Malacca served as the organ of Tamil Panni. The cultural events and annual features such as arts festival and Bharathi Vizha used to be publicised through this fort-nightly journal. The publication of this journal was stopped in May 1951. The editor was taken seriously ill and he returned to India to recoup his health. But it was unfortunate for Panni as well as the Tamil public that the moving spirit of Pannai was robbed away by the death of the editor on 19th October 1951.[30] An effort was made to*

---

27. *Tamil Nesan, 9—1—48*
28. *Tamil Nesan, 5—12—53*
29. *Malay Mail, 22—8—53*
30. *Tamil Nesan, 28—10—51*

*publish another monthly named Solai under the editorship of Ramanathan in January 1952. The publishers were only able to bring out a few successful issues.*[31]

*There were a few well known magazine editors, writers and poets, who were associated with the movement for popularising Tamil classes in S. India. There was a heavy toll of these top leaders in 1954 and 1955. 'Kalki' (Krishnamoorthi), T. K. C. (Chithambaranatha Mudaliar) Vaiyapuri Pillai,and Thesiga Vinayagam Pillai to mention a few, were liked and loved by the Tamil reading puplic. The Pannai sent condolence messages to the families Concerned on hearing the unhappy news For each personality condolence meetings were organised here in which leading local writers and editors participated. The speeches dwelt in detail the life and work of each. Indirectly these meetings drew together the persons interested in the popularisation of Tamil language and literature.*

*The efforts of the leaders of Tamil Pannai did receive the attention of personalities who were involved in popularising the study of the language in South India.*[32] *Kamban festival is held annually in Karaikkudi in South India. The event usually lasts four to five days. K. Ramanathan was given the hounour of presiding one day's events in the 1951 festival*[33] *The Madurai Tamil Sangam sent an appreciative letter commending the work of the Pannai and specially its past member Palani Velu Pillai. This particular gentleman carried out behind the Scene spade work. He came out to speak in the absence of the main speakers, specially 1953 onwards.*

---

31. *Tamil Nesan, 7—12—51*

32. *Tamil Nesan, 3—5—54 (Appreciation by Madurai Valluvar Kazhagam)*

33. *Tamil Nesan, 21—8—53*

*As more and more cultural associations appeared on the scene important events had to be duplicated. The friendly rivalry which developed undermined the importance of the festivals as less and less people came to participate No cultural event can be a success unless it receives public support. The important artistes were distributed in various centres instead of appearing on a common stage as in 1948 to 1950.*

*The leaders who founded the association did not anticipate the establishment of branches in all the main urban areas in Malaya. When the branches were started, people who were only interested in holding office invaded the fold of the dedicated leaders. In the absence of dedicated effort the activities began to decline. Secondly, the central body was not in a position to exercise tight control over finance and types of activities organised. This inevitably led to the abuse of rules. So the other branches disappeared as suddenly as they appeared. The Kuala Lampur branch continued to organise a few nominal events till 1956. The registration was eventually cancelled in 1959.*[34]

*Whatever may be the criticism raised against the premature death of the association no one can deny the stir it caused among the Tamil community in Kuala Lampur. It made them conscious of the need for the study of Tamil and Tamil literature. Secondly, the tendency towards permanency and citizenship dulled the fervour for a language which chould not cope with equal footing with the other languages and signalled the death knell of the Pannai.*

---

34. *Registrar of Societies, Federation of Malaya.*

# 35 சிங்கப்பூர்

தனி நாடாகவும் செல்வம் கொழிக்கும் சீமையாகவும் உள்ளது சிங்கப்பூர்.

ஆட்சி மொழிகளுள் ஒன்றாகத் தமிழ் மொழியை இந்த நாட்டு அரசு ஏற்றுக் கொண்டிருக்கிறது. பள்ளிகளிலும் வானொலி தொலைக்காட்சி முதலியவற்றிலும் தமிழ் மொழி உரிய இடத்தைப் பெற்றிருக்கிறது.

இத்தகைய நிலையை உருவாக்கியதில் சிங்கைவாழ் செட்டிநாட்டாரின் பங்கு பெரிது.

அருள் நெறிச் செல்வர் வயி. சண்முகம் செட்டியார், ஜே. பி
(நாச்சியாபுரம், பி. 1913)

ஐம்பதாண்டுக் காலம் சிங்கப்பூரின் பொது வாழ்வில் சிறப்பிடம் பெற்ற பெரியவர். இவர் இப்போது முதிர்ந்த வயதில் நாச்சியாபுரத்தில் வாழ்ந்து வருகிறார். சிங்கைக்கு வருகை தந்த தமிழறிஞர் எவரும் இவருடைய விருந்தினின்றும் தப்பித்தது கிடையாது.

தமிழுக்கு ஊறு நேர்ந்த போதெல்லாம் "தமிழ் முரசு" ஆசிரியர் தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்களுடன் தோளோடு தோள்நின்று தமிழ்ப்பணிக்கு இவர் உறுதுணையாக இருந்திருக்கிறார்.

வயி. ச. சிங்கப்பூரில் இருந்தவரை இவரும் காரைக்குடி இராம பெரி. பெரியகருப்பனாரும் தமிழ்ப் பணியில் இரட்டையராக விளங்கினார்கள். சிங்கப்பூர் தமிழ் இயக்கம், சிங்கப்பூர் தமிழர் சீர்திருத்தச் சங்கம், சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகம் ஆகியவற்றுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு தமிழ்ப் பணிகளுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வந்தனர். இரட்டையர்களுடைய இனியமுயற்சியால் மலாயாப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறை நிறுவுவதற்குப் பெருந்தொகையைச் சிங்கப்பூர் நகரத்தார்கள் மனமுவந்து வழங்கியுள்ளனர்.

காரைக்குடி இராம. பெரி.

திரு. வயி. ச. அவர்கள் தாயகத்திற்குத் திரும்பிவிட்ட பிறகு காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரியை நிறுவியுள்ள செந்தமிழ்ச் செல்வர் இராம பெரியகருப்பன் அவர்கள் முன்னர்க் கூறிய பணிகளைத் தாமாகவே செய்து வருகிறார்,

இவர் சிங்கப்பூரிலேயே பெரும்பாலும் வாழ்ந்து வரும் வணிகர் ஆவார். சிங்கப்பூரில் தமிழ்நலம், தமிழர் நலம் என்றால் எல்லோருடைய எண்ணத்திலும் முன் நிற்பவர், முதலிடம் பெறுபவர் இவர். சிங்கப்பூரிலும் மலேசியாவிலும் உள்ள தமிழ் அமைப்புக்கள் பலவற்றில் இவர்க்குத் தொடர்பு உண்டு. தமிழ் நாட்டிலிருந்தும் பிறநாடுகளிலிருந்தும் சிங்கைக்கு வருகைபுரியும் அல்லது சிங்கை வழியாகச் செல்லும் தமிழறிஞர்களை வரவேற்றுச் சிறப்பளித்துத் தமிழ் நலம் பரிமாறுவதில் இவருக்கு இணை இவரே எனலாம்.

திரு மெ. திரு. அரசு (வேந்தன்பட்டி 14-7-1923)

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் எம். ஏ. பட்டம் பெற்றவர். திருக்குறள் பரப்பும் திருநாவுக்கரசு என்று இளமையிலேயே தம் நண்பர்களால் பாராட்டப் பெற்றவர். குமரன், கலைக்கதிர், தமிழ் நேசன் இதழ்கள் இவருடைய இலக்கிய, அறிவியல், திருக்குறள் விளக்கக்கட்டுரைகளை வெளியிட்டுள்ளன. வானொலி நாடகங்கள் பலவற்றையும் படைத்துள்ளார்.

சிங்கப்பூர் வானொலி— தொலைக்காட்சி அமைப்பில் பல்லாண்டுகள் மிகச் சிறப்பாகப் பணியாற்றி ஓய்வு பெற்று, 1981 முதல் 1984 வரை சிங்கப்பூர் சட்டமன்றத்தில் மொழி பெயர்ப்பாளராகப் பணியாற்றினார்.

பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் மலேயாவுக்குச் சென்று அந்தநாட்டுப் பல்கலைக்கழகத்தில் வடமொழிக் கல்விக்கு ஒரு தனித்துறை தொடங்கவேண்டும், அதுவே இந்திய இயல் புலமாகக் கருதப்படவேண்டும் என்று பரிந்துரைத்தார். அந்த அறிக்கையைஎதிர்த்தும் தமிழ்த்துறை தொடங்கப்பெற வேண்டுமென்றும் முதற் குரல் எழுப்பி தமிழர்களைக் கிளர்ந்து எழச்செய்தவர் அரசு.

அதன் விளைவு சிங்கையிலும் மலேயாவெங்கும் இதுவே ஒரு மா பெரும் போராட்டமாக உருவெடுத்தது. மக்களின் மன உணர்வை அறிந்த மலேயா அரசு, தமிழ்த் துறையைத் தொடங்கிற்று.

8-10-1983இல் சேலத்தில் தமிழகப்புலவர்குழுவின் வெள்ளி விழா நடைபெற்றது. தம் புலமையால், திறத்தால், தொண்டால் தமிழுக்கு வளமும் நலமும் கூட்டிய தமிழ்ப் பெருந் திருவினர் 32 பேர் தமிழ்ச் சான்றோராகத் தேர்வு செய்யப் பெற்றனர். அப்போது அவ்வாறு பாராட்டப் பெற்றவர்களுள், மெ. திரு. அரசு ஒருவர். பதக்கமும் பாராட்டிதழும் சிங்கப்பூருக்கு அனுப்பி வைக்கப் பெற்றன.

பேராசிரியர் எஸ் தெய்வநாயகம் (கல்லல் பி.1929)

24-21 *Block*29, *Marine Cresent Singapore* 1544.

சென்னை பச்சையப்பன் கல்லூரியில் பி. காம். மாணவராக இருந்தபோது இவர் டாக்டர் மு.வ. அவர்களுடைய தொடர்பால் தனியே தமிழ் பயின்றார்.

சிங்கப்பூர்க் கல்விக் கழகத்தில் (Institute of Education) தமிழ்த் துறைத் தலைவராக இருந்து தமிழாசிரியர் பலரை உருவாக்கி வருகிறார்.

மலேசியா சிங்கப்பூர் இதழ்களில் பல கட்டுரைகளை எழுதியுள்ளார். இடையிடையே தமிழ் நாட்டுக்கு வந்து இங்குள்ள பல்கலைக் கழகங்களில் தமிழ்த்துறைகளின் பணிகளை அறிந்தும் ஆராய்ந்தும் அவற்றுடன் தொடர்பு கொண்டும் அதன் வழி சிங்கப்பூர்க் கல்விக் கழகத் தமிழ்த் துறையினை வளர்த்து வருகின்றார்.

திரு. மெ. சிதம்பரம், கல்லுப்பட்டி(5-5-1924)

தானே தமிழ் பயின்றவர். 50 ஆண்டுகளாகச் சிங்கப்பூரில் வாழ்கின்றார். 'தமிழ் முரசு' நாளிதழின் ஆசிரியர்.

புனைபெயர்கள்—முதுகுடுமி, இலக்கணவாதி

அருண் செங்குட்டுவன்

பி. சொக்கநேந்தல். தந்தையார் ப. அருணாசலம் செட்டியார் (பி.1924) முப்பதாம் வயது வரை இந்தியாவில் இருந்து தமிழறிஞர் பலருடன் கொண்டிருந்த நட்பால் தமிழ் ஆர்வலரானார். சிங்கப்பூரில் நகரத்தார் இளைஞர் சங்கத்தின் வாயிலாகப் பல சிறுபிரசுரங்கள் வெளியிட்டார். தம் மக்கள் அனைவர்க்கும் தனித்தமிழ் பெயர்களை இட்டார்.

திரு செங்குட்டுவன், சிங்கப்பூர் அருள்மிகு தண்டாயுத பாணி சுவாமி திருக்கோயில் குடமுழுக்கு மலரைப் பதிப்பித்துள்ளார்.

முகவரி: *Editor, Singapore Business 422 Thomson Road Singapore 1129*

திரு. நா. கருப்பையா (சொக்கநாதபுரம்) (பிறப்பு: 1924)

இவர் தொடக்கநிலை இடைநிலைத் தமிழ்க்கல்வியைப் பர்மாவில் கம்பை தனவைசியர் கல்விக்கழகத்திலும் உயர்நிலை ஆங்கிலக் கல்வியை மலேசியாவில் சிரம்பான் ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் பள்ளியிலும் படித்துமுடித்தார். 1946இல் இவர் அப் பள்ளியின் தலை மாணாக்கராகத் திகழ்ந்தார்.

1953இல் சிங்கப்பூர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தம் பயிற்சியை முடித்தபின் இவர்1957முதல்1980 வரை23 ஆண்டுகள் சிங்கப்பூர்க் கல்வி அமைச்சின் தலைமைச் செயலகத்தில் தமிழ்ப் பள்ளிகளின் மேலாய்வாளராகவும் தமிழ்க் கல்வி வளர்ச்சி அதிகாரியாகவும் தமிழ்ப்பாடத்திட்ட மேம்பாட்டு அதிகாரியாகவும் பணியாற்றி ஓய்வு பெற்றார். அதன்பின்னர்ச் சிங்கப்பூர் உமறுப் புலவர் தமிழ்மொழி நிலையத்தில் மேனிலையில் தமிழ்ப் பணியாற்றிவருகிறார்.

பணியிடைக்காலத்தில் இவர் 1972இல் ஜப்பான் அரசாங்க அழைப்பின் பேரில் கல்வி ஆய்வுப் பயணம் மேற்கொண்ட சிங்கைக் கல்வியாளர் குழுவின் செயலராகவும் இருந்திருக்கிறார். தமிழில் தொடக்க நிலைப் பள்ளிகளுக்கான சிங்கையின் வரலாறு வாழ்க்கை நலக்கல்வி ஆகிய பாடநூல்களின் தொடர் வெளியாவதற்குப் பொறுப்பாகவும் தமிழ்ப்பள்ளிகளும்

ஆங்கிலப் பள்ளிகளின் தமிழ்ப்பகுதியும் இணைந்து வெளியிட்ட சிங்கப்பூர் 150 ஆம் ஆண்டு விழாச் சிறப்பு மலருக்கு ஆலோசகராகவும் இருந்திருக்கிறார்.

சிங்கையில் தமிழ் ஆசிரியர் பயிற்சி வகுப்புத் தொடங்குவதற்கும் ஆங்கிலப் பள்ளிகளிலும் தொடக்கக் கல்லூரிகளிலும் தமிழ்மொழி கற்பிப்பதற்கும் வலுவான அடித்தளம் அமைத்தவரும் இவரே.

இவர் தமிழ்க் கல்விக்கு ஆற்றிய அரிய சேவைகளைப் பாராட்டி இவருக்கு 1978இல் தேசியதின விருதுசூட்டு விழாவில் நெடுநாள் பணிப் பதக்கம் சிங்கை அதிபரால் வழங்கப்பட்டது.

திரு. மா. கண்ணப்பன், (நாட்டரசன்கோட்டை 1941)

இவர் 1961 முதல் சிங்கப்பூர் ஒலிபரப்புக் கழகத்தில் சேவை செய்து இப்போது நடப்புவிவகாரப் பிரிவில் தமிழ்ப் பணியாற்றுகிறார்.

மு. சங்கரலிங்கம் (8-6-1926 பொன்னமராவதி புதுப்பட்டி)

பர்மாவில் கம்பை தனவைசியர் கல்விக் கழகத்தில் பள்ளிப் படிப்பைத் தொடங்கி, திருச்சி செயின் ஜோசப் கல்லூரியில் *B.Sc.* யும் காரைக்குடி டாக்டர் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் *B.T.*யும் பயின்றவர்.

வலம்புரி வடுகநாதன் உயர்நிலைப் பள்ளி, சிங்கப்பூர் இராஃபிள்ஸ் கல்வி நிலையம் ஆகியவற்றில் ஆசிரியப் பணி புரிந்துவிட்டுச் சிங்கப்பூர் ஒலிபரப்புக் கழகத்தில் செய்தி ஆசிரியராகச் சேர்ந்தார். அங்குத் தமிழ்ச் செய்தித்துறைத் தலைவராக உயர்ந்து நல்ல தமிழில் செய்திகளை ஒலி பரப்பினார். 'தமிழில் வானொலி விஞ்ஞானி' போன்ற நிகழ்ச்சிகளிலும் கருத்தரங்குகளிலும் பல்லாண்டுகள் பங்கேற்றார்.

தமது 55ஆம் வயதில் சிங்கப்பூர் ஒலிபரப்புக் கழகத்திலிருந்து ஒய்வு பெற்றபின் இராஃபிள்ஸ் தொடக்கக் கல்லூரியில் தமிழாசானாகப் பணியாற்றி வருகிறார். சிங்கப்பூர் அரசாங்கப் பாடநூல் வெளியீட்டுக் கழகத்தில், உயர்நிலைப் பள்ளிகளுக்கான தமிழ்ப்பாடநூல்களின் பதிப்பாசிரியராகவும்இருக்கிறார்.

# 36 பிற நாடுகளில்

உலகில் பல்வேறு நாடுகளில் செட்டிநாட்டு அன்பர்கள் தொழில் வணிகம் காரணமாக எங்கு இருப்பினும் அங்கெல்லாம் தமிழ்ப் பயிரை வளர்க்கவும் தமிழ்ப் பண்பாட்டை ஏனையோர்க்கு அறிவிக்கவும் தயங்குவதில்லை தவறுவதில்லை.

## வியட்னாம் (முன்னாளில் இந்தோ-சீனா)

இந்நாட்டின் தலைநகரான செய்கோனில் கீழைச்சிவற் பட்டி திரு.சேதுராமன் சிறந்த தமிழ்ப்பணியாற்றியிருக்கிறார்.

இவருடைய தந்தையார் வீர. பெரி. சு. சுப்பிரமணியன் செட்டியார் ஆயிரக் கணக்கான பாடல்களை மனனம் செய்து அவற்றுக்கு உரைகூறும் ஆற்றலும் பெற்றிருந்தார்.

திரு. சேதுராமனுடைய முயற்சியால் 'திருவள்ளுவர் மலர்' வியட்னாமில் வெளியிடப் பெற்றது. இவர் தமிழ்ப் பாடல்கள் பலவற்றைப் பிரெஞ்சு மொழியில் பெயர்த்து, சின்னஞ் சிறு பிரசுரங்களாக வெளியிட்டிருக்கிறார். வியட்னாம் மொழியில் திருக்குறளை மொழிபெயர்க்க தக்கவர்களைக் கொண்டு ஏற்பாடு செய்தார்.

## தாய்லந்து (சயாம்)

மார்கழித் திங்களில் திருவெம்பாவைப் பாசுரங்களைப் பாடும் வழக்கம் தாய்லந்து அரச குடும்பத்திலும் நிலவுகிறது' அந்த நாட்டுக்கு இராசராசச் சோழன் காலத்தில் வணிகத்திற் காகச் சென்ற தமிழ்நாட்டு வணிகரான நகரத்தார் வாயிலாகவே திருவெம்பாவை பரவியிருக்க வேண்டும்.

## லண்டன் தமிழ்ச்சங்கம்

லண்டன் மாநகரில் தமிழ்ச் சங்கம் தொடங்கப் பெறக் காரணமாக இருந்தவர் கானாடுகாத்தான் டாக்டர் அழகப்பா அழகப்பன் என்ற ஆல்ஜி, திரு. ஆதி நாகப்பன், மதகுபட்டி டாக்டர் சோம இலக்குமணன் போன்ற செட்டிநாட்டு அன்பர் பலர் தொடக்க காலத்தில் இந்தச் சங்கத்தின் வளர்ச்சிக்குத் துணையாக இருந்திருக்கின்றனர்.

## அமெரிக்கா

அமெரிக்க நாட்டில் சில தமிழ் மன்றங்கள் இயங்கிவருவதையும் கவிஞர் கண்ணதாசனை அந்த அமைப்புக்கள் வற்புறுத்தி அழைத்ததையும் அனைவரும் அறிவர்.

இந்த முயற்சிகளுக்கு வித்திட்டவர் டாக்டர் அழகப்பா அழகப்பன் என்ற ஆல்ஜி *M. A., M. S. C.*, Ph.D., Barrister-at-law இவர் 25 ஆண்டுக்காலம் ஐக்கிய நாடுகள் சபையில் மிகப் பெரும் பொறுப்புக்களை வகித்தவர். 1983 இறுதியில் ஓய்வு பெற்று, உலகத்தின் மாபெரும் தொழில் நிறுவனங்களில் ஒன்றான West Bank Resources என்ற கனடா நாட்டுக் கம்பெனியின் தலைவராக 1984-இல் பொறுப்பேற்றுள்ளார்.

படிப்பது எதற்கு? என்ற நூலை இவர் 1964 அளவில் எழுதினார். பழனியப்பா பிரதர்ஸ் வெளியீடு.

தமிழ்நாடு, குமுதம் இதழ்களுக்குப் பிறர் எழுதாத பொருள்கள் பற்றி அரிய கட்டுரைகளை வழங்கியிருக்கிறார்.

லண்டன் தமிழ்ச் சங்கத்தின் செயலராக இருந்திருக்கிறார்.

பி. பி. சி வானொலி நிலையத்தில் தமிழில் பல உரைகளை நிகழ்த்தியிருக்கிறார். இவருடைய இடைவிடா முயற்சியால் நியூயார்க்கில் உருவான புகழ்மிக்க விநாயகர் கோயிலில் பக்தித் தமிழ் நூல்களைத் தொகுத்து வைத்திருக்கிறார்.

உலகத்தமிழ்மாநாட்டை நியூயார்க்கில் 1972-இல் நடத்த இவர் முன்வந்தார். அன்றைய தமிழக அரசு அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறியது.

அமெரிக்காவில் நடைபெறும் தமிழ்ப்பணிகளுக்கு ஆல்ஜி உறுதுணையாக இருந்து வருகிறார்.

### நியூயார்க் தமிழ்ச் சங்கம்

1970 முதல் நியூயார்க்கில் வாழ்ந்துவரும் கோனாபட்டு திரு. பி எல். எஸ். மணி (என்ற சுப்பிரமணியன்) பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையாரின் மாணவராக இருந்தபோதே

கையெழுத்து ஏடு நடத்தியவர். பல ஆண்டுகளாக இவர் நியூயார்க்குத் தமிழ்ச் சங்கத்தில் தலைவராகவோ செயலாள ராகவோ பொருளாளராகவோ இருந்து வருகிறார்.

சிக்காகோ தமிழ்ச்சங்கம்

நியூயார்க்குக்கு அடுத்தபடியான அமெரிக்கப் பெருநகரம் சிக்காகோ. இங்கும் ஒரு தமிழ்ச்சங்கம் செயற்படுகிறது. செயலர்—நெற்குப்பை திரு. தி. வடுகநாதன். தலைவர்—தேவகோட்டை தமிழ் வள்ளல் மெ. பேரன் திரு. சேவு. சேவுகன்செட்டி.

டெக்சாஸ்

டெக்சாஸ் இராச்சியத்தில் ஹூஸ்டனில் சைவ சமயப் பணியுடன் தமிழ்ப்பணியும் புரிபவர் நாட்டரசன்கோட்டை திரு. எஸ். கண்ணப்பன். இவர் டெனசி வேலி அத்தாரிட்டியின் பொறியியல் நிபுணர். ஆற்றொழுக்காகத் தமிழில் எழுதுபவர் அமெரிக்காவில் பிறக்கும் தமிழ்க் குழந்தைகளிடம் தமிழ்ப் பண்பாடு நிலவ வேண்டும் என்ற ஆர்வம் மிக்கவர்.

வெளிநாடுகளில் கோவில்கள், பண்பாட்டு நிறுவனங்கள் ஆகியவற்றை நிறுவ நினைப்பவர்களுக்கு உதவியாக இருக்கக் கூடிய ஒரு சிறு நூலை எழுதியிருக்கிறார்.

முகவரி: *Engineer S. Kannappan, 3202, Lake Brook Blvd. Knoxville TX 37919 U S A*

தமிழ் உலகம்

உலகெங்கும் உள்ள தமிழர்களின் குரலாக அமெரிக்க நாட்டு மேரிலாந்து இராச்சியத்திலிருந்து வெளிவரும் தமிழ் உலகம் இதழின் ஆசிரியக்குழுவும் செட்டிநாட்டுப் பிரதிநிதி இன்றிச் செயல்படுமா? இதில் இடம் பெற்றிருப்பவர் கலைத் தந்தை கருமுத்து தியாகராசரின் பேரன் டாக்டர் கருமுத்து கே. எம். தியாகராசன்.

# 37 தாலாட்டு

செட்டிநாட்டில் பெண் குழந்தைகளைப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பும் வழக்கம் 1930-இல் ஏற்பட்டது. அதற்கு முற்பட்ட காலத்தில் பெண்கள் தொடக்கப் படிப்புக் கூடப் பெறவில்லை. எனினும் கேள்வி அறிவாலும், உலகியல் அனுபவத்தாலும் பரம்பரைப் புலமையாலும், இலக்கிய மணம் கமழும் சொற்றொடர்களை அமைத்துப் பாடும் திறம் இவர்களிடம் இயல்பாக அமைந்திருக்கிறது, தங்கள் செல்வச் சிறுவர்கள் கண்ணயரப் பாடுகின்ற தாலாட்டுகளும் பிறபாடல்களும் இவர்களது ஆற்றலுக்குச் சான்று பகருகின்றன.

ஊர் பேர் தெரியாத செட்டிநாட்டு மூதாட்டியர் பாடிய தாலாட்டுக்கள், பல தலைமுறைகளாக வாய்மொழியாகப் பரவி வருகின்றன.

தாலாட்டுகளில் பலதரப்பட்ட கருத்துக்களைப் பரக்கக் காணலாம். மக்கட் செல்வத்தைப் பெறுவதற்குத் துடிக்கும் தாய் நோற்ற நோன்பு அதில் இடம் பெறும்; பெற்ற மக்களைப் பாராட்டிப் போற்றி வளர்க்கும் அருமை அதில் காட்சி தரும்; சேய், தன் தாய்க்குத் தரும் தன்னேரில்லா இன்பம் அதில் இனிது விளங்கும்; அம்மான்மாரும் ஏனைய உறவினரும் குழந்தைக்கு அன்புடன் தரும் பொன், பொருள், விளையாட்டுக் கருவிகளையும் அதில் காணலாம். அவர்கள் வாழும் மாட மாளிகைகளையும், மங்கலப் பொருளாக விளங்கும் ''வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளற்பெரும் பசுக்களை''யும், அப்பசுக்கள் தரும் பாலிலிருந்து பெறும் நறுமணமுள்ள நெய்யையும், வேலையாட்களின் வரிசைகளையும் தெரிவித்துச் செட்டிநாட்டுச் செல்வக் குடும்பங்களின் வாழ்க்கையை இப்பாடல்கள் நம் கண் முன்னே நிறுத்துகின்றன.

செட்டியார்கள் கடவுட் பற்று மிக்காராய், நாள்தோறும் வைகறையில் மலர் எடுத்து இறைவனை வழிபடுவர்; குளம் தொட்டும், கற்கோயில் பல எடுத்தும், அன்னசத்திரம் அமைத்தும் அறநெறியில் ஈடுபடுவர். இச்செயல்கள் யாவும் இத் தாலாட்டுக்களில் நிறைந்துள்ளன.

செட்டிநாட்டுப் பெண்களின் உள்ளத்தைக் கவர்ந்த கதைகள் பாரதம், இராமாயணம், கந்த புராணம், திருவிளையாடற் புராணம் முதலிய கதைகளாகும். பாண்டவர்களில் அர்ச்சுனனின் கதைகளில் இவர்களுக்கு ஈடுபாடு மிகுதி: அர்ச்சுனனின் மனைவியரைப் பற்றிய அம்மானைக் கதைகளை விருப்போடு கேட்பர்; இக்கதைகளையெல்லாம் இனிய தாலாட்டுகளில் அமைத்து, பேச்சறியாப் பாலகர்க்கு ஊட்டுவர்.

இவ்வாறு அரிய செய்திகளைத் தரும் தாலாட்டுகள் இலக்கிய இன்பம் தருவனவாகவும் உள்ளன. சில பகுதிகள், புகழ்பெற்ற கவிஞர்களை நமக்கு நினைவூட்டும். கோவலன், கண்ணகியின் நலம் பாராட்டும்

''மாசறு பொன்னே, வளம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே''

என்ற இளங்கோ அடிகளின் வரிகளைப் பின்வரும் தாலாட்டுப் பகுதி நம் நினைவுக்குக் கொண்டு வருகிறது:

''சந்தனமோ என் பொருளோ
சாமிதந்த தவப்பயனோ
கொட்டி வைத்த முத்தோ
குமிச்சு வைத்த ரத்தினமோ''*

புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார், தமிழ் நாட்டுச் சிறுமியை,

''பாண்டியனார் நன்மரபின் பச்சைத் தமிழே''

என்று தாலாட்டுகிறார். பள்ளிப் படிப்பறியாத, செட்டி நாட்டுத் தாயின் பைந்தமிழ்ப்பற்றை, தன் அருமை மகளை,

''தமிழோ புனக்கிளியோ''

என்று பாராட்டுவதிலிருந்து அறியலாம்.**

பிள்ளைக் கனி அமுதே
பேசும் பொற் சித்திரமே

என்ற பாரதியாரின் அடிகளுக்கு விளக்கம் கூறுவது போல

---

*இதன் முழுப் பாடலை ''வையை பெருகிவர'' என்ற தாலாட்டில் காண்க.

**இப்பகுதி, பின்வரும் தாலாட்டு ஒன்றில் உளது

"கோடைப் பலாச் சுளையும்
குலைசேர்ந்த மாங்கனியும்"†

என்ற தாலாட்டுப் பகுதி அமைந்துள்ளது.

இயல்பாக ஆச்சிமார்களிடம் உள்ள சமயப் பற்றாலும், மக்கட்செல்வத்தைப் பெற வேண்டுமென்ற விருப்பத்தாலும் பல்வேறு புண்ணியத் தலங்களுக்குச் சென்று "புண்ணியதி துறைக"ளாடி, கடவுள் வழிபாடு செய்து வீடு திரும்புவர். இவர்கள் செய்யும் பிரயாணத்திற்கு வசதியாக, தமிழ்நாட்டுத் தலங்களில் மட்டுமன்றி, காசி, கயா, அயோத்தி, அரித்துவார், பிரயாகை, நாசிக், காளிகட்டம், கல்கத்தா முதலிய பல இடங்களிலும் சத்திரங்கள் அமைத்துக் கொண்டிருக்கின்றனர். இச்செய்திகளைத் தரும் தாலாட்டைக் கீழே படித்து மகிழ்வோம்.

"ஸ்ரீரங்கம் ஆடி
திருப்பரகக் கடலாடி
மாமாங்கம் ஆடி
மதுரைக் கடலாடி
‡சங்குமுக மாடி
சாயாவனம் பார்த்து
முக்குளமும் ஆடி
முக்தி பெற்று வந்த கண்ணே"

இவ்வாறு இறை அருளால் தனக்குக் கிடைத்த மகன், குலமும் குடியுமாகத் தழைத்து வாழவேண்டுமென்று தாய் உள்ளம் ஆசைப்படுகிறது. அந்த ஆசையும் வாழ்த்தும் "வைத்திருக்கத் தந்த மகன் வாழுவான் நூறு குடி" என்ற அடிகளால் வெளியிடப் படுகின்றன.

அருமையாகப் பெற்ற மகனுக்கு தொட்டி கட்டி தொட்டிலில் அவனைக் கண் வளரச் செய்கிறாள் ஒரு செட்டி

---

† இப்பகுதியை "என் அரிய அம்மானார்" என்று தொடங்கும் தாலாட்டில் காண்க.

‡ சங்குமுகம்—காவிரிப் பூம்பட்டினத்தில் காவிரி கடலோடு கலக்கும் இடம். சங்கமம் என்பது சங்குமுகம் என மருவி வழங்கி வருகிறது போலும். சாயாவனம் என்பது காவிரிப்பூம்பட்டினத்திற்கு அருகில் உள்ள ஒரு தீர்த்தம், முக்குளம் என்பது திருவெண்காட்டுச் சிவன் கோவிலில் உள்ள மூன்று குளங்களைக் குறிக்கும்.

நீட்டுத் தாய். தான் கட்டிய தொட்டிலை வெள்ளி வளைய மும் தங்கவளையமும் பூட்டிக் கட்டியதாக அவள் பெருமைப் படுகிறாள். பால் வடியவடிய பச்சை இலுப்பைக் கிளையையும் வெட்டி அதிலும் தொட்டி கட்டியதாகப் பாடுகிறாள்.

''வெள்ளிவளை பூட்டி
விலாசமாய்த் தொட்டி கட்டி
தங்கவளை பூட்டி
சதுர அலங்காய் தொட்டி கட்டி
பச்சை இலுப்பை வெட்டி
பால் வடியத் தொட்டி கட்டி
தொட்டியிலே அட்டணக்கால்
தூங்குறது ஆரு மகன்
சீதை மகனோ
ஸ்ரீராமர் தந்த கண்ணோ
அல்லி மகனோ அரிராமர்
மருமகனோ''

தொட்டிலில் உறங்கும் தன்''துரைமக''னைப் பார்த்துத் தாய் பூரிப்படைகிறாள். தாய் அவனை, ''பாண்டியப் பெரு முத்து''என்று உளம் நிறைந்து பாராட்டுகிறாள். முத்துக் குளிக்கும் நிகழ்ச்சிகளும் இப்பாடலில் கூறப்படுகின்றன. முத்து வியாபாரம் செய்வதைத் தங்களுடைய தலையாய தொழிலாகக் (முன்னாளில்) கொண்ட சமூகம் அன்றோ?

வையை பெருகி வர
வாந்த மணல் ஊறிவர
ஊரி வந்த தண்ணியிலே
ஒட்டிவந்த கட்டி முத்தோ
பெருகி வந்த தண்ணியிலே
பின் அணைந்த சந்தனமோ
சந்தனமோ என் பொருளோ
சாமிதந்த தவப் பயனோ
கொட்டி வைத்த முத்தோ
குமிச்சு வைத்த ரத்தினமோ
கட்டிக் கரும்போ
காணிக்கை ஆணி முத்தோ
முத்தில் ஒரு முத்தோ
முதிர விளைந்த முத்தோ

தேறவிளைந்த முத்தோ
தில்லைக்கு உகந்த முத்தோ
பாண்டிப் பெருமுத்தோ
பாட்டன்மார் ஆண்டமுத்தோ
ஆணிப்பெரு முத்தோ
ஐயாக்கள் ஆண்டமுத்தோ
முத்து முத்து ஆத்துக்குள்ளே
மூனாத்து பாய்ச்சலிலே
முக்குளிச்சு முத்தெடுக்கும்
முத்துமகள் நித்திரையோ
நித்திரையும் போவானாம்
சித்திரப்பூத் தொட்டியிலே
தாமரையும் பூக்குமாம்
தனக்கிசைந்த பொய்கையிலே
தாமரையின் வாழ் மலரோ
தங்கை பெற்ற குஞ்சலரோ

தாய் தன் இளமை முதல் கேட்டுவந்த அல்லி கதையும் அவள் மகன் புலந்திரன் கதையும், சுபத்திரை கதையும், அவள் மகன் அபிமன்யு கதையும் அவள் நினைவுக்கு வருகின்றன. வீரம் நிறைந்த அவர்களைப் போல தன் மகனும் உயர்ந்தவன் என்று அவள் பெருமிதப்படுகிறாள்.

“அல்லி அரசியருக்கும்
அழகு துரோபதைக்கும்
பங்கயம் சிறுகண்ணாள்
பவளக் கொடியாள்க்கும்
மாயரொட தங்கை
மாது சுபத்தரைக்கும்
மேகத்தில் மின்னுகிற
மின்னொலியால் தனக்கும்
கொத்தவர்கள் ஐவருக்கும்
கோபால கிருஷ்ணருக்கும்
தனதாய் விளையாடும்
தமிழோ புனக்கிளியோ
பொதுவாய் விளையாடும்
புள்ளிமான் நித்திரையோ”

இவ்வாறு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமும் வளரும் குழந்தை ஒய்ந்திருக்குமா? ஓடி விளையாடும் அல்லவா? அதிலும்—திரைகடலோடித் திரவியம்

தேடும் மரபில் வந்த குழந்தை அல்லவா? குழந்தையின் துரு துருத்த விளையாட்டுக்களை இத் தாலாட்டுகள் குறிப்பிடு கின்றன.

மானுடா ஓடுது
மறியிடா நல்லதம்பி
மானோடும் வீதி எல்லாம்
தானோடித் திரிந்தானோ
ஓடித் திரிந்தானாம்
ஒரு கால் சிலம்பதிர
தேடித் திரிந்தானாம்
திருக்கால் முத்துதிர

* * *

''நாழிச் சிறு சலங்கை
நல்ல பவன் பொன் சலங்கை
உழக்குச் சிறு சலங்கை
ஓசத்தி உள்ள பொன் சலங்கை
ஆருக்கு இடுவ மின்னு
தேடித் திரிகையிலே
எனக்கிடுங்க என்று சொல்லி
எதிர் கொண்டு வந்தவனோ
தனக்கிடுங்க என்று சொல்லி
தம்பி துணை ஆனவனோ''

* * *

''மீன் பூக்க நிலவரிக்க மின்னல்குளம் பெருக
மின்னலிலே காதவழி தம்பி நீ விளையாடி வந்தாயோ?
அச்சடிக்கப் பொன்விளைய ஆதிச்சார் உன்நாடு.
வைத்திருக்கத் தந்தமகன் வாழுவான் நூறுகுடி.
குடகு சிறுமலையாம் கன்னியவான் ஆடுமலை.
அரிசித் தினைவிளையும் நீ பிறந்த அண்ணாமலைநாடு.

ஆனை கட்டிப் போரடிக்கும் அம்மானார் சேனைதலம்
குதிரை கட்டிப் போரடிக்கும் கோடிப்பேர் சேனைதலம்
மான் கட்டிப் போரடிக்கும் மாமுடிமார் சேனைதலம்
அம்மானார் செய்களிலே அவனுக்கொரு நெல்எடுத்து
பள்ளிதனைக கூட்டிப் பதம்போல் அவல் இடித்து
இடைச்சிதனைக் கூட்டி இலைபோல் அவல் இடித்து
அவல் அழகைக் கண்ட தம்பி-நீ அழுகை அமர்ந்தாயோ!'

பிறந்த வீட்டின் பெருமை பேசுவது பெண்ணினத்தின் இயல்பு. செட்டிநாட்டுப் பெண்களும் இவ்விதிக்கு உட்பட்டவர்கள்தான். தாய் வீட்டார் தந்த சீர்வரிசைகளை மெய்மறந்து பாராட்டுவர். தன் மகனுக்கு அவனுடைய அம்மான் கொடுத்த விளையாட்டுச் சாமான்களைப் பற்றிக் கூறி, அவள் பெருமை பாராட்டுவதை இப்பாடலில் காண்க.

"என் அரிய அம்மானார் என்ன கொண்டு வந்தார்கள்?
அக்கரையில் சர்க்கரையும், அதிமதுரத் தென்னைவட்டும்
கோடைப் பலாச்சுளையும், குலைசேர்ந்த மாங்கனியும்
பருவப் பலாச்சுளையும், பக்குவத்து மாங்கனியும்,
போட்டு விளையாடப் பொன்னாலே அம்மானை,
கட்டி விளையாடக் காசிச் சிண்டுமணி
வைத்து விளையாட வண்ணக் கிலுகிலுப்பை,
ஓட்டி விளையாட ஒயிலா ரயில்வண்டி,
சாதிக் களிப்பாக்கும், சங்கு வெள்ளைச் சுண்ணாம்பும்,
ஏலங் கிராம்பும், இளங்கொடிக்கால் வெற்றிலையும்
அத்தனையும் கொண்டு அறியவந்தார் அம்மானார்.

"நெத்திக்குச் சிட்டி
நிழல் பார்க்கக் கண்ணாடி
காலுக்குத் தண்டை
கைக்கு கணையாழி
கொண்டுவந்தும் காண்பாக
கோதைக்கிளிக் கம்மானார்.'

"அம்மானார் செய்களிலே அவலுக்கொரு நெல்லெடுத்து
*பள்ளிகளைக் கூட்டிவிட்டுப் பக்குவமாய் அவலிடித்து
எல்லோருமாக இட்டு வழங்கையிலே
எனக்கு இடுங்களென்று-தம்பி
எதிரோடி வந்தானாம்
தனக்கு இடுங்களென்று-தம்பி
தானோடி வந்தானாம்"

---

*பள்ளிகள்-ஹரிஜனப் பெண்கள் (பள்ளர் வீடு)

பல வாயில்களையும் கட்டுக்களையும்* கொண்ட பெரிய வீடுகளைச் செட்டியார்கள் கட்டியுள்ளனர். இத்தகைய மாளிகை ஒன்றில் வாழுகின்ற பெண் தாலாட்டுவதைக் கேளுங்கள்.

"முல்லைப்பூக் கட்டடமாம்
முகப்பு எல்லாம் உதிரமாம்
முகப்பைத் திறந்து விட்டால்
முல்லைப்பூ வாசனையாம்
முல்லைப்பூ வாசனையாம்
உங்கள் ஐயா மூத்தவுக யோசனையாம்"

பர்மா முதலிய அயல்நாடுகளிலும் காடு அடர்ந்த பல பகுதிகளைச் செட்டியார்கள் காடு வெட்டிப் பண்படுத்திச் செய் நேர்த்தி செய்து அவைகள் பொன்விளையும் பூமிகளாகச் செய்துள்ளனர். இந்த முயற்சியில் அவர்களுக்கு நேர்ந்த இடையூறுகளையும் அவற்றைப் பெருட்படுத்தாமல் பெரிதும் முயன்று பலன் கண்டு தாயகம் திரும்பி வருவதையும் தன் மகனுக்குச் சொல்லித் தாலாட்டுகிறாள்:

"காடு வெட்டி நாடாக்கி
கள்ளரெல்லாம் உள் அமர்த்தி
நாடு விட்டும் வாராக
ராஜாக்கள் உங்கள் ஐயா"

செல்வக் குடும்பங்களில் குடும்பத் தலைவரின் ஏவலை நிறைவேற்றப் பலர் காத்திருப்பர். வீட்டுக் கணக்கு எழுத "ஐயர்கள்" இருப்பார்கள். அதையும்,

"ஆராயிரவர்க்கும் அறியவந்த பார்ப்பார்க்கும்
காரியமும் சொல்லிக் கணக்குரைப்பார் பேரனோ"

என்று தாலாட்டில் குறிப்பிடுவர்.

---

*செட்டிநாட்டு வீடுகள் பெரும்பாலும் மூன்று தடவைகளில் கட்டப்பட்டவை. கடல்கடந்த நாடுகளில் பொருளீட்டித் தாய் நாடு வந்து வீட்டுவேலை தொடங்குவர். முதல் கட்டு—முகப்பு, வளைவு என்னும் கல்யாண மண்டபம் இவையிரண்டும்—முடிந்ததும் மீண்டும் வெளிநாடு சென்று பொருளீட்ட வேண்டிய நிலை ஏற்படும். அந்தக் கணக்கு முடிந்ததும் இரண்டாம் கட்டும் பின்னர் மூன்றாம் கட்டும் கட்டப்பட்டன.

தெய்வ வழிபாட்டிலும் அறச் செயல்களிலும் செட்டியார் கள் ஆர்வம் மிக்கவர்கள். அந்தச் சிறப்பையும் ஒரு தாய் தாலாட்டில் கூறுகிறாள். பூங்காவனம் பூத்ததை நந்தவனம் கண் திறந்தது என்று கூறுவது இலக்கியச் சுவையாக இருக்கிறது.

''பரட்டைப் புளிய மரம்
பந்தடிக்கும் நந்தவனம்
நந்தவனம் கண் திறந்து
நாலுவகைப் பூ எடுத்து
பூ எடுத்துப் பூஜை பண்ணும்
புண்ணியவார் பேரேனோ (பேத்தியோ)
மலரெடுத்துப் பூஜை பண்ணும்
மகராஜா பேரேனோ (பேத்தியோ)
அரும்பெடுத்துப் பூஜை பண்ணும்
அர்ச்சுனவாரீ பேரேனோ (பேத்தியோ)

* * *

''வித்தகசாலை கட்டும்
வீமருட பேரேனோ
பாடகசாலை கட்டும்
பாண்டியனார் பேரேனோ
குளிக்கக் குளமும் வெட்டி
கும்பிடவும் கோயில்கட்டி
அசராமல் அன்னமிடும்
அருச்சுனவா பேரேனோ''

சென்ற தலைமுறையில் ஒரு தொழிலை மட்டுமே செட்டியார்கள் செய்த வந்தனர். இக்காலத்தில் அவர்கள் பல வகையான தொழில்களில் உள்ளனர். ''வக்கில்'' குடும்பத்து ஆச்சி தாலாட்டுவதைக் கேளுங்கள்.

''கோர்ட்டைத் திறந்து
குறிச்சியிலே உட்கார்ந்து
ஜட்ஜோடே பேசும்
தருமவா பேரேனோ
வக்கீலோடே பேசும்
மகராசர்பேரேனோ''

இராமாயணக்கதைகளையும், சொக்கர் திருவிளையாடல் களையும், வள்ளி திருமணம் பற்றிய கதைகளையும் கூறும்

தாலாட்டுகள் சிலவற்றையும் செட்டிநாட்டில் வழங்கும் வேறு பல தாலாட்டுகளையும் இனிக் காண்க.

''சோற்றிலொரு செங்களநீ (ர்)
திங்களொரு பூப்பூக்கும்
நூற்றிலொரு பூ வெடுத்து
முடிப்பார் மகனாரே (மகளாரே)''

''வங்காளம் சிட்டு
வயலிறங்கி மேயி தின்னு
சிங்கார வில்லெடுத்துத்
தெரிப்பார் மகனரோ''

''ஆற்றுக்கும் தெற்கே
அழகருக்கும் தென்கிழக்கே
சோற்றுக்கும் தூயவெள்ளை-சொக்கர்
சொல்லிவர விட்டாரோ.''

''சம்பா கதிரடித்து-சொக்கர்
தவித்து நிற்கும் வேளையிலே
சொர்ணக் கிளிபோல-மீனா
சோறு கொண்டு போனாளாம்
நேரங்கள் ஆச்சுதென்று-சொக்கர்
நெல்லெடுத்து எய்தாராம்
கல்லோ கிடக்குதென்று-சொக்கர்
கடுங்கோபம் கொண்டாராம்.''

''அள்ளி எறிந்தாரராம்
அளவற்ற கூந்தலிலே
மயங்கி விழுந்தாளாம்
மல்லிகைப்பூ மெத்தையிலே
சோர்ந்து விழுந்தாளாம்
சொக்கட்டங்காய் மெத்தையிலே''

''அழுத குரல்கேட்டு
அழகர் எழுந்திருந்து
வரிசை கொடுத்தாராம்
வையகத்தில் உள்ளமட்டும்
சீரு கொடுத்தாராம்

சீமையில் உள்ளமட்டும்
மானா மதுரை விட்டார்
மதுரையிலே பாதிவிட்டார்
தல்லா குளமும் விட்டார்
தங்கச்சி மீனாளுக்குத்
தளுகையிலே பாதிவிட்டார்.''

''மதுரைக்கும் தெற்கே
மழைபெய்யாக் கானலிலே
வெள்ளிக் கலப்பை கொண்டு-சொக்கர்
விடிகாலம் ஏர்பூட்டித்
தங்கக் கலப்பை கொண்டு-சொக்கர்
தரிசுழுகப் போனாராம்

தரிசாய்க் கிடந்த நிலம்-சொக்கர்
சம்பா விதைபாவிச்
சருகுசம்பா நாத்து நட்டுப்
பிடித்து விதைபாவிப்
பெருங்கடல் தீர்த்தம்வந்து
வாரி விதைபாவி

வைகைநதித் தீர்த்தம்வந்து
அள்ளி விதைபாவி
அழகர்மலைத் தீர்த்தம்வந்து
எங்கும் விதைபாவி
ஏழுகடல் தீர்த்தம் வந்து
சரஞ்சரமாய் நெல்விளையும்;
சந்நிதிபோல் போர்ஏறும்
கொத்துக்கொத்தாய் நெல்விளையும்;
கோபுரம்போல் போர் ஏறும்
கட்டுக் கலங்காணும்;
கரு துழக்கு நெல்காணும்.
அடித்துப் பொலிதூர்த்த
அதுவும் கலங்காணும்.
பொன்சுளகு கொண்டு
பொதி தூற்றி நிற்பாராம்.
பொன்மரக்கால் கொண்டு
பொதியளந்து நிற்பாராம்,''

"மண்ணிலொரு புன்னைமரம்
வருந்தியொரு காய்காய்க்கும்
ஜானகையாள் புன்னைமரம்
தழைநெருங்கிக் காய்காய்க்கும்
பூநாலு, காய்முணு
புனக்கிளியாள் புன்னைமரம்
தாயார் சொற்படிக்கு
ராமர் வழிநடந்தார்.
பர்ணக சாலைக்கட்டி,
சுவாமிபகவானும் பள்ளிகொண்டார்.
வடிவுள்ள மான் வந்து
மருகிவிளையாடையிலே
வகையறியாச் சீதையரும், சாமி,
மான் எனக்கு வேணுமென்றாள்.
மானைப் பிடிக்க
வனம் புகுந்தார் ஈஸ்வரரும்
பிச்சை யென்றான் ராவணனும்
அள்ளியிட்டாள், ஜானகிதான்,
கூசாமே சீதையரைக்
கொண்டுவந்தான் தென்னிலங்கை
ராமர்—வைத்த இடம் காணாமல்,
வாடி அலைந்தாராம்
தேடித்திரிந்தாராம்

திருக்கால் சிலம்பதிர
ஓடித் திரிந்தாராம்—ராமர்
ஒருகால் சிலம்பதிர
ஆழி கைக்கொடுத்து
அனுமாரைத் தூதனுப்பி
சீராழி கைக்கொடுத்து— ராமர்
சீதை சிறை மீட்டாராம்
கணையாழி கைக்கொடுத்து —ராமர்
காரிகையை மீட்டாராம்.

"(ஆ) ராராரோ ராரிவரோ
ராரிக்கோ ராரிமுத்தோ
ராமருக்கோ பஞ்சுமெத்தை
பஞ்சுமெத்தை மேலிருந்து-ராமர்
பஞ்சாங்கம் பார்க்கையிலே

வயதுநா றென்றுசொல்லி
வாசிச்சார் பஞ்சாங்கம்
எழுத்து நூ றென்றுசொல்லி
எழுதினார் பஞ்சாங்கம்,''

''இரும்பாலே ஊரணியாம்
இருபுறமும் தாமரையாம்
தாமரையின் நூலெடுத்துத்
தனிப்பசுவின் நெய்யுருக்கி
வாழெலையும் மாவிளக்கும்
வச்செடுத்த குஞ்சலரோ
தென்னெலையும் மாவிளக்கும்
சேர்த்தெடுத்த குஞ்சலரோ
குஞ்சலரோ அஞ்சலரோ
ஆடும் சிதம்பரரோ.''

''காசியிலே பட்டெடுத்துக்
கப்பலிலே தொட்டிகட்டி
தொட்டி வரிந்துகட்டி
துரைமகனை(மகளை)ப் போட்டாட்டித்
தொட்டிலுக்கும் கீழே
துணையிருப்பாள் மீனாட்சி
கட்டிலுக்கும் கீழே
காத்திருப்பார் சொக்கலிங்கம்''

''உழக்குத் தினைவிதைத்து—வள்ளி
ஓடிக் கிளிவிரட்டி
பதக்குத் தினைவிதைத்து—வள்ளி
பறந்து கிளிவிரட்டி
நாழித் தினைவிதைத்து—வள்ளி
நடந்து கிளிவிரட்டி
வள்ளி அழகுக்கும் வலதுகைத் தோமலுக்கும்
உட்கழுத்து மஞ்சளுக்கும் சுப்பையா
உள்ளாசைப் பட்டாரோ.

கூந்தல் அழகுக்கும்
சுப்பையா குறவேசமானாரோ
மயிற்றின் அழகுக்கும்
சுப்பையா மறுவேசமானாரோ.''

* * *

"அத்தை மடிமேலும் அம்மான்மார் தோள்மேலும்
வைத்து விளையாடும் மாமணியே கண்வளராய்"

என்ற பகுதி சில தாலாட்டுகளில் உண்டு. குடும்ப ஒற்றுமையை, தாலாட்டுப் பாடல் வாயிலாகத் தெரிவிக்கும் நுண்ணறிவும் அதனைப் பாடும் நயமும் பாராட்டுக் குரியன.

இன்னுஞ் சில தாலாட்டுக்களைக் கேட்போம்.

தாய்

ஆரடித்தார் ஏனழுதாய்
கொம்புக் கனியே
கோதுபடா மாங்கனியே
வம்புக் கழுதாயோ
வாயெல்லாம் பால்வடிய!

மாமன் அடித்தானோ
மல்லிகைப்பூச் செண்டாலே!
அத்தை அடித்தாளோ
அல்லி மலர்ச் செண்டாலே!

அடித்தாரைச் சொல்லியழு
ஆக்கினைகள் செய்துவைப்போம்
தொட்டாரைச் சொல்லியழு
தோள்விலங்கு போட்டுவைப்போம்!

ஆரும் அடிக்கவில்லை
ஐவிரலும் தீண்டவில்லை
தானா அழுகின்றான்
தம்பி துணை வேணுமென்று
அவனா அழுகின்றான்
ஆத்தாள் மடிதேடி!

தந்தை

தெள்ளுதமிழ் வளர்த்த
தென்ன வராம் பாண்டியர்க்குப்
பிள்ளைக்கலி தீர்த்த
பெருமானும் நீதானோ
மாம்பழத்தைக் கீறி
வயலுக்கு உரம் போட்டுத்
தேன்பாய்ந்து நெல்விளையும்
செல்வ முளார் புத்திரனோ!

பெருகி வந்த தண்ணியிலே
பின்னிரைத்த சந்தனமோ!
சந்தனமோ என் பொருளோ
சாமிதந்த தவப்பயனோ
கொட்டிவைத்த முத்தோ
குவித்த நவரத்தின மோ
கட்டிக் கரும்போ
காணிக்கை ஆணிமுத்தோ

முத்தில் ஒரு முத்தோ
முதிர விளைந்த முத்தோ
தேர விளைந்த முத்தோ
தில்லைக் குகந்த முத்தோ
பாண்டிப் பெருமுத்தோ
பாட்டன்மார் ஆண்டமுத்தோ
ஆணிப் பெரு முத்தோ
ஐயாக்கள் ஆண்ட முத்தோ

முத்து முத்தும் கடலுக்குள்ளே
மூணுத்துப் பாய்ச்சலிலே
முக்குளித்து முக்கெடுக்கும்
முத்து மகன் நித்திரையோ!

மானுடா ஓடுது
மறியடா நல்லதம்பி!
மானோடும் வீதியெலாம்
தானோடித் திரிந்தாயோ?
ஓடித் திரிந்தாயோ
ஒருகால் சிலம்புதிர!
தேடித் திரிந்தாயோ
திருக்கால் முத்துதிர!

மீன்பூக்க நிலவரிக்க
மின்னல் குளம் பெருக
மின்னலிலே காதவழி—தம்பி நீ
விளையாடி வந்தாயோ!
அச்சடிக்கப் பொன் விளைய
ஆதிச் சார் உன்னாடு
வைத்திருக்கத் தந்த மகன்
வாழுவான் நூறுகுடி.

வெள்ளித்தேர் பூட்டி
    மேகம்போல மாடுகட்டி
அள்ளிப் படியளக்கும்
    அதிட்டமுள்ளார் புத்திரனோ!
வாரிய படியளக்கும்
    மகிமையுள்ளார் புத்திரனோ!
சேற்றிலொரு செங்கழுநீர்
    திங்களொரு பூப்பூக்கும்
நாற்றிலொரு பூ வெடுத்து
    முடிப்பார் மகனாரோ!
இன்னார் மகனோ?
    இனியார் மருமகனோ?
தனதாய விளையாடும்
    தமிழோ புனக்கிளியோ?
பொதுவாய் விளையாடும்
    புள்ளிமான் நித்திரையோ!

அம்மான்மார்

சங்கினால் பால் கொடுத்தால்
சந்தன வாய் நோகுமென்று
தங்கத்தினால் சங்கு செய்து
தருவார்கள் தாய்மாமன்!
அத்தை மடி மேலும்
அம்மான்மார் தோள்மேலும்
வைத்து விளையாடும்
மாமணியே கண்வளராய்!
அம்மான் அரண்மனைக்கு
அமைந்த மருமகனோ
மாமன் அரண்மனைக்கு
வாய்த்த மருமகனோ

பாட்டி

ஆயிரம் முத்திலே—என் கண்ணே நீ
ஆராய்ந் தெடுத்த முத்தோ!
தொண்ணூறு முத்திலே — என் கண்ணே நீ
துணிந்தெடுத்த ஆணிமுத்தோ!
வைகை பெருகி வர
வாழ்ந்த மணல் ஊர்ந்துவர
ஊறிவந்த தண்ணியிலே
எட்டிவந்த கட்டிமுத்தோ

வாடிய நாளெல்லாம் வருந்தித் தவமிருந்து
தேடிய நாள் தன்னில் செல்வமாய் வந்த கண்ணோ!
மலடி மலடி யென்று வையகத்தார் ஏசாமல்
மலடி என்ற சொல்லை மாற்றப் பிறந் தாயோ!

அண்ணன் கொடுத்த சீர்

அழுத குரல் கேட்டு
அழகர் எழுந்திருந்து
வரிசை கொடுத்தாராம்
வையகத்தில் உள்ள மட்டும்
சீரு கொடுத்தாராம்
சீமையிலே உள்ள மட்டும்

* * *

கரும்புருகத் தேனுருகக்
கண்டார் மனமுருக
எலும்புருகப் பெற்றகண்ணே!
இலக்கியமே கண்வளராய்!
அழுதா அரும்புதிரும்
அண்ணாந்தால் பொன்னுதிரும்
சிரிச்சா சிறு முத்துதிரும்—செல்வமகன்
வாய் திறந்தால் தேன் சிதறும்!
தேனோ திரவியமோ—என் கண்ணே
தெவிட்டாத மாங்கனியோ!

* * *

அவரை சலசலங்க அம்புமணிப் பிஞ்சிறங்க
கொடி அவரை காய்க்க குடி தழைக்க வந்த மகன்
பச்சை இலுப்பை வெட்டிப் பால்வழிய தொட்டிகட்டி
அந்த நல்ல தொட்டியிலே—என் கண்ணம்மா
ஆள வந்த பாலகனோ

* * *

கரும்போ இனிதேனோ
கற்கண்டோ சர்க்கரையோ!
சர்க்கரையோ முக்கனியோ
சாதிமருக் கொழுந்தோ!

கொடிக்கால் மருக்கொழுந்தோ கண்ணம்மா
கோதைகையிற் பூச்சரமோ!
சாதி மருக்கொழுந்தோட கண்ணம்மா
சரங் கொடுத்த பூச்சரமோ

தாலாட்டுப் பாடல்கள் வாயிலாக, குழந்தைகளுக்கு இலக்கிய ஆர்வத்தை ஊட்டும் இயல்பு செட்டிநாட்டுத் தாய்மார்களுக்கு உண்டு என்பதை இக்கட்டுரையில் தெரிவித்தோம். இனி, பாட்டிமார் கற்றுக் கொடுக்கும் பாடல் ஒன்றையும் தருவோம்.

இரவில் உறங்கப் போகும்போது பாடுகின்ற பாடல்:—

"அரியின்னு பாய்விரித்து
அச்சுதான்னு பேர் சொல்லி
கிருஷ்ணான்னு படுத்தவர்க்கு
ஒருநாளும் கேடில்லை
கோவிந்தான்னு படுத்தவர்க்கு
ஒருநாளும் குறைவில்லை"

படுத்த படுக்கையில் இருந்த நிலையில் விடியல் கருக்கலில்,

"பொழுதெப்ப விடியும்?
பூவெப்ப மலரும்?
சிவனெப்ப வருவார்?
பலனெப்பத் தருவார்?"

என்று பாடுவது வழக்கம். பொழுது என்பது சூரியன் அல்லது பகற்பொழுதையும், பூ என்பது தாமரைப் பூவையும் குறிக்கும்.

இந்நாளிலும் நூற்றுக்கும் மேற்பட்ட இளம் பெண்கள் புதுவகைத் தாலாட்டுப்பாடி அவற்றை நகரத்தார் குரல், நகரத்தார் மலர் போன்ற இதழ்களில் வெளியிட்டு வருகின்றனர். நாம் கொடுத்திருக்கும் பாடல்கள் தொன்று தொட்டுப் பாடப்பெறுவன.

# 38 ஒப்பாரி

அழுவது கலையன்று; ஆனால் வருத்தத்தை ஒப்பாரியாக வெளியிடுவது கலை, அரிய கலை. அந்தக் கலையில் கைதேர்ந்தவர்கள் செட்டி நாட்டுப் பெண்கள். அவர்கள் சிறந்த ஒப்பாரி பாடுவதை அறிந்து வியந்து, செட்டி நாட்டைப் பற்றி நாமக்கல் கவிஞர் ஒருமுறை பின்வரும் பாடலைப் பாடினார்:

''உழவும் தொழிலும்
இசைபாடும்
உண்மைச் சரித்திரம்
அசைபோடும்
இழவில் அழுதிடும்
பெண்கூட
இசையோ டழுவது
கண்கூடு''

ஒப்பாரிப் பாடல்களை ஆற அமர இயற்ற முடியாது. அவை உணர்ச்சிப் பெருக்கால் திடீரென்று வெளிவருபவை ஒருவர் இறந்த வீட்டில், இறந்தவரின் உறவினர் பலர் தத்தம் வருத்தத்தை ஒப்பாரியாகப் பாடுவர். எனவே ஒருவருடைய ஒப்பாரி மற்றொருவரின் ஒப்பாரியிலிருந்து வேறுபட்டிருக்க வேண்டும். அதைவிடச் சிறப்பாகவும் இருக்கவேண்டும். யாருடைய ஒப்பாரி நன்றாக இருக்கிறது என்பதைக் கூர்ந்து கவனிக்கும் திறனாய்வாளராக ஊர்ப் பெண்கள் இழவுவீட்டை முற்றுகையிடுவதும் செட்டிநாட்டில் வழக்கம். ஒரு முறை கேட்ட பாடலை, நினைவில் வைத்திருக்கும் பேராற்றல் இப் பெண்களுக்கு உண்டு.

ஒப்பாரிப் பாடல்களிலே பாடுபவர்க்கும் இறந்தவர்க்கும் நிலவிய நெருங்கிய தொடர்பு தெரியும்; மனத்தை உருக்கும் அனுபவங்கள் நிறைந்திருக்கும்; இறந்தவருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகள் இடையிடையே செருகப்பட்டிருக்கும். இந்த ஒப்பாரிகள், குறிப்பிட்ட சிலருடைய இன்பதுன்பங்களின் தொகுப்பாகத் தோன்றிக் காற்றோடு கலந்து விடுகின்ற போதிலும் கால எல்லையைத் தாண்டி நிலவும் இலக்கியச் சிறப்பும் பெற்றிருக்கின்றன. எனவே செட்டிநாட்டு ஒப்பாரிகள் சிலவற்றை இங்கே தருவோம்.

கணவன் இறந்துவிட்டார். மனைவி மனங் கலங்குகிறாள் அவர் நோய்வாய்ப்பட்டிருந்தது அவள் நினைவுக்கு வருகிறது.

மலையாள வைத்தியனை மடிவசமாய்க் கூட்டிவந்தோம்
மலையாள வைத்தியனும் மருந்தறிய மாட்டலையே
சீமை வைத்தியனைச் சீக்கரமாய்க் கூட்டிவந்தோம்
சீமை வைத்தியனும் சீக்கறிய மாட்டலையே!''

அந்தப் பெண்ணின் வாழ்வே இருண்டுவிடுகிறது. அதற்கு யாரைக் குறைசொல்வது?

"தாலிக்கு அரும்பெடுத்த தட்டானும் கண்குருடோ?
சேலைக்கு நூலெடுத்த சேணியனும் கண்குருடோ?
பஞ்சாங்கம் பார்க்கவந்த பார்ப்பானும் கண்குருடோ?
எழுதினவன்தான் குருடோ? எழுத்தாணி கூரிலையோ?''

❋ ❋ ❋

''சிதம்பரத்துத் தட்டான் சீர்காழி ஆசாரி
பட்டறையைக் கிட்டவச்சுப் பண்ணும் சிறுதாலி
தாலி பொருத்தமில்லே தட்டான்கை ராசியில்லே
மாலை பொருத்தமில்லே வயிராவிகை* ராசியில்லே
சேலை பொருத்தமில்லே சேணியன்கை ராசியில்லே''

இளமையில் கணவனைப் பறிகொடுத்த ஒரு பெண் கதறுகிறாள் :—

''சில்லென்று பூத்த
சிறு நெருஞ்சி காட்டுடே
நில்லென்று சொல்லி
நிறுத்த வழி போனீரே''

"கட்டிய சேலை இன்னும் கசங்கி மடியவில்லே
வச்ச பூ இன்னும் வாசங் குறையவில்லே
மஞ்சள் கலையவில்லே மடிப்புக் குலையவில்லே.''

* வயிராவி – திருமண மாலையைக் கொண்டுவரும் பணியாளன். நகரக்கோயில்களில் வேலை பார்ப்பவன்.

பிஞ்சுவய தென்றேன்
பேராசைக்காரி யென்றேன்
நாயகனை பறிகொடுத்துப்
பிரிந்திருக்க மாட்டே னென்றேன்
பிரிந்திருக்க மாட்டே னென்றேன்
பிடிக்கவந்தான் கேட்கலையே.''

''மட்ட வயதென்றேன்
மனசாசைக்காரி யென்றேன்
மன்னர்தனைப்பிரிந்து
வாழ்ந்திருக்க மாட்டேனென்றேன்
வாழ்ந்திருக்க மாட்டேனென்றேன்
மாய்க்க வந்தான் கேட்கலையே''

* * *

கணவனை இழந்த மனைவி தன் கணவன் உண்ட உணவு வகைகளை நினைத்து உருக்கமாகப் பாடும் ஒப்பாரி :—

மன்ன பலகாரம் பண்ணி வெகுநாளாச்சே
மல்லியும் காப்பியும் போட்டு வெகுநாளாச்சே
தொக்குத் துவையல் அறைச்சு வெகுநாளாச்சே
வெல்லப் பணியாரம் பண்ணி வெகுநாளாச்சே
செண்பகப்பூத்தோசை சுட்டு வெகுநாளாச்சே
தேயிலையும் காப்பியும் கலந்து வெகுநாளாச்சே

காலைக்கறி சமைப்போம் கால்எலும்பு சூப்பிவைப்போம்
வேளைக்கறி சமைப்போம் வெண்டிக்காய் சூப்பி
வைப்போம்
சோறு சுடுதுண்ணா துகில் எடுத்து ஆத்திவந்தேன்
பாலு சுடுதுண்ணா பட்டு எடுத்து ஆத்திவந்தேன்

* * *

கணவனின் எல்லையற்ற அன்பை அவள் மறக்க இயலுமா?

''தள்ளி இருன்னு சொல்லாத தங்கராசன் பொயிட்டாரே
போயிருன்னு* சொல்லாத பொன்னரசன் பொயிட்டாரே
ஒதுங்கியிருன்னு சொல்லாத உத்தமரும் பொயிட்டாரே''
என்று நாயகனின் இனிய இயல்புகளை உணர்த்துகிறாள்.

---

* போயிரு - உன் தாய்வீட்டிற்குப் போய்விடு.

பூ அசைத்த – மாலை மாற்றிய; அண்மையில் திருமணமான.

தங்கள் வாழ்க்கையின் நினைவுச் சின்னமாக பிள்ளை கூட இல்லையே என்பதை நினைக்கும்போது அவள் சோகம் தாங்க இயலாமல் துடிக்கிறாள் :—

''பூமியிற் புரண்டழுதேன்
புழுவாய்த் துடித்தழுதேன்
பிள்ளையில்லா வாழ்வு
பேய்வாழ்வு என்று சொன்னேன்
பின்னிப் பின்னிச் சொல்லியுந்தான்
பிடிக்க வந்தான் கேட்கலையே''

விதவையாகி விட்டதால் இனி அனுபவிக்க வேண்டிய துன்பங்களை நினைத்துப் புலம்புகிறாள்:—

''வீதி வழிவந்தால் விலகிவர வேண்டுமென்பார்
வீதி வந்தால் வெட்கமலோ வீட்டிலிருந்தால் துக்கமலோ
வாசல் வழிவந்தால் மறைந்துவர வேண்டுமென்பார்
வாசல் வந்தால் வெட்கமலோ மறைந்திருந்தால்
துக்கமலோ'

ஆடை அணிகளை இழக்கநேரிட்டது குறித்து வருந்து கிறாள்:

''ஒருகோடி தங்கநகை
உருவிவைக்கச் சொன்னீரே
கால்கோடி தங்கநகை
கழற்றி வைக்கச் சொன்னீரே''

''தங்க முளையடித்துத்
தானாநூல் பாவோடித்
தறிகாரன் நெய்த தெல்லாம்
தையல் நல்லாள் பூவாடை''

எல்லாவற்றையும் பறித்து விட்டார்கள். வண்ண வண்ண மாகச் சேலையணிந்து மணவாளனை மகிழ்வித்தவளுக்குக் காணச்சகியாத வெள்ளைச் சேலையைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டார்கள். அதை அவள் பார்த்த மாத்திரத்தில் ஆத்திரம், எல்லை மீறிவிடுகிறது. அந்த ஆவேசத்தில் பீறிட்டு வரும் கவிதை இது.

"கந்தையிது கந்தையிது
கால்பணத்துக் கந்தையிது
ஆக்குகிற பெண்களுக்கு
அடைபிடி கந்தையிது
பொங்குகிற பெண்களுக்குப்
பிடித்திறக்குங் கந்தையிது
காசிப் பரதேசி
கைதுடைக்குங் கந்தையிது
மடத்துப் பரதேசி
வாய்துடைக்குங் கந்தையிது"

கணவன் உயிரோடு இருக்கும்போது சுமங்கலியாக இறக்கும் பெண்களைப் பூவோடு, மஞ்சளோடு இறக்கக் கொடுத்துவைத்த வாவரசி என்று செட்டி நாட்டுப் பெண்கள் கூறுவர். இது 'வாழ்வரசி' என்னும் சொல்லின் மரூஉ. வாவரசியாக இருந்த ஒரு பெண்ணை நினைத்துக் கூறிய ஒப்பாரி:

"வாவரசி வாவரசி
மதிப்பான வாவரசி
ஏழு தலைமுறைக்கு
எண்ணமுள்ள வாவரசி
பத்துத் தலைமுறைக்கு
பதுமையுள்ள வாவரசி
தூர வருவார்க்கு
துலக்கமுள்ள வாவரசி
துலைக்கூட்டு *வைப்பார்க்கு
துலக்கமுள்ள வாவரசி
காதம் வருவார்க்கும்
கணிசமுள்ள வாவரசி
கடைக்கூட்டு வைப்பார்க்கும்
கணிசமுள்ள வாவரசி"

❋ ❋ ❋

"பொட்டோடே மையோடே
பிறந்த கெடியோடே
போடுசரப் பட்டோடே,
பூந்தோப்பு மாலைவந்து

---

* அவள் பெயரால் வெளிநாடுகளில் தொழில் செய்தால் அந்தத் தொழில் விருத்தியடையும்; அத்தகைய கைராசி உள்ளவள்.

பொய்கையிலே நீர்மோந்து
பூமியிலே நீராடி,
பொட்டியிலே பொன்களற்றி
பொறுமை உள்ளார் கைகொடுத்துப்
பூவோடே நீ கலக்க
புண்ணியங்கள் செய்த ஆத்தா

* * *

"மையோடே பொட்டோடே
வளர்ந்த கெடியோடே
வங்காளம் பட்டோடே,
மாந்தோப்பு மாலை வந்து
வையையிலே நீர் மோந்து
வாசலிலே நீராடி,
மரவையிலே பொன் களட்டி
மதிச்சாண்டார் கை கொடுத்து
மலரோடே தீ கலக்க
மாதவங்கள் செய்தாத்தா"

குழந்தைகளைக் கதறவிட்டு அவள் இறந்ததைப் பற்றி இவ்வரிகள் குறிப்பிடுகின்றன:

"பிள்ளை பறக்கப் பேரழகி ஆனாத்தா
மைந்தன் பறக்க வாவரசி ஆனாத்தா
பாலுக்கு மைந்தன் பறக்க வைச்சு போன ஆத்தா
தொட்டியிலே மைந்தனை துடிக்கவைச்சு போனாத்தா

பூவோடு, பட்டோடு அவள் தன் மகன் கையில் கொள்ளி வாங்கிச் சென்றதையும் அவள் பிரேதம் தீ உண்டதையும் இந்த வரிகள் குறிப்பிடுகின்றன:

"அந்தி மல்லிப் பூவோடே
ஆரணங்கும் பட்டோடே
அருமை முத்துக் கையாலே
அனல் வாங்கிப் போனாத்தா"

"மல்லிகைப் பூவோடே
மடிப் பொசந்த பட்டோடே
வரிசை முத்துக் கையாலே
மலர் வாங்கிப் போனாத்தா"

''காடு மணமணக்க
கண்டாங்கி தீ பறக்க
கட்டை எல்லாம் பால்வடிய
கட்டித் தீ கொண்டாத்தா''

''செடிகள் மணமணக்கச்
சித்தாடை தீப்பறக்கச்
செடி எல்லாம் பால்வடிய
செல்லத் தீ கொண்டாத்தா''

அவள் இளமையில் இறக்க நேர்ந்ததை நினைந்து வருந்திக் கூறியவை:—

''தாயார் வகுத்தில் சனித்தநாள் செல்லாச்சா
தவமுனிவர் தன்னிடத்தில்
தவம் வாங்கி வந்த
தவணை சரியாச்சா''

''மாதா வகுத்தில் வளர்ந்தநாள் செல்லாச்சா
மாமுனிவர் தன்னிடத்தில்
வரம் வாங்கி வந்த
வாரம் கணக்காச்சா''

''பெத்தார் வகுத்தில் பிறந்தநாள் செல்லாச்சா
புகழ் வேந்தர் தன்னிடத்தில்
பேறு பெற்றுவந்த
பொழுதும் கணக்காச்சா''

''சுருக்காய் இருந்ததே
சுந்தரத் தேர் ஏறினதும்
செகப்பு ரதம் ஓடினதும்
சோழபுர நன்னாடு
தோகைமயில் ஆடினது''

''கடிசாய் இருந்துதே
கற்பகத் தேர் ஏறினதும்
கடைசல் ரதம் ஓடினதும்
காஞ்சிபுர நன்னாடு
கானமயில் ஆடினது''

"விரைசாய் இருந்துதே
வெங்கலத் தேர் ஏறினதும்
வெள்ளிரதம் ஓடினதும்
வீமபுர நன்னாடு
வெற்றிமயில் ஆடினது"

தன்னோடு உடன் பிறந்தவர் இறந்தபோது கூறிய ஒப்பாரி:

"சட்டிப் பொறப்பே
கைநழுவ விட்டவுக
வாய்ச்ச பொறப்பே
வகைதப்ப விட்டவுக
செல்லப் பொறப்பே
திசைதப்ப விட்டவுக
ஊருப் பிறப்பிலேயும்
ஒசத்தி உள்ள நற்பிறப்பு
நாட்டுப் பிறப்பிலேயும்
நயமான நற்பிறப்பு
தேனிலையும் பாலிலையும்
தித்தித்த நற்பிறப்பு
தேனுறைந்த பாலினைபோல்
தித்தித்த நற்பிறப்பு
பாலிலையும் தேனிலையும்
பச்சமுள்ள நற்பிறப்பு
பாலுறைந்த பரவினைபோல்
பச்சமுள்ள நற்பிறப்பு
கூடிப் பிறக்க கோடி நாள் செல்லுமே
அடுத்துப் பிறக்க அனேக நாள் செல்லுமே"

"எக்காட்டுக்குள்ளே இருக்கின்றீர் இன்னுஅறியோம்
எவ்வனத்திற்குள்ளே இருக்கின்றீர் இன்னறியோம்
காயா கறியா திங்கிறீர் இன்னறியோம்
காவேரித் தண்ணீரா குடிக்கிறீர் இன்னறியோம்
தேரா திருநாளா நாங்கள் தேடிப் பிடிப்பமின்னா
மாயலோகப் பூநாடு நாங்க தேடவர ஏலாதே
கடையா கடைத் தெருவா கண்டு பிடிப்பமின்னா
கயிலாசப் பூ நாடு காணவர ஏலாதே
பழநியா தேரோட்டம் பார்க்க வருவமின்னா
பரமலோகத் தேரோட்டம் பார்க்கவர ஏலாதே"

தனது அருமை மகனைப் பறி கொடுத்த தாய் கதறி அழுவதை இந்த வரிகளில் காண்க:...

"ஈச்சன் குருத்துலே எடுக்க நல்ல தங்கமில
வாழைக்குருத்துலே வளர்க்க நல்ல தங்கமில
கையில் ஜெபமாலை, கழுத்துப் பூமாலை
மடியில் செபமாலை வச்சாடும் பூமாலை
கால் அழகும் கை அழகும்
கட்டை விரல் லெட்சணமும்
தோள் அழகும் கால் அழகும்
சுண்டுவிரல் லெட்சணமும்
நீலமுழிக் கண்கள் ரெண்டும்
நிலக்கறையான் திங்க விட்டம்
மைல முழிக் கண்கள் ரெண்டும்
மன் கறையான் திங்க விட்டம்
கோல முழிக் கண்கள் ரெண்டும்
குளிக்கறையான் திங்க விட்டம்"

"அன்னக்கிளியே ஆடும் பசுங்கிளியே
ஆலிலைத் தொங்கலிலே ஆடும் பசுங்கிளியே
அன்னக்கிளி வளர்த்து ஆடையிலே தப்பவிட்டம்
கொஞ்சும் கிளி வளர்த்துக் கூவையிலே தப்பவிட்டம்

பச்சைக் கிளியே பறக்கும் பசுங்கிளியே
பச்சைக்கிளை தொங்கலிலே பறக்கும் பசுங்கிளியே
பொன்னக் கிளிவளர்த்துப்
போகவிட்டு ஏங்கி நின்றோம்
பச்சைக் கிளிவளர்த்து பறக்கையிலே தப்பவிட்டம்"

"கொஞ்சுகிளி ரஞ்சிதமே
கூடியுள்ள தாராவே
அன்னக்கிளி ரஞ்சிதமே
அருகிருக்கும் தாராவே"

"சுத்தித் திரை வளைச்சம்
சூரியனைக் காவல் வைச்சம்
பக்கம் திரைவளைச்சம்
பகவானைக் காவல் வைச்சம்

எங்கும் திரை வளைச்சம்
இந்திரனைக் காவல் வைச்சம்
நடுவே திரைவளைச்சு
நானும் ஒரு காவல் இன்னேன்''

இத்தனை பேர் காவலிலே
எமன் வந்தான் காணலியே
தொண்ணூறு பேர் காவலிலே
தூதன் வந்தான் காணலியே
பன்னிரு பேர் காவலிலே
பண்ணி வந்தது ஊசாடி
கொல்ல வந்த பன்றியை
குத்தவசம் அற்றோமே
திங்க வந்த பன்றியை
தெரிக்கவசம் அற்றோமே''

''அழைக்க வந்த எமனுக்கு
அனேக திரவியமும்
ஆனைவிடாய் தாரமின்னம்
அனேக திரவியமும்
ஆனை விடாய் தேவை இல்லை
இந்த அழகான மைந்தனை
அழைத்தால் விடுவமின்னான்''

''கொல்ல வந்த எமனுக்கு
கோடி திரவியமும்
குருதை விடாய் தாரமின்னல்
கோடி திரவியமும்
குருதைவிடாய் தேவைஇல்லை
கோப்பான மஞ்ஞுனை
கொன்னே விடுவ மின்னான்''

''பிடிக்க வந்த எமனுக்கு
புள்ளையைப் போல்புள்ளை
பொம்மை பண்ணித் தாரமின்னம்
பொம்மையின் மேல் சிந்தை இல்லை
புடிச்சால் விடுவ மின்னான்''

"வாங்கவந்த எமனுக்கு
மைந்தனைப் போல் மைந்தன்
மதலை பண்ணித் தாரமின்னம்
மதலையுமே தேவை இல்லை
மைந்தன் வந்தால் விடுவ மின்னான்"

"கூட்டிப் போய் விட்டவன்
குதிரை மெடல் பெற்றானா?
அழைத்துப் போய் விட்டவன்
ஆனை மெடல் பெற்றானா?

நூறு வயது வாழ்ந்து மக்கட் செல்வமும் பொருட் செல்வமும்பெற்று உலக இன்பமெல்லாம் அனுபவித்து மறைந்த ஒரு மூதாட்டியைப் பற்றிக் கூறியவை:—

"மண்சலிக்க பொன் சலிக்க
மற்றற்ற நாள் வாழ்ந்து
மகிழ மக்கள் கண்டாத்தா
மாத்தி மஞ்சன் பெத்தாத்தா
வாழ்வோங்கி வாழ்ந்தாத்தா"

"மக்கள் பகிசி ரெம்ப
வாள் விசயன் காட்சி மெத்த
பொன்கள் பகிசி மெத்த
போர் விசயன் காட்சி மெத்த"

"பேரன் உண்டு பேத்தி உண்டு
பேரனுக்கும் தேவி உண்டு
பேத்தி மணவாளர் உண்டு
பேத்திக்குப் பேத்தி
பெற்றிருக்கக் கண்டாத்தா

முப்பதமும் உண்டு
முடிக்க அரசு முண் டு
எப்பதமும் உண்டு
இராஜ பகிசி உண்டு"

வயதானவர்கள் இறக்கும்போது அவர்களுடைய குடும்ப வரலாற்றை ஒப்பாரியில் தெரிவிப்பது மரபு. இவ்வகை ஒப்பாரி ஒன்றையும் தருவோம். (ஐயா என்பது பாட்டனைக் குறிக்கும்)

"அப்பன் முதலுமில்லே அய்யாக்கள் சொத்துமில்லை
முந்தி முதலுமில்லை முப்பாட்டன் சொத்துமில்லை
என்னைப்பெற்ற ஐயா தன்புத்தியாலே தகுந்த குடியானார்
புத்தி யுத்தியாலே ஒசந்த குடியானார்"

தன்னை விட்டுப்பிரிந்த கணவனது பொருளீட்டும் திறமையை எண்ணி யெண்ணி மனைவி ஏங்குகிறாள்:

எட்டுக்கடைப் பார்ப்பார்
எதிர்த்தகடை மேல்பார்ப்பார்
எட்டுலக்ஷங் கொண்டுவரும்
இந்திரரை தப்பவிட்டேன்

"பத்துக் கடை பார்ப்பார்
பழையகடை மேல் பார்ப்பார்
பத்துலக்ஷங் கொண்டுவரும்
பாண்டியரைத் தப்பவிட்டேன்"

நகரத்தார் வாழ்வு கடல்கடந்த நாடுகளுடன் பிணைந்தது; சாவும் அப்படித்தான். கணவன் பர்மாவில் காலமான போது, செட்டிநாட்டிலுள்ள மனைவி பாடிய ஒப்பாரி இது;

பிள்ளை வலுவுமில்லே பிறிதோர் துணையுமில்லே
மஞ்சள் வலுவுமில்லே மறுத்தொருத்தர் துணையுமில்லே
மஞ்சள் அழைக்கவில்லை மாலையிட்டுப் பார்க்கவில்லை
மிகுந்தபணம் தேடவில்லை மண்ணு வந்து சேரவில்லை
கப்பலிலே பாய்விரிச்சுக் கட்டம்மிக வந்திடுச்சே
தோணியிலே பாய்விரிச்சுத் துன்பம்மிக வந்திடுச்சே
பின்பொருத்தர் துணையுமில்லே என்னைப் பெத்த ஐயா,
மறுத்தொருத்தர் துணையுமில்லே என்னைமாலையிட்ட ஐயா

திருமணமான ஒரிரு நாளிலிலேயே கணவன் இறந்த போது பாடிய ஒப்பாரி:-

அச்சில்லா குச்சி அரக்கில்லா பெண்சுவடீ
பாப்பார முதலியாரே பஞ்சாங்க வேதியரே
வேதாந்த வேதியரே மெத்தப் பெரியவரே
பூசத்துரையே பொய் சொல்லா வாசகமே
நீங்கள் பள்ளிக்கூடமிருந்து படித்துவரும் நாளையிலே

நான் ஒரு பணத்துச் சித்தாடை உடுத்தி விளையாடையிலே
நீங்கள், உருண்டைமணிகட்டி ஓடிவிளையாடையிலே
நான், தண்டைச் சிலம்பமிட்டு தவழ்ந்து விளையாடையிலே
நீங்கள் கணக்குகளைகி கருதிக் காரியமாய்ப் பார்க்கையிலே
நான் தங்களுக்கு மாமன் மகளென்று மருவில்லாப் பெண் வளர்ந்தேன்
அம்மான் மகளென்று அருமையாய்ப் பெண்வளர்ந்தேன்
எங்களுட தாய் தகப்பன் தங்களுக்கு மாலைசூட வேணுமென்று
மாதுநல்லாள் என்னை மாலை சூடிப் பார்ப்பதற்கு
அஞ்சாறு ஊரிலுள்ள பஞ்சாங்கக் காரரிடம்
நல்லநாள் எப்பவென்று தங்களய்யா நடுவிருந்து பார்த்தார்கள்.
அச்சுத வருசம் அர்ப்பசிமாதம் 5 ஆம்தேதியிலே ஆயில்ய நட்சத்திரத்தில்
கொஞ்சமும் தவறாமல் கொம்பனையால் என்னைக்
குணமுள்ள மாதென்று மாலைசூடிப் பார்ப்பதற்கு
கல்யாண முகூர்த்தமென்று கடலேறிப் பாக்குவைத்து
சிமந்தமென்று சீமையெங்கும் பாக்குவைத்து
வாழை பிளந்து வளவெல்லாம் பந்தலிட்டு
தென்னை பிளந்து தெருவெல்லாம் பந்தலிட்டு
ஈர்க்கி பிளந்து இருகாதம் பந்தலிட்டு
மூங்கில் பிளந்து முக்காதம் பந்தலிட்டு
வாரார்கள் வாரார்கள் என் தகப்பனிட்ட பந்தலிலே
புதுக்கோட்டை நாககசுரம் என் அண்ணன்மார் புதிதாய் வருத்தினார்கள்
அரண்மனைக் குதிரையை என் அண்ணன்மார் அன்பாய் வருத்தினார்கள்
நீங்கள் நன்னீர் ஆடையிலே களைப்பாய் இருந்தீராம்
உங்களைக் குதிரையிலே வைத்துக் கூட்டிவரும் வேளையிலே
நீங்கள் சௌக்கியமில்லையென்று என் அண்ணனிடத்திலேயும் சொல்லாமல்
மனையிலே இருக்கையிலே மயக்கமாய் வருகுதென்று
உங்களய்யா இடத்தில் வருத்தமாய்ச் சொன்னீராம்
சாஸ்திர விதிப்படிக்குச் சடங்குகளும் தான் நடத்தி
அரசாணி சுத்தி அழகாய் வருகையிலே
குலம்வாழும் பிள்ளையைக் கோரி எடுத்து நல்ல கோதையின் கையில் குணமாகத் தந்தீரே

இத்தனையும் பெற்று இதுவாய் இருக்கையிலே
கட்டின காப்புக்களத்துவதற்குள்ளாக
காப்புக் களத்தி கால்மோதிரம் இடுவதற்குள்
சிராட்டு அன்றைக்குச் சிக்கென்று சொல்லி சிவலோகம்
சேர்ந்திரே

நாளோ சரியாச்சோ நடப்பதற்கு நாளாச்சோ
பொழுது சரியாச்சோ போவதற்கு நாளாச்சோ
விதிவந்தா லென்ன கொஞ்சம் விலகிவந்தாலாகாதோ
சாவு வந்தாலென்ன கொஞ்சம் தள்ளிவந்தாலாகாதோ

வாசல் வெளியாச்சே உங்களுக்கு வைகுண்டம் தோப்பாச்சே
திண்ணை வெளியாச்சே உங்களுக்குச் சிவலோகம்
தோப்பாச்சே
உங்களைப் பார்க்க வருவமென்றால் நீங்களிருக்கும்
பள்ளியறை தூரமிலோ
உங்களைக் காண வருவமென்றால் நீங்களிருக்கும் கயிலாயம்
தூரமிலோ

தாலி கொண்டு வந்த தட்டானும் போகலியே
மாலை கொண்டு வந்த வயிராவி போகலியோ
சேலை கொண்டு வந்த சேணியனும் போகலியே
பந்தல் பிரிக்கலியே வந்தசனம் போகலியே

கலியாணப் பானைகளும் கழுவிக் கவுக்கலியே
கட்டின தாலிகளும் களும்பு பிடிக்கலியே
பணியாரம் சுட்ட சட்டி பாதிமணம் போகலியே
அரசாணிக் கெதிக்கே அருகிருந்த தென்றும் இல்லை

முளைப்பாரிக் கெதிக்கே முன்னிருந்த தென்றும் இல்லை
சுண்டுவிரல் கைப்பிடித்து சுத்திவந்த தென்றும் இல்லை
கோலமிட்ட திண்ணையிலே குத்தவைத்ததென்றும் இல்லை
வருணத் தடுக்கிலே வந்திருந்த தென்றும் இல்லை

அரைமுளத் திண்ணையிலே அருகிருந்த தென்றும் இல்லை
கால்முளத் திண்ணையிலே கலந்திருந்த தென்றும் இல்லை
தச்சனடித்த, தளம்பெரிய கட்டிலிலே
ஒக்க நெருங்கி ஒருநாளும் இருக்கலியே

நீங்கள், அத்தரு மேல்பூசி அன்னம் உண்ண வந்தக்கால்
அத்தரு வாசம் அன்னமிடக் கூடாதோ
நீங்கள், பன்னீரு மேல்பூசி பழைய துண்ண வந்தாக்கால்
பன்னீரு வாசம் பழையதிடக்கூடாதோ

பூலோகத்தார் போலே, நான்
பிள்ளைகளைப் பெற்று பெருமை அடையலையே
வையகத்தார் போலே நான்
மைந்தர்களைப் பெற்று மகிழ்ச்சியடையலையே
சின்ன வயதிலென்னைச் சீரழித்துப் பார்த்திரே
கன்னி வயதிலென்னைக் கற்பழித்துப் பார்த்திரே
என்னைக் கெடுக்கவென்று எதவாய் வளர்ந்திரே
என் வாழ்வைக் குறைக்கவென்று வளர்ந்து மிருந்திரோ
என் அப்பச்சி இலுப்பக்குடி மாப்பிள்ளையை இணக்கமில்லை
என்றார்கள்
மாத்தூர்க் கோவில் மாப்பிள்ளையை மணமில்லை
என்றார்கள்
வேலங்குடிக் கோவில் மாப்பிள்ளையை விவஸ்தை இல்லை
என்றார்கள்
சூரக்குடி கோவில் மாப்பிள்ளையை நம்பள் சொந்தமில்லை
என்றார்கள்
நேமங்கோவில் மாப்பிள்ளையை நமக்கு நேர்மையில்லை
யென்றார்கள்
பிள்ளையார்ப் பட்டிக்கோவில் மாப்பிள்ளையை பெலமில்லை
யென்றார்கள்
வயிரவன் கோவில் மாப்பிள்ளையை வாயில்லை யென்றார்கள்
இரணியூர்க் கோவில் மாப்பிள்ளையை நமக்கு இணை யில்லை
யென்றார்கள்
இளையாத்தக்குடி மாப்பிள்ளைக்கு இணக்கமென்று சொல்லி
என்னை ஏங்கவைத்துப் பார்த்திரே!
தேவகோட்டை மாப்பிள்ளையைத் திறமை இல்லை என்றீரே
தாணிச்சாவூரணி மாப்பிள்ளையை தரமில்லை என்றீரே
ஆறாவயல் மாப்பிள்ளையை ஆதரவு இல்லை என்றீரே
அமராபதிபுதூர் மாப்பிள்ளையை அழகில்லை என்றீரே
அரியக்குடி மாப்பிள்ளையை அறிவில்லை என்றீரே
காரைக்குடி மாப்பிள்ளையைக் கருத்தில்லை என்றீரே
கோட்டையூர் மாப்பிள்ளையை குணமில்லை என்றீரே
அழகாபுரி மாப்பிள்ளையை ஆகாதென்று சொன்னீரே
கண்டனூர் மாப்பிள்ளையை கடுசென்று சொன்னீரே
புதுவயல் மாப்பிள்ளையை பொருத்தமிலை என்றீரே
கோனாபட்டு மாப்பிள்ளையைக் கூர்மையில்லை என்றீரே
ஆத்தங்குடி மாப்பிள்ளையை ஆத்தியில்லை என்றீரே

பலவாங்குடி மாப்பிள்ளையைப் பணமில்லை என்றீரே
இலக்குமிபுரம் மாப்பிள்ளையை இலட்சணமிலை என்றீரே
கடியாபட்டி மாப்பிள்ளையைக் காசில்லை என்றீரே
ராயவரம் மாப்பிள்ளையை ராங்கியில்லை என்றீரே

பாகனி மாப்பிள்ளைக்குப் பணமிருக்கு தென்றுசொல்லி
பரிசம்வைத்துப் பார்த்தீரே அது இப்போ பாழாய்
முடிந்துச்சே.

நான் கடலில் பிறந்து கப்பலிலே வந்தேனே
நான் மலையில் பிறந்து வாரியிலே வந்தேனே
தள்ளியிரு என்னாத தருமருக்கு பாரியானேன்
அடசியிரு என்னாத அருச்சுனருக்குப் பாரியானேன்

நகர்ந்திரு என்னாத நகுலருக்குப் பாரியானேன்
சின்ன மென்று மில்லாமல் சீட்டாடி வாரதுவும்
பருவம் தெரியாமல் பந்தடித்து வாரதுவும்
பொங்கி யிடுவமென்றால் பெருமாளும் சின்னமிலோ

ஆக்கி யிடுவமென்றால் அருச்சுனரும் சின்னமிலோ
பேசி யிருப்பமென்றால் பெருமாளும் சின்னமிலோ
கலந்து இருப்பமென்றால் கருணரும் சின்னமிலோ
கூடி யிருப்பமென்றால் கொற்றவரும் சின்னமிலோ

பணமோ பெரிசென்றால் பாண்டியரும் சின்னமிலோ
வீடோ பெரிசென்றால் வீமரும் சின்னமிலோ
காசோ பெரிசென்றால் கருணரும் சின்னமிலோ
கூறே பெரிசென்றாள் கொற்றவரும் சின்னமிலோ

பந்தடித்த மாப்பிள்ளைக்குப் பரிசம்வைத்துப் பார்த்தீரோ
காயாடி மாப்பிள்ளைக்குக் கைப்பிடித்துப் பார்த்தீரோ
சீட்டாடி மாப்பிள்ளைக்குத் திருப்பூட்டிப் பார்த்தீரோ
பூலோகத்தார் போலே நீங்கள் திருப்பூட்டிப் பார்க்கலையே
வையகத்தார் போலே நீங்கள் எனக்கு மாலையிட்டுப்
பார்க்கலையே

* * *

தங்கக் குயவரவர் மண்பிடித்துப் போடையிலே
தவலோக இந்நாட்டில் தவந்தமுடி திரையிலே
மாயக் குயவரவர் மண்பிடித்துப் போடையிலே
வையோக இந்நாட்டில் வந்துமுடி திரையிலே

கடுசாள் இருந்துதே கன்னி கைலாசம்
கருணா குமாரரெல்லாம் கடைசல்ரதம் ஒட்டினதும்
காசிநதி கண்டதுவும் கானமயி லாடினதும்

விரைசாள் இருந்துதே மெல்வி கைலாசம்
வீரா குமாரரெல்லாம் வெள்ளிரதம் ஓட்டினதும்
.வெற்றி மயிலாடினதும் வில்வமயில் கண்டதுவும்

சுருக்கால் இருந்துதே தோகை கைலாசம்
சோழா குமாரரெல்லாம் சிவப்புரதம் ஓட்டினதும்
சோதிநதி கண்டதுவும் தோகை மயிலாடினதும்

பச்சை மலையோரம் பவழமலைச் சாரலிலே
பரமனிருக்குமிடம் பாங்கி வள்ளி தூங்கும்வனம்
பச்சரளி பூக்கும்வனம் பரமலோகம் கண்டமுன்னா,

வெள்ளி மலையோரம் வீரமலைச் சாரலிலே
வேடரிருக்கும்வனம் மெல்லி வள்ளி தூங்கும்வனம்
வெள்ளரளி பூக்கும் வனம் வீமலோகம் கண்டமுன்னா

கழுகு மலையோரம் கந்தமலைச் சாரலிலே
கருணரிருக்குமிடம் கன்ன வள்ளி தூங்கும்வனம்
காந்திமலர் பூக்கும்வனம் கைலாசம் கண்டமுன்னா

சுருளி மலையோரம் சூழ்ச்சிமலைச் சாரலிலே
சுப்பையர் இருக்குமிடம் தோகைவள்ளி தூங்கும்வனம்
சிகப்பரளி பூக்கும்வனம் சிவலோகம் கண்டமுன்னா.

திருப்பாற் கடலில்சீதை பிறக்கையிலே,
திருவண்ணா மலையில்செல்வர் வளரையிலே
இருவருக்கும் மாலையின்னு மதுரைமீனாள்
எடுத்துத் தறிக் கையிலே

சாமிக்கும் அம்மனுக்கும் தடங்கலில்லா வாழ்வுதான்
அம்மனுக்கும் சாமிக்கும் அட்டியில்லா வாழ்வுதான்
சீரங்கம்காவேரி சேர்த்துக் குமிழ் பாய்ஞ்சாப்போல்
சீதையும் இராமரும் சேர்ந்து முத்தம் கொண்டவுக

கொள்ளிடங் காவேரி கூட்டுக் குமிழ் பாய்ஞ்சாப் போல்
கோதையும் இராமரும் கூட்டி முத்தம் கொண்டவுக
பரமேசுவரர் தன்னுடனே பார்வதியாள் நெய் விளக்கு
பழனிச் சரவிளக்கு பார்க்கக் கிடைச்சாலும்

பார்வையுள்ளாள் சீர்பாதம், பார்க்கக் கிடைக்காதே
கருணர்வார் தன்னுடனே காரிழையாள் நெய் விளக்கு
காசிச்சரவிளக்கு காணக் கிடைச்சாலும் காட்சி
யுள்ளாள் சீர்பாதம் காணக் கிடைக்காதே

பச்சை சிறுகிளிகள் பழங்கொய்யப் போனாப் போல்
பறக்கும் சிறு கிளிகள் பழம் நாடிப் போனாப் போல்
பகைச்சோடிப் பள்ளிகொண்ட பாவினையும் ஓவியந்தான்
சின்னஞ் சிறுகிளிகள் திணைக்கொய்யப் போனாப்போல்

சிறிய கிளிகள் தினைநாடிப் போனாப்போல்
திகைச்சோடிப் பள்ளிகொண்ட சித்திரமும் ஓவியந்தான்
தங்கத் தழுகைவச்சு தழைஞ்ச புஷ்பம் மேலேவச்சு
தருவிச்சாக் காண்பதில்லை.

வெள்ளித் தழுகைவச்சு விளைஞ்ச புஷ்பம் மேலேவச்சு
விரும்பினால் காண்பதில்லை
பொன்னுந் தழுகைவச்சு பூத்த புஷ்பம் மேலே வச்சு
புறப்பட்டால் காண்பதில்லை

பிஞ்சமக்களய்யா பிஞ்சுமக்களப்பத்தாவை
பிள்ளையுட வாசலெல்லாம் என்னென்ன அதிசயங்கள்
கண்டு வந்தாய் என்னாக்கால்,
தேங்காய் உருளுதும்பார் சித்திரத்தேர் ஓடுதும்பா

சித்திரத்தேர்க் குள்ளாகச் செம்பொன் விளையாடுதும்பா
செம்பொன் தமிழோசை சிறுச்சிறுன்னும் கேட்டனும்பா
மாங்காய் உருளுதும்பாள் மஞ்சந்தேர் ஓடுதும்பா
மஞ்சந்தேர்க்குள்ளாக மக்கள் விளையாடுதும்பா
மக்கள் தமிழோசை மகிழ்ந்திருந்தும் கேட்டனும்பா.

கடல் கடந்த நாடுகளுக்குச் சென்ற செட்டியார்கள் மூன்றாண்டுகளுக்குப் பின்னர், தாயகத்திற்குத் திரும்பி வருவார்கள். இந்த மூன்றாண்டுக் காலத்திலே உறவினர் பலர் உயிர்நீத்திருப்பார்கள். அவர்களுடைய இல்லங்களுக்குச் சென்று துக்கம் விசாரிப்பதே தாய்நாட்டுக்கு வந்தவுடன் முதல் வேலையாக இருக்கும். இவ்வாறு துக்கம் விசாரிப்பவரிடம், கணவன் இறந்த நிகழ்ச்சியையும், பிணத்தைச் சுடுகாட்டுக்குத் தூக்கிச் சென்ற போது ஊர் மக்கள் அவருக்கு மரியாதை செலுத்தியதையும்ஓர் ஆச்சி வர்ணிப்பதைக் கேளுங்கள்:

''வீதிவழி வந்தாக்கால் வெள்ளி ரதம் போலிருக்கும்
வெள்ளி ரதத்திலொரு வேல் வந்தாப் போலிருக்கும்
சாலைவழி வந்தாக்கால் தங்க ரதம் போலிருக்கும்
தங்க ரதத்திலொரு சாமி வந்தாப் போலிருக்கும்''

ஒரு வீட்டில் ஒருவர் இறந்து விட்டால், அக் குடும்பத்தார் அதன் பிறகு சில ஆண்டுகள் வரையும் வெளிநாடுகளிலிருந்து வரும் தங்கள் உறவினர்கள் துக்கம் விசாரிக்க வருவார்களே என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பர். நெருங்கிய உறவினர், தம் வீடு வந்துசேர்ந்த இரண்டொரு நாட்களிலேயே ''இழவு கேட்க'' ச் செல்வது மரபு. நாள் கடந்து துக்கம் விசாரிக்க வந்ததைக் கண்டிக்கும் முறையில், ஒரு ஆச்சி தன் ஒப்பாரியின் இடையே செருகிய வரிகள் அவலச் சுவைக்கு எடுத்துக் காட்டாக உள.

செத்த இழவு கேட்கவர தேதி ரெம்ப ஆச்சு நீங்க
மாண்டஇழவு கேட்க வர மாசம் ரெம்ப ஆச்சு''

* * *

இரண்டாம் உலகப் போரில் ஜப்பானியருடைய குண்டு வீச்சுக்கு இலக்காகி ஒரு செட்டியார் இறந்துவிட்டார். அதைப் பற்றி அவரது உறவினர் புலம்புகின்றனர்:

''அம்பு விட்டான் குண்டுவிட்டான்
ஆன சனம் கொன்றுவிட்டான்
குண்டுவிட்டான் அம்புவிட்டான்
கோடி சனம் கொன்றுவிட்டான்''

இவையெல்லாம் காதலனை இழந்த காதலியின் உள்ளத்தில் பாயும் துயரவெள்ளம். ஆனால் அந்த உள்ளத்தில் மட்டுந்

தானா உணர்ச்சி பொங்கும்? பெண்ணைப் பறிகொடுத்த தாயின் உணர்ச்சி எந்த விதத்திலும் குறைந்ததல்ல. சம்பிரதாயமாய் வாழ்ந்து கொண்டிருந்த மகள், தன் கணவனையும் மக்களையும் கலங்கவிட்டுப்போய்விட்டாள். அந்தப் பிள்ளைகள் படும்பாட்டைத் தானிருந்து பார்க்க வேண்டுமா என்று துடிக்கிறாள் பாட்டி. இந்த உணர்ச்சியிலே உருகிய உள்ளம் கவிதையாக வெளிப்படுகிறது. "அடி பாவி இப்படியும் செய்யலாமா?" என்று மாண்ட மகளையே ஏசுகிறாள்.

"தோளணையும் பிள்ளைகளைச்
சுவரணையச் சொன்னையடி
மார்பணையும் பிள்ளைகளை
மரமணையச் சொன்னையடி"

அந்தக் குழந்தைகளின் தந்தைதான் எப்படிப் பரிதவிக்கிறான் என்பதையும் கூறுகிறாள்:

"தேவி முகங் காணாமல்
உன் அருமை மக்கள் அப்பச்சி
திகைக்கிறார் காணலேடி
மாது முகங் காணாமல்
உன் மதலை மக்கள் அப்பச்சி
மலைக்கிறார் காணலேடி"

மகள் நோய்வாய்ப் பட்டிருப்பதை அறிந்து, தாய் மலேயாவிலிருந்து விமானத்தில் பறந்து வந்து சேருகிறாள்; மறுநாளே மகள் உயிர் நீத்து விடுகிறாள். அப்போது தாய் அடைகின்ற வருத்தம் அளவு கடந்தது.

"உன்னை அள்ளிக் கொடுத்திடவா
ஆலாப் பறந்துவந்தோம்
உன்னை வாறிக் கொடுத்திடவா
வண்டாய்ப் பறந்துவந்தோம்"

என்று அலறுகிறாள். "பெற்றமனம் பித்து" அல்லவா?

குழந்தை பிறந்த ஒருசில ஆண்டுகளுக்குள் "புதுமை" என்னும் பெயருடன் பிறந்தநாள் விழா ஒன்றை நடத்துவது செட்டிநாட்டு வழக்கம். அப்போது குழந்தையின் தாய்வழி தந்தைவழி நெருங்கிய உறவினர் குழந்தையின் மார்பில் பாது காப்புக்காக ஒருவகைப் பாசியை மாராப்பாகக் கட்டுவது

மரபு. இவ்வாறு குழந்தைக்குச் சிறப்புச் செய்யும் பேற்றைத் தன்மகள் பெறவில்லையே என்ற வருத்தத்தை ஒரு ஆச்சி பாடுகிறாள்:

"பூவசைத்த ஓவியம்போல் பெண்ணு திருவயிற்றில்
பிள்ளை நிழலாடலையே, பிதிருவழிகூட்டிப்* பூடு
குடிக்கலையே
பிள்ளை முதலாகலையே, பெருமாளுந்தேவியுமாப்
புதுமைதனைச் செய்யலையே, பேராசை தீரலையே,
மாலையிட்ட ஓவியம்போல் மாதுதிருவயிற்றில்
மஞ்சன் நிழலாடலையே மாசேனை கூட்டி
மருந்து குடிக்கலையே
மஞ்சன் முதலாகலையே மன்னரும் தேவியுமாய்
மாராப்புக் கட்டலையே மனசாசை தீரலையே"

பெண்களுடைய வாழ்வில் ஒரு பகுதி மாமியார்-மருமகள் போராட்டத்திலே கழியும் தமிழ்நாட்டு வழக்கம் செட்டிநாட்டிலும் உண்டு. எனவே, தங்களுடைய வாழ்க்கையை ஒப்பாரியில் படம் பிடித்துக் காட்டும்போது, மாமியார் தம்மை நடத்திய முறையைப் பற்றி மருமகள் பாட வேண்டாமா?

சேர்ந்திருக்கத் தாலி கட்டல்ஜகத்திலே உள்ளமுறை
வாழ்ந்திருக்கத் தாலிகட்டல் வையகத்தில் உள்ளமுறை
புத்திலே பாம்பிருக்கும் பூதலத்தில் உள்ளமுறை
மனையிலே பாம்பிருந்து எங்களை வாழவிட ஒட்டலையே
வீடென்று கால்வைத்தால் வெடுக்கென்று பிடுங்கிவிடும்
மனையென்று கால்வைத்தால் மடக்கென்று கடித்துவிடும்"

என்று தன் கணவருடன் தான் வாழ்க்கை இன்பம் நுகர்வதற்குத் தடையாக இருந்த மாமியாரைச் சிறப்பிக்கிறாள் ஓர் இளம் பெண்.

குழந்தை இறந்தபின் தாய்படும் துயரம் பின்வரும் ஒப்பாரிகளால் தெரியும்:-

---

*முதற் குழந்தை வயிற்றில் இருக்கும்போது 5-ஆவது அல்லது 7-ஆவது மாதத்தில் - கர்ப்பிணிப்பெண் மருந்து குடித்தல் என்ற ஒரு நிகழ்ச்சி உண்டு.

"கட்டி முத்தேரத்தினமே
கை நிறைந்த குஞ்சரமே
வச்ச முத்தே ரத்தினமே
மடிநிறைந்த குஞ்சரமே"

"கோடித்திரவியமே
கொடுத்து வையாப்பாக்கியமே
அணையாத் திரவியமே
அதிட்டமில்லா அட்சரமே
பொன்னே பொருளே
பொருளிருக்கும் பெட்டகமே
நல்ல பொருளே
நகையிருக்கும் நாணயமே"

"வயிர நகை மங்கிவிடும் மாதழகு சோதி மின்னும்
பொடி வயிரம் மங்கி விடும் பொன்னழகு சோதி மின்னும்
மணிவயிரம் மங்கிவிடும் மாதழகு சோதி மின்னும்
சிறு வயிரம் மங்கிவிடும் சிட்டழகு சோதி மின்னும்"

அழகான சிறு பெண் இறந்துவிட்டால் அதைநினைத்துப் பெண்கள் இங்ஙனம் வருந்திப் பாடுவர்;

"அழகை எழுதியவன் ஆயுள் எழுதலையே
வடிவைஎழுதியவன் வயதெழுத மாட்டலையே"
"அழகை எழுதினவன் ஆயுசை எழுதலையா
ஆயுசை எழுத அசத்திட்டு இருந்தானா
வடிவை எழுதினவன் வயதை எழுதமாட்டலையா
வயதை எழுத மறந்திட்டு இருந்தானா"

திருமணமாகுமுன் இறந்த இளைஞனைக் குறித்து தாயார் பாடும் ஒப்பாரி:-

கன்னியரைக் கைப்பிடிச்சா கனபாவம் சுத்துமினு,
மங்கையரை மாலையிட்டா மாபாவம் சுத்தமினு,
தன் பாவம் கொண்டு தனி வழியே போனானே.
மார்பிலே தொட்டிகட்டி மடிமேல் நடைபழகி
வாதா வளந்த மகன் வகை மோசம் செய்து
வனம் பாக்கப் போறமின்னான்.
தோளிலே தொட்டிகட்டி தொடைமேல் நடைபழகி
சோக்காக வளந்த மகன் துயரம் வச்சு கண்ணசந்தான்
எனக் குறைப்படுகிறாள்.

"ஈ கடிக்கச் சம்மதியோம்
எமன் வரச் சம்மதித்தோம்
காற்றடிக்கச் சம்மதியோம்
காலன்வரச் சம்மதித்தோம்"

என்று விதியை நொந்து கொள்கிறாள்.

சிறு குழந்தை இறந்த வீட்டில் உணர்ச்சி வயப்பட்ட உறவினர் பாடும் ஒப்பாரி:-

"பச்சைக்கிளி வளர்த்தோம்
பறக்கையிலே தப்பவிட்டோம்
குஞ்சுக்கிளி வளர்த்தோம்
கூவையிலே தப்பிவிட்டோம்"

"பொட்டுள்ள நெத்தி புழுதி அரிச்சிரிச்சு
மையிட்ட நெத்தியை மண்கரையான் தின்னுரிச்சு
நீலமணி கண்கள் ரெண்டும் நிலக்கரையான் தின்னுரிச்சு

வைரமணி கண்கள் ரெண்டும் மண்கரையான் தின்னுரிச்சு
கட்டாணிக் கையிரண்டும் கரையான் அரிச்சிரிச்சு
சித்தாணிக் கையிரண்டும் செங்கரையான் தின்னுரிச்சு

காட்டுநரிக் கூட்டமிட்டு கள்ளநரி சேகரிக்க
வேட்ட நரிக்கு விருந்தாக்கி வச்சிருந்தேன்
காட்டுநரிக்கி கறியாக்கி வச்சிருந்தேன்."

இவ்வாறு சிறந்த கவிஞர்கள் பெண்பாலரில் மட்டுமே இருக்கின்றனரென்று எண்ணிவிடாதீர்கள். ஆண்களிலும் பர்மா டாப்புச்சிந்து, அநியாயக் கல்யாணம் போன்ற பாடல்களைப் பாடியவர்கள் உண்டு. சில ஆண்டுகளுக்குமுன் பர்மாவில் பான் என்னும் ஊரில் ஒரு வட்டிக்கடையை மேற்பார்க்கச் சென்ற செட்டியார் ஒருவர் அங்கு உள்ள தொழில் நிலையைப் பாடலாகவே முதலாளிக்குப் பின்வருமாறு எழுதினாராம்.

நாலட்டமலை நடுவே பான் என்ற ஊரில்
பனியோ ஜாஸ்தி பார்க்கமனம் சகிக்கவில்லை
எனமோ வழுவல் எடுத்ததெல்லாம் காலாவதி
கோடோ இழுவல்கொண்டு போனதெல்லாம் தள்ளுபடி
பணமோ வாங்கிவிட்டோம் பார்க்காவிட்டால் வீரமில்லை
வடிவேலன் கிருபையால் வந்தமட்டும் வாங்குகிறோம்

ஒப்பாரிப் பாட்டுக்கள் நானும் எவ்வளவோ கேட்டிருக்கிறேன். ஆனால் செட்டிநாட்டு ஒப்பாரிப் பாட்டுக்கு ஒப்புமில்லை, உயர்வுமில்லையென்றுதான் சொல்லவேண்டும் —...... நான் எடுத்துக் காட்டிய ரத்தினங்களெல்லாம் பொன்னும் மணியும் பொலியும் செட்டிநாட்டின் சொத்துக்கள் தான் ''பார்படுப செம்பொன்-- பதிபடுப மூத்தமிழ்'' என்ற வர்ணனைக்கு இலக்காக விளங்கும் அந்த அழகாபுரியிலே, ஊர் பேர் தெரியாத கவியரசிகள் எத்தனைபேர் எவ்வளவு பொக்கிஷங்களைப் புதைத்து வைத்திருக்கிறார்களோ?'' -என்கிறார் இந்திய அரசாங்க விளம்பரப்பகுதி அலுவலரும் கவிஞருமான ''சுரபி''.*

---

* (சக்தி அக்டோபர் 1946 இதழில் 'கால வெள்ளத்தில் மிதக்கும் கவியரசிகள்' என்ற கட்டுரையில்)

# 39. செட்டிநாட்டுத் தமிழ்

செட்டி நாட்டுத் தமிழை, இரு கூறாகப் பிரிக்கலாம். ஒன்று, பெரும்பாலும் பெண்மக்கள் பேசுவது. மற்றொன்று ஆண்மக்கள் பயன்படுத்துவது. முன்னதில் அருமையான இலக்கியச் சொற்கள் மருவியும் மாறியும்', சிதைந்தும் திரிந்தும் வழங்கி வருகின்றன. பின்னதில் திரைகடலோடித் திரவியம் தேடிய ஆண்மக்கள் தாங்கள் சென்ற நாடுகளில் வழங்கும் மொழிகளிலிருந்து சில சொற்களைக் கொண்டுவந்து தமிழில் கலந்திருப்பதைக் காணலாம்.

திரவியம் தேடத் திரைகடலோடுவதை 'கொண்டு விக்கப் போவது' என்று செட்டிநாட்டில் கூறுவர். கொள்ளுதல் = வாங்குதல். எனவே கொண்டு விக்கப் போவது என்பது வாங்குதல்—விற்றல் இரண்டையுங் குறிப்பிடும். பூம்புகாரில் வாழ்ந்த இவ்வணிகமக்கள் பழங்காலத்தில் தமிழகத்திலிருந்து பொருள்களை ஏற்றிக்கொண்டு போய்க் கடல்கடந்த நாடுகளில் அவற்றை விற்று வந்ததைப் பட்டினப் பாலை போன்ற சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம்.

"பையவே சென்று பாண்டியற்கு ஆகவே" என்று தேவாரத்தில் ஆளப் பெற்றுள்ள "பைய" என்னுஞ் சொல் செட்டிநாட்டில் நாள்தோறும் வழங்கி வருகிறது. "மெல்ல" "மெதுவாக" என்பது இதன் பொருள். "பையச் சென்றால் வையம் (வண்டி) தாங்கும்."

"பந்தல்" என்னுஞ் சொல், செட்டிநாட்டில் பிணப் பந்தலையே குறிக்கும்; மணப் பந்தலை அன்று. மங்கலச் சொற்களாக, "கொட்டகை", "காவணம்" என்பவையே வழங்குகின்றன. "இலக்கியத்தில் ஆளப்படுகின்ற காவணம் என்ற அருஞ்சொல் செட்டிநாட்டில் பழகு தமிழாய்ப் பயில்கிறது" என்கிறார் சொல்லின் செல்வர் டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை.

"பிற மொழிகளிலுள்ள சொற்களைத் தமிழ்மயமாக்கித் தனதாகக் கொள்ளுவதில் செட்டிமார்கள் சமர்த்தர்கள்; திரைகடலோடித் திரவியம் தேடுவதுடன் மட்டுமின்றிச் சொற்

செல்வத்தையும் திரட்டியிருக்கிறார்கள். செக்கு, செலான் அண்டிமென், அசல், நகல், அண்டா (பெரும் பாத்திரம்), வங்கி வேம்பா, போகணி (நீர் பருகும் பாத்திரம்), சீடி (மாடிப்படி) போன்ற சொற்கள் எல்லாம் தமிழ் உருவாகிப் பேச்சிலும், எழுத்திலும் பெரு வழக்காய் விளங்கக் காணலாம்'' என்கிறார் ''காகன்''*

ஒன்றுக்கும் பற்றாதவனை, 'அம்மன் காசுக்குப் பொறாதவன்' என்று இழிவாகக் கூறுவர். அம்மன் காசு என்பது 17-ம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் 1948 வரை தனி அரசாக, புதுக்கோட்டைச் சீமையை ஆண்ட தொண்டைமான் அரசர்களால் வெளியிடப் பெற்ற நாணயம். ஆண்டுதோறும் நவராத்திரி விழாவில் பிராமணர்களுக்கு அரிசியும் அம்மன் காசும் அரசர் அன்பளிப்பார். இதற்காக, ஓராண்டுக்கு 200 அல்லது 300 அம்மன் காசுகள் அச்சிடுவர். 20 அம்மன் காசு = 6 ந. பை.

''முந்தாணி'' என்ற சொல் செட்டிநாட்டிலும், வேறு சில இடங்களிலும் வழங்குகிறது. ''முந்தானை'' என்பதே இவ்வாறு மருவியிருக்கிறது.இச்சொல் முந்தாங்கி என்றும் வழங்கும் இதே பொருளில் ''தோமாலை'' என்ற சொல்லும் பயன்படுத்தப் பெறுகிறது.

செட்டி வீடு என்று பிறர் சொல்லுவதைச் செட்டிநாட்டில், ''செட்டிய வீடு'' என்று ஆறாம் வேற்றுமை உருபு தெரியும்படி சொல்லுவது வழக்கம். இதைப் போலவே அகம்படியர் வீடு என்பதை ''அகம்படியவீடு'' என்பர்.

மட்டக் களப்பு, யாழ்ப்பாணப் பகுதிகளில் ''ஓய்'' ''காணும்'' என்ற சொற்களைப்போல செட்டி நாட்டில் ''என்னங்றேன்'' என்பது விளிப் பொருளில் வழங்கி வருகிறது.

ஒருவர் மற்றொருவருக்கு ஒரு பொருளைக் கொடுத்தால் ''எனக்குத் தந்தான்'' ''அவனுக்குக் கொடுத்தான்'' என்று சொல்லுவதுதான் இலக்கண மரபு. ''எனக்குக் கொடுத்தான்''

---

*காகன்: செட்டிமார் நாட்டுத் தமிழ். தினமணி கதிர், 1957 காகன் என்பது கம்பனடிப்பொடி சா. கணேசனின் புனைபெயர்.

என்றோ, "அவனுக்குத் தந்தான்" என்றோ சொல்லுவது பிழையாகும். படர்க்கைக்குக் கொடுத்தல் என்றும், தன்மை நிலையில் தருதல் என்றும் சொல்லவேண்டுமென்பது இலக்கண வரம்பு. இலக்கண வாசனையில்லாத ஆச்சிமாருங் கூட தமக்குள் பேசிக்கொள்ளும்பொழுது, மரபு பிறழாமல் பேசுவர். இதை ஒரு மணி நேரம் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த டாக்டர் மா.இராசமாணிக்கனார் அடைந்த வியப்புக்கு எல்லையில்லை.

செட்டிநாட்டு மக்கள் திட்டும்போதுகூட தூயதமிழில் திட்டுவர். சிறுவர் குறும்பு செய்யும் போது, அவர்களைக் கோபிப்பதற்கு அரசழுவாய் என்ற, வசைச் சொல்லை வழங்குவர்; 'உன் மகனை இழந்து தவிப்பாய்' என்பது இதன் பொருள். "பாவி பரப்பான் பரந்திறந்து போவான்" என வசை பாடுவர்.

இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகு இயற்றியான்

என்னும் குறளிலும் இச்சொல் ஆளப்பெற்றிருக்கிறது.

கூட்டத்தைக் கலைக்கலாம் என்பதற்குக் கூட்டத்தைப் "பெருக்கலாம்" என்றும் விளக்கை அணை என்று சொல்வதற்கு விளக்கை "மலையேற்று" என்றும் மங்கலச் சொற்களால் தெரிவிப்பது செட்டி நாட்டு மரபு.

மங்கல நிகழ்ச்சிகளுக்குச் சென்று விடை பெறுவோர், 'போய் வருகிறேன்' என்று கூறுவர்; ஆனால் இழவு வீடுகளின்றும் விடைபெறுவோர் 'போகிறேன்' என்று மட்டுமே கூறுவதும் செட்டிநாட்டுப் பண்பு.

மார்கழி மாதம் 1௳ அல்லது தை மாதம் 1௳ என்பதற்கு ஒன்றாந் தேதி என்று சொல்லாமல் முதல் தேதி என்றுதான் சொல்லுவர்.

"வ. ரா." அவர்கள் "ஊழியனில்" துணை ஆசிரியராக இருந்த போது, செட்டிநாட்டுச் சொற்கள் அவர் கவனத்தைக் கவர்ந்தன. "மணி என்ன?" என்று வேலையாளைக் கேட்டதற்கு, அவன் "அரை மணி" என்றானாம். அரை மணி என்று கேள்விப்பட்டதில்லையே என்று வ.ரா. விழித்தாராம். செட்டி

நாட்டில், 12 - 30 மணி என்பதை அரைமணி என்று சொல்லுவது வழக்கம். 12 மணிக்குப் பிறகு 13 மணி என்று வழங்காமல் 1 மணி என்றே எங்கும் காலம் குறிக்கப் பெறுவதால், 12 மணியோடு ஒரு கால அளவு முடிந்து விடுகிறது. மறுகால அளவு தொடங்கப் பெறுவதற்குப் பொருத்தமாக, 12 - 30 மணியை அரைமணி என்று கூறுவர்.

இன்னொரு தடவை, வ. ரா. ஒரு செட்டியாரைச் சந்தித்தபோது அவருடைய வருவாயைப்பற்றி வினவினாராம். "வடிவாக 300" என்று அவர் சொன்னது வ. ரா. வுக்கு வியப்பைத் தந்ததாம். சரியாக, சில்லறைத் தொகைகளின்றி என்ற பொருளில் "வடிவாக" என்ற சொல் செட்டிநாட்டில் வழங்கி வருகிறது.

செட்டி நாட்டில், வழியில் ஒருவர் மற்றொருவரைச் சந்திக்கும்போது 'ஏன்?' என்று கேட்பர். அதற்கு, மற்றொருவர் 'ஆமா' என்று விடையளிப்பர். இந்த வினாவும் விடையும் தமக்குப் புரியாத ஒரு புதிராக இருந்ததை ஒருவர் குறிப்பிட்டிருக்கிறார். 'ஏன்? என்பதற்கு 'நலந்தானே?' என்று பொருள்.

*Flora and Fauna* என்பதைக் குறிக்க, மாவிடை மரவிடை என்று எழுதுவது செட்டிநாட்டு வழக்கம்.

"*On Demand*" என்பது "அண்டிமென்" என்னும் தமிழ்ச் சொல்லாகி விட்டது.

செட்டி நாட்டுப் பெண்கள் ஆங்கில மொழியில் வழங்கும் சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்கள் பலவற்றை, பிறர் [illegible]ணையின்றித் தாங்களே அமைத்துக் கொண்டிருக்கின்றனர். "ஆ[illegible]றுள் சில:

அதா[illegible]

*Press Button* = அமுக்குப் பொத்தான்
*Woollen* = கொச்சிநாய்க் கயிறு
*Face Powder* = புட்டாமா
*Snow* = முகவெண்ணெய்
*Orange* = கிச்சிலிப்பழம்
*Sabota* = சீமை இலுப்பை
*Apple* = சீமை இலந்தைப்பழம்
*Towel* = துவாலை
*Turkey towel* = தேங்காய்ப்பூத் துண்டு

பரவாயில்லை என்று பிறர் சொல்லுவதை, செட்டி நாட்டில் கல்வியறிவில்லாதவருங் கூட, "குற்றமில்லை" என்று இனிய தமிழில் சொல்லுவர். அங்கு, "புதுமை" என்னும் சொல், பழமை தொட்டே வழங்கி வருகிறது.

செட்டி நாட்டு நகைகளின் பெயர்களும் செந்தமிழில் உள்ளன. கெவுடு (கழுத்து அணி), தடை (கையில் அணிவது*), அருநா (அரைஞாணில் பயன்படுத்தும் சங்கிலி) என்ற பெயர்கள் உண்டு.

வணிக முறையில் பல சொற்களைத் தூய தமிழில் செட்டியார்கள் வழங்கும் முறை கேட்பாரை வியப்படையச் செய்வதாக நெல்லை நகரசபையின் தலைவராகயிருந்த ப. ரா. அவர்கள் சொல்லுவார்கள். சான்று, "please cross this draft" என்பதற்குச் செட்டியார்கள், "இந்த உண்டியலை வெட்டிக் கிழியுங்கள்" என்பர். Draft என்பது உண்டியல், Draft payable at sight என்பது தரிசன உண்டியல். வெட்டுதல் Bearer என்னும் சொல்லை வெட்டுதல். கிழித்தல்-cross பண்ணுவதற்குக் குறுக்குக் கோடு கிழித்தல்.

திறவுகோல் என்ற பொருளில் "திறகுச்சி" என்ற சொல் வழங்கி வருகிறது. பழங்காலத்தில் இது, மரத்தால் செய்யப் பெற்றதால் இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். (இரும்பு, வெள்ளி போன்ற பொருள்களால் செய்யப்படும் அளவுக் கருவிகளும் மரக்கால்" எனப் பெயர் பெற்றிருப்பது போல).

தமிழகத்தின் பல பகுதிகளில் கிரகப் பிரவேசம், வது கிரகப் பிரவேசம் என்ற சொற்கள் வழங்கி வருகின்ற ...ம ஆனால், செட்டி நாட்டில், இப்பொருள்களில் முறையே மனையில்) குடி புகுதல், பெண் அழைப்பு என்ற சொ... ம் 1 வ எல்லோரும் பயன்படுத்தி வருகின்றனர். ...ல் தேதி

உணவைக் குறிக்கும் சொற்களாகத் தமிழ்ப் பெ... செட்டிநாட்டில் வழங்கி வருகின்றனர். திருமண வீட... மணமகன் மணமகளைக் கை பிடித்த அன்று பெண்வீட்...யராக ...தைக் ...ட்ட

* ஏனைய வளையல்கள் கையினின்றும் கழலா வண்ண...று தடை செய்தலின், இது "தடை" எனப்பட்டது. இது போன்றதே "தொடி" என்பதும்.

வழங்கும் உணவை "கைபிடிச் சோறு'' என்பர். ''தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்'' என்று கம்பராமாயணம் பால காண்டம் திருமணப் படலத்தில் வருவது இங்கே கருதத்தகும்.

செட்டி நாட்டுச் சிற்றுண்டிகளுக்குத் தேன்குழல், சீடைக் காய், மனகோலம் (ஒருவகை இனிப்புச் சிற்றுண்டி) என்ற தமிழ்ப் பெயர்களே நிலவி வருகின்றன.

இனி, செட்டிநாட்டில் வழங்கும் முறைப் பெயர்களைப் பார்ப்போம். 'தாயாரை ஆத்தாள்' என அழைக்கின்றனர். இது ஆய் + ஆள் என்பதாகும். ''யாயும் யாயும் யாராகியரோ'' என்பது குறுந்தொகை வாக்கு. ஆய் என்பது தாய் என்றும் யாய் என்றும் வழங்கப் பெறும். இங்கு ''ஆய்'' என்ற முறைப் பெயர் பகுதியாகி ''ஆள்'' என்னும் பெண்பால் விகுதி பெற்று ஆத்தாள் என மருவி வழங்கப் படுகிறது. பட்டினத்தடிகள் இச்சொல்லைக் கையாண்டிருப்பதை 73 - ஆம் பக்கத்தில் குறிப்பிட்டிருக்கிறோம்.

அகத்தாள் என்பதே ஆத்தாள் ஆயிற்று. நுகக்கால் நோக்கால் என்றும், அகப்பை ஆப்பை என்றும் வழங்குவது போல. அபிராமி அந்தாதியில் அம்பாளை ஆத்தாள், என்று கூறப்பெற்றிருக்கிறது.

தந்தையாரை 'அப்பச்சி' என்று செட்டிநாட்டில் குறிப்பிடுவதுண்டு. அப்பன் என்ற சொல்லிலிருந்து இது மருவி வழங்குகிறது.

தாயின் தாயையும், தந்தையின் தாயையும் வெவ்வேறு சொற்களால் குறிப்பது செட்டிநாட்டு வழக்கம். தாயின் தாய் ''ஆயாள்'' அதாவது ஆய் + ஆய் தந்தையின் தாய் அப்பத்தாள், அதாவது அப்பன் + ஆத்தாள்.

என் தந்தை என்பது 'எந்தை' என இலக்கியத்தில் சுருங்கி வழங்குவதுபோல, அப்பத்தாள் என்ற சொல்லும் சுருக்கமாக வழங்கி வருகிறது.

அண்ணா, அண்ணாச்சி என்று பிற இடங்களில் சொல்லுவதை 'அண்ணன்' என்று இங்கே சொல்லுவார்கள். 'அன்' என்ற ஆண்பால் விகுதி கொடுக்கப்பெற்று இலக்கண உருவம் சிதையாமல் இச்சொல் வழங்கி வருகிறது. செட்டி

நாட்டில் அண்ணன் என்ற சொல் சிறிய தந்தையாரையும் குறிக்கும். அண்ணனின் மனைவியை 'அண்ணன் பெண்டி' என்று அழைப்பது செட்டிநாட்டு வழக்கு. 'பெண் + ட் + இ' என்ற தொடரில் 'இ' என்ற விகுதி பெண்பாலை உணர்த்துகிறது

ஆச்சி (ஆய்ச்சி) என்பது அக்காளைக் குறிக்கும். குடும்பத் தலைவியையும் 'ஆச்சி' என்று அழைப்பர்; சிறிய தாயாரையும் 'ஆச்சி' என்பர். இடமறிந்து பொருள் கொள்ளவேண்டும். மனைவியை, 'பெண்டிர்' அல்லது 'பெண்டாட்டி' என்பர். பெண்டு என்னும் சொல் மனைவி என்ற பொருளுடையது; 'ஊரன் பெண்டு' என ஐங்குறு நூற்றில் வருவதும் சிந்திக்கத் தக்கது. அண்ணன், தம்பி, ஆச்சி தங்கச்சி என்பவர்கள் உடன் பிறந்தார் ஆவர்.

அம்மான்: அம்மை என்பது தாயைக் குறிக்கும். அவள் வழி வந்த ஆடவன் என்பதைக்குறிக்க 'ஆண்' விகுதி உளது. எனவே, இது தாய் மாமனைக் குறிக்கும். கரிகாற்சோழன் துறையூர்க்கு அருகில் உள்ள கழுமலத்தில் தலைமறைவாக இருந்த நாளில் அவனுக்குப் பெருந்துணையாக இருந்தஇரும்பிட தலையாரைக் குறிக்கின்றபோது உரையாசிரியர்களால் "இரும்பிடத் தலையார் என்னும் தம் அம்மானை" என்று அவன் தாய் வழிமாமன் குறிப்பிடப் பெற்றமை ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

முறைப் பெயர்களுக்கு முன்னால், 'நப்பச்சி', 'நாத்தாள்' என்று 'ந' என்ற எழுத்திதைச்சேர்க்கும் வழக்கும் செட்டிநாட்டுப் பேச்சுத்தமிழில் உண்டு.

இச்சொற்கள் நம் அப்பச்சி, நம் ஆத்தாள் என்பவற்றின் மரூஉ எனக்கொள்ளலாம். 'ந' - தன்மை உறவைக் குறிக்கும். எந்தை, எம்பி என்னும் இலக்கியச் சொற்கள் இங்கே ஒப்பு நோக்கத்தக்கன. உன் அப்பச்சி, உன் அக்காள் என்பன நொப்பச்சி, நொக்காள் எனச் செட்டிநாட்டில் வழங்கப் பெறுகின்றன. நொப்பர் நொண்ணர் என்னும் சொற்கள் ஈழத் தமிழ் நாட்டில் வழக்கிலிருப்பது இங்குக் கவனிக்கத்தக்கது.

மானி—மான உணர்ச்சி உடையவன்; பங்காளியைக் குறிக்கப் பயன் படுத்தும் சொல். தாத்தாவை ஐயா என்று அழைப்பர்.

பண்டைப் பனுவல்களில் கையாளப் பெற்றுள்ள பழந் தமிழ்ச்சொற்கள் இன்னும் செட்டிநாட்டில் வழங்கி வருவது இக் கட்டுரையில் கூறியவற்றால் தெளிவாகும்.

## 40. முடிவுரை

பல துறைகளில் செட்டிநாட்டு மக்கள் செய்திருக்கிற — செய்து வருகிற தமிழ்ப் பணியை முன்னைய கட்டுரைகளில் தெரிவித்தோம்.

பல நாடுகளிலும் பலமொழிகளிலும் செட்டிநாட்டார் திருக்குறளைப் பரப்பியிருப்பதும் இந்நூலிலிருந்து ஓரளவு புலனாகும்.

கலைச் சொல்லாக்க முயற்சியிலும் செட்டிநாடு முன் நிற்கிறது. 1935-இல் இவ்வேலையைத் தொடங்க வேண்டுமென, திரு. இராஜகோபாலாச்சாரியார் வேண்டிக் கொண்ட போது, அதற்காக ரூ. 5000-ஐச் செட்டிநாட்டு அன்பர் சிலரிடமிருந்து வசூலித்து, திரு. சா. கணேசன் இராசகோபாலாச்சாரியாரிடம் கொடுத்தார். 1935—1937-இல் நடைபெற்ற முயற்சிகளில் ரூ 900 வரை செலவாயிற்று. எஞ்சிய தொகையை, 1954-இல் அவர், காரைக்குடி அழகப்பா கல்லூரிக்குக் கொடுத்து, கலைச் சொல்லாக்க வேலையைத் தொடர்ந்து நடத்தும்படி கேட்டுக் கொண்டார். உடனே, வள்ளல் அழகப்பர் ரூ 5900 அன்பளித்தார். இவ்வாறு பெருகிய ரூ. 10,000-ஐ நிதியாகக் கொண்டு கலைச் சொற்குழு பணியாற்றி வந்தது. (Oxford Concise Dictionary யிலுள்ள) கலைச் சொற்கள் அனைத்தையும் தமிழாக்குவதில் இக் குழு சிலகாலம் ஈடுபட்டது.

தேவாரம், திருப்புகழ் ஆகிய நூல்களைப் பரப்பியும், ஓதுவார்களை ஆதரித்தும், திருவாசக மடங்கள் நிறுவியும் செட்டிநாடு செய்திருக்கும் தொண்டு அளவிடற்கரிது.*

திருமண விழாக்களில் சிறந்த தமிழ் நூல்களை அச்சிட்டு வழங்குவதும், வாழ்த்துரை நல்கும் புலவர்களுக்குப் பரிசில்கள் கொடுப்பதும், சங்கங்களுக்கு நன்கொடை கொடுப்பதும் வழக்கமாக உள்ளன.

---

காரைக்குடி: திருவாசக மடம்

*பலவான்குடி: மணிவாசக மன்றம்

திருப்பெருந்துறை: திருவாசக மடம்—இதை நிறுவியவர்—அரிமளம் அரு அ. அண்ணாமலை ஐயா.

திருமண உடன்பாட்டை நகரத்தார்கள் ஓலையில் எழுதி வருவதை நோக்குங்கால், "பொய்யும் புரையும் தோன்றி பின்னர் ஐயர் யாத்தனகரணம் என்ப" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தில் கூறிய "கரணம்" என்ற சடங்கில் ஓலைஎழுதுவது இன்றியமையாதது என்பதை அறியலாம்.

"அரசனுக்குப் பிள்ளை பிறந்தபோது கொண்டாடப் படும் விழா மகப்பேற்று விழாவாகும். பெண்மகப் பேற்றினும் ஆண் மகப் பேறும், ஆண்மகப் பேற்றினும் பட்டத்திற்குரிய முதன் மகப்பேறும் சிறப்பாகக் கொண்டாடப்பெறும்" என்று (கழக வெளியீடாகிய) "பழந்தமிழாட்சி" என்னும் நூலில்கூறப் பெற்றிருக்கிறது. இவ் விழாவே, காப்புக்கட்டுப் புதுமையாகச் செட்டிநாட்டில் இன்றளவும் நடைபெற்றுவருகிறது.

கட்டியங்கூறும் வழக்கமும் இன்னும் செட்டி நாட்டுக் கோயில்களில் இருந்து வருகிறது.

வீடுதோறும் நூல் நிலையங்கள் உள்ள சிறப்பும் செட்டி நாட்டுக்கு உண்டு.

கடல் கடந்த நாடுகளில் பிறநாட்டு ஊர்ப்பெயர்களைத் தமிழ் மரபுக்கேற்ப மொழிபெயர்த்திருப்பதும் செட்டிநாட்டு மக்களுக்கு இயல்பாக உள்ள தமிழறிவைப் புலப்படுத்தும். சான்றாக,

| பிற மொழிச் சொல் | தமிழ்ச் சொல் |
|---|---|
| கேன்பே | கம்பை |
| மாண்டலே | மாந்தளை |
| கெமண்டைன் | கிமந்தான் |
| நியாங்ளேபின் | நவுலியப்பன் |
| மக்வே | மக்குவை |

என்ற பெயர்களைத் தெரிவிக்கலாம்.

செட்டிநாடும் செந்தமிழும் என வரம்பு கோலி அவ்வெல்லையுட்பட்ட குறிப்புக்களைப் பட்டாங்கு கொடுத் திருக்கிறோம். இவ்வரம்பையுணர்ந்த நன்மக்கள் அவரைப்பற்றி

அது எழுதவில்லை, இவரைப்பற்றி இது எழுதவில்லை என்று அப்பாற்பட்டது சுட்டிக் குறை கூறார். இது வாழ்க்கை வரலாற்று நூலன்று, இலக்கிய வரலாறு.

செட்டிநாடு தமிழுக்குச் செய்திருக்கும் தொண்டுகளை அறுதியிட்டுச் சொல்ல இயலாது. வாணன் புகழ்க்கு எல்லை வாழ்த்துவோர் நா இல்லை.

வாழ்க செட்டிநாடு; வாழ்க செந்தமிழ்.

# பிற்சேர்க்கை

## 1. சில ஊர்களைப் பற்றிய குறிப்புகள்

அரண்மனைச் சிறுவயல்: இது காரைக்குடி - சிவகங்கைப் பாதையிலுள்ள ஓர் இரயில் நிலையம். இங்கு சிறுவயல் குறுநில மன்னரின் மாளிகை இருக்கிறது. இது மருதுபாண்டியன் இருந்த அரண்மனையாகும். அரண்மனையையுடைய சிறுவயல் ஆகையால் இவ்வூருக்கு அரண்மனைச் சிறுவயல் என்று பெயர் ஏற்பட்டது. மருதுபாண்டியர் மறவர் சமூகத் தலைவராகவும், சிவகங்கைக் குறுநில மன்னராகவும் 19-ஆம் நூற்றாண்டில் புகழ் பெற்றிருந்தார். அவர் தூக்குத்தண்டனை பெற்றார்,

அவர் சிறுவயலைப் பட்டினமாக்கி அரண்மனை கட்டிய செய்தியை சிவகங்கைச் சரித்திரக் கும்மியும் அம்மானையும் என்ற நூலில் காணலாம்.

*The Mardoo's palace and that of Shevatatamby were conspicuous for neatness more than grandeur and though small were extremely solid and well-built. The streets, one of which had an avenue in it, were broad and regular and the whole town claimed a superiority over any I had ever seen in India—Col Welsh: Military Reminisences Vol. I.*

அரிமளம்: இவ்வூர் புதுக்கோட்டையிலிருந்து 18 கிமீ தொலைவில் உள்ளது. இது புகையிலைக்கும் புத்தக வெளியீட்டாளர்க்கும் பெயர் பெற்றது. சோழவந்தானூர் அரசன் சண்முகனார் எழுதிய தொல்காப்பியப் பாயிர விருத்தி வெளி வருவதற்கு இவ்வூர் நகரத்தார் பொருளுதவினர். மு ரா. கந்தசாமிக் கவிராயர் இங்கு வந்து பல காலம் தங்கியிருந்தார். அவரையும் இவ்வூர் நகரத்தார் பெரிதும் ஆதரித்தனர். அரிமளத் தலபுராணத்தை இவர் பாடியிருக்கிறார். இவ்வூர் அன்பர் சிலர் பெரும் பொருட்செலவில் தமிழ் இலக்கிய விழாக்கள் நடத்தியிருக்கின்றனர்.

இவ்வூர்த் திருக்கோயிலிலே வழிபடுவோர் தோத்திரஞ் செய்யத்தக்க பாக்களை அரிமளம் ஸ்ரீ மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் என்ற பெயரில் சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர் வெளியிட்டுள்ளார்.

அரியக்குடி; இது காரைக்குடி அருகிலுள்ள சிற்றூர். ஒரு வைணவ தலம், இவ்வூரிலிருந்த அரங்கநாதன் செட்டியார் என்பவர் பாடல்களிலேயே கடிதங்கள் எழுதும் ஆற்றல் பெற்றிருந்தார்.

இராயவரம்: இது தொன்றுதொட்டுப் புலவர்கள் வாழ்ந்த நகரம்; இவர்கள் கவிராயர் எனப்படுவர். புலவன் கண்மாய் ஒன்று இவ்வூரிலிருக்கிறது. இது புலவர்களால் வெட்டப்பெற்றது என்பது வரலாறு.

''புகழேந்தி வங்குதவாணிதாச'' வீரபத்திரக் கவிராயர் வழித்தோன்றலான வீரபத்திரக்கவிராயர் எழுதிய குமரமலைப் பிள்ளைத் தமிழை இவ்வூர் நா. கதி. கதிரேசன் செட்டியார் 1909-ல் வெளியிட்டிருக்கிறார். மழவைத் திருவிளையாடற் சுப்பிரமணிய பாரதியவர்கள் மகன் இராமசுவாமி ஐயர் இங்கு வாழ்ந்து, திருவிளையாடற் கீர்த்தனை பாடியுள்ளார். இங்கு வாழ்ந்த வேறு சில புலவர்கள் சிவ சுப்பிரமணியக் கடவுள் குறவஞ்சி, மெய்யச்சிலேடை வெண்பா என்னும் நூல்களை இயற்றியுள்ளனர்.

பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் சில ஆண்டுகள் இவ்வூரில் தமிழாசிரியராக இருந்தார்; இவர் காரைக்குடி, கோனாபட்டு ஆகிய ஊர்களிலும் தமிழ்ப்பணி ஆற்றியிருக்கிறார்; இவருடைய மனைவியார் திருவாட்டி அலமேலு, செட்டிநாட்டு அரியக்குடியில் பிறந்தவர்.

காளையார்கோயில்: சிவகெங்கையிலிருந்து 16 கி. மீ தொலைவு. சங்க இலக்கியங்களிலே பலம் பொருந்திய கோட்டையாக விளங்கிய ஊர் கானப்பேர் எயில் என்று அந் நாளில் போற்றப்பெற்றது. இவ்வூரைப் பற்றிய குறிப்புக்களை புறப்பாட்டுகளில் காண்க. இக்கோட்டை, கோயில், ஊரின் சிறப்பு ஆகியன பற்றி அறிஞர் கால்டுவெல்லும் கலோனல் வெல்ஷும் விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளனர்.

கானாடுகாத்தான்; வெள்ளாற்றுக்குத் தெற்கே அமைந்த கானாடு அல்லது கான நாடு என்ற பகுதியின் தலைநகராக இருந்த கானாடுகாத்தான் பட்டி என்பதே இப்போது இவ்வாறு வழங்கப்பெறுகிறது. கானாடு, விருதராஜப் பயங்கர வளநாடு என்றும் கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டிருக்கிறது.

கொப்பனாபட்டி: இவ்வூர் புதுக்கோட்டையிலிருந்து 30 கி.மீ தொலைவிலுள்ளது. இதற்குக் கொன்னையூர் என்றும் பெயருண்டு. கொப்பன்ன காங்கேயன் என்ற ஓர் அரசன் நினைவாக இவ்வூரின் பெயர் கொப்பனாபட்டி ஆயிற்று என்கிறார். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர்.

கோனாபட்டு: தமிழ் வளர்ச்சி பெறும் நகரங்களுள் இது ஒன்று. ஆயர்கள் பற்றியிருந்த இடமாதல் குறித்து, கோனார் பற்று என மருவியிருக்கலாம். இப்பகுதி முல்லை நிலமாக இருத்தல் இக்கருத்தை வலியுறுத்தும்.

கற்பக வினாயகர் கலாசாலை: இப்போது சரசுவதி உயர்நிலைப் பள்ளியாகக் காட்சித்தரும். இது, 40 ஆண்டுகட்கு முன்னர், தமிழ்க் கல்வியை புகட்ட சு. மு. மகாதேவ முருகப்பச் செட்டியார் அவர்களால் தொடங்கப்பெற்றது. இதனோடு வாணிமந்திர புத்தகசாலை என்ற நூல் நிலையமும், ஞானசம் பந்தர் நற்சபையும் இணைந்திருந்தன.

கலாசாலையின் தொடக்கத்தில் பண்டித கோபாலஐயர் அவர்கள் தலைமை ஆசிரியராக இருந்து பணியாற்றினார். அதற்குப்பின் கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை அவர்கள்தலைமை ஆசிரியப்பணிபூண்டு நீண்டகாலம் இவ்வூரில் வாழ்ந்தார். கரந்தைக் கவியரசு அவர்கள் தம்மைப் பற்றிப் பிறரிடம் சொல்ல நேரும்போது "கற்பக வினாயகர் கலா சாலையில் பணி புரியும் வாய்ப்பு ஏற்பட்டிராவிட்டால் '*R*'வேங்கடாசலம்பிள்ளை என்ற என்னை"யார் வேங்கடாசலம் பிள்ளை? என்று கேட்க நேரிட்டிருக்கும்" என்று கூறுவதுண்டு.

இக்கலாசாலையில் கல்விபயின்ற மாணவருள் குறிப்பிடத் தக்கவர்கள், பண்டித அ. நாராயணசாமியார், சாமி சிதம்பரனார்.

நெய்க்கோணம்: இது புதுக்கோட்டையிலிருந்து 20கி. மீ தொலைவிலுள்ளது. இங்குள்ள வைணவக்கோவில் கல்வெட்டுக் களில் இவ்வூர் நெல்குன்றம் என்று குறிக்கப்பெற்றிருக்கிறது.

நேமத்தான்பட்டி: திருநாவுக்கரசு வித்தியாசாலை இவ் ரில் சிறப்பாக நடைபெற்றுத் தமிழ்க்கல்வி புகட்டி வருகிறது. இதை நிறுவிய சி. வி. நா. பழனியப்பரின் வாழ்க்கை வரலாற்றைப் பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை எழுதி யிருக்கிறார்.

பிள்ளையார்பட்டி: காரைக்குடியிலிருந்து (குன்றக்குடி வழியாகத்) திருப்பத்தூருக்குச் செல்லும் வழியில் குடைவரைக் கோயிலுள்ள ஒரு தலம் ஈக்காட்டூர், மருதங்குடி, திருவங்கைக்குடி, திருவீங்கைச்வரம், இராசநாராயணபுரம் மருதங்கூர், தென்மருதூர், கணேசபுரம், கணேச மாநகரம் பிள்ளைநகர் என்ற பலபெயர்களால் பாடல்களில் இவ்வூர் குறிக்கப்பெற்றிருக்கிறது.

பரியாமருதுப்பட்டி: இது பெரிய மருதுபட்டி. சிவகங்கைச் சீமையை ஆண்ட மருதுவீரர் பெயரால் அமைந்த தேவஸ்தானக் கிராமம். இவ்வூர் நெற்குப்பைக்கு அருகே இருக்கிறது. இங்குள்ள கோவிலில் உள்ள சிவபெருமானுக்கு மருதீஸ்வரர் என்று பெயர்.

புதுவயல்: சரசுவதி சங்கம் இப்பகுதியிலுள்ள இளைஞ ரிடையே தமிழார்வத்தை வளர்த்து வருகிறது. இதன் ஆண்டு விழாக்கள்இவ்வூரில் திருவிழாப்போலக் கொண்டாடப் பெற்று வந்தன. அறிஞர் பலர் இங்கு வருகை புரிந்தனர்.

பூலாங்குறிச்சி: இது பூலான்என்பவர் பெயரால் ஏற்பட்ட ஊராக இருக்கலாம் என்பது டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை கருத்து. வேலன் குறிச்சி, ஆழ்வார் குறிச்சி, சோழன் குறிச்சி என்பனபோன்று புலவன்குறிச்சி என்பதன் மரூஉ ஆகவும் இருக்கலாம்.

குறிஞ்சி என்பது குறிஞ்சிநிலத்தில் உள்ள ஊரைக் குறிக்கும். 'குறிச்சி எங்கள் குறச்சாதி குடியிருப்பதம்மே'- மீனாட்சியம்மை குறம். இவ்வூரை யொட்டிய காஞ்சாத்துமலை பசும்பொன் முத்துராமலிங்கம் மரவட்டத்திற்கும் புதுக்கோட்டை மாவட்டத்திற்கும் எல்லையாக அமைந்தது.

மன்னன் சோழன் கூத்தன் கல்வெட்டு இவ்வூரில் உள்ளது தமிழ் நாட்டின் காலக்கோடாக அமைந்த இந்தக் கல்வெட்டு தமிழ்நாட்டில் இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ள மிகப்பெரிய கல்வெட்டாகும் தூயதமிழில் அமைந்தது நீளம் 45 அடி அகலம் 6 அடி.

பொன்னமராவதி : 'பொன் அமரன்'' என்ற ஓர் அரசன் பொன்னமராவதியைநிறுவியவன் என்றுகூறுவர். இரு அரசர்கள் இருந்தனர் என்று இவ்வூர் அழகிய நாச்சியம்மன் பாடலில் குறிப்பிடப்படுகிறது, இவ் வரசர்கள் நெடிராஜ பாண்டிய ராலும் நாயக்க மன்னர்களாலும் தோற்கடிக்கப்பட்டார்கள். இவ்வூரிலுள்ள வைணவக் கோவிலுக்கு 1927-ல் பொன்னம்பல நாதத் தொண்டைமான் ''வீரநரசிங்கராயர்'' பெயரால் நிலங்களை வழங்கியுள்ளான். 17-ஆம் நூற்றாண்டில் பொன்னமராவதி, மருங்காபுரிச் சிற்றரசர்களின் ஆட்சியில் இருந்தது; பின்னர் அது சேதுபதிகள் கைக்கு மாறிற்று. பிறகு தொண்டைமான்கள் 1730 அளவில் தமதாக்கிகொண்டனர். 12-ம் நூற்றாண்டில் இங்கு பாண்டியர்-சிங்களவர் போர் நடைபெற்றது. அமரன் பெயரால் அமைந்த அமரகண்டான் ஊருணி இங்கு உள்ளது இங்குள்ள சிவன் கோவில் இரண்டாம் ராஜ ராஜ சோழன் காலத்தில் கட்டப் பெற்றது. இவ்வூர் மூன்று நூற்றாண்டுகள் சோழர் ஆட்சியில் இருந்தது. இங்குள்ள கோயிலுக்கு ராஜேந்திர சோழீசுரம் என்று பெயர் இரண்டாம் ராஜராஜன், இரண்டாம் குலோத்துங்கன், மூன்றாம் குலோத்துங்கன் ஆகியோர் காலத்தில் ஏற்பட்ட 17 கல்வெட்டுக்கள் இக்கோவிலில் உள்ளன. இவ்வூர் புதுக் கோட்டையிலிருந்து 35 கி. மீ தொலைவில் இருக்கிறது.

இராங்கியம் : இவ்வூர் அம்மன்கோவிலுள்ள கல்வெட்டு களில் துலுக்கர் கலகம் பற்றிய செய்திகள் உள்ளன. இக்கல் வெட்டுக்கள் இவ்வூரை ராஜசிங்க மங்கலம் என்றும் ராஜசிங் கமங்கலம் என்றும் குறிப்பிடுகின்றன. 'வீரமாலை' பாடிய பாண்டிக் கவிராசருக்கு இவ்வூரிலுள்ள நிலங்கள் வெங்களப்ப நாயக்கரால் பரிசாக வழங்கப்பெற்றன.

தேவகோட்டை : தேவிகோட்டை என்பது காவிரிப்பூம் பட்டினத்துக்கு வடக்கே ஆறுமைல் தொலைவில் கொள்ளிடம் ஆறுகடலுடன் கலக்கும் இடத்தில் இருக்கும் சிற்றூர். இப் பகுதியிலிருந்து செட்டியார்கள் வந்து குடியேறியவர்கள். ஆதலால் தாம்முதலில் குடியேறிய பகுதிக்கு அவ்வூரின் பெயரை இட்டனர்.

## கோட்டையூர்

செட்டிநாட்டில் உள்ள ஒவ்வொரு ஊரின் தமிழ்ப் பணியைக்குறித்தும் விரிந்த நூல் எழுத இயலும். விவரங்களைத் திரட்டத்தான் ஆட்கள் இல்லை.

கோட்டையூரில் உள்ள கோயில் குடநீராட்டு 27. 1. 1980 இல் நடைபெற்றது. அதன் நினைவாக இந்நூலாசிரியர் (சோமலெ) பதிப்பித்துள்ள மலரினிலிருந்து பின்வரும் பகுதி தரப்படுகிறது.

'மத்த விலாசப் பிரகடனம்' என்ற நூலை மகேந்திர வர்மபல்லவன் வடமொழியில் இயற்றியுள்ளான். இதை நா. பலராம ஐயர் என்பார் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். இம்மொழி பெயர்ப்பை 1930-ஆம் ஆண்டு அளவில் திருவெண்ணெய் நல்லூரில் கடை வைத்திருந்த கோட்டையூர் திரு மெய்யப்ப செட்டியார் வெளியிட்டியிருக்கிறார்.

உத்தமன் செட்டியார் என்பவர் இரங்கூனில் இருந்த போது சில நாவல்களை இயற்றியிருக்கிறார்கள்.

கே. பி. எம். இராமநாதன் செட்டியார் பக்த நந்தனார் வரலாற்றை நாடகமாகப் படைத்திருக்கிறார்கள்.

மெ. லெ. அ. சி. சிதம்பரம் செட்டியார் அவர்கள் கோட்டையூரிலிருந்து பழநிக்கு தைப்பூசத்துக்குப் பல ஆண்டுகள் நடந்து சென்று சர்க்கரைக் காவடி எடுத்தார்கள் அப்போது, காவடிச்சிந்து பாடி 1923-இல் அதை அச்சிட்டு வழங்கினார்கள்.

சிங்கப்பூர் தெண்டாயுதபாணிசுவாமி கோயில் ரதத்திற்கு மாடு வாங்கியதைப் பற்றி, கோட்டையூர் லெ. அ. சி. சிதம்பரம் செட்டியார் பாடல்களைப் பாடியிருக்கிறார்கள்.

க. வீ. அழ. மு. இராமநாதன் செட்டியார் அவர்கள் ஏராளமான நூல்களையும் வெளியிட்டுப் புலவர்களை ஆதரித்திருக்கிறார்கள்.

இவ்வூர் நகரத்தார்களின் ஆதரவுடன் பெ. சு ஆண்டியப்பன் அவர்கள் இங்கிருந்து நகரத்தார் வைசிய விருத்தி என்ற இதழை வெளியிட்டார்கள்.

இசைக் கலைஞர்களை ஆதரிப்பதிலும் கோட்டையூர் நகரத்தார் முன்னிலையில் இருந்திருக்கின்றனர். புகழ் பெற்ற வித்வான்கள் ஒருவர் தவறாமல் இந்நகரில் கச்சேரி செய்திருக்கிறார்கள். ஐம்பது, அறுபது ஆண்டுகளுக்கு முன் சில திருமணங்களில் ஏற்பாடு செய்யப்பெற்ற கலைநிகழ்ச்சிகளிலிருந்து, கோட்டையூர் நகரத்தார்களின் இசை ஆர்வம் வெளிப்படுகிறது.

வலையபட்டி

வயிரவன் கோயில் பிரிவைச் சேர்ந்த வயி. வ. இராமநாதன் செட்டியார் 'மலையாண்டி விநாயகர் திரு இரட்டை மணி மாலை' என்னும் பெயரில் கருத்தாழம் மிக்க கவிகளை 1900- ஆம் ஆண்டில் எழுதியுள்ளார்.

நேமங்கோயில் ந. மு. சிவராமன் செட்டியார் 1934-இல் தெய்வப் பாடல்கள் பலவற்றைப் பாடியுள்ளார்.

ஆ. பழனியப்ப பிள்ளை 1918-இல் வலையபட்டியில் நாமகள் கல்லூரியைத் தொடங்கினார். சிறந்தபுலவர்.

இவர் மகன் ஆ. பழ பாலசுப்பிரமணிய பிள்ளை என்பவரும் சிறந்த தமிழறிஞர்; தேசியவிருது பெற்ற ஆசிரியர்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தின் 'கழகப்புலவர்,' எனச் சிறப்புடன் பணியாற்றியுள்ள புலவர் இராமநாதப் பிள்ளை பல்லாண்டுகள் இவ்வூரில் ஆசிரியராகப்பணி புரிந்தவர்.

தவுல் கலைஞராக உலகெங்கும் 'வலையபட்டி'யின் புகழைப் பரப்பி, அமுதமழை கொட்டிவரும் சுப்பிரமணியம் இவ்வூரினர்.

## 2. செட்டிநாட்டுப் பெயர்கள்

சேரநாடு கடல் வாணிபத்தில் மிக்க பழமையும் சிறப்பும் உடையது; பழமையும் சிறப்புமுடையோர் ஆதலின், செட்டியார்கள் சேர நாட்டோடு தொடர்பு கொண்டிருந்தது இயல்பே. அத்தொடர்பினால் சேரர்க்கே உரிய ஆதன் என்ற பெயர்த்தொடர்பை இவர்கள் கொண்டிருக்கலாம். சேர அரசர் பெயர்கள் சேரமான் செல்வக் கடுங்கோ வாழி ஆதன், சேரமான் குடக்கோ நெடுஞ்சேரல் ஆதன் சேரமான் பெருஞ்சேரல் ஆதன் என்பன வணிகர்க்கு "மன்னர் பின்னோர்" என்ற சொற்றொடர் சங்க இலக்கியத்தில் வருவதால், மன்னர்க்குரிய பெயர்களும் வணிகர் கொண்டிருத்தல் பொருத்தமேயாகும்.*

இனி செட்டிநாட்டில் மிகுதியாக வழங்கும் பெயர்களைக் காண்போம். இவற்றில் அப்பன் என்னும் இறுதிச் சொல்லைக் காணலாம் தலைவன் என்ற பொருளில் இச்சொல் —ஆதன் என்பதுபோல வழங்கி வருகிறது.

---

*செட்டியார்கள் தொழில் செய்யும் இடங்களில் கடலுக்கு அருகேயே வாழ்ந்து வருவது குறிப்பிடத் தக்கது. சென்னையில் பவளக்காரத்தெரு, இரங்கூனில் மொகல் தெரு, கொழும்பில் செட்டியார் தெரு, சிங்கப்பூரில் மார்க்கெட் தெரு ஆகியவற்றில் செட்டியார்கள் சிறப்பாகத் தொழில் நடத்துகின்றனர். இத் தெருக்கள் யாவும் கடலுக்கு 100 மீட்டர் தொலைவிலேயே உள்ளன. கப்பல் தொழிலுக்குரிய பல சொற்கள் செட்டிநாட்டில் அன்றாடப் பேச்சு வழக்கில் மலிந்திருக்கின்றன.

அரியூர்ப் பட்டணத்தில் வாழ்ந்த 64 நகரத்தார் குடும்பங்கள் திசை தப்பி மலையாளம் போய்ச்சேர்ந்து, பின்னர் கோட்டாற்றங்கரையில் வாழ்ந்து வந்தனரென்ற வரலாறும் உண்டு.

செ–31

| | | |
|---|---|---|
| அடைக்கப்பன் | காளையப்பன் | பனையப்பன் |
| அழகப்பன் | கிருஷ்ணப்பன் | பழனியப்பன் |
| ஆதப்பன் | குமரப்பன் | பெரிச்சியப்பன் |
| ஆண்டியப்பன் | சாத்தப்பன் | மருதப்பன் |
| ஆவுடையப்பன் | செல்லப்பன் | முருகப்பன் |
| உலகப்பன் | சேக்கப்பன் | முத்தப்பன் |
| உடையப்பன் | தேனப்பன் | மெய்யப்பன் |
| ஏகப்பன் | நல்லப்பன் | வள்ளியப்பன் |
| கண்ணப்பன் | நாகப்பன் | வெள்ளையப்பன் |
| காடப்பன் | நாச்சியப்பன் | வேலப்பன் |

பெரும்பாலும் இப்பெயர்கள் அப்பன் என்னும் சொல்லுக்குப் பதிலாக அம்மை என்ற சொல்லுடன் பெண் மக்களுக்குப் பெயராக இடப்படுகின்றன.

செட்டிநாட்டிற்கே சிறப்பாக உரிய பெயர்கள்

ஆதப்பன்
சடையப்பன்
வெள்ளையன்
செட்டியப்பன் (கடற்சூர் தடிந்திட்ட
செட்டியப்பனை
—தேவாரம்-742-10)

பொய்சொல்லான் எனும் பெயர் இப்போது பொசலான் என மருவி வழங்குகிறது. ஒப்பிலாள், சிந்தாமணி, பொற்கொடியாள் என்பனபோன்ற சிறந்த சொற்கள் பெண்பாலரின் பெயராக வழங்கி வருகின்றன.

கோவலனும் கண்ணகியும் செட்டியாரிகள் வழியினரே என்பதற்குப் பல சான்றுகள் உள. கண்ணகி அம்மை என்ற பெயரே கண்ணம்மை என்று செட்டிநாட்டில் வழங்குகிறது. கண்ணம்மை கண்ணாத்தா என்ற பெயர்கள் செட்டியார் குடும்பங்களில் மிகுதியாக உண்டு.

# 3. கல்வெட்டுக்கள்

ஒருநாட்டின் பழமையை அங்குக் கிடைக்கும் கல்வெட்டுக்களிலிருந்து தான் அறிய இயலும் பரப்பளவில் சிறு பகுதியாக இருந்தாலும், செட்டிநாட்டில் ஏறத்தாழ 400 கல்வெட்டுக்கள் கிடைக்கின்றன.

செட்டி நாட்டில் கல்வெட்டுள்ள இடங்கள் குடுமியான் மலை நெரிஞ்சிக்குடி, தேனிமலை அ. சிறுவயல், குடகுமலை (பூங்குன்றம்), ராங்கியம் திருக்கோளக்குடி, கோனாப்பட்டு நெய்க்கோணம், திருக்குளம்பூர், விரையாச்சிலை சுண்டக்காடு-வேலங்குடி; பிள்ளையார்பட்டி, சாக்கோட்டை பூலாங்குறிச்சி ஆகியவை முக்கியமானவை.

பொன்னமராவதியிலும் பிரான்மலையிலும் குன்றக்குடியிலும் ஏராளமான கல்வெட்டுக்கள் உள்ளன. திருப்பத்தூரில் சிவன் கோவிலிலும் மாரியம்மன் கோவிலிலும் பெருமாள் கோவிலிலும் மொத்தம் 40 கல்வெட்டுக்கள் உள்ளன. பக்கத்திலுள்ள சிற்றூர்களின் பெயர்கள் இக்கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பெற்றுள்ளன. குன்றக்குடியிலிருந்து கீழைச்சிவற்பட்டிக்குச் செல்லும் வழியிலுள்ள நேமம் என்ற கிராமம் தேவாரம் ஓதுபவர்களுக்குக் கொடுக்கப் பெற்றதாக ஒரு கல்வெட்டு வாயிலாக அறிகிறோம்.

நற்சாந்துபட்டியை அடுத்த மலையக்கோவிலில் பல கல்வெட்டுக்கள் உள்ளன.

கொப்பனாபட்டியிலிருந்து மேற்கே மூன்று மைல் தொலைவிலுள்ள அம்மன் குறிச்சியில் பொன்னம்மாள் ஊருணிக்கரையில் ஒன்பதாம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களும் அங்குள்ள அம்மன் கோவிலில் மதுரையை ஆண்ட விசுவநாத நாயக்க மன்னரது காலத்தில் ஏற்பட்ட கல்வெட்டுகளும் உள்ளன. இவ்வூர் மருங்காபுரி பாளயக்காரர்களின் தலை நகராக இருந்தது என்பர்.

பிள்ளையார்பட்டியில் 11 கல்வெட்டுக்கள் உள்ளன. 1936-லேயே படி எடுக்கப்பெற்றும் இதுவரை கல்வெட்டுத் துறையினர் இவற்றை வெளியிடவில்லை. இக் கல்வெட்டுக்கள் யாவும், பிள்ளையார்பட்டி—தலவரலாறு என்று நூலில் சா. கணேசன் அவர்களால் விளக்கக் குறிப்புக்களுடன் பிற்சேர்க்கையில் கொடுக்கப் பெற்றுள்ளன.

## பூங்கொன்றை வேலங்குடிக் கல்வெட்டு

ஆதியில் அநுட்டித்துவத்தபடி,

பூங்கொன்றை வேலன்குடியில் நகரத்தார்
நிர்ணயஞ்செய்த,

### சாதி முறை நியாயங்கள்

விபரம்.

மாதா, பிதா, குரு, தெய்வம், பிராமண, குலதேவதை இவர்களை வணங்கிப் பூசிக்கிறது.

கோவில்களுக்கும் குருஸ்தானங்களுக்கும் உள்ள கிராமம் முதலியவற்றை நகரத்தார் விசாரணையில் வைத்துக் கொண்டு அவற்றால் வரும் ஊதியத்தை அந்த அந்தத் தருமங்களுக்கே உபயோகப்படுத்துகிறது.

சாதிமுறை நியாயங்களில் தவறி நடக்கிறதில்லை. நற்கருமங்களைச் செய்கிறது.

புருஷர்களும் பெண்டுகளும் தங்கள் தங்களுக்கு ஏற்பட்டிருக்கிற குருஸ்தானங்களிலேயே தீட்சாகிரியை முதலியவைகளை வழக்கப்படி செய்து கொள்ளுகிறது.

வேறொருவரிடத்தும் தீக்ஷாகிரியை முதலியதை செய்து கொள்ளக்கூடாது.

சிவமதத்திலேயே இருக்கிறது. அன்னிய மதங்களில் சேரக்கூடாது.

ஏககோத்திரத்தில் விவாகஞ் செய்து கொள்ளுகிற தில்லை. (கோத்திரமென்றது-கோவில்களும், உள்பிரிவுகளும்) சுயகோத்திரத்தில் புத்திரசுவீகாரம் செய்து கொள்ளுகிறது.

விவாகங்களில் மாப்பிள்ளை தொட்டுக் கொடுக்க நம்மவர்களில் ஒரு பெரியோர் வாழ்த்தித் திருமங்கிலியம் பூட்டுகிறது.

இரத்தினம், சுவர்ணம், பலசரக்கு முதலிய வியாபாரங்கள் செய்கிறது.

சீவவதையான வியாபாரங்கள் செய்கிறதில்லை. சத்திய சற்சனர்களிடத்தில் பணம் கொடுக்கல் வாங்கல் செய்கிறது.

தரும வட்டி வாங்குகிறது. குதிரை வியாபாரமும் வெற்றிலை முதலிய அழுகற்சரக்கு வியாபாரமும் செய்யக் கூடாது.

குடிவாரத்திற்கு உழுது பயிரிடுகிறதில்லை. ஊரில் அம்பல உம்பள நிலைமைபெற்று வேலைகள் பார்க்கக்கூடாது.

திருட்டு வியாபாரஞ் செய்யக்கூடாது. பிறன் மனைவியைச் சேரக்கூடாது. தாசிகளிடத்தில் கொடுக்கல் வாங்கல் செய்யக்கூடாது.

நகர முறைமை தவறினவர்களையும், ராசதெண்டனைக் குட்பட்டவர்களையும், சோரஞ்செய்தவர்களையும் சிநேகிக்கக் கூடாது.

கடலுக்கு மேற்கு, பிரான்மலைக்குக் கிழக்கு, வைகைக்கு வடக்கு, வெள்ளாற்றிற்குத் தெற்கு இந்நான்கெல்லைக் குட்பட்ட வேளாளர் பூமியாகிய இந்நாட்டிலேயே குடியிருக் கிறது.

வேறிடங்களிற் குடும்பத்தோடு போய்க் குடியிருத்தல் கூடாது.

பெண்டுகள் சுவாமி தெரிசனம் தீர்த்தயாத்திரைகளுக்குப் புருஷர்களோடு போய்வரவேண்டும். இதர காரியநிமித்தம் அன்னிய தேசங்களுக்குப் பெண்டுகள் போகிறதில்லை.

எந்த விஷயங்களிலும் முன் வழக்கப்படி நடந்து கொள்கிறது.

நகரக்கூட்டம் கோவில் வாசலிலாவது மடத்து வாசலிலாவது கூடிச் சாதிநியாயம் பேசுகிறது.

மேற்கண்ட ஒன்பது கோவில் நகரத்தார்க்கும் அவரவர்களுக்கு உரிய கோவில்களிலிருந்து சுவாமிக்குச் சாத்தின மாலையும், விபூதிப் பிரசாதமும் வந்துதான் கலியாணம் நடத்தல் வேண்டும்.

கலியாணம் நடக்கிற விவரத்தைப் பற்றிக் கோவில் வாசல்களில் தாம்பூலம் வைத்து முன்னமே தெரிவித்தல் வேண்டும்.

இரணியூர்க் கோவிலாரும், பிள்ளையார்பட்டிக் கோவிலாரும் சகோதரர்களின் வமிசத்தாராதலால் தம்முள் கலியாணஞ்செய்து கொள்ளக்கூடாது. மற்ற கோவில்களில் செய்து கொள்ளலாம்.

## 4. செட்டிநாட்டில் வழங்கும் தமிழ்ச் சொற்கள்

| | |
|---|---|
| அங்கிட்டு | — அங்கு. இட்டு என்பது அசை. (மலையாளத்தில் அங்கோட்டு) |
| அங்ஙனே | — அங்கே (அங்ஙனம்; ஙனம் = இடம்) |
| அசதி | — களைப்பு |
| அசத்துவிட்டான் | — மறந்துவிட்டான். அயர்ந்து விட்டான் என்பதன் மரூஉ |
| அட்டவணை | — *Bye-law* |
| அட்டி | — தடை, தடங்கல் |
| அடகுடிகந்தை | — அடைபிடி கந்தை |
| அடசல் | — குப்பை கூளம் |
| அடசி | — விலகி |
| அடம் | — பிடிவாதம், கூடுதலானவிலை |
| அடங்கலுக்குப் புறத்தி | — கட்டுப் படாதவன்; எல்லை மீறிய நிலை; (ஆவுடையார் கோவில் திருப்பணி அடங்கலுக்குப் புறத்தி என்பது ஒரு பழமொழி) |
| அடாபுடி | — வீணே பிறர்க்குத் தொல்லை தருதல். |
| அடிக்கட்டை | — Counterfoil |
| அடிச்சரக்கு | — நல்லசரக்கு; *Quality Goods* |
| அடுகெடையும் படுகெடையும் | — எந்த நேரமும் (வரையறை யின்றி) |
| அடுத்தாள் | — மேலாளுக்கு அடுத்த பதவி வகிப்பவர். |

| | |
|---|---|
| அடத்தி | — ஒருவர்க்கொருவர் பிரதிநிதி *Mutual Connection established among Bankers.* |
| அண்டிமென் | — *On demand Promissory Note* |
| அண்ணாவி | — உபாத்தியாயர், ஆசிரியர் |
| அத்தப் பரிகாரம் | — தற்காலிகமான முடிவு, பெயரளவுக்கு மருந்து, |
| | — முதல் சிகிச்சை (அற்றைப் பரிகாரம் என்பதன் திரிபு) |
| அத்தருதி | — 'அற்றறுதி' என்பதன் திரிபு |
| அதிர் (விலை அதிர்) | — கேட்டால் அதிர்ச்சி அடையக் கூடியது |
| அதைவினால் | 'அதவா' என்பது 'அல்லது' என்ற பொருளில் இலக்கியத்தில் வழங்குகிறது. |
| அந்தாசு | — ஏறத்தாழ |
| அரசு | — ஆண் குழந்தை (முத்தஅரசு, சின்ன அரசு, நடுஅரசு என்று தாய்மார் தம் மக்களைக் குறிப்பிடுவர்) |
| அருநாக் கொடி | — அரைஞாண் கொடி என்பதன் மரூஉ |
| அருவாமனை | — அரிவாள் மணை, அரிவாள்முனை |
| அருமாந்தபிள்ளை | — அருமருந்தன்ன பிள்ளை |
| அலக் கழிப்பது | — கேலி செய்வது; கிண்டல் செய்வது; இன்று நாளை என நாள் கடத்துவது (தென் ஆர்க்காடு); தொந்தரவு செய்வது (நெல்லை, யாழ்ப்பாணம்) |
| அல்கா | — கீழ்த்தரமான |
| அல்பனத்தி | — குண்டூசி |
| அவலை, சவலை | — அடுத்தடுத்துப் பிறந்த பால் மணம் மாறாப் பச்சிளங் குழந்தைகள் |

அனாமத்து — தனியானது

அனுவல் — அலுவல் (திருமணம், புதுமை — முதலிய சடங்குகள்)

ஆகச்சே — ஆகையால், ஆகவே, (ஆகச் செய்தே என்பதன் திரிபு) இச் சொல் பதிற்றுப்பத்தில் கையாளப் பெற்றிருக்கிறது.

ஆசாமிக்காரன் — வாடிக்கைக் காரன்; பற்று வரவு கணக்கு உள்ளவன்

ஆபாள சோபாளம் — சொத்து சுகங்கள்

ஆமக்கன் — ஆண் மகன்; கணவன்

ஆவலாதி — அவதூறு. இச்சொல் 'வழக்கு' 'புகார்' என்றபொருளில்நாஞ்சில் நாட்டில் வழங்குகிறது.

ஆவிச்சுக்கிறது — தன் நலத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளல்

ஆய்தல் — ஆராய்தல் (கீரை ஆய்தல்)

ஆள் — சோழநாட்டில் இகழ்ச்சியாகக் கூறுவது செட்டிநாட்டில்புகழ்ச்சியாகக் கூறுவது. (இப்போது அவரெல்லாம் அந்த ஊரில் ஒரு ஆள்)

ஆனாப்பிலே — ஆனாற்போல (அமையும் முறைப்படி இல்லாமல்)

ஆத்தாள் — தாயாரை ஆத்தா(ள்) என்று அழைப்பது செட்டி நாட்டில் பெரும்பாலான சாதிகளில் நிலவும்வழக்கம். பெரியதாயார் —பெரியாத்தா சின்னம்மா— சின்னத்தா. அப்பனைப் பெற்றவர்அப்பத்தா. சிவகங்கை நகரின் கிழக்கேயுள்ள தாமரை தவழ் தடாகம் ஆத்தா ஊரணி என்னும் பெயர் உடையது.

இக்கு வைத்துச் சொல்வது — பிடிப்பு வைத்துச் சொல்லுதல்

இங்கனே — இங்கே (மலையாளத்திலும்)

இங்கிட்டு — இங்கே (மலையாளத்திலும் வழங்குகிறது)

இஞ்சி — கஞ்சன்

இஞ்சே — பெண்களை விளித்துச்சொல்வது இங்கே என்பதன் மரூஉ.

இசைகுடிமானம் — இசைவுப் பிடிமானம் (திருமண இசைவு உடன்பாடு) திருமண வீட்டில் இது ஓலைச் சுவடியில் எழுதப்படும்.

இந்தா — இங்கேவா ;இதை வாங்கிக்கொள் என்னும் குறிப்பு மொழி

இரப்பாடு பட்டது — இரவு பகலாக உழைத்தது

பகல் பாடு பட்டது — (ரப்பாடுபட்டது ராச்சியத்திற்கு எட்டலை — பகப்பாடு பட்டது பட்டணத்திற்கு எட்டலை)

இருசி — இரக்கமில்லாதவன்

ஈடுற — நிறைய (ஈடற என்பதன் மரூஉ)

ஈமஞ்சாமம் — பொழுது வரையறையின்றி (ஈமம்—பகல், சாமம்—இரவு)

ஈரங்கி — *Hearing* என்பதன் திரிபு

ஈரட்டு — ஐயப்பாட்டுக்குஉரியது.ஈரெட்டு என்பதன் மரூஉ. இரண்டு ஒட்டு = ஈரெட்டு = உறுதி யின்மை

ஈரட்டு விற்பனை — *Sale Or Return*

உக்கிப் போவது — உக்கி போட்ட பின் காட்சி யளிப்பது போல (கவலையால்) இளைத்துப் போவது. தொல் காப்பியச் சூத்திரத்தில் இச் சொல் இடம் பெற்றுளது

| | |
|---|---|
| உக்கிராணம் | — *Kitchen Store* உணவுப் பொருள் பண்டசாலை |
| உண்டியக்கடை | — சிறு வங்கி |
| உண்டியல் | — 'டிராப்டு' இந்தச் சீட்டுக்கெனத் தனியே பணம் ஒதுக்கப்பட்டிருக்கும். 'உண்டு இயல்பு' என்னும் பொருள் உடையது. தவணை உண்டியல், தரிசன உண்டியல்என்றுஇருவகைஉண்டு தவணை உண்டியலுக்கு உரிய நாளுக்குப் பிறகு தான் பணம் கொடுக்கப்படும் அதுவரைவட்டி உண்டு, தரிசன உண்டியல் என்பது *Sight Draft* |
| உண்டனா | — நிறைய, அதிகம், நிரம்ப |
| உடந்தையில் | — அந்தச்சமயத்திலேயே, உடனடியாக |
| உத்தி | — யுக்தி (இலக்கணத்தில் உத்தி என்ற சொல்லே கையாளப் பட்டிருக்கிறது) |
| உதிரி | — எதிலும் சேராதது: உதிர்ந்தது; கதிரினின்றும் உதிர்ந்த நெல். |
| உருத்து | — உரியது, உரித்து, உரிமை |
| உவிளிடு | — *Black-Market* |
| ஊக்காலி | — ஊர்க்காலி |
| ஊத்தை | — அழுக்கு (ஊறி வருவது ஊத்தை) |
| ஊதாரி | — வரம்பு மீறிச் செலவு செய்பவன் (ஊது + எரி) |
| ஊர்ப்பட்ட | — ஏராளமான (ஊர்ப்பட்ட விலை) |
| ஊருணி | — குளம்; ஊரரரால் உண்ணப் படுவது. (ஊருணி நீர் நிறைந் தற்றே உலகவாம்) |

பேரறிவாளன் திரு—திருக்குறள்)

எக்கு — எனக்கு (எற்கு என இலக்கியத்தில் வழங்குகிறது)

எக்குத்தப்பு — அருமையாக, எதிர்பாராத விதமாக

எங்க வீட்டு — எனது (உடைய என்னும் பொருளில்) எங்கள் ஈட்டு சம்பாதிக்கப்பட்டது.

எசகேடு — இடையூறு (இசை கெடுவது)

எடபாடு — வழி, வாய்ப்பு, சொத்து(இடைப்படுகின்ற நிலை என்றபொருளில் நாஞ்சில் நாட்டில் இச்சொல் வழங்குகிறது)

எடுத்தேறி — இதற்கெனமுயன்றுஒருசெயலைச் செய்தல்

எடுத்துக்கிணு — எடுத்துக் கொண்டு (கொண்டு என்ற பொருளில் கிணுஎன்பது வழங்குகிறது)

எடுபிடி — பணிவிடை; முயற்சி

எதவாக — ஓரளவு (இதமாக)

எதவான குடும்பம் — நடு நிலையான பொருள் வசதியுடைய குடும்பம்

எம்முட்டு — எம் ஈட்டு,எனது(உடையஎன்னும் பொருளில்)

எம்பினை பண்ணுவது — இயம்பினாய்என்றுசான்றுகாட்டுவது (எண்பித்தல் என்றசொல் தொண்டை நாட்டில் வழங்குகிறது.)

எழவு — இழவு, நட்டம்

எனத்துட்டி — வராக்கடன், எனத்துஷ்டி (Dead Investment) (இனத்துட்டி என்பதன் மரூஉ)

எஸ் லெஸ் — செல்வாக்கு

ஏக்கறுதல் — (1)இளைத்து இடைதல்(2) ஆசையில் தாழ்தல் (3) விரும்புதல் (உடையார் முன்இல்லார் போல் ஏக்கற்றும் கற்றார் கடையரே கல்லாதவர்- குறள்)

ஏப்பை சாப்பை — எளிதில் ஏமாறுபவர்

ஏலக்கேள்வி — *Tender*

ஏவஞ்சம் — ஆகக் கூடி (ஆவரேஜ்) Average என்பது மரூஉ. (ஏ) அம்பு; நடு நிலை

ஏவம் — இன்னொருவருக் காகப் பரிந்து பேசுவது; குற்றம்.

ஏவல் — மந்திரத்தின் உதவியால் செய்வினை

ஐந்தொகை — ஐந்து+தொகை. விழு முதல், வரவு, செலவு, இருப்பு, ஆதாயம் என்னும் ஐவகை விவரம்காட்டும் கணக்கு

ஒக்கிடுவது — ஒக்க + இடுதல். ஒழுங்கு படுத்தல், பழுதுபார்த்தல்

ஒட்டற — ஒட்டு+அற. இறுதிவரை (ஒட்டற அடித்தல்)

ஒட்டுக்க — ஒட்டுக்கும், எல்லோரும்

ஒடனத்த — உடன் ஒத்த, சமமான.

ஒப்பினை — பாவனை, பெயருக்குச்செய்தல், மன ஈடுபாடு இல்லாமலிருத்தல், இச்சொல் ஒப்பனையின் திரிபாக இருக்கலாம்.

ஒப்பேறிப் போவான் — ஆள் உயிர் நீப்பான், எப்படியாவது காரியத்தைச் சாதித்துக் கொண்டு விடுவான்

ஒரு தலைக்கு நிற்கிறான் — சண்டைக்கு நிற்கிறான்;பிடிவாதமாக இருக்கிறான்

| | |
|---|---|
| ஒலுகு | — மிகுதியான பஞ்சு உள்ள சதுர வடிவான தலையணை. திண்டு |
| ஒள்ளத்தி | — கொஞ்சம் (ஒள் + அத்து) |
| ஒறண்டை | — வம்பு(உறழ்-பகை) |
| கசரத் | — உடற் பயிற்சி |
| கச்சடா | — கீழ்த்தரமான |
| கக்கர்வால் | — ஒத்து வாழ்வதற்கு ஊறு விளை |
| | — விக்கும் குணம் (அவன் கக்கர் |
| | — வால் பிடித்தவன்) |
| கங்காணம் | — நிலத்துக்கு உரியவர் கண்காண பயிர்களை அறுவடை செய்தல். |
| கஞ்சிப் பிராக்கு | — கஞ்சிப்பசையுள்ள "ப்ராக்" பனியன். |
| கடகம் | — ஓலைப்பெட்டி |
| கடகால் | — வாளி (கடகம் + கால்), பாதம் உள்ள குடம் (சென்னையில் இச் சொல் அடிப்படைக் கல்லைக் குறிக்கிறது) |
| கடவு | — இடம் (இலக்கிய வடிவம். கடை. மலையாளத்தில் கடவு என்பது படகுதங்குமிடத்தைக் குறிக்கும்) |
| கணக்கு | — 3 ஆண்டுக் காலத்தைக் குறிக்கும் சொல். ஆங்கிலத்தில் Decade, Century என்பன போன்று ஒரு கால அளவு |
| கண்மாய் | — கண்வாய் (வாவி, ஏரி) |
| கண்டாங்கி | — சேலை (கண் + தாங்கி) |
| கண் பொருதவில்லை | — உறங்கவில்லை (இமை பொருதா ...புறநானூறு, முத்தொள்ளாயிரம்) |
| கமையாய் | — பெருமையாய் |

| | |
|---|---|
| கம்புக்கூடு கக்கம் | — அக்குள் கமக்கட்டு கைகம்பு போலிருக்கிறது (அம்=அழகிய) அந்த உறுப்பு அமைப்பில் கூடு போன்றது. |
| கம்மல் | — மப்பும் மந்தாரமும் (மானம் கம்மலாக இருக்கிறது) மானம் மோடம் போட்டிருக் கிறது — என்று சேலம் மாவட்டத்தில் கூறுவர். |
| கம்மாய் | — கம்மாய; கம்+வாய். கம்—நீர் வாய்—இடம்; எனவே கண்மாய் என்பது நீருள்ள இடத்தைக் குறிக்கும். |
| கமாம்சு | - அலுவலகம் |
| கரச்சல் | — தொந்தரவு மனத்தைக்கரைப்பது |
| கருக்கல் | — காலைச் சூரியன் தோன்றுதற்கு முந்திய பொழுது |
| கருக்கடை | — ஆர்வம். |
| கருங்கை ஆள் | — வலிமை உடைய கையினர்; |
| | — தொழிலாளர். (மரங்கொல் தச்சரும் கருங்கைக் கொல்லரும், சிலம்பு இந்திர விழவூரெடுத்த காதை, வரி. 29) |
| கருமாயம் | — விலை மிகுதி |
| கல் மிசம் | — சந்தேகம்; மன அழுக்கு |
| கல்வெட்டான ஆள் | — பிடிவாதமான ஆள். கல்வெட்டிலுள்ள எழுத்துக்களைப்போலவே இவருடைய கருத்துக்களையும் மாற்ற இயலாது. |
| கல்லை பண்ணுவது | — கேலி செய்வது |
| கவாத்து | — உடற்பயிற்சி (சென்னையிலும் வழங்குகிறது) |
| கவுச்சி | — புலால்நாற்றம்(சென்னையில்மீன் கடையைக்கவுச்சிக்கடைஎன்பர்) |

| | |
|---|---|
| கவை | — தவணை, காலம் (2 மாதக் கவைக்கு) |
| கழுசறை | — கீழ்த்தரமான, கழிக்கப்பட்டவன் |
| கழுத்துரு | — கழுத்து உரு (திருமாங்கல்யத் தோடு கோக்கும் பலவகையான தங்க உருக்கள்) |

இச்சொல்லைப் பற்றி டாக்டர் சுப. அண்ணாமலை பின் வரும் விளக்கம் கூறுகிறார்.

''கழுத்துத் திரு'' என்பது அழகிய சொல்! அந்த மங்கல அணி அளவிற் பெரியது, பல உறுப்புக்களை உடையது. தமிழ் இலக்கியத்தில் பெரிய நகையை ''மதாணி'' என்பர். கழுத்துத் திரு ஒரு மதாணி ஆகும்.

மணமகன் வீட்டினர் கழுத்துத் திருவைத்தாம்பாளத்தில் (நகரத்தார் தட்டு என்று சொல்வதில்லை.) பரப்பி மாலையை வளையவைத்து, ஏந்திக்கொண்டு ஊர்வலமாக மணமகள் வீட்டிற்கு வருவர். மாப்பிள்ளை குதிரை மீதமர்ந்து வருவார். ஆனால் இந்த ஊர்வலத்தில் நடுநாயகம் மாப்பிள்ளை அல்ல கழுத்துத்திரு என்ற மங்கல அணியே.

இளங்கோவடிகள் இத்தகைய ஊர்வலத்தை, ''அகலுள் மங்கல அணி எழுந்தது'' என்று கூறுவார். இந்த ஊர்வலம்; மாப்பிள்ளையின் எழுச்சி இல்லையாம்; மங்கல அணியின் எழுச்சியாம். அவ்வாறானால், ஊர்வலத்தில் காண்பவர் கண்ணைக் கவரும் அளவு மங்கல அணி பெரிதாக இருந்திருக்க வேண்டும், கோவலன் நகரத்தார் மரபினன்என்பதற்கு இதுவும் ஒரு சான்று.

இன்று பேச்சு வழக்கில் கழுத்திறு என்று வழங்குகின்றனர் ஈறு என்றால் முடிவு. கழுத்தின் முடிவு. சாவு என்று பொருள் படும் ஆகவே இது சரியான சொல் அன்று. 'கழுத்துரு' என்று சிலர் சொல்கின்றனர். இந்த அணியில் உரு என்ற உறுப்பு அதிகமாக (17 உருக்கள் உண்டு) இருப்பதால் கழுத்துரு என்பது ஓரளவு பொருத்தமே. ஆனால் ''திருப்பூட்டுதல்'' என்ற சொல்லை நோக்கும்பொழுது கழுத்துத்திரு என்பதே சரியான சொல் என்று அறியலாம். 'திரு' என்பது இலக்குமி, கழுத்துத் திருவின் நடுநாயகமாக மாங்கல்யம் இருக்கும். லெட்சுமி

ஏத்தனம் என்பது இதன் உறுப்புக்களுள் ஒன்று ஆகும் நகையைப் பூண் என்பர். பூணைப் பூட்டுதல் என்பதே சரியான தொடர் ஆதலின் திருப்பூட்டுதல் என்பது நல்ல இலக்கிய வழக்கு. மாங்கல்ய தாரணம் என்பதற்கு இணையான பொருள் உடைய இத்தமிழ்ச் சொல் எவ்வளவு அழகாய் அமைந்துள்ளது. இதனை இன்று வரை நகரத்தார் மட்டுமே வழங்குகின்றனர்.

| | |
|---|---|
| காப்பு | — தங்கத்தால் செய்யப் பெற்ற வளையல் |
| காடையன் | — போக்கிரி (கடையன் என்பதன் மரூஉ) |
| காய்ச்சி ஊற்றுவது | — ஒரு குடும்பத்தில் சிறப்பான (இன்ப அல்லது துன்ப) நிகழ்ச்சி ஒன்று நிறைவேறியதையொட்டி அக்குடும்பத்தாரைப் பாராட்டவோ அல்லது அவர்களுக்கு ஆறுதல் கூறவோ அவர்களுடைய நெருங்கிய உறவினர் கொடுக்கும் விருந்து |
| காரியக்காரர் | — (Temple Trustee) கோயிற் காரியங்களைச் செய்பவர். |
| கைசுப் போடுவது | — தனக்காகப் பிறரை நியமித்தல். |
| கிட்ட | — சமீபம், அருகே, அண்மையில். |
| கிண்ணி | — சாப்பிடும் போது, காய்கறி வைக்கப் பயன்படுத்தும் தட்டு வட்டிலில் சோறும், கிண்ணியில் வியஞ்சனங்களும் வைத்து உண்பது செட்டி நாட்டு வழக்கம் |
| கிருத்துவம் | — குறும்பு |
| கிளை | — நெருக்கம், நட்பு |
| குட்டி | — வேலைக்காரச் சிறுமி |
| குதாவடை, குதாவிடை | — கெடுதல்: அலங்கோலம் |

குலவாழும் பிள்ளை — குலம் வாழும் பிள்ளை

குறளி — பொய் சொல்பவர், பொய்

கூட்டெழுத்து — இருவரும் கணவனும் மனைவியுமாக வாழவேண்டும் என்ற இறையருளி

கூடு — Cover Envelope

கூதறை — இழிந்த குணமுடையவர்.

கூதல் — குளிர்

கூறு — பகுதி, (சந்தையில், கத்தரிக்காய் கூறு என்ன விலை?)

கூர்கெட்டவன் — அறிவுக் கூர்மை கெட்டவன்; அறிவில்லாதவன்

வெயன் வெட்டி — வேயன் (சிறப்பு வியன் கோள்)

கெடக்கிறான் — (1) உடல்நலமின்றியிருக்கிறான் (2) அவனைப்பற்றிக் கவலையில்லை (அலட்சியப் பொருளில் வழங்குதல்). நின்றான் இருந்தான் கிடந்தான் தன் கேள் அலறச் சென்றான்–நாலடியார் லுள்

கெடதலை — நோய் (கிடைதலை)

கெத்து — செல்வாக்கு, பெருமதிப்பு, தந்திரம் என்னும் பொருளில் இலக்கியங்களில் வழங்கப் பெற்றிருக்கிறது.

கெடும்பு — கெடுதல்

கேதம் — இறப்பு, சாவு. இது உருது மொழிச்சொல் என்பர். கேது + அம் கேது என்பது துக்கத்தை குறிப்பது. சேதம் என்பதன் திரிபு.

கேணி — கிணறு

கேணப்பயல் — முட்டாள்

| | |
|---|---|
| கேர்ஸ் பண்ணுவது | — வாங்கவேண்டியதை வாங்கிக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து கணக்குகளை ஒழுங்கு செய்தல். |
| கேழ்வு | — கப்பல் கேழ்வு (*Fare*) |
| கேள்வி | — வரிவசூல் செய்யும் இடம் என்ற பொருளில் நாஞ்சில் நாட்டிலும் ஏலக்கேள்வி, அதாவது ஏலத்தில் கேட்கப்பட்ட தொகை என்ற பொருளில் செட்டி நாட்டிலும் வழங்குகிறது. சீட்டு ஆட்டத்தில் கேட்கப் படும் ''கேள்வி''யும் இவ்வாறு குறிப்பிடப் படுகிறது. |
| கொசறு | — சில்லறைக் கணக்கு, பின்னம், சிறுசிறு தொல்லைகள்; இது குசர் என்பதன் திரிபு. |
| கொசுவம் | — ஓரம் கொய்து உடுக்கப்பட்ட உடை. கொயசகம் என்பதன் மரூஉ. |
| கொடசல் | — கேலி |
| கொட்டம் | — கொற்றம் (நின் கொற்றம் வாழ்க) |
| கொட்டாரம் | — நெற்களஞ்சியம் |
| கொணட்டு | — இடையூறு செய்யும் குணம் பிணக்கு |
| கொண்டி | — போக்கிரி; அடங்காப் பிடாரி பரத்தை (ஆண்பால், பெண்பால் ஒன்றன்பால் மூன்றிலும் வழங்குவது) தொழுவம்(*pound*) |
| கொண்டு விற்பது | — கொள்ளுதல் வாங்குதல், எனவே வாங்கி விற்பது. (பொருளீட்டல்) |
| கோளாறு | — கெடுதல், பழுது |
| கோக்காலி | — கோக்கப்பட்ட கால்களை யுடைய ஒரு பொருள் *Furniture* |

| | |
|---|---|
| கோக்கு மாக்கு | — *Fraud* |
| கோசா | — *Succession Certificate For Estate Duty* |
| கோசுமாசு | — Cosmos என்பதன் திரிபு |
| கோஞ்சல் | — ஒரு மூலையில் வளைவாக இருப்பது. |
| கோணாமாணா | — வரன் முறையில்லாதது. |
| கைப்பெட்டி | — ரொக்க இருப்பு உள்ள பெட்டி (மரத்தால் செய்யப்பட்டது) |
| கைபழகுதல் | - வேலையில் பயிற்சி பெறுதல் *On probation, training* |
| கைரேகை | — இது கையெழுத்துக்குப் பதிலாக கைக்குறி நாட்டுவதைக் குறிக்கும். எனவே எழுதப் படிக்கத் தெரியாதவர்களைக் 'கைரேகைக் காரர்' என்று சொல்லுவர். |
| கைகாவல் | — அவசர உதவிக்கு (கைகாவலுக்கு இதையும் வைத்துக்கொள்) |
| சக்கப்பியான் | — மொழிபெயர்த்தல் (பர்மியச் சொல்) |
| சஞ்சாயம் | — நாட் சம்பளம் (குத்தகை என்பதற்கு எதிர் மறை) |
| சகட்டுக்கு | — சராசரிக்கு |
| சகட்டு மேனிக்கு | — மொத்தமாக |
| சகலாத்து | — (உருதுச் சொல்) ஒருவகைக் கம்பளித்துணி. விறலி விடுதூதில் கட்டிலின் மேற்கட்டி சகலாத்தென்றும் என வந்துள்ளது. |
| சல்லி | — பைசா |
| சம்பளம், சாமான் | — சம்பளமும், அதற்கு மேலதிகமாக Bonus தொகையும் |

| | |
|---|---|
| சத்தகம் | — ஓலைப்பெட்டி மிடையவும் தேங்காய் கீறவும் பயன்படும் கருவி. ஒருபுறம் கத்தியும் மறு புறம் முனையுமாக உளது. |
| சவங்கம் | — சோம்பல் |
| சவட்டிப்பிட்டான் | — துன்பப்படும்படி வேலை வாங்கிவிட்டான். |
| சவுடால் | — டாம்பீகம், பகட்டு, படாடோபம் |
| சதை களவாணி | — வேலை பார்க்காமல் உண்டு கொழுப்பவர் (உழைப்பாளர் சதையைத் திருடுபவர்) |
| சமையல் பொறை | — சமையல் கட்டு. |
| சவலப் பிள்ளை | — சிறுபிள்ளை (உடல்வலிமை யின்றி யிருக்கும் சிறுகுழந்தை) |
| சாடை | — மறைமுகமாகத் திட்டுவது, சைகை (சாக்கிட்டுப் பேசுதல் என்று சென்னையில் வழங்கு கிறது) |
| சித்தாள் | — கொத்து சித்து |
| சித்திராங்கி | — சித்திரப் பாங்காக வேலையைச் செய்பவள் (செம்மையாகச் செய்பவள் என்பது பொருள்) |
| சிராப்பொடி | — விறகுத்தூள் |
| சிலாங்கம் | — தாராளம், பணவசதி தடை யின்மை. |
| சிலாத்தி | சல்லடை (மாஅரிப்பு-நெல்லை) |
| சிறுவக்கட்டை | — அழகின்மை |
| சிறுவம் | — சொரூபம் |
| சீப்படுதல் | — மலிந்து கிடப்பது (சீ இழிவுத் தன்மையைக் குறிப்பது) |
| சீடி | — மாடி, மேல்வீடு (சீடிப்படி- மாடிப்படி) |

| | | |
|---|---|---|
| சீனாம்பரம் | — | அபூர்வம், ஓவியம் (அது என்ன சீனாம்பரமோ?) |
| சீம்பால் | — | கன்று ஈன்ற ஒரு வாரத்திற்கு மட்டும், பசு தரும் சுவைமிகுந்த பால். |
| சுருக்கா | — | சீக்கிரமாக |
| சுட்டி | — | சேட்டை செய்பவன் (அவன் படுசுட்டி) |
| சுமார் | — | நடுத்தரமான |
| சுண்டு போடுவது | — | கிச்சுப் போடுவது |
| சுணக்கம் | — | தாமதம் |
| சுணை | — | சொரணை, உணர்ச்சி |
| சூடிக்கை | — | சுறுசுறுப்பு (சூட்டிகை) |
| சூட்டா | — | கள்ளத்தனமான (சூட்டாநகை, சூட்டா வேலை, போலித் தங்க நகை) |
| சூதானம் | — | சுற்றுச் சுவர், பாதுகாப்பு. |
| செல் | — | கடன், வாங்கிய கடனுக்குச் செலுத்திய தொகை, கடன் செலுத்தியதற்குப் பதிரத்தில் எழுதும் குறிப்பு |
| சேகரம் | — | ஒன்றோடொன்று தொடர்புடையது. |
| சேகு | — | தலைமயிர் |
| சேப்பு | — | சட்டைப்பை, 'ஜேப்' |
| சேவர | — | வாடகை |
| சொல் செல் | — | செல்வாக்கு |
| சொளகு | — | முறம் (சங்க இலக்கியத்தில் 'சுளகு' என்று வரும் சொல்லின் மருஉ) |
| சொன்னாப்போல | — | ஏற்கெனவே தாங்கள் சொன்னதை உறுதி செய்கிறேன் |

சோமாத்தி — உதவி

சேமாறிவிட்டான் — நம்பிக்கை மோசம் செய்து விட்டான்; திருடிவிட்டான்.

சௌக்கியம் — உடல் சௌக்கியம் (நலம்) விலை சௌக்கியம் (மலிவு).

டலியா — வட்ட வடிவமான தூக்குச்சட்டி (டோலி என்பதன் மரூஉ)

டேரா — கோட்டை; கூடாரம்; முகாம்

தகான் பண்ணுவது நிருவகிப்பது, சமாளிப்பது

தக்குத்தகான் வரையறையின்றி (Indiscriminate)

தச்சு செய்தல் — கட்டிடம் கட்டும்போது தச்சர் மரவேலை தொடங்குதல்.

தடுமன் — நீர்க்கோவை, யாழ்ப்பாணத்திலும் இச்சொல் வழங்குகிறது.

தட்டுக் கெடுவது — சீர் கெடுவது

தபால் — தடவை (போன தபால் இவ்வூருக்கு வந்தபோது தங்களைக் காண இயலவில்லை)

தப்பிலி — தவறான செயல்களில் ஈடுபடுபவர்

தண்ணீர்ப் புரளி — Catchment area.

தர்ஸ்மால் பண்ணுதல் — மொழி பெயர்த்துக் கூறல் டிரான்ஸ்லேசன் என்பதன் மரூஉ

தரிசன உண்டியல் — பார்த்த அளவில் பணம் செலுத்த வேண்டிய மாற்றுச் சீட்டு; (திராப்பு) Draft.

தலைப்பில் வாங்கினது — முதன் முறையாக வாங்கியது (பல நாட் சென்று பலரோடு பழகினும் தலைநாட் போன்ற விருப்பினள்மாதோ)

தள்ளி வைப்பது — (1) ஒத்தி வைப்பது (2) சமூகத்திலிருந்து விலக்கி வைப்பது

தன்து மாறல் பணம் — உரியவர்களுக்கு மட்டுமே கொடுக்கப்பட வேண்டியபணம்

தன்மையான ஆள் — நம்பிக்கையான ஆள், நெருங்கிப் பழகுபவர்.

தன்னத்துப் போவது — நட்டமின்றி (லாபமும் இன்றி) முடிவது.

தன்னப் பேரணி — தன்னையே பேணுபவன்; சுய நலமி

தாஞ்சா — ரயில் அலுவலப் பொருள்களைப் பெற்றதற்குக் கொடுக்கும் ரசீது (R. R.)

தாண் — காய்கறித்துண்டு

தான் — நீ

திங்க — தின்னும் பொருள் (வினைச் சொல் பெயர்ச் சொல் ஆயிற்று)

திட்டி — திருஷ்டி

திருப்பூட்டுதல் — இலக்குமியை வீட்டுக்குக் கொண்டு வருவது, மணமகள் கழுத்தில் தாலிகட்டுவது (நும் சுற்றத்தார் முன்னம் நீ திருப் பூட்டியது — தஞ்சை வாணன் கோவை. 359 உரை)

தினராசி — ஒரு நாளைக்கு 100 ரூபாய்க்கு வட்டி எவ்வளவு என்பதை நுணுக்கமாகக் கணக்கிட்ட ஈவுத் தொகை

துட்டு — 4 பைசா அல்லது 2 நயா பைசா (செப்பு நாணயம் முன்னர் இருந்தது)

துப்பட்டி — போர்வை, கம்பளம்

துப்புக் கெட்டவன் — திறமையில்லாதவன்.

| | |
|---|---|
| துப்புரவு | — துறந்தார்க்கு துப்புரவு என்று குறள் 263 இல் கையாளப்பெற்ற பொருளில் இச்சொல் வழங்க வில்லை. செட்டிநாட்டில், இச் சொல்தூய்மை செய்தல், காலி ஆக்குவது அழுக்கைப் போக்கு வது என்ற பொருளில் வழங்கி வருகிறது. |
| துராவை | — சீழ்த்தரமான |
| துருசு | — விரைவு |
| துல்லிதம் | — கறார்; சரியான |
| துறட்டி | — காய் முதலிய பறிக்கும் துறட்டுக் கோல் |
| துறவல் | — துப்பு (*Clue*) |
| தூப்பாக்குழி | — தூம்புஆம் + குழி (நீர் விழும் தூம்பு) |
| தெகிட்டு | — தகராறு (கருத்து வேறுபாடு) |
| தெற்கு வடக்காக இழுத்து விட்டான் :- | — பலவாறகத் துன்பப்படுத்தி விட்டான். |
| தேட்டஎன் | — பயனற்றவன் என்ற பொருளில் அமங்கலத்தை மங்கல வழக்காக வழங்குவர். தேட்டாளன்காயல் துரை சீதக்காதி-(தனிப்பாடல்) மிகுதியாகப் பொருளீட்டுபவன் என்றும் பொருள்படும். |
| தேவட்டை | — தேய்ந்த நாணயம். தேய்வு + அடை = தேவட்டைஇப்பொழுது செல்லாத நாணயத்தைக் குறிக் கிறது. |
| தேவிலை | — தாழ்வு இல்லை=, =தேவிலை (*Not Bad*) |

தொக்கடி — மலிவு, குறைந்த விலைக்கு வாங்குதல்

தொக்கு — மட்டம் (நான்மட்டும்தொக்கா) ஒருவகைச் சட்டினி, உ. பருப்பும் கொத்தமல்லியும் சேர்ந்த தொகையல்

தொலைக்குப்போவது — பொருளீட்டுவதற்காக நெடுந் தொலைவிலுள்ள கடல் கடந்த நாடுகளுக்குச் செல்லுவது.

தொறட்டு — வம்பு; வழக்கு

நகாசு — பளபளப்பான மேல்வேலைப் பூச்சு.

நக்கல் — கேலி

நடப்பாக — இயற்கையாக, இயல்பாகவே நடந்து கொள்ளுகிற முறை

நடப்பு — (சென்னையில் தாலியறுக்கும் நாள். யாழ்ப்பாணத்தில் கர்வமாகப் பண்ணுகிறான் என்று பொருள்) செட்டி நாட்டில்: நிகழ்ச்சிமுறை, பழக்க வழக்கம் இன்றைய நிலை, என்பன பொருள்.

நடப்புக்காரியக்காரர் — *Trustee in-Charge*

நடப்புவட்டி — பேங்ரேட் (*Bank Rate*) போலச் செட்டியார்கள் தங்களுக்குள் வைத்துக்கொள்ளும் ஒருவட்டி விகிதம்.

நடையன் — செருப்பு; நடத்தலாகிய தொழிலுக்குக் கருவியாக இருப்பது.

நாட்டாமுட்டி — சில்லறைவேலை (தரக் குறைவான)

நட்டமே நிற்றல் — ஒருவேலையும் செய்யாது வீணே நின்று கொண்டிருத்தல்

| | |
|---|---|
| நப்பாசை | — பாசம், பேராசை |
| நமத்துவிட்டான் | — ஓயாத தொல்லை தந்தான் |
| நரிவிரி | — கால் இரத்த ஓட்டமின்றி இருப்பது (நரிவெருஉ)* |
| நாமரதா | — போக்கிரி (கெட்ட நாமரதா) |
| நருவிசு | — கண்டிப்பு, கறார்; சிக்கனம்; நேர்மை |
| நாக்குறிப்பது | — நாள்குறிப்பது |
| நாண்டுக்கிணு சாவது | — ஞான்று கொண்டு சாதல்; கயிற்றில் தொங்கிக்கொண்டு இறப்பது (சீவகசிந்தாமணி) நாணிட்டுக் கொண்டு- நாண்-கயிறு. |
| நிரவல் | — சராசரி |
| நிலந்தெளிய | — விடிவதற்குச் சிறிதுமுன் (ரேகை தெரிகிற நேரம் என்று இதைத் தஞ்சையில் சொல்லுவர்.) |
| நிலைகுத்திப் பேச்சு | — ஓர் இடத்தில் வந்து நிலைத்து நின்றது. சிறப்பாகத் தேரைக் குறிக்கும், |
| நீக்குப்போக்கு | நலந்தீங்குகளை ஆராயும்திறன். |
| நீவுதல் | தடவிக்கொடுத்தல். |
| நூலாம்படை | — ஒருவகைத்தூசி |
| நெடுநிலுவைக்கடன் | — மெதுவாக வசூலிக்கும் கடன். |
| நெளிவு சுழிவு | — சூழ்ச்சி. |
| நொண்ணன் | — உன் அண்ணன். |
| நோஞ்சல் | — வலுவில்லாதவன், நோய்தல் |
| பணம் | — பொருள்; 2 அணாவையும் குறிக்கும். முன்னர் பணம் வெள்ளி நாணயமாக இருந்தது. |

---

*வெய்தாய் நறுவீதாய் வேண்டளவுந்தின் பதால்
நெய்தான் அளாவி நிறைமிட்டுப்-பொய்யே
அடகென்று சொல்லி அமுதத்தை இட்டார்;
கடகஞ்செறியாதோகைக்கு? — தனிப்பாடல்

| | | |
|---|---|---|
| பசக் | — | உடனே |
| படி | — | ¼படி (முழுப்படியை, பட்டணம் படி அல்லது பெரியபடி என்பர்.) |
| படிமானம் | — | கிழ்ப்படிதல், குறைவது (காய்ச்சல் படிமானமாக இருக்கிறது). |
| படைக்கிற நாச்சியார், படைக்கிறவன் | — | ஒரு குடியில் தோன்றிய முன்னோரை அவருடைய வழித் தோன்றல்கள் வழிபடும்சடங்கை படைப்பு என்பர். படைக்கப் படும் பெண்பாலார் படைக்கிற நாச்சியார் என்று சொல்லப் படுவர். |
| பட்டுக் கிடப்பான் | — | (படுதல்=சாதல்) போரில் இறந்து கிடத்தல் |
| பதவல் | — | செடி கொடி |
| பதவிசு | — | மிகக் கவனமாக |
| பதில் வெட்டு | — | Duplicate, போலி |
| பம்முவது | — | மறைவது;மறைப்பது;தயங்குவது |
| பராபரிப்பேச்சு | — | வதந்தி |
| பழங்காய் | — | வாழைப்பழம்+தேங்காய் |
| பன்னா | — | நடையன், செருப்பு |
| பால் தாள் | — | *Fools cap paper; Creamlaid Paper* |
| பின்னீடு | — | பிற்காலத்தில் |
| பிடிபாடு | — | பிடிதரம், தஸ்தாவேஜு Record |
| பிருசுபிடி | — | கெஞ்சுவது |
| பிலால் | — | புலால், இறைச்சி. (புலால் ஊற்றிக் கொள்வது) |
| பீலி | — | Pipe பிலிற்றுதல். ''யானைமதம் பிலிற்றும்'' |

புள்ளி — திருமணமானவர்கள், ஆள்கட்டு தலைக்கட்டு

புறந்தரக்குடி — பிறந்த இடத்துக் கோடி, பிறந்த தலைக்குடி

பெட்டியடி — பணம் புழங்கும் இடம், அலுவலகம்

பெரியதனம் பேசுவது — பெருஞ் செல்வர் பேசுவது போலப்பேசுவது (எளியோரைத் திட்டுதல்; அவர் மனம் புண்படு மாறு கடுமையாகக் கோபித்தல்)

பேத்தல் — பிதற்றுவது

பொக்குனு, பொட்டுனு — 'விரைந்து செயலாற்று' என்பதைக் குறிப்பது 'பொருக் கென' என்பதன் மருஉ 'புண்டரீகக்கண் புரவலன். பெருக்கென எழுந்து' கம்பராமாயணம் மந்திரப்படலம்

பொசகெட்ட (பெசங்கட்டை) — பசை கெட்டது (பொருள் இழந் தவர்) பலக் குறைவு; ஏளனமாக நடந்து கொள்வது, பிறர் பொருளுக்கு ஆசைப்படுதல்

பொனணை — பொறுப்பு, பிணயம் (நானா பொனணை?)

பொடி நடையாக போய் வருக — போவதும் வருவதுமாகச்செல்லு தல், விரைந்து சென்று வருவது

பொருத்தம் போடுவது — To enter into a Contract (அரசன் குரோஸ் பீல்டு எஸ்டேட்டுக்கு அரிசி சப்ளைக்கு பொருத்தம் போட்டிருக்கிறான்)

பொல்லாதவன் — கெட்டிக்காரன்; கடுமையானவன்

போகணி — குவளை

போக்கு — நட்டம்

போர் கேட்பது — (பிள்ளைப்) பேறு கேட்பது

மகார் — சிறுவர்
மகிற ஊத்து — நிறையும்வரை ஊற்று
மக்கர் — "ரிப்பேர்", சீர்கேடடைந்தது. இடக்கு
மச்கு வைப்பது — ஏமாற்றுதல், நம்பிக்கை மோசம் செய்தல்
மசண்டை — விடிவதற்குமுந்தியசிறுபொழுது; ஒளி மறைந்திருக்கும் போது
மடுவு — கெடுதல் செய்தல் (மடுவு பண்ண காத்திருந்த மாத்தான் தெரியலையே கொடுமை பண்ண காத்திருந்த கோட்டான் தெரியலையே என்பது ஓர் ஒப்பாரி) மடுவு-ஏமாற்று (மடுவு பேச்சு, மடுவுகாரி)
மட்டுப்படுதல் — விளங்குதல்
மணவறை — மண அறை
மந்தை — திறந்த வெளி
மம்மாட்டி — மண்வெட்டி
மய்யம் — மத்திமம், நடு
மலரணை — பிறரை ஏமாற்றுவதற்காகச் சொத்தை இன்னொருவர் பெயருக்கு எழுதி வைப்பது
மல்லுக்கட்டு — கட்டாயப்படுத்துவது
மவுசு — கவர்ச்சி
மழைச்சுத்தா — மழைக் காலத்தில் பயன்படுத்தப்படும் செருப்பு
மறுக்கா — மறுகால், மற்றொரு முறை
மறுக்கொளி — பயித்தியம், மறுக்கொண்டவன்
மாகூல் — மகசூல்
மாம்பு வாசனை — பழமை நட்பு; பெயரளவுக்கு
மால் — வழி, முடிவு
மாறல் — வாயிலாக, (யார் மாறலாக உனக்கு வேலை கிடைத்தது.)

மானம்பு — மஹறார் நோன்பு (மகா அரன்ன மாதி) - சிறுபாணாற்றுப்படை

மாஸ் — பந்தயம்

மிதப்பு — பணவசதி

முக்கோசு — தொடக்கம்

முடியவில்லை — இயலவில்லை; உடல்நலமில்லை

முறி — ஓலையில் எழுதும் உடன்பாடு வாதி பிரதிவாதிகள் பஞ்சாயத் தாரிடம் முறிஎழுதிக் கொடுத்து விட்டால், உயர்நீதி மன்றம்கூட பஞ்சாயத்தார் தீர்ப்பை மாற்ற முடியாது.

முல்லை — இயல்பு

மூதலிக்கிறது — நிரூபித்தல், ருசுப் படுத்துவது

மெத்தை — படுக்கை (மாடி என்னும் பொரு ளில் இச்சொல் சென்னை முதலிய இடங்களில் பயன் படுத்தப் பட்டு வருகிறது.)

மெது நிலுவை — மெல்ல வசூலாகக் கூடிய கடன்

மெனக்கெட்டு — வலிந்து; பிறிதொரு அலுவலை யும் கவனியாது, ஒன்றிலேயே கண்ணுங் கருத்துமாக இருத்தல் (வினை கெட்டு என்பதன் மரூஉ)

மேப்புசாப்பு — பெயரளவுக்கு

மேலாள் — Agent

மேலைக்கு — அடுத்த ஆண்டில்

மேல் — உடல் (மேலுக்கு என்ன? மேல் சுடுகிறதே?)

மேன்கோப்பு — தரைக்கு மேலுள்ளது கட்டிடம் மட்டும்

மைமல் — கதிரவன் தோன்றுமுன்னே

மக்காநத்து — மறுநாள்

| | |
|---|---|
| மொல்லமாறி | — முல்லை மாறி (முல்லை கற்புக்கு உரிய பூ என்று அகத்திணை கூறும்.) கற்பிழந்த பெண்; நாணயமில்லாத வணிகர். |
| மோந்தாயம் | — மேல் தளமில்லாதது |
| யாது | — நினைவு (இது உருதுச் சொல்) |
| யோயோ | — யோக்கியன் (பர்மியச் சொல்) |
| ராப்தா | — பழக்கம் |
| ரெட்டு | — விரிப்பு (மெத்தை ரெட்டு); இரட்டு என்பதன் மரூஉ |
| ரோக்கா | — குறிப்பு (*memo*) |
| லக்கு | — இலக்கு, இடம் |
| லாச்சாறு | — தொல்லை; உதவியின்றி வருந்துதல் |
| லொங்குசு | — கனமில்லாதது |
| லேசுபாசு | — சாதாரணமாக, ஓரளவாக |
| லேஞ்சு | — *Towel* |
| வக்கினை | — விமரிசனம்; எழுதும் முறை: உபசாரச் சொல், வக்கணை |
| வகை | — செட்டியார் சமூகத்தினருள் ஒரே பங்காளிகளுக்குள் உள்ள பிரிவு; சான்று க. பெ. வகை, பழ. பெரி. வகை (வகுக்கப் படுவது வகை) |
| வகையாக இருக்கிறான் | — இளைப்பாறி விட்டான்; செல்வமாக இருக்கிறான். |
| வத்தை | — குத்தகைக்கு எடுப்பது, *(to take Some Property on lease)* |
| வட்டி | — இச்சொல் சாப்பாட்டுத் தட்டைக் குறிக்கும். வட்டில் என்பதன் மரூஉ. (பொன்வட்டில் பிடித்து—திவ் பெருமாள் 4, 3) |

வந்திளா — (இப்போது தான்) வந்தீர்களா? என்பதன் மரூஉ. வாருங்கள் என்பது இதன் பொருள்.

வறளி — பிடிவாதக்காரன்

வராகன் — ரூ 3. 50 ரூ. 3500 (இடனறிந்து பொருள் கொள்க) இவ்வாறே பெரிய ரூபாய் என்பது ஓராயிர ரூபாயையும், ரூபாய் என்பது ஒரு ரூபாயையும் ஒரு லட்சம் ரூபாயையும் குறிக்கும்.

வயிராவி — கோவில் வேலையாட்களில் ஒருவன்; தன் உயிரைக் கொடுத்தேனும் கோயிலுக்குச் சிறு நஷ்டமும் வராமல் காப்பவன்.

வர்த்தமான லெட்டர் — தொழில் துறையிலிருந்து விடுதலைபெற்ற பின்னர், தம் பொறுப்புப் பற்றித் தம்மைக் கட்டுப்படுத்தி எழுதிக் கொடுக்கும் கடிதம்.

வல்லிசு — கறார்

வழுவல், வழுவட்டை — பொருள் நிலையிலும் நாணயத்திலும் தேய்ந்தவன், கொடுக்கல் வாங்கலில் நேர்மையற்றவன்.

வாசி — அனுகூலம்

வாவரசி — கணவன் உயிரோடிருக்கும் போதே உயிர் நீக்கும் பேறு பெற்ற பெண்; வாழ்வரசி

வாஞ்சாலை — எளிதில் நண்பர்களைச் சேர்க்கும் ஆற்றலுடையவன்; முகக் களையுடையவன்; வாய்ச்சாலம் உடையவன்.

| | |
|---|---|
| விழுக்காடு | — பங்கு, வீதம் |
| வங்கொறடு | — பொருள் வசதியில்லாதவன்; தரங்கெட்டவன் |
| வாய்ச்சான் போச்சான் | — 50/50 Chance |
| விடுதி | -- Guest House |
| விதரணை | -- பகுத்தறிவு, உலகியல் அனுபவம் |
| விளக்குமாறு | -- துடைப்பம் |
| வீதி | — கடைவீதி(என் தாயார்வீதிக்குப் போயிருக்கிறாள்.) |
| வெஞ்சனம் | — இது சமைக்கப் பெற்ற காய் கறியைக் குறிக்கும். வியஞ்சனம் என்பதன் மருஉ. (இச்சொல்லை உ. வே. சாமிநாத ஐயரவர்கள் 'என் சரிதை' யில்கையாண்டிருக்கிறார்கள்.) |
| வெண்ணலை | — (ஈடு, ஒத்தி போன்ற ஆதரவு இல்லாத) கடன். Clean Loan வெண் நிலுவை என்பதன் திரிபு |
| வெளம் | — கோபம் |
| வெள்ளனா | — அதிகாலையில், விரைவில் வெள் என = அருணோதயம் (*When the twilight is just*) *Visible* |
| வெள்ளி | — மலேசிய நாணயம், டாலர் |

இச்சொற்களுள் சில ஏனைய மாவட்டங்களிலும் வழங்கக்கூடும்! ஆம், செட்டிநாடு, தமிழகத்தின் ஒரு பகுதி தானே!

''பட்டது'' என்பது பட்டுப்போய் விட்டது என்ற பொருளைத் தருவதால் நகரத்தார் அதை ''பெற்றது'' என்பர். அதைப் போல 'போகிறேன்' என்பதை 'போய் வருகிறேன்' என்று கூறுவர். 'விறகு' என்பது பிணத்தை எரிக்கப் பயன்படுவதால் அதை 'எரிதுரும்பு' என்றே குறிப்பிடுவர்.

'வெண்ணெய்' என்ற சொல் விகாரமாக இருப்பதால் அதை 'மிதப்பு'என்பர். 'தட்டு' என்றசொல்லைத் 'தாம்பாளம்' என்று கூறுவர். 'விளக்கை அணை' என்று அவர்கள் கூறுவதில்லை; அதற்குப் பதிலாக 'விளக்கை மலையேற்று'. 'குளிரவை' அல்லது 'நல்லாவை' என்பர். 'தாலிச் சங்கிலி அறுந்து போய்விட்டது'. என்று கூறுவதில்லை; 'தாலிச் சங்கிலி பெருகிவிட்டது' என்றே கூறுகிறார்கள். 'குழந்தையைத் தூக்கிக் கொண்டு வா' என்று கூறுவதில்லை; 'குழந்தையை எடுத்துக்கொண்டு வா' என்றே கூறுவர். ஒருவர் வெளியூருக்குப் புறப்பட்டுச் செல்லும்போது 'எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்பதில்லை; 'ரொம்பத் தூரமோ!' என்றுதான் கேட்பார்கள்.

செட்டிநாட்டில்

| | | |
|---|---|---|
| கண்தாங்கி | என்பதனை | கண்டாங்கி |
| வியஞ்சனத்தை | ,, | வெஞ்சனம், |
| தாழ்வில் | ,, | தேவிலை |
| உரித்து | ,, | 'உருத்து' |
| முல்லை மாறி | ,, | மொல்லமாறி |

என்றும் வழங்குவர்.

வாழ்வரசியின் மரூஉ வாவரசி என்பது. ஆண்மகன் 'ஆமக்கன்' ஆயிற்று. இலக்கியச் சொற்கள் பல நாட்டுவழக்கில் மருவி வழங்குகின்றன.

'புண்டரீகக் கண் புரவலன் பொருக்கென எழுந்து' எனக் கம்பன் நவில்வான். இன்று பொருக்கு என்பது பொக்குணு என்று மாறி வழங்குகிறது.

# 5. நகரக் கோவில்களின் விவரம்

## 1. இளையாற்றக்குடிக் கோவில்

உட்பிரிவுகள்

கல்வாசனாட்டில் இளையாற்றக் குடியான
குலசேகர புரத்தில்

1. ஒக்கூருடையார்
2. அரும்பாற் கிளையாரான பட்டணசாமியரர்
3. பெருமருதூருடையார்
4. கழனிவாசக்குடியார்
5. கிங்கிணிக் கூருடையார்
6. பேரசெந்தூருடையார்
7. சிறுசேத்தூருடையார்

## 2. மாற்றூர்க் கோவில்

உட்பிரிவுகள்

கேரளசிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில்
மாற்றூரான வீரபாண்டியபுரத்தில்

1. உறையூருடையார்
2. அரும்பாக்கூருடையார்
3. மணலூருடையார்
4. மண்ணூருடையார்
5. கண்ணூருடையார்
6. கருப்பூருடையார்
7. குளத்தூருடையார்

## 3. வயிரவன் கோவில்

உட்பிரிவுகள்

கேரளசிங்க வளநாடாகிய ஏழகப் பெருந்திருவான
வீரபாண்டியபுரத்தில்

1. சிறுகுளத்தூருடையார்
2. கழனிவாசலுடையார்
3. மருதேந்திர புரமுடையார்

4. இரணிக் கோவில்

கல்வாசனாட்டில் இளையாற்றக்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான ராசநாராயணபுரத்தில்

1. இரணியூர்த் திருவேட்பூருடையார்

5. பிள்ளையார்பட்டிக் கோவில்

கல்வாசனாட்டில் இளையாற்றக் குடியான குலசேகரத்தில் இரணியூர் மருதங்குடியான ராசநாராயணபுரத்தில்

1. பிள்ளையார்பட்டியான திருவேட்பூருடையார்

6. நேமங் கோவில்

கேரளசிங்கவளநாட்டில் நேமமாகிய குலசேகரபுரத்தில் தேனாறு பாயும்

1. இளநலமுடையார்

7. இலுப்பைக்குடிக் கோயில்

கேரளசிங்கவளநாடாகிய பிரம்பூர் நாட்டில் இலுப்பைக் குடியான புகழிடங்கொடுத்த பட்டணத்தில்

1. சூடாமணிபுரமுடையார்

8. சூரைக்குடிக் கோயில்

கேரளசிங்கவளநாட்டில் சூரைக்குடியான தேசிகநாராயணபுரத்தில்

1. புகழ்வேண்டிய பாக்கமுடையார்

9. வேலங்குடிக் கோயில்

கேரளசிங்கவளநாடாகிய பாலையூர் நாட்டில் வேலங்குடியான தேசிகநாராயணபுரத்தில்

1. கழனி நல்லூருடையார்

## 6. தமிழ் இலக்கங்கள்

செட்டியார்கள் வாணிகத்தில் தேர்ந்தவர். ஆதலின், அவர்கள் எண் எழுத்து இரண்டையும் நன்கு பயின்றிருத்தலில் வியப்பில்லை. ஒன்றுக்குக் கீழ்ப்பட்ட சிற்றெண்களை அவர்கள் பயன்படுத்தி வருவது அவர்களது கணித நூற் புலமைக்குச் சான்றாகும். இந்த இலக்கங்களின் பெயரையும் அவை குறிக்கும் தசாமிசத்தையும் கீழே தந்திருக்கிறோம்.

| எழுத்தில் | | பின்னம் | தசாமிசம் |
|---|---|---|---|
| இம்மி | — | 1/3200 | .00003125 |
| முந்திரி | — | 1/320 | .003125 |
| அரைக்காணி | — | 1/160 | .006250 |
| காணி | — | 1/80 | .012500 |
| அரைமா | — | 1/40 | .025000 |
| முக்காணி | — | 1/30 | .037500 |
| ஒருமா | — | 1/20 | .050000 |
| இரண்டுமா | — | 1/10 | .100000 |
| மூன்றுமா | — | 3/20 | .150000 |
| நாலும்மா | — | 1/5 | .200000 |
| வீசம் | — | 1/16 | .625 |
| அரைக்கால் | — | 1/8 | .1250 |
| மூணு வீசம் | — | 3/16 | .1875 |
| கால் | — | 1/4 | .2500 |
| காலே வீசம் | — | 5/16 | .3125 |
| காலே அரைக்கால் | — | 3/8 | .3750 |
| காலே மூணுவீசம் | — | 7/16 | .4375 |
| அரை | — | 1/2 | .5000 |
| அரையே வீசம் | — | 9/16 | .5625 |
| அரையே அரைக்கால் | — | 5/8 | .6250 |
| அரையே மூணுவீசம் | — | 11/16 | .6875 |
| முக்கால் | — | 3/4 | .7500 |
| முக்காலே வீசம் | — | 13/16 | .8125 |
| முக்காலே அரைக்கால் | — | 7/8 | .8750 |
| முக்காலே மூணுவீசம் | — | 15/16 | .9375 |

குறிப்பு : தசாமிசங்களில் கண்டிருக்கும் எண்களுக்குப்பிந்தி வரும் (வலது பக்கத்திலிருக்கும்) சுன்னங்களுக்குக் கணக்கில்லை (*No Value*). உதாரணமாக நாலும் மாவில் கண்டிருக்கும் எண்ணாகிய தசாமிசம் .200000, வழக்கத்தில் எழுதுங்காலத்தில் '2 என்று தான் எழுதப்படும். மேற்குறித்திருக்கும் சுன்னங்கள் ஒவ்வொரு லக்கத்தின் ஈவு காண்பிப்பதற்காகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இந்த இலக்கங்களையும் வேறு சில எழுத்துக்களையும் குறிப்பிட இந்நாள் சுருக்கெழுத்தாளர் போல், செட்டிநாட்டில் சில குறியீடுகளைப் பயன்படுத்துவர். அவையாவன:

| | |
|---|---|
| ஜை | வரவு |
| ஆஜை | ஆக வரவு |
| நீ | நீக்கி |
| நூமீ | நாளது மாதம் |
| ஷை | மேற்படி |
| வ | விராகன் |
| சி | சீட்டை |
| ஓ | வசம் |
| தீ | மனைவி |
| ஞ | ராம |
| நீ | றிங்கி (மலேயா நாணயம்) |

| | |
|---|---|
| வு | முந்திரி |
| லு | கால் வீசம் |
| சு | அரை வீசம் |
| சூ | முக்கால் வீசம் |
| ம | வீசம் (மாகாணி) |
| ஞ | அரைக்கால் |
| ௱ | நூறு |
| ௲ | ஆயிரம் |
| பூ | பற்று |
| யூ | இதுவும் பற்று |

கணக்குகளில், கட்டுத் தொகையைக் குறிப்பிட,

ஆஜை நீ. பூ. ரூ. ரு௲ உ௱ எ ய சு ரு நீ கை ரு.

என்பது போன்று எழுதுவர். ஆக வரவு நீக்கி பற்று ரூபாய் 5,274-15-6. என்பது இதன் பொருள். இக் காலத்து இளைஞர்க்கு இவையெல்லாம் கிரீக்கும் லத்தினும் போன்று புரியாத புதிர்களாக இருக்கும்!

## 7. செட்டிநாட்டிலுள்ள கோயில்கள்

தேவார, திருவாசகப் பாடல் பெற்றவை.

ஆவுடையார் கோயில் என்னும் திருப்பெருந்துறை

திருப்புனல்வாயில்

காளையார் கோயில் என்னும் திருக் கானப்பேரெயில்

திருவாடானை

திருப்பூவணம்

பிரான்மலை என்னும் கொடுங்குன்றம்

ஆழ்வார் பாடல் பெற்றவை.
திருமெய்யம்
திருக்கோட்டியூர்

ஜெயினர் கோயில்
அநுமந்தக்குடி

குகைக் கோயில்கள்
சித்தன்னவாசல்
நார்த்தாமலை
குடுமியான்மலை
குன்றக்குடி
பிள்ளையார் பட்டி
பூங்குன்றம்
மலையக்கோயில்

காணத்தக்க பிறகோயில்கள்
குன்றக்குடி மலைக்கோயில்
அரியக்குடி பெருமாள் கோயில்
நாட்டரசன்கோட்டை
கண்ணாத்தாள் கோயில்
பள்ளத்தூர் சோலை ஆண்டவர் கோயில்
"பரியா மருதுபட்டி" மருதீசர் கோயில்

இலக்கியக்கோயில்
கம்பன் சமாதி, நாட்டரசன்கோட்டை

## 8. சம்பளச் சீட்டு

உ

சிவமயம்

சார்வரி வருசம் சித்திரை மாதம் 28உ 10-5-1960

இராமநாதபுரம் ஜில்லா சொக்கநாதபுரம் அ. கரு. சுப சுப்ரமணியன் செட்டியார் அவர்களுக்குப் புதுக்கோட்டைச் சீமை திருமயம் வட்டம் கொப்பனாபட்டியிலிருக்கும் நாராயணன் செட்டியார் மகன் சாமிநாதன் செட்டியார் எழுதிக்கொடுத்த சம்பளச்சீட்டு,

நான் தங்களுடைய மூவார் சுப. சுப. ராம. கடையில் இருந்து மேலாள் வேலை பார்த்து வருவதற்கு வருசம் 3 க்கு சம்பளம் பேசிக்கொண்டு விராகன் 2000க்கு ரூபாய் 7,000 ஏழாயிரத்தில் மூன்றாவது மாதத்தில் ரூ4,666 ரூபாய் நாலாயிரத்து ஆறுநூத்தி அறுபத்தாறு என்பெயரால் கணக்கில் வரவு வைத்துக்கொண்டு வருசம் 3க்கு தங்கள் ஆர்டர்படி கொண்டு வேலை பார்த்து மாதாமாதம் ஐந்தொகை குறிப்பு நகல் அனுப்பியும் எழுத்துப்படி நடந்தும் மூன்று வருசத்துக்கு மேல் தங்கள் அநுமதிப்படி புதுக்கணக்கு ஏஜண்டிடம் ஐந்தொகைகணக்கு இருப்பு தஸ்தாவேசு நகை வகையராக் களை காசுப்பை கணக்குடன் ஒப்புவித்து ஊரில் தங்களிடம் வந்து இந்த சம்பளச்சிட்டைப் பெற்றுக்கொண்டு ஊர்போய் வருவேனாகவும்.

இவடமிருந்து பயணமாய்ப் புறப்பட்ட தேதி முதல் ஊர்வந்து சேர்ந்த தேதிவரை சம்பளக்கணக்குப் பார்த்துக் கொள்ளுகிறது.

கையெழுத்து

சாட்சி;— சுகஸ்தலிகிதம்

## 9. உண்டியல்

இப்போது வங்கிகள் கொடுக்கும் டிராப்டு போன்று செட்டியார்கள் உண்டியல் கொடுப்பது வழக்கம். அவர்கள் உண்டியல் எழுதும் முறையைக் கீழே காண்க.

உ

சுக்கில வருஷம் பங்குனி மாசம் 3வ

21-3-1931

கொத்தமங்கலம் சு. செ. மு. ராம.

கண்டமாணிக்கம் ரெ. சே. ராம. வீரப்பசெட்டியார் வரவு ரூ. 2425-இந்த ரூபா இரண்டாயிரத்து நானூத்தி இருபத்தைந்துக்கும் நாளது தேதி முதல் ரெங்கோன் நடப்பு வட்டியுடன் இது கொண்டு வந்தார் வசம் ரெங்கோன் வீர. மு நா, பெரி. பெரியகருப்பன் செட்டியார் பணம் கொடுத்துச் செல்லுடன் எங்கள் ஊர்க்கடைக்கணக்கில் பற்றெழுதிக் கொள்ளவும்.

சு. செ. மு. ராம. சேதுராமசாமி செட்டியார்

உ
சிவமயம்
வெங்கிடாஜலபதி துணை
பள. பெரி. பெரி.
நெற்குப்பை

No. ______ Rs. ______

______ ஸ்ரீ ______ மீ ______ உ

______ வரவு

பள. பெரி. பெரி. பத்து ரூபாய் ______ இந்த

ரூபாய் ______ க்கும்

______ ஆர்டருக்கு

கொண்டுவந்தார் வசம் ______

______

பணங்கொடுத்து இதில் செல்வாங்கி இவடம் பத்தெழுதிக்கொள்ள வேண்டியது.

______ ஸ்ரீ
______ மீ
______ உ

இப்படிக்கு, பள. பெரி பெரி.

## 10 நகரத்தார் திருமணங்களில் எழுதப்பெறும் இசைவுப்பிடிமான விபரம்*

ஸ்ரீ உ கல்வாச நாட்டில் இளையாற்றக்குடியான குலசேகரபுரத்தில் ஒக்கூருடையான் அருணாசலஞ்செட்டி, ராமநாதரோ, கேரளசிங்கவளநாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டிய புரத்தில் அரும்பாக்கூருடையான் கண்ணப்பசெட்டி நாராயணரோ. இவர் மகன் சுப்பிரமணியனுக்கு இவர் மகள் வள்ளியம்மையை பாணிக்கிரகணம் பண்ணிக்கொண்டமைக்கு இவர் பூஷணம் பூட்டும் ††பொன் ஒன்பது ஆறுகல்லெடை; பொன் பதிமுக் ** கழஞ்சு; இவர் சீதனங் கொடுக்கும் பொன் இம்மாறு இவ்வெடை பொன் ஆறுகழஞ்சு: வெள்ளி ஆறுகழஞ்சு; வெண்கலந் தராப்பலம் † ஆறுபத்தொன்று; வெள்ளாட்டிக்கிப் பணம் முப்பது, சீராட்டுச்சக்கரம் ஆறுபத்தொன்று இவ்வகைப்படி செய்வோம். இவர் நன்கொடை கொடுக்கும் பொன் ஐம்பது, மோதிரம் விராகனெடை மூன்று; இவர் உகந்துடைமையாய்க் கொடுக்கும் பொன் வளையி ஏழு கழஞ்சு இவ்வகைப்படி செய்வோம். இந்த நாள் இவரிடும் பெ ன் இவர் சொற்படி தெரிசனை பதிமுக்கழஞ்சு இவ்வகைப்படி செய்வோம். இந்த இசைகுடிமானம் எழுதினேன் கல்வாசனாட்டில் இளையாற்றக்குடியான

குலசேகரபுரத்தில் ஒக்கூருடையான்...............
கையெழுத்து —.........................
மாப்பிள்ளை வீட்டுக்காரர் கையெழுத்து .........
பெண் வீட்டுக்காரர் கையெழுத்து ..............

இதேமாதிரியாகவும் அவரவர்கள் வழக்கப்படிக்கும் தங்கள் தங்கள் ஊர்ப்பிரிவுகளையும் பெயர்களையும் அந்த இடத்தில் சேர்த்து எழுதுவார்களாக.

---

*அடிக்குறிப்பு: பின்பக்கம் பார்க்க.

குறிப்பு: கழஞ்சு-ஒன்றேகாலே வீசம் வராகன் எடை. இந்த எடையுள்ள ஒரு பொற்காசு, பல்லவர் காலத்தில் செலாவணியாக இருந்தது.

*Kalanju was about 68 grains in Rajaraja's time-Vide Condrington-Ceylon Coins and currency.*

*Kalanju is a gold Kasu, the coin being apparently described by its weight.*

*The Trichinopoly inscription of the eleventh year of Varguna records another endowment of 125 Kalanjus of gold for the regular supply of ghee for the burning of four perpetual lamps and five other lamps in the temple of Tirumalai. Bhatrar. - K. A. Nilakanta Sastri, In P. 92, The Pandian Kingdom, Luzac & Co. London 1929.*

*ஒன்பது மாற்றுள்ள ஆறுகல்லெடை கொண்ட பொன் நாணயம்.

பொன் = 10 பணம்

*தரா = ஒரு கலப்பு உலோகம்; எட்டுப் பங்கு செம்பும் ஐந்து பங்கு ஈயமும் கொண்டது.

# 11 செட்டிநாட்டு விலாசங்கள்

செட்டிநாட்டு மக்களின் பெயருக்கு முன்னர் எழுதப் பெறும் அகரவரிசை எழுத்துக்கள் பலருக்கு வியப்பை ஊட்டும். அவற்றை எழுத, மலேசிய நாட்டு அஞ்சல் அலுவலகங்களில் பணிபுரிவோர் படும் அல்லலும் மிகுதி!

இவ்வாறு நீண்ட பல எழுத்துக்கள் அமைந்தது எவ்வாறு என்பதைக் குறிப்பிடுவது நலம் பயக்கும்.

ஒருவர் பெயரைச் சுருக்கிக் குறிப்பிடுவது உலக வழக்கு. கிருஷ்ணசாமி 'கிச்சு' ஆவதும், ரெங்கநாதன், 'நாதன்' ஆவதும், பார்த்தசாரதி 'சாரதி' ஆவதும் யாவரும் அறிந்ததே. இதற்குப் பதிலாக, ஓரிரு எழுத்துக்களில் பெயர்களைக் கூறுவது செட்டி நாட்டு மரபு. 'கா' என்பது காசியையும் 'வ' என்பது வள்ளியப் பனையும் குறிக்கும். ஆனால் கண்ணப்பனை 'க' என்று கூறு வதில்லை; 'கண' என்று குறிப்பிடுவோம்; இல்லாவிட்டால் அது 'கதிரேச'னையும் சுட்டும் அல்லவா? கதிரேசனை 'கதி' என்போம். கருப்பனை 'கரு' என்போம். வயிரவனை 'வ' என்று கூறாது 'வயி' என்று அழைப்போம்; 'வ'தான் வள்ளியப்பனின் உடைமை ஆகி விட்டதே? இவ்வாறே மு. என்பது முத்தையா வையும் 'முரு' என்பது முருகப்பனையும் குறிப்பன.

கதிரேசன் செட்டியார் மகன் முருகப்பன் கதி. முருகப்பன் ஆகிவிடுகிறார். இது தெளிவாகத் தெரிகிறது அல்லவா?

செட்டியார்கள் பல தலைமுறைகளாகத் தொழிலில் இருப்பவர்கள். அவர்களுடைய தொழில் நிலையங்களுக்கு டாட்டா சன்ஸ் என்றோ வொல்கார்ட் பிரதர்ஸ் என்றோ சேஷசாயி அன் கோ என்றோ அவர்கள் பெயரிடுவதில்லை.

கதி முருகப்ப செட்டியார் தொடங்கும் தொழிலின் பெயர் 'கதி. முரு' ஆகிவிடும். பிறகு அவர் 'சுப' என்பவர்க்கும் அந்தக் கடையில் பங்கு வைத்தால், பங்குவைத்த தேதி யிலிருந்து கடையின் பெயர் 'கதி. முரு. சுப' ஆகிவிடுவதும் உண்டு. கதி. முரு. சுப. என்ற பெயருடைய தொழில் நிலையம் (பர்மாவிலோ, மலேசியாவிலோ) புகழ் பெற்றிருக்கும் எனவே

கதி. மகன் முரு அங்கே கதி. முரு. சுப. முருகப்ப செட்டியார் என்றே கையெழுத்துப் போடுவார். இதற்கு 'தொலைவிலாசம்' என்று பெயர்.

இராயவரத்திலோ நாட்டரசன் கோட்டையிலோ, அவர் பெயர் கதி. முரு முருகப்ப செட்டியாராக இருக்கும். இதற்கு ஊர் விலாசம் என்று பெயர். ஏற்கெனவே, இவருக்கு இவர் பெயரால் 'கதி. முரு' என்று கடையிருந்ததால், இவருடைய பெயரைக் குறிப்பிடும் 'முரு'வும் இவரது விலாசங்களில் இடம் பெற்றிருக்கிறது. தந்தையார் சகோதரர்கள் ஆகியோருடன் பங்கு பிரித்துக்கொண்டு, சொந்தமாகக் கடை வைத்திருந் தால்தான் தம் பெயரும் விலாசத்தில் இடம் பெறும் நாம் குறிப்பிட்ட முருகப்ப செட்டியாருக்கு எந்த இடத்திலும் தொழில் இன்றேல், (1) அவர் இறக்கும் வரையில் கதி. முருகப்ப செட்டியாராகவே இருப்பார்; (2) கதி. முரு. என்னும் விலாசம் அவருடைய மக்களுடைய பெயருக்கு மட்டுமே பொருந்தும்.

என் பெயர் சோம. இலக்குமணன் என்றே இருத்தல் வேண்டும்; ஆனால் சொந்தமாகத் தொழில் "சோம. லெ." என்று ஏற்பட்ட பிறகு, என் பெயரைக் குறிக்கும் 'லெ'யும் என் விலாசம் அல்லது 'மார்க்கா'வில் இடம் பெற்றுவிட்டது.

இந்த விலாசங்கள் தொழில் நிறுவனங்களைக் குறிப் பிடுவதால், அவற்றில் அலுவல் பார்ப்பவர்களும் அந்த விலாசங் களைப் போட்டுக் கொள்ளலாம். அ. க. அ. சித. அழ. கடையில் அடைக்கப்பத் தேவர் மேலாளாகவோ அடுத்தாளா கவோ இருந்தால் அவர் விலாசம்:—அ. க. அ. சித. அழ. அடைக்கப்பத் தேவர்தான். இது, H. V.R. Iyengar, Governor of the Reserve Bank என்பதுபோலப் பதவிப் பெயராகி விடுகிறது.

காலப்போக்கில் ஒவ்வொரு கடையும் இரண்டு அல்லது மூன்று கடைகளாகப் பிரிக்கப்படுகின்றன. அண்ணன் தம்பிகள் புதிய கடைகள் தொடங்குகின்றனர். இவை, புதியனவாக இருந்தாலும் பழமைத்தொடர்புடையன என்பதை வாடிக்கைக் காரருக்குத் தெரிவிப்பதற்காகப் பழைய விலாசங்களுடன் சொந்தப் பெயருக்குரிய எழுத்துக்களையும் சேர்த்துக்கொள்ளு கின்றனர். இவற்றால் விலாசங்கள் கூடுகின்றன.

வொல்கார்ட் பிரதர்சும் டாட்டாசும் சேர்ந்து 'வோல்டாஸ்' ஆகிவிடுகின்றன; கலிபோர்னியா ஆயில் கம்பெனியும் டெக்சாஸ் ஆயில் கம்பெனியும் கால்டெக்ஸ் ஆயில் கம்பெனி ஆகிவிடுகின்றன; இதே அடிப்படையில்தான் செட்டி நாட்டினரின் புதிய தொழில்களின் பெயர்களும் வடிவம் பெறுகின்றன; ஆனால் அவற்றில் எழுத்துச்செட்டு இருப்பதில்லை. பழகிப் போன நீண்ட எழுத்துக்கள் பொருளீட்டப் பயன்படுவதாலும் அவற்றில் மக்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டதாலும் அப்பெயர்களிலுள்ள விலாசங்கள் பழம் பெருமையைக் குறிப்பன. எனவே, அவற்றின் நீளத்தைக் குறைப்பது எளிதில் நிறைவேறக் கூடிய செயல் அன்று. சொந்த ஊரின் பெயரைக் குறிப்பிட ஓர் எழுத்தைச்சேர்த்துக் கொள்ளும் பழக்கம் செட்டி நாட்டில் பரவவில்லை. ஆனால் ஓரிருவர் இப்போது இந்த முறையையும் கடைப்பிடிக்கத் தொடங்கியுள்ளனர்.

செட்டிநாட்டில் வழக்கிலுள்ள பெயர்களின் எண்ணிக்கை குறைவு. எனவே, ஒரு பெயரையே உடையவர் மிகப் பலர் இருப்பர். நெற்குப்பையில் 'சிங்காரம்' என்னும் பெயருடையார் ஒரு நூறு பேர் உள்ளனர். அரிமழத்தில் வீடுதோறும் ஒரு செல்லப்பன் உண்டு. பள்ளத்தூரில் எங்கு வேண்டுமானாலும் சோலையப்பனைக் காணலாம். நாட்டரசன் கோட்டையில் யாருடைய பெயராவது நமக்கு நினைவு இல்லாவிட்டால், கண்ணப்பன் என்று அவரைக் கூப்பிடலாம்! இவ்வாறு பலருக்கு ஒரே பெயர் இருப்பதாலும், அவர்களை ஒருவரின்றும் மற்றொருவரை வேறுபடுத்திக் காட்டப் பழைய நீண்ட விலாசங்களையும் தொடர்புபடுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது.

விலாசங்களைக் குறைக்க வேண்டும் என்ற எண்ணம் செட்டிநாட்டில் தொடங்கியுள்ள இந்நாளில், ஏனைய சமூகத்தார் பலரின் விலாசங்கள் அவற்றின் நீளத்தில் எங்களையும் விஞ்சி விடுகின்றன என்பதையும் மறப்பதற்கில்லை.

## 12. பண்டிதமணியின் தொண்டுகள்

(டாக்டர் வ. சுப. மாணிக்கம், துணைவேந்தர், மதுரை காமராசர் பல்கலைக்கழகம்)

இருபதாம் நூற்றாண்டு விழா நூற்றாண்டு என்று பாராட்டத் தகும் சிறப்புடையது. சென்ற நூற்றாண்டில் பல துறைகளிற் சிறந்த தமிழ்ப் பெருமக்கள் பிறந்தனர். நாட்டு விடுதலையியக்கத்திலும், தமிழ்மொழிக் காப்பிலும் வளர்ச்சியிலும் சீர்திருத்தத்திலும், கல்விப் பெருக்கத்திலும் முனைந்தனர். ஆயிரம் ஆண்டுகளாகக் குறைந்து மழுங்கி நலிந்து வந்த கொள்கைகள் சென்ற நூற்றாண்டில் தோன்றிய இந்நன்மக்களால் முனைந்து கிளர்ந்து சீறி வேகம் பெற்றன. அத்தகைய பெருஞ்சான்றோர்களுள் ஒருவரே மகாமகோ பாத்தியாய பண்டிதமணி கதிரேசச்செட்டியார். வடமொழியில் உள்ள அரசியல்நூல்களும்நாடக நூல்களும் இவர்தம் மொழிபெயர்ப்பால் தமிழ்ச் செல்வமாயின. உள்ளம் உருக்கும் திருவாசகம் ஒப்புயர்வில்லா உரைநலம் பெற்றது. இவர்தம் ஆழ்ந்த இருமொழிப் புலமையினால் இலக்கியவுலகில் ஒப்பியலாய்வுப் பார்வை முகிழ்த்தது. அனைத்துக்கும் மேலாக அறிவியலில் கண்டுபிடிப்புப் போல, இலக்கியக் கண்டுபிடிப்பு என்ற ஒரு புதுத் தடங்கண்டவர் பண்டிதமணியார். இதனால் நயத்தந்தை என்ற பெயர்ச்சிறப்பு இவர்க்கே உரியதாயிற்று.

16-10-1881 இல் கதிரேசனார் மகிபாலன்பட்டியில் பிறந்தார். இப்பட்டி சங்ககாலத்தில் பூங்குன்றம் என்ற பெயருடையதாக விளங்கிற்று. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற உலகப் பொதுவறத்தை அருளியவர் இவ்வூரிற் பிறந்த சங்கப்புலவர் கணியன்பூங்குன்றனார். ஈராயிரம் ஆண்டு இடைவெளிக்குப்பின் இச்சிற்றூரை மீண்டும் இலக்கியப் பற்றூராக ஒளிசெய்தவர் கதிரேசனார். பிறக்கும்போது குறைவறப் பிறந்த இவர் மூன்றாவது வயதில் வாதநோய்க்கு ஆளானார். ஒரு கால் ஊனம் உற்றது. இவ்வூனந்தான் இவரை நகரத்தார் குலத்தொழிலுக்குச் செல்லாமல் தடுத்தது போலும். இது தமிழன்னை தன் குறைகளை நிரப்பிக்கொள்ளவேண்டி இவர்க்கு வழங்கிய நளிய ஊனமோ என்று கருதலாம்.

திண்ணைப்பள்ளியில் சில திங்களே படித்த கதிரேசனார் முன்னையூழ்வினைத் தாக்கம் என்று நம்பும்வண்ணம் இலக்கிய இலக்கணங்களைத் தாமே கற்று எளிதில் புரிந்துகொண்டார். எனினும் பிற்காலத்தில் பெரும்புலவர்அரசஞ்சண்முகனாரிடம் தெளியாத பகுதிகளைக் கேட்டு விளங்கிக் கொண்டதாகஅவரே கூறியதுண்டு. வடமொழிக் காப்பியங்களில் குறிப்பாக நாடகங்களில் இவர்க்கு வேட்கை உண்டாயிற்று. தருவை நாராயண சாத்திரியாரிடம் சம்பளம் கொடுத்து ஐந்தாண்டு முறையாக வடமொழிப்பயிற்சி பெற்றார். "வடமொழியில் தெளிவு குன்றிக் கிடக்கும் சில இடங்களில் இத்தமிழ் நூல் (மண்ணியல்சிறுதேர்) தெளிவு மலிந்து காணப்படுகிறது. இவற்றால் இது (மிருச்சகடிகம் என்னும்) முதநூலினும் மேம் பாடுடையதாகக் கருதற்பாலது" என்று இராமேசுவரம் வட மொழிக் கல்லூரி முதல்வர் சுப்பிரமணிய ஐயரவர்கள் பாராட்டு வதிலிருந்து பண்டிதமணியின் நிகரற்ற வடமொழிப் புலமை பெறப்படும். கடவுட்பற்றும் சைவ சமயப்பற்றும் பண்டித மணிக்கு ஆழமாக இருந்தது. தேவார திருவாசக முதலான சைவத்தமிழ்ப் பாசுரங்களையும், பதினான்கு சாத்திரங்களை யும் சிவஞான மாபாடியத்தையும் வடமொழி வேதஉபநிடதங் களையும் ஐயமற நுணுகிக் கற்றார். சிதம்பரத்தில் மெய் கண்ட வித்தியாசாலை நிறுவிய காரைக்குடி சொக்கலிங்க ஐயாவை சைவநெறிக் குருவாகக்கொண்டார்.

தமிழ், வடமொழி சைவம் என்ற முத்திற அடிப்படை பண்டிதமணிக்குஇருபத்தைந்து வயதிற்குள்ளேயேவலுவாயிற்று. ஆசிரியர் அரசஞ் சண்முகனாரே 1906 இல் மகாவித்துவான் என்று கதிரேசனாரைத் தம்கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். தம் இருபத்தெட்டாம் வயதில் 1909 இல் பண்டிதமணி மேலைச் சிவபுரி சன்மார்க்க சபையைத் தோற்றுவித்த முனைவராக விளங்கினார். 1903 இல் டாக்டர் உ. வே. சாமினாதையர் தொடர்பும் 1906 இல் மறைமலையடிகள் தொடர்பும் இவ்வாறே பெருந்தமிழ்ப்புலவர்களின் நட்பும் பண்டிதமணிக்கு இளமையிலே வாய்த்தன. காலமறையிருந்தாலும் நெடுந் தொலை சென்று பெரும் புலவர்களோடு பழகும் புலமை யுறவைக் கதிரேசனார் நன்கு போற்றிக்கொண்டார். அதனால் புலவர் கூட்டம் அறிந்த வளரும் புலவராக விரைவில் ஒளி விட்டார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தோடும் அதனைச் சிறப்பாக நிறுவிக்காத்த பாண்டித்துரைத் தேவரோடும் இந்தச் சங்கப்புலவர்களோடும் பண்டிதமணிக்கு நெடியஉறவு

உண்டாயிற்று. மேலைச்சிவபுரியில் சன்மார்க்கசபை ஒன்றை நிறுவுவதற்கு இவ்வுறவு பெருங்காரணமாகும். நகரத்தார் குலம் தமிழும் சைவமும் தழைக்கத் தழைத்த குலம். பண்டிதமணி இக்குலப் பிறப்பாளர் ஆதலின், புலவர்கட்கு வேண்டும் பொருளுதவிகளைச் செய்து கொடுக்கத் துணையாக இருந்தார் என்பது குறிப்பிடத்தகும். அரசஞ்சண்முகனார்க்கு நேர்ந்த பொருளிடர்ப்பாடுகளைப் பண்டிதமணி தீர்த்து வைத்த உதவிப்பெருமை பாடல் ஏறியது. "ஆங்காங்குள்ள புலவர் பெரியாரை அழைப்பித்துத் தங்குல தனவான்களைக் கொண்டு உபகாரம் புரிவித்து மகிழவிப்பவர்" என்று மகா வித்துவான் இரா. இராகவையங்கார் பண்டித மணியின் வரையா உதவியைப் போற்றியுள்ளார்.

பண்டிதமணிபால் சொல்வன்மை, எழுத்து வன்மை மொழிபெயர்ப்பு வன்மை, பாவியற்றும் வன்மைகளெல்லாம் புலமைக்கொத்தாகக்கிடந்தன. புலவனது உள்ளக்கருத்துகளை எதிர் நீந்திச்சென்று ஆழமும் வேகமும் காண்பதே புலமையின் இலக்கணம் என்பர் பண்டிதமணி. செய்யுட்களுக்கு நயங்காண் முறையைப் புதிதாகக்கண்டு காட்டிக் கற்பித்ததனித்தோன்றல் கதிரேசனார். ஆழ்ந்து நிற்கும் கவியுளம் காணவேண்டும் என்றார் பாரதியார். அவ்வுளங்கண்டவர், காண்வழி காட்டியவர் பண்டிதமணியார். இந்நயத்திறன் தமிழகத்தில் இவரொருவர்க்கே கைவந்த புலமையாகும். அதனாலன்றோ 'தெள்ளிச் சுவைதேரும் செந்நாவான்' என்று கவிமணி பாடினர். முடியிழந்த இராவணனுக்குத் திங்கள் இல்லாத இரவு, ஞாயிறு இல்லாதபகல் என்ற இரண்டுவமைகள் கம்பர் கூறியது பொருந்துமா என எதிர்நோக்கில் பார்த்து, பொலிவிழந்த பூதவுடலையும் மாய்ந்தொழிந்த புகழுடலையும் இவை குறிக்கும் எனப் பண்டிதமணியார் கம்பரின் கவியுளத்தைப் புறப்படுத்துவர். காதற்கடிதங்கள் என்ற கட்டுரையில் சகுந்தலை நகங்கொண்டு செந்தாமரையிலையில் எழுதிய கடிதத்தையும் மாதவி பித்திகைப் பூ முனையால் வெண்ணிறத்தாழை மடலில் வரைந்த கடிதத்தையும் பொருளாலும் கருவியாலும் மனப்பான்மையினாலும் ஒப்பிட்டுரைத்த நயத்தேன்கள் இலக்கிய நாவிற்குத் தெவிட்டாதவை.

பண்டிதமணி காலத்தில் உடன்வாழ்ந்த பிற தமிழ்ப் புலவர்கட்கு இல்லாத மிக்கவடமொழிப் புலமை அவர்க்குத்

தனித்துணையாக இருந்தது "வடமொழிக்கண்உள்ள அளவை நூல்களும் சுவையாராய்ச்சி நூல்களும் பெருங்காப்பியங்களை ஆராய்தற்குக் கருவியாகவுள்ள நூல்களும் பொருணூல்களும் அறிவுநூல்களும் பிறவும் மொழி பெயர்க்கப்படல் வேண்டும். இச்செயற்கு வடமொழியோடு தமிழ் பயின்றார் பலர் வேண்டும்" என்பதும், ஒருமொழியிலிருந்து பெயர்க்கப்படும் நூல் பெயர்க்கப்படும் மொழிக்குள்ள குறையை நிரப்புவதாக இருத்தல் வேண்டும் என்பதும் பண்டிதமணியின் வேணவா. இதனால் குறிக்கோளும் வடமொழிக் கல்வியும் பண்டிதமணி பால், உடனிலையாகி வளர்ந்தன என்பது வெளியாகும். பண்டிதமணி மொழிபெயர்த்த சுக்கிர நீதி, கௌடலீயம் என்ற இருபெரு நூல்களும் மிருச்சகடிகத்தின் மொழிபெயர்ப்பான "மண்ணியல் சிறுதேர்" என்ற நாடகநூலும் தமிழுக்குப் புதிய செல்வத்தைப் பெருக்கின. தமிழாய்வுக்கு மூலநூல்களாயின. தமிழிற் பெரும்புலமையும் தனிச்தமிமில் ஊற்றமும் இருந்த காரணத்தால் பண்டிதமணியின் மொழிப்பெயர்ப்புக்கள் தமிழ் நூல்களாகவே தோற்றம் அளித்தன. "முதனூலிலுள்ள சொற்களின் பொருளை நன்குணர்ந்துதற்கேற்ற ஆற்றல் வாய்ந்த தமிழ்ச் சொற்களை ஆராய்ந்து தேர்ந்தெடுத்துத் தொடுத்திருப்பதும் நூல் வழக்கான சந்தேசச் சொற்களை அவற்றின் பொருளில் தமிழ் நூல்களில் அடிபட்டு வழங்கிவரும் சொற்களால் மொழிபெயர்த்திருப்பதும் தாம் பயின்ற அரிய தமிழ் நூற் பயிற்சியின் பயனாகவுள்ளன" என்பது மதுரைத் தமிழ்ச் சங்கத்துச்செந்தமிழ் ஆசிரியர் நாராயண அய்யங்காரின் மதிப்புரை. எம்மொழியிலிருந்து தமிழுக்குப் பெயர்த்தாலும். தமிழ் மொழிநடை எப்படி அமைதல் வேண்டும், மொழி பெயர்ப்பில் என்னென்ன கூறுகள் சேர்தல் வேண்டும், மொழி பெயர்ப்பியின் சிந்தனை எதுவாக இருத்தல் வேண்டும் என்பன வெல்லாம் கற்றுக்கொள்வதற்குப் பண்டிதமணியின் நூல்கள் பாடநூல்களாகும்.

மொழி பெயர்ப்புக்குத் துணையாக இருந்ததொடு இலக்கிய ஒப்பாய்வு செய்வதற்கும் அரணான மேற்கோள் காட்டுதற்கும் வடமொழிப் புலமை பண்டிதமணிக்குக் கை கொடுத்தது. அவர் தம் சொற்பொழிவுகளிலும் எழுத்துக் களிலும் குறிப்புக்களிலும் சமய விளக்கங்களிலும் வடமொழிப் பதிவுகளைக் காணலாம் சன்மார்க்கம், ஞானத்தின் திருவுரு, அன்பின் திருவுரு, கம்பன் கவிநலம் என்ற கட்டுரைகள் பண்டித மணியின் புலமைக் கொள்கலமாக இலங்குகின்றன. குணிப்

பொருளைக் குணமாகவே உருவகப்படுத்தல், பரஞானம், அபரஞானம் என்பன வெல்லாம் ஒப்பியல் முறையில் ஈண்டு விளக்கம் பெறுகின்றன. அன்பின் திருவுரு என்ற அரியபகுதியில் கண்ணப்பரின் வாழ்வனைத்தும் சிவமயமாக விளங்குவதை எடுத்துக் காட்டுவர் பண்டிதமணியார். இப்பெருந்தகையாரின் நுண்மாண் நுழை புலத்தை அறிதற்கு இவ்வொரு கட்டுரை போதுமே.

கதிரேசனார் 27. 8. 1925 இல் பண்டிதமணியானார். தமிழ்நாட்டுச் சபைகளுள் தொன்மையும் தொண்டுஞ்சிறந்த மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை டாக்டர் உ. வே. சாமி நாதையர் தலைமையில் இப்பட்டத்தினை வழங்கிற்று. பாரி காதை பாடிய ரா. இராகவையங்காருக்கு மகாவித்துவான் என்ற சிறப்பு உடன் வழங்கப் பட்டது. பண்டிதமணி மேலும் 11. 6. 1942 இல் மகா மகோபாத்தியாயர் ஆனார். சைவசித்தாந்த வித்தகர், முதுபெரும் புலவர் என்ற பிற சிறப்புக்கள் இருப்பினும், 'பண்டிதமணி' என்ற முதற்பட்டமே நாடு புகழும் தனிப் பெயராயிற்று.

பண்டிதமணி தமிழுக்குச் செய்தனவெல்லாம் முன்பு யாராலும் செய்யப்படாதவை; செய்வதற்கும் இயலாதவை. சுக்கிரநீதியும் சாணக்கியமும் மண்ணியில் சிறுதேரும், ஞானத்தின் திருவுரு போலும் கட்டுரைகளும் திருவாசகக் கதிர்மணி விளக்கமும் பண்டிதமணி தமிழ்த்தாயின் திருவடியில் வைத்த தனிப்படையல்கள். திருவாசகத்தில் 170 பாடல்களுக்குப் பேருரை கண்டவர் பண்டிதமணி. எல்லா நூல்களைக் காட்டிலும் இவ்வொரு நூலில் அவருக்கு ஆராக்காதலுண்டு. தமிழ் கற்கத் தொடங்கிய நாள் முதல் அவர் நெஞ்சம் திருவாசக நெஞ்சமாயிற்று. என்னப்பன் எனவரும் திருவாசகத் தொடர் பண்டிதமணிக்கு வாழ்வுத் தொடராயிற்று. ''இத்தகைய அரு மருந்தன்ன திருவாசகத்தை யான் சிறுபருவந் தொட்டே சிறப்பு முறையில் பயின்று வந்ததோடு, பற்பல முறையாக ஆராய்ந்து கண்ட உண்மைகளை அறிஞர் அவைக் களங்களில் சொற்பொழிவாகவும் நிகழ்த்தியதுண்டு'' என்பதால் மணி வாசகத்துக்கும் பண்டிதமணிக்கும் உரிய தற்கலப்புதெளிவாகும். திருச்சதகத்தின் முதல் கதிர்மணி 1947 இல் பதிப்பாயிற்று. அப்போது பண்டிதமணிக்கு வயது 66. சொற்பொழிவு, மொழி பெயர்ப்பு ஆசிரியப்பணி எல்லாம் முறையாக ஓய்ந்தபின் மகிபாலன்பட்டியில் இருந்து திருவாசகப்பணியில் முழுமையாகத்

தம்மை ஈடுபடுத்திக் கொண்டார் பண்டிதமணி. பிறருக்கெல்லாம் ஓய்வுக்காலம் கதிரவனார்க்கு ஆய்வுக்காலமாக மலர்ந்தது. திருவாசகத்தின் மூன்று பகுதிகட்கு உரிய 170 பாடல்களுக்கு மட்டும் எழுத்துவடிவில் எழுதிவிட ஆறாண்டு ஆயிற்று. இவ்வாறாண்டுப் பயன் அறுபதாண்டின் பழம் என உணரவேண்டும்.

பல்கலைக் கழகம் கண்ட அண்ணாமலையரசரின் வேண்டுகோளை ஏற்று, தம் 53 வயதுக்குப் பின் பல்கலைக் கழகத்தில் 12 ஆண்டுகள் ஆசிரியப்பணி செய்தார். அப்பணிக்காலத்தெல்லாம் திருவாசகத்திற்குப் பேருரை எழுத வேண்டும் என்ற அவா பொங்கிக்கொண்டே வந்தது. 1946 இல் இப்பணி முடிந்து வீடு வந்தபின் வீடு பயக்கும் திருவாசக நினைவேயாக மாறி இரவும் பகலும் உரையில் ஈடுபட்டார். பேசும் பொருளுக்கு இலக்கிதமாம் பேச்சிறந்த மாசில் மணியின் மணிவார்த்தை என்று மணிவாசகரின் அன்பில் திளைத்தார். தன் புலமையின் கடமை திருவாசகவுரையே என்று நோய் மலிகாலத்தும் ஆராக் காதலால் ஒருமைப்பட்ட பண்டிதமணி திருவெம்பாவை உரையை முடித்த பின்னும் திருவம்மானையின் சில பாடல்களுக்கும் ஆனந்தக்களிப்பாக உரை வரைந்து கொண்டிருந்தார். 24. 10. 1953 இல் இம்மை முடிந்தது. முடிந்து அவ்வீடு சென்ற பின்னும் உரைத்தொடர்ச்சி இருக்கும் என்று நம்புவதும், உரையைத் தொடர்ந்து எழுதுவதற்காக மீண்டும் தமிழ் நாட்டில் பிறப்பார் என்று நம்புவதும் சைவநெறிக்குப் புறமல்லவே.

ஆரியத்தின் நிலைகண்டோன் அரியதமிழின் கடலானோன்
பாரியண்ணா மலைமன்னன் பரிந்துபோற்று முதுபுலவன்
தேருமினிய சொல்லாலெம் சிந்தைகவரும் கதிரேசன்
பேரும்புகழும் பெருவாழ்வும் பெற்றுநிதமும் வாழ்கவே

என்று பண்டிதமணியைப் பாடினார் கவிமணி.

## 13 நகரத்தார் வரலாறும் ஏழு நகரத்தார் குழுவ நாடகமும்

—நிர்மலா மோகன்
(ஆராய்ச்சியாளர், மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,)

குறவஞ்சி இலக்கிய வளர்ச்சிக்குப் பின்னர் எழுந்த ஒரு இலக்கிய வகை குழுவ நாடகம் ஆகும். இன்று, நமக்குத் தெரிய வரும் குழுவ நாடகங்கள் நான்கு. அவை:

1. சின்னமகிபன் குழுவ நாடகம்
2. அருணாசலம் செட்டியார் பேரில் குழுவ நாடகம்
3. கோட்டூர் நயினார் பேரில் குழுவ நாடகம்
4. ஏழு நகரத்தார் பேரில் குழுவ நாடகம்

இந்நான்கும் செட்டிநாட்டுப் பின்னணியில் எழுந்தனவாக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். நகரத்தார் குழுவ நாடகம் மற்ற குழுவ நாடகங்களினின்றும் அமைப்பில் பெரிதும் மாறு பட்டிருக்கின்றது. எனவே, இக்கட்டுரை, இக்குழுவ நாடக அறிமுகமாக அமைகிறது.

இக்கட்டுரையினைப் படித்துப் பார்த்துத் திருத்தங்கள் கூறி உதவிய பேராசிரியர் முத்துச் சண்முகம் அவர்களுக்கும் நகரத்தார் பற்றிய பலசெய்திகளைக் கூறி உதவிய பேராசிரியர் தமிழண்ணல் அவர்களுக்கும் யான் நன்றியுடையேன்.

1. இக்குழுவ நாடகம் சென்னை உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தில் உள்ளது. இதனைப் பற்றிய குறிப்பு வேறு எந்த நூலிலும் காணப்படவில்லை.

ஏழுநகரத்தார் ஒன்பது கோயில்

சோழ நாட்டில் வாழ்ந்து வந்த நகரத்தார், சோழ மன்னனின் கொடுமையால் அந்நாட்டைத் துறந்து பாண்டிய நாட்டையடைந்து ஏழு பிரிவினராக பிரிந்து, ஒவ்வொருவரும் ஒரு கோயிலைத் தமக்குரியதாக கொண்டு வாழ்ந்தனர் என்பது நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு நுவலும் செய்தி. இவருள் திருவேட்பூருடையார் என்னும் அண்ணன் தம்பியர் இருவர் பிரிந்து மூத்தவர் இரணியூரைத் தன் கோவிலாகவும், இளையவர் பிள்ளையார்பட்டியைத் தன் கோயிலாகவும் கொண்டனர் என்று நகரத்தார் வரலாறு கூறுகின்றது. ஏழு நகரத்தார் என்று பெயர் கொண்ட போதிலும், அவர்களுக்குரிய கோயில்கள் ஒன்பது. அவ்வொன்பது கோயில்களும் அதன் உட்பிரிவுகளும் ஏழு நகரத்தார் குழுவ நாடகத்தில் கூறப் பட்டுள்ளன:

ஒன்பது கோயில்களும் எழுந்தருளிய தெய்வங்களும்

ஏழு நகரத்தார் குழுவ நாடகம், மற்ற இலக்கியங்களைப் போல விநாயகர் காப்புடனே தொடங்குகின்றது, முருகேசர், மால், நாமகன் ஆகியோர் மீதும் காப்புகள் பாடப்படுகின்றது. பின்னர் ஒன்பது கோயிலுக்குரிய தெய்வங்கள் மீதும் காப்புப் பாடப்படுகின்றது. சைவ மதத்தை மட்டுமே பின்பற்றக்கூடிய வர்கள் நகரத்தார் என்பதற்கேற்ப, அத்தரத்துக் கடவுளர் சிவனும், அம்மையுமாகவே இருக்கின்றனர். பாடல் ஓசைக் கேற்ப அக்கடவுளரின் பெயர்கள் சற்று மாறுபட்டுள்ளன.

2. அ இராமநாதன் செட்டியார், நாட்டுக்கோட்டை நகரத் தார் வரலாறு, முன்னுரை & பக்கம் 4-6

   இக்குறிப்பு 'நகரத்தார் சரித்திரம்' பக்கம் 16-19 என்னும் நூலிலும் காணப்படுகின்றது.

3. நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு பக்கம். 18

4. மு. நூ பக்கம் 48, *Pamela G Price, The Political Culture of a Merchant Banker Case: A Historian's view, Folklore Seminar Papers page 121*

| கோவில் பெயர் | கோவிலிலுள்ள சுவாமி-அம்மன் பெயர் | குழுவ நாடகத்திலுள்ள சுவாமி-- அம்மன் பெயர் |
|---|---|---|
| இளையாத்தங்குடி | கைலாசநாதர்<br>நித்திய கல்யாணி | கைலாசநாதர்<br>நித்தியவான் நகையம்மன் |
| மாத்தூர் | ஐநூற்றீசர்<br>பெரிய நாயகி | ஐந்நூற்றிநாதர்<br>பெரியவள் |
| வைரவன்கோயில் | வளரொளிநாதர்<br>வடிவுடையம்மை | வளரொளியீசர்<br>வடிவுள்ள மங்கை |
| இரணியூர் | ஆட்கொண்டநாதர்<br>சிவபுரந்தேவி | ஆட்கொண்ட நாயகர்<br>சிவபுரந்தரி |
| பிள்ளையார்பட்டி | திருவீசர், மருதீசர்<br>சிவகாமவல்லி<br>வாடாமலர் மங்கை | —<br><br>— |
| நிமியம் | செயங்கொண்ட சோழீசர்<br>சவுந்தரநாயகி | செயங்கொண்ட சோழீசர்<br>சவுந்தரி |
| இலுப்பைக்குடி | தானதோன்றியீசர்<br>வடிவுள்ள மங்கை | தான்தோன்றிநாதர்<br>வடிவுள்ளமங்கை |
| சூரைக்குடி | தேசிநாயகர்<br>ஆவுடையம்மன் | தேசிநாயகர்<br>ஆவுடையம்மன் |
| வேலங்குடி | கண்டீசர்<br>காமாட்சியம்மை | கண்டீசர்<br>காமாட்சியம்மை |

இத்தெய்வங்கள் தவிர, வயிரவன்பட்டி செவ்வடுகேசர் பிள்ளையார்பட்டி கற்பகப் பிள்ளையார், வேலங்குடி ருத்திரா பாதியீசர் ஆகியோர் மீதும் காப்புப் பாடப்பெற்றுள்ளது.

உட்பிரிவுகள்:—

இளையாத்தங்குடி, மாத்தூர், வயிரவன்பட்டி ஆகிய மூன்று கோயில்களுக்கும் முறையே, ஏழு, ஏழு, மூன்று உட்பிரிவுகள் உள்ளன. இவை நகரத்தார் சிறப்புச் சொல்லும் அகவலில் வெளிப்படுகின்றன.

1. இளையாத்தங்குடிக்குரிய உட்பிரிவு ஊர்கள்:-

1. ஒக்கூர், 2. பெருமாவூர், 3. கிண்கிணிக்கூர், 4. பட்டணசாமி, 5. செந்தூர், 6. வாசற்குடி, 7. சிறுசேற்றூர்.

மாத்தூர்க்குரிய உட்பிரிவுகள்: 1. மண்ணூர், 2. உறையூர். 3. மணலூர். 4, குளத்தூர். 5. கண்ணூர், 6. அரும்பாக்கூர். 7. கருப்பூர்

வைரவன் கோவிலுக்குரிய மூன்று உட்பிரிவுகள்: 1. சிறு குளத்தூர் 2. கழனிவாசல் 3. மருதேந்திரபுரம்

நகரத்தார் பெருமை:—

நகரத்தாரின் சிறப்பு, அவர் தம் கல்வி, கொடை வாய்மை அறம் போன்ற பண்புகள் குழுவ நாடக அகவல் விருத்தத்தில் வெளியாகின்றன. நகரத்தார் 'கல்வி அறிந்த விவேகர்'; சொன்ன சொல் தவறாத நேர்மையானவர்; 'காய் கதிர்மதி வட்காயினும் சொன்ன வாய்மை தப்பாமல் வளர் கணிகேசர்' என்பதனால் இதையறியலாம். செந்தமிழ்ப்பற்று மிக்கவர் செந்தமிழ்ப் புலவர்க்குப் பரிசும், பொன்னும் ஆடையணிகலன்களும் அளிக்கும் வள்ளன்மை மிக்கவர். 'மாணிக்கம் பிச்சை வழங்கக்கூடிய செல்வச் செழிப்புடையவர். கம்பனார் கோயில் கனகோபுரத்தைச் செம்பொற்றகட்டாற் சிறப்புடன் வேய்ந்தோர்' பாண்டிய நாட்டில் பல அறச் செயல்கள் புரிந்தவர்:

பூவாலயம் புனல்நிறை வாவிகள்
வற்றாத வூருணி மாறாமலர்க்கா
தண்ணீர்க் காவணஞ் சாலைகள் கிணறு

அமைத்தவர் என்பதனால், நகரத்தாரின் பெருமை புலனாகின்றது. பாண்டிய மன்னனை, தன் நாட்டில் சிறந்த குடிகள்

வேண்டும் என்பதற்காகச் சோழநாடு சென்று அழைக்க், நகரத்தார் பாண்டிய நாடு வந்தனர் என்னும் கதையும் அவர் தம் பெருமையினை விளக்குகிறது. மூவேந்தருக்கு முடி புனைந் திட்டோர் என்பதனால் மன்னருக்கு முடி புனையும் சிறப்புப் பெற்றிருந்தமையும் புலனாகிறது. நகரத்தார் சரித்திரத்திலும் இச்செய்தி சொல்லப் பெற்றிருக்கின்றது.

நகரத்தார் பற்றிய பழங்கதைகள்:—

நகரத்தார் பற்றிய பழங்கதைகள் பல இந்நூலில் கூறப் பட்டுள்ளன. சோழ மன்னனின் கொடுமைக்கு ஆளாயினர் நகரத்தார். ஒரு முறை காவிரி பெருக்கெடுத்து ஓடும்பொழுது மண் அள்ளிப்போடுமாறு அரசர் கட்டளையிட, வணிகர்கள் அரசன் ஆணைப்படி நடவாமல், தங்கள் வியாபாரப் பண்டக சாலையிலுள்ள பஞ்சுப் பொதிகளால் தண்ணீரை உடைத்துத் தங்கள் கூறுகளைப் பூர்த்தி செய்தனர் என்பது வரலாறு, இஃது இங்கு.

'மிஞ்சு காவேரி வெள்ள நீரதனைப்
பஞ்சுப் பொதியா பருவனை யணைந்தோர்'

எனக் குறிக்கப்படுகின்றது.

அதுகண்ட அரசன் பெருங்கோபமும், பொறாமையும் கொண்டு, அவ்வணிகர்களை அரண்மனைக்கழைத்துத் 'தன்னு டைய பட்டத்து யானையை நிறுத்து நிறை சொல்லுங்கள் பார்ப்போம்' என்று கேட்க அவர்கள் தம் கண்ணாலேயே யானையை நிறுத்துச் சொன்னார் என்னும் செய்தி

'ஆணிக்கையா மதயானையை நிறுத்தோர்'

எனக் குறிக்கப்படுகின்றது. அவ்வாறே மோசமான தங்கத் தகட்டில் மாற்றுச் சொல்லுமாறு அரசன் வினவ, அவர்களும் மேற்பூச்சுத் தங்கத்தின் மாற்றுச் சொன்னார்கள் என்னும் செய்தியையும் இந்நூலில் குறிப்பிடுகின்றார் ஆசிரியர். பிறி தொரு முறை கிணற்றிலிருந்து நீர் இறைக்கப் போதுமான

5. நகரத்தார் சரித்திரம், பக்கம் 13
6. மு நூ பக்கம் 10
7. நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு பக்கம் 11

கயிறு கொடுக்கவில்லை அரசன். இவ்வணிகர்களோ, தங்கச் சவடியையே (காதில் அணியக்கூடிய வட்டமான அணிகலன்) தாம்பாக்கி நீர் இறைத்த செய்தியையும் இந்நூலில் விளக்கப் பெற்றுள்ளது. மேலும், செந்தமிழ் வல்லமைக்காகத் தாம் தேடிய கன திரவியத்தைக் கடல் தனிலெறிந்து மனைதனில் வலிய வரவழைத்திட்ட சிறப்பு மிக்கவர் ஏழு நகரத்தார் என்றும், வடநாட்டுப் புலவன் (ஏமநாதன்) ஒருவனை

மதுரையில் கடிகை வாணர்களுடனே
எதிர்வாது பாடி இசை பெற வென்றோர்

உபதேசம் பெறுதல்:—

நகரத்தார் குரு ஒருவரிடம் உபதேசம் பெறும் மரபு உண்டு. முன்பு ஆண்களுக்கு மட்டும் உபதேசம் அளிக்கப் பெற்றது என்பதும் பின்னர் பெண்களுக்கும் உபதேசம் அளிக்கப் பெறுகின்றது என்பதும், இருவருக்கும் வெவ்வேறு இடங்களில் உபதேசம் அளிக்கப்படுகின்றது என்பதும் நகரத்தார் வழக்கில் காணப்படுவதொன்று ஆகும். அதனைக் குறிக்கும் வகையில் தம் குருவையும் போற்றுகின்றனர். இந்நூலில்

சதுமறையாறு சாத்திர முணர்ந்து
கதிபெறு வேள்விக் கரும முடித்த
யோகி மெஞ்ஞானி உயிர்பிர்மச்சாரி
ஆகிய பாண்டியநாட்டாசான் பதமும்
வேத வித்தாகி விளங்கு மெஞ்ஞானி
ஆதி மெய்ப்பொருளை அறிந்தருள்யோகி
திருப்புனவைகுரு தேசிகன் பதமும்
விருப்பமாய்ப் போற்றி விளங்க எந்நாளும்
பதருபதேசம் பத்தியாய்ப் பூசித்து

எனவரும் பகுதியால் இதனை அறியலாம்.

முடிவுரை:

ஏழுநகரத்தார் குழுவநாடகம் என்னும் இந்நூலில் நகரத்தாரின் வரலாற்றினையும் அவர்தம் சிறப்பினையும் தெரிவிக்கும் ஒன்று என்பதே இதனினின்றும் பெறக்கூடியசெய்தியாகும்.

8. டாக்டர் தமிழண்ணல் கலந்துரையாடலின்போது கூறியது.

# ஏழு நகரத்தார் பேரிற் பள்ளு நாடகம்

## வெண்பா

1 ஏழு நகரிளசை மாதைப் பதியோர்
வாழுதற்கு மோகனப்பள் வாழ்த்தவே--நீள்புவியில்
வெற்பகத்தி லுற்பவித்த மெத்தரத்னம் பெற்றெடுத்த
கற்பகத்தி னற்பதமே காப்பு

2 கனமெய்த் துறைமீனவனார் செய்த வமரமுற்றிய தேரினில்
வாரவர் கருணைக் கடலான வைஞ்ஞுறினில் வணிகேசர்
சுனைமெய்க்குடையீ பவரேழு நன்னகரப்பெரியோர்கள்முனே
தெரிசொரி முத்தமிழ் மோகனமானபள் ளிசைகூற
அனமெய்ப்பெடைபூவினிலாவிடு மனையிற் திருமாதுகுலாவிய
அளகைப் பதியான கல்வாசலில் மகமாயி
இனநித்தில வாணகையார் வளர்பதி நற்குல சேரமாபுரி
இளசைக் கயிலாசரை நாடொறு மறவேனே.

3 காரும் புனலுஞ் சேர்ந்துநிதமும் கனவருஷமாய்ப்
பொழிந்திடக்
காசித்தலமுஞ் சேதுத்தலமுங் கலந்துசிறந்து வாழ்பவர்
ஏருஞ்சீருமன்ன சொன்னமு மிடைவிடாது வழங்கியே
இளசை மாதைய தனில்வளரு மேழுநகரத் தார்கள்மேல்
ஆரும்புகழு மோகனப்பள்ளை யடியான்பாடி யாடவே
அவனியதனை யோரடியினா லளந்த பெருமாள் பாதமும்
சேரும் பரமருமையவடனைச் சேர்ந்த மங்களமுகூர்த்தத்தில்
தேங்காயுகந்த பிள்ளையார்பதந் தினந்தினந்தொறும்
பணிவனே

4 அழகுசோழ நாட்டிலே அஞ்சூற்றறுபத்தொன்பது பதிகளும்
ஆனபாண் டியிலே சிவஸ்தல மறுபத்து நான்குப திகளும்
பழமையாக வைஞ்சூறுதலைப் பாகை சிறக்க வந்தவர்
பண்ணின புண்ணியம் வளர்ந்து வளர்ந்து பதினாயிரமாய்
வளர்ந்தவர்

இளசை மாதை யதனில்வளரும் ஏழுநகரத் தார்கள்மேல்
இசையிசையுடன் மோகனப்பள்ளை யின்பமாய்ப்
பாடியாடவே
வளமையாகத் தில்லை வனத்தில் வாதில் நடித்த காளியும்
வாரணமதி லேறுமழகர் மலர்ப்பதத்தையும் பணிவனே.

5 விளங்கு மாணிக்கம் பிச்சையிட்டவர் வெங்கரிதனை
நிறுத்தவர்
வெண்டிரை புகுந்தங்கக்கட்டியை வீட்டிலே வரவழைத்
தவர்
முழங்குசிங்கக் கொடிபுனைந்தவர் இளசைமாதை
நகரெல்லாம்
முகிலும் பொழியும் புவியும் வளையும் மோகனப்பள்ளைப்
பாடவே
தளங்கள் மிகுந்த சூரைச்சூறைசெய் ஷண்முக னிருபாதமும்
சதுர்முகனது நாவிலிருக்கும் சரஸ்வதியிரு பாதமும்
உளங்கொள் புனவை முதன்மையாருடன் பாண்டிநாட்டு
முதன்மையார் உண்மைநிரம்ப வழகர்பதமு முரிமையாகப்
பணிவனே

6 பாருள்ளோர் புகழாதி சந்திரன் பாண்டியன் மெத்த
வேண்டவே
பாரிசாதகதி தேரிலேறியே பாண்டிநாட்டினில் வந்தவர்
ஏருஞ்சீரு மன்ன சொன்னமும் இடைவிடாமல் வழங்கியே
இளசை மாதை நகரதேவதை யேழுநகரம் வளரவே
மேருவனைய வேதநாரணக் குடும்பனுமவன் பள்ளியும்
விண்ணவனத்தி லிளையபள்ளியும் வெகுசிங்காரமாகவே
மாருமுகமு நீறுபூசியே மண்வெட்டி தோளிலேற்றியே
வாரிக்குடும்பன் பன்னியாருடன் வணிகர்சபையில்
வருவனே.

விருத்தம்

7 கனலரி நிலவுபாயக் கங்கை கைலாசர் பங்கில்
அணிகரி யுரியர் மாதை யஞ்ஞூற்று நாதர் பதிதர்
மணிதனைப் பிச்சை யிட்ட வணிகர் பொற்சபை யிற்யபயப்
புணிமிகப் பூண்டு பள்ளன் பள்ளியுந் தோன்றி னாரே.

8 பல்விளக்கித்துவர நாவழித்துக் குளித்துப்
பஞ்சாக்ஷரஞ் செபித்து நீறுதரித்து
நல்வயனங்கள் பேசி யாத்துமாவுக் கிரங்கி
நாவலர்க்கிச்சை பேசி யாதரித்துச்
செல்வராக விருந்து காவியங்கள் பாராட்டிச்
சிவகாரியங்களுக்குத் தானிப்போது
கல்விவிளக்க முள்ளகுல சேகரப் பாண்டியன்
கல்வாச னாட்டிற் பள்ளன் றோன்றினானே.

9 மரபிலே தானிருந்து வாக்குமீறாமற் கொண்டு
வாயிலே பாக்கடகினோடு தரித்துக்
கரவு செய்வாரைக் கொட்டுக் கையால் டிப்பேனென்று
கறங்கு தொப்பாரங் கட்டிக் கடுக்கனிட்டுப்
புரவு பாண்டியனாட்டு வயல் சேரப் பயிரிடப்
போன செருக்காட்டி யெங்களாண்டே கையினால்
இரவலர்க்கீந்த கீர்த்தியான் சொல்லிடுவே னென்றும்
இளசை மாதைக்கு வாய்ந்த பள்ளனானே.

10 காதிற் கடுக்கனிட்டு மார்பிற் பதக்கம் பூண்டு
கந்தப் பொடி திமிர்ந்து கூந்தல் முடித்துச்
சாதிக் கள்ளுக் குடித்துக் கண்டாங்கி நெய்துடுத்துத்
தண்டை சிலம்பு வகை தாளிலணிந்து
நீதிநடக்கப் பெற்ற வுடைமையணி வணிகர்
நேயமான வடிமை நானே யென்று
மாதுவள ரிளசை மாதைப் பதிதனக்கு
வரிசைப் பள்ளியாள் வந்து தோன்றினானே.

## நாட்டுவளம்

(கட்டளைக் கலிப்பா)

11 நாவலோகம் பெருந்தீவு தன்னில் நகரமேழும் நடந்து வருநாள்
பூவுலோகத்திற் சோழ நாட்டையாள் பூவந்திச் சோழனைக் காணும்போது
மேவியே தன்னைக்கைகுவியார் தலையெட்ட வேண்டுமென கொய்துகொண்ட
ஆவிபோகினுங் கும்பிடேோமென்றறிக்கை சொன்னவர் தாமெங்களாண்டே,

12 பட்டணசாமியான வன்றன்னுடன் பாரவான் தனைத்த வணிகன்
அட்டபோகன் குணதத்தன் தன்னையு மாக்ஞை செய்யு மென்றார் அப்போதிற்
செட்டியார் தெருப்பள்ளிக் கூடத்தினிற் சிறுபிள்ளைகள் சிவன் கோயிறன்னில்
ஒட்டியைஞ்ஞூறு பிள்ளைகளாக வொளித்திருந்தவர் தாமெங்களாண்டே.

13 ராசபூசனன் பொன்முடி சூட்டவே ராசசோழன் மனதினி ணைந்து
காசுபொன் செய்புலவருடன் சொலக்கர்த்தனே யெங்களான் முடியாது
தேசிகர் வேண்டுமென்றுரை செய்யவே தேசமெங்கணும் பார்த்தழையுமென
ஆசையாணையு நம்பிக்கையுஞ்சொல்லியழைத்த வைஞ்ஞூறு பேரெங்க ளாண்டே.

14 தெண்ட தேசம் பெரும்பிடியில்லை சிறையெடுப்பில்லை வேறுவிலங்கில்லை
யண்டியே கையிணக்கம் அடிபிடி யாக்ஞையாம் இவை யெட்டுவகையும்
மண்டலத்திலினிமேல் வராதென்று மாமறையோனைத் தொட்டாணையும் மிட்டுக
கண்டு நம்பிய வாத்தியாருஞ்சொலக் காணவந்த நகரமென் னாண்டே.

15 தெள்ளு செந்தமிழ் ராசசோழேந்திரன் தேசிகர் தமைப் பார்த்தே யுரைப்பான்
வெள்ளாளர் வகைப்பெண் கொள்ளுமென்றபின் வேந்தன் முன்னொரு விண்ணப்பஞ் சொல்லுவார்
கொள்ளுவோம் பெண்கொடோமென்று சொன்னபின் கொற்றவன் பிறகோர் வார்த்தை சொல்லுவான்
உள்ள காராளச் செட்டிகள் நீரென வோங்குபேருங் கொண்டோரெங்களாண்டே.

16 காஞ்சிதில்லை யண்ணாமலையாருக்குங் காசிகும்பகோண
கழுக்குன்றமும்
வாஞ்சியுந் திருப்பூட்டமுந் தோட்டமு மானைக் காமலை
வீழிமிழலையும்
நீஞ்சி காவேரிதென் கூர் வலஞ்சுழி நெஞ்சங்கோடு பிரம்பூரு
டனே
மாய்ஞ்ச முந்நூற்றறுபத் தொன்பான் பதியத் தருக்குஞ்
சகாயரென்னாண்டே

17 சேரனும் சோழனும் பாண்டியனுமாகத் தேவர் கோமனை
யின் கணமுதுண்ண
ஏருலாவிய பாண்டிய னுண்ட விடத்திலே சுத்தி பண்ணவே
கண்டு
பாரிலுன் ராச்சியந் நீசரேரி பழைமை யென்ன நற்
பாண்டியன் கேட்டு
சேரியெங்கினும் நற்குடி யேற்றவே தேடிவந்த சோழ
நாடெங்களாண்டே

18 சுத்தஞ் சேர்ந்த சவுந்தரபாண்டியன் தொண்டை மண்டலந்
தன்னிலே சென்று
மொத்தமாக மனைதொறுஞ் சென்று முழுதுங் காத்திருந்
தெட்டாண்டு சென்று
புத்தியாகப் புதுப்புனலாடிப் பொருந்தும் வேளையிற்
கண்டு நன்றென்னக்
கொற்றவனளகா புரிவாழுங் குபேரன்தேரேறி வந்தாரென்
னாண்டே.

19 மண்டலம் புகழ் கோனேற வெற்புடன் மங்கை பாகர்
பிரான் மலைதானும்
தண்டமிழ் பொதியமலை தன்னுடன் சார்ந்த கந்தமலையது
தானும்
கொண்டல் சேர்ந்த பூசண்ட கிரியுடன் கோகருணை குடுமி
மலையும்
அண்டகுண்டமு மய்யமுங் கோளமு மாய்ந்த வேழு
நகரமென்னாண்டே

20 கங்கையாறு திருவேணி சங்கமுங் காவேரி கொள்ளிடமும் வெள்ளாறும்
வங்கமோடிய பாம்பாறு தேனாறு வாள்வரி சிலையாறு முத்தாறும்
பொங்கியே வருவைகை நதியும் புதுமைசேர் கன்னியா குமரியும்
அங்கங்குள்ள நாடெங்கு நகரமாயன்பு செய்பவர் தாமெங்களாண்டே,

# 14. இசை பிடிமானம்

டாக்டர் சுப. திண்ணப்பன்
தமிழ்ப் பகுதி, கல்விக்கழகம்
சிங்கப்பூர்

நாட்டுக்கோட்டைச் செட்டியார் என்று அழைக்கப் பெறும் நகரத்தார்களின் திருமணவீடுகளில் எழுதப் பெறும் திருமண ஒப்பந்தத்திற்கு இசை பிடிமானம் என்பது பெயர். மணப் பெண்ணின் கழுத்தில் மாப்பிள்ளை தாலி பூட்டிய பின்னர், உடனே மணமகளை உள்வீட்டுக்குள் கூட்டிச் சென்று முன்னிறுத்தி இந்த ஒப்பந்த வாசகம் படிக்கப்பெற்று, கையெழுத்து இடப்பெறும். இந்த ஒப்பந்தம் பொதுவாகப் பனையோலையில் எழுத்தாணி கொண்டு எழுதப் பெறுவது வழக்கம். ஏட்டில் எழுதுவோர் அருகிவிட்ட காரணத்தால் அண்மையில் வெள்ளைத்தாளில் எழுதத் தொடங்கியுள்ளனர். அச்சிட்டும் விற்கின்றனர். இவ்வொப்பந்தம் மணமகனின் தந்தை மணமகளின் தந்தை ஆகிய இருவருக்குமிடையே அமைவதால் இருவரும் கையெழுத்திடுகின்றனர். திருமணத் திற்கு முதல்நாள் மணமகளின் பங்காளி ஒருவரால் இந்த ஒப்பந்தத்தின் ஒரு பிரதியும் மணமகனின் பங்காளி ஒருவரால் மற்றொரு பிரதியுமாக இரண்டு பிரதிகள் எழுதப் பெற்றுத் திருமண நாளன்று மேற்சொல்லப்பட்டவாறு படிக்கப் பெற்றுக் கையெழுத்து இடப்பெறும். மணமக்களின் தந்தையர் கையொப்பம் இடுமுன் இப்பிரதிகளை எழுதியவர்களும் தத்தம் கோயிற் பிரிவுடன் கையொப்பமிடுவர்.

## பெயர்

இந்த ஒப்பந்தத்திற்குப் பெயர் இசை பிடிமானம் என்பதாகும். இது திருமணத்திற்கு மணமக்களின் தந்தையார் இசைந்து உடன்பட்டதற்கு ஆதாரமாக—பிடிமானமாக அமை வதால் இசை பிடிமானம் எனப்பட்டது. இசைவுக்குரிய பிடிமானம் ஆதலின் இசைவுப் பிடிமானம் என்பர். இந்த ஒப்பந் தத்தின் இறுதியில் இந்த ஒப்பந்தத்தை எழுதியவர் யார் என்பதைக் குறிக்கவரும் வாக்கியத்தில் "இந்த இசைகுடி

மானம் எழுதினேன்..." என்று வருகிறது. இங்கு இசை குடிமானம் என்ற பெயர் அமைவதைப் பார்க்கிறோம். இங்கு மானம் என்பதை 'பிரமாணம்' என்பதன் திரிபாகக் கருதி இசைந்த குடிக்கு உரிய பிரமாணம் என்று கருதுவாரும் உளர்.

அமைப்பு முறை

முதலில் திருமணநாள் தமிழ் ஆண்டு முறைப்படி ஆண்டு மாதம், தேதி குறிக்கப் பெற்றிருக்கிறது. பிறகு ஒப்பந்தம் எழுதிக் கொள்ளும் மணமக்களின் தந்தையர் பெயர் கோயிற் பிரிவுடன் எழுதப்பெறும். பிறகு மணமகன் பெயர் மணமகள் பெயர் குறிக்கப்பெற்று இவர்களிருவரும் திருமணம் செய்து கொண்டதற்காக இருவரின் தந்தையரும் கொடுக்கும் நன் கொடைப்பொருட்கள் விவரம் தரப் பெற்றிருக்கும். இறுதியில் இசைபிடிமானம் எழுதியவரின் கோயிற் பிரிவுடன் பெயர் கொடுக்கப்பெறும். பிறகு கையெழுத்து இடப்பெறும். இசை பிடிமான வாசக அமைப்பு கொடுக்கப் பட்டுள்ளது.

—வருஷம்—மாசம்—தேதி

கல்வாச நாட்டில் இளையாற்றக் குடியான குலசேகர புரத்தில் ஒக்கூருடையான் அருணாசலஞ் செட்டி ராமநாதரோ, கேரளசிங்க வளநாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டியபுரத்தில் அரும்பாக் கூருடையான் கண்ணப்பசெட்டி நாராயணரோ இவர் மகன் சுப்பிரமணிய னுக்கு இவர்மகள் வள்ளியம்மையை பாணிக்கிரகணம் பண்ணிக் கொண்டமைக்கு இவர் பூஷணம் பூட்டும் பொன் ஒன்பது ஆறுகல்லெடை; பொன்பதிமுக்கழஞ்சு இவர் சீதனம் கொடுக்கும் பொன் இம்மாறு, இவ்வெடை பொன் ஆறுகழஞ்சு. வெள்ளி ஆறுகழஞ்சு. வெண்கலந்தராப்பலம் ஆறுபதி தொன்று, வெள்ளாட்டிக்கிப் பணம் முப்பது, சீராட்டுச் சக்கரம் ஆறுபதி தொன்று இவ்வகைப் படி செய்வோம். இவர் நன்கொடை கொடுக்கும் பொன் ஐம்பது, மோதிரம் விராகனெடை மூன்று இவர் உகந்துடைமையாய்க் கொடுக்கும் பொன் வளையி ஏழு கழஞ்சு, இவ்வகைப்படி செய்வோம். இந்த நாள் இவரிடும் பொன் இவர் சொற்படி தெரிசனை பதிமுக் கழஞ்சு இவ்வகைப் படி செய்வோம். இந்த இசைபிடிமானம் எழுதினேன் கல்வாச னாட்டில் இளையாற்றக்குடியான

குலசேகர புரத்தில் ஒக்கூருடையான்...

கையெழுத்து... —

மாப்பிள்ளை வீட்டுக்காரர் கையெழுத்து...

பெண் வீட்டுக்காரர் கையெழுத்து

கோயிற் பிரிவு

நகரத்தார்களை ஏனைய செட்டியார்களில் இருந்து இனம் பிரித்துக் காட்டுவது அவர்கள் சார்ந்துள்ள கோயிற் பிரிவுகளேயாகும். இளையாற்றக்குடி, மாற்றூர், வயிரவன் கோயில், இரணியூர். பிள்ளையார்பட்டி, நேமம், இலுப்பக் குடி, சூரைக்குடி, வேலங்குடி என்ற ஒன்பது கோயில் பிரிவுகள் உண்டு. இளையாற்றக் குடிக்கோயிலில் ஏழு உட்பிரிவுகளும் மாற்றூர்கோயிலில்மூன்று உட்பிரிவுகளும்,வயிரவன் கோயிலில் மூன்றுஉட்பிரிவுகளும் உள்ளன.இவையனைத்தும் ஏனைய இனத் தினரின் கோத்திரங்களைப் போன்றவையாகும். ஒரு பிரிவைச் சார்ந்தவரிடையே திருமணம் நடைபெறுவதில்லை. நகரத்தார் களின் சாதிமுறை நியாயப்படி இரணியூர்க் கோயிலாரும், பிள்ளையார்பட்டிக் கோவிலாரும் சகோதர வமிசத்தாராத லால் தம்முள் கலியாணஞ் செய்து கொள்ளக்கூடாது· மற்றை கோவில்களில் செய்து கொள்ளலாம். இளையாற்றக்குடிக் கோயில் உட்பிரிவுகட்கிடையேயும் மாற்றூர்க் கோயில் உட் பிரிவுகட்கிடையேயும் திருமணம் செய்து கொள்கின்ற வழக்கம், புள்ளிகள் பெருகிவிட்ட பிற்காலத்தில் தொடங்கியதாகக் கருதலாம். எப்பொழுது தொடங்கியது என்பதை அறுதியிட்டுச் சொல்ல இயலவில்லை. வயிரவன் கோயில் உட்பிரிவுகட்கிடையே திருமணம் செய்துகொள்கின்ற வழக்கம் கிடையாது. இரணிக் கோயில் பிள்ளையார்பட்டி கோயிலார் சேர்ந்து இருவருக்கு மிடையே விலக்கப்பட்ட திருமணத்தொடர்பையும் நீக்கினால் 249 இணைகள் தான் வரமுடியும்.

கோயிற் பிரிவுகளைக் குறிப்பிடும் போது வளநாடு, நாடு ஊர், புரம் உடையார் என்ற வகுப்பு முறை வரிசையைக் காண்கிறோம்.

வளநாடு

வளநாடு என்னும் பிரிவில் கேரள சிங்க வளநாடு என்ற ஒன்றை மட்டுமே காண்கிறோம். இளையாற்றங்குடி, இரணியூர்

பிள்ளையார்பட்டி என்ற மூன்று கோயிற்கும் வளநாடு குறிக்கப் பெறவில்லை. கேரள சிங்கன் என்ற பெயர் முதலாம் இராசரா சனுடைய விருதுப்பெயர்களுள் ஒன்றாக அமைந்துள்ளது மேலும் வளநர்டு, நாடு, ஊர் என்ற பாகுபாடும் முதலாம் இராசராசன் காலத்திலேயே தோன்றியதாகவும் வரலாற்று அறிஞர்கள் கூறுவர். வளநாடு,நாடுஎன்ற இப்பெயர்கள் செட்டி நாடு சுங்கமில்லாச் சோழநாட்டின் ஒருபகுதியாக இருந்தபோது சோழ அரசர்களால் வழங்கப் பெற்றவை. சோழமன்னர்கள் ஒவ்வொரு மண்டலத்தையும் பல வளநாடுகளாகப் பிரித்திருந் ததாகவும் ஒவ்வொரு வளநாடும் இரண்டிரண்டு பேராறுகளுக்கு இடையில் அமைந்திருந்த நிலப்பரப்பாகும் என்றும் டி. வி. சதாசிவப் பண்டாரத்தார். 'முதற்குலோத்துங்கன்' என்னும் நூலில் கூறுவர். இதை நோக்க சிங்கவளநாடு என்பது வெள் ளாற்றுக்கும் வைகையாற்றுக்கும் இடையில் உள்ள நிலப்பரப் பைக் குறித்திருக்கக்கூடும் என்பது சோமலெ கருத்து.

நாடு

நாடு என்ற பாகுபாட்டில் கல்வாசனாடு, பிரம்பூர்நாடு, பாலையூர்நாடு என்ற பெயர்களைக் காண்கிறோம். வயிரவன் கோயில், நேமம், சூரைக்குடி என்ற மூன்று கோயில்கட்கும் நாடு என்ற பாகுபாடு குறிக்கப் பெறவில்லை. கல்வாசனாடு என்றபிரிவின் கீழ் இளையாற்றக்குடி, இரணிக்கோயில், பிள்ளையார்பட்டி என்ற மூன்றும் வருகின்றன. இப்போதுள்ள பிள்ளையார்பட்டியும், இரணிக்கோயிலும் கல்வாசனாட்டில் கீழ் வாரா என்பது சா. கணேசன் கருத்து.(பிள்ளையார் பட்டி தலவரலாறு) இசை பிடிமானத் தொடரில் இவ்விரண்டு கோயில்களையும் குறிக்க முறையே வருந்தொடர்களான, கல்வாசனாட்டில் இளையாற்றக் குடியான இரணியூர் மருதங் குடியான நாராயணபுரத்தில் இரணியூர்த் திருவேட் பூருடை யார்.' ''கல்வாசனாட்டில் இளையாற்றக்குடியான இரணியூர் மருதங்குடியான நாராயணபுரத்தில் பிள்ளையார்பட்டியான திருவேட்பூருடையார்'' என்பதில் வரும் கல்வாசனாடு என்பதை இளையாற்றக்குடிக்கு அடைமொழியாகக் கொண்டு ஏனைய இரண்டு கோயில்களும் இளையாற்றக்குடியிலிருந்து பிரிந்தவை என்பதைக் குலசேகரப்புரத்தில் என்ற சொல் வரையும் அமையும் பொதுத் தொடராலும், இக்கோயில்

பிரிவினர் இருவரும் உடன் பிறப்பினர் என்பதைத் திருவேட்பூருடையார் என்ற பொதுத் தொடராலும் அறியலாம்.

பிரம்பூர் என்ற நாட்டின் கீழ் மாற்றூர், இலுப்பைக்குடி என்ற இரண்டு கோயில்களும் வருகின்றன. இங்கு பிரம்பூர் என்பது வள்ளல் பாரியின் பறம்பு என்பதன் திரிபு என்று சோமலெ கருதுகின்றார்கள். இப்போதுள்ள பிரான்மலை பகுதியைப் பறம்புமலைப் பகுதியாகக் கொண்டால் அதற்கு அண்மையில் இருக்கும் இளையாற்றக்குடியும் பிரம்பூர் நாட்டின் கீழ்தான் வரவேண்டும். அதை விடுத்து மாற்றூர் இலுப்பைக்குடி மட்டும் பிரம்பூர் நாட்டின் கீழ்வருவானேன்?, பாலையூர் நாட்டின் கீழ் வேலங்குடி என்ற பகுதி வருகிறது. பாலையூர் என்பது கண்டனூரை யொட்டிய ஊர் ஆகும் நாட்டுப் பகுதியையடுத்து, 9 கோயிற் பிரிவுகளின் பெயர்கள் வந்து ஆன என்ற சொல் வருகிறது- இந்த ஒன்பது கோயிற் பிரிவுகளில் வயிரவன் கோயிற் பெயரில் மட்டும் வயிரவன் கோயில் என்ற பெயர் குறிக்கப்படாமல் ஏழகப் பெருந்திரு என்ற பெயரே இசை பிடிமானத்தில் குறிக்கப்படுகிறது ஏழகப் பெருந்திரு என்பது வயிரவன் பட்டியின் பழைய பெயராக இருந்திருக்கவேண்டும் இத்தொடர் ஒருபடையைக் குறிக்கும். இது கல்வெட்டுக்களில் குறிக்கப்படுகிறது (முதலாம் குலோத்துங்கனின் மெய்க்கீர்த்தி மட்டியூரிலிருந்து வந்த ஏழகப் படையை தோற்கடித்து ...)

புரம்

அடுத்து புரத்தில் என்ற பெயர் குறிக்கப்படுகிறது. குலசேகரபுரம், வீரபாண்டியபுரம், தேசிக நாராயணபுரம் ராஜநாராயணபுரம் என்ற நான்கு புரங்கள் வருகின்றன. இலுப்பைக்குடிக்கு மட்டும் புகழிடம் கொடுத்த பட்டணம் என்ற தொடர் வருகிறது. புகழுக்கு இடங்கொடுத்த பட்டணம்என்பதுஇதன்பொருளாகும். சிலர்புகலிடம்கொடுத்த பட்டணம் என்ற சொற்றொடர்தான் புகழிடங்கொடுத்த பட்டணம் என்று தவறாக எழுதப் பட்டதாகக் கருதுகிறார்கள் இலுப்பைக்குடியில் அரசர் இருவருக்கு அடைக்கலம் கொடுத்த கதையும், அவன் அக்கோயிலுக்கு கொடுத்த மானியமும் இதற்குச் சான்றாகும். குலசேகரபுரம்என்பது இளையாற்றக் குடிக்கும் நேமத்திற்கும் வருகின்றது. வீரபாண்டியபுரம்

என்பது மாற்றூர்க்கும் ஏழகப் பெருந்திருவான வயிரவன் கோயிலுக்கும் வருகின்றது- தேசிகநாராயணபுரம் என்பது சூரைக்குடி, வேலங்குடி ஆகிய இரண்டிற்கும் வருகின்றது. ராஜ நாராயணபுரம் என்பது இரணியூர், பிள்ளையார்பட்டி ஆகியவற்றைக் குறிக்கும் மருதங்குடியைக் குறிப்பிட வருகிறது. இவற்றுள் குலசேகரன் வீரபாண்டியன் என்பன பிற்காலப் பாண்டியர்களின் பெயர்களாக இருக்கின்றன.

உடையார்

அடுத்து உடையார் என்ற சொல்லுடன் பல ஊர்ப் பெயர்கள் சேர்ந்து வருகின்றன. ஒக்கூர், பெருமருதூர்· கிங்கிணிக்கூர், பேரசெந்தூர், சிறுசேதூர், உறையூர் அரும் பாக்கூர், மணலூர், மண்ணூர், கண்ணூர், கருப்பூர், குளத்தூர் சிறுகுளத்தூர் இரணியூர் திருவேட்பூர் கழனி நல்லூர் என்பன ஊர் என்ற சொல்லில் முடிகின்றன. இரணியூர் பிள்ளையார் பட்டி இரண்டிற்கும் பொதுவாகத் திருவேட்பூர் என்று வருகின்றது. கழனிவாசல் மகேந்திரபுரம், இளநலம், சூடா மணிபுரம் புகழ்வேண்டிய பாக்கம், கழனிவாசக்குடி என்பன ஏனைய பெயர்கள். இளையாற்றக்குடியில் அரும்பாற்கிளையா ரான பட்டணசாமி பிரிவுக்கு மட்டும் உடையார் என்று சேர்க்கப்படவில்லை. மேலும் இந்தத் தொடரைத்தவிர ஏனைய தொடர்களனைத்தும் ஊர்பெயர்களாக வந்துள்ளன. எனவே அரும்பாற்கிளையாரானபட்டணசாமி என்றபிரிவிற்கும் ஊர்ப்பெயர்தான் இருந்திருக்க வேண்டும். பட்டணசாமிக்கும் பட்டினத்தார்க்கும் தொடர்புகாட்டி, பட்டினத்தார்பெயருக்கு ஏற்பப் பின்னாளில் வந்ததாகவும்இருக்கலாம். இப்பொழுது இந்த ஊர்கள் எப்பகுதியில் உள்ளன என்பது ஆய்விற்குரிய ஒன்றாகும். ஒன்பது நகரக் கோயில்களைச் சுற்றி இந்த ஊர் இருப்பதாகத் தெரியவில்லை. உடையார் என்பது ஜமீந்தார் என்பது போல அந்த ஊரை உடைமையாகப் பெற்றவர்கள் என்பதைக் குறிக்கும். இவ்வூர்கள் பூம்புகார் நகரத்தையொட்டி நகரத்தார்கள் உடைமையாகப் பெற்றுக் குடியிருந்த ஊர் களாகும். ஓர் ஊரினர் வேற்றூரில் உள்ளவர்களைத் திருமணம் செய்து கொள்வதென்ற நிலையில் அப்போது இருந்திருக்கலாம்.

ஒப்பந்தத்திற்கு உரியோர்

மணமகன், மணமகள் தந்தையார் பெயர்கள் வருகின்றன. அருணாசலஞ்செட்டி ராமநாதர் என்பது

அருணாசலம் செட்டியார் மகன் ராமநாதன் என்பதைக் குறிக்கும். இது தற்காலத்தில் 'Expanded Initial' உடன் பெயர் எழுதுவது போன்றதாகும்.

## பாணிக்கிரகணம்

இவர் மகன் சுப்பிரமணியனுக்கு இவர் மகள் வள்ளியம்மையைப் பாணிக்கிரகணம் பண்ணிக்கொண்டமைக்கு என்று வருகிறது. இங்கு பாணிக்கிரகணம் என்பது கை தொட்டுக் கொடுக்கும் திருமணத்தைக் குறிக்கும். நகரத்தார் திருமணங்களில் மணவறைமுடிவில் மணமக்களின் உள்ளங்கைகளை ஒன்றாகச் சேர்த்து மங்கலப் பொருட்களை வைத்துப் பட்டுத் துணியால் கட்டித் தீவலம் வரச் செய்வதைப் பார்க்கிறோம். கோவலன் கண்ணகி திருமணத்தில் இவ்வாறு 'தீவலம் செய்வது காண்பார் கண்நோன்பு என்னை?' சிலப்பதிகாரம் மங்கல வாழ்த்துப்பாடல் வரி 53) என்று குறிப்பிடப் படுகின்றது, நகரத்தார் திருமணச் சடங்குகளில் கைபிடி சோறு என்பதும் ஒன்று,

## மணமக்கட்கு நன்கொடை

அடுத்து இத்திருமணத்திற்கு மணமக்களின் தந்தையார் கொடுக்கும் பட்டியல் வருகின்றது. இவர் என்ற சொல் இந்த ஒப்பந்தம் முழுவதும் கையாளப் பெறுவதால் மணமகனின் தந்தை யார்? மணமகளின் தந்தை யார்? என்று அறிவது சிரமமாயிருக்கும் இருந்தாலும் ஓரளவு இக்கால வழக்குகளின் அடிப்படையில் ஊகிக்கவழியுண்டு. இவ்வகைப்படி செய்வோம் என்ற தொடர் மூன்று முறை வருகிறது முதலிரண்டு முறைகளிலும் இருவீட்டாரும் கொடுக்கும் முறைகள் வருகின்றன.

## மாப்பிள்ளையின் தகப்பனார் கொடுப்பவை

1. பூஷணம் பூட்டும் பொன் ஒன்பது மாற்றுக் கல்லெடைபொன் 13 கழஞ்சு
2. நன்கொடை (கொடுக்கும்) பொன் 50
3, மோதிரம் விராகன் எடை 3

பெண்ணின் தகப்பனார் கொடுப்பவை

(1) (அ) சீதனம் கொடுக்கும் பொன் இம்மாறு இவ்வெடை பொன் 6 கழஞ்சு

(ஆ) வெள்ளி 6 கழஞ்சு

(இ) வெண்கலம் தராப்பலம் 61

(2) வெள்ளாட்டிக்குப் பணம் 30

(3) சீராட்டிச் சக்கரம் 61

(4) உகந்துடைமை பொன் வளையி கழஞ்சு 7 தெரிசனை பொன்கழஞ்சு 13

பூஷணம்

மாப்பிள்ளை வீட்டார் பெண்ணுக்குப் பூஷண (நகை)த் துக்காகவும் நன்கொடையாகவும் மோதிரத்துக்காகவும் பொன் கொடுத்துள்ளார்கள். பூஷணம் என்பது இங்கு நகரத்தாரிடையே இன்றும் விளங்கும் திருமாங்கல்யமாகிய கழுத்துரு என்ற மங்கல அணிகலனையே குறிக்கும். இன்றும் திருமணத்திற்கு முன் மாப்பிள்ளை வீட்டார் கழுத்துருக்குப் பொன் கொடுக்கும் சிறப்புச் சடங்கு நிகழ்ச்சி நகரத்தாரிடையே நடைபெறுவதைக் காணலாம்.

நன்கொடை

நன்கொடை கொடுக்கும் பொன் என்பது மாப்பிள்ளை வீட்டார் மணமக்களுக்குக் கொடுக்கும் பொனனாகும். இது இன்றும் 'ஈடுபொன்' என்று வழங்கப்படுகிறது. இன்று திருமண நிகழ்ச்சி முடிவில் மணமகன், மணமகள் வீட்டார் இருவரும் கணக்குப் பார்த்துக் கொள்ளும்போது மாப்பிள்ளை வீட்டார் எவ்வளவு ஈடு பொன்னுக்குத் தருகிறார்கள் என்று கேட்டு மணமக்கள் பணத்தில் சேர்ப்பது வழக்கமாக உள்ளது.

மோதிரம்

மோதிரம்; மாப்பிள்ளை வீட்டார் பெண்ணுக்குக் கொடுத்ததாக இசை பிடிமானம் கூறுகிறது. ஆனால் இன்று பெண் வீட்டார்தான் மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும்

மோதிரம் போடுகின்றனர். பழங்காலத்தில் பெண்ணுக்கு மாப்பிள்ளை வீட்டார் மோதிரம் போடும் பழக்கம் இருந்திருக் கலாம். அல்லது பெண்ணுக்குக் கொடுக்கும் வெள்ளிக் கால் மோதிரத்தை இது குறிக்க இடமுண்டு. வெள்ளி, விராகன் எடையில் நிறுக்கப்பட்டிருக்கவேண்டும்.

சீதனம்

ஸ்ரீதனம் என்பது சீதனமாகிறது. பெண்ணுக்குரிய தன மாகும். பெண்ணின் தகப்பனார் பெண்ணுக்குச் சீதனமாகப் பொன்னும் வெள்ளியும் வெண்கலம் தராவும் கொடுத்துள்ளனர் பொன் வெள்ளி வெண்கலம் தரா என்ற நான்கும் உலோகப் பொருள்களாகும். வெண்கலம் தரா என்ற இரண்டும் கலப்பு உலோகங்களாகும். வெண்கலம் என்பது செம்பும் வெள்ளீய மும் கலந்து உருக்கி உண்டாக்கப்படும் கலப்பு உலோகம். தரா என்பது எட்டுப் பாகம் செம்பும் ஐந்து பாகம் காரீயமும் கலந்த ஒரு கலப்பு உலோகம். இவற்றால் செய்யப்பட்ட பொருள்களைப் பெண்ணுக்குப் பெண் வீட்டார் வழங்கியுள்ள னர்.

வெள்ளாட்டி

வெள்ளாட்டிக்குப் பணம் முப்பது பெண் வீட்டார் கொடுத்துள்ளதாகக் குறிப்புள்ளது. இங்கு வெள்ளாட்டி என்ற சொல் பணிப்பெண்ணைக் குறிக்கும். வைணவ உரை நூலாகிய ஈடு என்னும் நூலிலும் இப்பொருளில் வருவதாகச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி குறிப்பிடுகிறது. பேச்சு வழக்கில் வெள்ளாட்டி என்பது வைப்பாட்டியைக் குறிக்கும் என்றும் தமிழ்ப் பேரகராதி பொருள் தருகின்றது. டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் வெள்ளாட்டி என்பது நகரத் தார்கள் மணந்துகொண்ட வேளாளர் மரபுப் பெண்டிரை உணர்த்தும் ஒரு சொல்லாக (வெள்ளாளன் - வெள்ளாட்டி) ஆச்சி என்பதற்கு ஈடாக வெள்ளாட்டி என்று வழங்கியதாகக் கருதுகிறார்கள். நகரத்தார் அறப்பட்டயங்கள் என்று அவர் கள் பதிப்பித்த நூலில் உள்ள பட்டயம் ஒன்றில் இவ்வழக்கு வருகின்றது. அக்காலத்தில் ஆச்சி என்ற சொல் வழக்கி லில்லை. எனவே வெள்ளாட்டி என்பது இங்கு மணமகனின் தாயாரை உணர்த்தும் ஒரு சொல்லாக அவர்கள் கருதுகிறார் கள்.

## சீராட்டு

சீராட்டு என்பது செல்லம் பாராட்டுகையைக் குறிக்கும் இன்றும் சீர் வைத்தல் ஒரு சடங்காக இருக்கின்றது சீராட்டுக் கொண்டு போதல் என்ற சடங்கும் உண்டு.

## உகந்துடைமை

உகந்துடைமையாய் விரும்பிக் கொடுக்கும் பொருளாகப் பொன் வளையல் குறிக்கப் பெறுகின்றது

## தெரிசனை

'இந்தநாள் இவரிடும் பொன் இவர்சொற்படி தெரிசனை பதிமுக்கழஞ்சு இவ்வகைப்படி செய்வோம்' என்று வருகிறது. தெரிசனை இடும்-தெரிசனை என்பது புனிதமான காட்சியைக் குறிக்கும். முன் சொன்ன அனைத்தும் பொருள்களாக-சாமான்களாக அமைய மணமகள் வீட்டார் சொற்படி தங்கமாகவே நேரில் கொணர்ந்து கொடுத்ததாகத் தெரிசனை அமைந்திருக்கலாம்.

## அளவுகள்

இசை பிடிமானத்தில் பொன் வெள்ளி இரண்டும் கழஞ்சு என்ற அளவாலும் வெண்கலம் தரா என்ற இரண்டும் பலம் என்ற அளவாலும் குறிக்கப் பெறுகின்றன. பணம், சக்கரம் வராகன் எடை என்ற அளவுகளும் குறிக்கப்பெறுகின்றன. பொன்நகையைப்பற்றி வருமிடத்தில் மாற்று கல்லெடையுடன் குறிக்கப் பெறுகின்றது. ஆனால் மோதிரம், விராகன் எடை என்ற அளவுடன் வருகின்றது.

## கழஞ்சு

இக்காலத்தில் $\frac{1}{6}$ அவுன்ஸ் ட்ராப் மதிப்புள்ள ஒரு எடுத்தல் அளவை என்று தமிழ்ப் பேரகராதி குறிக்கிறது. 'ஒன்றே கால் வீசம் வராகன் எடை' இந்த எடையுள்ள பொற்காசு பல்லவர் காலத்தில் செலாவணியாக இருந்தது என்றும் இராஜ ராஜ சோழன் காலத்தில் வழங்கிய 68 தானியமணி (Grain) மதிப்புள்ள எடை ஒன்றும் எடுத்தலளவையால் மதிப்புப் பெறும் ஒரு வகை நாணயம் என்றும் சேரமலெ அவர்கள் வாயிலாக அறிகிறோம்.

மாறுகல்லெடை

ஒன்பது மாற்றுள்ள ஆறு கல்லெடை கொண்ட பொன் நாணயம் என்பது பழக்கத்தில் உள்ள ஒரு ஸ்டாண்டர்டு எடையாக இருக்கலாம். மாற்று-மாறு பொன் வெள்ளியின் தரத்தை உரைத்துப் பார்த்துணர்வதாகும். இப்போது ஆசாரிகள் மச்சம் என்று சொல்கிறார்கள்.

பலம்

பலம் என்பதும் ஒரு நிறுத்தலளவை. வெண்கலம், தரா என்ற உலோகங்களை நிறுக்க உதவுவது. 8 பலம் ஒரு சேர் என்று நிறுத்தலளவை வாய்பாடு. இதன் இன்றைய சரியான மதிப்பு தெரியவில்லை.

பணம்

இது ஒருவகை நாணய அளவு. எட்டுப்பணம் கொண்டது ஒரு ரூபாய் ஆகும். $\frac{1}{8}$ ரூபாய் ஒரு பணம், இவ்வாறு செட்டி நாட்டுப்பேச்சில் வழங்கக் கேட்டிருக்கிறேன். இன்றும் மொய்ப் பணம் எழுதும்போது பணம் எவ்வளவு எழுதுவது என்று கேட்கிறார்கள். ஆயாள் வீட்டார், (மாமா) மாமாப்பணம் இவ்வாறு கணக்கிடப்படுவதை இன்றும் காணலாம்.

பொன்

பொன் என்பது நன்கொடை கொடுக்கும் பொன் ஐம்பது என்று வருகிறது. பொன் என்பது 10 பணம் என்று சோமலெ குறிப்பிட்டுள்ளார்.

சக்கரம்

சிராட்டு சக்கரம் என்ற அளவால் குறிக்கப் பெறுகிறது சக்கரம் என்பது தென்னிந்தியாவில் பழங்காலத்தில் வழங்கிய பழைய வெள்ளி நாணயம் என்றும் $\frac{1}{6}$ தங்கப் பகோடா மதிப்புடையது என்றும் அரையணா மதிப்புள்ளதாக (3 நயா பைசா) மலையாளத்தில் திருவாங்கூரில் வழங்கிய நாணயம் என்றும் பேரகராதி வாயிலாக அறிகிறோம்.

## வராகன் எடை

மோதிரம் வராகன் எடை என்று அளவால் குறிக்கப் பெறுகின்றது. 5/16 ரூபாய் 54 மணி மதிப்புள்ளதென்று நிறுக்கும் நிறை வகை. செட்டி நாட்டு ஆசாரிகள் தங்கத்தை வராகன் எடையில் நிறுத்துச் சொல்வதை இன்று காணலாம். 2 - 3/16 வராகன் எடை என்பது இன்று 8 கிராம் கொண்ட ஒரு பவுன் ஆகும். 3 ம் 3/16 வராகன் எடை என்பது 11 கிராம் கொண்ட வெள்ளி எடையாகும் சோழர் காலத்தில் செட்டியார்கள் சாளுக்கிய ஆட்சிக்குட்பட்ட நாடுகளுக்குச் சென்று வாணிகம் செய்ததன் பயனாக வராகன் என்னும் நாணயம் தமிழ் நாட்டுக்கு வந்தது என்றும் அதன் மதிப்பு ஒரு வராகன் ரூ. 3 - 50 என்றும் சோமலெ கூறுவார்.

## கையொப்பம்

இசைபிடிமானம் எழுதினவர் கோயிற் பிரிவு எழுதிக் கையொப்பமிட வேண்டும். பிறகு மணமகனின் தந்தையாரும் மணமகளின் தந்தையாரும் கையொப்பமிட வேண்டும். தந்தையார் இல்லாவிடில் அடுத்த தந்தை வழி (நெருங்கிய உரிமையாளர்) பங்காளி உறவினர் கையொப்பமிடலாம். கையொப்பமிடுபவர் யாராயினும் மேற்கண்ட இசை பிடிமான வாசகம் மாற்றப் பெறாது மணமகள் வீட்டில்தான் இரண்டு பிரதிகளும் வைக்கப் பெறும். மறுமணம் செய்து கொள்ளும் உரிமை ஆணுக்குண்டு. பெண்ணுக்கு இல்லை. திருமணத்தை உறுதி செய்யும் பிடிமானம் பெண்ணுக்குத் தான் இன்றியமையாத தேவை எனக் கருதிப் பெண் வீட்டாரிடம் வைத்தனர் போலும். இசைபிடி மான்ம் எழுதியவர்க்கு மணமக்கள் வீட்டார் பழம், பெட்டி, சட்டி பாக்கு அன்பளிப்பாக வழங்குவர்.

# இணைப்பு

| எண் | வளநாடு | நாடு | ஊர் | புரம் | உடையார் |
|---|---|---|---|---|---|
| 1. | | கல்வாசல் | இளையாற்றக்குடி | குலசேகரபுரம் | ஒக்கூர் |
| 2. | | ,, | ,, | ,, | அரும்பாற்கிளையாரான |
| | | ,, | ,, | ,, | பட்டணசாமி |
| 3. | | ,, | ,, | ,, | பெருமருதூர் |
| 4. | | ,, | ,, | ,, | கழனிவாசக்குடி |
| 5. | | ,, | ,, | ,, | கிங்கிணிக்கூர் |
| 6. | | ,, | ,, | ,, | பேரசெந்தூர் |
| 7. | | ,, | ,, | ,, | சிறுசேதிதூர் |
| 8. | கேரளசிங்க | பிரம்பூர் | மாற்றூர் | வீரபாண்டிய | உறையூர் |
| 9. | ,, | ,, | ,, | ,, | அரும்பாக்கூர் |
| 10. | ,, | ,, | ,, | ,, | மணலூர் |
| 11. | ,, | ,, | ,, | ,, | மண்ணூர் |
| 12. | ,, | ,, | ,, | ,, | கண்ணூர் |
| 13. | ,, | ,, | ,, | ,, | கருப்பூர் |
| 14. | ,, | ,, | ,, | ,, | குளத்தூர் |
| 15. | கேரளசிங்க | — | ஏழகப்பெருந்திரு | வீரபாண்டிய | சிறுகுளத்தூர் |

| எண் | வளநாடு | நாடு | ஊர் | புரம் | உடையார் |
|---|---|---|---|---|---|
| 16. | ,, | | ,, | ,, | கழனிவால் |
| 17. | ,, | | ,, | ,, | மருதேந்திரபுரம் |
| 18. | — | கல்வாசல் | இளையாற்றக்குடி இரணியூர் மருதங்குடி | குலசேகர ராஜநாராயண | திருவேட்பூர் |
| 19. | | கல்வாச | இளையாற்றக்குடி இரணியூர் மருதங்குடி (பிள்ளையார் பட்டி) | குலசேகர ராஜநாராயண | திருவேட்பூர் |
| 20. | கேரளசிங்க | | நேமம் | குலசேகரபுரம் | இளநலம் |
| 21. | கேரளசிங்க | பிரம்பூர் | இலுப்பைக்குடி | புகழிடம் கொடுத்த பட்டணம் | சூடாமணிபுரம் |
| 22. | கேரளசிங்க | | சூரைக்குடி | தேசிகநாராயண | புகழ் வேண்டிய பாக்கம் |
| 23. | கேரளசிங்க | பாலையூர் | வேலங்குடி | தேசிகநாராயண | கழனிநல்லூர் |

(நன்றி) (சித்தாந்த வித்தகர் முரு பழ இரத்தினம் செட்டியார் அவர்கள் மணிவிழாமலர்)

## 15. புலவன் சரித்திரம்

*(பிரமனூர் மிராசுக் கணக்கு வில்லியப்ப பிள்ளை)*

1876-ல் நிலவிய கொடிய பஞ்சத்தைத் தாது வருஷப் பஞ்சம் என்று சொல்வார்கள். அந்தக் காலத்தில் மக்கள் சொல்லொணாத துயர்களுக்கு உள்ளானார்கள். அதேசமயத்தில் சிலர் ஊரை ஏமாற்றிப் பிழைக்கவும் முற்பட்டனர். வியாபாரிகள் மற்றும் போலி வேடம் தாங்கிய சோதிடர்கள், வைத்தியர்கள், புலவர்கள் முதலியவர்களின் ஏமாற்று வித்தைகளை விவரித்து நகைச்சுவை ததும்பப் ''பஞ்சலட்சணத் திருமுக விலாசம்'' என்ற நூலை இயற்றினார் சிவகங்கை சமஸ்தானப் புலவரான பிரமனூர் மிராசுக் கணக்கு வில்லியப்ப பிள்ளை. இது 1899-ல் அரங்கேறியது. இந்தநூலுக்கு இணையான நகைச்சுவை நூல்உலக இலக்கியத்திலேயே கிடையாது என்றுதுணிந்து சொல்லலாம். 'பஞ்சலட்சணத் திருமுருக விலாச'த்தில் உள்ள ஒரு பகுதியே இங்கே கொடுக்கப்பட்டுள்ள போலிப் ''புலவன் சரித்திரம்''.

முன்சூ ழியற்படையைத் தட்டிக் கவிமுடிப்ப
வன்சூழியற்புலவன் வாறுசொல்வேன்;—பொன்சூழிக்
கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும்அது போல் ஆடும் தன்மைபோல்—'ஞானகவி
வல்லார்போல் பாடி வளம்பெற்று நல்குரவாம்
இல்லாமை நீக்குதும்' என் றெண்ணியே,—கல்ஆரும்
காதில் தரிப்புக் கடுக்கன் ஒளியிலங்க,
சோதிமுலாம் பூசித் துலக்கிய ஓர்—மோதிரத்தைக்
கைவிரலில் பூண்டு, கனவல்ல வாட்டுடனே
ஒய்யாரமான உடை உடுத்தி,—மைஊர்வான்
தன்வடிவம் அன்ன தலைப்பாகின்பீற்றலைச், கா-
மன்வடிவ மாக்கி வனைந்தியல்பாய்—மின்வடிவம்புக்
கண்ணாடி பார்த்து, கவின் திலகம் தீட்டிமகிழ்ந்(து)
அண்ணாந்து காலை அகட்டிநடந்(து)—ஒண்ணார்ந்த
கையில் குடைபிடித்துக் கால்சோடு மாட்டி, ஒரு
பையல்கற்றுச் சொல்லிதன்பின் பற்றிவர—மெய்உணர்வுற்(று)

ஏ(டு) ஆய்ந்து சொல்லறியான் எல்லாம் அறிந்தவன் போல்
தாடாண்மை பேசித் தனைப்புகழ்ந்து—நீடுதமிழ்

கல்லாத மூடர்களைக் கற்றுயர்ந்த சேடன் என்றும்
பொல்லாரை நல்லதர்மப் புத்ரன் என்றும்—இல்லாளுக் (கு)

அஞ்சி விழிப்பாரை அதிவீர சூரன் என்றும்,
கெஞ்சி வெந்நிட்(டு)ஓடுவரைக் கிரீடிஎன்றும்—மிஞ்சிநிதம்

பொய்பேசும் வீணர்களைப் போஜான், அரிச் சந்த்ரன்என்றும்
கைநலம் இலாதவரைக் கன்னன் என்றும்—வெய்துயிர்க்கும்

தாரித்ரம் உள்ளவரைச் சம்பனகு பேரன்என்றும்,
பாரித்து முனிபுலவோர் பாடியதைப்—பாரா

மனப்பாடம் செய்(து) அந்த மால்பொன்னுச் சாமி
தனிப்பாட லில்சிலது சந்தத்(து)—இனிப்பான

செய்யுள்பல கற்றுச் சிலுக்கி இறுமாந்து
மெய்அணுவி லாமல் மிகப்புளுகி—எய்தரிய

ஊரொன்றாய்ச் சுற்றி உலைந்து, ஆங்(கு) உளான்ஒருவன்
பேர் அன்(று) ஆராய்ந்(து) அவன்பால் பின்சென்றே,—"யார் என்றா

கேட்கிறீர்? இப்புவியில் கீர்த்திதிகழ் சேதுஎனும்
தாக்கணங்கு மேவுசமஸ் தானமதில்—நோக்கமிகும்

கல்விப்ர சங்கக் கவிராஜர் நாம்;நமது
நல்வித்தை கண்(டு) அயனும் நாணுவான்—பல்கலைநூல்

ஆசிரியர் நம்மை 'அதிகப் பிரசங்கி' எனப்
பேசஉல கெங்கும் பெயர் பெற்றோம்!—'ஆசறுசீர்

விஞ்சைத் தமிழில் இவர் மெத்தப் படித்தவர்' என்(று)
ஓஞ்சிப் புலவர் நமக்(கு) ஓட்டமே!—கஞ்சன்இழி

பூத உடல்ஈவான்; புலராப் புகழுடல் நாம்
ஈதலால் அன்னவற்(கு) யாம் அதிகம்!—வாதில்மன

மாசுறப்பொய்ச் சாக்ஷிசொன்ன மட்டிப்பயல்களெல்லாம்
நாசமுறத் திட்டிவசை நாட்டினோம்!— வீசுதமிழ்க்(கு)

அஞ்சாது தீங்குபுரி வார்கள் அடிமாண்(டு) இலவம்
பஞ்சாய்ப் பறக்க அறம்பாடினோம்!—விஞ்சலைசூழ்

அம்புவியில் நம்மை அறியார் இல்லை! நம்பெயரோ
செம்பொன்மலை மேல்இட்ட தீபமாம்!—இம்பர்தனில்

தீர்க்கநலம் மேவும் சிவகெங்கை வாழ்உயர்சன்—
மார்க்கத்துரைச் சிங்க மகராஜன்—ஏற்கையுடன்

சித்தமகிழ்ந்(து) அஞ்சாறு சீவிதக்ரா மங்கள் விட்டு
மெத்தமரி யாதைதந்தான் மேன்மையாய்; —எத்தலத்தும்

சந்ததமும் மிக்கஉங்கள் சற்புகழ்கேட்(டு) அற்புதமாய்ப்
பைந்தமிழ்ப்ர பந்தம் ஒன்று பாடிவந்தோம்—சிந்தைவைத்துக்

கேட்டருள்வீர்'' என்று கிளத்தும்பொழுது, தலை
கோட்டிமுகம் பாராக் குறிப்பறிந்து—நாட்டில்உயர்

அஷ்டாவ தானகவி யாம்சரவ ணப்பெருமாள்
மட்டறமுன் சொன்ன வசைத்தமிழை—ஒட்டிஇவன்

தான்பா டினபோல் தடதடென்று மூட்ட, மகிழ்-
வான்போல் நகைத்(து), இசையில் மாவலீர்!—யான் கருத்தில்

யாதுவேறா யிருந்தே னாகினும்நீர் நல்லகுண
சாதுவாய் வந்ததுவே சந்தோஷம்!—மேதையர்க்குத்

தான்ஈயும் நற்கொடையே தார்க்கியன்கா வில்சலங்கை
மாநாதம் போலும்இசை வாய்க்குமே;— ஆனாலும்

நாடிவந்தீர் இப்போழ்து நல்ல சமயமில்லை
ஆடிகழித்(து) ஆவணிஅஞ் சாம்தேதி—ஓடி

அகத்தியமாய் வாரும்: உமக்(கு) அச்சணமே செம்பொன்
தகட்டங்கி சால்வைகளும் தாரேன்—விகற்பமின்றிப்

போய்வருவீர்'' என்னப் புலவர்படபடத் (து), "இன்(று)
ஒய்வறநீர் சொன்ன(து) ஒழுங்காமோ?—ஆயுங்கால்

'நாளை' என்பான் கொடையும், நம்பி நலமில்லாக்
காளைபின் போன கருங்குழலும்—பூளை

திடலில் குவித்த குவையும்இம் மூன்றும்
கடலில் கவிழ்த்த கலமாம்—இடருழந்த

காலத்தால் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிதெனினுமாப்—போலும்

தடையின்றி உங்கள்மனம் சந்தோஷித்(து) ஈயும்
கொடைதனையே கொள்வேன் குணமாய் அடைவோர்க்(கு)

இடுக்கண் உற்றபோதில் உவந்(து) ஈயாதபேர்பின்
கொடுத்தன்? கொடாமல்என்ன? கூறும்!—படித்தவரே!

மாதயவு செய்யும்'' என்றுமாறா(து) உரைக்க அவன்
வேதனையாய் உள்ளம் மிகவருந்தி, —'ஏது'நம்மைச்

சும்மாவிடான்புலவன்; தொந்தரவுக்(கு)என் புரிவோம்?
நம்மாலே ஒன்றும் நடவாதே; இம்மாற்றம்

இல்லவள்கண் டால்இவனை ஏன் அழைத்து வந்தாய் (என்று)
எல்லையறப் பேசி இடிப்பாளே! — தொல்லைவினைக்(கு)

என்செய்வோம்?' என்றிங்(கு) இருதலையாம் கொள்ளியினில்
துன்பெய்தி வாடும் சுழல்எறும்பாய்—பின்புமன

ஊக்கமுடன் சென்றுமனை யுள்ளாட்(கு) எதிரில்நின்று
நாக்குளறி மெல்ல நவிலுவாள்:—"பாக்யவதி!

சேது சமஸ்தானம் சிறந்திடு கவீசுரர் சங்-
கீதசா யித்யகலைக் யானம்உள்ளோர்—ஒதும்ப்ர-

பந்தம் ஒன்றுபாடி, அதில் பாவாய்! உன்பேரைநல்லாய்
முந்திவைத்(து)என் பேரை முகனைவைத்துத்—தந்தியினால்

தம்புருவை மீட்டிச் சரளியொடு பண்பலவும்
கெம்பீர மாய்ப்படித்தார்; கேட்டனையோ?—கொம்பனை
யாய்!

ஏற்றமரி யாதைஅவர்க்(கு) ஈயா திருந்துவிட்டால்
மாற்றறிய பொல்லா வசைபடிப்பார்;—போற்றுநம(து)

ஐஸ்வர்யம் எல்லாம் அழிந்து கெடுவதன்றி
மொய்குழலாய்! ஆளுக்கே மோசம்வரும்;—தெய்வீக

வாதிசராம் பாவலர்கள் வாய்வசையினால் அழிந்து
மேதினியில் கெட்டார் மிகஉண்டே; ஏதேனும்

"தா'' என்று கெஞ்ச அந்தச் சண்டாள நீலியவள்
"ஓ'' என்று கூவி உரத்(து) எழும்பி—"மாவலன் போல்

நீதம்இனிப் பேசவந்தாய்! நீயும்ஓர் ஆண்பிள்ளையோ?
கூதறையே! உன்னைக்கொடுப்பேனே! சூதகமே!

வாகுகெட்ட சோதாய்! என்வாயில் நல்லாய் வந்துவிட்டுப்
போகு(து)! எதிர் நில்லாய் புறத்தொதுங்கு! மூகை ஒப்ப

நீட்ட முடக்கறியாய்! நீ கெட்ட கேட்டுக்குப்
பாட்டொன்றோ என்ன பகுமானம்! — வீட்டு

வருத்தம்அறி யாதநெடு மாடே! உனக்குக்
கருத்தில்அணு வுண்டோ கவலை?—பருத்ததன்றிப்

புத்தியில்லா நீவெளியே போபோ'' எனஇரைந்தங்(கு)
எத்தனையோபேசி எயி(று) அதுக்கி, —நத்தி உன்பின்

போக்கற்று வந்த புலவன்எங்கே? எங்கே?'' என்(று)
ஆக்ரமித்துப் பேசி அதட்டினாள்;—தாக்கிப்

புலவனெங்கே என்று புடைபுடைத்துச் சீறும்
கலவரம்கேட் டுள்ளம் கலங்கி,—நிலைபெயர்ந்து

'சட்டி வருமுன்னே தலைசாய்க்க வேண்டும்என
ஒட்டிமுன்னோர் சொன்னமொழி உண்மையே:—கிட்டிஇங்கு

வந்தாலும் வந்திடுவள்; வந்திடில் ஒருவேளை நம்மைத்
தன்தாபம் திருமட்டுந் தாக்குவாள்' என்(று)—இந்தவிதம்

சந்ததேக மாய்ப் புலவர் தான்ஒட்டம் கொள்வதற்கு
முந்திஉஷா ராக முழித்திருந்தார்—தன்தலைவன்,

''பெண்ணே! என் ஆசைப் பெருங்கே! மருக்குலவும்
கண்ணே எனக்கிசைந்த காதலியே! பண்ணிவைத்த

பாயாசம் போலும்நல்லாய்ப் பாடினவர்க்(கு)ஏதேனும்
ஈயா திருந்தால் இளப்பம் அன்றோ?—நீயே

உணர்ந்திடுவாய்'' என்று பல ஓத, இவன்சொற்(கு)
இணங்கி உளம் சற்றே இளகி—பிணங்குதலாய்ச்

சால நெடுநேரம் தனித்(து)அதி விசாரம்உற்றுக்
காலணா ஈந்தாள் கடுகடுப்பாய்;—ஏலும்இதை

நற்கொடைஎன் றேமதித்து நாவலன்பால் எய்தி, ''நல்ல
லக்கனம்வந் தீர்!'' எனவும் நண்பாடி—மெய்க்க அவன்

கைத்தலத்தைப் பற்றி உள்ளங் கையில்வைத்துத் தன்
கையினால்
பொத்தி, இனி தாகப் புகலுவான்;—''நத்தித்

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாய்க்
கொள்வர் பயன்தெரிவராம்'' என்(று)—இனிதுரைத்து

மெல்ல இவன் கைஎடுக்க, மெய்க்கொடை கண்(டு)உட்கிஇவன்
உல்லங் கனமாய் உரைபகர்வான் ;—''நல்லவன் போல்

ஏன்காணும் நீர்தான் இருந்திருந்தும் இக்கொடையைத்
தாங்கா(து) அளிக்கத் தலைப்பட்டீர்?—போம்காணும்!

திட்டிபடப் போகுதுகாண்! சேலையினால் மூடியதைத்
திட்டி சுற்றி ஆங்கே செலுத்திவிடும்!—கட்டிஎம்ஊர்

செல்லும் வழிமார்க்கம் திருடர்பயம் உண்டுகண்டீர்!
நல்லதுணை கூட்டி நமை அனுப்பும்!—வெல்லம்அன்ன

பேச்சைநம்பி நாமும்வெகு பேராசை கொண்டதெல்லாம்
ஆச்சரியச் சொப்பனம் போல் ஆனதுகாண்! — ராச்சியத்தில்

உம்மைப்போலும் ப்ரபுக்கள் உண்டோ !மூ வேழுவள்ளல்
தம்மைத்தான் சொல்லத்தரமன்றோ! —அம்மம்மா!

நேர்த்தி வெகு நேர்த்தி!'' என்று நிஷ்டூர மானசில
வார்த்தை பலபேசி மடமடத்தே—ஈர்த்து,

''வசைபாடு வோம் பயலே! வாடா! கொண் டாடா!
இசையும் எழுத்தாணி எடடா!—பசையற்ற

மூடனுட பேரை முதல்எழுத டா! முதலில்
கீடென் றெழுத்தைக் கிறுக்கடா!—மாடே! உன்

கைவிரசு வேண்டாமா கற்றவர்க்(கு)ஈ யாதஇவன்
ஐசுவர்ய மெல்லாம் அறிகிறேன் !—பொய்யோடா !

ஈரெட்டு நாளையில்பார் !''என்றுகடை வாய்நுரைக்கப்
போரிட்டுக் கத்தும் பொழிதில், அவன்—நேரிட்டே

''என்ன, கடி நாய்ப்புலவீர்! ஏது, பரி காசமுடன்
சின்னமொழி யால்இகழ்ச்சி செய்திட்டாய்?—உன்னைத்

தலைமழுக்கம் பண்ணித் தகுந்தசிட்சை செய்வேன்;
புலவன் என்ற தாலே பொறுத்தேன்; —'பலநூல்கள்

முற்றுணர்ந்தேம்' என்ன மொழிந்தாய் ! சபாஸ் ! உனது
கற்றறிமோ ழைத்தனத்தைக் காட்டினாய் !—மற்றும், வசை

பாடுவோம்' என்னப் பயமுறுத்தினாய்! அதுதான்
தேடிஎனை வந்தென்ன செய்துவிடும் போடாபோ!

சாவதீ துணிந்தால் சமுத்திரம் முழங் காலாம் ! உன்
பாவுக்குச் சற்றும் பயந்திடேன்;—நீவலியப்

பல்லைப் பிளந்துகவி பாடிஇசைதி தாலும், இனிச்
சல்லிகா(சு) ஒன்று தரமாட்டேன்;—நில்லாதே !

ஊரார் உடைமைகளை ஊசாடிச் சுற்றுதற்குப்
பேராசை கொண்ட பெரும்பதரே !—யார்யாரை

ஏமாத்தி வந்தாய்? எவர்பொருளைக் கொள்ளையிட்டாய்?
காமாட்டி உந்தன் கருத்தறிந்தேன் ;—ஆமா ; நீ

கொண்டிடும் அவா அடங்கக் கோதிததடிக் கம்பு''ப்ர-
சண்டு'' செய்வேன்; செய்வேன்; தடையில்லை ;—கண்டாய்!

இத்

த்க்கமரி யாதையுடன் தப்புவதே மெத்தநலம் !
கெக்கலித்து நின்றால் கெடுதிவரும் ;—இக்கணமே
செல்வாய் !செல்வாய் !'' எனவே செப்ப, இந்தப் பொய்ப் புலவன்
ஒல்காமல் பின்னும் உளறிநிற்க,—புல்வாயை
மோதுபுலி போல்சினந்து முன்னே நெருங்கிவர,
பீதியுட னேபுலவர் பின்வாங்க, —வாதொ(டு) அவன்
தாவிப் பிடிக்க, இவன் தப்பித்து லாகுகொண்டு
கூவி, இரு கால்கதியைக் கூடினனே !காவுலவும்
மான் ஓட்டம் மெத்த வலியில்லை; வந்தகல்வி-
மான்ஒட்டம் மெத்த வலிஉளதே !—தானே
எசமானாய் வந்தவர்பா(டு)இவ்விதமானாலோ,
சிசுவெனும்கற் றுச்சொலிஎன் செய்வான்?—விசயன்விடும்
அஸ்திரமும் பின்னிட்(டு) அடங்க. அவன் கால்கதியை
விஸ்தரித்துச் சொல்லவுந்தான் வேண்டுமோ ?—மஸ்தளிகால்
செய்யமலர் விட்டுத் திரள் ஆர் அளியினங்கள்
கைதைமலர் உற்றுக் கவலுதல்போல்—வையகத்தில்
நல்லோர் பலர்இருக்க நாடா(து) உலுத்தர்எனும்
புல்லூரைச் சென்று புகழ்ந்து, கவி—சொல்லியும் ஓர்
நன்றிஅறி யாதவராய், 'நானும் புலவன்' என்றே
கன்றி உழன்றார் கனபேர்கள்.

(நன்றி—தமிழ் வட்டம்,
சென்னை. ஆண்டுமலர் 1969)

# 16. செந்தமிழ் வளர்த்த சிவகங்கை

பேராசிரியர் மீ. இராசேந்திரன்

இந்திய வரலாற்றின் இணையற்ற அத்தியாயமாக விளங்கும் சிவகங்கைச் சீமையின் வரலாறு நாலுகோட்டை உடையதி தேவரின் மகன் சசிவர்ணத் தேவருடன் தொடங்குகிறது. 1970 ஆம் ஆண்டில் இராமநாதபுரத்தை ஆண்ட விஜயரகுநாத சேதுபதி தம் மகள் அகிலாண்டேசுவரி நாச்சியாரைச் சசிவர்ணத் தேவருக்கு மணமுடித்துக் கொடுத்தார். தம்பெண்ணைக் கொடுத்த சேதுபதி சேதுநாட்டின் ஒருபகுதியான சிவகங்கை மண்ணையும் சீதனமாகக் கொடுத்தார். அதற்குப் பிறகே சிவகங்கை சேது சமஸ்தானத்திலிருந்து பிரிந்து தனியரசாயிற்று. பாண்டிய நாட்டில் நாயக்க மன்னர் ஆட்சி நிலவிய போது தோன்றிய சேது நாட்டைச் சேர்ந்திருந்த சிவகங்கை, மிகப் பழங்காலத்தில் பாண்டி நாட்டின் ஒரு பகுதியாயிருந்தது என்பதை நாம் மறக்கமுடியாது.

பாண்டி நாட்டைச் சேர்ந்த பழைய சிவகங்கையும் செந்தமிழ் வளர்ச்சிக்கான தனது பங்கைச் செலுத்தத் தவறவில்லை, சிவகங்கை சமீன் தோற்றத்திற்குப் பிறகு அதன் எல்லைக்குள் வாழ்ந்த எண்ணற்ற புலவர்களை எண்ணி நாம் வியப்படைகிறோம், எனினும் மிகப் பழங்காலம் தொட்டே வழி வழி வந்த புலமைக்கு வாரிசுதாரர்கள் அவர்கள்என்று அறியும் போது இந்த மண்ணில் புலவர்கள் பிறப்பது ஒன்றும் புதிதன்று என்ற முடிவுக்கு வருகிறோம்.

சிவகங்கைக்கருகில் வேம்பத்தூர் என்றோர் ஊர் இருக்கிறது இதனை வேம்பற்றூர் என்றே பேராசிரியர் இரா. இராகவையங்கார் குறிப்பார். சங்ககாலம் தொட்டு இக்காலம் வரை இவ்வூருக்கும் தமிழாய்ந்த பெருமக்களுக்கும் நெருக்கம் உண்டு. இவ்வூரைச் சார்ந்த வேம்பற்றூர்க் குமரனார் எழுதிய இரண்டு பாடல்கள் அகநானூற்றிலும் புறநானூற்றிலும் முறையே 157, 317 ஆம் பாடல்களாக இடம்பெற்றுள்ளன. தமிழர் வாழ்விலிருந்து நீக்கிப் பார்க்க முடியாத அகம், புறம் ஆகிய இவ்விரண்டுக்கும் வகைக்கொரு பாட்டை வழங்கிப் போன இச்சான்றோரைத் தவிர, இவ்வூர்ப் புலவர் இன்னொருவர்

பாடலும் குறுந்தொகையில் இடம் பெற்றுள்ளதையறிகிறோம் அவர் வேம்பற்றூர்க்கண்ணங்கூத்தன் என்பவர். குறுந்தொகை 350-ஆம் பாடல் அவர் இயற்றியதே.

சிவகங்கைக்கருகில் சிவகங்கை —மதுரை வரிச்சூர் வழிச் சாலையை ஒட்டிப் படமாத்தூர் என்றோர் ஊருள்ளது. இவ்வூர் சங்க காலத்தில் படுமாற்றூர் என வழங்கியிருக்கலாம். படுமாற்றூர்மோசிகிரன் கொற்றனார் என்பவர் பாடியதாகக் குறுந்தொகையில் காணப்படும் 376- ஆம் எண்ணுடைய பாட்டு இவ்வூரைத்திற்கு இடமளிக்கிறது.

சிவகங்கையருகில் எட்டுக்கல் தொலைவில் ஒக்கூர் என்றோர் ஊர் உள்ளது சங்ககாலத்தில் இவ்வூரில் வாழ்ந்த மாசாத்தியார் என்ற பெண்பாற்புலவர் ஒக்கூர்மாசாத்தியார் என ஊர்ப் பெயர் சேர்த்தே அழைக்கப்படுகிறார். இவரின் பாடல்கள் தொகை நூல்களுள் இடம் பெற்றுள்ளன. இதே ஒக்கூரில் இந்த நூற்றாண்டில் முத்துப்புலவர் என்றொரு முஸ்லீம் புலவரும் வாழ்ந்திருந்தார். இதனால் வாழையடி வாழையெனப் புலவர்பலர்வாழ்ந்தஊர் ஒக்கூர்எனஅறியலாம். திருக்குறளின் மிகச்சிறந்த உரையாசிரியர்களுள் ஒருவரான பரிமேலழகரும் இவ்வூரினரே என்பர். பழம்பாடல் ஒன்றில் பரிமேலழகர்' ஒக்கைகாவலன்,' என்று குறிக்கப்படுவதே இதற்குரிய ஆதாரமாகும். சிவகங்கை தேவஸ்தானத்தைச் சேர்ந்த வைணவப் பெருங் கோவில் உள்ள திருக்கோட்டியூரில் வாழ்ந்த சங்கப் புலவர் ஒருவர் கோட்டியூர் நல்லாந்தையார் என்றே குறிக்கப்படுகிறார். நற்றிணை 211-ஆம் பாடலைப் பாடியவர் இவர்.

சிவகங்கைப் புகைவண்டி நிலையத்திலிருந்து மூன்று கல் தொலைவில் உள்ளது அள்ளூர் என்னும்சிற்றூர்; சங்ககாலத்தில் இவ்வூரில் வாழ்ந்த பெண்பாற்புலவர் அள்ளூர் நன்முல்லையார் என்றேபெயர் பெறுகிறார். இவர் பாடல்களும் தொகைநூல்களுள் இடம் பெற்றுள்ளன.

## 1. சமஸ்தானத்தால் வாழ்ந்த புலவர்கள்

### 1 கந்தசாமிப்புலவர்

சிவகங்கை சமஸ்தானத்திலுள்ள திருப்பூவணம் இவர் ஊர். 17-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இவர் வாழ்ந்திருந்தார். சிவகங்கையை ஆண்டு வந்த முத்து வடுகநாதர் இவரை ஆதரித்தார்.

'மன்போசன் முத்துவடுகநா தேந்த்ரனருள்
பொன்போலு மாடை புனைந்தருளி'

என இவரை ஆதரித்த முத்துவடுகநாத மன்னரைத் திருப்பூவணநாதருலாவில் போற்றுகிறார். இவ்வுலாவின் முதற்பதிப்பு 1904-ல் டாக்டர் உ. வே சா.அவர்களால் வெளியிடப்பெற்றது. இதைத் தவிர 'ஆப்பனூர்ப்புராணம்' 'திருப்பூவணப்புராணம்' ஆகிய நூல்கள் இவர் இயற்றியவை. 'புஷ்பவனநாதர் வண்ணம்' என்னும் பெயரில் இவர் இயற்றிய நூல் கிடைக்கவில்லை. திருப்பூவணநாதர் என்பதற்கு இணையாகப் புஷ்பவன நாதர் என்னும் வடசொல்லைப் பயன்படுத்தத் தலைப் பட்டது எப்போது என்று தெரியவில்லை.

இரா. இராகவையங்கார் எழுதியுள்ள 'சேதுநாடும் செந்தமிழும்' என்னும் கட்டுரையிலிருந்து இக்கந்தசாமிப் புலவர் கீழக் கரையிலிருந்த சீதக்காதியாலும் சிறப்பிக்கப் பட்டார் என்றறிகிறோம்.

### 2 இரண்டாம் சர்க்கரைப் புலவர்:

சிவகங்கை, முகவை சமஸ்தானங்களில் அவைக்களப் புலவராக விளங்கியவர். முகவை சமஸ்தானச் சிறுகம்பையூர் நெட்டிமாலைச் சர்க்கரைப் புலவரின் பேரர் இவர்; ஆதலால்

இவரை இரண்டாம் சர்க்கரைப் புலவர் என்பர். இவரது தந்தை சீனிச்சர்க்கரைப் புலவர்.

சாந்துப் புலவரின் தந்தையான இவர் தன்னுயிர் கொண்டு மருது உயிர் தேடிச் சென்ற தம் தனயனுக்குப் பிறகும் உயிர் வாழ்ந்தார் என அறிகிறோம். அக்காலத்தேதான் (1761) அவர் 'மிழலைச் சதகம்' பாடி அரங்கேற்றினார், அதற்காக வேளாண்குலத் தலைவர்களால் வழங்கப்பட்ட மகமைப் பட்டயத்தைத் இவர் தம் இளையமனைவியின் குமாரராகிய முத்துமுருகப் புலவர் பெயருக்குக் கிடைக்கச் செய்திருக்கலாமெனக் கருதுகிறார் மயூரகிரிக் கோவையைப் பதிப்பித்த சர்க்கரை இராமசாமிப் புலவர்.

3 சாந்துப் புலவர்:

சிவகங்கை- முகவை சமஸ்தானங்களின் அவைக்களப் புலவராய் விளங்கிய (இரண்டாம்) சர்க்கரைப் புலவரின் மூத்த புதல்வர். இவரும் சிவகங்கை சமஸ்தானத்தின் அவைக்கள புலவராக விளங்கியவர்.

சிவகங்கை சமஸ்தானத்தின் ஆஸ்தானப் புலவரான போது இவருக்கு வயது பதினாறு என்பர். இவர் இயற்றிய நூல்களில் எஞ்சியிருப்பது குன்றக்குடி முருகன் மீதுப்பாடிய "மயூரகிரிக்கோவை" மட்டுமே. இது 536 பாடல்கள் கொண்டது. 1778-இல் இந்நூல் அரங்கேறியது.

மயூரகிரிக்கோவை இயற்றியதற்காகச் சிவகங்கையை ஆண்ட மருதுபாண்டியர்களால்காளையார்கோவிலுக்கு அருகில் உள்ள 'மருதன்குடி' என்னும் சிற்றூர் சன்மானமாக அளிக்கப் பட்டது. இன்றும் அவ்வூர் 'புலவன் மருதன்குடி' என்றேஅழைக்கப்படுகிறது.

இவரது தந்தை பெயரும் மைந்தன் பெயரும் சர்க்கரைப் புலவர் என்பதாகும்.

தம்மை ஆதரித்த மருது பூபதிக்கு வெள்ளையர்கள் இடையூறு விளைவித்த போது நிழல் போல உடன் சென்றவர். நேர்ந்த யுத்தங்களிலும் ஒரு தலைவராய் நேர் நின்று போர் புரிந்தவர்.

3-10-1801-இல் வெள்ளையரால் மருது சிறைப்படுத்தப் பட்டதும், அப்பெருந்தகையின் பிரிவாற்றாது உயிர் துறந்த பிற்காலக் கபிலர் இவர்.

மாற்றார் கையகப்பட்டார் மருது பூபதி என்றறிந்த பிறகு தம் சொந்த ஊரான சிறு கம்பையூர் சென்றதாகவும் அங்கு சென்ற ஒருவாரத்தில் இறந்ததாகவும் அறிகிறோம்.

4. முத்து நாயகப் புலவர்;

சிவகங்கையை அடுத்துள்ள பனசையெனப்படும் நாட்டரசன்கோட்டை இவரது சொந்தஊர். 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த இவரை முத்துக்குட்டிப் புலவர் என்றும் சொல்லுவர். இவர் நாட்டரசன் கோட்டைக் கண்ணுடையநாயகி அம்மன்பேரில் 'கண்ணுடையம்மன் பள்ளு' என்னும் பிரபந்தத்தை இயற்றியுள்ளார். 1775-இல் இயற்றப் பட்டதாகத் தெரியவரும் இந்நூலில்,

வயனிருவர் பரவமுத்து வடுகநா தேந்த்ர துரை
மார்க்கண்டன் போலிருக்கக்கூவாய் குயிலே!

என்றும்

மனுவரசு சேருமுத்து வடுகநாதேந்த்ர துரை
அனுதினமும் புவிபுரக்க அரசு பெற்று வாழியவே

என்றும் குறிக்கப்படுவதால் இவர் சிவகங்கை அரசர் முத்து வடுகநாதத்தேவரின் ஆதரவு நிழலில் அண்டிவாழ்ந்தவர் என்றறிகிறோம்.

5. குழந்தைக் கவிராயர்:

மிதிலைப்பட்டி இவரது ஊர். இவர் சிவகங்கை சமஸ்தான ஆதரவு பெற்ற கவிஞர்.

## 6. மதுரகவி

செங்கல்பட்டு மாவட்டம் அரும்பேடு என்னும் ஊரைச் சேர்ந்தவர். 200 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். இசைத் தமிழ்ப் புலவர் கவி குஞ்சர பாரதி இவரது சீடரே. திருக்கச்சூர் நொண்டி நாடகம் இவர்பாடியதே.

சிவகங்கை சமஸ்தான அவையின் இசைப்புலவராய்த் திகழ்ந்த இவர் இசைப்பதங்களால் சிவகங்கையை ஆண்ட மருது பாண்டியரையும் இராமநாத புரத்தையாண்ட முத்துராமலிங்க சேதுபதியின் மதியமைச்சர் முத்திருளப்ப பிள்ளையையும் புகழ்ந்துள்ளார்.

இன்பச்சுவை மிகு இசைப்பாடல்கள் பலவற்றைப் பாடியுள்ளார். அவை ''மதுரகவிபதங்கள்'' எனும் பெயரில் வெளியிடப் பெற்றுள்ளன.

மாலைப்பொழுது வந்தால் பிரிந்திருக்கும் மங்கையர் படும்பாட்டை அவர்கள் சார்பாக மதுரகவி எப்படி வருணிக்கிறார் என்பதைப் பாருங்கள்.

ஆலைக்கரும்புவில் லாலெய்தபூங்கணை
மேலெல்லாந் தைக்குமே - தைத்ததென்றால்
பாலனமுங் கைக்குமே-க்ஷணப்போதில்
மாலைக்குயில் வருமே - முத்து
மாலைபோல் கண்ணீரு திருமே
வேலைமுரசும திருமே - ரா
விடியாமல் நொடிநூறு யுகமாய் வ ளருமே!

## 7 கவிகுஞ்சர பாரதி

இவர் சிவகங்கை சமஸ்தானத்தால் ஆதரிக்கப்பெற்ற இசைத்தமிழ்ப் புலவர். முகவை மாவட்டத்தில் ''பெருங்கரை'' என்னும் ஊரில் பிறந்தவர். 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவர்.

அருணாசலக் கவிராயருடைய இராமாயண கீர்த்தனைகளைப் பின்பற்றி ''ஸ்காந்த புராணக் கீர்த்தனை'' என்னும் நூலை இயற்றிந் தமிழிசை உலகில் பெரும்புகழ் பெற்றவர். இக்கீர்த்தனங்கள் இசைப்பயிற்சிக்கு ஏற்றன என்று பாராட்டப்

படுவதால் இவற்றின் சிறப்பை உணரலாம். தமிழ்நாட்டு இசைக்குச் சிறந்த சாகித்தியங்கள் (இசைப்பார்கள்) செய்தவர் என்ற பெருமைக்குரியவர்.

பக்திப்பாக்கள் பல தந்து கர்நாடக இசை உலகில் புகழ் பெற்ற தியாகராசரின் கீர்த்தனைகள் தெலுங்கில் அமைந் துள்ளன. அவற்றிற்கு ஈடான இசைப்பாக்களைத் திருவிதாங்கூர் சமஸ்தானத்து இலக்குமணப்பிள்ளை தமிழில் இயற்றித்தந்தார். அவரைப்போல் சிவகங்கை சமஸ்தானத்தில் சிறந்த இசைப் புலவராய் விளங்கிய குஞ்சர பாரதியும் இசை உலகில் பிற் காலத்தில் புகழீட்டினார்.

'அழகர் குறவஞ்சி' என்னும் நாட்டிய இசைநூலும் இவர் இயற்றியதே. இந்நூலைச் சிவகங்கை அரசர்பால் அரங்கேற்றிக் 'கொட்டாங்காய்ச்சியேந்தல்' என்னும் ஊரைப் பரிசிலாகப் பெற்றார் என்று இரா.இராகவையங்கார் கூறுகிறார்.* 'அழகர் கலம்பகம்' என்னும் நூலும் இவர் பாடியதே என்று கூறுவார் உளர்.

இவர் முருகன் மீது பல பாடல்கள் பாடியுள்ளார். 'என்ன தருவான்' எனத் தொடங்கும் பாடல்

பெட்டி மகன் சொக்குச்செட்டி—வாய்ப்
பேச்சுமட்டும் வெல்லக் கட்டி—வெகு
இட்டமதாகப்ப கட்டி—பைய
எத்திக்காரியங் கொள்ளக்—கெட்டி''

என்று சொல்லழகுடன் அமைந்துள்ளது.

---

* அண்மையில் சிவகங்கை வந்திருந்த கவிஞர் சுரதாவோடு கவிகுஞ்சர பாரதியைப்பற்றி உரையாட நேர்ந்தது. சிவகங்கை போதகுருமன்னர் ஒருமுறை வேட்டையாடச் சென்றாராம். பன் வேட்டையாடவும் புலி வேட்டையாடவும் போன மன்னரோடு, சொல் வேட்டையாடும் புலவர் கூட்டமும் உடன் சென்றது. அப் புலவர்களுள் ஒருவராய்ப் போயிருந்த கவிகுஞ்சரபாரதி, மன்னரின் வேங்கை வேட்டையை நேரிற் கண்டனுபவித்துப் பாடிய 'வேங்கைக்கும்மி' என்னும் நூல் மன்னர் மனம் கவர்ந்ததாம். மகிழ்ந்த மன்னர் ''கொட்டாங்காய்ச்சி யேந்தல்' என்ற ஊரைப் பரிசாகத்தந்தாராம். அந்நூல் தம்மிடம் இருப்பதாகவும் அதன் முன்னுரையால் அறியப்படும் செய்தி இது என்றும் சுரதா சொன்னார்.

கணிகை குலத்தில் பிறந்த ஒருத்தி குலத்தொழில் வெறுத்து மாதவிபோல் பேசுகிறாள்:

பல பேருடனே நான் கூடிப்
பணந்தேடமாட்டேன் போடி
புலி பசித்தாலும் புல்லை யருந்தாதே—கோடிப்
பொன் கொடுத்தாலும் வேறே பொருந்தாதே—நீதான்
பலியாத காரியத்தில் வருந்தாதே-எந்தப்
படிசொன்னாலு மென்சிந்தை திருந்தாதே

என்று தன் தாய்க் கிழவிக்குத் தன்மன உறுதியை உணர்த்தும் விதம் அழகாயுள்ளது.

'என்னைவிட்டு அவளைக் காதலிக்க அப்படி என்ன தகுதி அவளுக்கு?' குமரனிடம் கோதை ஒருத்தி இப்படிக் கோபித்துக் கொண்டாளாம்.

என்னிலும் சிறந்தவளோ
இடையும் சிறுத்தவளோ

என்று கேட்ட நாட்டுப் பாடல் தலைவியைப் போல்,

கவிகுஞ்சரத்தின் பதங்களும்-பல
கலையுங் கற்றவளா

என்று முருகனை ஒருத்தி கேட்பதைப் போல் ஒரு பாட்டில் அமைத்துக்காட்டுகிறார்.

இப்படிப் பாத்திரங்கள் பேசும் இடங்களில் தம் புகழ் நிறுவிக்கொள்ளும் புலவரின் தன்னம்பிக்கையைப் போற்றத் தான் வேண்டும்.

## 8 வில்லியப்ப பிள்ளை

சிவகங்கையை அரசாண்ட துரைசிங்கமன்னரின் அவைக் களப்புலவராக விளங்கிய இவர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவர். சிவகங்கைச் சமஸ்தானத்தில் உள்ள பிரமனூர் இவரது ஊராகும். தம்மை ஆதரித்த துரைசிங்க மன்னர்மீது இவர் ஒரு நூலைப்பாடி எழுதியிருக் கிறார், அந்நூலில்

தீர்க்க நலமேவும் சிவகங்கை வாழ் உயர்சன்
மார்க்க துரைசிங்க மகராஜன்

என்று அவரைப் பாராட்டியிருக்கிறார். இப்படிப் பாராட்டப் பட்டவர் முதலாம் துரைசிங் மன்னரே. சிவகங்கைக் கல்லூரிப் பெயருக்குரிய துரைசிங்க மன்னருக்கு இவர் பாட்டனாராவார்.

பஞ்சலட்சணத் திருமுக விலாசம் என்னும் அந்நூல் "தாதுவருடப்பஞ்சம்" என்னும் கொடிய பஞ்சம் நிலவியபோது சிவகங்கையில் இருந்த நிலைமையை 'சட்டையர்' (Satire) என ஆங்கிலத்தில் கூறப்படும் அங்கதச்சுவை தோன்ற எடுத்துரைக்கிறது.

"இல்லஸ்டரேட்டட் வீக்லி" (*Illustrated Weekly*) என்னும் ஆங்கிலக் கிழமை இதழில் முன்பொருமுறை அந்நூலைப் பற்றிய திறனாய்வுக் கட்டுரை வெளிவந்தது.

திரு. ரகுநாதனின் 'சமுதாய இலக்கியம்' என்னும் நூலின் இறுதிக்கட்டுரை 'பஞ்சலட்சணத் திருமுகவிலாசம்' பற்றி ஆராய்கிறது. பயனுள்ள இக்கட்டுரையில் வில்லியப்ப பிள்ளை பற்றிக் காணப்படும் செய்திகள் இவை:

இவர்பிரமனூர் அய்யம்பெருமாள் பிள்ளையின் குமாரர். வயல்சேரி சரவணக் கவிராயரிடம் தமிழ் பயின்றவர். இவர் பிரமனூரில் சமீன் கணக்குப் பிள்ளையாக இருந்தவர் என்றும் சமீன்தார்களிடமும் அரச குடும்பத்தவரிடமும் நெருங்கிப் பழகியவர் என்றும் தெரிகிறது "கட்டிப்பாட்டு" எனுஞ்சிறு நூலொன்றும் இவர் இயற்றியதாகக் கூறுவர். 67-வயதில் இவர் இயற்கை எய்தினார் என அறிகிறோம். இவர் காலமான சமயத்தில் அரண்மனை மரியாதைகளோடு அடக்கம் செய்யப்பட்டார். 4600 வரிகள் கொண்டது இவர் இயற்றிய பஞ்சலட்சணத் திருமுகவிலாசம். இது உலா, மடல், தூது போன்ற பிரபந்த வகையோடு ஒட்டியது. இதற்கு 'உலக ரகசிய வெளிப்படை' என்ற பெயரும் உண்டு. முற்றிலும் கலிவெண்பாவினால் ஆகப் பெற்றது. 1876 இல் நிகழ்ந்த தாதுவருடப் பஞ்சத்தைப்பற்றிய தமது நூலை 23 ஆண்டுகள் கழித்து 1899க்குச் சரியான தமிழ் ஆண்டு விகாரி தை 2-ஆம் நாள் இரவில் துரைசிங்க அரசரின் அவையில் அரங்கேற்றம்செய்தார். இந்நூலைப் பாராட்டிச் சதாவதானி சரவணப்பெருமாள் கவிராயர் சிலேடைப்புலி பிச்சுவையர் ஆகியோர் சாற்றுக்கவிகளும் மதுரை நீ. இராம லிங்கம்பிள்ளை சிறப்புச் செய்யுளும் தந்துள்ளனர்.

இந்த நூற்றாண்டில் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையும், கவியோகி சுத்தானந்தபாரதியாரும் சிறுகதையாசிரியர் கு. அழகிரிசாமியும் இலக்கியத் திறனாய்வாளர் சிதம்பர ரகுநாதனும் இந்நூலைப் பாராட்டியுள்ளனர்.

## 9. வேம்பத்தூர் பிச்சுவையர்

இவரது காலம் 1850—1910. விரைவாகக் கவி இயற்றுந் திறத்தினால் "ஆசுகவி" என அழைக்கப்பட்டார். இரு பொருள் படப் பாடுந்திறன் பெற்றிருந்ததனால் 'சிலேடைப்புலி' என சிறப்பிக்கப்பட்டார். திருப்பெருந்துறையில் டாக்டர் உ.வே.சா முதன்முதலாகப் பிச்சுவையரைச் சந்தித்ததாகவும் எந்தச் சமயத்திலும் எந்த விஷயத்தைப் பற்றியும் கேட்போர் பிரமிக்கும்படி, செய்யுள் இயற்றும் ஆற்றலைக்கண்டு ஆச்சரியமடைந்ததாகவும் "என் சரித்திரத்தில்" அவர் குறித்துள்ளார்.

சிவகங்கையை ஆண்ட முத்துவடுகநாதர் இவரை ஆதரித்தார். முத்துவடுகநாததுரை மீது 'காதல் பிரபந்தம்' பாடியுள்ளார். சிவகங்கைக்காளமேகமாகத்திகழ்ந்த இவர் 'ஆனந்தக் களிப்பு' 'பொன்மாரிச் சிலேடை வெண்பா' 'மதுரை நீரோட்டக யமக 'வந்தாதி' திருவாடானை அந்தாதி' 'குன்றக்குடி சண்முகநாதர் உலா' 'பனங்குடி பெரியநாயகி அம்மை பதிகம்' என்ற நூல்களையும் பல தனிப்பாடல்களையும் இயற்றியுள்ளார்.

'செளந்தரியலகரி' என்னும் நூலைத் தமிழில் மொழி பெயர்த்ததற்காக யாவராலும் மிகவும் பாராட்டப் பெற்று விளங்கிய கவிராச பண்டிதருடைய பரம்பரையில் உதித்தவர் இராமநாதபுரம் ஸ்ரீ பாஸ்கர சேதுபதியவர்கள் விருப்பத்தின்படி ஒரு மணி நேரத்தில் பன்னிரண்டு சிலேடைகளைப் பாடி அம்மன்னர் வழங்கிய "ஐயாயிரம் ரூபாய் சன்மானத்தைப் பெற்றவர்" என்று உ. வே. சா இவரைப் பற்றி மேலும் குறிப்பிடுகிறார்.

இவரைப்பற்றித்தெரியவரும் சுவையான செய்திகள் சில. ஒரு சமயம் இராமநாதபுரம் பாஸ்கர சேதுபதி திருச்செந்தூர்

சென்றார். பிச்சுவையரும் உடன் சென்றார். முருகனுக்கும் எலுமிச்சைக்கும் சிலேடை பாடச் சொன்னார் சேதுபதி. உடனே ஐயர்,

வித்தை உறலால் மிகும்பல மேவுதலால்
நத்துமங் கையின்பால் நண்ணுதலால்- துத்தியஞ்சேர்
பாற்கர சேதுபதி நாட்டிலே வேலவனை
ஏற்கு மெலுமிச்சையே

என்று பாடினார். வித்துக்கள் கொண்டது. மரங்களில் காய்ப்பது. உள்ளங்கையில் தங்குவது என்னும் பொருளில் எலுமிச்சையையும், வித்தைகளில் வல்லவன், வேங்கை கடம்பு முதலிய மரங்களை விரும்புபவன், வள்ளி தெய்வானை என்னும் இருமங்கையர்களிடம் தங்கி இருப்பவன் என்னும் பொருளில் முருகனையும் இவ்வெண்பா சிலேடையாக்கிக் காட்டுகிறது

பிறிதொரு சமயம் ஐயர் பாஸ்கரசேதுபதி அரசவைக்குச் சென்றாராம். முன்னதாகவே எல்லாரும் அமர்ந்துவிட்டதால் தனக்கு ஆசனமில்லாதிருக்கக் கண்டு நேரே சேதுபதி பக்கத்திலேயே போய் அமர்ந்துவிட்டாராம். 'என்ன புலவரே!' என்று சேதுபதி கேட்டாராம். உடனே வேம்பு (வேம்பத்தூர்க்காரர் என்பதால்) அரசை அடுத்திருப்பது இயற்கைதானே' என்று சட்டென்று பதில் சொன்னாராம்.

இவருடைய பரம்பரையினர் இன்றும் வேம்பத்தூரில் இருக்கிறார்கள். மதுரையில் தமிழாசிரியராகப் பணிபுரியும் புலவர் சதாசிவமும் அவர்களுள் ஒருவர்.

## 10. வெண்பாப்புலிக்கவிராயர்

சிவகங்கை மன்னராலும் பிறராலும் ஆதரிக்கப் பெற்ற புலவர். வீரன், வீரராகவன் எனப் பல பெயர்கள் கொண்டவர். இவர் பெயர் தெரியவில்லை. ஆசுகவியாக வெண்பாப் பாடுவதில் இவர் சிறந்து விளங்கியதால் இவருக்கு வெண்பாப் புலி எனுஞ் சிறப்புப் பெயர் ஏற்பட்டது. சென்ற நூற்றாண்டினரான இவர் சுமார் 100 ஆண்டுகட்கு முன்பு மதுரை மாவட்டம் மேலூர் வட்டம் மணப்பச்சேரியில் பிறந்தவர்.

மிதிலைப்பட்டி, செவ்வூர் ஆகியவூர்களில் இவரது சந்ததியரர் இருப்பதாகக் கூறப்படுகிறது.

இவர் சேதுநாட்டுச் செவ்வூரினர் என்றும், வசை பாடு வதில் வல்லவர் என்றும், இரா இராகவையங்கார் குறித்துள் ளார். கருத்தான் என்பவன் புலால் உண்பதை நிறுத்தி விட்ட தாகச் சொன்னானாம். அதைக் கேட்ட புலவர் அவன் வைராக்கியம் எதுவரை இருக்கும் என்பதைச் சுட்டிக் காட்டும் விதத்தில்,

வண்டுவந் தால்தெரி யும்மலர் வாசம் வழிநடத்திக்
கொண்டுவந் தால்தெரி யும்பரி வேகம்குணமுடனே
கண்டுவந் தால்தெரி யும்பிறர் வாஞ்சை கறிக்குதவு
நண்டுவந் தால்தெரி யும்கருத் தானுடை நாநயமே.

என்று அங்கதச் சுவைபடப் பாடியுள்ளார்,

### 11. முத்துச்சாமிப் புலவர்

''சிவகங்கைச் சரித்திரக்கும்மி'' எனும் பாட்டிலக்கியத் தின் ஆசிரியர். சிவகங்கையை ஆண்ட கவுரிவல்லப உடையணத் தேவரின் ஆதரவு பெற்றவர் என்று தெரிகிறது.

## 2 சிவகங்கை சமஸ்தானத்தில் வாழ்ந்த புலவர்கள்

### 1 பொய்யாமொழிப்புலவர்

13-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தவர். பொய்யா மொழியேந்தல் என்னும் சிற்றூர் சிவகங்கை வட்டத்தில் உள்ளது. இவர் நினைவாக இவ்வூருக்கு இப்பெயர் ஏற்பட் டிருக்கலாம்.

இவரது பூர்வீகம் தொண்டை நாடு. மூன்றாங் குலோத் துங்கனின் ஆதரவு பெற்ற சீநக்கன் என்னும் வள்ளல் இவர் தம் நண்பர். அவர் இறந்தபோது இவர் உடன்கட்டையேறினார் என்பர். சிவகங்கைக்கருகில் புகழ்பெற்ற மாறநாட்டுக் கண் மாய் அமைந்த மாறநாடு எனும் சிற்றூர் இன்றும் உள்ளது இதையடுத்துள்ள தஞ்சாக்கூரைத்* தலைநகராகக் கொண்டு

---

இத்தஞ்சாக்கூருக்கருகில் 'புலவாச்சேரி' என்றொரு ஊர் உள்ளது. புலவர் பலர் வாழ்ந்ததால் 'புலவர்சேரி' எனப் பெயர் பெற்றிருந்த இவ்வூர் காலப்போக்கில் புலவாச்சேரி என மாறி யிருக்கலாம்,

மாறநாட்டை ஆண்ட வாணர்குலத் தலைவன் சந்திரவாணன் மீது பாடப்பட்ட 'தஞ்சைவாணன் கோவை' யின் ஆசிரியர் இவர்.

பொய்யாமொழிப் புலவர் பாடிய நூலின் தலைவனான சந்திரவாணன் எந்த அரசகுலத்தினன் என்றும் அவன் தலைநகரமான தஞ்சாக்கூர் எது என்றும் பல ஆராய்ச்சிகள் வெளிவந்துள்ளன. திருவில்லிப்புத்தூர் நாச்சியார்கோவிலில் உள்ள கி. பி. 1454 –ஆம் ஆண்டுக் கல்வெட்டு 'உறங்காவல்லிதாசனான மாவலி வாணாதிராயன் எனும் அரசன் பற்றிச் செய்தி தருகிறது. அழகர்கோவில் கல்வெட்டில் அக்கோவிலுக்குத் திருப்பணி செய்த மாவலிவாணாதிராயனைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. மற்றொரு வாணர்தலைவன் நிறுவிய ஊர்தான் வாணவீரன் மதுரை. அது மானாமதுரை என வழங்குகிறது. இராமப்பையன் அம்மானையில் கூட 'வாணவீரன் மதுரை' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. டி வி சதாசிவப்பண்டாரத்தார் மட்டும் இக்கோவை குறிக்கும் தஞ்சாக்கூர் நெல்லை மாவட்டம் தென்காசித் தாலுகாவைச் சேர்ந்த மாறை நாட்டில் உள்ளது என்பர். ஆனால் மதுரைப் பல்கலைக் கழக வரலாற்றுத் துறையைச் சேர்ந்த திரு. முத்துக்கோனார் மதுரைச் சரித்திர ஆராய்ச்சிக்குழுக்கூட்டத்தில் பேசியபோது 'மானாமதுரையை அடுத்த தஞ்சாக்கூரே' தஞ்சைவாணன் கோவைப் பாட்டுடைத் தலைவனின் ஊர் என்று தெரிவித்துள்ளார்.

## 2 பெரும்பற்றப்புலியூர் நம்பி

இவரது காலம் மாறவர்மன் குலசேகரபாண்டியன் (1268-1308) காலமென்று திருப்புத்தூர்க் கோயில் கல்வெட்டுக் கூறுகிறது. திருப்புத்தூர் சேகரம் மருங்காபுரியை அடுத்து இவர் ஊர் இருந்திருக்கவேண்டும்.

## 3 வேம்பத்தூர் சங்கரநாரணர்

சிவகங்கை சமஸ்தானத்தைச் சேர்ந்த வேம்பத்தூர் இவரது ஊர். அவர் நிம்பை என்னும் வேம்பத்தூரில் வாழ்ந்தவர் என்பதை

தேவுக்கரசு திருவால வாய்க்கொரு தீபமென்னுங்
கோவுக் கருந்தமிழ்க் கோவை செய்தான்கொண் டெழு
மொருசொற்
காவிற்படி தடஞ்சூழ்நிம்பை காவலன் கற்றுணர்ந்தோர்
நாவிற்கினியவன் சொற்பாடற் சங்கரநாராயணனே!

என்னும் மதுரைக் கோவைச் சிறப்புப் பாயிரத்தாலும் அறிய லாம். இம் 'மதுரைக்கோவை' இவர் பாடியதே. சுமார் 400 ஆண்டுகளுக்கு முன்னர் இயற்றப்பட்டது. 408 பாடல்கள் கொண்ட இக்கோவை நூல் 1933-இல் ஆராய்ச்சிப் பேரறிஞர் வையாபுரிப்பிள்ளை அவர்களால் பரிசோதித்து வெளியிடப் பெற்றது.

அருமையான கவித்துவப் போக்குகளும் அழகான கற்பனைகளும் இந்நூலில் தென்படக் காணலாம். தன் காதலி யின் விழியில் கவிதை மிதந்ததென்றான் பாரதி. இக்கோவைத் தலைவனோ தலைவி பார்த்த பார்வையைப்பற்றிய நினைப்பே நல்ல தமிழ்ப்பாடல்களைப் பற்றிய நினைப்புக்கு ஈடாக இருக் கிறது என்கிறான்.

நனைக்கொங் தளவல்லி நன்பால் விழித்த நலத்தைநெஞ்சில்
நினைக்குந் தொறுமது செந்தமிழ்ப்பாடல் நினைவொக்குமே

என்று அவன் கூறுவதால் இதையறியலாம்.

பார்வையில் பாடலைக் கண்ட அவன் அவள் கண்ணில் கோடிக் காதலையும் காண்கிறான். கோவைத் தலைவன் கூறுவதைக் கேளுங்கள்.

பண்ணிற் கனிந்தகுதலையஞ் சீறடிப் பாவைகடைக்
கண்ணிற் கிடக்கு மொருகோடி நேயமும் காதலுமே!

4 அமிர்த கவிராயர்

இவரது காலம் 1637-1672. இவர் சிவகங்கை வட்டத்தி லுள்ள பொன்னாங்கால் என்னும் சிற்றூரைச் சேர்ந்தவர். கோவை நூலில் நானூறு துறைக்கும் நானூறு பாடல் பாடும் மரபை மாற்றினார். நாணிக்கண் புதைத்தல் என்னும் ஒரு துறைக்கே நானூறு பாடல்கள் பாடிப் புதுமை செய்தவர். அந்நூலுக்கு 'ஒருதுறைக்கோவை' என்று பெயர்.

5 சிற்றம்பலக்கவிராயர்

மிதிலைப்பட்டி ஊரினர்.

6. மங்கைபாகக் கவிராயர்

மிதிலைப்பட்டிக் கவிராயர் குடும்பத்தவர்

7. மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர்

8. செவ்வைச் சூடுவார்

சிறந்த தமிழ்ப் புலவரான இவரும் வேம்பத்தூரில் பிறந்தவரே. 'பாகவதபுராணம்' என்னும் நூலை வடமொழியிலிருந்து மொழிபெயர்த்துத் தமிழில் செய்யுள் வடிவில் ஆக்கியுள்ளார். கிருஷ்ணாவதாரத்தைப் பற்றிப் பாடும் இந்நூலில் 4,970 செய்யுட்கள் உள்ளன.

இதனை ஆரியப்பப் புலவர் பாடினர் என்பதை இரா. இரா 'செந்தமிழ்' ஏட்டில் மறுத்து எழுதியுள்ளார். நெல்லி நகர் மதுரகவி வரதராஜய்யங்கார் எழுதிய பாகவதம். இவர் இயற்றிய இந்த பாகவதம் ஆக இரண்டு மட்டுமே தமிழில் உள்ள பாகவத நூல்கள் என்பர். 'செவ்வைச் சூடுவார் பாகவதம்' வரதராஜ ஐயங்கார் பாகவதத்திலும் இலக்கியச் சுவை நலமுடையதாகக் காணப்படுகிறது' என்று கலைக் களஞ்சியம் கூறுகிறது.

9. ஆதிச்சதேவன்

முழுப்பெயர் "சிறுபெருச்சியூர் கொடிக் கொண்டான் பெரியான் ஆதிச்சதேவன்" என்பதாகும்.

'காங்கேயன் பிள்ளைக்கவி' என்பது இவர் பெயர் சொல்லும் இலக்கியம்.

இச்சமஸ்தானத்தில் உள்ள நியமம் (நேமம் என வழங்கும் சிற்றூர் இன்றும் கீழச்சிவல்பட்டி அருகே உள்ளது.) எனும் பகுதியை ஆண்ட காங்கேயன் என்ற தலைவன்மீது இப் பிள்ளைத் தமிழைப் பாடினார். அதன் பயனாய் இவ்வட்டத்தில் உள்ள சாத்தனேரி (இன்று சாத்தனி என வழங்குகிறது)என்னும் ஊரைப் பரிசிலாகப் பெற்றார்.

10 மழவைச் சின்னச்சாமி ஐயர்

திருப்பூவணத்திற்குத் தென்கிழக்கிலுள்ள மழவராய னேந்தலில் பிறந்தவர். இவர் 'பெரியபுராணக் கீர்த்தனை' என்னும் நூலின் ஆசிரியர். இசைத் தமிழ்ப் புலவர். திருமணக் குறவஞ்சி இயற்றிய சுப்பிரமணிய கவிராயரின் சீடர்.

11 மகாலிங்க ஐயர்

இவரும் அவ்வூரினரே. தொல்காப்பியம் எழுத்ததி காரத்தை நச்சினார்க்கினியர் உரையுடன் முதன்முதலில் பதிப் பித்தவர். இவர் சென்னையில் தமிழாசிரியராகப் பணியாற்றி னார். காஞ்சிபுரம் சபாபதி முதலியாரின் நண்பர். அருணாசல புராணத்திற்கு இவர் உரை எழுதியுள்ளதாகவும் தெரிகிறது.

12 சிதம்பர பாரதியார்

இவரும் மழவராயனேந்தலில் பிறந்தவர்.

சிவகங்கை இராமநாதபுரம் அரசர்களிடம் தம் பாட்டுத் திறன் காட்டிப் பரிசில் பல பெற்றவர். 19-ஆம் நூற்றாண்டின் சிறப்பான காலட்சேப, இசைநூலாசிரியருள் இவரும் குறிப் பிடத்தக்க ஒருவர்.

இவர் இயற்றிய நூல்களுள் உருக்குமணி கலியாணம், குல சேகர சரித்திரம், பெரியபுராண கீர்த்தனை. மதுரை மீனாட்சி யம்மை பலசந்தக்கும்மி. மயூரகிரிநாதர் வண்ணம் முதலியவை குறிப்பிடத்தக்கவை.

13 சுப்பிரமணியக் கவிராயர்

சிவகங்கையைச் சார்ந்த ஆண்டுகொண்டான் என்ற ஊரினர். சேதுபதியின் அமைச்சர். கோட்டைத் தேவர் என்பவர் மீது 'திருமணக்குறவஞ்சி' பாடியவர். பெரியபுராணக் கீர்த்தனை பாடிய மழவராயனேந்தல் சின்னச்சாமி ஐயர் எனும் புலவர் இவரிடம் பயின்றவர் என்றும் ரா. ரா சேதுநாடும் தமிழும் என்னும் தம் கட்டுரையில் குறிக்கின்றார்.

## 14 முத்துவேலுக் கவிராயர்

சிவகங்கை சமஸ்தானத்தைச் சேர்ந்த திருப்புத்தூரை அடுத்துள்ள தம்பிப்பட்டியில்வாழ்ந்திருந்தவர். 'வாலசரஸ்வதி' எனும் பட்டம் பெற்ற புலவர். சிவகங்கையைத் தம் பாடலில் 'குளந்தாபுரி' எனக் குறிப்பிட்டுள்ளார்.

சிவகங்கைச் சீமையோடு தொடர்புடைய புலவர்களின் பட்டியல் இத்தோடு முடிந்து போய் விடவில்லை. இன்னும் புலவர் பலரின் பெயர்களும் இலக்கியங்களும் விடுபட்டுப் போயிருக்கலாம். மேற்கொண்டு ஆராய்வோருக்குத் துணை புரியத்தக்க குறிப்புகளைக் கொண்டதாகவே இக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது.

சிவகங்கைக்குப் புகழ் சேர்த்த புலவர் சிலரின் பாடல்கள் இன்னும் ஏட்டோடு கிடக்கின்றன. ஒரு முறை அச்சேறிய மிகச் சிறந்த இலக்கியங்கள் மறுமுறை அச்சேறும் வாய்ப்புப் பெறவே இல்லை.

'பஞ்சலட்சணத் திருமுருகவிலாசம் போன்ற அருமை யான நூல்கள் இன்றுவரை இலக்கியஆர்வலர் பலர் பார்வையிற் படாததற்குக் காரணம் இதுதான். பஞ்சலட்சணத் திருமுருக விலாசத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது 'இந்த நூலுக்கிணை யான நகைச்சுவை நூல் உலக இலக்கியத்திலேயே கிடையாது' என்கிறார் கு. அழகிரிசாமி. இத்தகு நூல்களை வெளிப்படுத்து வதும் இவற்றின் இலக்கிய ஆற்றலை எடுத்துக்காட்டி விமர்சிப் பதும் நம் கடமையல்லவா?

(நன்றி—சிவகங்கை மன்னர் துரைசிங்கம் நினைவுக் கல்லூரி வெள்ளிவிழா மலர்)

## 17. சொ. பனையப்ப செட்டியாரின் நாவல்கள்—ஒரு திறனாய்வு

### (தமிழ் நாவல் — நூறாண்டு வரலாறும் வளர்ச்சியும்

### பெ. கோ. சுந்தரராஜன் (சிட்டி) சோ. சிவபாத சுந்தரம்)

மர்மங்களும் துப்பறிவதை விளக்குவதுமான கதைகளை எழுதுவதில் மிகப் புகழ்பெற்ற ரங்கராஜுவைப் பின்பற்றி, பி. எஸ். சுப்பிரமணியம் போன்றவர்கள் பல துப்பறியும் நிபுணர்களை மேல்நாட்டுக் கதைகளிலிருந்து இரவல் வாங்கி தங்களுடைய கதைகளில் நாயகர்களாக்கினார்கள். 1920-ஆம் ஆண்டையொட்டிய பத்தாண்டு காலத்தில் இத்தகைய நாவல்கள் அதிகமாக எழுதப்பட்டன. மேலைச் சிவபுரி பனையப்ப செட்டியார் அ. ராமசாமி முதலியார் போன்றவர் பலர் இந்த முயற்சிகளில் ஈடுபட்டனர். ஒரு கொலையின்றி மர்மக் கதையோ துப்பறியும் கதையோ எழுத இயலாதாகையால் இந்த மாதிரி நாவல்களில் கொலைகள் ஒரு வாழ்க்கை முறையாக அமைந்தன. (ப. 104)

1926-ல் பனையப்ப செட்டியாரும் 1932-ல் வேங்கடரமணியும் காந்தியத்தையும் நாட்டு விடுதலையையும் கதைகளில் கொண்டுவரும் வரை, நாவல்களில் பெரும்பகுதி மர்மம், துப்பறிதல் போன்ற விஷயங்களையே பிரதிபலித்தன. நாட்டு விடுதலைப் போராட்டத்தில் கலந்துகொண்டு அனுபவம் பெற்றவர்கள் அந்த அனுபவபூர்வமான கதைகளை எழுதுவதற்கு மேலும் பத்தாண்டுக் காலம் செயல்பட வேண்டியுள்ளது. (105-6)

ப - (120 - 124)பனையப்ப செட்டியார் என்ற ஆசிரியர் மற்றும் பலரைப்போல, தி. ம. பொன்னுசாமிப் பிள்ளை பாணியில், நான்கு நாவல்கள் எழுதியிருக்கிறார், சாதாரணமாக மேலெழுந்தவாரியாக இந்த நாவல்களைப் பார்த்தால் துப்பறியும் நாவல்களாகக் காணப்படும். ஆனால் ஊன்றிப் பார்த்தால் பனையப்ப செட்டியார் கொண்டிருந்த தீவிரமான அரசியல் கொள்கையும் அவர் காலத்தில் தமிழ்நாட்டில் நிலவிய காந்திய தத்துவ உணர்ச்சியும் நாட்டு விடுதலை வேகமும் அங்கங்கே தென்படக் காணலாம். இவர் எழுதிய

நாவல்களில் காந்திமதி என்ற கதையில் ஒரு முக்கியமான அரசியல் சூழ்நிலை விமர்சிக்கப்படுகிறது.

பாரதி நாட்டு விடுதலைக்காகக் கவிதைகள் புனைந்தார். தமிழ் நாவலில் இந்த விடுதலை உணர்ச்சியைத் தூண்டி நேரடியாகவே உற்சாகப்படுத்த முனைந்த உரைகளைக் கொண்ட முதல் நாவல் காந்திமதி என்றே சொல்லவேண்டும். 1926-ம் ஆண்டு வெளிவந்த இந்த நாவலில் கதா பாத்திரங்களின் வாயிலாக தேச விடுதலை இயக்கம் பிரதிபலிக்கப் படுகிறது. இதன் பதினாறாம் அத்தியாயத்தில் கதாநாயகன் கல்யாணசுந்தரம் ஒரு சொற்பொழிவு நடத்துவதாக ஆசிரியர் எழுதுகிறார் :

'மகாத்மா காந்தியடிகள் பிறந்த தினக் கொண்டாட்டம் இந்திய நாடு முழுவதும் கொண்டாடப்பட்டது. அன்று மில்லர் உயர் தரக் கல்லூரியின் சார்பாக பள்ளி மாணவர் கழகத்தில் ஒரு கூட்டம் கூடியது. பல தேசத் தொண்டர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். இறுதியாக நமது கல்யாணசுந்தரம் தமிழ்நாட்டின் தற்கால நிலை'' என்பதைக் கீழ்வருமாறு சொற் பொழிவு செய்தார்.'

இப்படி ஆரம்பித்து தமிழின் பெருமையையும் நாட்டின் தலைமையையும் எடுத்துச் சொல்லியபின். அந்தச் சொற்பொழிவு தொடர்கிறது.

''இயற்கையோடிசைந்த இன்பவாழ்வு வாழ்ந்த நம் நாட்டார் இது காலை அடிமை வாழ்க்கை வாழ்கின்றனர். அடிமைக்கு இன்பம் ஏது? சுதந்திர வாழ்க்கையில் அன்றோ இன்பம் பொங்கித் ததும்பும்! நம் நாட்டில் மக்கட்குச் சுதந்திரம் விடுதலை இல்லை. மகிழ்ச்சிஇல்லை. வீரம் இல்லை வெற்றி இல்லை. இங்ஙனம் படுகுழியில் வீழ்ந்து கிடக்கும் மக்கள் முன்னேறுவதெப்படி? உலகெங்கும் தேசமெங்கும் சுதந்திரக் காற்றுச் சுழல்விட்டு வீசுகிறது. நமது நாட்டில் அறியாமை இருள் மக்கள் பார்வையின் ஒளியைக் குறைக்கிறது. வீர சுதந்திரம் வேண்டி நின்று எங்கள் நாடு, எங்கள் மொழி என்று சொந்தம் பாராட்டித் தோள் தட்டும் உண்மை வீரம் வருகிற வரையில் நமக்கு நல்வாழ்வு ஏது?''

ஆசிரியர் வாழ்ந்த காலம் நம் நாட்டின் சுதந்திர இயக்கத்தில் ஒரு முக்கியமான கட்டம். மகாத்மா காந்தியின்

ஒத்துழையாமை இயக்கம் தீவிரமடைந்த காலம். காங்கிரஸில், சட்டசபை செல்வதா! பகிஷ்கரிப்பதா என்ற இக்கட்டான நிலை. இதைக் குறிப்பிட்டு இந்த நாவலில் கதாநாயகன் பேசுகிறான்;

'இதுகாலை சட்டசபை மோகம் நாளுக்கு நாள் அதிகப் படுகிறது. கதர் இயக்கம் குன்றியது. எங்கும் ஒருவித அயர்வு காணப்படுகிறது. சாதிச் சண்டைகளும் பிறவும் மலிந்து விளங்குகின்றன. சட்டசபைக் கட்சியினர் சட்டசபையுட் புகுந்தனர். ஆங்குச் சென்று ஏதோதோ செய்து அரசாங் கத்தாரை மடக்கித் தம் வழிக்குத் திருப்பிவிடலாமென மனப்பால் குடித்தவர்களின் எண்ணங்களெல்லாம் வீணாயின. எதுவும் செய்ய முடியவில்லை. பழைய கறுப்பனே கறுப்பன் என்ற நிலையில்தான் அதிகாரவர்க்கம் இருந்து வருகிறது சட்டசபை நுழைவதன் மூலமாக எவ்வித நன்மையும் நாட்டுக்குச் செய்ய முடியாதென அறிந்த பின்னராவது அம்மோகம் குறைந்தபாடில்லை நண்பர்களே சட்டசபை செல்வோர் செல்க. அவர்களைப் பற்றி நாம் கவனிக்க வேண்டாம். நமது நாட்டின்தாழ்ந்த நிலை ஒழியவேண்டும். நாட்டில் ஏற்பட்டிருக்கும் சோர்வை நீக்கிப் புதிய சக்தியையும் ஊக்கத்தையும் தரவல்ல திட்டம் ஒன்றைத் தலைவர்களே செப்பனிட வேண்டும். அதற்குச் சமாதானப் பேச்சுப் பேசுவதாலும் இந்தியா மந்திரியை கண்டு பேசுவதாலும் ஒரு பயனும் உண்டாகாது.

பிறர் நம்மை மனிதர்களென்று கருதுவதில்லை. அதற்குக் காரணம் நம்முடைய தாழ்ந்த நிலையே. ஒரு ஆங்கிலேயன் நம்மில் ஒருவனை அடித்தானானால், காந்தியடிகள் அஹிம்சா தர்மத்தை மேற்கொள்ளும்படி சொல்லியிருக்கிறார் என்று விட்டுவிடக்கூடாது, அஹிம்சா தர்மத்தை மேற்கொள்ள வேண்டியதே எனினும், நம்முடைய மானம் கெடவந்தவிடத்து அதைப் பிடிவாத மாய்க் கொண்டு பெருமையை இழத்தல் அறிவுடைமை யல்ல. பொறுமைக்கும் ஓர் அளவுண்டு.

பொறை யெனப்படுவ தாடவர் தமக்குப்
பூ ணெனப் புகலினும் பொருந்தார்
முறையல புரிந்தால் அக்கணத் தவர்தம்
முடித்தலை துணிப்பதே முழுப் பூண்

என்பர் வில்லிபுத்தூரர். உடனே அம்முறையற்ற செயலைக் கண்டிக்காவிட்டால் மறுபடியும் மேன்மேலும் அதைவிடப் பெரிதான குற்றங்களைச் செய்யத் தொடங்குவான். அப்பொழுதே அவனுக்குப் பாடங் கற்பித்தால் பிறகு அவ்விதம் செய்யமாட்டான். ஆகையால் நமக்கு என்றும் உள்ள வீரத்தை, பெருமையை காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு முயல வேண்டும். "காங்கிரஸில் பிளவுகள் ஏற்பட்டு விட்டன. இனி நமக்கு விடுதலை கிடைப்பது அரிது" எனப் பலர் சொல்லுகின்றனர். இங்ஙனம் அபிப் பிராய பேதங்களும் பிழைகளும் ஏற்படுதல் இயற்கைதான். இதை நாம் ஒரு பொருட்டாக எண்ணாமல் யாவரையும் உட்படுத்தி ஒற்றுமையுடன் உழைக்க முன்வர வேண்டும்"

இவ்வாறு 1926-ம் ஆண்டிலேயே தேச விடுதலையுணர்ச் சியில் வெட்ட வெளிச்சமாகப் பலாத்காரத்தை வற்புறுத்தி துணிகரமாக ஒருவர் எழுதியது ஆச்சரியமான விஷயம்தான். ஆசிரியர் பனையப்ப செட்டியார் தமது நாவலில் இந்தவிஷயத் தை சமகாலச் சமுதாயப் பார்வையில் எழுதி வைத்தது ஒரு சிறந்த அம்சமாகத் தெரிகிறது.

இந்த நாவல் இன்றைய விமர்சகர்களுக்குப் பழைய பிரதாப முதலியார் சரித்திரத்தையும் பின்னர் தோன்றிய துப் பறியும் கதைகளையும் ஞாபகப்படுத்தினாலும் சில அம்சங்கள் நாவல் சரித்திரம் ஆரம்பிப்பவர்களுக்குப் பயன் தரத்தக்கன. இந்த நாவலிலும் இவர் எழுதிய மணிவாசகன் சண்முகநாதன் அமிர்தம் என்ற மற்றும் மூன்று நாவல்களிலும் துப்பறியும் ரங்கநாதன் என்ற ஒரு பாத்திரத்தை ரங்கராஜு கோவிந்தன் போன்று, சிருஷ்டித்து நடமாடவிட்டிருக்கிறார். இருட்டறை, மாறுவேடம் முதலிய மர்மச் சூழ் நிலைகளும் காணப்படுகின்றன ஆனால், ஆசிரியர் உயர்ந்த கல்வியறிவும், தமிழறிவும் வரப்பெற்றவர் என்பது அவர் கையாண்டிருக்கும் நடையிலும் எடுத்தாளும் மேற்கோள்களிலும் புலனாகிறது. அந்தக் காலத்து மதுரையை இவர் காந்திமதி என்ற நாவலில் வருணிப்பது மிக இயல்பாகக் காணப்படுகிறது.

'மாலை 3மணி இருக்கலாம். மேலக்கோபுரவீதியிலும் கடைத்தெருவில் வழக்கம்போல் பல மனிதர்கள் கூடிக் கொண்டிருந்தனர். பல ஊர் மனிதர்கள் தேனடையைச் சூழ்ந்து மொய்க்கும் ஈக்களைப்போல் நெருங்கி

போவோரும் வருவோரும் நிற்போரும் கண்ணுக்கெதிரே முடிச்சவிழ்ப்போரும் பழுக்காய்த்துணியைப் பட்டுத்துணி யென்று விற்போரும் குடிவெறியால் உடுத்திருந்த துணியையும் இழந்து தடுமாறுவோரும், சாட்டைக் குச்சியைச் சக்கரத்தில் விட்டுக் குடு குடு வென்று ஜட்கா வண்டியோட்டுவோரும் பட்டிக்காட்டு ஆசாமியொருவன் வகை தெரியாமல் தெருவில் ஒன்றியிருக்க அதனைக்கண்டு அபராதமாக ஒருரூபாய் கொடுக்கத்தான் வேண்டுமென்று அமுல் நடத்தும் போலீஸ் புலிகளும் வேசியர் கூட்டமும் புதுமண்டபத்தில் சதுராட்டம் என்போரும் இன்னும் பலருமாய்த் திரண்டு விளங்கினர்.

நாவல் எழுதுவதில் பனையப்ப செட்டியார் திறமையை அவர் காலத்து அறிஞர்கள் பலர் பாராட்டியிருக்கின்றனர். சண்முகநாதன் என்ற நாவலின் தலைப்பே ஒரு புதுமையானது சாதாரணமாக நற்குணம் படைத்த கதாநாயகன் நாயகி போன்றவர்களின் பெயர்களே நாவல்களின் தலைப்பாக அமையும் இந்த நாவலில் வரும் தீயவன் (வில்லன்) பெயர் தான் தலைப்பாக அமைந்துள்ளது. கதாநாயகி கோகிலம், பணம் படைத்த ஆனால் குணம் இல்லாத சண்முகநாதனை மணக்கமறுத்து பண்பு நிறைந்த மாசிலாமணியைக் காதலிக் கிறாள். பல மூடநம்பிக்கைகளின் பலனற்ற தன்மையும் இந்த நாவலில் விளக்கப்படுகிறது. பல சாற்றுக் கவிதைகளின் பாராட்டைப் பெற்ற இந்த நாவல் அக்காலத்திய சமுகத்தில் நிலவிய பழக்கங்களை அறிந்து கொள்ள உதவுகிறது. மேலும் அக்காலத்திய கதாசிரியர்களின் பாணியில் திருக்குறள், கம்பராமாயணம் போன்ற சிறந்த தமிழ் இலக்கியங்களிலிருந்து மேற்கோள்கள் கதை எழுதுவதிலும் கையாளப் பட்டிருக் கின்றன.

கதையின் ஆரம்பமும் இன்றைய நாவல்களில் காணப் படும் உத்தியான ஓர் உரையாடலுடன் தொடங்குகிறது. நன்றாயிருக்கிறது உமக்கென்ன? இந்த விநாடியில் நாவை யசைத்தால் ஆயிரம் பெண்கள் வந்து காலில் விழமாட்டார் களா? வயதாகிவிட்டதென்று கூறுகிறீர். அதனாலென்ன? பண தேவதையின் பூஜைமிகுந்த இக்காலத்தில் வயதாகிவிட்டதைக் கவனிப்பார் யார்? என்று ஐம்பது வயதான ஒருவருக்கு அவருடைய நண்பர் உற்சாகமொழிகளைக் கூறுவதுடன் நாவல் ஆரம்பிக்கிறது. தேசபக்தி, நாட்டு விடுதலை உணர்ச்சி, சமூக

சேவை போன்ற பண்புகள் இவருடைய நாவல்களில் இடம் பெறக் காணலாம். பனையப்ப செட்டியாரின் காந்திமதி நாவலைப் பற்றி அக்காலத்தில் தமிழ்ப் பண்டிதர் ஒருவர் கூறுகிறார்:

> 'உலகியற்கையை நன்கறிந்து அதனை ஒரு பயன் கருதி கதை மூலமாகப் படிப்போர் மனம் சலியாவண்ணம் பாங்கு பெற அமைத்து எழுதப்பட்டதே நாவல் எனப்படும். உலகியற்கைக்கு மாறுபடாமை, இனிய பாஷைநடை, படிப்போர் மன மகிழ்ச்சி ஆகிய மூன்றும் நாவலுக்குரிய உறுப்புகளாம். இம் மூன்றுவகையிலும் நன்கு பயின்றவர்களே நாவல் எழுதுவதற்குத் தகுதியுடையவர்களாம். செ. பனையப்ப செட்டியார் அவர்களின் நாவல்களில் முக்குணமும் முதிர்ந்து காணப்படுவதைவாசகர்கள் நன்கறிவார்கள்

1926 அளவில் பனையப்ப செட்டியார் எழுதிய நாவல்கள்:

(1) காந்திமதி

(2) மணிவாசகன்

(3) ஷண்முகநாதன்

(4) அமிர்தம்

(5) சந்திரசேகரன்

## 18. நகரத்தார் மரபுப் புலவர்களும் அவர்கள் இயற்றிய நூல்களும்

1 அளகாபுரி திரு சம்பந்த முனிவர்

(1) "திருவாரூர்ப் புராணம்"

2 தேவகோட்டை திரு. அ. நா. நாராயணன் செட்டியார் (வன்றொண்டர்)

(1) சிவஞான போத லகு வசனம்

(2) தனிப்பாடல்கள்.

3 காரைக்குடி ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க அடிகள் (ஆண்டவர் – கோயிலூர்)

(1) சுவாநுபவத் திருவாக்கு.

4 கீழ்ச்சிவல்பட்டி அழ முத்தப்பச் செட்டியார் (பாடுவார் முத்தப்பச் செட்டியார்)

(1) ஜெயங்கொண்டார் சதகம்

(2) திருமுக விலாசம்

(3) தல்லாகுளம் கருப்பர் அகவல்

5 நாட்டரசன் கோட்டை திரு ஐயா கருப்பன் செட்டியார்.

(1) கண்ணுடைய நாயகியம்மை மாலை — பதிகம்—கும்மி

(2) சோழீசர் மாலை—பதிகம்

(3) வேங்கடாசல மாலை

(4) இராமானுஜ திரிதச வெண்பா

(5) பெரிய கருப்பண்ண சுவாமி பதிகம்

(6) குன்றக்குடி முருகக் கடவுள் பதிகம்

(7) சிறுவயல் மும்முடிநாத ஈசுவரர் பதிகம்

(8) பாகநேரி புல்வா நாயகி அம்மன் பதிகம்

6 காரைக்குடி திரு பி. ராம கு மெ. மெய்யப்பச் செட்டியார்.

(1) மீனாட்சியம்மை பதிகம்

(2) மீனாட்சியம்மை கலித்துறைப் பதிகம்

(3) முடுகு வெண்பா

(4) செவ்வூலூர் மதுவநாயகியம்மை பதிற்றுப்பத்தந்தாதி

7 காரைக்குடி திரு. நெ. ராம. நெல்லையப்ப செட்டியார்.

(1) சுந்தரேசர் பதிகம்

(2) மீனாட்சியம்மை பதிகம்

8 காரைக்குடி திரு நாகப்பையா.

(1) பொய்சொல்லா மெய்யர் பதிகம்

9 காரைக்குடி திரு மெய்யப்ப அடிகள்.

(1) தனிப்பாடல்கள்

10 தேவகோட்டை திரு வீர. லெ. சிந்நயச் செட்டியார்.

(1) தேவைத் திரியந்தாதி

(2) பிரபஞ்ச பந்தகம்

(3) திருவெற்றியூர்ப் புராணம்

(4) குன்றக்குடி முருகன் பிள்ளைத்தமிழ்

11 காரைக்குடி திரு. ராம. சொ. சொக்கலிங்க ஐயா (சித்தாந்தச் செல்வர்)

இவர்கள் புராணம், பதிகம், மாலை, அந்தாதி, சிலேடை வெண்பா, பிள்ளைத்தமிழ், சந்த விருத்தம், திருவூசல், மும்மணிக்கோவை, மஞ்சரி, கண்ணி முதலிய கவிதை நூல்களும் உரை நடை நூல்களுமாக (108) நூற்றெட்டு நூல்கள் எழுதியுள்ளார்கள்.

12 உலகம்பட்டி திரு இலக்குமண அடிகள் (காளையார் கோயில் மடாதிபதி) தனிப்பாடல்கள்.

13 தேவகோட்டை திரு. வெ. ஆதி. மா. சிதம்பரம் செட்டியார்.

(1) தில்லைக் கற்பக விநாயகர் வெண்பா அந்தாதி

(2) தேவகோட்டை கலங்காத கண்ட விநாயகர் விண்ணப்பமாலை

(3) அமிஞ்சிக்கரை வரசித்தி விநாயகர் பதிகம்

(4) தில்லைச் சிவகாமியம்மை பதிகம்

(5) காசி விசுவநாதர் கோயில் திருப்பணி முறையீடு

(6) தில்லைக் கற்பக விநாயகர் சதகம்

(7) தில்லைக் கற்பக விநாயகர் தோத்திரம் எழுபது

14 நாச்சியார்புரம் திரு வெ. ராம. வெ. இராமநாதன் செட்டியார்.
(கூத்தலூர் இராமையா)

(1) நாச்சியாரம்மன் தோத்திரப் பதிகம்

15 அமராவதிபுதூர் வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியார்,

(தருமபுர ஆதீன வித்வ சிரோமணி)

(1) மயூரகிரிக் கலம்பகம்

(2) நாட்டரசன் கோட்டைக் கண்ணுடையம்மன் பதிகம்

(3) கொன்னையூர் மாரியம்மன் பதிகம்

16 அரியக்குடி திரு சா. கி. அரங்கநாதச் செட்டியார்

(1) திருவேங்கடமுடையான் திருவந்தாதி

(2) சீனிவாசப் பெருமாள் வாகனக்கவி

17 காரைக்குடி திரு அரு அ. ராம. அரு. அருணாசலம் செட்டியார்.

(1) கொப்புடையம்மன் பிரார்த்தனைப் பாடலும் வருகைப் பதிகமும்

(2) சப்தப் பிரபந்தம்

18 காரைக்குடி நா. முருகப்ப செட்டியார்
தனிப் பாடல்கள்

19 காரைக்குடி ராம. உ. இராமசாமி செட்டியார்

(1) சொக்கலிங்க ஐயா தோத்திரப் பாடல்

(2) தனிப்பாடல்கள்

20 காரைக்குடி திரு சேவு. மெ. சேவுகன் செட்டியார்

(1) காரைநகர் மீனாட்சியம்மை பதிகம்

21 கண்டனூர் திரு தெ. அரு. சித. அரு இராமநாதன் செட்டியார்

மருதவாணர் தாலாட்டு

22 காரைக்குடி சொ. முருகப்பா.

(ஆசிரியர்—குமரன்)

(1) கவிதைமலர் (தொகுப்பு நூல்)

(2) கம்பர் காவியம் (கட்டுரை நூல்)

(3) கம்பர் அருளிய இராமகாதை
(பாலகாண்டம்) (உரை நூல்)

(4) கம்பர் அருளிய இராமகாதை
(அயோத்திக் காண்டம்) ( ,, )

23 தேவகோட்டை திரு சேவு. மெ. மெய்யப்ப செட்டியார்.

(தமிழ் வள்ளல்)

(1) கைலாச விநாயகர் நான்மணி மாலை
(2) செயங்கொண்ட சோழீசர் தோத்திரம்
(3) சௌந்திரநாயகி தோத்திரம்
(4) அறம் வளர்த்த நாயகி பதிகம்
(5) திருஞானசம்பந்தர் திருமுறைப் பெருமை
(6) சிவபூசை முறை
(7) சைவசித்தாந்த விதி

24 பள்ளத்தூர் திரு கா. இராமநாதன் பி. ஏ. பி. எல்

(1) ஆழமும் அகலமும் (கட்டுரை)
(2) வாழ்க்கையும் சமயமும் ( ,, )
(3) ஏன் பிறந்தோம் ( ,, )
(4) சிவஞான போதம்
சிறிய உரை (உரை நூல்)
(5) மணிவாசகப்
பாமாலை (தொகுப்பு நூல்)

குறிப்பு :—

வாழ்ந்து புகழ்பெற்ற இப் புலவர் பெருமக்கள் நூல் விவரங்களைத் தொகுத்து அளிப்பவர்கள் காரைக்குடி திரு ராம. சொ. திருநாவுக்கரசு செட்டியாரவர்களும், திரு ரெ. முத்துக் கணேசன் அவர்களும் ஆவரர்கள்.

# 19. பட்டப் பெயர்கள்

பாறையெல்லாம் பழங்கதை சொல்லும் சிறப்புடையது மாமல்லபுரம். பட்டப் பெயரெல்லாம் வரலாறு, பூகோளம், பொருளாதாரம் கூறும் இயல்பினது செட்டிநாடு.

செட்டி நாட்டில் பட்டப் பெயர்களுக்குக் குறைவே இல்லை. பட்டப் பெயர் சொல்லாமல் சிலரை அடையாளம் கண்டு கொள்வதும் கடினம்.

ஊர்கள்,

தொழில்கள்,

அறச் செயல்கள்,

உடைமைப் பொருள்கள்,

உடலுறுப்புகள்,

குணங்கள்—ஆகியவற்றால் ஏற்பட்டவையென்று செட்டி நாட்டுப் பட்டப் பெயர்களைத் தொகுத்தும் வகுத்தும் கூறலாம்.

## ஊர்ப் பெயர்கள்

ஒரு பகுதியைவிட்டுப் பிறிதொரு பகுதிக்குச் சென்று குடியேறி வாழ்வது நகரத்தாருடன் இரண்டறக் கலந்தது. நாக நாட்டிலிருந்தும் காஞ்சிபுரத்திலிருந்தும் பின்னர் காவிரிப்பூம் பட்டினத்தில் நெடுங்காலமாய் வாழ்ந்து செட்டிநாட்டுப் பகுதிக்குக் குடியேறி யிருக்கிறார்கள்.

செட்டி நாட்டில் 96 ஊர்களில் நகரத்தார் வாழ்ந்தனர் என்பது, 96 ஊர் நகரத்தார், 96 ஊர்க் கூட்டம் என்ற சொற்றொடர்களால் உறுதிப்படுகிறது. இந்த 96 ஊர்களின் பட்டியல் பழைய 'குமரன்' டைரியில் உள்ளன. அந்த ஊர்களில் இப்போது 76 ஊர்களிலேயே நகரத்தார்கள் இருப்பதாகக் குறிக்கப் படுகிறது. மேல மாகாணம், ஆலங்குடி போன்ற சில ஊர்களில் இருந்த நகரத்தார் அனைவரும் காரைக்குடிக்கு குடியேறி விட்டனர். இவர்கள் மேல மாகாணத்தார் வீடு,

ஆலங்குடியார் வீடு என்ற பெயர்களால் காரைக்குடியில் குறிப்பிடப் பெறுகிறார்கள். இவ்வாறே பொன்னமராவதி புதுப்பட்டியில் துவார் அடைக்கப்ப செட்டியார் வீடு என்ற பெயரிலும் குடும்பங்கள் உள்ளன.

ஆண் குழந்தை இல்லாதவர்கள் தத்து எடுத்து அதாவது சுவீகாரம் செய்து கொள்வர். பால் மணம் மாறாப் பச்சிளம் பருவத்திலேயே பலர் சுவீகாரம் வந்து விடுவர். ஆகையால் அவர்களுக்கு "வளர வந்தவர்கள்" என்று பெயர். பிறந்த ஊரின் பெயரும் அவர்கள் பெயரோடு சேர்ந்து வளரும்.

பிறந்த ஊரைக் குறிக்க ஓர் எழுத்தைச் சிலர் தம் பெயருக்கு முன் போட்டுக் கொள்கிறார்கள். இராமசாமி முதலியார் பெயருக்கு முன்னாலுள்ள ஏ. அவர் பிறந்த ஆர்க்காட்டைக் குறிக்கும். இந்தியக் குடியரசின் முன்னாள் தலைவர் டாக்டர் எஸ் இராதாகிருஷ்ணன் அவர்களுடைய முன்னோர் வாழ்ந்த சர்வபள்ளியை அவர் பெயரிலுள்ள எஸ். குறிக்கும். அவர் மகனும் தன் பெயரை எஸ். கோபால் என்று வைத்துக் கொண்டுள்ளார். இந்தமரபு நகரத்தாரிடம் இல்லை. ஆனால் செல்வாக்கு நிறைந்தவர்கள், தங்கள் பெயர்களுடன் தாங்கள் செல்வாக்குப் பெற்ற ஊரின் புகழையும் பரப்பி வருகிறார்கள். இவர்களில் சிலரைக்காண்போம்.

தேவகோட்டையில் ஒரு சதாபிஷேகத்திற்கு அழைப்பு வந்திருக்கிறது. விழா நடக்கும் இடம் "வங்காளம் இராமன் செட்டியார் வீதி" என்று அச்சிடப் பட்டிருக்கிறது. இந்த வீதியின் பெயரில் ஒரு வரலாறு அடங்கியிருக்கிறது. சூயஸ் கால்வாய் திறக்கப்பட்ட பிறகு இந்தியாவின் தலைநகராக இருந்த கல்கத்தாவில் நூற்றுக் கணக்கான செட்டியார்கள் அரிசி ஏற்றுமதி முதலிய வாணிகத்துறைகளில் விரிவாக ஈடுபட்டனர். அவர்கள் அனைவரும் வங்காளத்தோடு தொடர்பு படுத்திக் குறிப்பிடப்பட்டனர்.

'ஈப்போ 'சொ' கப்பளை 'நா' மோல் மீன் 'சா' சிங்கப்பூரார் வீட்டு 'சுப', என்ற பெயர்களெல்லாம் செட்டி நாட்டில் சர்வசாதாரணம். கோவிலூரார் மடத்தை நிறுவிய பெரியவர்கள் வீடு "கோவிலூரார் வீடு" என்றே காரைக்குடியில் வழங்கி வருகிறது.

அரிக்கன் பழனியப்பா

அரிக்கன் பழனியப்பா என்ற ஒருவர் பெரும் புகழுடன் விளங்கினார். அவர் நேமத்தான்பட்டி மெ. மு. பழ. குடும்பத்தினர். பங்களாதேஷ் எல்லை அருகே பர்மாவிலுள்ள அக்யாப் என்னும் துறைமுகத்திற்கு நகரத்தார்கள் வைத்த பெயர்'அரிக்கன்'மயிலாடுதுறையை மாயவரமாகவும், தரங்கம் பாடியை டிராங்குபாராகவும் பொருளற்ற சொற்களாக ஆங்கிலேயர் ஆக்கியதற்கு வட்டியும் முதலுமாக நகரத்தார்கள் தென்கிழக்கு ஆசியாவெங்கும் ஆயிரக்கணக்கான ஊர்ப் பெயர்களைத் தமிழ் வடிவமாக்கியுள்ளனர்.

அரிக்கன், அரிசி ஏற்றுமதியில் தலை சிறந்த துறைமுகம். அங்கு அவ்வாணிகத்தில் தமக்கு ஒப்பாரும் மிக்காருமின்றி விளங்கிய பழனியப்ப செட்டியார் ஏராளமான சிறு கப்பல்களைச் சொந்தமாக வைத்து, அரிசி வியாபாரம் செய்தார். கப்பல்கள் வருவது போவது, அரிசி விலை ஏற்ற இறக்கம் பற்றி நாள்தோறும் நாழிகை தோறும் ஏராளமான தந்திகள் அவருக்கு வந்தவண்ணமாக இருந்தன. தந்திக் கம்பிகளின் ஓசைகளைக் கேட்டவர்கள் "அரிக்கன் பழனியப்பா அலறுதடா உன் தந்தி'' என்று சொல்லுவார்கள்.

மயில்கள் தோகை விரித்தாடும் விராலிமலையில் மலை மீதுள்ள கோவிலை அழகுபட அமைத்தவர் அரிக்கன் பழனியப்பரே.

இன்னும் நுவார எலியா 'கரு' யாழ்ப்பாணம் 'சொ' போன்ற பெயர்களெல்லாம் உண்டு. சிலபெயர்கள் மருவியும் மாறியும் சிதைந்தும் திரிந்தும் உள்ளன. நுவார எலியா இலங்கையின் ஊட்டி. அதைச் செட்டிநாட்டுப் பெண்கள் நூலிழை ஆக்கிவிட்டனர்!

அநுராதபுரம்இலங்கையின் தொன்னகரம். புத்தர்பிரான் தொடர்புடைய புனித பூமி. சோழர் கலைத்திறனைக் காட்டும் பகுதிகளையும் உடையது. அங்குசிங்களவரும்வியக்கும் வண்ணம் சிங்களமொழியில் பிரசங்கமாரி பொழிந்தார் ஒரு செட்டியார். அவரையே சிங்களவர் தங்கள் நகரத்தின் மேயராகவும் ஆக்கிக் கொண்டார்கள். அவர் குடும்பம் அனுராதபுரம் 'சொ' வீடு என்ற பெயரில் மேலைச்சிவபுரியில் திகழ்கிறது.

சைலா ஆறுமுகம் செட்டியார் என்பவர் நாச்சியாபுரத்தைச் சேர்ந்தவர். 1964-இல் 93 வது வயதில் இறந்தார். அவர் தம் வாழ்நாளில் 60 ஆண்டுகள் பர்மாவில் பியாப்பம்மாவட்டத்தில் சைலா என்னும் ஊரில் கழிந்தன. அவர் தம் திறமையாலும் நாணயத்தாலும் எல்லையற்ற செல்வாக்குடன் வாழ்ந்தார். ஆனரரிபிரசிடன்ஸி மேஜிஸ்திரேட்டாகவும்நியமனம் பெற்றார். வான் பொய்ப்பினும் தான் பொய்யாத ஐராவதி ஆற்றில் செல்லும் படகுகளுக்கும் சிறு கப்பல்களுக்கும் வரி (Cess) வசூலித்து அதில் 60% தான் வைத்துக் கொண்டு எஞ்சிய 40%ஐ மட்டும் பர்மிய அரசுக்குச் செலுத்தும் உரிமை பெற்றிருந்தார். சைலா ஆறுமுகம் செட்டியாரின் பேரன் திரு K. N சுப்பையா சென்னையில் ஆனரரி பிரசிடென்ஸி மேஜிஸ்ட்ரேட்டாகவும் அரசியல் தொழில் வட்டாரங்களில் செல்வாக்குப் பெற்றவராகவும் விளங்குகிறார். துணை ஷெரிப் (1975)

"மைசூரார் வீடு, கொச்சின் நாச்சியப்ப செட்டியார் வீடு" போன்ற பெயர்களும் உள்ளன. காட்ரெஜ் ஸ்டீல் கேபினட்கள் ஏற்படுமுன், சிறந்த இரும்புப் பெட்டகங்களைச் சொக்கனேந்தல் நகரத்தார் ஒருவர் P.L.M&Sons என்ற பெயரில் சென்னையில் செய்துவந்தார். அவர் குடும்பத்தை அவ்வூரார் "பட்டினத்தார் வீடு" என்று சுட்டினர்.

## தொழிற் பெயர்கள்

தொழில்களை யொட்டிய பட்டப் பெயர்கள் செட்டிநாட்டில் இருக்கின்றன. கோவில் வீடுகளில் நடைபெறும் படைப்புக்களில் சாமி ஆடி அனைவருக்கும் திருநீறுகொடுப்பவர் 'சாமியாடி' செட்டியாராகி விடுகிறார்.

ஜே ஆர். டி. டாட்டாவுக்கு முன்னரே சொந்தமாக ஏரோப்ளேன் வைத்திருந்து அதைத் தாமே ஓட்டிய பெருமைக்குரியவர் கானாடுகாத்தான் சா. அ. அ. அண்ணாமலைச் செட்டியார். இவர் 'குமுதம்' எஸ் ஏ பி அண்ணாமலை அவர்களின் சித்தப்பா. இவர் தம் விமானத்தை இறக்குவதற்காகத் திருமயத்திற்கு அருகே ஒரு சின்னஞ்சிறு ஊரில் சொந்தமாக Landing Ground அமைத்துக் கொண்டார். சென்னையில் Flying Club ஆரம்பித்தவரும் இவரே. ஆசியாவிலேயே ஆகாய விமானத் தொழிலுக்கு வழிகாட்டிய இவர் "ஏரோப்ளேன் அண்ணாமலை செட்டியார்" என்ற பெயரிலேயே விளங்கி வந்தார்.

1936-ல் ஸ்பெயினில் நடைபெற்ற உள்நாட்டுப் போரில் மக்களாட்சி நிலவப் பாடுபட்ட கட்சிக்கு ஆதரவாக ஆகாய விமானப்படையில் சேர்ந்து போரிட்ட திரு. வீரப்பசெட்டியார், 'ஸ்பெயின் வீரப்பா' வாகத் திகழ்கிறார்.

'லா ரூட்' என்ற பெயர் கொண்ட ரப்பர்த் தோட்டத்தின் உரிமையாளரான ஒரு செல்வக்குடும்பம் 'லா ரூட்'டார் வீடு எனப் பெயர் பெற்றது. காலப்போக்கில் இப்பெயர் லா ஸுரா-வீடு ஆகிவிட்டது.

புதிய தொழில் தொடங்க மூலதனம் போட, வெளி நாடுகளுக்குப் பணம் அனுப்புவது வெளிநாடுகளிலிருந்து பணம் வரவழைப்பது ஆகிய Foreign Exchange தொழிலில் ஈடு பட்டிருந்தவர்கட்கு 'உண்டியல் கடைக்காரர்' என்று பெயர். உண்டியல் போய் பேங்கு டிராப்ட்டும் ரிசர்வ்பேங்கின் கட்டுப்பாடுகளும் வந்துவிட்டன, உண்டியல் கடைகளும் இப்போது இல்லை. ஆனால் இன்னும் பேச்சு வழக்கில் செட்டி நாட்டு ஊர்தோறும் ஒரு 'உண்டியல் கடைக்காரர் வீடு' உண்டு சுருக்கமாக 'கடைக்காரர்' என்றும் கூறுவர். நகரத்தார் கண்ட முதல் 'கடை' இது தான்!

கிராம மக்கள் கண்ட முதல் 'மிஷின்', நெல் இயந்திரம். எனவே சிற்றூர்களில் யாராவது இத்தொழிலில் முனைந்ததும் அவர் 'மிஷின் முத்துராமன் செட்டியார்' என்றோ 'மிஷின் சின்னய்யா செட்டியார்' என்றோ ஆகிவிடுவார்.

தமிழ் இசை இயக்கம் தொடங்கிய போது பனையபட்டி வினை தீர்த்தான் செட்டியார். (கல்கி இவரை - வினையப் பட்டி பனை தீர்த்தான் செட்டியார் என்று எழுதியிருந்தார்,) என்ற சங்கீத வித்துவான் உருவானார். அக்காலம் ஏழிசை மன்னர் எம். கே. தியாகராஜ பாகவதரின் பொற்காலம். ஆகையால் இவர் பட்டப் பெயரும் 'பாகவதர்' ஆயிற்று.

வயிர வியாபாரம் செய்த ஒருவர் தமிழ் நாடகத் துறைக்கு வந்த பின்னரும் வயிரம் அருணாசலம் செட்டி யாராகவே பெயர்பெற்றார். ஓர் ஆச்சி கோழி வளர்த்ததால் அவர்கள் வீடு 'கோழி மேய்க்கியார்' வீடு என்னும் அடை மொழியைப் பெற்றிருக்கிறது.

வட்டித் தொழிலில் நேர்மையாக நடந்து கொள்ள வேண்டும் என்பது வேலங்குடிக் கல்வெட்டில் நகரத்தார்களுக்கு இடப்பட்ட கட்டளை. மிகப் பெரும்பாலோர் நாணயமாகத் தான் நடந்து கொண்டிருக்கிறார்கள். கொள்வதிலும் கொடுப்பதிலும் இம்மிபிசகாமல் இருப்பதும், பிறர் சொத்துக்கு ஆசைப் படாதிருப்பதும் இவர்களுடைய இயல்புகள். நம்பிக்கையாக நகையை ஒருவர் அடகு வைத்திருப்பார்; ரசீது வாங்கியிருக்க மாட்டார்; இன்னார் விட்டில் அடகு வைத்திருக்கிறேன் என்பதைத் தம் குடும்பத்தினருக்குக் கூடத் தெரிவிக்காத நிலையில் திடீரென்று இறந்திருப்பார். எனினும் அவற்றை அணுவளவும் குறையாது திரும்பக் கொடுத்தவர்கள் உள்ளனர்.

பர்மாவில் ஜப்பானியர் குண்டு வீசியதும் அடகு நகைகளை இந்தியாவுக்குப் பத்திரமாகக் கொண்டு வர, ஓராயிரம் மைல்கள் அடர்ந்த காடுகளினூடேயும் மலைச் சரிவுகளிலும் நடையாகநடந்துசொல்லொணா இன்னல்களுக்குஆளாயினோர் சில ஆயிரம் நகரத்தார்கள். இவர்கள் 1942-இல் செட்டி நாட்டில் பெரிய அளவில் நடைபெற்ற கலவரங்கள், கொள்ளைகளிலிருந்து பர்மியர்களுடைய நகைகளைக் காப்பாற்றினர். பிறகு கூர்க்காக்களை நியமித்து அவற்றைப் பேணினர், பின்னர் ரிசர்வ்பேங்கில்-இசைவு பெற்று மீண்டும் பர்மாவுக்குக் கொண்டு போய் உரியவர்களிடம் சேர்த்தனர். பல ஆண்டுகளுக்குப் பிறகு தங்கள் நகைகளைக் கண்ட பர்மியர் — ஆடவரும் பெண்டிரும் அடைந்த மகிழ்ச்சிக்கும் வியப்புக்கும் அளவே இல்லை.

விதிவிலக்காக ஓரிருவர் கூடுதலாக வட்டி வாங்கியும் இருக்கின்றனர். இது சமூகத்தினர் அனைவர் மனதையும் புண்படுத்தும். சிலருடைய கைராசி தங்களிடம் நகை அடகு வைத்தவர்கள் அவற்றை மீட்டும் வசதியைப் பெறுவதில்லை. வேறு சிலர், எச்சரிக்கையாகக் கடன் கொடுக்கும்போதே ஒரு சொத்தை நம்பிக்கையாகக் 'கிரயம்' எழுதி வாங்கிக் கொண்டு விடுவார்கள். கணக்குத் தீர்ந்த பிறகு பதிந்து கொடுப்பார்கள். அல்லது கிரயப் பத்திரத்தை ஆதரவாக வைத்து *Running O/D. A/C.* வைத்துக் கொள்ளுவர். இவ்வாறு ஒரு சிலர் செய்வதைப் பொதுவாக நகரத்தார்கள் பாராட்டுவதில்லை. தங்கள் கண்டனத்தைத் தெரிவிக்க அவ்வாறு முறை தவறித் தொழில் செய்பவர்கட்கு அத்தெறுதி (அற்று+இறுதி) அருணாசலம் செட்டியார் என்றோ சுத்தக்கிரயம் சுந்தரம் செட்டியார் என்றோ பட்டப் பெயர் வைத்து விடுவார்கள்.

### அறச் செயல்கள்

செய்த தருமங்களால் பட்டப்பெயர்கள் ஏற்படுவதும் உண்டு. தமிழ்நாடெங்கும் நூற்றுக்கு மேற்பட்ட ஊர்களில் சத்திரங்கள் நிறுவிய ஒரு பெருங் குடும்பத்தின் வழியினர் இன்றும் தேவகோட்டையில் சத்திரத்தார் வீடு என்று குறிப்பிடப்படுகிறார்கள்.

இவ்வாறே பல ஊர்களில் கார்த்திகை மடத்தார் வீடு பசு மடத்தார் வீடு. தண்ணீர்ப் பந்தல் ராமன் செட்டியார் வீடு பள்ளிக்கூடத்து ராமசாமி செட்டியார் என்ற பெயர்கள் நிலவக் காண்க.

கூழிபிறையில் கோயில் கட்டிய ஒருவர் 'கோயில் பெரிய கருப்பன் செட்டியார்' என்று புகழ் பெற்றார். கோயில்களில் பரம்பரை டிரஸ்டியாக இருப்பவர்களை 'காரியக்காரர் வீடு...' என்று சொல்வது மரபு.

கவிச் சக்கரவர்த்தி கம்பனின் சமாதி உள்ள இடத்தையும், சுற்றியுள்ள நிலங்களையும் விலைக்கு வாங்கின குடும்பத்தின் வழித் தோன்றல் நாட்டரசன் கோட்டை இராமநாதன் செட்டியார். ஆண்டுதோறும் கம்பன் திருநாள் இறுதிநாளில் பெருஞ் செலவில் பூசை முதலியன நடத்துகிறார் கம்பன் சமாதியைக் கோயிலாகவும் கட்டியுள்ளார். அவரை 'கம்பர் ராமநாதன் செட்டியார்' என்றும் சுருக்கமாகக் 'கம்பர்' என்றும் சொல்லுவது செட்டி நாட்டில் வழக்கம்.

பர்மாவில் தாராவாடி மாவட்டத்தில் அவுப்போ (OKPO) என்னும் ஊரில் குடிநீர்ப் பீலிகள் போட்டதைப் பாராட்டி கொத்தமங்கலம் லெட்சுமணன் செட்டியாருக்கு 'ராவ்பகதூர்' என்ற பட்டத்தை பர்மா அரசாங்கம் கொடுத்தது. இந்தியாவில் ராவ்பகதூர் பட்டத்தைப் பெற்றவர்கள், திரு. லெட்சுமணன் செட்டியார். இந்தியாவில் பட்டம் பெறவில்லை என்பதைச் சுட்டிக் காட்ட 'பர்மா ராவ் பகதூர்' என்று அவரைத் தங்களினின்றும் வேறுபடுத்திக் கூறினர்.

### உடைமைப் பொருள்கள்

பல தலைமுறைகளாக நகரத்தார் சமூகத்தில் செல்வாக்குப் பெற்றுள்ள தேவகோட்டை அழ. அரு. குடும்பத்தார் தேவ

கோட்டை ஜமீன்தார்களாக இருந்ததால் 'ஜமீன்தார் வீடு' என்று குறிப்பிடுகிறார்கள்.

இவ்வாறே பெரிய சொத்துக்களை குத்தகைக்கு எடுத்தவர்களை குத்தகைக்காரர் வீடு, அகுதார்வீடு என்றபெயருடன் உள்ளனர்.

வீடு இருக்கும் திக்கைக் குறித்து பெயர்கள் ஏற்படும் சான்று: கிழக்கு வீட்டு சிங்காரம் செட்டியார், மேற்கு வீட்டு சிங்காரம் செட்டியார்.

ஒருவர் கட்டியுள்ள வீட்டைச் சுற்றியுள்ள மக்கள்செய்யும் தொழில்களை ஒட்டியும் சில வீட்டுக்காரர்களுக்குப் பெயர்கள் அமையும். ஆனால், இவற்றை உரியவர்முன் கூறுவது நாகரிகமாக இராது!

வீட்டின் தகுதிகள் குறித்த பட்டப் பெயர்கள் பல. காரைக்குடியில் ஆயிரம் சன்னல் வீட்டை அறியாதார் அறியாதாரே! பல வண்ணங்கள் உடைய வீடு 'வர்ண மாளிகை' ஆகிவிடும். பெண்கள் மனதிற்கு ஏற்றவாறு 'சாமான்களை அடையும் அறைகளாகக் கூடிய' வீடு இல்லாத கட்டிடம் 'வங்களா' ஆகிவிடும். மஞ்சள் வீட்டுக்காரர், நீலப்பெயிண்ட் வீட்டுக்காரர் என்ற பெயர்களுக்கும் குறைவில்லை.

புதிதாக வீடு கட்டிய நல்ல கருப்பன் செட்டியார், புது வீட்டு நல்ல கருப்பன் செட்டியார் ஆகிவிடுவார். ஆண்டு பல ஆகி விட்டாலும் மதுரைப் புது மண்டபம் போல்,நல்லகருப்பன் செட்டியார் புது வீட்டுக்காரராகவே என்றும் பதினாறாய் வாழ்வார் மக்கள் நாவில்!

ஓர் ஊரில் முதல் தடவையாக ஓட்டு வீடு கட்டியவர்கள் ஓட்டு வீட்டுக்காரர் என்றும், சந்தைக்கு அருகே வீடு கட்டிக் கொண்டிருப்பவர் சந்தைப் பேட்டையார் வீடு என்றும் பெயர் பெறுவர்.

செல்வச் செழிப்பில் இரு வீடுகள் கட்டிக் கொண்டவர்கள் உண்டு. ஒரு வீடு கிழக்கே பார்த்திருக்கும்; மற்றொரு வீடு அதற்கு எதிரில் மேற்குப் பார்த்திருக்கும்; காலை வெப்பத்தைத் தவிர்க்க மேற்குப் பார்த்த வீட்டிலும் பிற்பகலில் சூரியனின் கொடுமையிலிருந்து தப்பக் கிழக்குப்பார்த்த வீட்டிலும்,

மாறி மாறி, செட்டியார் வாழ்வார். இடைப் பட்ட இடம் அல்லது தெரு வீதிக்கு வழங்கப்பட்டாலும் இவருடையதே. எனவே அதில் ஒரு தகரக் கொட்டகையும் போட்டிருப்பார்கள். இந்த வீடுகள் நாளடைவில் 'கொட்டகைக்காரர் வீடு' என்று பெயர் பெற்று இயங்கும்.

ஒருவருக்குச் சொந்தமான புளிய மரத்தில் 'கொக்கு'கள் அடைந்தன; அதனால் அவர் கொக்குப் புளி ஆனார். இவ்வாறே தம் வீடுகளுக்கு முன் பகுதியில் வாழை மரம், ஆல மரம், புளிய மரம் முதலியன இருந்தால் அவ்வாறு பெயர் பெற்றவர்களும் பலர்.

### உடல் உறுப்புகள்

ஆறு விரல் அண்ணாமலை செட்டியார், (பல்வரிசைக் குறைப்பாட்டால்) பல் முருகப்ப செட்டியார், (*Hearing Aid*) வைத்துக் கொண்டதால் குழாய்க் காசிச் செட்டியார் என்ற பெயர்கள் செட்டி நாட்டுப் பட்டமளிப்பு விழாக்களில் வழங்கப்பட்டுள்ளன.

தலை மயிரின் நிறம் அல்லது தலையில் மயிரின்மை காரணமாக வழங்கப் பெற்ற காரணப் பெயர்களும் உண்டு.

### படிப்பு

படிப்பால் உண்டான பெயர்களும் உண்டு. சான்று: இங்கிலீஷ் அருணாசலம் செட்டியார், பாரிஸ்டர் சோமசுந்தரம் செட்டியார் முதலியன. பி. காம். வீரப்ப செட்டியார் என்பவர், சிங்கப்பூரில் செல்வமும் செல்வாக்கும் பெற்றிருக்கிறார். பி. காம். படிப்பு அரிதாக இருந்தமையால் அந்நாளில் இவருக்கு இவ்வாறு பெயர் ஏற்பட்டது.

### குணங்கள்

செல்வமும் இளமையும் சேரும் போது சிற்றின்ப ஈடுபாட்டுக்குக் குறைவில்லை. சுவீகாரம் வந்த இடங்களில் இது பெரிய அளவில் உண்டு. இதனால் ஏற்பட்ட பெயர்கள் கண்டனூர் மைனர். ஆத்தங்குடி மைனர் என்பன.

பிடிவாதகுணம் உள்ளவர்களுக்கு ''கல்வெட்டு'' ''கறார்'' என்ற அடைமொழிகளை அன்புடன் வழங்குவோம். சிலருக்கு இந்த இயல்புகள் உடைய உயிரினங்களின் பெயர்களும் உண்டு. இன்னும் ஆடவரிலும் பெண்டிரிலும் சிலர், ''கோர்ட்டுப்புலி' 'லாயர்' என்ற பட்டங்களைச் சம்பாதித்துக் கொண்டிருக் கிறார்கள்.

பாட் மிண்டன் ஆடிய போது ஓயாமல் *Ball Please* என்று கேட்டவர் குடும்பம், 'பாப்ளீ' வீடாகி விட்டது.

நாடகத்தில் வேஷம் போட்டதால் 'ராஜா' 'மந்திரி' பட்டங்களைப் பெற்றவர்களும் இருக்கிறார்கள்.

சில பட்டங்கள் 'தந்தி அட்ரஸ்' களாகவும் விளங்கு கின்றன...அந்த 'பாக்கியம்' எல்லோருக்கும் இல்லை. சிலருடைய பட்டங்கள் சொல்லக்கூடாதனவாக, அல்லது உரிய வர் விரும்பாதவனாக உள்ளன. அவற்றை நகரக் கூட்டங்களில் கூறுவதும் *Unparliamentry* ஆகக் கருதப்படும். அவற்றைக் கூறியவர் மன்னிப்புக் கேட்டு, அபராதம் செலுத்தவும் நேரும்.

அரசாங்கம் நல்கும் பட்டங்கள் அந்தந்த ஆட்சியுடன் மறைந்துவிடும். ஆனால் மக்கள் பல்கலைக் கழகம் வழங்கும் பட்டங்கள் நின்று நிலைக்கும்.

**இதுவரை உள்ள கட்டுரை கண்ணதாசன் இதழில் 1973 ஜூலையில் வெளிவந்தது. அதில் எந்தவித மாற்ற மும் செய்யாமல் மீண்டும் மேலே அச்சிட்டிருக்கிறோம்.**

1) *பின்குறிப்பு:* குடிபெயர்ந்த வரலாறு கூறும் பட்டப் பெயர்கள்

ஓர் ஊரிலிருந்து பிறிதொரு ஊருக்குக் குடியேறியதால் ஏற்பட்ட பட்டப்பெயர்கள் செட்டிநாட்டில் மிகுதியாக வழங்குகிறது.

கொரட்டி என்னும் ஊரிலிருந்து காரைக்குடிக்கு வலசை வந்தவர்கள் கொரட்டியார் வீடு எனப் படுகின்றனர். கொப்புடையம்மன் கோயிலுக்கு மேற்குப் பக்கம் உள்ள வீடு மேலக்கொரட்டியார் வீடு. கிழக்குப் பக்கம் உள்ள வீடு கிழக்கு கொரட்டியார் வீடு, இரண்டுக்கும் இடையே இருப்பது, நடுக் கொரட்டியார் வீடு.

வாரிவயல் என்பது 96 நகரங்களுள் ஒன்று. அங்கிருந்து காரைக்குடிக்கு வலசை வந்த ஆவி. பழ குடும்பத்தார்——— திரையுலகப் புகழ் ஏவி. எம் அவர்களின் முன்னோர் —வாரி வயலார் வீடு என்று குறிப்பிடப் பெறுகின்றனர்.

இவ்வாறே கருமுத்து குடும்பத்தினர் ஆ தெற்கூரில் கருங் குளத்தார் வீடு என்றும், கல்வி வள்ளல் இராம குடும்பத்தார் காரைக்குடியில் சேந்தணியார் வீடு என்றும் அழைக்கப் பெறு கின்றனர்.

அரண்மனைச் சிறுவயலிலிருந்து வந்தவர்கள் அரண் மனையான் வீடு என்றும், ஓணான்குடியிலிருந்து குடியேறியவர் கள் ஓணான் குடியார் வீடு என்றும் குடிவந்த ஊர்களால் சுட்டப்படுகின்றனர். மித்ராவயலார் வீடு, துவாரார் வீடு என்பனவும் சில ஊர்களில் உள்ளன. தேவகோட்டையில் இராங்கியத்தார் வீடு இருக்கிறது.

## (2) நாடுகளின் பெயர்கள் இணைந்த பட்டப்பெயர்கள்

காரைக்குடியில் அபிசினியா பழ. நாச்சியப்பன் அவர்கள் புகழ் பெற்றவர்கள். பட்டப் பெயரைப் பற்றி அவர்களே பின்வருமாறு தெரிவித்திருக்கிறார்கள்.

"1936 ஆம் ஆண்டில் இத்தாலிக்கும் அபிசீனியா (எத்தி யோப்பியா என இப்போது வழங்கும் ஆப்பிரிக்க நாடு) வுக்கும் போர் மூண்டது. அபிசீனியா மன்னர் ஹெய்லி செலாஸி தம் நாட்டைவிட்டு லண்டனுக்குச் சென்றார். இச்செய்தியும் அவர் படமும் தினமணி இதழில் வெளிவந்தன.

"நான் திருப்பதிக்கு முடிவைத்து இரண்டு ஆண்டுகள் ஆயிற்று. தாடி மீசையை, சீக்கியர்கள் போல நன்றாக உருட்டி பக்குவமாக வைத்திருந்தேன். எனது முகத் தோற்றமும் அபிசினியா மன்னரின் முகத்தோற்றமும் ஒத்திருந்ததால் நண்பர் சொ. முருகப்பாவும் மரகதவல்லி அம்மையாரும் செல்லமாக என்னை அபிசீனியா என்று அழைந்தார்கள். காரணம் என்ன?

"மன்னர் நாட்டைவிட்டு வெளியேறினார். நான் சுய மரியாதை இயக்கத்தில் ஈடுபட்டதால் என்னை வீட்டைவிட்டு என் தந்தையார் வெளியேற்றினார். நான் எதிர்த்துப் போராடாமல் வேறு ஒரு வீட்டில் குடியிருந்தேன்.

"இதனுல் முருகப்பா கூப்பிட்ட அபிசீனியா என்ற பெயர் நிலைத்துவிட்டது.

(3) சுவீகாரம் வந்ததால் வழங்கும் ஊர்ப் பெயர்கள்

அரிமழத்திலிருந்து ஒருவர் நெற்குப்பைக்கு சுவீகாரம் வந்ததால், அரிமழம் அழகப்பன் எனப் பெயர் பெற்றார். இத் தகைய பட்டப் பெயர்கள் நூற்றுக்கணக்கில் உள்ளன.

பொன் புதுப்பட்டியிலிருந்து கானாடுகாத்தானுக்கு ஒருவர் சுவீகாரம் சென்றார். சில மாதங்களுக்குப் பிறகு அவர் அங்கே இருக்க விரும்பாமல் பிறந்த வீட்டுக்கே திரும்ப வந்து விட்டார். பொன் புதுப்பட்டியில் அவர் வீடு கானாடுகாத்தான் செட்டியார்வீடு என்று இன்றும் வழங்குகிறது.

(4) செல்வாக்குடன் வாழ்ந்த ஊர்களுடன் இணைந்த பட்டப் பெயர்கள்

கள்ளிக்கோட்டையில் 19 ஆம் நூற்றாண்டின் நடுப் பகுதியிலேயே ஆலை அமைத்தார் ஒரு நகரத்தார். தென் இந்தியாவில் ஆலை அரசராக விளங்கிய முதலாவது இந்தியரான அவர் தேவ கோட்டை பி. சோமசுந்தரம் செட்டியார். அவர் குடும்பம் கள்ளிக்கோட்டையார் வீடு என்ற பெயர் பெற்று நிலவுகிறது.

இவ்வாறே யாழ்ப்பாணத்தார் வீடு, தஞ்சாவூரார் வீடு இடைப்பாடி (சேலம் மாவட்டம்) யார்வீடு என்ற பெயர்களும்

ஈப்போ சொ, கம்பளை நா, மோல்மீன் ராம, செய்ஜோன் சுப. என்ற பெயர்களும் உண்டு.

தேவகோட்டையில் தொண்டியார் வீடு, கரூரார் வீடு பெரீலின் காசிச் செட்டியார் வீடு, காங்கேயத்தார் வீடு பட்டணம் அழகப்ப செட்டியார் வீடு. அம்மாப்பேட்டையார் வீடு சிங்கப்பூர் சேக்கப்ப செட்டியார் வீடு, பஞ்சாப் லெ. வீடு செங்கல்பட்டு சேதுராமன் செட்டியார் வீடு, ரெங்கூன் சீனுச் செட்டியார் வீடு முதலியன உண்டு.

(5) கிராமம் வாங்கிய காரணத்தால் ஏற்பட்ட பட்டப் பெயர்கள்

செல்வர்கள் ஒரு கிராமத்தை வாங்கிய பிறகு கிராமத்தின் பெயர் அவர்கள் பெயருடன் இணைந்து வழங்கப் பெறுவது மரபு. சான்று: மலம்பட்டி (கிராம உடைமையாளர்) ராம.

ரெட்டையம்பாடி ஜமீனை வாங்கிய குடும்பத்தார் ரெட்டையம் பாடியார் வீடு எனப் பெற்றனர்.

மைனர் இனாம் எஸ்டேட்டின் சிறிய பகுதியை வாங்கிய குடும்பத்தார் சின்னமைனர் வீடு என்றும் பெரிய பகுதியை வாங்கிய குடும்பத்தார் பெரிய மைனர் வீடு என்றும் தேவகோட்டையில் பெயர் பெற்றுள்ளனர்.

தேவகோட்டை ஜமீன்தார் குடும்பத்தார் அந்நகரில் ஜமீன்தார் வீடு என்றும் செட்டியார் வீடு என்றும் அழைக்கப் பெறுகின்றனர்.

ஒரு கிராமத்தின் நிலவரியை வசூலித்து அரசுக்குக் கட்டும் உரிமை பெற்றிருந்ததால் அதுதார் வீடு என்ற பட்டப் பெயர்களும் நிலவுகின்றன.

(6) அறச் செயல்களால் ஏற்பட்ட பட்டப் பெயர்கள்

சத்திரத்தார் வீடு

ஊரணியார் வீடு

பள்ளிக்கூடத்தார் வீடு

தண்ணிப்பந்தலார் வீடு

கஞ்சித்தொட்டியார் வீடு

பசுமடத்தார் வீடு

குணத்தால் ஏற்பட்ட பெயர்கள்

குழந்தையாக இருந்தபோது ஐந்து மிட்டாய்களுக்குக் குறையாமல் கேட்கும் அலமேலு, பேரன் பேத்தி பெற்றபிறகும் ஐந்து மிட்டாய் அலமேலு ஆக விளங்குவாள்.

ஆற்றிலே போட்டாலும் அளந்து போடும் இயல்பினர் நகரத்தார். மேலும் சின்னஞ்சிறு செலவுகளையும் மிக விவரமாகப் பல வரிகள் வருமளவுக்குக் கணக்கு எழுதுவார்கள். சிறு தொகைகளுக்காக வம்படி வழக்குக்குச் செல்லுபவர்களும் உண்டு. இதனால் ஏற்பட்ட பெயர்கள் அரைக்காசு அடைக்கப்ப செட்டியார், முந்திரி முத்தையா செட்டியார், கோர்ட்டு கோதை ஆச்சி, லாயர் சிட்டாள் ஆச்சி. சட்டப் பாயிண்டு சாலி ஆச்சி.

இவ்வாறே அல்லி ராணி அடைக்கம்மை ஆச்சி முதலிய பெயர்களும் உள.

இராங்கியம் கருப்பர் கோயிலில் ஒரு நாழிகை சாமியாடினாலும், வாழ்நாள் முழுவதும் சாமியாடிச் செட்டியார் என்ற பெயர் நிலைத்துவிடும். செல்லும் இடங்களிலெல்லாம் அதிகார தோரணையுடன் நடந்து கொண்டவர் சவுடால் கருப்பையா செட்டியார் எனப்பட்டார்.

நிறத்தால் ஏற்பட்ட பெயர்கள்

இரண்டு பேர் ஒரே பெயருடையவர்கள். இருவரும் கறுப்பு. கறுப்பிலும் எத்தனையோ தரங்கள் உண்டு அல்லவா? ஒருவர் டிக்காசன் நிறத்தவர் மற்றொருவர் பால் கலந்த காப்பி நிறத்தவர் என்ற பொருள்பட பட்டப் பெயர்கள் ஏற்பட்டன.

உருவத்தால் ஏற்பட்ட பெயர்கள்

நெட்டை, கட்டை, குண்டு—ஒல்லி போன்ற அடையாளச் சொற்களும் பெயருக்குமுன் தாராளமாக இடப்படும்.

தொழிலால் ஏற்பட்ட பெயர்கள்

ஜமீன் பீடி வியாபாரி ஜமீன் என்ற அடையாளப் பெயரா லேயே வழங்கப் பெற்றார். உடற்பயிற்சி வல்லுநராக இருந்த ஒருவர் சாண்டோ சோமசுந்தரம் ஆனார்.

பாட்டுக் கச்சேரி செய்தவர் பாட்டுக்கவி ராமன் செட்டியார். புளூட் வாசித்தவர் புளூட் சோம. சில்க் வீரப்ப செட்டியார் வீடு, பாத்திரக்கடை ராமன் செட்டியார் வீடு என்பனவும் உண்டு.

பிற பெயர்கள்

இரயில் நிலையப் பகுதியில் வியாபாரம் செய்தவர் சந்ததி யினர் ''இரயில் வீடு'' எனப்படுகின்றனர்.

இரயில்வே சரக்கு ஏற்றி இறக்கும் ஊழியர்களுக்குக் கடன் கொடுத்துத் தொழில் செய்தவர் ''Goods Yard ....'' என்ற பட்டப் பெயர் பெறுகிறவர்.

மாட்டு வண்டிக்காரன் ஓயாமல் மண் ஏற்றி வருவாய் பெறுவதுபோல, சீட்டாட்டத்தில் தொடர்ச்சியாக வெற்றி பெறுபவர்க்கு மண்ணுவண்டி என்ற பட்டப் பெயர் சூட்டப் பெறுவது வழக்கமாக இருந்தது.

மூன்றாம் கட்டு கட்டப்படாமல் கட்டுமான வேலை நின்றுவிட்ட வீட்டுக்காரி இரண்டாம் கட்டு சிவப்பி ஆச்சி என்று மக்கள் பட்டமளிப்பு விழாவில் சிறப்புப் பெறுவாள்.

நாள்தொறும் சந்தையில் கருணைக்கிழங்கு வாங்கும் கண்ணம்மை ஆச்சிக்கு வழங்கப் பெறும் விருதில் உரிய காய்கறி யின் பெயர் இடம் பெறும்.

இரட்டை முகப்பு வீட்டு மங்கள ஆச்சியின் பெற்றோர் நீளமான முகப்பு வைத்து வீடு கட்டியிருப்பார்கள்.

வீட்டிலுள்ள மர வகைகளால் ஏற்பட்ட பெயர்கள் - நெல்லி மரத்தார் வீடு, பரங்கிக்காய் ஆதப்ப செட்டியார்.

இத்தகைய பட்டப் பெயர்கள் செட்டிநாட்டில் எல்லாச் சாதியாரிடமும் நிலவுகின்றன. சான்று: ஓர் அம்பலகாரர் சுண்டல் வற்றக் குழம்பு இன்றி உணவு உண்ணார். அவருக்கு அமைந்த பெயர் சுண்ட வத்தல் சேவுகன் அம்பலம்.

புகழ் பெற்ற சமையல் மேஸ்திரி நடேசன், ஐ. நா. அவையின் உயர் அலுவலராக இருந்த டாக்டர் அழகப்பன் இல்லத்தில் நியூயார்க்கில் பல்லாண்டுகள் பணி செய்தவர். எனவே அவர் பெயருக்குமுன் 'அமெரிக்கா' என்ற அடைமொழி சூட்டப் பெற்றிருக்கிறது.

## 20. பதிப்பாளர்கள்

தமிழ்மொழியை வளப்படுத்துவதற்கு நூல் வெளியிடுவதிலும் செட்டிநாடு முன்னணியில் இருந்து வருகிறது.

### தென் இந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

இக்கழகம் 1921-இல் ஏற்பட்டது. செட்டிநாட்டில் பலர் பங்குதார்களாகச் சேர்ந்து இதற்குப் பங்கு முதல் உதவினர். பாகனேரி உடையப்பா அவர்களும் பாகனேரி கண. மு. மு சாத்தப்ப செட்டியார் அவர்களும் பாகனேரி நாராயணன் செட்டியார் அவர்களும் இக்கழகத்தின் ஆட்சிக்குழுவில் உறுப்பினராக இருந்திருக்கின்றனர். தொடக்கத்திலிருந்து ஆட்சிக் குழுவில் உறுப்பினராக இருந்துவரும் மு காசிவிசுவநாதன் செட்டியார் அவர்கள் 1948 முதல் கழகத்தின் தலைவராகவும் பணியாற்றி ஓய்வு பெற்றார்கள்.

கழகப்புலவர் செ. ரெ. இராமசாமிப்பிள்ளை, பாகனேரியில் பல ஆண்டுகள் பணியாற்றியவர்களே.

### அன்பு நிலையம்

சுத்தானந்த பாரதியாரின் நூல்களை வெளியிடவும் அவர் புகழைப் பரப்பவும் செட்டிநாட்டன்பர் சிலர் 1937-இல் சிங்கப்பூரில் அன்பு நிலையத்தைத் தொடங்கினர். செட்டியார் குடும்பங்களில் நடைபெறும் திருமணம், புதுமை போன்ற நிகழ்ச்சிகளையொட்டி, பொருள் சேகரித்து, ஒவ்வொரு நிகழ்ச்சியின் நினைவாகவும் சுத்தானந்தரின் நூல்கள் ஒவ்வொன்றை இவர்கள் வெளியிட்டு வந்தனர். இராமச்சந்திர புரத்திலிருந்து அன்பு நிலையத்தார் இவ்வாறு 160 நூல்கள் வரை வெளியிட்டனர். 1947 வரை அன்பு நிலையம் சிறந்து விளங்கியது. சுத்தானந்தருக்குக் கொடுக்கப் பெற்ற 'ராயல்டி' நீக்கி எஞ்சிய தொகை, தமிழ்க்கல்வி வளர்ச்சிக்காகவும் தமிழ் மொழி வளர்ச்சிக்காகவும் செலவிடப்பெற்றது. திருமெய்யம் நடராசன், வி. ஆர். எம். செட்டியார், அவருடைய அண்ணன் சாமிநாதன் செட்டியார், வை. கோ. அன்பு வள்ளியப்பன்,

இராமச்சந்திரபுரம் அண்ணாமலைச் செட்டியார் போன்ற பல தமிழன்பர்கள் அன்பு நிலையத்தின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் காரணமாவர். டாண்டே, விக்டர். ஹ்யூகோ, எமர்சன், வால்ட் விட்மன் ஆகிய வெளிநாட்டு ஆசிரியர்களைத் தமிழகத்துக்கு அறிமுகப்படுத்தியது அன்பு நிலையமே.

தமிழ்க் காப்பியங்களைப் பழைய உரைகளோடு படித் தறிவது இலக்கிய இலக்கணங்களில் பயிற்சி பெற்றவர்க்கே இயலும். ஆயின் ஏனையோரும் அவற்றை எளிதில் விளங்கிக் கொள்ளும்படி தெளிவான உரைநடையில் எழுதி வெளியிடும் முறையைத் தமிழில் தொடங்கியது அன்பு நிலையமே.

சுத்தானந்தர் எழுதிய நாடகங்களை அன்பு நிலையத் தார் செட்டிநாட்டில் பல இடங்களில் நடித்துக் காட்டினர். இதற்காக "அன்பு நடனசபை" அமைத்தனர்.

## நவயுகப் பிரசுராலயம்

ப. ரா, மணிக்கொடி சீனிவாசன், டி. எஸ். சொக்கலிங்கம் ஆகிய அன்பர்களால் இது 1939 அளவில் தொடங்கப் பெற்றது. காரைக்குடி மெ. நா. சித. சிதம்பரம் செட்டியார் அவர்களால் இது தொடர்ந்து நடத்தப் பெற்றது. பின்னர் இந்த நிலையத் தைத்திருவாளர்கள் டி. ஆர். அருணாசலம், சித. இராம. நாதன், ராம. அருணாசலம் ஆகியோர் நடத்தி வந்தனர். ஜவஹர்லால் நேருவின் 'உலக சரித்திரம், இராஜேந்திர பிரசாத் தின் 'பிரிக்கப்பட்ட இந்தியா' வ. ரா வின் நூல்கள், ஹிந்தி நாவல்கள் சில ஆகியவற்றைஇவர்கள் வெளியிட்டிருக்கின்றனர். 200, 250 பக்கங்களுக்கு மேற்பட்ட—பிறநாட்டு இலக்கிய அரசியல் நூல்களை ஐம்பது காசு விலையில் வெளியிட்டுத் தமிழகமெங்கும் பரப்பிய பெருமை இப்பிரசுராலயத்துக்கு உரியது.

## சக்தி காரியாலயம்

இது 1939–இல் 'வை. கோ' அவர்களால் தொடங்கப் பெற்றது. பெங்குவின் பெலிகன் போன்ற அமைப்புகளில் தமிழ் நூல்களைச் சிறந்த முறையில் வெளியிட்டது. சிறுவர்க்கான சிறு நூல்களையும் சக்தி காரியாலயம் வெளியிட்டிருக்கிறது.

புது மலர்ச்சி நூற்பதிப்புக் கழகம்

இதனை 1939-இல் ஆர்வமிக்க செட்டிநாட்டிளைஞர் சிலர், இரங்கூனில் தொடங்கி, டாக்டர் இராதா கிருஷ்ணன் தொகுத்த 'மகாத்மா காந்தி' என்ற நூலையும், அதைத் தொடர்ந்து சாமிநாத சர்மா அவர்களின் நூல்களையும் வெளியிட்டனர்.

தமிழ்ப்பண்ணை

இது, திருவாளர்கள் சின்ன அண்ணாமலை, ட்ரோஜன் அண்ணாமலை செட்டியார் முதலிய பலரால் தொடங்கப் பெற்றது. அரசியல் நூல்கள் பலவற்றை வெளியிட்டது.

சிதம்பரநாதன் கம்பெனி

இது 1941-இல் திரு காந்தி அண்ணாமலையால் இரங் கூனில் தொடங்கப்பெற்றது; வாழ்க்கை வரலாறுகள் சில வற்றை வெளியிட்டது.

குமரிமலர் காரியாலயம்

உலகம் சுற்றிய தமிழர் ஏ. கே செட்டியார் தொடங்கிய இந்நிலையம் கி. சந்திரசேகரன், அ.நா.சிவராமன் ஆகியோரது நூல்களையும் வெளியிட்டிருக்கிறது.

பழனியப்பா பிரதர்ஸ்

14 பீட்டர்ஸ் ரோடு சென்னை—14 கிளைகள்—திருச்சி, மதுரை, கோவை.

இது, 1941-ல் தொடங்கப்பெற்றது. பள்ளிக்கூட நூல்களை வெளியிடும் சிறந்த பதிப்பகங்களில் ஒன்றாக விளங்குகிறது. அவை தவிர பொதுமக்களுக்காக 300 நூல்களை வெளியிட்டுள்ளனர். இதன் உரிமையாளர்கள் ராயவரம் செ.மெ. பழநியப்ப செட்டியார், அவர் தம்பி செல்லப்ப செட்டியார் ஆகியோர். புகழ்பெற்ற கோனார் நோட்சை யும் பண்டிதமணி, பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை

நாமக்கல் கவிஞர், டாக்டர், அ. சிதம்பரநாதன் செட்டியார் போன்ற அறிஞர்களின் அரிய இலக்கிய நூல்களையும் வெளியிட்டிருக்கிறார்கள்.

இப்போது பெருந்தொழிலதிபராக உயர்ந்திருக்கும் திரு. பழனியப்பச் செட்டியார் (பி15-2-1920)எப்போதும் புத்தகமும் கையுமாகத் திரிகிறான் என்று 1930ஆம் ஆண்டிலேயே தம் தந்தையாரால் குறை கூறப்பட்டவர். புத்தகம் படைக்கும் வித்தகர் என்றும் காலணாவுக்கு மைவிற்பதிலிருந்து கண்ணம் மை பில்டிங் கட்டும் அளவுக்கு வளர்ந்தவர் என்றும் போற்றப் பெறுபவர்.

## கமலா பிரசுராலயம்

இது-1943-இல் சென்னையில் முல்லை முத்தையா, கண்டனூர் நா. இராமநாதன், 'ஆனந்த விகடன்' துணை ஆசிரியர் கே. அருணாசலம் ஆகியோரால் தொடங்கப் பெற்றது. டி எஸ். சொக்கலிங்கம் எழுதிய 'எனது ராஜிநாமா' இவர்களின் முதல் வெளியீடு, தொடர்ந்து அரசியல் நூல்கள் பலவற்றை வெளியிட்டனர்.

## புதுமைப் பதிப்பகம்

இது, திருவாளர் மு. அருணாசலம், பேராசிரியர் வையா புரிப்பிள்ளை, ''சுரபி'' முதலியாரால் தொடங்கப் பெற்றது. இதை காரைக்குடி அ. லெ. நடராசன் அவர்களும், அரிமளம் அ. அ. சம்பந்தம் செட்டியார் அவர்களும் நடத்தினர். காந்தியடிகள், ராஜாஜி, கவிமணி, டி.கே.சி, வினோபாபாவே, லின் யுடாங் நூல்களை வெளியிட்டிருக்கின்றனர்.

## ஸ்டார் பிரசுரம் 72 பெரிய வீதி திருவல்லிக்கேணி சென்னை5

இது, 1942-இல் திருச்சியில்தொடங்கப்பெற்றது. பின்னர் காரைக்குடியில் வி. ஆர். எம். செட்டியார் நடத்தினார். ராயவரம் சு. கதி. குழந்தையன் செட்டியார், அரிமளம் செ. அ. செ. செல்லப்ப செட்டியார், மதகுபட்டி கண. இராமநாதன் ஆகியோர் சென்னையிலும் மதுரையிலும் நடத்தி வந்தனர்.

வி. ஆர். எம். செட்டியார் கவியரசர் இரவீந்திரநாத் தாகூர் எழுதிய நூல்களின் மொழிபெயர்ப்புக்களையும், தாம் எழுதும் நூல்களையும் வெளியிட்டு வந்தார்.

1944-இல் தொடங்கிய சென்னை ஸ்டார் பிரசுரத்தார் விந்தன், ரகுநாதன் புதுமைப்பித்தன் ஆகியோருடைய நூல்களை வெளியிட்டு வருகின்றனர். புதுமைப் பித்தன் கவிதைகள், நாடகங்கள், கடிதங்கள், கதைகள் முதலியவற்றில் வெளிவராமலிருந்தவற்றை இவர்கள் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றனர். இந்நூல்களை வெளியிடுவதற்கு முன்னரே மாதம் ரு 75 வீதம் புதுமைப்பித்தன் குடும்பத்தாருக்குக் கொடுத்து வந்தனர். தொடர்ந்து மாதந்தோறும் பொருள் வழங்கி இதன்விளைவாக,புதுமைப்பித்தன் நிதி ஒருகட்டடமாக ராஜா அண்ணாமலை புரத்தில் அமைந்திருக்கிறது. பண்புப் புத்தகவரிசை என்ற தொடரில் விஞ்ஞானம், இலக்கியம், விமரிசனம் மருத்துவம் முதலிய பல நூல்களை தொடர்ந்து வெளியிட்டு வருகின்றனர்.

திரு. கண. இராமநாதன் இந்தப் பதிப்பகம் வழியாக ஓராயிரம் நூல்கள் வெளியிட்டுள்ளார். குறிப்பிடத்தக்க நூல்கள்- இலக்கண விளக்க வரிசை, ஆட்சிக் கலை வரிசை, மருத்துவ வரிசை, மரங்கள் வரிசை.

திரு. கண. இராமநாதன் (மதகுப்பட்டி 12-5-1924) கட்டுரை, கவிதைகள் எழுதியிருக்கின்றார். 'அமைச்சன்' என்ற திங்கள் இதழை 1964முதல் 1966வரை நடத்தி வந்தார். திருமதி கோமதி இராமநாதன் செட்டிநாட்டுச் சமையற்கலை பற்றி பல கட்டுரைகள் படைத்திருக்கிறார்.

பாரி நிலையம், பிராடுவே, சென்னை-108

இது, 1946-இல் அரிமளம் க. அ. செல்லப்பன் அவர்களால் தொடங்கப்பெற்றது. பண்டைப் பேரிலக்கியங்கள் முதல் புதுமை எழுத்தாளர்களின் ஏடுகள் வரை 800 நூல்களை வெளியிட்டு, இப்பதிப்பகம் தலைசிறந்து விளங்குகிறது. கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை, ராஜாஜி, புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், டாக்டர் மு. வ., கு ராஜவேலு, பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை, அறிஞர் சி என். அண்ணாதுரை, கி. ஆ. பெ. விசுவநாதம், சோமு, மயிலை சீனி வெங்கடசாமி·

டாக்டர் வ. சுப. மாணிக்கம். சோமலெ, டாக்டர் சஞ்சீவி, முத்துக்காளத்தி ஆகியோர் நூல்களைப் பாரி நிலையம் வெளியிட்டிருக்கிறது. தையற்கலை பற்றிய நூல்களையும், உலக நாடுகள் வரிசை என்ற நூல்களையும் இவர்கள் வெளியிட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. பொது மக்களுக்காகப் புதிய துறைகளில் நூல்கள் வெளியிடும் பதிப்பகங்களில் இது சிறந்து விளங்குகிறது.

திரு செல்லப்பன் தாமே எழுதக்கூடியவர். இவர் புத்தக வெளியீடு பற்றிய ஒரு திரைப்படத்திலும் நடித்திருக்கிறார். திராவிட இயக்கத்தின் தொடக்க காலத்தில் அதன் தலைவர்கள் கூடும் இடமாக விளங்கியது பாரி நிலைய அலுவலகமே.

கமர்ஷியல் பிரிண்டிங் அண்டு பப்ளிஷிங் ஹவுஸ்

46, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1.

இது ராஜா சர் அண்ணாமலை செட்டியார் குடும்பத்தாரால் தொடங்கப் பெற்றது. இந்நிலையத்தார் டால்ஸ்டாயின் நூல்களின் மொழிபெயர்ப்புகளையும், கல்கியின் நாவல்களையும் வெளியிட்டிருக்கின்றனர்.

சோமு நூலகம்

சாஸ்திரி நகர் அஞ்சலகக் கட்டிடம் சென்னை-20

1978முதல் 1982 வரை இயங்கிற்று. உரிமையாளர் இவர் லெ. சோமசுந்தரம் தன் தந்தையார் சோமலெ மற்றும் டாக்டர் டி. பி.சித்தலிங்கம் நூல்களை வெளியிட்டார். குறிப்பிடத்தக்க சாதனை—கன்னட மொழியில் மிகச் சிறந்த நூலாக ஞானபீடப்பரிசு பெற்றதும் சிவராம காரந்த் அவர்களுடைய படைப்புமான மூக்கஜ்ஜிய கனஸுகளு என்ற நாவல் பாட்டியின் கனவுகள் என்ற பெயரில் தமிழில் வெளியிடப் பெற்றிருப்பது.

செல்வநிலையம்

18 முத்து முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை-17

உரிமையாளர். திரு முத்துக்கருப்பன் தேவகோட்டை

1977இல் தொடங்கப்பெற்றது. 1984வரை 35 நூல்களை வெளியிட்டுள்ளனர்.

சிறுவர் நூல் பதிப்புக் கழகம்

20 ஜானிஜான் கான் தெரு சென்னை-14

உரிமையாளர் தேவகோட்டை திரு. M முத்தையா

1984 வரை 50 நூல்கள் வெளிவந்துள்ளன.

தமிழ்ப் புத்தகாலயம் 279, பாரதியார் தெரு சென்னை-5

இது, 1946-இல் தொடங்கப் பெற்றது. திருவாளர்கள் கண. முத்தையா, ஆ. பழ சொக்கலிங்கம் ஆகிய இரு எழுத்தாளர்களும் இதன் உரிமையாளர்களாக உள்ளனர். பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை, கு. அழகிரிசாமி, க. நா .சு., நா. பார்த்தசாரதி, டாக்டர் சாலை, டாக்டர் தண்டாயுதம் ஆகியோர் நூல்களை இவர்கள் வெளியிட்டுள்ளனர். தமிழ்ப் புத்தகாலய வெளியீடுகள் ஏறத்தாழ 600. இலக்கிய விமரிசன நூல்கள் இவர்களுடைய சிறப்பு.

கார்த்திகேயினி பிரசுரம்.

1946 இல் விசுவநாதபுரம் பெரி. கும. பெரிய கருப்பன் செட்டியார் அவர்களால், இது தொடங்கப் பெற்றது. இந்நிலையத்தில் தி. ஜ. ர. 'சோமு' சுகி, வ. ரா. ஆகியோரது நூல்களையும், பிரெஞ்சு நாவல்கள் சிலவற்றையும் தமிழ்க் கையகராதி ஒன்றையும் வெளியிட்டுள்ளனர். மறுமலர்ச்சி எழுத்தாளர் பலரை ஊக்குவித்துளர். 'தம்பி' என்னும் சிறுவர் பத்திரிகையை நடத்தினர்.

இன்ப நிலையம் 34, கச்சேரித் தெரு மயிலாப்பூர், சென்னை-4

இது 1947 இல் தொடங்கப்பெற்றது. இதன் நிருவாகி தேவகோட்டை சோம. சுவாமிநாதன் அவர்கள், ம. பொ. சி., நாமக்கல் கவிஞர், லக்ஷ்மி, பெ. தூரன், 'சோமலெ' ஆகியோருடைய நூல்களை வெளியிட்டிருக்கின்றார். கப்பலோட்டிய தமிழன், கட்டபொம்மன் ஆகியவை குறிப்பிடத்தக்க நூல்கள். லக்ஷ்மியின் 'பெண்மனம்' தமிழ் வளர்ச்சிக்கழகப் பரிசுபெற்றது. 1970 வரை இன்ப நிலையம் நூல்களை வெளியிட்டது.

டியூகோ பப்ளிஷிங் ஹவுஸ்

இது, 1947-இல் இராமச்சந்திரபுரத்தில் பாடநூல்களை வெளியிடுவதற்காக, ராம சாத்தப்ப செட்டியார் அவர்களால் தொடங்கப்பெற்றது. பாடநூல்கள் பலவற்றையும் தமிழ்ப் பேராசிரியர் அ மு பரமசிவானந்தம் அவர்களின் நூல்களையும் வெளியிட்டு வந்தது.

பழனி பிரசுரம் 3—பைகிராப்ட்ஸ் ரோடு சென்னை—5

இது, 1948-இல் இராங்கியம் பெரி. முத்துப் பழநியப்ப செட்டியார் குடும்பத்தாரால் புதுக்கோட்டையில் தொடங்கப் பெற்றது. இந்நிலையத்தின் கிளைகள் திருச்சியிலும் சென்னையிலும் உள. மாயாவி, சுகி, இளமைப்பித்தன், மு. அண்ணாமலை அருள் செல்வநாயகம், அரு இராமநாதன் ஆகியோர் நூல்களை வெளியிட்டிருக்கின்றனர். 'அகிலன்' எழுதும் நூல்களை இவர்கள் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றனர். குறிப்பிடத்தக்க நூல்கள் பாவை விளக்கு, நெஞ்சின் அலைகள், ஆர்வி எழுதிய 'கண்கள்' என்னும் கதைகள்.

வெள்ளையன் பதிப்புக் கழகம் நடுத்தெரு, மயிலை, சென்னை-4

இது, ராம வெள்ளையன் அவர்களால் 1949-இல் கண்டனூரில் தொடங்கப்பெற்றது. பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், திரு எஸ் இராமசாமி நாயுடு, டாக்டர் மா. இராசமாணிக்கம் ஆகியோர் நூல்களை இவர்கள் வெளியிட்டிருக்கிறார்கள்.

பிரேமா பிரசுரம் ஆர்காட்டு ரோடு, கோடம்பாக்கம்

இது, 1950-இல் 'காதல்' அரு. இராமநாதன் அவர்களால் தொடங்கப்பெற்றது. அரசியல் கருத்துக்களைப் பற்றி, சிந்தனையாளர் வரிசை என்ற தொடரில், பல நூல்கள் வெளிவந்துள்ளன. மற்றும் பொன் மொழிகள் வரிசை, பிரேமா ரத்னம் (மாதம் ஒரு நாவல்)

பொன்னி லிமிடெட் பதிப்பகம்

இது, 1950-இல் 'பொன்னி' அலுவலகத்தாரால் தொடங்கப்பெற்றது. 'விருந்து' என்ற தொடரில் பலமொழிகளிலிருந்து

கதைகளையும் நாடகங்களையும் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறது.

பாரதி பதிப்பகம் 108 உஸ்மான் சாலை, சென்னை-17

இது, 1952-ல் தொடங்கப்பெற்றது. ''நூல்களில் சிறந்தது ராஜாஜி நூல்கள்; கதைகளில் சிறந்தது கல்கியின் கதைகள் பதிப்பகங்களில் சிறந்தது பாரதி பதிப்பகம்'' என்று இதன் உரிமையாளர் பழ சிதம்பரம் விளம்பரம் செய்து வருகிறார். சுமார் அறுபதுக்கு மேற்பட்ட கல்கி, ராஜாஜி நூல்களை வெளியிட்டிருக்கிறது. பல ஆண்டுகளாக கல்கி கிருஷ்ணமூர்த்தி 'கல்கி' வார இதழில் எழுதி வந்த கட்டுரைகளை வகைப்படுத்தியும், தொகைப்படுத்தியும், தக்கவாறு பதிப்பித்தும் நூல் உருவில் தமிழன்பர்க்குத் தந்திருப்பதை இந்த நிலையத்தின் பணி என்று கூறலாம். டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி சுஜாதா ஆகியோர் நூல்களை வெளியிட்டு வருகின்றனர்.

மலர் நிலையம் 133, பிராட்வே, சென்னை-1.

இது, 1953-இல் கொப்பனாபட்டி ந. பழனியப்பன் அவர்களால் தொடங்கப் பெற்று, நெற்குப்பை லெ. இராமநாதச் செட்டியாரால் 1962 வரை நடத்தப்பெற்றது. புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரை, பி. எஸ். ராமையா ஆகியோர் நூல்களையும் மலர் நிலையத்தார் வெளியிட்டிருக்கின்றனர்.

கலைவளர்மன்றம்

இது, இளவளவன், வலையபட்டி நாகப்பன் ஆகியோரால் 1953–இல் காரைக்குடியில் தொடங்கப் பெற்றது.

சங்கப்பலகை சென்னை—17

இது சின்ன அண்ணாமலை அவர்களால் 1954-இல் தொடங்கப்பெற்றது. அவர் மகன் திரு இராமையா நடத்தி வருகிறார். கீரன், குமரி அனந்தன் ஆகியோர் நூல்களை வெளியிடுகின்றனர்.

வள்ளுவர் பண்ணை

இரண்டாவது மெயின் ரோடு, சென்னை—35 (சி. ஐ. டி நகர்)

இது கொப்பனாபட்டி ந. பழநியப்பன் அவர்களால் 10-2-1958 ல் தொடங்கப் பெற்றது. 300 நூல்களை வெளியிட்டுள்ளனர். இவர்களுடைய ஆசிரியர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் டாக்டர் சோமசுந்தர பாரதியார், பேராசிரியர் முத்து. இராசாக்கண்ணனார், நா. பார்த்தசாரதி, கவிஞர் வாணிதாசன், புலவர் கோவிந்தன், பேராசிரியர் இராதா கிருஷ்ணன் ஆகியோர். இவர்களுடைய வெளியீடுகளுள் குறிப்பிடத்தக்கது, கால்டுவெல் ஒப்பிலக்கணம். சிறுவர்க்கான நூல்கள் பலவற்றையும் வெளியிட்டுள்ளனர்.

திரு. பழநியப்பன் சிறுவர்க்கான மூன்று நூல்களை எழுதியிருக்கிறார்.

தமிழகம் 59, பிராடுவே சென்னை-1

முல்லை முத்தையா அவர்களால் 1957-இல் தொடங்கப் பெற்றது. 1960 மே வரை 42 நூல்கள் வெளிவந்தன. ஸ்ரீ ஹரி முல்க்ராஜ் ஆனந்த், பி ஸ்ரீ, டாக்டர் வே ராகவன், க. நா. சு. கே எஸ் இராமசாமி சாஸ்திரியார், ஏ. ஜி வேங்கடாச்சாரி ஆகியோர் நூல்களை வெளியிட்டுள்ளனர். குறிப்பிடத்தக்க நூல்கள்: வீட்டு வைத்தியம், விக்கிரமாதித்தன் கதை, நீதிநூல்கள் பஞ்சாயத்துச் சட்டம், அநுபவ தையற்கலை முதலியன:

செல்விப் பதிப்பகம் செக்காலை ரோடு, காரைக்குடி

இது 13-12-1954-இல் வள்ளல் டாக்டர் அழகப்பரால் குத்துவிளக்கு ஏற்றித் தொடங்கி வைக்கப்பெற்றது. உரிமையாளர் வீர. சிவராமன் அவர்கள், டாக்டர் வ. சுப. மாணிக்கம் டாக்டர் மா. இராசமாணிக்கம், சா. கணேசன், முடியரசன் தமிழண்ணல், ஜனகுமாரி, சுத்தானந்தபாரதியார், வி. ஆர். எம் செட்டியார், வள்ளியப்பா, பண்டித முத்து வேங்கடாசலம் ஆகியோர் நூல்களை வெளியிட்டுள்ளனர். குறிப்பிடத்தக்க நூல்கள்: இரட்டைக்காப்பியங்கள். தமிழர் திருமணத்தில் தாலி, தாலாட்டு, வீட்டு வைத்தியர் முதலியன.

அழகுப் பதிப்பகம் அம்மன் சன்னதி காரைக்குடி.

பள்ளத்தூர் கா. முத்து அவர்களால் 1959 இல் தொடங்கப் பெற்றது. 'ராயசொ' முத்து கணேசன் ஆகியோர் நூல்களை வெளியிட்டுள்ளனர்.

பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம் புதுக்கோட்டை.

முறையூர் அன்பர் அரு. சொக்கலிங்கம் (பி 7-9-1905) இந்த நிறுவனத்தை இரங்கூனில் தொடங்கினார்.

தொழில் முறையில் செட்டிநாட்டு அன்பர்கள் தொடங்கிய பதிப்பகங்களுள் இதுவே காலத்தால் முந்தியது.

நவசக்தி, தேசபக்தன், வாரப்பத்திரிகைகளில் பேரறிஞர் திரு. வி. க. வுடன் சேர்ந்து ஆசிரியராகப் பணிபுரிந்த அறிஞர் திரு. வெ. சாமிநாத சர்மா, திரு. வி. க. உடல்நலிவுக்குப் பின் சென்னையை விட்டு இரங்கூன் சேர்ந்து சுற்றத்தார் ஆதரவைக் கொண்டு, ஒரு சிறு வியாபாரத்தை நடத்தி வந்தார். அந்தக் காலத்தில், அறிஞர் திரு சர்மாவை ஒரு எழுத்தாளர் என்று கூடப் பலர் அறியார். அடக்கத்திற்கு இருப்பிடமான அவரை வெளிக்கொணர்ந்தவர் அருசொ. சிறந்த நூல்கள் எழுதவைத்து, அவரை பிரபல எழுத்தாளராக ஆக்கிய பெருமையில் பங்கு கொண்டதோடு, லாப நோக்கமற்று, அவர் எழுதும் நூல்களை மட்டுமே பிரசுரிப்பது என்று உறுதி கொண்டு, இரங்கூனில் 1935-ல் பிரபஞ்ச ஜோதி பிரசுராலயமென ஒருநூல் வெளியிடும் ஸ்தாபனம் ஏற்படுத்தினார். இரண்டாவது உலகப் போருக்குப் பின் புதுகோட்டைக்கு அந்த ஸ்தாபனத்தை மாற்றி அரசியல், தேச வரலாறுகள் பேரறிஞர் வாழ்க்கைகள் முதலிய அரிய நூல்களை வெளியிட்டிருக்கிறார். 52 நூல்கள் வெளி வந்திருக்கின்றன.

மற்றொரு துணைப் பதிப்பகம்; மற்ற எழுத்தாளர்களைக் கொண்டு எழுதும் நூல்களை வெளியிடவும், பிரகாஷ் பதிப்பகம் என்ற ஒரு துணை ஸ்தாபனமும் 1963-ல் ஏற்படுத்தப் பட்டு பல நூல்கள் வெளிவந்திருக்கின்றன.

அரு. சொ, சிறந்த எழுத்தாளர். ஜோதி என்ற மாத வெளியீட்டைத் தொடங்கியவர்களுள் ஒருவர். கல்கத்தா

தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர். (1953-1955) கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத் தலைவர் (1953-1954). ஹவுரா திருவள்ளுவர் கலை மன்றத்தின் தலைவர் (1951-1959).

1965-வரை இவருடைய பதிப்பகங்கள் இயங்கிவந்தன.

விஜயா பதிப்பகம்

6 ராஜவீதி கோயம்புத்தூர்—1 கிளை:108 அசோகா பிளாசா, டாக்டர் நஞ்சப்பா ரோடு, கோவை—18

செட்டிநாட்டு அன்பரான திரு. மு. வேலாயுதம் 1977-ஆம் ஆண்டில் இந்த நிறுவனத்தை ஆரவாரமின்றித் தொடங்கி செம்மையாகவும் சிறப்பாகவும் நடத்தி வருகிறார். சிற்றூர் களிலும் தமிழ் நாட்டுக்கு வெளியேயுள்ள பெரு நகரங்களிலும் புத்தகக் காட்சி ஏற்பாடு செய்தும் இலக்கிய விழாக்கள் அமைத்தும் தமிழ் நூல் விற்பனையில் மிகப்பெரிய சாதனை புரிந்து வருபவர் திரு. வேலாயுதம். படைப்பாளிகளை மேடைக்கு அழைத்து, வாசகர்களைக் கேள்வி கேட்கவைத்து தமிழ் மக்களை ஒவ்வொரு மாவட்டத்திலும் பிரமிக்கச் செய்ய வேண்டும் என்ற வெறி (தாகம்) இவருக்கு உண்டு "இலக்கிய கர்த்தாக்களுக்கும் அறிஞர்களுக்கும் நாட்டில் பரவலானமதிப்பு இருக்க வேண்டும்......டெலிவிஷன் கிரைண்டர் மிக்சி நகைநட்டு போல வீட்டில் நூலகம் வைக்கவேண்டும் என்ற எண்ணத்தை யும் உண்டாக்க வேண்டும்" என்பது திரு வேலாயுதத்தின் தீராத ஆதங்கம்.

பாரி புத்தகப் பண்ணை

பாரதியார் சாலை, திருவல்லிக்கேணி சென்னை—5

அகிலனின் நூல்களை வெளியிடுவதற்காக 1963-இல் தொடங்கப்பெற்றது. உரிமையாளர்கள்—திரு. கண முத்தையா திருமதி செ. வள்ளியம்மை ஆச்சி.

வெளியிட்ட நூல்கள்—80

அருணோதயம்

கௌடியாமடம்சாலை, இராயப்பேட்டை, சென்னை—14

1953-இல் தொடங்கப்பெற்றது. உரிமையாளர் திரு. லெ. அருணாசலம் (அருணன்) 1943 முதல் பத்திரிகைகள் நடத்திய

அனுபவமும் பதிப்பகங்களில் பணி செய்த பின்னணியும் உடையவர்.

இலக்கியம், நாவல்கள், கட்டுரை நூல்கள் 800ம் சிறுவர்க்கான நூல்கள் 200ம் வெளியிட்டுள்ளனர். குறிப்பிடத்தக்கவை—காவல் துறையின் கதை (துமிலன்), வருமான வரிச் சட்டம் (அனந்தாச்சாரி), பெருங்கதை ஆராய்ச்சி, சிலம்பொலி (இரண்டும் திரு. சிலம்பொலி செல்லப்பன் எழுதியவை)

30 ஆண்டுகளில் அருணோதயம் என்னும் சிறு நூல் இப்பதிப்பகத்தின் வரலாறு. எழுதியவர் திரு. அருணன்.

இலக்கியப் பதிப்பகம்

புதுவயல் திரு. V. சோமையா. 1946முதல் 1960வரை காரைக்குடியில் நடத்தினார்.

மார்க்கபந்து சர்மா, ராயசொ, பேராசிரியர் அ. ச. ஞாக. திரவியம் ஆகியோர் நூல்களை வெளியிட்டனர்.

மணிமேகலைப் பிரசுரம்

4 தணிகாசலம் செட்டிரோடு, தியாகராயநகர் சென்னை-17

தொடக்கம் 1955ல் தமிழ்வாணன், லேனா, தமிழ்வாணன் மற்றும் மணிமேகலை பிரசுர ஆசிரியர் குழு எழுதியிருக்கும் நூல்களை வெளியிடுவோர். உரிமையாளர்கள்—தமிழ்வாணன் குடும்பத்தார். நிர்வாகி திரு. ரவி.

சிறப்பு நூல்கள்— அரசாங்க அலுவலக விதிமுறைகள் மேற்கொண்டு என்ன படிக்கலாம், பிரபலமானவர்களின் விலாசங்கள், அறிவுவளர்ச்சி நூல்கள், வாழ்க்கையில் வெற்றி பெற உதவும் நூல்கள், படக்கதைகள்.

அப்பர் புத்தக நிலையம்

1621 தெற்கு ராஜவீதி தஞ்சாவூர்-1, கிளை—கீழ வெளிவீதி, மதுரை.

தொடக்கம் 1-4-1958 பங்காளிகள் (1) நேமத்தான்பட்டி அப்பர் இல்லம் திருமதி பழ.கி. தெய்வயானை ஆச்சி (2) காளையார்மங்கலம் திரு. ராம. சிதம்பரம். புலியூர் கேசிகன் பூவை ஆறுமுகம், கே. எஸ். லெட்சுமணன் போன்றவர்களின் நூல்களை வெளியிட்டுள்ளனர்.

மீனாட்சி புத்தக நிலையம்
60 மேலக் கோபுரத் தெரு, மதுரை-1

1960-இல் தொடங்கப்பெற்றது

உரிமையாளர் அரிமளம் திரு. செ. செல்லப்பன் (பி 5-8-1922) 1952 முதல் இவர் பதிப்புத்துறை அனுபவம்பெற்றவர் ஜெயகாந்தன், டாக்டர் ராமகிருஷ்ணன், ஹம்சா தனகோபால் டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி நூல்களை வெளியிட்டு வருகிறார்.

ஐந்திணைப் பதிப்பகம்
15 சைடோஜிதெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5

1984 முதல் இந்தப் பெயரில் இயங்கிவருகிறது. உரிமையாளர்— இராயவரம் திரு. குழ.கதிரேசன். இவர் 1973முதல் பதிப்புத்தொழிலில் உள்ளார். புதுமைப்பித்தன், ஜெயகாந்தன் தி. ஜானகிராமன், தொ மு.சி. ரகுநாதன், டாக்டர் எஸ்.இராமகிருஷ்ணன் லா. ச ர. மது.ச. விமலானந்தம், டாக்டர் ஜான் சாமுவேல் டாக்டர் பொற்கோ நூல்களை வெளியிடுகின்றனர்.

அன்னம் (பி) லிமிடெட்
2 சிவன்கோயில் தெற்குத் தெரு, சிவகங்கை 623560, கிளை—13/3எல் கே எஸ் கட்டிடம், திருச்சி 620008

கவிஞர் மீராவும் அவர் நண்பர்களும் 1973-இல் தொடங்கியது. இப்போது 40 பங்குதாரர்களை உடையது புதுக்கவிதை இலக்கியத் திறனாய்வு, வட்டார வழக்குச் சொற்கள் முதலிய 150 நூல்களை வெளியிட்டிருக்கிறது.

பூங்கொடி பதிப்பகம்
14 சித்திரக்குளம் மேற்கு வீதி, மயிலாப்பூர், சென்னை-4

உரிமையாளர்—கல்லலை அடுத்த கல்குலம் ஊரினரான திரு. சுப்பையாவும் அவர் மகன் திரு. புகழேந்தியும்.

1968 இல் தொடங்கி ம. பொ. சி, லட்சுமி, சிட்டி, ஏனையோர் நூல்கள் 300 வரை வெளியிட்டுள்ளனர்.

திருமகள் நிலையம்

55 வெங்கட் நாராயணாரோடு, சென்னை-17

தொடக்கம் 1979 பங்காளிகள் (1) வலையபட்டி வ. ராம. அ. இராமநாதன் (2) வலையபட்டி அ. ம. திருப்பதி லட்சுமி, சிவசங்கரி, இந்துமதி நூல்களைவெளியிட்டு வருகின் றனர். குழந்தை இலக்கிய, மருத்துவ, சோதிட நூல்களையும் வெளியிட்டுள்ளனர். குறிப்பிடத்தக்க நூல்— திருக்குறளார் வி. முனிசாமி அவர்கள் எழுதிய உலகப்பொதுமறை திருக்குறள் உரைவிளக்கம் (1,100பக்கம்) 1984வரை 110நூல்கள் வெளியிட் டுள்ளனர்.

அபிராமி பப்ளிகேஷன்ஸ்

307 லிங்கிசெட்டித்தெரு, சென்னை-1

1979-இல் வலையபட்டி திரு கா பனையப்பன் இந்தப் பதிப்பகம் தொடங்கி டாக்டர் கலைஞர் மு கருணாநிதி, புஷ்பா தங்கதுரை, ராஜேந்திர குமார், புலவர் கோவிந்தன். பாஸ்கர தொண்டைமான் நூல்களை வெளியிட்டு வருகிறார். 1984 வரை 120 நூல்கள் வந்துள்ளன.

ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்

5 கோபாலகிருஷ்ணய்யர் சாலை சென்னை—17

உரிமையாளர் திரு வி கரு இராமநாதன். சோதிடநூல் வெளியிடுகின்றனர்.

மெய்யம்மை பதிப்பகம்

திரு. வி. க. இல்லம், 49, ஆறு. ஆ. இராம. வீதி, காரைக்குடி—1

1978-இல் நிறுவப்பெற்றது. தமிழன்பர் திரு பெரிய கருப்பன் (பார்க்க ப- 168) தமிழ் இலக்கியத் தொடர்பான சிறந்த நூல்களை வெளியிட்டு வருகிறார்.

நேஷனல் ஆர்ட்ஸ் அகாடமி

4/18 *W. E. A.* கரோல் பாக், புது டில்லி—5

தோற்றம் 1979. உரிமையாளர் திரு எம் எஸ் பி சண்முகம் (பார்க்க ப. 358).

வெளியீடுகள்—(1). ஒளிப்படம் பிடிக்கும் கலை (போட்டோகிராபி பற்றியது) ஏராளமான வண்ணப்படங்களுடன் (2) மெக்சிகோவின் சுருக்கமான (கலாச்சார) வரலாறு

மணிவாசகர் பதிப்பகம்

12B மேல சன்னதி, சிதம்பரம்—608001

கிளைகள்—சென்னை, மதுரை, கோவை

பேராசிரியர் ச. மெய்யப்பன் (பார்க்க ப 261-262) அவர்களை உறுதுணையாகக் கொண்டு 1961-இல் தொடங்கப் பெற்றது. ஏராளமான நூல்களை வெளியிட்டு தமிழறிஞர் பலருடைய நன்மதிப்பைப் பெற்றுள்ளது.

டாக்டர் வ. சுப. மா. டாக்டர் சாரங்கபாணி, டாக்டர் சோ. ந. கந்தசாமி, மு. வை. அரவிந்தன், கி வா. ஜ. நூல்கள் வெளியிடப் பெற்றுள. குறிப்பிடத்தக்கது- திருக்கோயில்வரிசை

புத்தகப் பூங்கா

29 நல்லண்ண முதலி தெரு இராயப்பேட்டை சென்னை-14

உரிமையாளர் — தேவகோட்டை மீ. பஞ்சநாதன் (பி. 9-5-1954) 40 நூல்களை அறிமுக எழுத்தாளர்களின் ஆக்கங்களை வெளியிட்டுள்ளார்.

வானதி பதிப்பகம்

10 தீனதயாளு தெரு, தி. நகர் சென்னை—17

18-5-1955-இல் தோன்றியது. உரிமையாளர்—தேவகோட்டை திரு. ஏ. திருநாவுக்கரசு. (பி. 12-8-1927). கல்கி எழுதிய பொன்னியின் செல்வன் கதையில் வரும் வானதி என்ற பாத்திரம் இவர் உள்ளத்தைக் கவர்ந்தது. வான் நதி—ஆகாய கங்கை. அப்படிப்பட்ட நீரைக்கொண்ட அமுதகலசத்தைத் தன் துதிக்கையில் பிள்ளையாரப்பன் யானை வைத்திருப்பதைப் போல நிறுவனத்தின் சின்னத்தை அமைத்தார்.

ஆன்மிகம், அறிவியல், இலக்கியம், கவிதை, சிறுகதை, நாவல், ஆராய்ச்சி என்ற பலவகைகளிலுமாக 900 நூல்கள் வானதி வெளியீடாக வந்துள்ளன. வானதி வெளியீடு என்றால் தரமான நூல் என்ற கருத்து தமிழ்வாசகர் உள்ளங்களில் உண்டாகுமாறு, இப்பதிப்பகம் வளர்ச்சியடைந்திருக்கிறது.

வளர்தமிழ் வளர்க்கும் வானதி தமிழ்கூறு நல்லுலகம் அறிந்த பெயர். மூத்த தமிழுக்குப் புத்திலக்கியம் வழங்கும் பூங்கா. வானதியார் கால் நூற்றாண்டுக்கும் மேலாக, கன்னித் தமிழுக்குக் கவின்மிகு நூல் தருபவர், வெளியீட்டுத் திறனிலும் விற்பனைத் திறனிலும் வீரராய் விளங்குபவர் என்றெல்லாம் போற்றப்படுபவர் திரு. திருநாவுக்கரசு.

கவியரசு கண்ணதாசன், வாரியார் சுவாமிகள், காஞ்சி காமகோடிபீடம் பெரியவர்கள், டாக்டர் எம். எம். இஸ்மாயீல் ஆகியோருடைய நூல்களையும் இன்னும் ஏராளமான எழுத்தாளர்களின் படைப்புக்களையும் வானதி வழங்குகிறது.

புத்தக வித்தகர், நூல் சிறக்கும் சிந்தனையாளர், சமய இலக்கியப் பிரகாசமணி என்ற பட்டங்களைப் பெற்றுள்ள திருநாவுக்கரசு 1946-இல் தமிழ்ப் பண்ணையிலும் பின்னர் நவயுகப் பிரசுராலயத்திலும் பணியாற்றினார். இந்த அடித்தளமும், இதழ்களில் வேலை செய்து பெற்ற பயிற்சி, தாமே சிறுவர்க்கான நூல்களை இரவோடு இரவாக எழுதிக்குவித்து ஜில்ஜில் பதிப்பகம் நடத்திய பின்னணி, அச்சகங்களைக் கவனித்து வந்த அனுபவம் ஆகியவையும் இவருடைய வெற்றிக்கு உறுதுணை புரிந்துள்ளன.

வளரும் வானதி என்ற நூல் இப்பதிப்பகத்தின் வரலாறாகும்.

# 21. யார் எவர்

அகிலன் (இயற்பெயர்—வை. அகிலாண்டம்) பி.27-6-1922

புதுக்கோட்டை அருகேயுள்ள பெருங்களூரில் பிறந்தவர். 1970முதல் 1982வரை வானொலியில் அலுவல் பார்த்து ஓய்வு பெற்றவர்.

இவர் தமிழகத்தின் தலைசிறந்த எழுத்தாளரில் ஒருவர். கற்பனை வளமும், இலக்கியப்பயிற்சியும், மொழிப்பற்றும் உடையவர். தொடர் கதைகள், திரைப்படங்கள் வாயிலாகப் பெரும் புகழ்பெற்றவர். 1957-இல் டில்லியில் இந்திய வானொலி நிலையத்தார் நடத்திய இலக்கியப் பேரரங்கில் தமிழ்நாட்டின் பிரதிநிதியாகக் கலந்துகொண்டார். இவரது சிறுகதைகள் இந்திய மொழிகள் மற்றும் அயல்நாட்டு மொழி பலவற்றில் பெயர்க்கப் பெற்றுள்ளன. சிறுகதை, நாடகம், நாவல், கட்டுரை ஆகிய துறைகளில் ஏராளமான நூல்கள் எழுதியுள்ளார். இவரது படைப்புக்களில் குறிப்பிடத்தக்கன:—

பெண், பாவைவிளக்கு, நெஞ்சின் அலைகள், வேங்கையின் மைந்தன் ஆண்-பெண், வாழ்வில் இன்பம்.

தமிழ்வளர்ச்சிக் கழகப் பரிசு, கலைமகள் பரிசு மற்றும் சோவியத்நாடு பரிசு, இராஜா சர் அண்ணாமலை செட்டியார் பரிசு, சாகித்திய அகடமிபரிசு ஞான பீடப் பரிசு ஆகியவற்றை பெற்ற பெருமை இவர்க்கு உரியது.

மு. அண்ணல் தங்கோ, வேலூர்

தனித்தமிழ் இயக்கத்தைப் பரப்புவதையே தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டவர். ''தமிழ் நிலையம்'' என்னும் இதழை நடத்தியவர்.

தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் நிறுவியவர். பல ஆண்டுகளாகத் தமிழ்த்திருநாளைச் சிறப்பாகக்கொண்டாடி வருபவர். தமிழ் நாட்டெல்லைப் பாதுகாப்பு மாநாடு கூட்டியவர். இப்பெருமகனார் செட்டிநாட்டில் கண்டவராயன் பட்டியில் பிறந்தவர்.

எஸ் ஏ. பி. அண்ணாமலை, எம். ஏ. பி. எல். (பி.கானாடு காத்தான், 1924. 6,) ஹண்டர்ஸ் ரோடு, சென்னை-7

இவர் "குமுதம்" ஆசிரியர். தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் துணைத்தலைவராகவும் பரலி சு. நெல்லையப்பர் நிதிக்குழுவின் செயலாளராகவும் பொருளாளராகவும் 1954-ல் இருந்திருக்கிறார். ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் கோப்பையையும், ஒய். எம். ஐ. ஏ.பேச்சுப்போட்டியில் முதற் பரிசையும் இவர் பெற்றிருக்கிறார். சிறந்த எழுத்தாளராக விளங்குகிறார். "எஸ். ஏ.பி." என்னும் புனைபெயரில் பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார். இவரது நூல்கள்: "காதலெனும் தீவினிலே" "பிரம்மச்சாரி" "இமயத்தின்மடியில்" "நீ" முதலிய பல. இவருடைய சிறுகதைகளுள் "பாட்டியின் புன்னகை" என்பது ஒரு சிறந்த ஓவியம்.

குமுதம் மூலம் புதியதோர் எழுத்தாளர் பரம்பரையை இவர் தோற்றுவித்து வருகிறார். சிந்தித்து வரம்புடன் பேசும் நல்ல பேச்சாளர்.

வே. அண்ணாமலை, வலையபட்டி.

இவர் 16-9-1925-ல் பிறந்தவர். புனைபெயர்—அலை. வித்துவான் தேர்வில் முதல் வகுப்பில் வெற்றிபெற்றவர். தேவகோட்டை நகரத்தார் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பல ஆண்டுகள் பணி புரிந்தவர். இப்போது கண்டனூர் சி. ஏ. எம். உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராக இருக்கிறார் தமிழ் வள்ளல் சேவு. மெய்யப்பச் செட்டியார். ஏற்படுத்திய திருக்குறள் போட்டிகளை இவர் ஆண்டு தோறும் முன்னின்று சிறப்புற நடத்திவருகிறார். பலகவிதைகள் இயற்றியுள்ளார். வானொலிக் கவியரங்கங்களில் கலந்து கொண்டிருக்கிறார். பரத நூல், பணவிடுதூது—இரண்டையும் பதிப்பித்திருக்கிறார். புராணக்கதைகள் உள்பட 25 நூல்களை எழுதியிருக்கிறார். வலம்புரி அண்ணாமலை என்றும் குறிப்பிடப் பெறுகிறார்.

டிரோஜன் அண்ணாமலைச்செட்டியார் சா. ராம. சித. அ கானாடுகாத்தான், 3-1-1911

இவரது தந்தையாரான சிதம்பர ஐயா சைவசித்தாந்த அறிஞராகத் திகழ்ந்தார். அவருடைய ஆதரவாலேயே திரு. டி. என். சேஷாசலம் அவர்கள் "கலா நிலையம்" என்னும் இதழை நடத்தி வந்தார்கள்.

அண்ணாமலைச் செட்டியார் தமிழ்ப்பண்ணை லிமிடட்டிலும் "பாரத தேவி"யிலும் டயரக்டராக இருந்திருக்கிறார். தமிழ்வளர்ச்சிக் கழகத்தைத் தொடங்கியவருள் ஒருவர். பாரதி சங்கத்தின் செயலாளராகவும் இருந்தவர். 11-4-54-ல் சென்னைக் கம்பர் கழகத்தார் தேரெழுந்தூரில் நடத்திய கம்பர் மாநாட்டில் வரவேற்புக்குழுவின் தலைவராக இருந்தவர். அரசவைக் கவிஞர் என்ற சிறப்புப் பதவியை ஏற்படுத்த வேண்டுமென்ற கருத்துத்தெரிவித்தவர், இவரே.

அண்ணாமலைச் செட்டியார், இராமச்சந்திரபுரம்

பி 1909. இவர் கலாநிலையம் டி என். சேஷாசலம் அவர்களிடம் பாடங்கேட்டவர். சிங்கப்பூரில் தமிழ்வகுப்புக்கள் நடைபெறக் காரணமாய் இருந்தவர். சுத்தானந்த பாரதியாரின் சீடராக இருந்து அவருக்குப் பேருதவி செய்தவர். அவருக்காக அன்புநிலையத்தைத் தம் இல்லத்திலேயே தொடங்கி 10 ஆண்டுகளில் 150 நூல்களை வெளியிட்டவர். தன் மகனுக்கு, சுத்தானந்தம் என்று பெயர் வழங்கியவர். இவர் மலேயாவில் நேதாஜியின் ஆட்சியில் பொறுப்பான பதவி வகித்தவர். சிதம்பரத்திலும் அண்ணாமலை நகரிலும் நியூ புக் ஸ்டோர் என்னும் நூல்வெளியீடு-விற்பனை நிலையத்தை நடத்திவந்தார்.

மு. அண்ணாமலை, மெ. மு. மு. வீடு, கோனாப்பட்டு

இவர் 1928-ல் கொத்தமங்கலத்தில் பிறந்தவர். 1953-இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ச் சிறப்புக் கல்வி பயின்று, முதல் வகுப்பில் முதல்வராகத் தேர்ச்சி அடைந்து, பி. ஏ. ஆனர்சுப் பட்டம்பெற்றார். 1953 முதல் 1966 வரை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராக இருந்தார். மைசூரில் 1958-இல்நடைபெற்ற மொழிநூல் பயிற்சி வகுப்பில் மாணவராகஇருந்திருக்கிறார். பல கவி அரங்கங்களில் கலந்து கொண்டிருக்கிறார். இவருடைய கவிதைகளில் இரண்டு சாகித்திய அக்காடமியாரால் ஹிந்தியில் வெளியிடப் பெற்ற 'பாரதீயக் கவிதாவில்' இடம் பெற்றுள்ளன. இவருடைய நூல்கள்: தாமரைச்குமரி (கவிதைத்தொகுதி) மலரும் புனலும் (சிறு காவியம்), நச்சினார்க்கினியர் (விமரிசனம்), இலக்கியச் சந்தையில் என்பது மேல்நாட்டு இலக்கியப்போக்குப் பற்றியது, அதிசயக்காதல் (ஆராய்ச்சி) வள்ளுவர் தனித் தன்மை முதலியன.

வ. அண்ணாமலை

40 அம்பாரம் கிழக்குத்தெரு, நெற்குப்பை 3-6-1936

தமிழாசிரியர் விசாலாட்சி உயர்நிலைப்பள்ளி ஆ. தெக்கூர்.

சுப. அ. அண்ணாமலைச் செட்டியார் பனையப்பட்டி

இவர் பெயரால் இவர்தம் மக்கள் தமிழ்வளர்ச்சி கருதி அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் பிற நிறுவனங்களிலும் அறக்கட்டளை நிறுவியிருக்கின்றனர். அறங்காவலர் சுப. அ. நடராசன் செட்டியார் அவர்கள்.

அரசு நாச்சியப்பன்

ஆத்தன்குடி முத்துப்பட்டணம் (2-1-1942), ஐ என் டியூசி தொழிற் சங்கத்தின் முழுநேரச் செயலாளர் 211 வடக்கு அவெனியூ புது டில்லி 110 001.

நூல்கள்: கவிஞருடன் ஒரு நிமிடம்!, இந்திரா தலைமையே!

வெளிவர இருப்பவை: அயல் நாடுகளில் கண்ணதாசன், புதிய பார்வை.

கடிதம்,தென்றல்திரை, மணிக்கொடி இதழ்களில் பணி—யாற்றியவர். கவிஞருடன் அமெரிக்காவுக்கும் தொழிற்சங்க வேலையாக ரஷ்யா, ஐரோப்பிய நாடுகள் ஆஸ்திரேலியாவிற்கும் சென்றவர்.

அரிமழம் பழ. செல்லப்பன் சென்னை-18

கவிஞர்; பேட்டிக் கட்டுரையாளர். இந்தியன் ஓவர்சீஸ் வங்கியில் பணி. நகரமலர் இதழுடன் தொடர்புடையவர்,

பெரி அருணாசலம் 1919-1982

கூழிபிறை ஊரினர். சென்னை ஸ்டாக் எக்சேஞ்சின் தலைவராக இருந்தவர். நூல்: பங்கு மார்க்கெட்டில் பங்கீடு செய்வது எப்படி?

மு. அ. அருணாசலம் செட்டியார்

(பள்ளத்தூர் 1899-1970) திருச்சியில் வாழ்ந்து வந்தார். நாமக்கல் கவிஞர், முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. வி. ஆகியோரின் தமிழ்ப்பணிகளுக்கு உறுதுணையாக இருந்தார். திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கத்தின் துணைத் தலைவராக வும் திகழ்ந்தார்.

டி. ஆர். அருணாசலம் (இ 1980)

சிறந்த அறிஞர் என்று பண்டிதமணிஅவர்களால் மதிக்கப் பெற்ற தேவகோட்டை பெரிய மைனர் இராமநாதன் செட்டியார் மகன். குடிப்பிறப்பால் மட்டுமின்றி கொள்கைச் சிறப்பாலும் மதிக்கப் பெற்ற திரு. அருணாசலம், டி. ஆர். என்று அனைவராலும் குறிக்கப் பெற்று வந்தார்.

1942போராட்டத்தில் பெரும்பங்கு கொண்டவர் டி.ஆர். செட்டிநாட்டில் விடுதலைப்போராட்டத்தின் வரலாற்றைஇவர் எழுதியிருக்கிறார். ஹிந்தியிலிருந்தும் ஆங்கிலத்திலிருந்தும் சில நூல்களை மொழி பெயர்த்திருக்கிறார். குறிப்பிடத்தக்கவை— நான் கண்ட காந்தி (லூயி பிஃஷர்), காந்திஜி வாழ்க்கையில் சில ரசமான சம்பவங்கள். (ஜி. இராமச்சந்திரன்), புதிய காங்கிரஸ் (சங்கரராவ்தேவ்)

நவயுகம் பிரசுராலயத்தைத் தொடங்கியவருள் ஒருவர். தேவகோட்டையில் தமிழ் இசைப்பள்ளி தொடங்கித் திறமையாக நடத்தினார். நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு என்ற நூல் வெளிவரக் காரணமாக இருந்தார்.

ந. சொ. அரு. அருணாசலம் செட்டியார் கொத்தமங்கலம் லட்சுமிபுரம்

தம் ஊரில் சொக்கலிங்க வித்தியாசாலை நிறுவியுள்ளார். திருப்புள்ளிருக்கு வேளூர் புகழ்மாலை, திருநாரையூர்த் திருமுறை, திவ்வியப் பிரபந்தத் திரட்டு போன்ற தெய்வமணம் கமழும் திருப்பாடல்களைத் தொகுத்து வெளியிட்டிருக்கிறார்.

டாக்டர் அரு அருணாசலம் எம். பி பி. எஸ்.

ஸ்ரீ இராமகிருஷ்ணர் மருத்துவமனை, சரோஜினி நாயுடு தெரு, கோயம்புத்தூர் - 44 (52, இரண்டாம் நம்பர் ரோடு, வலையபட்டி) பி. 10 - 1 - 1952

கோவை வானொலியில் மருத்துவ உரைகள் சிலவற்றை இனிய தமிழில் நிகழ்த்தி வருகிறார்.

லெ. அருணாசலம் (அருணன்)
தேவகோட்டை 18 - 12 - 1924

1943 – இல் தமிழ்ப் பண்ணையிலும் பிறகு முல்லைப் பதிப்பகத்திலும் பணி. 1954 – இல் கூட்டாக 'தென்றல்' என்ற இலக்கிய ஏட்டை நடத்தினார். தினச் செய்தி நாளிதழில் ஒன்றரை ஆண்டு. நிழல், கலையரசு, சினிமா ரசிகன் இதழ்களில் துணை ஆசிரியராகவும் அருணன் இதழின் ஆசிரியராகவும் இருந்திருக்கிறார்.

நூல்கள்: புதுவாழ்வு (நாவல்), நாட்டியக்காரி (சிறு கதைகள்) இல்லற இன்பம் (நல்வாழ்வுக் கட்டுரைகள்), எது சினிமா? 1953 – இல் அருணோதயம் என்ற பெயரில் தமிழ் நூல் வெளியீட்டு நிறுவனம் தொடங்கி, இனிது நடத்தி வருகிறார். முகவரி : 3, கௌடியா மடம் சாலை சென்னை – 14

சுப. அருணாசலம் B. Com பள்ளத்தூர் 4- 10 - 1922

காந்தியடிகள் வழி தம்மை ஆட்படுத்திக் கொண்ட தொண்டர். அறிஞர். 1952 முதல் கரூரைத் தம் வாழிடமாகக் கொண்டவர். உடை, குரல், அரசியல் ஈடுபாடு, தமிழ்ப் பற்று ஆகியவற்றில் கம்பன் அடிப்பொடி கணேசனாரைப் பின்பற்றுபவர். பலமுறை காவலில் வைக்கப்பெற்றவர். வீர விவேகானந்தர் என்று பாராட்டப் பெற்றவர். பேச்சுவன்மை இவர் தம் மூச்சு வன்மை. பள்ளத்தூரில் முத்தப்பா நூல் நிலையம் (பாடுவார் நினைவாக) நிறுவியவர். பல நாடகங்களில் நடித்திருக்கிறார். நடிப்பிற்காகப் பரிசுகளும் பெற்றிருக்கிறார். வானொலி நாடகங்களிலும் பங்கு கொண்டு வருகிறார். சமய, இலக்கிய உரைகளைக் கோவை வானொலியில் நிகழ்த்தி வருகிறார்.

நேப்பாளம் அமர்நாத் பற்றிய பயணக் கட்டுரைகளையும் தமிழன் கண்ட மதம் என்ற நூலையும் எழுதியிருக்கிறார். 'குமரி மல'ரின் வளர்ச்சிக்கு உதவியாக உழைத்திருக்கின்றார்.

சில ஆண்டுகள் உடுமலைப் பேட்டையில் வாழ்ந்தபோது, தமிழ்ச் சங்கங்கள் அப்பகுதியில் வேகமாகச் செயல்படச் செய்தார்.

கரூரில் பாரதி கழகம், திருப்புகழ்க் கழகம், தமிழ் எழுத்தாளர் சங்கம், கம்பன் கழகம் ஆகியவற்றைத் தொடங்கி அவை தொடர்ந்து செயல்படக் காரணமாக இருந்து வருகிறார்.

முத்தமிழ்ச் செல்வர், கற்கண்டு சொற்கோ, தமிழ்க் கொண்டல் என்ற பட்டங்கள் இவருக்கு வழங்கப் பெற்றுள்ளன.

கவிமணியின் உமார் கய்யாம் மொழிபெயர்ப்பு நூல் பற்றிய ஆய்வும் வள்ளலார் கொள்கைகளைப் புதிய கண்ணோட்டத்தில் விளக்கியிருப்பதும் இவருடைய இலக்கியப் பகணிளில் குறிப்பிடத்தக்கவை.

பஞ்சு அருணாசலம் காரைக்குடி 22 - 3 - 1941

கவிஞர் கண்ணதாசனின் அண்ணன் திரு. கண்ணப்பரின் மகன். நூற்றுக் கணக்கான படங்களுக்குக் கதை வசனமும் பாடலும் எழுதியிருக்கிறார். கலைமாமணி விருது பெற்றவர். 12 ஆண்டுக் காலம் கவிஞருடன் இருந்து பயின்றவர்.

நா. அருணாசலம்(தொண்டர்)கண்டவராயன் பட்டி, பி. 1911

இந்திய தேசிய இராணுவத்தில் பணி ஆற்றியவர். அருள் நெறித் திருக்கூட்டச் செயலாளர் நூல்கள்: சிவ வணக்கம், எங்கள் கணேசன்.

பூ. அமிர்தலிங்கம் (19—11—1920)

அழகப்பா கல்லூரியில் பல்வாண்டுகள் பணியாற்றியவர். கவிஞர் கோ. நூல்கள்-வள்ளுவர் கண்ட உயிரினங்கள், கருத்தும் கற்பனையும், கம்பன் விழாக்கவியரங்கங்களில் மலரமுதன்

டாக்டர் க. அறிவு நம்பி

(19-8-1953) 40, அறிவகம், இந்திரா நகர், காரைக்குடி-1

கவிஞர் கோ அமிர்தலிங்கம் மகன்.

தமிழகத்தில் தெருக்கூத்து பற்றி ஆய்ந்து பி எச் டி. பட்டம் பெற்றவர். கவியரங்குகளில் கலந்து கொள்கிறார். தங்கப் பதக்கங்கள் பெற்றுள்ளார். புனை பெயர்கள் - முல்லை யண்ணன், கயல் நூல் - கூத்தும் சிலம்பும்.

டாக்டர் அழகப்பா அழகப்பன்

கானாடுகாத்தான் 3 - 12 - 1925 உலகியல் நுண்ணறிவும் நூலறிவும் மிக்க இவரைப்பற்றி இந்நூலில் 36 – ஆம் கட்டுரை யில் குறிப்பிட்டிருக்கிறோம். 'தமிழ் நாடு' நாளிதழிலும் 'குமுதம்' இதழிலும் சிறப்புக் கட்டுரைகள் பலவற்றை எழுதியிருக்கிறார். பி. பி. சி. வானொலி நிலையத்திலிருந்து தமிழில் பல உரைகள் நிகழ்த்தியிருக்கிறார். சைவ சமயத் தொடர்பாகப் பல கட்டுரைகளும் படிப்பது எதற்கு? என்ற நூலும் எழுதியிருக்கிறார்.

அழ. அழகப்பன் (ரத்தினம்) 1923—1981

உய்யக்கொண்டான் சிறுவயல்

சிறுவர்களுக்காக (1) ஜப்பான் பொம்மை (2) காந்திமதி (3) சங்கரனும் ரங்கனும் (4) முயல் குட்டி முத்து (5) பறவைகளின் மாநாடு போன்ற பல நூல்களை இயற்றியுள்ளார். குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் பணிகளிலும் பூஞ்சோலை, பாலர் மலர் இதழ்களின் வளர்ச்சியிலும் பெரும் பங்கு கொண்டார்.

அழகாபுரி அழகப்பன்

பி. அழகாபுரி 27 - 4 - 1937.

ஆசிரியர், குருகுலம் உயர்நிலைப்பள்ளி, அமராவதி புதூர் படைப்புக்கள் – 300 சிறுகதைகள், 10 குறு நாவல்கள், இரு முழு நாவல்கள். குறிப்பிடத்தக்க சிறுகதை – கணங்களும் யுகங்களும். சில கதைகள் ஆங்கிலம், மலையாளம், தெலுங்கு மொழிகளில் பெயர்க்கப் பெற்றுள. வார இதழ்கள் நடத்தும் போட்டிகள் பல வற்றில் முதற் பரிசு பெற்றிருக்கிறார். சில கதைகள் திரைப் படமாகியுள்ளன. இவருடைய எழுத்து அனைத்திலும் செட்டி நாட்டு மண்ணின் மணம் பரவக் காணலாம்.

வித்துவான் அழகப்ப செட்டியார்
2 மெய்யப்பன் அம்பலம் தெரு, புது நகர் காரைக்குடி.

சமயக் கட்டுரைகள் பலவற்றை எழுதியிருக்கிறார். காரைக்குடி இந்து அபிமான சங்கத்தின் முன்னாள் தலைவர்.

வி. அழகப்பன் காரைக்குடி, 27-6-1940
டி 154 சினிமா சாலை, பகுதி—18 நெய்வேலி-3

கவிதை, கட்டுரை சிறுகதை எழுத்தாளர். நெய்வேலிக் கலை இலக்கிய மன்றத் தலைவர்.

அறிவழகன்
(நா. பழனியப்பன்) வேந்தன்பட்டி பி 1927

பல உயர்நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியராக இருந்தவர் சிறுகதைகள் நாவல்கள் எழுதியிருக்கிறார். முல்லை, அமுதசுரபி விடுதலை கல்வி இதழ்களில் பணியாற்றியவர். முருகு, அழகு என்ற இதழ்களை நடத்தியிருக்கிறார்.

அழகு அண்ணாமலை கோட்டையூர்

ஹோமியோபதி டாக்டர். தாலாட்டு ஒப்பாரிப் பாடல் களைத் தாமே இயற்றியிருப்பவர். இசைப் பேருரைகள் நிகழ்த்தி வருபவர். நடிகர்.

லெ. அழகுசுந்தரம் செட்டியார்

கண்டமாணிக்கம். மதுரை மகாலட்சுமி ஆலையின் தலைவர். சென்னை தமிழ் இசைச் சங்கத்தின் அறங்காவலர் மதுரைத் தமிழ் இசைச் சங்கத்தின் தலைவர்.

மு. சே. அன்பழகன் (மு. சே. முத்துவள்ளி) பி.லிட்
சண்முகநாத பட்டணம் 623405 பி 7-7-1946

அரசு உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர். கல்வெட்டுப் பயிற்சி பெற்றவர். வில்லுப்பாட்டு நிகழ்ச்சிகள் நடத்துபவர். அச்சுவடிவம் பெறும் நிலையில் கட்டுரைகள், நாடகங்கள் கவிதைகள் எழுதிவைத்திருக்கிறார். புனை பெயர்—அன்புமணி

அழகாபுரி இளங்கோவன்
1/89 பாடுவார் முத்தப்பர் இல்லம் பி. அழகாபுரி 623205

2/1 லேனா இல்லம் பூ. நா. தெரு கருத்தாவூரணி வடக்கு
தேவகோட்டை 623302

பி 29-12-1948. எம். ஏ. பட்டதாரி. நகரத்தார் மேனிலைப் பள்ளித் தமிழாசிரியர். செவ்வேள் அருட்கவி. இவர் பாடுவார் முத்தப்பரின் மரபு வழிப் பெயரன்.

நூல்கள்: தேன்மலர் (மரபுக்கவிதை) கோடுகள் (புதுக்கவிதை) கவியரங்கங்களில் பங்கு பெற்றுவருகிறார்.

க. சொ. ஆதப்பன்
கல்லல், 1923.

பினாங்கு தமிழ்ப் பண்ணையின் தலைவர். தமிழ் வளர்ச்சி கருதி மலேசியாவில் பல மாநாடுகளை நடத்தியிருக் கிறார்.

புலவர் பெரி. ஆறுமுகம் பி.லிட் நெற்குப்பை 15-6-1937

ஆ. தெக்கூர் விசாலாட்சி கலாசாலையில் 1960 முதல் தமிழாசிரியராக இருந்து வருகிறார். குடமுழுக்கு மலர்கள் சிலவற்றைப் பதிப்பித்திருக்கிறார். பக்கம் 115 -இல் குறிக்கப் பெற்றுள்ள பெரிய கருப்பன் செட்டியாரின் மகன்.

இரகுபதி

விரையாச்சிலை லட்சுமிபுரம் ஊரினர். புதுக்கோட்டை யில் வழக்கறிஞர் புதுக்கோட்டை மாவட்டச் செயலர், அ. இ அ தி மு க. சிறந்த மேடைப் பேச்சாளர்.

பழ. இராமசாமி எம். ஏ. கோனாபட்டு

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராக இருந்தவர். விஞ்ஞான பாடங்களைத் தமிழில் கற்பிக்க இயலு மென நம்புபவர். இண்டர்மீடியட் வகுப்புக்கு உரிய 'வேதியல் நூல்' இயற்றியிருக்கிறார். கலைக் களஞ்சியத்தில் சில கட்டுரை கள் எழுதியிருக்கிறார்.

சு. இராமசாமி நாயுடு 1908-1956

இவர் செட்டிநாட்டுத் திருப்புத்தூர் ஊரினர். சென்னை நகரின் ஷெரிப் பதவி வகித்தபோது, தம் கடமையைப் பற்றிச் "சென்னையின் நாட்டாண்மை" என்று கட்டுரை வரைந்தார். மேயராக இருந்தபோதும் பைந்தமிழைப் பரப்பினார். சென்னையில் நடைபெற்ற தமிழ் விழாவில் வரவேற்புக் குழுவின் செயலாளராக இருந்தார். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்களின் சிலை நிறுவுவதற்குக் காரணமாக இருந்தவர்களுள் ஒருவர். தருமபுர ஆதீனத்தின் தமிழ்ப் பணிகளுக்குக் காரணமாக இருந்தவருள் முக்கியமானவர். தமிழ் இசை இயக்கத்திலும் பெரும்பங்கு கொண்டிருந்தார். அன்பொழுகக் கவர்ச்சி மிக்க தமிழ் நடையில் கடிதங்கள் எழுதும் ஆற்றல் பெற்றிருந்தார். இவர் பெயரால் சில நூல்களும் வெளிவந்துள்ளன.

எம் எஸ் இராமசாமி செட்டியார் காரைக்குடி,
உரிமையாளர், ஓட்டல் ஒசியானிக், ராஜா அண்ணாமலைபுரம், சென்னை-28

இ. 1963. இவர் வி. ஆர் இராமச்சந்திர தீட்சிதர் அவர்களின் நூல்கள் வெளிவரப் பொருளுதவி செய்திருக்கிறார்.

மு பெரி. மு இராமசாமி
இராமச்சந்திரபுரம் 16-5-1935.13 அண்ணா நகர் காரைக்குடி-2
தமிழ்த்துறைத் தலைவர், சௌடேசுவரி கல்லூரி, சேலம்—6

நக்கீரரைப்பற்றி பி. எச். டி. பட்டத்திற்கு ஆய்வு மேற்கொண்டிருக்கிறார். நூல்கள் — தமிழ் இலக்கிய வரலாறு திருமுருகாற்றுப்படை (உரை)

இராம சுப்பிரமணியன் நெற்குப்பை 1939

கவிஞர். நூல்கள்—பக்திப் பாடல்கள், தமிழிசைக் கீதங்கள் முருகன் திருப்பாடல், ஜவகர் சரிதம், ராஜாஜி சரிதம்

சுப. இராமன் (கலை அன்பன்) இராமச்சந்திரபுரம் 28-2-1928

'தமிழ்நாடு' நாளிதழில் 16 ஆண்டுகள் திரைப்படப் பகுதி ஆசிரியராக இருந்தார். அமெரிக்க அரசாங்க அழைப்பின் பேரில் அந்த நாட்டுக்குச் சென்றிருந்தார். ஹாசனில் தமிழ்ச் சங்கம் தொடங்கி நடத்திவருகிறார்.

நூல்கள் : 1) செல்வம் கொழிக்கும் சீமை

2) ஐரோப்பாவில் ஐந்து நாடுகள்

3) அழகின் அடிமை (சிறு கதைகள்)

4) மனமென்னும் மாளிகை(நாவல்)

5) திரைப்படம் உருவாகிறது (இராஜ ராஜச் சோழன் வரலாறு திரைப்படமான வரலாறு)

6) சிதைந்த கனவு (நாவல்-மொழிபெயர்ப்பு)

7) கம்யூனிஸ் சீனாவில் சீனக்குடும்பம் (மொழி பெயர்ப்பு)

8) நடிகர் ஜெய்சங்கர்

இராமநாதன், கல்லல். ஏ.
3A,சிவன் கோவில் தெற்குத் தெரு, வடபழனி, சென்னை-26

பு. பெ: கல்லல் கவிஞர், இருங்கோவேள். பி: கல்லல் 27-2-1918. நூல்: விமலநாதன், கண்ணனின் கனவு கிருஷ்ண மாயா அறிஞன் யார்? கலைக்கள்வர் நாடக ஆசிரியர்; திரைப்படவசனகர்த்தா; ஆசிரியர்: 'வேங்கை'(மாதமிருமுறை)

அரு. இராமநாதன் 1924—1974

கண்டனூர் ஊரினர்

புனைபெயர்கள்—பூரம், ராமையா

நடத்திய இதழ்கள்—காதல், கலைமணி, மர்மக்கதை இவரே இந்த இதழ்களின் ஆசிரியராகவும் இருந்தார். காதல் மாத இதழ் 1947-ல் திருச்சியில் தொடங்கப் பெற்று 1952-ல் சென்னைக்கு மாற்றப்பட்டது. மர்மக்கதை 1952வரை வெளி வந்தது. கலைமணி, திரைப்பட இதழாகச் சென்னையிலிருந்து 1952முதல் வெளிவந்தது.

1952-இல் பிரேமா பிரசுரம் என்ற பதிப்பகத்தைத் தொடங்கினார். வள்ளலாக வாழ்ந்தார். எழுத்தாளர் என்று சொல்லிக்கொண்டு யார்வந்தாலும் பெயர் பெற்றவரோ இல்லையோ, காகிதக் கட்டோடு வந்தால் அதைப் பிரித்துக் கூடப் பார்க்காமல் தன்னால் இயன்ற பணத்தை உடனே கொடுத்தனுப்பி வந்தார்.

இவரைப் பிறவி எழுத்தாளர் என்று சொல்லலாம் ஏராளமான நூல்களை – இலக்கியங்களையும் கல்வெட்டுக் களையும்—படித்தார். பலதுறைகளில் எழுதினார். கலை மாமணி விருது இவருக்கு வழங்கப் பெற்றது.

பொன்மொழிகள் வரிசை என்று அவ்வையார், புத்தர் சங்கரர், மகாத்மா காந்தி, பாரதியார், இக்பால், அதிவீரராம பாண்டியன் ஆகிய பெரியோர்களின் கருத்துக்களையும் விவேகசிந்தாமணி, பைபிள், திருக்குரான், பஞ்சதந்திரம் ஆகிய நூல்களிலிருந்து தேர்ந்தெடுத்த பகுதிகளையும் கையடக்க நூல்களாக வெளியிட்டார். 63-வர் கதைகள், மதனகாமராஜன் கதைகள், மரியாதை ராமன் கதைகள், சித்தர்பாடல்கள், பன்னிரு ஆழ்வார் பாடல்களுக்கு இவர் வெளியிட்ட பதிப்புக் கள் குறிப்பிடத்தக்கவை.

இவர் எழுதிய நூல்கள்:

சிவப்பு ரோஜா, கருப்பு திராட்சை, அம்பிகாபதி, கதா நாயகி, பழையனூர் நீலி (சிறுகதைகள்), முதல் முத்தம் (காதல் கதை), வீரபாண்டியன் மனைவி, அசோகன் காதலி, நாயனம் சவுந்தர வடிவு (குறுநாவல்), குண்டு மல்லிகை (தொடர்கதை), பிளேட்டோவின் சிந்தனைகள் (அரசியல்), ராஜ ராஜ சோழன், வானவில் (நாடகங்கள்)

இவருடைய மூத்த மகன் திரு. இராம. கண்ணப்பன் 'காதல்' இதழின் ஆசிரியராகவும் பிரேமரதினம் (மாதம் ஒரு நாவல்) வெளியிடுபவராகவும் உள்ளார். இராம அருணாசலமும் இராம ரவியும் பிரேமா பிரசுர நிர்வாகிகளாக உள்ளனர்.

ஆ. வ. இராமநாதன் எம். ஏ' வேகுப்பட்டி 23-7-1917.

1943முதல் 1950வரை மேலைச் சிவபுரி கணேசர் செந் தமிழ்க் கல்லூரியின் முதல்வர். நூல்—தமிழர் செல்வம்.

இராம. இராமநாதன் எம். ஏ.

அரிமளம் ஊரினர். வானொலி நாடகங்களில் பங்கு கொண்டு வருகிறார் பல்லாண்டுகளாக காரைக்குடி அழகப்பர் கல்லூரியில் தமிழாசிரியராக உள்ளார்.

வீர· இராமநாதன், எம். எஸ்சி., பி. எச். டி. (லண்டன்),
புதுவயல்

இவர் பல பல்கலைக் கழகங்களில் எம். எஸ். சி. பட்டம் பெற்றவர். காரைக்குடியில் உள்ள மத்திய மின்சார ரசாயன ஆராய்ச்சி நிலையத்தில் பணியாற்றியவர். விஞ்ஞானக் கட்டுரைகள் பலவற்றைத் தமிழில் தந்திருக்கிறார். மதுரை தியாகராசர் பொறியியல் கல்லூரியில் பேராசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர்.

பாலகவி இராமநாதன் செட்டியார்

இவர் கோனாபட்டில் பிறந்தவர். தேவகோட்டையில் வயிநாகரம் குடும்பத்துக்குச் சுவீகாரம் செய்யப் பெற்றார். "செட்டிநாடு" இதழின் ஆசிரியராக இருந்திருக்கிறார். இளம் வயதிலேயே கவிபாடும் ஆற்றலை இவர் பெற்றார். அழுத்த மான புலமையும், ஆழ்ந்த பயிற்சியும், பிறர்க்கு விளக்கிக்கூறும் ஆற்றலும் இவரிடம் மிகுதியாக உண்டு. இவர் தருமபுர ஆதீனப் புலவராகவும் இருந்து வருகிறார். இவருடைய செஞ்சொற் கவிதைகள் படித்து இன்புறத்தக்கன. இவரது முயற்சியால் சேக்கிழார் விழா பல ஆண்டுகளாகத் தேவகோட்டையில் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

வி· கரு· இராமநாதன், பி. 1934. சிறுகூடற்பட்டி.

பொற்கொடி, சந்தனத்தேவன், புதையல் முதலிய பல நூல்களை எழுதியிருக்கிறார். 'தேன் துளி' என்ற பத்திரிகையை நடத்தியிருக்கிறார். பல சிறு கதைகளையும் எழுதியிருக்கிறார்.

இராம. இராமநாதன்

தெ. பெ. சு. இல்லம், கோனாபட்டு 30-4-1939
2 நெடுஞ்செழியன் தெரு விஜயலெட்சுமிபுரம் அம்பத்தூர்
சென்னை—53

சர் ஏ. இராமசாமி முதலியார் மேனிலைப்பள்ளித் தமிழாசிரியர். நூல்கள்—பிறந்த நாள் பரிசு, பிறந்த மண் (கதைகள்) நல்வாழ்வுக் கட்டுரைகள், கட்டுரை மலர்கள், பொதுக்கட்டுரைப் பூங்கா, தேன்கூடு (கவிதை)

கவியரங்கங்கள் பட்டிமன்றங்களில் பங்கேற்றுவருகிறார்.

அ. இராமநாதன் வலையபட்டி 15-1-1930

பாட்டனார் இராமநாதன் செட்டியார் ஒரு கவிஞர் அந்தத் தொடர்பும் வள்ளுவர் பண்ணை பழநியப்பனின் உறவும் இவரைப் பதிப்பகத்துறைக்கு ஈர்த்தன. திருமகள் நிலையத்தை 1979-இல் தொடங்கி, சென்னையில் நடத்தி வருகிறார்.

வித்துவான் அரு. இராமலிங்கம் வேந்தன்பட்டி 11-12-1926

கீழைச்சிவற்பட்டி மீ. சு. மேனிலைப் பள்ளியில் 1950 முதல் ஆசிரியர். நூல்கள்—திருக்குறளில் கயமை, நாலடி காட்டும் நன்னெறி, பட்டினத்தார்.

புலவர் சோம இராமலிங்கம், கண்டனூர்
பி. கீழைச்சிவற்பட்டி 3-4-1940

கண்டனூர் உயர்நிலைப்பள்ளியில் முதன்மைத் தமிழாசிரியர். தனிப்பாடல்கள் சிறுகவிதைகள் எழுதியுள்ளார். இலக்கிய நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறார்.

சு. இராமானுசன் எம் ஏ. (தங்கப் பதக்கம்)
ஆ. தெற்கூர் 17 – 10 – 1947

விசாலாட்சி மேல் நிலைப் பள்ளித் தமிழாசிரியர். சில கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

ஆர். இராமச்சந்திரன்

அரளிக்கோட்டை (வழி) திருக்கோட்டியூர்.

ஏசியன் டிராவல்ஸ் நிறுவனத்தைத்தொடங்கியவர். தமிழ் ஆர்வம் மிக்கவர். தமிழ்நாடு பயணக் கட்டுரைகள் என்ற நூலை ஏ. கே. செட்டியார் தொகுக்கக் காரணமாக இருந்தவர்.

இராமச்சந்திர நாயுடு

விரையாச்சிலை ஊரினர். காலம்– 19 – ஆம் நூ. இறுதி நூல்: விரசையம் பதிச் சதகம்.

இராகவன் முத்து

கல்லல் சொக்கநாதபுரம் 15 - 1 - 1950
13/14 கொட்ட மடக்கியார் தெரு, காரைக்குடி — 1

பேங்க் ஆப் இந்தியாவில் பணி புரிகிறார். கவியரங்கம் பட்டி மன்றம், வழக்காடு மன்றங்களில் கலந்து கொண்டு வருகிறார். சமயச் சார்பான தொடர் சொற் பொழிவுகள் நிகழ்த்தி வருகிறார். சிவநெறிக் கவிஞர். கற்பக விநாயகர் வெண்பா அந்தாதி, திருமகள் மாலை முதலிய பல நூல்களை யாத்துள்ளார்.

சு. இராஜகோபால் எம். ஏ, (வரலாறு)
பெ. மு. சுப. இல்லம், ப. சு ப. வீதி ஆத்தங்குடி பி.5-3-1950

கல்வெட்டாய்வாளர், தொல் பொருள் ஆய்வுத்துறை, மதுரை. தொல்பொருள் தொடர்பான சிறந்த ஆய்வுக்கட்டுரை களை அரிதின் முயன்று எழுதியுள்ளார். நூல் — திருவையாறு.

டாக்டர் சோம இலக்குமணன் மதகுபட்டி 15 - 8 - 1919

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இரசாயனப் பொறியியல் பேராசிரியராக இருந்து ஓய்வுபெற்று அமெரிக்கா வில் பேராசிரியராக இருக்கிறார். கலைக்களஞ்சியத்தில் கட்டுரைகள் பலவற்றையும் லண்டனில் லக்கி என்ற பயண நூலையும் இவர் எழுதியிருக்கிறார். (ப. 296)

லெ. இலக்குமணன் பள்ளத்தூர் 1092

பல்லாண்டுகள் இந்தியாவிலும் வெளி நாடுகளிலும் இந்தியன் ஓவர்சீஸ் வங்கியின் மேலாளராக இருந்தவர். இலக்கிய அறிவும் இசையில் ஈடுபாடும் மிக்கவர். இவர் தூண்டிய விளக்கே கோதண்டபாணி பிள்ளையின் 'பழந்தமிழ் இசை' என்னும் நூல்.

தமிழின் சிறப்பை தாய்லந்து அறிஞர் சிலர்க்கு இவர் எடுத்துரைத்திருக்கிறார்.

அரு. இலக்குமணன் எம். ஏ. (பூகோளம்), எம்.ஏ (இந்தியக் கலையும் சிற்பமும்—காசி இந்து பல்கலைக்கழகம்,) தேவ கோட்டை 24-10-1929

பழனி அருள்மிகு பழனியாண்டவர் இந்தியப்பண்பாட்டுக் கல்லூரியில் பணியாற்றிய பிறகு பல்லாண்டுகள் பூம்புகார்க்

கல்லூரியில் முதல்வராகஇருந்தார். 1982முதல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பதிவாளராக இருக்கிறார்.

நடனத்தைப் பற்றியும் சமயத் தொடர்பாகவும் பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

நூல்—அப்பர் வாழ்வும் வாக்கும்

டாக்டர் பழ. இலக்குமணன் பி. எச் டி; (வேளாண்மை)
விராமதி

கோவை தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகத்துப் பேராசிரியர். நூற்புழுக்கள் பற்றிய கலைச் சொற்களை உருவாக்கித் தொகுத்திருக்கிறார்.

பெ. இலக்குமணன் *B. A, B. Sc, B. T* பள்ளத்தூர் 21-9-1930
இராசேந்திர இல்லம், 1 கந்தசாமி செட்டியார் தெரு,
திருப்பூர். 638604.

கட்டுரை, கவிதைகள் எழுதுகிறார். வானொலியில் உரைகள் வழங்கியுள்ளார்.

சுப. இளங்கோவன் கல்லுப்பட்டி 18 – 1—1935

கணக்கர், ஏ வி எம் நிறுவனம், மயிலாப்பூர்

புனைபெயர்—மேலை, இந்திரா

'பா'பாடும் திறம் மிக்கவர். டாக்டர் வ. சுப. மா, வின் மாணாக்கர். பாவேந்தர் பாரதிதாசனுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பைப் பெற்றவர். 'பொன்னி'--யால் இலக்கிய உலகுக்கு அறிமுகமான கவிஞர். கவியரங்குகளில் பங்கேற்று வருகிறார்.

நூல்கள்--மலரும் கவிதை, செட்டிநாட்டரசர் மெய்க் கீர்த்திமாலை.

முத்தையா உடையப்பன் (செந்தில்) பி. காம்
தேவகோட்டை 15-3-1937

1958-இல் பாரத ஸ்டேட் பாங்கில் சேர்ந்தார். இவருடைய தமிழ்-ஆங்கிலம், ஆங்கிலம் - தமிழ் மொழி பெயர்ப்புத்திறன்களை ஒரு கூட்டத்தில் அறிய நேர்ந்த,

சென்னை வட்டாரப் பொது மேலாளர், இவரை சென்னை மண்டல ஆட்சி மொழித்துறைத் தலைமை அலுவலராக நியமித்தார்.

1978 முதல் தமிழில் கவிதைகள் எழுதி வருகிறார். இவரை வங்கியில் சேர்த்த ராஜா சர் முத்தையா செட்டியாரின் பிறந்த நாளில் இவருடைய முதல் கவிதை பிறந்தது, ஆங்கில மொழியிலும் இவர் ஒரு கவிஞர்.

'கவிதை உறவு' என்ற அமைப்பை உருவாக்கிய மூவருள் ஒருவர். நடப்புப் பிரச்சினைகளைப் பற்றி மரபுக் கவிதையாகவோ புதுக்கவிதையாகவோ பாடுபவர்களுக்கு 'கவிதை உறவு' வாய்ப்பு நல்குகிறது.

பாரத ஸ்டேட் பாங்கின் கலைப்பிரிவின் அமைப்பாளராகவும், இலக்கியப் பிரிவின் பெரும்பங்கு கொள்பவராகவும் உள்ளார்.

"வங்கியியல் கலைச் சொற்களஞ்சியம்" என்ற தலைப்பில் 15000 ஆங்கிலச் சொற்களுக்குத் தமிழாக்கம் செய்யப் பெற்று, பாரத ஸ்டேட் பாங்கு வெளியிட்டிருக்கிறது. இதை உருவாக்கியதில், கவிஞர் உடையப்பனுக்குப் பெரும் பங்கு உரியது. வங்கி அலுவல் நேரத்தில் பஞ்சாபியரை தமிழ் மொழியைக் கற்கச் செய்த பெருமை இவரைச் சேரும்.

முகவரி: *Regional Secretary, S.B.I Officers' Association P. B No 259 Madras—1*

**திருமதி ஏகம்மை சுப்பிரமணியன் எம். ஏ. (ஆங்கிலம்) மகிபாலன்பட்டி, பி. 9—11—1956**

இவர் கணவர், பண்டிதமணியின் பேரன் ஆவார். திருமதி ஏகம்மை தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகர முதலி திட்ட இயக்கத்தில் பதிப்பாண்மை எழுத்துறவாளராகப் பணியாற்றி வருகிறார்.

**இராம கண்ணப்பன் சிறு கூடற்பட்டி 11—1—1937 ஏ. வி. 46. 5— ஆவது தெரு 1 - பகுதி, கே. கே. நகர், சென்னை 78.**

கண்ணதாசன் மாத இதழில் 1969 முதல் 1977 வரை இணை ஆசிரியர் கண்ணதாசனுடைய உதவியாளராக 25 ஆண்டுகள் பணியாற்றி அவருடைய நூல்கள் அனைத்தையும் தொகுத்தவர்.

நூல்கள் — நீலாம்பிகை (நாவல்), தாழம்பூ (சிறுகதைகள்) கவியரசர் கண்ணதாசன் (வரலாறு) பிணி தீர்க்கும் கீரைகள் (கட்டுரைகள்)

ஏ. எல். எஸ். கண்ணப்பன்

திரைப்படத் துறையில் புகழ்பெற்ற சிறுகூடற்பட்டி ஏ. எல். சீனிவாசன் மகன். கவிதைஎழுதக்கூடியவர். சென்னைத் தொலைக் காட்சியின் சிறப்பு நிகழ்ச்சிகளில் இவருடைய இனிய தமிழைச் செவிமடுத்து இன்புறலாம்.

சே. கண்ணப்பன் *M. A (English) M. A (History) M. Phil.*
நடராசபுரம் 1—3—1952

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் அஞ்சல் வழிக் கல்வித்துறையில் ஆங்கில மொழி விரிவுரையாளர்.

தமிழிலும் ஆங்கிலத்திலும் குழந்தை இலக்கியம் என்ற ஒப்பியல் ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளார். ஷேக்ஸ்பியரின் 14 வரிப் பாடல்களைத் தமிழாக்கி, திருச்சி வானொலி வாயிலாக இலக்கிய அறிமுகம் செய்திருக்கிறார்.

மா. கண்ணப்பன் *M. A. B. T*
முத்துவிலாஸ், நியூ டவுன், காரைக்குடி பி. 25 - 5 - 1938

1964 முதல் அழகப்பர் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரிப் பணி. இப்போது தமிழ்த்துறைத் தலைவர்.

செட்டி நாட்டு வாழ்க்கையையும் பண்பாட்டையும் சித்திரிக்கும் குட்டி, வேணும், தெண்டாயுதபாணி துணை என்ற நாடகங்களை அனைவரும் சுவைக்கும் வண்ணம் நடத்திப் புகழ் பெற்றவர். அவை நூலாகவும் வெளிவந்துள. பிற நூல்கள் — தமிழிசைப் பாமாலை, மழலை மலர்கள், கண்ணப்பன் கவிதைகள், மேடை ஒடை, கவிதையும் கற்பித்தலும், மழலை மேடை, கவிதைக் கதம்பம், வெள்ளைப் பணியாரம் (சிறு கதை)

இவர் கலந்து கொண்டிருக்கும் பட்டிமன்றங்கள், கவியரங்கங்கள், இசைக் கதை நிகழ்ச்சிகள் ஓராயிரத்திற்கு மேற்பட்டவை.

வடு. கண்ணன் பி. ஏ.

22, 2-ஆம் நம்பர் ரோடு, வலையப்பட்டி பி. 16-11-1961 பட்டிமன்றம், வானொலி நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டு வருகிறார்.

கண்மணி சுப்பு

கவிஞர் கண்ணதாசன் மகள். திரைப்படங்களுக்கு வசனமும் பாடல்களும் எழுதி வருகிறார்.

அழ. கருப்பையா (கானா ரூனா)
கிழைச்சிவற்பட்டி 20—8—1950

நகர மணம் என்ற இதழை நடத்தி வருகிறார்.

முகவரி ; அழகப்பா முகமை, 195 காந்தி சாலை, மன்னார்குடி 614001

கரு. கருப்பையா (தேவிப் பிரியன்)

6/22 மெயின்ரோடு கண்டரமாணிக்கம், பி. 29—5—1964 பல பரிசுகள் பெற்றகவிஞர். 'புதுசு' (கையெழுத்து மாத இதழ்) ஆசிரியர். நூல்கள்: வரலாற்று நாயகன் (புரட்சித் தலைவர் வரலாறு) இளைய பூக்கள் (கவிதை)

கதிரேசன் செட்டியார், ராயவரம்

இவர் 1900 இல் மொரீசியஸ் தீவுக்குப் பாய்மரக்கப்பலில் சென்றவர். வட்டிக் கணிதம், கதிரேசன் பெருக்கல் வாய்ப் பாடு, கதிரேசன் எண்சுவடி என்னும் நூல்களை இயற்றியவர்.

ராம சி. மெ. கதிரேசன், தேவகோட்டை

"தனவணிகர் தன்மை" என்ற நூலின் ஆசிரியர். இலங்கை வானொலியில் சொற்பொழிவுகள் செய்தவர்.

பழ. கருப்பையா ஆறு. ஆ. ராம.வீதி காரைக்குடி.

சனதாக் கட்சியின் தமிழ்நாட்டுச் செயலர் அரசியல், இலக்கிய, சமூக மேடைகளில் நாளும் முழங்கும் கவர்ச்சியான பேச்சாளர். பல இதழ்களில் கட்டுரைகள் எழுதும் இனிய எழுத்தாளர்.

மா. கருப்பையா, கண்டவராயன்பட்டி

இவர் கல்கத்தாவில் வாணிபத்தில் ஈடுபட்டிருக்கிறார். ஹௌரா திருவள்ளுவர் கலை மன்றத்தின் தலைவராக இருந்திருக்கிறார்.

சே. கனகசபை பி, ஏ., கண்டவராயன்பட்டி பி. 29-4-1934

மதுரை தியாகராசர் கல்லூரி கவிதைத் தேர்வுகளில் கவி பாடிப் பரிசு பெற்றவர். சொற்சுவையும் பொருட்சுவையும் பொருந்திய பல பாடல்களை இயற்றி, 'கவிதைக்குமரி' என்னும் நூலாக வெளியிட்டிருக்கிறார்.

கலைமகள் இராமநாதன் (தேவகோட்டை)
உரிமையாளர், ராசி பப்ளிசிட்டிங், கோயம்புத்தூர்.

இலக்கியச் சுவைஞர். அச்சு,பதிப்புக் கலைகளின் நுட்பம் அறிந்தவர். கோவைக் கம்பன் கழகத்தின் பணிகளில் பெரிதும் ஈடுபாடு உடையவர்.

சங்கீத பூஷணம் கந்ததாசன் இராமநாதன்
57 ஷண்முகபுரம் பிரிவு, திருவொற்றியூர், சென்னை-19

சொந்த ஊரான புதுவயலில் சங்கீத திலகம் எஸ்.பி வீரப்பா அவர்களிடமும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலும் இசை பயின்றவர். இசைக் கலைஞராகச் சிறந்து விளங்குகிறார்.

நூல்-கந்த கானாமுதம்

தோழர் காசிநாதன் (கண்டவராயன்பட்டி, 1912)

சுயமரியாதை இயக்கத்தின் சிறந்த பேச்சாளர். மணப்பாறைத் தமிழ் மன்றத்தின் பொறுப்பாளர்.

காந்திதாசன்

இவர் பிரான்மலை ஊரினர்; பல ஆண்டுகள் பர்மாவில் டாங்கோவுக்கு அருகே ஏணி என்ற ஊரில் வாழ்ந்து வந்தார்.

1931 முதல் 23-ஆண்டுகள் இவர் பிரான்மலையில் பாரி வள்ளல் விழா நடத்தியுள்ளார். இவரது கவிதைகளைப் பர்மாவிலிருந்து வெளிவரும் தமிழ் இதழ்களில் காணலாம்.

டி· குமரப்பன் வேந்தன் பட்டி பி. 17-12-1930

தாலாட்டுப் பாடல்களையும் பிறவகைப் பாடல்களையும் இயற்றி வருகிறார்.

கொத்த மங்கலம் சுப்பு

இவருடைய இயற்பெயர் எஸ். எம். சுப்பிரமணியம். மூன்று தலை முறையாகச் செட்டிநாட்டில் இருந்து வரும் ஒரு குடும்பத்தில் இவர்23-10-1910 இல் பிறந்தார். காரைக்குடியில் கல்வி பயின்றார். கொத்தமங்கலத்தில் திருமணம் செய்து கொண்டார். 1972-இல் காலமானார்.

இவர் ''குமரன்'', ''ஊழியன்'' இதழ்களில் பணியாற்றியவர். ''காந்தி மகான் கதை'', ''மஞ்சுவிரட்டு'', ''நாடக உலகம்'' என்ற நூல்களை இயற்றியவர். கிராமியப் பாடல்களை முதல் முதலில் இக்காலத்துக்கேற்ப எழுதியவர் இவரே. இவரது நூல்களைப் புதுமைப் பதிப்பகமும், சக்தி காரியாலயமும் வெளியிட்டுள்ளன. பாரதியார் கதை, நாட்டுப் பாடல்கள் கம்பராமாயணச் சிந்து என்ற நூல்களை இவர் எழுதி முடித்திருக்கிறார். இவர் எழுதிய 150 நாடகங்கள் வானொலி நிலையங்களால் பயன்படுத்தப் பெற்றுள. ஆனந்தவிகடனில் இவருடைய கட்டுரைகள், தொடர்கதைகள் பாடல்கள் வெளிவந்திருக்கின்றன. ''ஔவையார்'' படத்தில் கதைவசனம் எழுதியவர் இவரே. ஜெமினிபடங்கள் பலவற்றில் வசனம் பாடல்கள் ஆகியவற்றில் இவர் உதவிபுரிந்திருக்கிறார்.

நா· அ· சண்முகம் செட்டியார் புதுவயல்

இவர் அளகை அஷ்டப் பிரபந்தம் என்ற பெயரில் சித்தி விநாயகர் மாலை, புதுவயல் கைலாச விநாயகர் அந்தாதி பழனியாண்டவர் மாலை, கம்பை நான்மணிமாலை, கம்பை முருகன் திருப்புகழ் பாடி, நூல் வெளியிட்டுள்ளார். (1935)

குங்கிலியம் பழ. சண்முகனார் (வடலூர்)
இராமச்சந்திரபுரம் 25-5-1915

அருளாளர். தாமே முயன்று நல்ல தமிழ் கற்றவர். பலவகைச் செய்யுள்களும் இயற்றவல்ல கவிஞர்.

இவர்தம் சமயத்தொண்டின் பயனாகச் சன்மார்க்க இதழ்களில் வெளிவந்த கட்டுரைகளையும் வானொலி உரைகளையும் "அருட்பிரகாச வள்ளலார்" என்ற பெயரில் மணிவாசகர் பதிப்பகத்தின் வழி இவர் மகன் பேராசிரியர் மெய்யப்பன் நூலாக வெளியிட்டிருக்கிறார்.

சிறந்த சிந்தனையாளர் என உலகம் போற்றும் ஜே. கிருஷ்ணமூர்த்தி படைத்த ஆங்கிலச் சிறுநூல் ஒன்றை 'தியானம்' என்ற பெயரில் தமிழாக்கியிருக்கிறார்.

எம். எஸ். பி. சண்முகம், எம். ஏ கொத்தமங்கலம் 18-7-1921

சித்தூர்-கொச்சியிலிருந்து 'சுயராஜ்யம்' இதழை நடத்தினார். துணை ஆசிரியர் 'தமிழ் நாடு' 1952-1959

துணை ஆசிரியர், வேளாண்மை அமைச்சரவை, இந்திய அரசு, புதுடில்லி. (1960-1983)

புனைபெயர்: தில்லைச் செல்வன்

வெளிவந்த நூல்கள்: சிதம்பரம் கும்பாபிடேக மலர், குன்றக்குடி அடிகளார் வரலாறு, இமயத்தின் எல்லையில்.

பனை. சண்முகம், பி. நெற்குப்பை

பல கவிதைகள் எழுதியிருக்கிறார். வெண்பாப் போட்டிகளில் கலந்து கொண்டிருக்கிறார். மதுரை, தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் செயலாளர். (1959-60)

நாக. சண்முகம், வேகுப்பட்டி

இவர் தமிழ்ப் புலவர் பட்டம் பெற்றவர். பல நாடகங்களை எழுதியுள்ளார். மேலைச் சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் 1953 முதல் 1958 வரை ஆசிரியர். திரைப் படங்களுக்குக் கதை வசனம் எழுதியிருக்கிறார். "அன்புக்கயிறு" என்னும் இவரது நாடகம் நூலாகவும் "தியாகவல்லி" என்ற வரலாற்றுத் தொடர்கதை தமிழ்நேசன் இதழிலும் வெளி வந்துள்ளன. நூல்கள். பழனிமலைக்காவடி 15 தலைவர்கள் 15 கதைகள் முதலிய 30. புனைபெயர் 'நாகன்'.

சக்தி நாச்சியப்பன் (ஆத்தங்குடி 1921)

4, சண்முக நிலையம், அம்மன் கோவில் தெரு. வடபழனி சென்னை.

நேத்தாஜியின் இந்திய தேசிய அரசு வெளியீடான ஜெய் ஹிந்த் நாளிதழில் பணியாற்றியவர்.

லெ சாத்தப்பன் பி. எஸ்சி. கண்டவராயன்பட்டி 27-5-1943

எழில்மணி, எல்லெஸ்

நூல்—நினைக்கிறேன் நெஞ்சு வெடிக்கிறது.

கோவை தமிழ் எழுத்தாளர் மன்றத்தில் பல்லாண்டு களாகப் பல பொறுப்புக்களை வகித்திருக்கிறார்.

சாமி. பழனியப்பன் பொன் புதுப்பட்டி 25-1-1926

'தமிழரசு' செய்தி மக்கள் தொடர்புத்துறை, தமிழக அரசு சென்னை-9

வீரகேசரி (கொழும்பு), சிவாஜி, தென்றல் இதழ்களில் பணியாற்றியபின் வாரச் செய்தி, தமிழகம், பனைச் செல்வம் ஆகியவற்றில் ஆசிரியராக இருந்தார்.

இவரது கவிதைகள் சிலவற்றை சாகித்திய அகாடமி மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறது.

கவிதை நூல்கள்—மலரும் தமிழகம், புகழ்க்கன்னி, சிரிக்கும் வையம், மலர்கள், பாரதியும் பாரதிதாசனும்.

பிற நூல்கள்—வள்ளுவர் தந்த காதல் இன்பம், பெர்னார்டு ஷா, குழந்தை இன்பம்.

கண. சிற்சபேசன் எம். ஏ

24, சேக்கப்ப செட்டியார் தெரு தேவகோட்டை 15 - 4 -1934 மேலாளர், சக்தி பைனான்ஸ், சென்னை -17.

மதுரை தியாகராசர் கல்லூரியிலும் சரசுவதிநாராயணன் கல்லூரியிலும், 1958 முதல் 1975 வரை தமிழ்ப் பேராசிரியராக இருந்தார். சிறந்த பேச்சாளர். பட்டிமன்றங்களில் பங்கு

பெற்று வருகிறார். தமிழின் ஆழத்தையும் அகலத்தையும் நன்கு அறிந்தவர்.

நூல்: கண் கொடுத்தவர். (சிறுகதைத் தொகுப்பு), பூம்புகார் முதல் இமயம் வரை (சிலம்பின் திறனாய்வு)

திருவடிப்பதிப்பகம் என்ற நிறுவனம் அமைத்து ஈராண்டு களில் 12 நூல்களை வெளியிட்டார்.

வெ. ஆ. தி. சிதம்பரம் செட்டியார் தேவகோட்டை

தமிழும் வடமொழியும் அறிந்தவர், தென் ஆர்க்காடு மாவட்டத்தில் வாழ்ந்து 1930 அளவில் பல செய்யுள் நூல்களும் பிள்ளைத் தமிழ் நூல்களும் இயற்றியுள்ளார்.

சிவல்புரி சிங்காரம் கீழைச் சிவற்பட்டி 17-6-1951

கவிஞர். பல போட்டிகளில் பரிசு பெற்றிருக்கிறார். மேடை நாடகங்கள் பலவற்றை எழுதியிருக்கிறார். சோதிடக் கட்டுரைகள் பலவற்றைப் படைத்திருக்கிறார்.

நூல்: கலங்காத கண்ட விநாயகர் கவசம், வேலங்குடி கருப்பண்ணசாமி கவசம்.

பல மலர்களைத் தொகுத்துள்ளார். கதை, ஆன்மிகக் கட்டுரைகள், மருந்து மாந்திரீக மெஸ்மரிசக் கட்டுரைகளும் வரைந்திருக்கிறார்.

சிறுவயல் ஜெயமணி
69, அருணாசலம் தெரு, கிழக்கு, ஆர். எஸ். புரம், கோயம்புத்தூர்-2

ஏராளமான கவிதைகள் புனைந்திருக்கிறார்.

டாக்டர் லெ. சிவராமன் FRCS (England)
நடராசபுரம் 23-10-1925

தஞ்சை மருத்துவக்கல்லூரியில் அறுவை சிகிச்சைப் பேராசிரியர்.

கொதி அழற்சிற்றம் என்ற கட்டுரை சிலப்பதிகார ஆய்வு. கண்ணகி ஏன் தன் இடது முலையை இழந்தாள் என்பதை மருத்துவக் கண்ணோட்டத்தில் விளக்குகிறார்.

அறுவை சிகிச்சை பற்றி தமிழ்ப்பல்கலைக் கழகத்துக்கு நூல் எழுதிக் கொடுத்திருக்கிறார்.

முகவரி: சிவராம் மருத்துவ ஆதுரகம், செல்வம் நகர் தஞ்சாவூர் 613007

*மெ. நா. சித. சிதம்பரம் செட்டியார், காரைக்குடி*

நவயுகப் பிரசுராலயத்தின் நிருவாக இயக்குநர் (1939—1942) 'மணிக்கொடி' பிரசுரம் தொடர்ந்து நடைபெறப் பல்லாண்டுகள் பணம் உதவியவர். கம்பன் அடிப்பொடி சிறையிலிருந்தபோது கம்பன் விழாவை நடத்தியவர் (1943)

*பெரி. சிவனடியான் M.A, B.T.(சிந்தனைக் கவிஞர்)*
*புதுவயல் 7—9—1932*

விழுப்புரம் அரசுக்கலைக் கல்லூரியில் துணைப் பேராசிரியர்.

வானொலிக் கவியரங்கங்கள் உள்பட தமிழகமெங்கும் நடைபெறும் கவியரங்கங்களிலும் பட்டிமன்றங்களிலும் கலந்து கொண்டு இனிமையான பாடல்களைப் பாடி மக்கள் உள்ளங்களை ஈர்த்து வருபவர். பாரதிதாசன் பரம்பரையில் வந்த கவிஞர் என்று கருதப்பெறுபவர்,

நூல்கள்: (1) வான்மதி (2) அவளுக்காக (3) அன்பு (4) முருகாஞ்சலி (5) முருகன் பாமாலை (6) கவியரங்கக் கவிதைகள்

*பி. ஆர். சீனிவாசன்*

இவர் திருவாடானைத் தாலுகா புல்லூரைச் சேர்ந்தவர். இந்திய அரசாங்கத்து கல்வெட்டு ஆராய்ச்சித் துறைத் தலைவராக மைசூரில் பணியாற்றி 1982 - இல் ஓய்வு பெற்றவர். இப்போது சென்னை அண்ணாநகரில் இருந்து வருகிறார். தமிழகத்திலுள்ள வரலாற்றுச் சிறப்புடைய இடங்களைப் பற்றி ஆராய்ச்சி நூல்களும் கட்டுரைகளும் ஆங்கிலத்தில் இயற்றியுள்ளார். 'நாம் வணங்கும் தெய்வங்கள்' என்ற தமிழ் நூலையும் எழுதியிருக்கிறார்.

சொ. சொ. மீ. சுந்தரம் எம். காம். (தேவகோட்டை 1943)

மதுரை சௌராஷ்டிரா கல்லூரி வணிக இயல் பேராசிரியர்.

இவர் கலந்து கொள்ளாத பட்டிமன்றமோ கவியரங்கமோ இல்லை எனலாம். அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலார் நடத்திய கவிதைப் போட்டியில் பொற்கிழி பெற்றவர். திருமந்திர வகுப்புக்களையும் நடத்தியிருக்கிறார்.

நூல்கள் : சிறு சிறு பக்தி நூல்கள், பண்டிதமணி பிள்ளைத் தமிழ்

வெற்றியூர் அரு. சுந்தரம் *M. A. (Tamil), B. Ed.*

புனை பெயர் எழிலன் பி. 9—10—44

தமிழாசிரியர், சிவகங்கை அரசர் மேனிலைப்பள்ளி

கவிஞர், சிறுகதை-கட்டுரைகள்-நாடகங்கள் எழுதியுள்ளார்.

நூல் : வளரும் உள்ளம் (குழந்தைப் பாடல் தொகுதி)
பதிப்பாசிரியர் : அருள்மிகு கண்ணுடைய நாயகி அம்மன் குடமுழுக்குமலர்.

எல். சுந்தரம் ஒக்கூர் 23—7—1938.

புனைபெயர் - எல்லெஸ், ஒக்கூரான். உதவி ஆசிரியர் தமிழ்நாடு நாளிதழ் (21 ஆண்டுகள்), திரைப்பட விமர்சகர். இப்போது உதவி ஆசிரியர் 'நகரத்தார் குரல்' 25 வடக்குச் சித்திரை வீதி மதுரை—1

கண. சுப்பையா *B. Com., Hons* நாச்சியாபுரம் 3—10—1934

தொழில் வளர்ச்சி பற்றி ஒரு நூலும் பொருளாதாரக் கட்டுரைகளும் ஒரு நாவலும் எழுதியிருக்கிறார். சென்னை மாநகரின் முன்னாள் உதவி ஷெரிப்.

நா. சுப்பிரமணியன் *M A, B O. L.*
கீழைச்சிவற்பட்டி 6—1—1949

துணைப் பேராசிரியர், இராமசாமி தமிழ்க் கல்லூரி காரைக்குடி. இலக்கியச் சொற்பொழிவாளர், வழக்காடு மன்ற நிகழ்ச்சிகளில் பேசுநர்.

அ. சுப்பிரமணியன் செட்டியார் (1874—1954)

விரையாச்சிலை ஊரினர். இவர் குடும்பத்திற்கு அம்பலச் செட்டியார் வீடு என்று பெயர்.

விரசை அடைக்கலங்காத்தார் அம்மன் மீது இரட்டை ஆசிரிய விருத்தங்களாக நூறுபாடல்களையும் மலையக்கோயில் முருகன்மீது காவடிச் சிந்து, கட்டளைக் கலித்துறை ஆகிய முப்பது பாடல்களையும் இயற்றியுள்ளார்.

சுபாஷ் சந்திர போஸ்

சிவகங்கை மன்னர் கல்லூரித் தமிழாசிரியர். சிறந்த பேச்சாளர். கவியரங்கம் ஏறும் கவிஞர்.

மெ. சி. உ. சுப. பழ சுப்பிரமணியன் செட்டியார்
சொக்கநாதபுரம்

இவரது முயற்சியாலும் பொருளுதவியாலும் காளமேகப் புலவர் பாடிய திருஆனைக்கா உலா போன்ற கிடைத்தற்கரிய பழந்தமிழ் நூல்கள் அச்சிடப்பெற்றன.

கும. சுப்பிரமணியன் எம். ஏ. பலவான்குடி

இவர், பலவகையான தமிழ்த் தொண்டுகளைச் செய்து வருபவர்களும், திரு அ.மு. சரவண முதலியார் போன்ற புலவர் பலரை ஆதரித்தவர்களும் ஆகிய பலவான்குடி குமரப்பச் செட்டியார் அவர்களின் மகனாவார்.

இவர் நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு என்னும் நூல் வெளிவருவதற்கான குறிப்புக்களைச் சேகரித்தவர்.

'மதுரமித்திரன்' ந. சுப்பிரமணியம், பி. 10-6-1910

இவர் கோனாபட்டில்பிறந்தவர்; இவருடைய தந்தையார் திருக்கோகர்ணம் நடேச ஐயர் ஆவார்.

தேசிய இயக்கத்தில் ஈடுபட்டதோடு மதுரமித்திரன் பத்திரிகையும் நடத்தியிருக்கிறார். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரிடம் கல்வி பயின்றிருக்கிறார். மதுரைத் தமிழபிவிருத்தி சங்கத்தைத் தொடங்கியவர்,

அண்ணல் சுப்பிரமணியனார்

இவர் புதுக்கோட்டையில் 1898ல் பிறந்தவர். 1954 முதல் புதுக்கோட்டையில் திருக்குறள் கழகம் தொடங்கிச் சிறப்பாக—ஆனால் ஆரவாரமின்றி நடத்தி இப்பகுதியில் இலக்கிய உணர்வை எழுப்பியிருக்கிறார். பயனுடைய வகுப்புக் களையும் பண்புடையாளர் சொற்பொழிவுகளையும் ஏற்பாடு செய்தும் தமிழ் அறிஞர் பலர் தம்மைச் சார்ந்து வந்தபோது அவர்களை ஆதரித்தும் பணிசெய்து வருகிறார். 1958ல் இவருடைய மணிவிழா சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது

சொக்கு சுப்பிரமணியன் எம் .ஏ. (தமிழ்)

கண்டனூர் 28-10-1935.

செய்தி விளம்பர அதிகாரி, இந்திய அரசு, மதுரை-2

நூல்கள்: 1 மணித்திரள் 2, திருமுருகாற்றுப்படை (பதிப்பு) 3. நமக்குத் தொழில் கவிதை 4. உதயகீதங்கள் 5. உள்வெளிப் பயணம் 6. திருச்சி சுவாமிகள் வரலாறு 7. எண்சுவையில் கண்ணதாசன். 10 ஆண்டுகள் டெல்லி வானொலியில் தமிழ்ச் செய்திப் பிரிவில் துணையாசிரியர். பல ஆண்டுகள் புதுவை யிலும் தமிழ்நாட்டிலும் செய்தி விளம்பர அலுவலர். "திட்டம்" இதழின் உதவி ஆசிரியர். கவியரங்குகளில் பங்கு.

கவிஞர், திறனாய்வாளர். நாடக ஆசிரியர். வண்ணங்கள் முதலிய மறுமலர்ச்சி எழுத்தியக்க ஏடுகளுடன் தொடர்பு கொண்டவர். உரிமைப் போராட்ட நூற்றாண்டு விழாக் கவிதைப் போட்டியில் பரிசு பெற்றவர்.

இவர் மனைவி சாந்தா சுப்பிரமணியன் கானாடு காத்தானில் 2-2-1939இல் பிறந்தவர். முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர். வெ. வீர. நா. அரு. நாகப்பா அவர்களின் மகள் இவர் புதுக் கவிதை திறனாய்வுத் துறையில் புதுவழி கண்டவர். 1973 முதல் புதுவையில் தொடங்கப்பெற்று இப்போது கல்லுப் பட்டி—சோழவந்தானிலிருந்து திங்கள் தோறும் வெளிவரும் வண்ணங்கள் என்ற இலக்கிய இதழின் தொடக்க காலம் முதல் ஆசிரியராக இருந்து வருபவர்.

**வி. ஆர். எம். செட்டியார், பி.ஏ. (வீரமுத்துக்கறுப்பன் செட்டியார், 5, புதுச்சந்தை வீதி. காரைக்குடி) பி.1904 இ 1969**

இவர் தமிழகத்தின் சிறந்த இலக்கிய விமர்சகராக விளங்கி, விமர்சனக் கலை பற்றித் திட்டமான கருத்துக்களுக்கு உருவம் கொடுத்து வந்தவர். இவருடைய ஆங்கிலக் கவிதைகள் இலண்டனில் வெளியிடப்பெற்றுப் பல பதிப்புக்கள் விற்பனையாகியுள்ளன. ஆங்கிலப் புலமையோடு அருந்தமிழ்ப் புலமையும்பெற்ற அறிஞராக விளங்கினார்.

கவியரசர் இரவீந்திரநாத் தாகூரோடு நேரில் பழகி செய்கோனில் 1929இல் அவரது சொற்பொழிவுகள் சிலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்தார். தாகூரின் கீதாஞ்சலி, வளர்மதி, காதல் கண்கள் முதலிய பல நூல்களை இவர் தமிழில் தந்திருக்கிறார்.

ஷெல்லி, ஆஸ்கார் ஒயில்டு ஆகியோர் நூல்களையும் இவர் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். "நான்குகவிமணிகள்" "கட்டுரைக் கரும்பு" "இலக்கிய விருந்து" என்னும் பல நூல்களையும் இவர் இயற்றி இருக்கிறார். இவர் முயற்சியால் 60 நூல்கள் வெளிவந்துள. ஸ்டார் பிரசுரத்தின் வாயிலாக இளம் எழுத்தாளர் பலரை ஊக்குவித்திருக்கிறார்.

**அ. செ. செல்லப்பன் (இளம்பாரி), பி. 1939, அரிமழம்**

கவரிமான், பாப்பாக் கதைகள், வான் விளக்கு, பிஞ்சு மனம் என்ற சிறுவர்க்கான நூல்களையும் பல சிறுகதைகள் கட்டுரைகள், 'குழந்தைப் பொம்மை' (வானொலி நாடகம்) எழுதியிருப்பவர்.

இவர் பாரி நிலையம் செல்லப்பரின் மகன்.

**செல்லகணபதி எம்.ஏ.**
**பி. அரிமழம் 10-2-1941 கண்டனூர்க்குச் சுவீகாரம்**

20 வெங்கட்டரமணா சாலை, ஆர். எஸ். புரம்,
கோயமுத்தூர்-2

நூல்கள்: சிறுவர்க்கு (1) வெள்ளை முயல் (2) காட்டில் பிறந்த நாள் (3) பூங்குளம் ராஜா (4) ஓநாய்ப் பையன் (5) பாட்டுப் பாடவா (6) வண்டுகளே உங்களைத்தான். பெரியவர்களுக்கு (1) மனக்கோவில் வாழும் உமையே (2) உறவைத் தேடும் ராகங்கள், சிறந்த கவிஞர்.

செல்வ கணபதி திறமை செந்தமிழை ஏற்றும்—கவியரசர்

புதுவயல் செல்லப்பன் (26-8-1927)
V.R. நாயுடு இல்லம் 24 புதுக்குடியிருப்பு பிருந்தாவனநகர் ஆதம்பாக்கம் சென்னை-88.

கவிதைத்துறையில் மிகுதியான ஈடுபாடு உடையவர்

நூல்கள்: வயலூர் முருகன் வெண்பா மாலை பிருந்தாவன் நகர் முருகன் பிள்ளைத் தமிழ், களியமுதம்.

அரிமழம் கரு செல்லமுத்து (4-6-1935)
அம்பாள்புரம் முதல்வீதி, புதுக்கோட்டை

சிறுகதை, நாடகம், கவிதை, கட்டுரை எழுதிவருகிறார்

செந்தில்வேலன்
218A தம்பு செட்டி தெரு சென்னை-1

மனோதத்துவக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

ஜெய்ஹிந்த் சேதுராமன்செட்டியார் கோனாபட்டு 1-2-1911

ஆசுகவி வரகவி அருட்கவி. நூல்கள்—எனது நினைவுகளும் நான் கண்ட முக்கிய தலைவர்களும்.

சே.சேவற்கொடியோன் சிங்கம்புணரி 14-11-1941

இவருடைய எழுத்து தீபம் இதழில் பல ஆண்டுகளாக வெளிவந்திருக்கிறது. பர்ண சாலை என்பது இவருடைய கவிதைத்தொகுதி. இலக்கியவிழாக்களில் பங்கேற்று வருகிறார்.

முகவரி: சவுத் இந்தியா கார்ப்பரேசன் ஏஜன்சீஸ் கோயம்புத்தூர்-18.

மு. சொக்கலிங்கம், பி. எஸ்ஸி., பி. எல்., (புனை பெயர்— முரசொலி அண்ணா) 1930-1968

பி. ஆ. தெற்கூர், இவர் தம் செல்வன் உதயகுமாரன் பிறந்த நாளில் குழந்தை என்னும் தொகுப்பு நூலை வெளியிட்டுள்ளார். சிறுவருக்காக 'சிங்கத்தின் கட்டில்' என்னும் நூலையும் அறிவியல் நூலாக 'சிங்கம்' என்ற நூலையும் எழுதியிருக்கிறார். மதுரைத் தமிழ் எழுத்தாளர் மன்றத்தின் செயலாளர் (1960)

கருமுத்து தி. சு. சொக்கலிங்கம் B.S. (Michigan) B S (Calif)

பி. 29-4-1943 திருப்பணிச் செல்வரான இவர், சைவசமய நூல்கள் திருமுறை நூல்கள் ஆகியவற்றைப் பதிப்பிப்பதிலும் ஆழமான சமய அறிவுடைய பழம் புலவர்களை ஆதரிப்பதிலும் சிறந்து விளங்குகிறார் இவருடைய உதவியால் 'கோயில்' என்னும் அரியதொகுப்பு நூலும் பிறவும் உருவாகியுள்ளன. மதுரையின் பெருமையைக் கூறும் கடம்பவன புராணத்தை மகாவித்துவான் டாக்டர் தண்டபாணி தேசிகர் அவர்களைக் கொண்டு பதிப்பிக்கச் செய்து தருமபுரஆதீனத்தின் வழியாக வெளியிட்டுள்ளார். சமயச் சார்பான விழாக்களில் பேசுநர்.

வித்துவான் சொர்ண காளீசுவரன்

காளையார் கோயில் ஊரினர் என்பது பெயரிலிருந்தே புலனாகும். திருவையாறு அரசர்கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர். திருவண்ணாமலை ஆதீனப்புலவர். ஏராளமான பட்டங்கள் இவருக்கு வழங்கப் பெற்றுள்ளன. சமயச் சொற்பொழிவுகளை நிகழ்த்தி வருகிறார். கோயில்கள், சமயம், தத்துவ நூல்கள் எழுதியிருக்கிறார். ஏட்டில் உள்ள பழைய பனுவல்கள் சில வற்றைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்துக்காக ஆய்வு செய்து பதிப்பித்துக் கொடுத்திருக்கிறார்.

அரு சோலையப்பன். பி. எஸ் சி (வேளாண்மை
தேவகோட்டை (6-9-1940).

2பி இராஜேஸ்வரி வேதாசலம் சாலை, கலைக் கல்லூரி யின் எதிரில், செங்கற்பட்டு. 603001.

நூல்கள்

1. படிப்பினைக் கதைகள் (சிறுவர் நூல்)
2. விந்தை மிகு வேளாண்மை
3. ஒரு தாய் மக்கள் (சிறு கதை தொகுப்பு)
4. பணம் தரும் காய்கறிகள்
5. தென்னை வளர்ப்பு
6. கரும்பின் கதை
7. அறிவுக்கு விருந்தாகும் 1000 நீதிகள் (அறிவு நூல்)
8. ஆனந்த வாழ்விற்கு 1000 வழிகள் (அறிவு நூல்)
9. இனியவை 200 (அறிவு நூல்)
10. பொன்மொழிப் புதையல் (அறிவு நூல்)

11. இறவைப் பயிருக்கு பயிர் பாதுகாப்பு
12. மானாவாரிப் பயிருக்கு பயிர் பாதுகாப்பு
13. கரும்பிற்கு பயிர் பாதுகாப்பு
14. மிதவைகள் (நாவல்).
15 முதுமொழிக் கதைகள் (சிறுவர் நூல்)
16. விவசாயக் களஞ்சியம்
17. இனியவை இருபது

உயிரியல் முறையில் கரும்புப் பூச்சிகளைக் கட்டுப்படுத்துதல் என்பது பற்றி 50 ஆராய்ச்சித் தாள்கள் ஆங்கிலத்திலும், தமிழிலும் (பல்வேறு நாட்டு இதழ்களிலும், கருத்தரங்கிலும்) வெளிவந்துள்ளன.

மதுராந்தகம் இலக்கிய வீதி சிறுகதைப் போட்டியில் 1979-ம் ஆண்டில் எனது 'ஏமாற்றங்கள்' என்ற சிறு கதை பரிசு பெற்றது.

பாரதத்திலேயே முதன் முதலாகக் கரும்பு பூச்சிகளை மருந்தடித்துக் கட்டுப்படுத்துவதைக் காட்டிலும், யாதொரு தீங்குமின்றி எதிரிப் பூச்சிகளை பெருமளவில் வளர்த்து வெளியிட்டுக் கட்டுப்படுத்தலாம் என்பதை செயல் வடிவாக்கிக் காட்டி உலக விஞ்ஞானிகளின் கவனத்தை ஈர்த்தவர்.

பல கவியரங்கங்களில் பங்கேற்றுவருகிறார். மதுராந்தகம் கூட்டுறவு சர்க்கரை ஆலை நடத்தும் 'மதுரக் கரும்பு' என்ற இதழுக்கு பொறுப்பாசிரியராய் இருந்திருக்கிறார்.

லெ. சோமசுந்தரம் எம். எஸ். சி (வேளாண்மை)
நெற்குப்பை 28-4-1961
சாஸ்திரிநகர் அ. நி. கட்டிடம் சென்னை-20

கவியரங்கங்களில் கலந்து கொள்கிறார். ஆங்கிலத்தில் போலத் தமிழிலும் பேச்சுப்போட்டிகளில் தங்கப் பதக்கங்கள் பெற்றுள்ளார். அடையாறு தமிழ்ச் சங்கப் பணிகளில் பங்கு பெற்றுவருகிறார். யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தில் சிறப்புரை ஆற்றியிருக்கிறார்.

லெ. சோமசுந்தரம் 21-11-1941
22 பொந்திலியார் சந்து தேவகோட்டை.

பெங்களூரில் பணி. 1973முதல் பக்திப்பாடல்கள் இயற்றி வருகிறார்.

காசி ஸ்ரீ கவிஞர் அரு சோமசுந்தரம் M. A, B. T.
புதுவயல் 14-8-1936. சுவீகாரம்-தேவகோட்டை

பாண்டிமாதேவி என்ற காவியம் எழுதி மீனாட்சி அம்மன் கோயிலாரின் பொற்கிழி பெற்றவர்.

கவிதை, கட்டுரை, நாடகம், இலக்கியத்திறனாய்வு, பயணநூல்கள் —60 எழுதியுள்ளார். இந்தியா முழுவதும் நடந்து சென்று தல யாத்திரை செய்தவர். ஐரோப்பிய நாடுகளில் சுற்றுப்பயணம் செய்திருக்கிறார். கதா காலட்சேபங்கள் நடத்தி வருகிறார்.

சாண்டோ லெ. சோமசுந்தரம் செட்டியார், கீழைச்சிவற்பட்டி

இவர் உடற்பயிற்சி பற்றிய நூல்களைத் தமிழில் எழுதியிருக்கிறார்.

நா. சோமசுந்தரம், சண்முகநாதபுரம்

நூல்கள்: மனிதன், இன்ஸ்பெக்டர், எதிர்பாராதது கொடிய தண்டனை.

புலவர்மணி சோமசுந்தரம் செட்டியார், புதுவயல்

சொல்வளம் நிறைந்த பாடல்கள் இயற்றும் திறனுடையார். சிலேடையாகப் பாடவும் பேசவும் வல்லார்.

அரு. அரு. சோமசுந்தரம் செட்டியார், (1862-1925)
தேவகோட்டை.

இவர் ஆறுமுக நாவலர் அவர்களின் மாணவரான சிவ ஸ்ரீ காசிவாசி செந்தில்நாத ஐயா அவர்களிடமும் தாமோதரம் பிள்ளை அவர்களிடமும் யாழ்ப்பாணத்தில், கல்விபயின்றவர். இவருக்குத் "தேவாரக் களஞ்சியம்" என்னும் பட்டத்தை திருவாவடுதுறை ஆதீனத்துத் தலைவர் அம்பலவாண தேசிகர் வழங்கியுள்ளார்.

அரு. சோமசுந்தரம் செட்டியார், 1900-48 காரைக்குடி

இவர் சொக்கலிங்க ஐயாவின் மாணவர்; சிறந்த சொற்பொழிவாளராக விளங்கினார்; இனிமையாகப் பாடினார். பெருங்கூட்டங்களைத் தம் வயப்படுத்தினார்.

நா. தர்மராஜன் M.A. சிவகங்கை 4-12-1935

கலை இலக்கிய மன்றங்களில் பெரும்பங்கு கொண்டவர். பேராசிரியர். எழுத்தாளர். மொழிபெயர்ப்பாளர். சில ஆண்டு களாக ரஷ்யாவில் மொழி பெயர்ப்புப் பணி செய்து வருகிறார்.

க. தியாகராசன் M.A.

கண்டரமாணிக்கம் 14-12-1943 பேராசிரியர் இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி. பட்டிமண்டபம், உரையரங்கங் களில் கலந்து கொள்ளுகிறார்.

சுப. திருஞானம் (சுபதி) வெற்றியூர் 13-9-1946
உதவியாளர் ஏஷியன் அச்சகம் சென்னை -14

கவிஞர். ஏராளமான இதழ்களில் இவருடைய படைப்புக் கள் வெளிவந்துள. கண்மணி, இலக்கியம் என்ற இதழ்களை நடத்தியிருக்கிறார்.

இராம திருஞானசம்பந்தம்.
நெற்குப்பை 23-5-1935

சென்னை இந்தியன் எக்ஸ்பிரஸ் இதழின் தலைமை நிருபர். தமிழைச் சிறப்புப் பாடமாக எடுத்துப் பயின்று பி. ஏ. பட்டம் பெற்ற 'தமிழ் நாடு' நாளிதழில் பணியாற்றிப் பத்திரிகைத் துறையில் புகுந்தவர்.

லெ. திருப்பதி (வலம்புரி எழிலன்) வலையபட்டி

மாவீரன் சிவாஜி, அணையா விளக்கு (நாடகங்கள்)

அழகிய திருமுகம், இன்ப வெள்ளம் (நாவல்கள்) எழிலன் கவிதைகள். குடமுழுக்கு மலர்ப் பதிப்பர்.

செ ராம. திருநாவுக்கரசு அரிமழம் 13-5-1949
*Manager Balagode Estate, Chaklaspur Hassan Dt.*

சிங்கப்பூர் அரசின் தலைமை அமைச்சராக இருந்தவரும் லீ குவான் இயூ-வின் செயலராக இருந்தவருமான காலஞ் சென்ற இராமசாமி செட்டியார் மகன்.

காரைக்குடி இராம பெரி அவர்களும் இவர் குடும்பத்தாரும் ஒரே கிட்டங்கியில் தொழில் செய்த தொடர்பால் சின்னஞ்சிறு வயதிலேயே திருநாவுக்கரசு தமிழ் ஆர்வலரானார். பள்ளியிலேயே தமிழ் அமைப்பு ஏற்படுத்திச் சொற்பொழிவுகள் செய்தார். இப்போது ஹாசன் தமிழ்ச் சங்கச் செயலர்.

ருத்ர துளசிதாஸ் (இளம்பாரதி) 2-7-1933

சிவகங்கை மன்னர் கல்லூரியில் இரசாயனப் பேராசிரியர். படைப்புக்கள்—கவிதை நூல்கள் மூன்று, நாவல் ஒன்று, தமிழ் வழிப்பயிற்று நூல்களாகத் தமிழ் நாட்டுப்பாட நூல் நிறுவனவழியாக வேதியல் நூல்கள் மூன்று, சரத் சந்திரர் வாழ்க்கை வரலாறு, பொது மக்களுக்காக அறிவியல் நூல்கள் ஐந்து.

அடுத்த வீடு (தெலுங்கு மொழிச் சிறு கதைகளின் தமிழாக்கம்)
மரக்குதிரை (மலையாள " " " )
அனல்காற்று (தெலுங்குக் கவிதைகளின் மொழி பெயர்ப்பு)—

முறையூர் ராம தெ· தெவராயன் செட்டியார் (1895-1969)

தமிழ்ப் புலவர் சிலரை ஆதரித்தவர். சில சிறு நூல்களையும் வெளியிட்டிருக்கிறார். தம் ஊரில் நூலகம் அமைய அழகுவள்ளி நிலையம் கட்டி உதவினார்.

இராம. தெ. தெய்வராயன் ('சோமையா') காரைக்குடி

பி. 1921. இ.1984. மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பண்டிதப் பட்டமும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துப் புலவர் பட்டமும் பெற்றர். புனைபெயர்—கருப்பட்டிக் கவிராயர்' கவியரங்கங்களில் கலந்து கொண்டிருக்கிறார். 'தமிழன்னை தசாங்கம்' என்னும் நூலை இயற்றியிருக்கிறார் பண்டிதமணி நினைவாகக் கதிரேசன் கழகம் கண்டவர்.

எஸ்· எஸ்· தென்னரசு திருக்கோட்டியூர்

பி. 1930 எழுதத் துவங்கியது 1953 -துணை ஆசிரியராக அறிஞர் அண்ணாவின் 'நம்நாடு' கலைஞர் கருணாநிதியின் ·முரசொலி', -கவிஞர் கண்ணதாசனின் தென்றல் ஆகியவற்றில் பத்தாண்டுக்காலப் பணி.

1966ல் சொந்தப்பத்திரிகை தொடக்கம் - பெயர் ''தென்னரசு'' முதலில் -மாத இதழ். பிறகு வார இதழ் 1970 முதல் 1975 முடிய அது வார இதழாக வந்தது.

1975ல் அவசர காலச்சட்டத்தால் ''தென்னரசு'' வார இதழின் உரிமம் பறிக்கப்பட்டதால் பத்திரிகை நிறுத்தப் பட்டது.

எழுதிய நாவல்கள்

1 தங்கச்சிமடம்
2. செம்மாதுளை
3. மயிலாடும் பாறை
4. துங்க பத்திரை
5 சந்தனத் தேவன்
6. தைமூரின் காதலி
7. அவள் ஒரு கர்நாடகம்
8. ஆனந்த பைரவி
9. குஞ்சரத்தின் கதை
10. கருணைக்கு அழிவில்லை
11. வெட்கங்கெட்டவள்
12. புருஷன்
13. பாடகி

-மற்றும் 200க்கும் மேற்பட்ட சிறு கதைகள்,

பல திரைப்படங்கட்குக் கதை, வசனம், எழுதி யிருக்கிறார்.

1974-ல் ''ஐந்தருவி'' என்னும் நாவல் தொகுப்புக்கு அரசு விருது கிடைத்தது.

இவர் தி.மு.க. தலைமை நிலைய அமைப்புச் செயலாளர்

1972-ல் பிரான்மலையில் நடந்த பாரி விழாவில் ''சிறுகதை மன்னன்'' என்ற பட்டமும்,

கழகப்பணிகளின் பொருட்டு அதிகக் காலம் சிறைவாசம் அனுபவத்திற்காகச் ''சின்னமருது'' என்னும் பட்டமும், 1980-ல் துங்கபத்திரை நாவலுக்காக முத்தமிழ்ப் பேரவையின் சார்பில் ''இயல் செல்வம்'' என்ற பட்டமும் பெற்றனர்.

1971 முதல் 1976முடிய தமிழகச் சட்டமன்ற மேலவை உறுப்பினராக இருந்தார்.

உண்மைச் சம்பவங்களை மையமாகக் கொண்டு, குறிப்பாக, மதுரை, முகவை, நெல்லை மாவட்டத்தில் வீரத்துடன் மாண்ட பாளையக்காரர்கள், சேதுபதிகள் ஆகியோரைப்பற்றி எழுதவேண்டுமென்பது இவருடையஆசை.

சாகித்திய அகாடமி தேர்வுக்கு அறிஞர் அண்ணா. கலைஞர் கருணாநிதி, தென்னரசு ஆகியோரது நாவல்களை ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளாதது இவருடைய மனக்குறை.

டாக்டர் கலைஞர். தென்பாண்டிச் சிங்கம் என்ற நாவலை எழுத இவர் தூண்டுகோளாக இருந்தார்.

இவருடைய கருத்து

நான் தொழிலுக்காக எழுதுபவனுமல்ல; வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதற்காக எழுதுபவனுமல்ல. எழுதுவதற்கு உரிய சினைப்பொருள்கள் கிடைத்தால் எனக்கு எழுதுவதற்கு உற்சாகம் பிறக்கும்; அவ்வளவுதான்!

நான் ஒரு பாவம் செய்த எழுத்தாளன்; ஏனென்றால் நான் ஒரு அரசியல் கட்சியில் இருக்கிறேன். அதனால் வாசகர் வட்டத்தில் ஒரு பகுதியினர் எங்கள் எழுத்துக்களை பார்க்காமலே புரட்டி விடுகிறார்கள். என்னைக் கேட்டால், அவர்களைத் தன்னம்பிக்கை அற்றவர்கள் என்றுதான் கூறுவேன். எங்கள் எழுத்துக்களைப் படித்தாலே அவர்கள் மனம் மாறி விடும் என்று பயப்படுகிறவர்கள் எந்தக்கட்டத்திலும் எதிலும் நிலைக்கமாட்டார்கள் என்பது எனது அசைக்க முடியாத கருத்து.

தேசிகன், க.

அழகப்பா கல்லூரியிலிருந்து ஓய்வு பெற்றவர். கம்பன் விழாக் கவியரங்கங்களில் பங்குபெறும் சிறந்த கவிஞர். காரைக்குடி வட்டாரத்தில் பல ஆண்டுகளாகத் தமிழ்ப்பணி புரிந்து வருபவர்.

மு. தேனப்பன் பி. ஈ, (கெம்), கண்டனூர்

*Chief Manager (CPP) SPIC, 97, Mount Road, MADRAS-32.*

இவருடைய முயற்சியால் காரைக்குடி திருக்குறட் கழகம் தோன்றிற்று.

அ. லெ. நடராசன், பி. காரைக்குடி 9-6-1909, பாரதிநகர், சென்னை—17

இவர் 1941-ல் காரைக்குடியில் புதுமைப் பதிப்பகத்தைத் தொடங்கினார். கம்பராமாயணத்தில் இவருக்கு ஈடுபாடுமிகுதி. கவிமணி, டிகேசி, ராஜாஜி, கல்கி ஆகியோருடைய நூல்களையும் லின் யுடாங், வினோபா பாவே, முல்க்ராஜ் ஆனந்து ஆகியோருடைய நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புகளையும் இவர் வெளியிட்டியிருக்கிறார். மகாத்மா காந்தியடிகள் எழுதிய "மாணவர்க்கு'', ''பெண்களுக்கு'', ''நமது மொழிப் பிரச்சினை'', ''பிரிட்டிஷாருக்கு எனது வேண்டுகோள்'' என்ற நூல்களை இவர் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். ''1001 இரவுகள்'' என்னும் அரபுக்கதைகளை 20 தொகுதிகளாகத் தமிழில் தரும் பெருமுயற்சியில் ஈடுபட்டு, பல தொகுதிகளை மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிறார். 60 பழம் பாடல்களைத் தொகுத்து ''தமிழ் இசைப் பாட்டுக்கள்'' என்னும் நூலாக வெளியிட்டிருக்கிறார். மகாபாரதக் கதையைச் சுவைபட உரைநடையில் வெளியிடும் அரிய முயற்சியில் முனைந்துள்ளார்.

அரபு நாட்டுக் கதைகள் என்பது இவருடைய படைப்புக் களில் குறிப்பிடத்தக்கது.

வாழ்க்கை வரலாறுகளை எழுதுவதில் இவர் தனித் திறமை பெற்றவர். இத்துறையில் இவர்க்கு ஈடு இணை இல்லை என்று சொல்லும் அளவுக்கு வளர்ச்சியடைந்துள்ளார். எம்மதத் தினரும் தங்கள் மதத்துத் தலைவர்கள் அல்லது அருளாளர் களைப் பற்றி வரலாறு எழுதுமாறு இவரை வேண்டுவதினின்றும் இவர்தம் ஆற்றல் தெரியவரும்.

நபிகள் நாயகம், இயேசுநாதர், மகாவீரர், விவேகா னந்தர், வள்ளலார் வரலாறுகளை இவர் எழுதியிருக்கிறார்.

ஏழை பங்காளன் லெனின் என்னும் நூல் எழுதியதற்காக இவருக்கு சோவியத் லாண்டு வழங்கும் நேரு விருதும் ரஷ்யாவில் சுற்றுப்பயணம் செய்யும் வாய்ப்பும் வழங்கப் பெற்றன.

1943முதல் எழுதிவரும் இவர் தமிழகத்தின் தலைசிறந்த எழுத்தாளர்களுள் ஒருவராகத் திகழ்கிறார்.

எஸ். நடராசன் சிவகங்கை 1960

அகரம் அச்சகத்தின் மேலாளர். புதுக் கவிதைகளை அழகாக எழுதுகிறார்.

சித நடராசன் M A தமிழ் (நற்சாந்துபட்டி 1939)

வள்ளல் பெ. ராம. ராம. சித. மகன். தமிழ்நாடு நாளிதழில் சில ஆண்டுகள் பணியாற்றினார். பழைய இலக்கிய மரபு பிறழாமல் கட்டுரைகள் எழுதிவருகிறார். நூல்: பாடுவார் முத்தப்பர். திருக்கொள்ளம்பூதூர், பேரையூர் குடமுழுக்கு மலர்கள் உருவாக உதவியிருக்கிறார்.

சி. இராம. நாகப்பச் செட்டியார்
பி. 1930, மகிபாலன்பட்டி.

தம் தந்தையார் இராமசாமிச் செட்டியார் நினைவாக சிவஞானபோத விரிவுரை முதலியன நடத்தி வருபவர். சைவ சித்தாந்தத்தை முறையாகப் பயின்று வருபவர். மதுரைத் திருவள்ளுவர் கழகத்தார் 'சிவநெறிச் செம்மல்' என்றும் காஞ்சிபுரம் தொண்டைமண்டல ஆதீனம் சீலத்திரு ஞானப் பிரகாச தேசிகர் அவர்கள் 'திருநெறிப் புலவர்' என்றும் இவருக்குப் பட்டங்கள் வழங்கியுள்ளனர்.

பண்டிதமணி நூற்றரண்டு விழாக் குழுவின் செயலர்.

மக்கள் கவிஞர் அரு. நாகப்பன் (அருணா) உ சிறுவயல்
15-6-44

அவர் கம்பன் அடிப்பொடியின் தொண்டர். கவிஞர் கண்ணதாசனின் மாணவர். 1963 முதல் சிறுவயலில் தமிழ் இலக்கிய மன்றம் நடத்தி வருகிறார். நூல்கள்— கவியரங்கில் கம்பன், கம்பன் கண்ட சமுதாயம், இருவர் உள்ளம், உங்களால் சிரிக்க முடியுமா?

எல்லா வகையான இலக்கிய நிகழ்ச்சிகளிலும் பங்கு கொண்டு வருகிறார். இவரும் இவர் மனைவி சோலையும் இடை நிலை ஆசிரியர்கள், கவிஞர்கள்.

முகவரி: அருணா ஸ்போர்ட்ஸ், கல்லுக்கட்டி, மேற்கு, காரைக்குடி-1

ரெ. நாகப்பச் செட்டியார் (ரெங்கநாகப்பன்)
சண்முகநாத பட்டணம் 22-6-1927

ஆசிரியர், 'அரசியல் ரிப்போர்ட்டர்' (மாதமிரு முறை) மதுரையிலிருந்து நடத்தினார்.

க நாராயணன் 9-11-1920 கோட்டையூர் (வழி) ராயவரம்

மேலாளர், கற்பகம் அச்சகம், 6 நல்லதம்பிச்செட்டி தெரு சென்னை-2

9 நாவல்களையும் சிறுகதைத் தொகுப்பு ஒன்றையும் மருத்துவ நூல் ஒன்றையும் ரோமானியரின் கேளிக்கைகள் என்ற வரலாற்று நூலையும் எழுதியிருக்கிறார். 1945 முதல் 1949 வரை தாய் நாடு, 1949 முதல் 1950 வரை கலைமணி என்ற இதழ்களை வெளியிட்டார்.

இவர் நடத்திய இதழில் கண்ணதாசனும், பிற்காலத்தில் அவர்நடத்திய இதழில் இவரும் பணியாற்றியுள்ளனர்.

லெ நாராயணன் செட்டியார்

தொழில் அதிபர், மதுரை-2

தமிழ்ப் புலவர்கள் அறிஞர்களுடன் இனிமையாகப் பழகுவார். தமிழ் வளர்ச்சி, தமிழ் எழுத்தாளர் மன்றக் கூட்டங்களில் கலந்து கொண்டு நல்ல தமிழில் பேசும் ஆற்றல் கைவரப் பெற்றவர்.

இவரும் இவர் மனைவி திருமதி சரசுவதியும் சேர்ந்து சரசுவதி நாராயணன் கல்லூரியை மதுரையில் பல்லாண்டுகளாக நடத்தி வருகின்றனர்.

தனித் தமிழ் ஆர்வலர். புலவர்கள் பலருடன் பழகியிருக்கிறார். தமிழ் இசையிலும் கலைகளிலும் ஆர்வம் மிக்கவர். விசாலாட்சி ஆலைத் தொழிலாளர்களுக்குத் திருக்குறள் வகுப்புகள் நடத்த ஏற்பாடு செய்திருக்கிறார்.

நாரா நாச்சியப்பன் ஆத்தங்குடி முத்துப்பட்டணம் 1927

நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ் ஜானி ஜான்கான் தெரு சென்னை-14

குழந்தை இலக்கியம், நாவல், கதை கவிதை நூல்கள் 40 மற்றும் நெறிசூடி என்ற புதிய ஆத்திசூடியும் படைத்துள்ளார்.

அச்சுக்கலை பற்றியும் ஒரு நூல் எழுதியிருக்கிறார்.

நடத்திய இதழ்கள்; முத்து (சிறுவர்க்கு) 1948, இளந் தமிழன் (இலக்கிய ஏடு) 1972-75

பொன்னி (1948-50) தென்றல் (1960-61) ஏடுகளில் துணையாசிரியர். புரட்சிக் கவிஞர் பரம்பரையின் முன்னணிக் கவிஞர். தன்மானக் கொள்கையையும் தனித்தமிழ் வேட்கையை யும் தாம் படைக்கும் இதழ்களிலும் நூல்களிலும் பரப்பி வரு பவர்.

## திருமதி நீலாவதி இராம சுப்பிரமணியம் 1912-1982

'குமரன்' இதழில் சின்னஞ் சிறுவயதில் பணியாற்றி சொ. முரு. அவர்களுடைய அரவணைப்பில் வளர்ந்தவர் கொத்தமங்கலம் ஊரினரான திரு. இராம. சுப்பிரமணியம். இவருடைய வாழ்க்கைத் துணைவியார் திருமதி நீலாவதி.

16 வயதினராக இருந்தபோதே நீலாவதி, (1) திராவிடன் (2) குடிஅரசு (3) குமரன் (4) ஊழியன், இதழ்களில் கட்டுரை எழுதினார்.

1933-ல் திருச்சி தேசியக் கல்லூரி மாணவர்கட்காக சுப்பிரமணியபாரதியார் பாடல்களைப்பற்றி இரண்டாண்டுகள் வகுப்பு நடத்தினார்.

சென்னை தியாகராய நகரில் தாம் வாழ்ந்தபோக் ரோடு நான்காம் எண் உள்ள இல்லத்தில் 1941 முதல் 1953வரை சனிக்கிழமைதொறும் இலக்கியப் பண்ணை என்ற பெயரில் இலக்கியச் சொற்பொழிவுகளை ஏற்பாடு செய்தார். டி கே சி ராஜாஜி, திரு. வி. க., ரா. பி. சேதுப்பிள்ளை, வையாபுரிப் பிள்ளை, கல்கி, பி. ஸ்ரீ, மு. வ. போன்ற பேரறிஞர்களை வரவழைத்து இந்தப் பண்ணையைச் சிறப்பாக நடத்தி, இலக்கிய ரசிகர் பலரை உருவாக்கினார்.

'ராஜ்ய லட்சுமி' என்ற திங்கள் இதழுக்கு நான்கு ஆண்டுக் காலமும் தமிழக அரசின் மகளிர் நலத்துறை நடத்திய 'சௌபாக்யம்' என்ற திங்கள் இதழுக்கு பல்லாண்டுகாலம் ஆசிரியராக இருந்தார்.

தமிழ் இசை இயக்கத்தில் பெரும் பங்கு கொண்டார். 'கல்கி' இதழில் ஏராளமான கட்டுரைகள் படைத்திருக்கிறார். கம்பன் விழாக்களில் சொற்பொழிவுகள் நிகழ்த்தியிருக்கிறார். நீலாவதி அம்மையாரின் தமிழ் ஈடுபாட்டில் வியந்த டிகேசி இவருக்கு ஏராளமான கடிதங்கள் எழுதியிருக்கிறார். இவை, "நீலாவதி இராம சுப்பிரமணியம் வாழ்க்கை வரலாறு" என்ற நூலில் இடம் பெற்றிருக்கின்றன.

பழ. லெ. பழனியப்பன் பள்ளத்தூர் 1920
நிர்வாகி, சேவாஸ்ரமம், பள்ளத்தூர்.

சேலத்திலிருந்து 'மந்திரி' என்றஇதழை நடத்தி வந்தார். சர்வோதயம், கதர், ஆன்மிகம் பற்றி ஆழமான கட்டுரைகளை எழுதியிருக்கிறார்.

பழ . பழநியப்பன் (கம்பன் அடிசூடி) காரைக்குடி 19-4-1943
மக்கள் தொடர்பு அதிகாரி முருகப்பா குரூப் நிறுவனங்கள்.

"கற்பகச் சோலை" 1, வெள்ளையன் செட்டியார் சாலை, கோட்டூர்புரம்,சென்னை-85

நூல்கள்-(1) கம்பன்-விசுவரூபம் (2)கம்பனிடம் கற்போம் காரைக்குடி திருக்குறட் கழகச் செயலர் 1962-65 காரைக்குடி கம்பன் கழகச் செயலர்.சென்னைக் கம்பன் கழகப்பொருளாளர் 1975முதல். செயலர் 1978 முதல். கம்பன் அடிப்பொடி நினைவாக, கம்பன் இசைமாலை என்னும் கையடக்க நூலினை வெளியிட்டுள்ளார். கம்பன் அடிப்பொடி இயற்றிய (1) கம்பன் இசை வணக்கம் 108 வரிகள் (2) அடியென அடிமைகொள் அது எதுவோ? (10 பாடல்கள் கொண்டது.) ஒவ்வொரு பாடலும் அடி தொறும் 26 எழுத்துக்களால் ஆன அளவியல் சந்த விருத்தமாக அமைந்தது(3) ஏதேனும்ஆகேனோ (20பாடல்கள்) ஆகியவற்றின் தொகுப்பு—அளவில் சிறியதாயினும் கம்பன் அடிப்பொடியின் புலமையை உணர உதவும் வெளியீடு.

திரு பழநியப்பன் சென்னைத் தொலைக் காட்சியில் தமிழ்ச் சான்றோர் பலரைப் பேட்டி காணும் இலக்கியச் சுவைஞர்.

பனை. பழநியப்பன் நெற்குப்பை 25-3-1944
தலைமைத் தமிழாசிரியர் குருகுலம் உயர்நிலைப்பள்ளி
அமராவதிபுதூர்

இனிய கவிதைகள் புனைகிறார். கவியரங்குகளில் கலந்து கொள்ளுகிறார்.

மு. பனையப்பன் B. Com Hons. C. A, நெற்குப்பை
5 முதல் மெயின்ரோடு சி ஐ டி காலனி சென்னை-4

புரவலர். புலவர் பாண்டியனார் எழுதிய எழினி என்னும் நூலையும் வேறு சில நூல்களையும் வெளியிட்டுள்ளார்.

பாகனேரி இராம அண்ணாமலை (பாகனி)
ஆ. சுப. ராம. இல்லம் புதுவளவு பாகனேரி.
வினாயகபவனம் 176 என்.ஜி.ஓ. காலனி, நாகமலை மதுரை-19

நகரத்தார் சமூகம் பற்றிய சிறுகதைகள் துணுக்குகள் எழுதி வருகிறார்.

பாலா (பாலச்சந்திரன்)
ஆங்கிலத்துறை, அரசினர் கல்லூரி ,புதுக்கோட்டை.

புதுக்கவிதைகள் படைக்கிறார். இலக்கியத் திறனாய்வாளர்.

இரா. பாவாணன் குழிபிறை 14-12-1951
மாநில தி.மு.க. பொதுக்குழுஉறுப்பினர், புதுக்கோட்டை622001

இளம் அகவை முதல் தூயதமிழ் ஆர்வலர். சிங்காரம் என்று பெற்றோர் இட்ட பெயரைப் பாவாணன் என மாற்றிக் கொண்டார். பாவாணர் தொடங்கிய உலகத் தமிழ்க் கழகத்தைக் குழிபிறையில் தொடங்கி அதற்கெனக் கட்டிடமும் கட்டியிருக்கிறார். பெருஞ்சித்திரனாரின் உலகத்தமிழ் முன்னேற்றக் கழகத்தின் புதுக்கோட்டை மாவட்ட அமைப்பாளர். தனித்தமிழ் இயக்கத்தின் சிறந்த பேச்சாளருள் ஒருவர்.

'வழக்காற்றுச் சொல் தமிழ்' என்ற கையேட்டை கல்லூரியில் படித்தபோதே தொகுத்தார். அன்றாடம் பயன்படுத்தும் வடசொற்கள் மற்றும் பிறமொழிச் சொற்களுக்குத் தூயதமிழ்ச் சொற்கள் கொண்டது அந்த வெளியீடு. விடுதலைப் புலிகள் என்ற நூலையும் எழுதியிருக்கிறார்.

இவர் தம் நண்பர்களுடன் சேர்ந்து பெருஞ்சித்திரனார் பதிப்பகம் தொடங்கிச் சில நூல்களை வெளியிட்டிருக்கிறார்.

குன்றக்குடி அ. பெரியபெருமாள் குன்றக்குடி 13-1-1933
இலக்கிய பீடம் 134 செவல்பட்டித் தெரு
இராஜபாளையம் 626 117

ஆனந்தவிகடன், கலைமகள் கட்டுரைப் போட்டிகளில் முதல் பரிசு பெற்றவர். கம்பன் காவியம் தொடர்பான நான்கு நூல்களின் ஆசிரியர். தமிழகச் சமூகங்களின் வரலாறுகளையும் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் என்ற தொடர்கட்டுரையையும் இதழ்களில் எழுதியிருக்கிறார்.

பூவை செங்குட்டுவன் கீழப்பூங்குடி

இளமையில் நாடகங்களில் நடித்தவர். கருத்துச் செறிவுள்ள பல பாடல்களை எழுதிவரும் திரைப்படப் பாடலாசிரியர். கலைமாமணி, தனிப்பாடல்கள் 200ம் திரைப் பாடல்கள் 600ம் ஆக்கியுள்ளார். இவர் தந்தையார் ராமையா அம்பலமும் அவருடைய தந்தையாரும் அந்தக்காலத்துத் தமிழில் சிறந்த பாண்டித்யமும் ஓலைச்சுவடிப் படிப்பில் தேர்ச்சியும் பெற்றிருந்தார்கள். யாப்பெருங்கலக் காரிகை மற்றும் இலக்கண இலக்கியங்களில் புலமை பெற்றிருந்தனர்.

ரா பொன்ராசன் (பட்டிக்காட்டுப் பாவலன்) 6-7-1927
பள்ளி ஆசிரியர், பாவலர் இல்லம், குன்றக்குடி

குழந்தை இலக்கியங்கள் எழுதி வருபவர். காரைக்குடி குழந்தை இலக்கிய சங்கத்தின் செயலர்.

செ. மாதவன் பி. காம்., பி. எல்.

சிங்கம்புணரி ஊரினர். அங்கு தமிழ் மன்றம் தொடங்கியவர். 1967 முதல் 1976 வரை தமிழக அமைச்சராக இருந்த போது வெளிநாடுகளில் சுற்றுப்பயணம் செய்து இவர் பெற்ற அனுபவம் 'சில நாடுகளில் சில நாட்கள்' என்னும் நூலாக வெளிவந்திருக்கிறது. 'தமிழ் முரசு' என்ற நாளிதழை மதுரையிலிருந்து சில ஆண்டுகள் நடத்திவந்தார். இவருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதும் முயற்சியில் இவரே 'அமுத சுரபி'யில் சில கட்டுரைகள் எழுதினார்.

நா, மு. மாணிக்கம் மேலைச்சிவபுரி

'குடியரசு' இதழின் ஆசிரியராக இருந்தார். திராவிட இயக்கத்தில் சேர்ந்து சிறை புகுந்தவர். தில்லை இளங்கோ மன்றத்தைத் தோற்றுவித்தவர். தமிழ்நாடு பாடநூல் கழகத்தில் பணியாற்றி 1979-இல் ஓய்வு பெற்றார்.

நா. மாணிக்கவாசகன் எம். ஏ. 23-11-1949
கீழ வீடு, முத்துப்பட்டணம் காரைக்குடி.

*VIII 57/பழைய எண் 23/VIII. S. C. BLOCK, STONE HOUSE HILL, UTHAGAMANDALAM-2*

பார்க்க ப. 266

1975முதல் உதகையில் துணைப் பேராசிரியர். எம்ஃபில் பட்டத்திற்கு ஆராய்ச்சி மேற்கொண்டிருக்கிறார். உதகை YMCA தமிழ் இலக்கிய மன்றம், உதகைத் தமிழ் மன்றம் ஆகியவற்றில் பெரும் பங்கு ஏற்று வருகிறார்.

கருமுத்து தி மாணிக்கவாசகம் 1920-1982

கம்பராமாயணத்தைப் புதிய பார்வையில் திறனாய்வு செய்து பல நூல்களை இயற்றினார். நாடக நூல்கள் சிலவற்றையும் பஞ்சாலைத் தொழில் பற்றிய ஒரு நூலையும் யாத்தார். 'தமிழ்நாடு' நாளிதழின் ஆசிரியராக இருந்தார்.

நா. மீனாட்சிசுந்தரம் பி.லிட் (மீனவன்) கண்டரமாணிக்கம் 4-5-1940

தலைமைத் தமிழாசிரியர், இராமநாதன் செட்டியார் பேருயர் பள்ளி, புதுவயல். காவியங்கள் செய்யுள் நாடகங்கள் பிள்ளைத்தமிழ் நூல்கள் ஆக்கியுள்ளார். கவியரங்குகளில் கலந்து கொள்ளுகிறார். பினாங்கில் நடைபெற்ற கம்பர் பிள்ளைத்தமிழ் போட்டியில் முதல் பரிசு பெற்றவர். வன்றொண்டர் (ப. 190-191) மகள் வழிப் பேரன்.

முடியரசன் 7-10-1920 காரைக்குடி

தமிழ்நாட்டின் தலை சிறந்த கவிஞர்களுள் ஒருவர். செந்தமிழ்ச் சொற்செறிவும் இலக்கண அமைதியும் கற்பனை வளமும் இயற்கை வருணனையும் நிறைந்த இனிய கவிதைகளை 1940 முதல் இயற்றி வருகிறார். பாரதிதாசனை வழிகாட்டியாக கொண்டு, தமிழ்ப் பாவலராய்த் திகழ்ந்து வருகிறார்.

நூல்கள்: முடியரசன் கவிதைகள், கவியரங்கில் முடியரசன், காவியப்பாவை (இசைப் பாடல்கள்), வீரகாவியம்,தேன்மொழி பூம்பொழில். பண்டிதமணியைப் பற்றி ஒரு காவியமும் படைத் திருக்கிறார்.

கண முத்தையா மதகுபட்டி 24-5-1913
நிர்வாகி— கூட்டாளி, தமிழ்ப் புத்தகாலயம் சென்னை–5

1946 முதல் பதிப்புத் துறை அனுபவம் உடையவர். இலக் கியத் திறனாய்வுக் கருத்தரங்குகளில் தலைமை வகித்துள்ளார். வரப்போகும் 10 ஆண்டுகளில் தமிழ்வெளியீட்டுத் துறை என்ற ஆய்வுக் கட்டுரையை தேசிய புத்தக டிரஸ்டின் கருத்தரங்கில் படித்தார். புதிய எழுத்தாளர் பலரைத் தமிழ்நாட்டுக்கு அறிமுகம் செய்தவர்.

நூல்: யுத்தகால பர்மா

மொழிபெயர்ப்பு: வால்காவிலிருந்து கங்கை வரை (ராகுல் சங்கிருத்யாயன்)

நாக. முத்தையா 1929-1971 சண்முகநாதபுரம்

சிட்டுக்குருவி என்னும் இதழின் ஆசிரியராக இருந்தார் குழந்தைப் பாடல்கள், சிறுவர் இலக்கியம் என்ற நூல்களையும் சில நாவல்களையும் எழுதினார். இன்ப இரவு என்ற இவ ருடைய நூல் தடை செய்யப்பட்டது. எமிலிஜோலா எழுதிய நூல் ஒன்றை இவர் மொழி பெயர்த்திருக்கிறார்.

மா. முத்தையா பி. ஏ. பி எல். காரைக்குடி 10-4-1936

1964முதல் வழக்கறிஞர் பேங்க்ஆப் இந்தியாவின் சென்னை மண்டல அலுவலகத்தில் உதவித் தலைமைச்சட்ட அலுவலர். சிறுகதைகள் நாடகங்கள் எழுதியுள்ளார். இலக்கிய, சமய, பட்டிமன்றப் பேச்சாளர்.

மா. முத்துராமன் *M.A.B.Ed.* (மா. மு) மேலைச்சிவபுரி
17-5-1938

தலைமைத் தமிழாசிரியர் அருணாசலம் செட்டியார் மேனிலைப்பள்ளி பள்ளத்தூர். மேலைச்சிவபுரியில் 1956-இல் வள்ளுவர் மன்றம் நிறுவி, அதன் வெள்ளிவிழாவும் நடத்தியவர்,

கவியரங்கம் —கருத்தரங்கம்—வழக்காடு மன்றம்—பட்டிமன்றப் பேச்சாளர். இராமாயணத் தொடர் சொற்பொழிவாளர். பாமாலை மலர்கள், முத்துமணி இலக்கண வளம் போன்ற சில நூல்களின் ஆசிரியர்.

முத்துலிங்கம் (சிவகங்கை வட்டம் கடம்பங்குடி 1942)

150 திரைப் படங்களில் பாடல் எழுதியுள்ளார். மாஞ் சோலை கிளிதானோ, காஞ்சி பட்டுடுத்தி கஸ்தூரி பொட்டு வச்சு போன்ற பாடல்களுக்காக, சிறந்த பாடலாசிரியராக 1978–79ஆம் ஆண்டிற்குத் தேர்ந்தெடுக்கப் பெற்று, தமிழக அரசின் தங்கப் பதக்கத்தைப் பெற்றார். கலைமாமணி விருது 1981-இல் வழங்கப்பெற்றது.

ரெ. முத்துக்கணேசன் காரைக்குடி 20-8-1927

கவிஞர் உரையாசிரியர். கட்டுரையாளர். ஓர் அமெரிக்கப் பல்கலைக் கழகம் இவர்க்கு டாக்டர் பட்டம் வழங்கியிருக்கிறது. நூல்கள்: நல்லுரை வெண்பா, முத்துமாலை, தமிழர் வாழ்த்து.

"முத்தொள்ளாயிரம், தமிழ்த்தொகை, ஞானவிளக்கம் உரை நூல்களில் பாடல்களுக்கு இவர் எழுதியிருக்கும் விளக்கம் இவரைச் சிறந்த ரசிகமணியாகக் காட்டும். இவர் இயற்றிய முத்துச்சூடி, முன்னோர் மொழி பொருளும் பின்னைய வளர்ச்சியும் கண்டு திகழ்வது "அரனைப் போற்று" "ஐந் தெழுத் தெண்ணு" "தேவாரம் பயில்க" என்பன இவரின் இறைப் பற்றினை இயம்பும்.

தேவகோட்டை வா. மூர்த்தி (7-6-1947)
வருமானவரி அதிகாரி, மதுரை–2
புனை பெயர்கள்- மேரி, ஞான குருபரன்.

ஏராளமான இதழ்களில் இவருடைய கட்டுரைகள் 1970 முதல் தொடர்ந்து வெளிவருகின்றன. ஓரங்க நாடகங்களும் எழுதியிருக்கிறார்.

மேடை மெய்யப்பன் (16-4-1962-கோட்டையூர்)

கல்லூரி மாணவராக இருந்தபோது மேடை என்ற கையெழுத்திதழ் நடத்தினார். பல இதழ்களில் இவருடைய கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

வீர. மெய்யப்பன் *B. E.* புதுவயல்

தொழிலால் பொறியாளர். சிறந்த கவிஞர்

எம் . எஸ் மெய்யப்பன் உரிமையாளர், ஓட்டல் ஓசியானிக் சென்னை-28

மாணவராக இருந்தபோதே பேச்சுப் போட்டிகளில் பரிசு பெற்றவர். தொடர்ந்து மேடைகளில் இனிய தமிழை முழங்கி வருகிறார்.

மெ. மெய்யப்பன் கம்பார் வீடு, கண்டனூர் 4-11-1952

கதை கட்டுரை எழுதியிருக்கிறார். 1975 முதல் சென்னை தினத்தந்தியில் நிருபர்

புலவர் செ. மெய்யம்மை எம்.ஏ தேவகோட்டை 12-11-1949 துணைப் பேராசிரியர், இராமசாமி தமிழ்க் கல்லூரி காரைக்குடி

1970-ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக்கழகம் நடத்திய புலவர் தேர்வில் மாநில முதன்மை பெற்றதற்காக ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் பெயரால் திருப்பனந்தாள் மடத்தின் அதிபர் நிறுவியுள்ள பரிசு இவர்க்கு வழங்கப்பெற்றது.

மா. வரதராஜன் அரிமழம் 11-2-1928

கலைமாமணி விருது பெற்றவர். கவியரங்கம், பட்டி மன்றம், வானொலி நிகழ்ச்சிகளில் பங்கு கொள்பவர். தினத் தூது, கலை மணி, காதல் இதழ்களில் துணை ஆசிரியராக இருந்தவர்.

நூல்கள்: கவிச்சொல் கேளீர், திருக்கண்ணமங்கை தல வரலாறு, இசை மலர், தமிழக நாட்டுப்பாடல்கள் புவனேஸ்வரி கீதாஞ்சலி

வலம்புரி சோமநாதன் வலையபட்டி 1927

திருமகள் இதழில் உதவி ஆசிரியராகப் பணியாற்றிய போது தொடங்கி, கவிஞர் கண்ணதாசனின் மிக இனிய நண்பராக விளங்கி வந்திருக்கிறார்.

திரைக்கதைவசனம் எழுதுவதில் வல்லவர். கலைமாமணி விருது பெற்றவர், (1984). திரைப்படத் தயாரிப்பாளர். தமிழ் மற்றும் பிற மொழி அறிஞர்களுடன் தொடர்பு கொண்டவர்.

அ. வல்லநாட்டான் கண்டவராயன் பட்டி 20-7-1936

தமிழ் நாடு நாளிதழிலும் வார இதழிலும் உதவி ஆசிரியர். (1956-1969) பக்திப் பாடல்கள் அடங்கிய நான்கு நூல்களை இயற்றியிருக்கிறார்.

மு வள்ளியம்மை M A, கல்லுப்பட்டி 21-2-1953

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் நகரத்தார் ஆய்வுத் திட்டத்தில் ஆய்வுத் துணையாளராக இருந்திருக்கிறார் கவியரங்கக் கவிஞர். பட்டிமன்றப்பேச்சாளர். பலகட்டுரைகளை எழுதியிருக்கிறார்.

சும. வள்ளியப்பன், வேகுப்பட்டி: 28-5-45
எம். ஏ (தமிழ்), பி. காம். பி எட்,

தாம்பரம் கம்பன் கழகச் செயலர். சில கவிதைகளும் ஓரிரு நாவல்களும் எழுதியுள்ளார். இலக்கணத் தொடர்பான உரைகளை வானொலியில் நிகழ்த்தியுள்ளார். 1983 ஆம் ஆண்டு முதல் தினமணி நாளிதழில் 10, 12ஆம் வகுப்புகளுக்குத் தமிழ் வினா விடைகள் எழுதிவருகின்றார்.

மாணவர்க்குப் போட்டித் தேர்வுகள் நடத்தும் 'செந் தமிழ்க்கழகம்' எனும் அமைப்பின் செயலராகவும் பணியாற்றி வருகின்றார்.

புனை பெயர்: பாரிநாடன்

முகவரி: சென்னை சேவாசதன் மேனிலைப்பள்ளி மேற்குத் தாம்பரம். சென்னை-600045

வாசவன் இலுப்பக்குடி 20-9-1926
1/11 சத்தியமூர்த்தி நகர், நந்தனம் சென்னை 35

200க்கும் மேற்பட்ட நூல்களையும் 9 சிறுகதைத் தொகுதிகளையும் எழுதியுள்ளார். இவருடைய மண்ணின் மணம் என்ற நூல் தமிழக அரசின் பரிசு பெற்றது. (1977). 1982-இல் வி.ஜி.பி.

கல்சுரல் அமைப்பின் பாராட்டும் பரிசும் இவருக்கு வழங்கப் பெற்றன. இவர் மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரின் பெண்வழிப் பெயரன்.

சுப. வீரபாண்டியன் (புனைபெயர்-மது) சமதர்மம் இல்லம் காரைக்குடி 22-4-1951

துணைப் பேராசிரியர், செந்தமிழ்க்கல்லூரி திருப்பனந்தாள் நூல் - புதுத்தென்றல் (கவிதைத் தொகுப்பு) ஐந்தாண்டு (1971-75) காலத்தில் தமிழ்க் கவிதை நூல்கள்—ஓர் ஆய்வு என்னும் தலைப்பில் பி எச். டி. பட்டத்திற்கு ஆய்வேடு வழங்கியுள்ளார்.

வயி. வெங்கடாசலம் B. Sc. FTC பி அழகாபுரி 14-4-1952 புனைபெயர்-வைரம்.

பூச்சரம், காசேதான் கடவுளடா, நவீன ராமாயணம் தலைக்குப் பத்து ரூபாய், காலச்சூழல் போன்ற மேடை நாடகங்களை இயற்றி அரங்கேற்றியுள்ளார்.

இராம வெள்ளையப்பன் B. Tech தேவகோட்டை 1-8-1944 135 கடைவீதி பொள்ளாச்சி 642001

பல குடமுழுக்கு மலர்களின் ஆசிரியர். பொள்ளாச்சி இலக்கியக் கழகத்தின் துணைத்தலைவர் தமிழ் இசைக்கு இவர் ஆற்றிவரும் பணிகளை ப. 309-இல் குறிப்பிட்டுள்ளோம்,

வெ வெ.வெ. வேலப்ப செட்டியார் பலவான்குடி 20-10-1938

கரந்தைத் தமிழ்ச் சங்கத்துப் புலவர். கல்லூரி உட்படப் பல நிறுவனங்களில் 21 ஆண்டுகள் தமிழ் கற்பித்திருக்கிறார். சமயத்தொடர்பான பாமாலைகள் பதிகங்கள் அந்தாதிகள்—25 படைத்துள்ளார். மலர்கள் பலவற்றின் தொகுப்பர்.

'திருவருட் புனல்'—இதழாசிரியர். கதை நாடகம் ஆயிரக் கணக்கான தனிப்பாக்கள் புனைந்துள்ளார்.

ஜெயம் கொண்டான் மேலைச்சிவபுரி 14 - 1 - 1939 புனை பெயர்—வெற்றிச் செல்வன்

1962 - ஆம் ஆண்டு முதல் சென்னை வானொலியில் தமிழ் அறிவிப்பாளர். வானொலியில் நூற்றுக்கணக்கான உரைச் சித்திரங்கள், சிறுகதைகள், நாடகங்கள், பாடல்கள் படைத்து ஒலிபரப்பியிருக்கிறார்.

மேடை - திரைப்பட நடிகர். பாடலாசிரியர். செய்திப் படங்களில் வர்ணனை வழங்கியுள்ளார். சிறுவர்க்குச் சிறுகதைகள் எழுதி ஏ வி எம் பரிசு பெற்றிருக்கிறார்.

லேனா தமிழ்வாணன் தேவகோட்டை 1954

சிறுவயதிலிருந்து கல்கண்டில் எழுதியிருக்கிறார். தந்தையார் தமிழ்வாணன் காலமான பிறகு கல்கண்டு ஆசிரியர் ஆனார்.

இவர் தமிழ் இலக்கியம் எம். ஏ. படித்தவர்

* கல்கண்டு விற்பனை தமிழ்வாணனின் மறைவின் போது 1, 82, 000. தற்போது 2, 15, 000. பத்து இலட்சம் வாசகர்கள் படிக்கும் பத்திரிகை. தமிழக வாரப் பத்திரிகைகளுள் விற்பனையில் மூன்றாவது இடத்தை வகிப்பது.

* இவர் தலைமையில் இயங்கும் மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு வருடத்திற்குக் கிட்டத்தட்டக் கல்கண்டைப் போலவே 52 நூல்களை எழுதி வெளிக் கொணர்வது என்று கங்கணம் கட்டிக் கொண்டு 1979 முதல் 1984 வரை சாதித்தும் வருகிறது. 320 நூல்களின் பதிப்பாசிரியர்.

* தமிழகத்தின் மிகச் சிறந்த இளம் பத்திரிகையாளர் என்று வி. ஜி. பி. கல்சுரல் அகடமி 1982 ஆம் ஆண்டு இவரைத் தேர்ந்தெடுத்தது.

* இவர் எழுதியுள்ள நூல்கள் 31. எட்டு வருட எழுத்துலகச் சாதனை இது. இவற்றுள் பல சப்ஜெக்டுகள் அடங்கும்.

* பிரான்ஸ் தமிழ்ச் சங்கம், லண்டன் தமிழ்ச் சங்கம் ஆகியவற்றின் அழைப்பை ஏற்று 1984 இல் அங்கு சென்று வந்துள்ளார்.

இராம வெள்ளையன் தேவகோட்டை (இ. 1982) இவர் சென்னையிலிருந்து 'மன்றம்' என்ற இதழை ஒன்றரை ஆண்டுக் காலம் நடத்தினார்.

மெ மு நா. பழ. பழனியப்பன் நேமத்தான்பட்டி பி. 1933

முத்தம் என்ற பெயரில் 1950 - ஆம் ஆண்டில் வயது வந்தவர்களுக்கான ஓர் இதழை நேமத்தான் பட்டியிலிருந்து நடத்தினார். முகவரி — மனோரமா மூவிஸ், சென்னை—17

ஆ. ஞானசேகரன் காரைக்குடி மின் வேதி ஆய்வகத்தில் விஞ்ஞானியாக இருப்பவர் "தமிழகமும் ஜெர்மானியரும் — 280 ஆண்டுக்கால உறவுகள்" என்ற இவருடைய ஆய்வுக் கட்டுரையில் ஜெர்மன் மொழியில் வெளிவந்துள்ள தமிழ் நூல்கள் மற்றும் ஜெர்மானியர் ஆராய்ந்துள்ள தமிழ் இலக்கியங்கள் பற்றிய அனைத்து விவரங்களும் உள்ளன. காரைக்குடியிலுள்ள ஜெர்மன் மொழிக்குழு இதை வெளியிட்டிருக்கிறது.

இராம. அண்ணாமலை தேவகோட்டை 1920 தமிழ் அறிஞர்களுடனும் தேசியத் தலைவர்களுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். தம் இளமைக் காலத் தோழர் திரு. முல்லை முத்தையா அவர்களுடன் சேர்ந்துபாவேந்தர் பாரதிதாசனுடன் பழகியவர். பாவேந்தரைப் பற்றி ஆதாரமான கட்டுரையை எழுதியிருப்பவர்.

பழ. அண்ணாமலை பள்ளத்தூர் பி. 1922. முருகப்பா நிறுவனங்களில் 40 ஆண்டுகள் பணி செய்து ஓய்வு பெற்றவர். "நகரத்தார் திருமண நடைமுறை" என்ற நூலை இவர் எழுதியுள்ளார்.

தொழில் அதிபர்களான அ. மு. மு. குடும்பத்து மு. முமுத்தையா ஆய்வுத் தளத்தின் உதவியுடன் இந்நூல் உருவாயிற்று.

"மக்கள் நலனில் அக்கறையுடன்" என்ற தலைப்பில் முருகப்பா குரூப் ஆண்டு தோறும் பழைய கட்டுரைகள் சிலவற்றை மீண்டும் அச்சிட்டு அன்பளிப்பாக வழங்கிவருகின்றனர்.

திருமதி முத்து பி. பள்ளத்தூர் சென்னை எத்திராஜ் மகளிர் கல்லூரி தமிழ்த் துறைத் துணைப் பேராசிரியர். பி எச் டி பட்டத்திற்குப் பண்டிதமணியைப் பற்றி ஆராய்ந்து வருகிறார்.

பெரி. தியாகராஜ் குளிபிறை 15 - 1 - 1925
மதுரையிலும் சென்னையிலும் புகழுடன் விளங்கும் "பெரி. தியாகராஜ் அன் கோ" என்னும் கணக்குத் தணிக்கையாளர் நிறுவனத்தை நிறுவியவர். தமிழ் ஆர்வலர். பண்டிதமணி நூற்றாண்டு விழா இனிது நடைபெறவும் நூல்கள் வெளிவரவும் தேவையான அனைத்து நிதியையும் வசூலித்துக் கொடுத்துத் தாமும் நன்கொடை வழங்கியவர். முகவரி : சின்னச் சொக்கிக்குளம், மதுரை — 2

ஒய். சத்தியமூர்த்தி 715, வீரகொண்டான் தெரு, நாட்டரசன் கோட்டை 17 - 8 - 1928.

பெரி. தியாகராஜ் அன்கோவில் பங்காளி. சணக்கு ஆய் வாளர். தங்கப் பதக்கங்கள் பலவற்றைப் பெற்றவர். தம் துறைத் தொடர்பான கட்டுரைகளைத் தமிழிலும் எழுதியிருப்பவர்.

செல்வி மணிமேகலை பி காம். நா. கண. மாணிக்கம் செட்டியார் மகள், கல்லல்.

கவியரங்கம், பட்டிமண்டபம் ஆகியவற்றில் கலந்துகொள் பவர். புதுக்கவிதை எழுதுபவர் 1330 குறளையும் ஒப்புவித்துப் பரிசு பெற்றவர்.

திருமதி உமையாள் முத்து பி. புதுவயல் மதுரை வங்கி (இராயப்பேட்டை நெடுஞ்சாலைக் கிளையில்) துணை மேலாளர். பல்லாண்டுகளாகப் பட்டிமண்டப மேடைகளில் பங்கு கொண்டு வருகிறார்.

திருமதி பழ. அன்பு மீனாள் (பள்ளத்தூர் 7 - 8 - 1948) கணவர் கண்டரமாணிக்கம் திரு. மெ. ஆவிச்சி எம். ஏ. எம்.ஃபில்

சென்னை மாநிலக் கல்லூரியில் எம். ஏ. படித்தபோது உ. வே. சா நினைவுப் பரிசும் பேச்சுப் போட்டிகளிலும் திருக் குறள் போட்டி, சிவஞான போதப் போட்டிகளிலும் முதற் பரிசு பெற்றவர்.

நகரத்தார் குலத்தில் வழங்கும் கையறு நிலைப்பாடல்கள் என்ற தலைப்பில் பி எச் டி - க்கு ஆய்வு செய்து வருகிறார். முகவரி — தமிழ்த்துறை அருள்மிகு மீனாட்சி அரசினர் மகளிர் கல்லூரி, மதுரை - 2

மெய்யப்பன் அருணாசலம் (கோனாபட்டு)

திரைப்படக் காட்சிகளுக்கு வசனம் எழுதும் போட்டிகளில் பரிசுகள் பெற்றவர். கவிதை நூல்கள்—மழலை அமுதம், ஒரு மொட்டு மலராகிறது. புனைபெயர்கள்— அருவிமைந்தன், பொன் நிலவன், கோநகர்அருணா, குறிஞ்சிக்கோ, பூம்பொழில் துறைவன்.

ஆ. பழ. சொக்கலிங்கம் (மேலைச்சிவபுரி 1908)

பர்மாவில் கம்பை உயர்நிலைப் பள்ளியைத் தொடங்கிய மூவர்களில் ஒருவர், 'தனவணிகன்' இதழ் சிறந்து நடைபெறப் பாடுபட்ட மூவரில் எஞ்சிநிற்பவர். டென்னிசன், வோட்ஸ்வர்த் கவிதைகளை மொழிபெயர்த்துள்ளார்.

1935 அளவில் தனவணிகன் இதழில் வெளிவந்த இவருடைய கவிதைகளை, காதல்மணத் தம்பதிகள் என்றபெயரில் தமிழ்ப் புத்தகாலயம் வெளியிட்டிருக்கிறது.

இந்தியதேசிய இராணுவத்தினர்க்கு வழிநடைப் பாட்டாக அற்புதமான கவிதைகளையும் இவர் படைத்துள்ளார்.

எஸ் வைரவன் (தேவகோட்டை)

1979-இல் சென்னை தி.நகர் முத்துகிருஷ்ணன் தெருவில் குமரன் பதிப்பகம் தொடங்கி 30 நூல்களை வெளியிட்டுள்ளார்.

வி என் சிதம்பரம் செட்டியார் (பார்க்க—ப. 350)

தாம் தக்காராக இருக்கும் மதுரைத்திருக்கோயிலைப் பற்றி அங்கயற் கண்ணியின் அற்புதங்கள் என்ற நூலை இயற்றியுள்ளார் நகரத்தார் குலத்திலகங்கள் என்ற தொடர் கட்டுரையை நகரத்தார் குரலில் சுவையாக எழுதிவருகிறார்.

சி. என். நாச்சியப்பன் 'கார்த்திகேயன்'

137 சண்டனூர் ரோடு காரைக்குடி 623001 3-3-1933
19 மூன்றாம் குறுக்குத் தெரு, அழகிரி நகர் சென்னை-26

நாவல்கள், நீதிக்கதைகள், தோத்திரப் பாக்கள் இயற்றியிருக்கிறார். பல கவியரங்குகளில் கலந்து கொண்டுள்ளார்

முத்துப் பழனியப்ப செட்டியார். பாகனேரி

மதுரையில் நூல் வணிகர்.

தமிழகம் எங்கும் உள்ள தேவாரத் திருமுறை இசை வாணரைப் பேசற்றிவரும் புரவலர்.

இராம. ஏகப்பன் வேந்தன்பட்டி

கோவையில் வணிகர்.

தமிழகத் திருமடங்களுடன் தொடர்பு கொண்ட அருளாளர். தமிழும் சமயமும் தழைத்தோங்க, தருமைக் குரு மணி இறைமணி மன்றத்தைத் தொடங்கி அதன் தலைவராக இருந்து வருகிறார். கோவை மாநகரத்திலும் அதன் சுற்றுப் புறத்திலும் தெய்வ தமிழ் நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து வருகிறார்.

எஸ். வடிவேலு தேவகோட்டை

1966 இல் சென்னையில் வைரம் பதிப்பகம் தொடங்கி, நூல்களை வெளியிட்டு வருகிறார். வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் இயற்றிய உரை நூல்கள் அனைத்தையும் வெளியிடும் உரிமை பெற்றுள்ளார்.

முகவரி: வைரம் பதிப்பகம், 143, பெல்சு சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-5

நா.செல்வராசன்

கவிஞர் நாரா நாச்சியப்பனின் மகன். பதிப்புத் துறையில் உள்ளார். ஒரு சில சிறு நூல்களும் எழுதியுள்ளார்.

ஆ. நடராசன் செட்டியார், வெற்றியூர்

இவர் இளமையிலேயே இலங்கையில் அரசியல் மேடைப் பேச்சுக்களை தமிழில் சிறப்பாக மொழிபெயர்த்து பாராட்டுப் பெற்றவர். ஆங்கிலக் கதைகள், கட்டுரைகளைத் தமிழாக்கம் செய்வது இவரது இன்பப்பணி.

கவிஞர் கண்ணதாசனை ஆசிரியராகக் கொண்டு, 'தென்றல்' இலக்கிய அரசியல் ஏட்டை சில ஆண்டுகள் நடத்தினார். ஔவை நூற்பதிப்பகம் சில காலம் நடத்தினார். மகாகவி பாரதியாரின் அரிய ஆங்கிலக் கவிதைகள், கட்டுரைகளை *Agni and Other Poems and Essays* என்ற தலைப்பில் நூல் வடிவில் பதிப்பித்துள்ளார். இவரது முகவரி: 9; தேவசி தெரு, ஞானமூர்த்தி நகர், அம்பத்தூர். சென்னை-53

## 22. வட்டகைப் பிரிவு

### 1. பதினாறூர் வட்டகை

காரைக்குடி
பள்ளத்தூர்
கண்டனூர்
புதுவயல்
கோட்டையூர்
உ. சிறுவயல்
பலவான்குடி
ஆ. முத்துப்பட்டணம்
அரியக்குடி
கொ. லெட்சுமிபுரம்
அளகாபுரி
கானாடுகாத்தான்
ஆத்தங்குடி
கல்லல்
கொத்தமங்கலம்
நேமுத்துப்பட்டி
கல்லுப்பட்டி
சொக்கலிங்கம்புதூர்
ஜெயங்கொண்டபுரம்
மாநகரி
அமராவதிபுதூர்

### 2. மேலப்பத்தூர்

வலையபட்டி
கூழிபிறை
நச்சாந்துபட்டி
வேந்தன்பட்டி
மேதைச்சிவபுரி
புதுப்பட்டி
வேகுப்பட்டி
கொப்பனாபட்டி
விரையாச்சிலை
இராங்கியம்
பனையப்பட்டி
குருவிக்கொண்டான்பட்டி
மிதிலைப்பட்டி
வி. லெட்சுமிபுரம்
பொன்னமராவதி

### 3. மேல வட்டகை

கீழச்சிவற்பட்டி
நெற்குப்பை
கண்டவராயன்பட்டி
சிறுகூடற்பட்டி
பூலாங்குறிச்சி
நாச்சியாபுரம்
ஆ தெக்கூர்
உலகம்பட்டி
செவ்வூர்
விராமதி
மகிபாலன்பட்டி
சிரா வயல்
பிள்ளையார்பட்டி
ஆவினிப்பட்டி
பரியாமருதபட்டி

## 4. கீழ வட்டகை

| | | |
|---|---|---|
| தேவகோட்டை | சண்முகநாதபுரம் | தாணிச்சாவூரணி |

## 5. தெற்கு வட்டகை

| | | |
|---|---|---|
| நாட்டரசன் கோட்டை | ஒக்கூர் | கருங்குளம் |
| பாகனேரி | சொக்கலிங்கபுரம் | நா. அழகாபுரி |
| கண்டரமாணிக்கம் | நடராஜபுரம் | செம்பொனூர் |
| அலவாக்கோட்டை | வெற்றியூர் | பனங்குடி |
| அ. சிறுவயல் | பட்டமங்கலம் | சக்கந்தி |
| சொக்கனாதபுரம் | காளையார்மங்கலம் | சோழபுரம் |
| கீழப்பூங்குடி | | |

## 6. கீழப்பத்தூர்

| | | | |
|---|---|---|---|
| அரிமளம் | ராமச்சந்திரபுரம் | இராயவரம் | தேனிப்பட்டி |

## 7. நீண்டகரைப் பிரிவு

கோனாபட்டு

## 23. திருமணச் சீர்வரிசையில் இடம்பெறத்தக்க சில நூல்கள்

1 பிள்ளையார் பெருமை
திருமுருக கிருபானந்த வாரியார்
2 முருகன்
3 தேவாரம்
4 திருவாசகம்
5 சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும்
— டாக்டர் டி.பி. சித்தலிங்கம்
6 அபிராமி அந்தாதி
7 திருக்குறள் (விளக்கவுரையுடன்)
8 பெரிய புராணம்
9 பாரதியார் கவிதைகள்
10 சிலப்பதிகாரம்
11 சிவஸ்தல மஞ்சரி
12 குழந்தைகள் கலைக் களஞ்சியம்
13 குடும்பக் கலை
14 சமையற்கலை
15 தையற்கலை
16 அர்த்தமுள்ள இந்துமதம்
கவிஞர் கண்ணதாசன்
17 செட்டிநாடும் செந்தமிழும்
சோமலெ
18 நல்ல மனைவியாக இருப்பது எப்படி?
முத்துகாளத்தி
19 டாக்டர் இல்லாத இடத்தில்
— கிரியா பதிப்பகம்
20 தமிழ்க் கையகராதி
21 ஆங்கில—தமிழ் அகராதி
22 குடும்ப விளக்கு
பாரதிதாசன்
23 பெண்ணின் பெருமை
திரு. வி. க.
24 எண்ணங்கள்.
டாக்டர் M. S. உதயமூர்த்தி
25 மனை இயல்
ராஜம்மாள் தேவதாஸ்
26 தமிழ் நாட்டு மக்கள் மரபும் பண்பாடும்
— சோமலெ

# பிழை திருத்தம்

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 7 | பாடுவாய் | பாடுவார் |
| 91 (கடைசி வரி) | சிதம்பரம் | லெட்சுமணன் |
| 98 வரி10 | உடன் நலமின்றி | உடல் நலமின்றி |
| 122 | நிறுவிள்ளர் | நிறுவினார் |
| 122 | கொடைஞான | கொடைஞரான |
| 133 | இவ்வூனர் | இவ்வூரினர் |
| 185 | 1981 | 1982 |
| 194 | வீ. ர. லெ. | வீர. லெ. |
| 202 வரி 20 | பூ வென்றாள் | பூ வென்றால் |
| 203 | கோனைப்பட்டு | கோனாபட்டு |
| 225 | துளசிங்கமசலை | தளசிங்கமாலை |
| 274 வரி 12 | இயற்றிது | இயற்றியது |
| ,, கடைசிப் பாரா முதல்வரி | சேரன்மான்காதலி | சேரமான்காதலி |
| 524 கீழிலிருந்து வரி 12 | பெ—ன் | பொன் |

582 இரா. இரா என்பது மகாவித்துவான் ரா. இராகவ ஐயங்காரைக் குறிக்கும்.

# 24. பெயர்க் குறிப்பு அட்டவணை

## சிறப்புப் பெயர்கள் முதலியவற்றிற்கான பக்க எண்

(தொகுத்தவர்—முல்லை மு பழனியப்பன், பி. ஏ.)